# விவேக போதினி

## ஓர் சிறந்த மாதாந்திரத் தமிழ்ப்பத்திரிகை





“எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு”—திருவள்ளுவர்.

தொகுதி 1




1908-ம் ஜூலைமீ—1909-ம் ஜூன்மீ

1908-09

சென்னை

ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனியாரவர்களால்

“கார்டியன் அச்சுக்கூடத்தில்” பதிப்பிக்கப்பட்டது

 விலை ரூபா 4.

# அட்டவணை

மொழிபெயர்ப்புகள்.—



சிறுவர்களுக்கான பக்கங்கள்.



ஸ்திரிகளுக்கான பக்கங்கள்:—

விசேஷ வர்த்தமானங்கள்:—

# விவேக போதினி.

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" —திருவள்ளுவர்.

தொகுதி 1. } 1908-ஆ ஜூலை மீ { பகுதி 1.

## ஸ்வகீயம்

## OURSELVES

"தனவானுக்குத் தன்னூரிற் சிறப்பு, கல்வி மானுக்குச் சென்ற விடமெல்லாஞ் சிறப்பு" என்று கூறுவர் நம் தமிழ் நாட்டு முதியோர். சிறந்த இப்பழமொழியை நமது முன்னேக்கமாகக்கொண்டு எவ்விதத்திலும் நம் தமிழ் நாட்டு ஜனங்களுக்கு பலப்பிரயோஜனங்கள் ஸித்திக்கவேண்டுமோறு கைங்கிரியம் புரிய கங்கணங்கட்டியுள்ளவர்களில் யாமும் ஒருவரென நந்தேச வாஸிகள் கருதும் பொருட்டே, யாம் இறங்கியிருக்கும் பற்பல துறைகளில் பத்திரிகைத் துறையையும் ஒன்றென மனமுவந்து மதித்து இதனைக் கையெடுத்தாடக் கருதினேம். பஞ்சமும், பிளேகும், கொலையும், கொள்ளையும், நரசோர அகிருத்தியமும், ஆக்நேயாஸ்திரப்பிரயோகமும், கலகக் குழப்பமும் ஒன்றன்பின் ஒன்றாய் உண்டாகும் இக்காலத்தில், தேச நண்பர்களுக்குத் தொண்டுபுரியும் நல்லறிவுச்சுடராய் விளங்கக்கூடியதும், விவேகாமிருதத்தை அவரவர்களுக்கு ஊட்டி வித்வான்கள் நிரம்பிய நற்சபையில் நடனம் புரிந்தாடக்கூடியதும், ஸாதாரண ஜனங்களுக்குப் பரவசமுண்டாகும்படியான பரம ஔஷதமாம் பாஷானுகூலத்திற்கேற்றவண்ணம் புதிய புதிய பாடங்களை அன்னார்க்குக் கற்பிக்கக்கூடியதும் இன்னும் இவை போன்ற செப்புதற்கருமையான பலவிஷயங்கள் பொலிந்து நடமாடி நந்தேசவாஸிகள் மேன்மை யடைவிக்கக் கூடியதுமான பத்திரிகை ஒன்றில்லாததைப் பெருங்குறையாக வெண்ணியும், இப்போதுள்ள ஊக்கத்துடன் உழைக்கும் சிற்சில பத்திரிகைகளால் உண்டாகும் பலனை இப்பத்திரிகையினும் அணுவளவானாலும் நம் ஸகோதரர்கள் அடையட்டு மென்று எண்ணியும் 'விவேக போதினி' என்னும் பெயர்பூண்ட இப்பத்திரிகையை முன் கொண்டுவரத் துணிந்தோம். இம்மாதிரியான பத்திரிகை யொன்று இக்காலத்திற்கு வேண்டியதென்று எண்ணி, எமது நண்பர் பலரது வேண்டுகோளுக் கிணங்கியும் அவர்களது ஸந்துஷ்டியான ஆதரவைப் பெற்றும் இதனை வெளியிட முன்வந்தோம்.

நமது தேசத்தில் எத்தனையோ பத்திரிகைகள் ஆங்கில பாஷையில் பிரசுரிக்கப்படுகின்றன. அவை ராஜ பாஷையிற் பிரசுரமடைந்தாலும் அவைகட்குப் போதுமான ஆதரவு கிடைப்பது அரிதாயிருக்கும்போது, தேச பாஷாப் பத்திரிகைகளைக் கவனிப்பவரும் இருப்பார்களோ வென்று பலர் சந்தேகப்படக்கூடும். அங்ஙனம் சந்தேகப்படுவோர்க்கு யாம் சொல்வ தொன்றுண்டு. நமது நாடானது சீர் பட்டோங்கிச் சிறப்புற்று விளங்க வேண்டுமானல், தேச பாஷாப் பத்திரிகைகள் அதிகமாக வேண்டுவதைத் தவிர வேறு வழியில்லை. இதே கருத்தை ஆதாரமாய்க் கொண்டுதான் வங்காளியர், குஜராத்தியார், மகராஷ்டிரர் முதலினேர் முறையே, வங்காளம், கூர்ஜரம், பம்பாய் முதலான விடங்களில் ஸ்வதேச பாஷாப் பத்திரிகைகளை பிரசுரித்து அவைகளை போஷித்து வருகிறார்கள். வருவதனால்தான் பரோபகாரார்த்தம் இதம் சரீரம், என்றபடி ஜனோபகாரமான விஷயங்களைக் கவனிக்கவும் அவைகளுக்குத் தகுந்த காரியாதிகளை நிறைவேற்றவேண்டி முன் வந்துழைக்கவும், தத்தமக்குள்ள குறைகளையும், அபிலாஷைகளையும் வெளிபிட்டு அவைகளைத் தடுத்து நிவாரித்துக் கொள்ளவோ, அல்லது பூர்த்தியாக்கவோ செய்யவும் பிறநாட்டாரது லௌகிக வைதிக வர்த்தமான விஷயங்களை நன்ருக அறிந்து தம் அறிவை விசாலப் படுத்திக் கொள்ளவும், அவர்களுக்கு இடமுண்டாயிருக்கிறது. நம் சென்னை ராஜதானியிலுள்ளோர் அனைவருமே ஆங்கிலத்திற் பயிற்சி யுள்ளவர்களல்லர். பயிற்சி யுள்ளோர்க்குத்தான் இங்கிலீஷ் பத்திரிகைகள் இருக்கின்றனவே, பயிற்சியில்லாத ஜனங்கள் என்னசெய்வது? இவர்களுக்கு ஆங்கில பாஷையில் பத்திரிகைகள் அதிகரித்துச் சுதேச பாஷையிற் குறைந்திருப்பது எவ்விதம் பொருந்தும்? ஆதலால் இந்த "விவேக போதினியில்," கல்வி, கைத்தொழில், வர்த்தகம், பயிர்த்தொழில், உத்தியோக விஷயம், சாஸ்திர விஷயங்கள், கல்வியிலும், மதியூகத்திலும் ஸாமார்த்தியத்திலும் மிகுந்த பெரியோரது சரிதங்கள்; இதிஹாஸ புராணுதி ஸாரங்கள், தமிழ் பாஷாபிவிருத்திக் குரித்தான இலக்கிய இலக்கண விஷயங்கள்; நீதியும் அறிவும் புகட்டும் நவீன நன்னெறிக் கதைகள்; பண்டிதோத்தமர்களும், கவீந்திரர்களும் இயற்றிய இன்னிசை நாடகங்கள்; ஆசாரச் சீர்திருத்தாமிச ஸம்பந்தமான பொதுக் குறிப்புகள்; இன்னும் அப்போதைக்கப்போது தோன்றும் இவைபோன்ற உபயோகமான விஷயங்கள், ஆகிய இவைகள் அனைத்தையும், மத ஸம்பந்தமான கலகங்களுக்கும், வீண் விதண்ட வாதங்களுக்கும் தர்க்ககுதர்க்கங்களுக்கும் இடங்கொடாது எழு[illegible]யும், ஆப்த நண்பர்களையும் விசுவாஸிகளையும் கொண்டெழுதுவித்தும், உழைக்கவேண்டுமென்பதே எமது முதல் நோக்கமாகும்.

நாகரீகம் மிகுந்த ஐரோப்பா, அமெரிக்கா, முதலான வெளி நாடுகளிலுள்ள பெரிய பெரிய பட்டணங்களிலும் சிறிய சிறிய குக்கிராமங்களிலும் வர்த்தமானப் பத்திரிகைகள் தின, வார, பக்ஷ, மாதகாலங்களில் வெகு பிரபலமாய் நடை பெற்று வருகின்றன.

"லோகோ பின்னருசிः" (உலகம் பலவிதம்) என்பதை அந்நாடுகளிலுள்ளோர் நன்ருயறிந்தும், உலகத்திலுள்ள ஸர்வ ஜனங்களையும் எல்லா விஷயங்களிலும் திருப்தி செய்வது முடியாதென்பதை உணர்ந்தும், தம்மால் இயன்றவரை எல்லோருடைய ஸௌகரியங்களையும், அபிப்பிராயம் மனப்பாங்கு முதலியவைகளையும் அனுசரித்து, தேச க்ஷேமாபிவிருத்தியை நாடிய பொதுவிஷயங்களையும், வர்த்தக வியவகாரப் பயிர்த்தொழில்களின் அபிவிருத்தியையும் குறித்து அப்போதைக்கப்போது அவர்கள் பத்திரிகைகளில் எழுதிவருகிறார்கள். அது காரணமாக, மானிட இயல்பும் அவரது செயலும் மேம்படுதற்கு இடமுண்டாகின்றது. நிற்க, ஒருவன் எத்தன்மையான விஷயங்களை அடிக்கடி பார்க்கின்ருனே அல்லது நினைக்கின்ருனே, அதற்குத் தக்கவாறே அவனது மனதும் மாறுதல் அடையும்; மனஸாகும்

அந்தஃகரணத்தின் தன்மை அவனது நினைவைப் பொருந்தியதாதலின், நினைக்கும் போதெல்லாம் மனுஷ்யன் நல்ல விஷயங்களையே நினைத்துவரவேண்டும்; இல்லாவிடத்து, மனஸானது நன்னெறியில் நாடாமல், கொலை, கொள்ளை, நரசோரம் ஆகிய இவைபோன்ற கொடிய செயல்களையே நாடிநிற்கும். அப்படி நாடிநிற்பது மனப்பழக்கத்தின் விசேஷத்தினாலாவதென்பதற்கு உலகத்தின்கண் ஸகஜமாய் நடந்துவரும் தினஸரிச் செயல்களே சான்றாகும். மனப்பழக்கத்தின் ஒழுங்கை யனுஸரித்து ஆன்றோர்,

"கொலைக்களம் வார்க்குத்து சூதாடுமெல்லை
அலைக்களம் போர்யானை யாக்கும்"

ஸ்தலம் முதலியனவற்றை யடிக்கடி யணுகலாகாதென்று விதித்துமிருக்கிறார்களல்லவா? அதுபற்றியே அப்புறநாடுகளில் ஜனங்களுக்குத் தகுந்தபடி வர்த்தமானப் பத்திரிகைகள் ஏற்பட்டிருப்பதினால், அத்தேசத்தாரது வித்தியா விசேஷமும், அவர்களுக்குப் பொது நன்மையின்மீதுள்ள அபிமானமும் செவ்வனே விளங்குகின்றன.

பத்திரிகைகள் அதிகமானால், ஜனங்களின் அறிவும் திறமையும் அதிகரித்து, ஒற்றுமையும் மேன்மையும் மேம்படும்; அவை மேம்பட்ட காலத்து நடுவுநிலைமை மாறாது பத்திரிகைகளை விருத்திசெய்ய வேண்டுமென்ற கொள்கையும் உண்டாகும். இந்தப் பிரதானக் கொள்கையே மொழிமுதற்கருத்தா யமைந்து இங்கிலாந்து தேசப்பத்திரிகைகள் பிரசுரமாவதினால் அந்நாட்டார் நாகரீகத்திற் பேரெடுத்துப் பெருமைபெற்று வாழ்கின்றனர். இங்கிலாந்து தேசமானது உருவத்திற் சிறிதேயெனினும், மற்றை தேசங்களுக்கெல்லாம் முதன்மையாய் விளங்குகின்றது. அது ஓர் மூலையிலிருந்தாலும், உலகத்து வியாபாரங்களிலும் தொழில் அமிசமாயும் பௌதிக ரஸாயன சாஸ்திரியாம்சமாயும் தேர்ச்சியைக்காட்டிக் காலூன்றும் ஒவ்வோரிடத்திலும் தனது உன்னத ஸ்திதியை விளக்குகின்றது. இவையல்லாது ஜனங்களுக்குள் மனோரம்மியத்தை யுண்டுபண்ணி ஒருவரது மனோபிப்பிராயம் மற்றவரது மனதிற் பதியவும், பதிந்தபின்னர் பந்தத்தை (தேசக் கட்டென்னும் ஐகமத்தியத்தை) பலப்படுத்தி திரவியம் ஸம்பாதிக்கவும், அத்திரவியத்தைக்கொண்டு ராஜாங்கத்தை வேரூன்றி விசுவாகாரமான வியாபாரங்களை விரிவாக்கவும் வேண்டிய குறைகளை அறிய இடம் ஏற்படுகிறது. இவைகட்கெல்லாம் ஆதிகாரணம் எது? ஒப்பிலா ஊக்கமும், மாசுமறுவற்ற மனவொற்றுமை மிகுந்த ஆர்வமும், விவேக மில்லாவிடில் இவ்விரண்டும் வரா. ஆகவே வியாபாரப் பெருக்கத்தினாலும் தொழிலூக்கத்தினாலும் சீரப் பிரயாசையினாலும் உலகெல்லாம் புகழ் படைத்து விளங்கும் தேசத்தாரை யொப்ப நம் நாட்டுச் செல்வரும் செல்வியரும், சிறுவரும் சிறுமியரும், உத்தியோகஸ்தரும், ஸாமான்யரும், விவேக மிகுந்து வரவேண்டுமென்று நினைத்து, இந்தியாவின் சக்கரவர்த்தியார் நம் மாக்ஷிமை தங்கிய எட்வர்ட் மகாபிரபுவின் ஆதீனத்தில் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் ஸர்வானுகூலங்களையும் கையேந்தி இப்பத்திரிகையை நடத்தத் துணிந்தனம்.

வேண்டுவார் வேண்டுவன வெல்லாமளித்து, அவரவர்களுடைய வறுமைக்கு வறுமையைக் கொடுப்பதாகிய கற்பகத்தருவிற் படர்ந்திருக்கிற காமவல்லியானது இன்சுவைக்கனியை இன்பமுடன் ஈன்றதுபோல நந்தமிழ்நாட்டு ஜனங்களுக்கு புத்தி விசாலம் பெருகும்படி அவர்களது நுண்ணுணர்வின்மையாகிய வறுமைக்கு வறுமையை யளிக்கும் ஸாதனமாய் இவ் 'விவேக போதினி' யை, வித்வான்களின் விவேக மிகுந்த நற்போதங்களான அமிர்த தாரையின் வருஷிப்பை ஆதாரமாய் நம்பி, ஆரம்பித்திருக்கிறோமாதலின், எமது எண்ணங்களையும் முயற்சிகளையும் பயன்படும்படி, ஸர்வாந்தர்யாமியான இறைவன் கிருபை புரிவாராக! எல்லாம் "அவனாலும் ஈசன் செயல்"! "அவனன்றி ஓரணுவுமசையாது" ஆகவே அவனது கடாக்ஷத்தை பெறுவதற் கிணங்க

"ஸர்வே ஜநா: ஸுகிநோ பவந்து."

## மதவிஷயங்களின் ஸ்வரூபம்
## RELIGION: ITS NATURE

உலகத்தில் இருக்கும் ஜனங்கள் எல்லோருக்கும் துன்பத்தை அணுகவொட்டாது தடுத்து, இன்பத்தை அடையவேண்டும் என்பதே முக்கிய கருத்து. இந்த ஆவலால்தான், எல்லோரும் மிகுந்த சுறுசுறுப்புடன் அநேகவித காரியங்களைச் செய்கிறார்கள். ஒவ்வொருவரும் எந்தக் காரியத்தைச் செய்யப் புகுந்தபோதிலும், அதன்முடிவில் அப்பொழுது தமக்கு இருக்கும் துக்கம் நீங்கி ஸுகம்வரும் என்றே நம்புகிறார்கள். அவர்கள் முயலும் வழி கெட்டவைகளாக இருப்பின், வரும் ஸுகம் நிலையில்லாததாயும், நல்லவைகளாயின், கொஞ்சகாலம் நிலைத்திருப்பதாயும் இருக்கும். இந்த ரகஸியத்தை அறியாத ஒவ்வொருவரது மனதும் ஸதா மருண்டு, கெட்டவழிகளிலேயே ஓடிக்கொண்டிருக்கும். இதை அறிந்து நன்றாகத்தெளிந்த உடன், அவர்கள் விழித்துக்கொண்டு நல்ல வழிகளில் திரும்புவார்கள்.

ஆரம்பத்தில், கெட்டவழிகள் யாவும் இன்பமாக காணப்படுவதால், முன் சொன்ன ரகஸியம் எளிதில் ஸாதாரண ஜனங்கள் மனதில் பதியாது. மேலும் இகலோகத்தில் கெட்டவழிகளிலிருப்பவர்களுக்கு ஸுகமும் நல்லவர்களுக்கு கஷ்டமும் வந்துகொண்டிருப்பது ஸகஜம். தர்மபுத்திரர், ஸீதை முதலியவர்களைப் போன்ற ஸன்மார்க்கர்களுக்கு, துரியோதனன், இராவணன் முதலிய துன்மார்க்கர்களுக்கு உண்டானதுபோன்ற இகலோக ஸுகம் உண்டாகவில்லை. தாம் இருந்தவரையில் பலவித கஷ்டங்களையே அவர்கள் அனுபவித்திருக்கிறார்கள். உலகத்தின் நிலை இவ்வாறிருக்க, 'இங்கற்றவர்க்கு அங்குண்டு' என்று எவ்வளவு தான், நாம் வேதாந்தம் எடுத்து யுக்திபூர்வமாகக் கூறிய போதிலும், ஸாதாரண ஜனங்களுக்கு நேர்மையான மார்க்கங்களில் நடந்து நிலைபெற, மனம் எளிதில் இசையமாட்டாது.

ஆகையால் எவ்வளவுதான் யுக்திக்குப் பொருந்தும்படி நல்லோருக்கு வரும் துயரங்கள் யாவும் துக்க ரூபமான ஸுகங்கள் என்றும், கொடியவர்களுக்கு வரும் மேன்மை யாவும் ஸுகரூபமாக வரும் துக்கங்கள் என்றும், எடுத்து உரைத்தபோதிலும், இவைகளின் உண்மையை மன உருக்கத்துடன் அங்கீகரிக்கும் திறன் இருந்தால் அல்லது, கேட்போர்க்கு இவைகள் பயன்படா. இம்மன உருக்கத்தோடு அங்கீகரித்தவாறு நடந்து நிலைபெறுவதற்கு மன ஊக்கம், அவசியம் இருத்தல் வேண்டும்.

இந்த ரகஸியத்தின் அருமையையும் சிறப்பையும் ஒரு பெரியவர் பின்வருமாறு விவரித்திருக்கிறார்.

'எதார்த்தத்திலேயே இவ்வுலக இன்பங்களைப் போல் நமக்கு விரோதிகள் வேறு ஒன்றுமில்லை. நம்முடைய நிஜஸ்வரூபத்தை நம்மிடமிருந்து மறைத்து நாளைவரும் நெற்குவியலிலும் இன்றுள்ள பிடி விதை பெரிதென்று விழுங்கி வீணே நாள் கழிக்கும் 'நீக்ரோ' ஜாதியாரைப்போல் நாம் நாளை அடையக்கூடிய பிர்ம்மானந்த ஸுகத்தை மறந்து இன்றுள்ள சிற்றின்பத்தில் முழுகி மயங்கும்படி நம்மைச் செய்கின்ற, அற்பமாயும் அநித்தியமாயும் பயனற்றவும் தமோகுண சம்பந்தமாயும் துக்ககரமாயும் அஸுர குண ஸ்வரூபமாயும் நமக்கும் பிறருக்கும் ஜனன மரண ஸம்ஸாரமாகிய அனர்த்த பரம்பரைக்கு ஹேதுவாயும் உள்ள இவ்வுலக இன்பங்கள் உயர்ந்தோரால் விரும்பற்பாலன வன்று. 'இங்கற்றவற்கு அங்குண்டு' என்றபடி அநேகருக்கும் துன்பமே ஒரு பெரிய மோக்ஷசாதனமாயிருக்கிறதாதலால், தனவானுடைய தனத்தையும், ரூபவானுடைய ரூபத்தையும் போகத்தில் உல்லாசமாய்க் களித்திருப்பவரது போகத்தையும் கண்டு நாம் பொறாமை கொள்ளாது அவற்றிற்கு ஆளாயிருப்போருக்கிரங்கி துன்ப ரூபமாக கடவுளது அனுக்கிரகத்தைப் பெற்றோரைக் கண்டு கைகூப்புவதே இரகசியமான தத்துவ வழியாம்.'

ஒருவனுக்குப் பகுத்தறிவு மாத்திரம் இருக்குமாயின், அவனுக்கு நன்னடக்கைக் கோட்பாடுகளின் காரணங்கள் முதலியன நன்றாய்த் தெரியலாம். ஆனால் மிகுந்த கஷ்டதிசை அல்லது உயர்ந்த ஸுக நிலைமுதலியன வருங்கால்,

யுக்தியால் நல்லது என்று கண்டறிந்த மார்க்கங்களில் நடக்க அவனுக்குத் திறனில்லாமல் போய் விடும். சிற்சில ஸமயங்களில் தன் யுக்தியாலேயே தான் நடக்கும் கெட்ட வழியை நல்லதெனக் கொள்ளும் தருணமும் வந்து விடும். இம்மாதிரியான ஸமயங்களில் நேர் வழியில் நடப்பதற்கு மன உருக்கம் அவசியம் வேண்டும். இதனால் தான், மனது அவனை எப்பொழுதும் கண்டித்துக் கொண்டே இருக்கும். இந்த உருக்கத்தின் மாறுபாட்டிற்கே மனச்சாட்சி என்றுபெயர். இந்த உருக்கத்தாலேயே நல்ல வழியில் நடப்பதற்கு வேண்டிய ஊக்கமும் வந்துசேரும். இம்மன உருக்கத்தோடு ஸம்பந்தப்பட்டு வெளிவரும் நன்னடக்கைக் கோட்பாடுகளுக்கே மத விஷயம் என்று பெயர்.

மத விஷயங்களின் ஸ்வரூபத்தை சிற்சில உதாரணங்கள் மூலமாக விவரித்து, அவைகளுக்கும் நன்னடக்கைக் கோட்பாடுகளுக்கும் உள்ள ஸம்பந்தத்தை நன்கு விளக்குவோம். 'நன்மை விதைத்தால் நன்மை விளையும், தீமை விதைத்தால் தீமை விளையும், என்கிற பழமொழி நன்னடக்கைக் கோட்பாடு, ஸந்மார்க்கமான யுக்திவாதம்.

'அத்தமும் வாழ்வு மகத்துமாட்டே விழியம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டேவிம்மி விம்மியிரு
கைத்தலைமேல் வைத்தழுமைந்தருஞ் சுடுகாடுமட்டே
பற்றித் தொடருமிருவினைப் புண்ணிய பாவமுமே.'

என்ற பட்டினத்தடிகள் வாக்கு உருக்க ஸம்பந்தப்பட்ட யுக்திவாதம், மதவிஷயம். 'இந்திரிய ஸுகங்கள் மனிதனைக் கெடுத்து, ஒருவனை வேறு விஷயங்களில் மனதைச் செலுத்தவொட்டாது தடுத்து விடும். ஆகையால் அவைகளை விட்டு நீங்குமின்' என்பது நன்னடக்கைக் கோட்பாடு.

'அறந்தானியற்று மவனிலுங்,
கோடியதிக மில்லந்
துறந்தா, னவனிற் சதகோடி
யுள்ளத் துறவுடையோன்
மறந்தானறக் கற்றறிவோடிருந்,
திருவாதனையற்
றிறந்தான் பெருமையை யென்
சொல்வேன் கச்சியே கம்பனே'

என்பது மதவிஷயம். 'நாம் எல்லோரும் நியாயமாகவே நமது வாழ்நாட்களை கழிக்க எண்ணுகிறோம்; ஆனால் நமது தேக தர்மம் அதற்கு விரோதமாக இருக்கிறது' என்பது நன்னடக்கைக் கோட்பாடு.

மானார் விழியைக் கடந்தேறி,
வந்தனன் வாழ்குருவுங்
கோனாகி யென்னை க்குடியேற்றிக்
கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேறிருந்தாலுந்,
பேறிது பொய்யன்று கா
ஞானவுமிந்த வுடம்போடிருப்ப தருவருப்பே'

என்பது மதவிஷயம். 'ஒருவன் தன் சொற்போல நடப்பானேயானால் அதுவே மிகச் சிறந்தது' என்பது நன்னடக்கைக் கோட்பாடு.

'வாசக ஞானத்தால் வருமோ சுகம் பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே'

என்பது மதவிஷயம். 'உன்னைக் கடவுள் எவ்வாறு இருக்கவேண்டும் என்று எண்ணிச் சிருஷ்டித்தாரோ அவ்வாறு இரு' என்பது நன்னடக்கைக் கோட்பாடு. அப்பர் அருளிச் செய்த, 'தலையே நீ வணங்காய்' என்று தொடங்கும் திருஅங்கமாலை மதவிஷயம். இதுபோல் வேதங்களில் காணப்படும் அர்த்தவாத சுருதிகளும், புராணங்களில் காணப்படும் கதைகளும் நன்னடக்கைக் கோட்பாடுகளே. வேதங்களில் காணப்படும் ஆனந்தக்களிப்பு, புராணாதிகளில் காணப்படும் பக்தர்களது மெய்மறந்த ஸ்தோத்திரங்களும் மதவிஷயங்கள். வேதாந்த விசாரம் (சிரவணமனனம்) நன்னடக்கையைச் சேர்ந்தது, கேட்டப்டி நிஷ்டை பழகுதல் (நிதித்யாஸனம்) மதவிஷயம். இவ்வுதாரணங்களிலிருந்து மதவிஷயங்களின் ஸ்வரூபம் இன்னதென்பது எளிதில் விளங்கும்.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன், B.A., L.T.

## தமிழ் வசன நடையின் இலக்கணம்

### TAMIL PROSE: ITS STYLE

நம்மனத்தின்கண் தோன்றும் எண்ணங்களை மற்றவர்களுக்குவெளிப்படுத்துதற்கான கருவி, நமதுபாஷையாகும். நமதுபாஷைமூலமாகவே பிறர் மனத்திற்றோன்றி வெளியாகின்ற விஷயங்கள் யாவற்றையும் நாம் அறிந்துகொள்ளுகின்றோம். இப்போது எமது மனத்திற்படும் விஷயங்களை எமது பாஷைமூலமாக இப்பத்திரிகையைப்படிக்கும் பலர்க்குந் தெரிவிக்கின்றேம். பாஷை எழுதப்படும்; பேசப்படும். எழுதியதைப் பிறர் எளிதில் அறிய வேண்டுமாயின் வசனநடையில் எழுதுவதே பொருத்தமானது. ஆதலால் தமிழ் வசன நடை இவ்வாறு இருத்தல் வேண்டும், அதன் இலக்கணம் இன்னதென்பதை இங்குக் கூறுவாம்.

(1) மெத்யூ ஆர்நால்ட் (Mathew Arnold) என்னும் ஆங்கில வித்துவானுடைய அபிப்பிராயப்படி நல்ல வசன நடையின் இலக்கணங்கள் ஒழுங்கு, சமம், தெளிவு, நிறை என நான்காம். ஒழுங்கு என்பது, பொருள் நன்கு விளங்க, எவ்வெவ்விடத்திற் சொற்களிருத்தல்வேண்டுமோ அவ்வவ்விடத்திற் சொற்களைப் பொருந்த அமைத்தல். சமம் என்பது நடையில் ஏற்றத் தாழ்வு இன்மை. அஃதாவது ஓரிடத்து எளிய நடையும் ஓரிடத்துக் கடுமையான நடையுமாகிய வேறுபாடு தோற்றாது ஒரேதன்மையாக இருக்கும்படி அமைத்தல். தெளிவு என்பது விளங்கக் கூறல். நிறை என்பது சொல்லமைப்பிலும் நடை அமைப்பிலும் துலாக் கோலில் நிறுத்தாற் போன்ற ஓர் அளவு தோற்றுவித்தல். இந் நான்கிலக்கணங்களும் நிரம்பி விளங்கும் வசன நூல்களுட் சிறந்தது தாண்டவராய முதலியார் எழுதிய பஞ்சதந்திரம் என்னும் நூல். மேற் சொன்ன நான்கிலக்கணங்களுள் நிறை என்பதைப் பின் வரும் நச்சினார்க்கினியர் நடையிற் காணலாம்.

"கணவற்கு மெய்ம் முழுதும் இனிதாயிருத்தலிற் [கரும்பு.
நல்லார் உறுப் பெல்லாங் கொண்டு இயற்றலிற் [றேன்.
கண்டாற்குச் செல்வத்தைக் கொடுத்தலிற் திரு.
காலமன்றியுங் கேட்டோர்க்கு இன்பஞ் செய்தலின் [குயில்.
நடையால் அன்னம். சாயலான்மயில். நோக்கத்தால் மான்' [சிந்தாமணி உரை

இதன்கண் முதல் நான்கு வாக்கியங்களும் ஒரு நிறை. ஏனைய மூன்றும் பிறிதொரு நிறை.

வசன நடையின் இலக்கணங்களுள் சமம் ஒன்று என்றேம். அஃதாவது, எவ்வவ்விடத்து நடை கெம்பீரமாகயிருத்தல் வேண்டுமோ, அவ்வவ்விடத்துக் கெம்பீரமாகவும், எடுத்துக் கொண்ட விஷயத்துக்கு ஏற்றதாயும், சந்தர்ப்பத்துக்குப் பொருந்தினதாகவும் இருத்தல் வேண்டும்.

வசன நடை அழகாய், விரும்பற் பாலதாயிருக்கவேண்டுமானால் முக்கியமாய் அதற்கு வேண்டிய லக்ஷணம் 'தெளிவு' என்பதே. 'வசன நடைக்கு வனப்பு நாடிடின், சொற்றொறுந் தெளிவு தோன்றக் கூறுக' எனக் குலிண்டிலியன் (Quintilian) எனும் புலவர் பெருமான் சொல்லுகிறார். தெளிவு என்னும் இவ்விலக்கணம் நிறைந்திருப்பதாற்றான் ஆறுமுக நாவலரது வசனநடை எல்லாராலுங் கொண்டாடப்படுகின்றது.

(2) வசனநடை பேசும் நடையினும் வேறுபாடுடையதாய், இலக்கணம் நிறைந்ததாய், அதனிலும் அதிக கெம்பீரமாகவே இருக்கவேண்டும். ஜான் யர்ல் (John Earle) என்னும் ஆங்கில வித்துவான் 'செய்யுள் நடை வானத்திற் பறக்கின்றது. வசனநடை மண்மிசை நடக்கின்றது. ஆனால் கால் தரையில் இடறாமல் வெகு கெம்பீரமாக நடக்கின்றது' எனக்கூறுகின்றார்.

(3) வசனநடையின் பிறிதோரிலக்கணமாவது, சொற்றொறும், சொற்றொடர் தோறும் வாக்கியங்கள்தோறும் வேறுபாடு காட்டுவது

அஃதாவது சொன்ன சொல்லையே கூறுது, எற்ற பிறிதொரு சொல்லால் ஓதுவது. இவ்விலக்கணத்தைப் பஞ்சதந்திரத்திற் காணலாம். ஓரிடத்திற் குதிரை என்றால், மற்றோரிடத்திற் பரி என்றும், பிறிதோரிடத்திற் புரவி என்றும், இன்னுமோரிடத்தில் இவுளி என்றும், வேறோரிடத்தில் அசுவம் என்றும், பின்னும் ஓர் இடத்தில் துரங்கம் என்றும், அடுத்ததோர் இடத்திற் கந்துகம் என்றுங் கூறுவது; இவ்வகையாகப் பலவேறு சொற்களை உபயோகிப்பதாற் படிப்போர்க்கு ஒரு பொருள் குறிக்கும் பல சொற்கள் கிடைக்கின்றன.

தமிழ்ப் பாஷையில் எண்ணிறந்த சொற்கள் இருக்கின்றன. "தமிழ் மொழியில் ஏராளமான சொற்கள் உள்ளன என்பது யாழ்ப்பாணத்து அமெரிகன் பாதிரிகள் தொகுத்த ஓர் அகராதி, 58,500 வார்த்தைகளினும் அதிகமான வார்த்தைகள் கொண்டுள்ளதென்பதால் நன்கு தெரியவருகின்றது. அது மாத்திரம் அல்ல, அவ்வகராதியில் வராதவையான, ஆயிரக்கணக்கான தொழிற் சம்பந்தமான சொற்களும், ஆயிரக் கணக்கான விசேட சொற்றொடர்களோடு பழமொழிகளும், ஆயிரக்கணக்கான ஆன்றோராராய்ச்சி செய்த அரும்பதங்களும், அருந் தொடர் மொழிகளும் தமிழ்ப் பாஷையில் உள்" என டாக்டர் கால்ட்வெல் என்னும் பாதிரியார் குதூகலத்துடன் கூறுகின்றார்.

(4) தெளிவு என்னும் இலக்கணம் சிதைவுபடாது எவ்வளவு தூரங் கூடுமோ அவ்வளவு வடமொழியை நீக்கித் தென் மொழியாகிய தமிழையே உபயோகப் படுத்தல் வேண்டும். வடமொழி கலவாத தென்மொழி வாக்கியந் தமிழர் செவிக்கு மிக்க இனிமையாயிருக்கும். உதாரணமாக, 'தேவர்கள் புஷ்ப வர்ஷம் வருஷித்தார்கள்' என்பதினும் 'வானவர் பூமழை பொழிந்தார்' என்பது செவிக்கு மிக்க இன்பத்தைத் தருகின்றது.

(5) செந்தமிழ் நடை எழுத வேண்டின், தமிழரோடும், தமிழ்ப் பாஷையினும், தமிழ் நூல்களினும் நல்ல பயிற்சி யிருக்கவேண்டும். அகராதியைக் கொண்டு பொருள்கண்டு உபயோகிப்பது அபாயகரமாகும். தமிழ் கற்று வந்த பாதிரியார் ஒருவர் ஒருமுறை சிலபண்டங்களை வெயிலில் உலர்த்தவேண்டியிருந்த போது, தனது சேவகனை நோக்கி தனது ஆங்கில மொழிகளின் கருத்துக்கேற்ப, 'கார்யத்தை எடுத்து சூர்யத்தில் போடு' (Put the things in the Sun) என்றாராம். ஆதலால் சரியான இடத்திற் சரியான சொல்லை உபயோகப் படுத்தவேண்டும்.

(6) உபயோகத்தினின்றும் பழையனவாய்க்கழிந்த சொற்களை இப்போது உபயோகப்படுத்தக் கூடாது. கள்வன் என்னும் சொல்லைத் 'திருடன்' என்னும் பொருளில் உபயோகப் படுத்தலாமே ஒழிய, அதன் பழைய அர்த்தமாகிய 'நண்டு' என்னும் பொருளில் சொல்லலாகாது. எளிய சொற்களாற் சொல்லக் கூடியதைக் கடின சொற்களால் அநாவசியமாகக் கூறலாகாது. 'அவன் முள் வழியிற் சென்றான்' எனச் சுலபமாகக் கூறுவதைவிட்டு 'அன்னான் முள்ளதர்ப் படர்ந்தனன்' எனலாகாது.

(7) காலத்துக்கு ஏற்றவாறு புதிது புதிதாக வார்த்தைகளைப் பிறபாஷையினின்றாவது, உண்டு பண்ணியாவது உபயோகப்படுத்தலாம். இங்ஙனம் பிறபாஷைச் சொற்களை ஏற்று உபயோகப் படுத்துவதுதான் காலந்தோறும் வளர்ந்துவரும் பாஷைகளுக்கிலக்கணம். ஆங்கிலபாஷை எவ்வளவோ பாஷைகளினின்று எவ்வளவோ சொற்களை மேற் பூண்டிருக்கின்றது. இங்ஙனம் மேற்கொள்வது பாஷையின் பெருமைக்குக் குறைவென்று அறியார் பலர் நினைப்பர். இங்ஙனம் மேற்கொள்ள வேண்டியது அவசியமெனக் கண்டு தொல்காப்பியரே தமது இலக்கண நூலில் 'கடிசொல் இல்லைக் காலத்துப் படினே' என்னும் சூத்திரத்திற் காட்டியிருக்கின்றார். நன்னூல் எழுதிய பவணந்தி யாரும் "பழையன கழிதலும் புதியன புகுதலும்,

வழுவல கால வகையினனே' என்னும் சூத்திரத்திற் பழைய சொற்கள் கழிந்து போதலும், புதிய சொற்கள் புகுந்து வருதலும், கால வித்தியாசத்துக்கு ஏற்பதாதலின், வழுவல்ல என விளக்கமாகக் கூறுகின்றார். பழையன கழிதலுக்கு ஓர் உதாரணமும் புதியன புகுதலுக்கு ஓர் உதாரணமும் இங்குக் காட்டுவோம்.

பழையன கழிதல்: தொல்காப்பியர் காலத்தில் ஆண் குதிரையைக் குறிக்கச் 'சேவல்' என்னும் சொல் வழங்கி வந்தது. "குரங்கினேற்றினைக் கடுவனென்றலும் * * * குதிரையுளாணினைச் சேவலென்றலும் * * முடிய வந்த அவ்வழக்குண்மையிற், கடியலாகா கடனறிந்தோர்க்கே." (தொல். மரபியல்). இச் சூத்திரத்திற்கு உரை யெழுதிய ஆசிரியர் காலத்திலேயே 'சேவல்' என்னும் சொல்லுக்கு 'ஆண் குதிரை' என்னும் பொருள் இல்லாமற் போயிற்று.' உரையாசிரியர் 'குதிரையைச் சேவல் என்றல் இக்காலத் தரிதாயிற்று' என்கிறார்.

புதியன புகுதல்: முற்காலத்தில் 'ச' என்னும் எழுத்து மொழிக்கு முதலில் வந்திலது. பிறகு சட்டி, சமழ்ப்பு முதலிய சொற்கள் ஏற்பட்டன. தொல்காப்பிய உரையாசிரியர்களும் சட்டி, சமழ்ப்பு முதலிய 'பிற்காலத்துத் தோன்றிய சொல்லேயாம்' என உரைத்துள்ளார்கள்.

சொற்றொடர்களை உண்டு பண்ணுதல்: உளநூல் (Psychology), உயிர் நூல் (Biology) முதலிய உதாரணமாம்.

பிறபாஷைச் சொற்களையும் உபயோகப் படுத்தலாம்: சலாம், சபாஸ், ராவுத்தன் முதலிய இந்துஸ்தானி பதங்கள் முன்னரே நல்ல செந்தமிழ் நூல்களிற் பிரயோகிக்கப்பட்டுள. ஆங்கிலப் பதங்களும் தமிழில் தாராளமாய் நுழையத் தலைப்பட்டிருக்கின்றன.

(8) இலக்கண மமைய வெழுத வேண்டுவது அவசியமாயினும் சந்தி முதலியவற்றை அளவிறந்து உபயோகித்தல் நன்றன்று. அங்ஙனம் உபயோகித்தல் கண்ணுக்கும் காதுக்கும் இன்பம் பயவாது. உதாரணமாக 'செங்கோல் நடாத்தும் அரசர் குடிகளின் இன்னல் நீக்கும் அருமுறைகளை நாடுவார்' என்பது தெளிவாயிருக்க, அதனையே, 'செங்கோனடாத்துமரசர் குடிகளினின்னனீக்கு மருமுறைகளை நாடுவார்' என எழுதினால், அது அவலக்ஷணமாயிருக்கின்றது.

(9) பொருள் தெளிவாக விளங்க அங்கங்கே ஆங்கில முதலிய பாஷைகளிலுள்ளவாறு, குறிகளை (punctuation) உபயோகப் படுத்த வேண்டும்;

ஆக, மேற்காட்டிய நவ லக்ஷணங்களையும் இன்னும் அவசியமான லக்ஷணங்களையும் நாடிக் கருத்துடன் எழுத முயன்றால் 'செந்தமிழ் நடை' என்பது விளங்கத் தோன்றும்.

இங்குக் கூறிய விஷயங்களின் விரிவை யாம் ஆங்கிலத்தில் எழுதிய 'தமிழ் வசன நூற்சரிதம் (History of the Tamil Prose Literature) என்னும் புத்தகத்திற் காணலாம்.

வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A.

## சிதம்பர மாஹாத்ம்யம்

தில்லை ஸ்தலமே ஸ்தலம்—"தில்லை தில்லை யென்றால் பிறவி இல்லை இல்லை" யென்று மறை மொழியும், தொல்லை தொல்லையென்ற கொடு வினை 'வல்லை வல்லை' யென்றகலும். சுவாமி உண்டென்பதும் அங்கே தான், இல்லையென்பதும் அங்கேதான். கடவுள் ஆனந்தத் தாண்டவம் ஆடுவதும் அங்கேதான், அசைவற்ற வெளியாயிருப்பதும் அங்கேதான். அறியாதாரும் அறிவைப் பெறுவது அங்கே தான். அறிந்தவர்கள் அனுபவிப்பதும் அங்கே தான். உருவமும் அங்கேதான். ஒளியும் அங்கே தான். சிருஷ்டியும் ஸம்ஹாரமும் அங்கே தான்.

> "பசியா மருந்தளிக்கும் பரமரகசியத்தி
> லசையாமலே யாடு மம்பல நாதனைக்
> காணாத கண்ணென்ன கண்ணே."
> "ஊராரு மறியாம லொளிகண்டு பிசகாமல்
> ஈராறுகண்கொண்டு எழும்பிய மண்டபம்
> காணாத கண்ணென்ன கண்ணே."

உபநிஷத்தின் உட்கருத்தை உள்ளடக்கி அமைத்த ஆலயத்தையும் அதற்குள் சிருஷ்டிக்கு முன்னும் பின்னும் ஒடுங்காத கடவுளின் ஆனந்த நிலைமையையும் ஆகாசரூபத்தையும் ஆனந்த தாண்டவத்தையும் ஒருமித்து உருவகம் செய்திருக்கும் ஸபாபதியையும் ரகஸியவொளியையும் அவற்றிற்குப்பின்னுள்ள திருமூலமந்திரத்தையும் எண்ணி எண்ணி உருகுபவருக்கு மனம் நிலைபெறும் என்பதற்கு ஐயமில்லை.

# பொருளாசை

## AVARICE

மனதை சஞ்சலப்படுத்தும் ஆசைகளில் பொருளாசையும் ஒன்று. பூர்வகாலத்துப் பண்டிதர்கள், செல்வம் சேகரிப்பதே வாழ்க்கையின் ஸார்த்தகமாக வெண்ணும் மடமையைப் பலவாறு விரித்துக் கூறியுளர். அவர்கள் பொருளைப் பற்றிப் பேசுந்தோறும், பரிதாபம், வெறுப்பு, அவதூறு, ஆகிய இவைவுடன் இகழ்ந்திருக்கின்றனர்; அளவற்ற ஐசுவரியத்தாலுண்டாகும் அபாயங்களை அடுக்கிக் காட்டியிருக்கிறார்கள். ஆயினும், அகற்றலாற்றாத வலிமையுடன் மனதைப்பற்றும் இவ்வாசையை அறுத்துத்தள்ள புத்தி விசேஷமும் சாதுர்யமும் பயனற்றவையாயிருக்கின்றன. செல்வத்தை இகழும் ஞானிகளும் அதைப் பழிக்கும் கவிஞர்களும், ஒரு வேளை சந்தர்ப்பம் பலித்து தாங்கள் திரவியமடைய வகை கண்டால், இவ்வாசை வலைக்குள் பெரும்பாலும் சிக்கி விழுவார்கள்.

இவ்வாறு செல்வத்தை, சொல் நயம் பொருள் நயத்துடனும், சாதுர்யத்துடனும், ஆழ்ந்த அறிவுடனும் இகழ்வது நியாயமெனக் காரணம் காட்டி, கல்விமான்கள் நம்மை களிக்கச் செய்யினும், அவர்கள் இக்கோட்பாட்டைத் தங்கள் நடத்தையில் ஏற்று விளக்கியதாகத் தெரியவில்லை. செல்வம் பெறச் சக்தியைப் படைத்த எம்மனிதனும் அதை வேண்டாமென மறுத்ததாகக் காணவில்லை; செல்வம் படைத்து அதன் அசமாதானத்தை அறிந்த பின்னரும், எவராலும் பொருமைப்படப்படாததும், மனவமைதியையும் கால சகவாசத்தையு மளிப்பதுமான தரித்திரதிசையை இச்சித்து, தன் திரவியத்தை சூரையிட்டதையும் நாம் கண்டதில்லை.

பலர் தாம் கௌரவமும் செல்வமும் சம்பாதிப்பதற்கு அனுகூலமான சந்தர்ப்பங்களை நழுவவிட்டு, அதிர்ஷ்டம் அன்புடன் அளிக்கும் ஐசுவரியத்தை அசட்டைசெய்து அகற்றியிருக்கின்றனர் என்பது உண்மையே. இத்தகைய தங்கள் அலக்ஷியத்தைக் குறிப்பிட்டு அவர் எவ்வளவு பெருமை பேசினும், அல்லது பிறர் அதைக்கண்டு ஆச்சரியப்பட்டு எவ்வாறு புகழினும், இம்மனிதர் உண்மையில் செல்வத்தை இகழ்ந்தவரல்ல; செல்வம் சேர்க்க அவசியமான உழைப்பையும் கவலையையும் மேற்கொள்ள அஞ்சினவரேயாம். இவர்கள், செல்வமென்னும் மலையின் சிகரத்தையடைய பிரயத்தனப்படாரெனினும், அம்மலை யுச்சியைச்சேர இச்சையுடையவர்களே; தங்கள் உழைப்பாலன்றி அடையக்கூடாததை அனுபவித்தல் அவர்கள் மனதுக்கு சம்மதமானதே.

இன்னும் சிலர் தாமடைந்த பதவிகளை தாமாகவே ஒழித்து தனிமையை இச்சித்து, தம்பெரும் பெயரை ஜனங்கள் மறக்கும்படி நடந்து கொள்ளுகிறார்கள். ஆனால் இவர்கள் நடத்தையும் வேதாந்திகள் கொண்டாடத் தக்கதல்ல. ஏனெனில், இத்தகையோர், தங்களால் காப்பாற்றிக்கொள்ளக்கூடாத பதவியை நீக்குகிறவர்களாயும், அவ்வாறு நீக்குவதால் தங்கள் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளுகிறவர்களாயுமிருக்கின்றனர். இல்லையாயின், ஆனந்தம் அடைய எப்பொழுதும் புது வழிகளைத்தேடும் குணம் பொருந்தியவர்களாயிருக்கலாம்; அல்லது, மனோ விசாரத்தால், எப்பதவியிலும் சுகம் காணாது, தாமடைந்த ஒவ்வொரு பதவியையும் ஒழிப்பதே அவர் வழக்கமாயிருக்கலாம். இவர் பிணியுற்ற மனமுடையவராதலால், எப்பதவியிலும் திருப்தி கொள்வதில்லை. தன்னந் தனிமையிலும் இவர்களை துக்கம், மனக்கிலேசம், அவநம்பிக்கை ஆகிய இவைகள் வாதிக்கும்.

ஆனால், இக்கல்விமான்கள் நன் மொழிகளை தனவான்கள் அலக்ஷியம் செய்கிறார்களெனினும், அவற்றால் பயனில்லையென்று மதியீனத்தால் மதிக்கலாகாது. உலகத்தில் மானிடர் பெரும்பாலும் ஏழைகளே; தங்களுக்கு எட்டாத பெரும் பதவியை நினைந்து மனம் வருந்துகிறவர்களே. இத்தகைய சர்வ சாதாரணமான அதிருப்தி யென்னும் நோய்க்கு மருந்தளிக்கும்

மகா புருஷரைக் கொண்டாட வேண்டியதே. அவர்கள், நாம் அடையக் கூடாத பொருளைத் தள்ளிவைக்கும் வகையையும், நம் கண்ணுக்குப் புலப்படும் செல்வ வித்தியாசத்தின் சிறுமையையும், நாம் தூர நின்று பார்த்துப் புகழும் பெரும் பதவிகளைக் கிட்ட நெருங்கின், அவற்றின் உயர்ச்சியும் பிரகாசமும் குறையுமென் பதையும், நமக்கு போதிக்கின்றனர்.

செல்வமென்னும் சூது மாதராள், கவனத்தோடு நோக்காத கண்கள் முன்னர், கைபிலகப் படாது விநாடி தோறும் மாறி மாறி வரும் சாயல்களைக் காட்டி ஏமாற்றியும், பார்வைக்குப் பகட்டான வெளியலங்காரத்தால் வாழ்க்கையைச் சிங்காரித்தும், தனிமையும் தியானமுமமைந்த நேரங்களில் அவ்வாபரணங்களைக் கழற்றி யெறிந்தும் செய்யும் ஜால வித்தையை வெளிப்படுத்துவதே வேதாந்திகளின் கருத்தாகும். ஆனந்தமும் ஞானமுமடைய ஆர்வமுள்ளோன், சாதாரண ஜனங்களின் கண்களைக் கூசச்செய்வதும் அவர் மனதைத் துடிக்கச்செய்வதுமான பதவி வித்தியாசங்களையெல்லாம் ஒழித்தல்வேண்டும்.

தத்துவ விசாரணையும் மதவிசாரணையும் செய்யத் தங்கள் ஏழை ஸ்திதியால் அனுகூலம் பெறாத மனிதர், விஷயங்களைத் தங்கள் புலன்களால் பரீக்ஷித்தும் தங்கள் மனத்தால் ஆராய்ந்தும் வருகின்றனர். இவர்கள், உயர்ந்த பதவிகளை யடையப் புண்ணியம் பெற்றவரை மானிடரன்னென்றும், ஏதோ விசேஷ பிறவியென்றும் கருதுகின்றனர். வாழ்க்கைக்கு இன்றியமையாத தேவைகளையன்றி மற்றெந்த விசனமும் கவலையுமில்லாத இவர், திரவியமிருக்குமிடத்தும் துக்கம் உண்டென்றும், விலையுயர்ந்த ஆடைதரித்து ஆபரணம் பூண்டு செல்வத்தில் நீந்தும் பாக்கியசாலிகளுக்கும் மற்ற ஏழைமானிடர் மனதைப் புண்படுத்தும் வருத்தங்கள் உண்டென்று நம்புவது கடினமான விஷயமே.

செல்வத்தின்மேல் சிந்தனை செலுத்தலாகாது என்னும் சித்தாந்தத்தால் பொருளாசையும் அதிகார வாசையும் அழிவதில்லை யெனினும், பொருட்குறைவால் உண்டாகும் அதிருப்தியை அது ஒருவாறு குறைத்து வாழ்வை இனிமையாக்குகிறது. மேலும், அது, பணம் சேர்ப்பதே பெரும்பாக்கியம் என்ற அசையாத மனோ நிச்சயத்தினின்று உதிக்கும் அளவற்ற ஆசையுடன் திரவியம் தேடப் புகுவதாலுண்டாகும் பொய், சூது, பலாத்காரம், கொள்ளை, வஞ்சனை முதலிய கொடிய செய்கைகளை நீக்குகின்றது.

பொருளைத் தேடுவதே வாழ்க்கையின் முக்கிய முடிவாக எண்ணி, வலிய ஆசையால் தூண்டப்படும் ஒவ்வொரு மனிதனும், வாழ்க்கைக்கு வழிக்காட்டிகளாய்க்கருதப்படும் அறிவும் அனுபவமும்அகன்ற ஆன்றோர் பரம்பரையாய்க்கூறி வரும் எச்சரிக்கையைக் கேட்டு அதிக அச்சங்கொண்டு, தான் தொடங்கும் காரியம் தன் பிரயாசைக்குத் தகுந்த சன்மானம் கொடுக்குமோ என்று சற்று நிதானித்தும், நன்மை தீமை நாடாது பொருளைப் பற்று முன்னர், அப்பொருளை அடைந்த காலத்தில் அதனால் என்ன உபயோகம் உண்டு என்பதை ஆராயாமலுமிருந்தால், அவ்வாராய்ச்சி அவன் ஆவலை பெரும்பாலும் தணித்து அவன் ஆவேசத்தை அடக்கிவிடும்.

திரவியம் நம்மிட மிருக்கும் போது பயனற்றது; செல்வம் நம்மைவிட்டுச் செல்லும் பொழுதே அது பயன்படுவது. அதனால் வாங்கப்படும் பொருள்கள்தான் நமக்கு உபயோகப்படுவன. செல்வம் படைத்தோர் அச்செல்வத்தால் வாங்க வல்ல விசேஷ சக்தி ஒன்றுமில்லை. ஞானி அதை எப்பொழுதும் இச்சிக்க மாட்டான், அதை உடையவனைப் பார்த்து பொறாமைப் படவுமாட்டான்.

சரீர சுகத்துக்கு எவ்வளவு அனுகூலம் அளிப்பினும், செல்வம் நோயையும் வலியையும் தீர்க்க சக்தியற்றது. அதிக சுகத்துடன் வாழ்வதால்

தனவான்கள் சரீரம் பலஹீனமாயும், நோய்க்கிடமாயும் ஆய்விடுகிறது. செல்வம் மனதை விசாலப்படுத்தி, உணரும் வல்லமையை அதிகரித்து, மனோ பாவனா சக்தியை மேல்படுத்தியதாக நாம் எப்பொழுதும் கேட்டதில்லை. அவ்வாறன்றி, தனவான்கள் முகஸ்துதி செய்வோரால் சூழப்பட்டும், உழைக்க அவசிய மில்லாதவராயுமிருத்தலால், தம் பொய் எண்ணங்களே உண்மையென்று நம்பியும் தம் மடமையை திடம் செய்தும் வருவதற்கு செல்வம் சகாயமாயிருக்கிறது.

செல்வம் எக்காலத்திலும் மேன்மையை உண்டாக்காது. இயற்கையிலேயே சிறிதாயமைக்கப்பட்டதை எதுதான் பெரிதாகச் செய்யக்கூடும்? வித்து எதுவோ, அதுவே விளையும். மன்னர் பட்ட மளிப்பினும், அப்பட்டம் புல்லரை உயர்த்தமாட்டாது. பெரும் செல்வம் படைத்த அரசர் பெயரால் இராஜ்ஜிய பரிபாலனம் செய்யப்படினும், உண்மையில், அதிகாரம் செலுத்தும் மனிதர், அறிவகன்ற அவர் அமைச்சரே.

ஆதலால், பணத்தாசை மனதைப் பற்றும் தோறும், நாம் நிதானித்து யோசிப்போம். அதிர்ஷடத்தாலும், உழைப்பாலும் செல்வம் சேகரித்த மனிதரை எவ்வாறு மாற்றுகிறது என்று பார்ப்போம். சம்பத்தால் திக்குமுக்காடியும், சுகானுபவ கருவிகளனைத்தையும் படைத்திருப்பினும், சுகமின்றியும், வேலை செய்யாமலிருப்பினும், சமாதான மின்றியும், கோபமும் சிடு சிடுப்புமே உடையவர்களாயும், மற்ற மானிடரால் இகழப்பட்டும் வெறுக்கப் பட்டும் அவர் வாழ்வதை நாம் கண்டால், நம் பதவிக்கு (உண்மையில்) இன்றி யமையாத தேவைகளை மாத்திரம் திருப்தி செய்தால், அதிக ஆவலுடனும் கவலையுடனும் தேடிச் செல்லும் பொருள் எதுவுமில்லை என்று நாம் அறிவோம்.

C. சுந்தரமய்யர் பி. ஏ

# உழவுநூல்
## AGRICULTURE

சரித்திரம்:—

பழைய அநுபோகங்களிலிருந்து விஷயங்களை ஞாபித்துக்கொண்டு அவற்றினின்று உண்மைகளை அறிந்துகொள்ளும் சக்தி மனிதனிடத்தில் மாத்திரம் அமைந்துளது. ஆனால், இச்சக்தியை அநேகர் தம் ஜீவனோபாயத்தைத் தேடும் வேலை மிகுதியினாலோ, அல்லது விஷயங்களை அறிந்துகொள்வதற்குப் போதுமான குறிப்புகள் கிடைக்காமையினாலோ நழுவவிட்டுவிடுகிறார்கள். பொதுவாய் நம் மூதாதையர், விஷயங்களைச் சேகரித்தும் அவ்வப்போது குறித்துவைத்தும் கொள்ளவில்லை. அப்படியே சில விஷயங்களைக்குறித்து வைத்திருந்தாலும், விவசாயத்தைப்பற்றிக் கவனிக்கவேயில்லை. ஆங்கில சரித்திரங்களிலும் வியவசாயத்தைப் பற்றி போதுமானபடி எழுதக்காணோம். இந்தியா சரித்திரத்தில் அதனிலும் குறைவாகவே வரைந்திருக்கிறது. நாகரிகமடைந்த ஒவ்வொரு தேசத்திலும், வியவசாயம் ஜனத்தொகையின் பெரும்பாலரது இன்றி யமையா ஜீவனோபாயத் தொழிலாகும். அதன் விருத்தி அல்லது நலிவு அத்தேசத்தின் நாகரிக மேன்மை அல்லது தாழ்மையைக் காட்டும் அறிகுறியாகும்.

சரித்திரங்களில் வியவசாயத்தைப் பற்றிப் போதுமானபடி எழுதியிராத குறைவினால் அவ்வக்காலத்தொகுதியில் அதன் நிலைமை எவ்வாறு இருந்ததென்று ஊகித்துக்கொள்ள இடமில்லை. ஐரோப்பிய சரித்திரங்களில் கண்டிருக்கிறபடியே இந்தியாவிலும் வியவசாயத்தின் தற்கால நிலைமை பலவாற்றானும் ஒத்திருக்கிறபடியால் இத்தேசத்தின் வியவசாய நிலைமையைக் கற்பது அவசியமாகின்றது. இதன் நிலைமை மனிதனது பூர்வீக நிலைமையையும் தெரிவிக்கிறது. இத்தேசத்தில் காடு மலைகளில் சஞ்சரிக்கும் குறவர்கள் நாகரிகமற்ற

வராய் மிருகங்களின் தோலை அல்லது உலர்ந்த சரகை உடுத்திக்கொண்டு இருப்பதை இப்பொழுதும் நாம் காணலாம். ஆனால் தேசத்தின் பெரும்பாலர் நாகரீகத் தேர்ச்சி பெற்று நாகரீகத் தொழில்களில் பரிச்சயம் உள்ளவராயிருக்கிறார்கள். நமது ஆசியாக் கண்டத்திற்றான் நாகரீகத்தின் பழைய நிலைமையையும் அறியக்கிடைக்கும், கீழ்நாடுகளிலுள்ள நீலநதி (The Nile), யூபரிட்டீஸ் (The Euphrates) மற்ற நதிகளிலும் வருடாந்திரத்தில் வெள்ளம் அமோகமாய்க் கரை புரண்டு ஓடி, தம்மிடத்தேயுள்ள கழனிகளில் 'வண்டல்' செழிப்பு மண்ணை ஒதுக்கி வருகின்றன. அவ்வாறு ஒதுக்கப்பெற்ற வண்டல்மண் சூரியவெப்பம் பட்டு சிறந்த உரமாகிவிடுவதால், வியவசாயிகள் விதை விதைக்கும் வேலையைத்தவிர, வேறு சிரமம் எடுக்கவேண்டியதில்லை. தன்னாலேயே பயிராகிவிடுகின்றது. ஆகையால் இந்நதிகளில் வரும் பருவப் பிரவாகங்களின் ஒழுங்கைப் பற்றிக்கொண்டு வியவசாயம் நடத்தும்படி வியவசாயிகளைத் தூண்டின. இவ்வெள்ளங்களாலும் அவற்றினால் ஒதுக்கப் பெறும் வண்டல் மண்ணினாலும், வயல்களின் கரையானது அழிந்துபோகுமாதலால் ஒவ்வொரு வருஷமும் புதிதாக எல்லைகள் குறிக்கவேண்டியிருக்கும். நக்ஷத்திரங்களின் நிலையை வைத்து வருஷாந்தர வெள்ளத்தின் வரவை எதிர் பார்த்து வந்தார்கள். இவ்விதமாக எகிப்து(Egypt) தேசமானது நாளாவிருத்தியில் வியவசாய, பூகணித (Geometry) வானசாஸ்திரங்களில் தேர்ச்சிபெற்றது.

இம்மாதிரியாகவே ஆசியா முழுவதும் மேற்குறித்த சாஸ்திரங்கள் விருத்திபெற்று வந்தன. எகிப்து தேசத்திலிருந்து கிரேக்கரும், ரோமர்களும் (The Greeks and the Romans) சாஸ்திரங்களின் அறிவை கற்றுப்போய், பின் ஐரோப்பா முழுவதிலும் பரவச்செய்தார்கள். அங்குமிங்கும் சுற்றித்திரியும் சில ஜாதியாரைத் தவிர, பழையகாலத்திலுள்ளவர்கள் தத்தம் கிராமாந்தரங்களி லிருந்துகொண்டு அவற்றைச் சுற்றியுள்ள நிலங்களைப் பண்படுத்தி வேளாண்மை நடத்தியும் கிராமத்தின் சமுதாய மேய்ச்சல் நிலங்களில் தம் ஆடுமாடுகளை மேய்த்தும் வந்தார்கள். ஜனங்கள் சொற்பமாகவும் செட்டாகவுமிருந்தபடியால், மேற்குறித்த சௌகரியங்களே அவர்கள் ஜீவனோபாயத்துக்குப் போதுமானவையாயிருந்தன. ஆனால் ஜனத்தொகை யதிகரித்தும், நாகரிகம் விருத்திபெற்றும் வந்தபோது மேலான சௌகரியங்களை நாடினார்கள். அதனால் அதிகமாய் நிலங்களைத் திருத்தியும் அவற்றைத் தகுந்த பலனளிக்கும்படி முயற்சித்தும் வர அவர்களுக்கு இடமேற்பட்டது. தற்காலத்தில் இவ்விஷயமாய் (அதாவது தரிசு நிலத்தைப் பண்படுத்துவது) ஏற்கனவே போதுமான சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆகையால் இவ்வாறு உழவுக்குக் கொண்டுவரப்பட்ட நிலங்களைத் தக்கபடி உரமிட்டும் (Natural and Artificial manures) அந்தந்தக்காலத்துக்கு ஏற்றவாறு பயிர்களை விளைவித்தும் வியவசாயத்துக்கு இன்றியமையாத் துணையாகிய கால்நடைகளை விருத்தி பண்ணியும் வரவேண்டுவதே இனி எடுக்கவேண்டிய முயற்சிகளாகும்.

இவ்விஷயத்தில் மேநாட்டார் மிகுந்த ஊக்கத்தைக் காட்டி கீழ் நாட்டாரைக் காட்டிலும் பலமடங்கு பலனையும் பெற்றிருக்கிறார்கள். புராதன காலத்தில் வியவசாயக் கருவிகளாக உபயோகிக்கப்பட்டு வந்தவைகள் சாமான்யமாய்க் கையினால் வழங்கக்கூடிய மரக்கருவிகளே. ஆனால் தற்காலத்தில், இயந்திரங்களின் வல்லமை யாருக்கும் தெரிந்ததே யன்றோ! ஆகையால் கருவியின் அபிவிருத்தியை நிதர்சனமாய் அறிகின்றோமல்லவா? உதாரணமாக, கலப்பையைப்பற்றி விசாரிப்போம். ஆரம்பத்தில் இது கையிற்பிடித்து தோண்டுவதற் கேற்றதாகவும் வளைவாகவும் இருந்தது. பின்பு நிலத்தைக் கிழித்துச் செல்வதற்காக சிறிய இரும்புக்கம்பியை இதில் நுழைத்துக்கொண்டார்கள். இதை இழுத்துச்செல்வதற்குக் காளைகளைப் பூட்டினார்கள். இம்மாதிரியான கலப்பையே தற்காலத்தில்

இந்தியாவில் வழங்கி வருவது. இதற்கு அடுத்த படியாக நிலத்தின் மண்ணை நன்றாய்த் திருப் பிப்போடக்கூடிய 'இறக்கை'(Mould Board) யென்பது சேர்க்கப்பட்டது. கடைசியாக, சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஐரோப்பாவில் கலப்பையை முற்றுப் பெற்ற நிலைமையில் காண்கிறோம். மேற்குறித்த முற்றுப்பெற்ற கலப்பை மேனாட்டில் ஏற்படுத்துவதற்குமுன், கீழ்த்தேச வியவசாயத்துக்கும் மேனாட்டு வியவசாயத்துக்கும் மிகுந்த வித்தியாசம் இல்லை.

ஆகையால், இப்போது இந்தியாவில் வியவசாய விஷயமாய் ஜனங்கள் பரிசோதனைகள் நடத்திவரத் தலைப்பட்டிருக்கிறது போலவே, அப்போது ஐரோப்பாவில் ஜனங்கள் பரீக்ஷைகள் செய்ய முயற்சித்து, அவற்றினின்று தக்கபலனையும் கண்டார்கள். ஆனால் பெரும்பாலர் அவற்றின் பலனை யடைய வில்லை. அவர்கள் இன்னும் தம் மூதாதையர் அநுசரித்துவந்த வழக்கத்தையே பின்பற்றி வந்தார்கள். இச்சமயத்தில் ஜெத்ரோட்டல் (Jethrottel) என்னும் ஓர் வியவசாயநூல் ஆசிரியர், அவ்விஷயத்தைப் பற்றிச் சில கோட்பாடுகளை வெளியிட்டார். கி. பி.1731 வருஷம் வரை பயிர்ச்செடிகள் எவ்வாறு உணவைக் கிரகிக்கின்றன என்றாவது, எப்படி வளர்கின்றனவென்பதைப் பற்றியாவது, ஜனங்கள் திட்டமானபடி தெரிந்து கொள்ளவில்லை. டல் என்பவருடைய கோட்பாடு என்ன வென்றால், பயிர்கள் நிலத்திலுள்ள நுண்ணிய மணலை உண்ணுகிறதென்பதேயாம். ஆகையால், அவர் நிலத்தை நன்றாய் உழுது பயிரிடத்தலைப்பட்டார். அப்படிச் செய்ததில் தக்கபலனைப் பெற்றதால், அந்தக் கோட்பாட்டை ஜனங்கள் வெகுவாய் நம்பலானார்கள் என்றாலும், பயிரானது உணவைக் கிரகிக்கும் முறையை, சென்ற நூற்றாண்டின் இடையில்தான் ஒருவாறு கண்டுபிடித்தார்கள். 18-ம் நூற்றாண்டினிறுதியில் வியவசாயமாய்ச் செய்து பார்க்கப்பட்ட பரிசோதனை ஆராய்ச்சிகளைத் திரட்டவும், பற்பல இடங்களிலுள்ள வியவசாயிகளது முறைகளின் நயத்தைப் பரிசோதிக்கவும், தொடங்கினார்கள். வெகுகாலத்துக்கு முன்னரே, வியவசாயிகள் ஒரே நிலத்தில் பயிர் செய்வதினால், வரவரப் பலன் குன்றிப்போவதை யறிந்து கொண்டபடியால், தொடர்ச்சியாய் இரண்டொருவருஷங்களுக்கு சாகுபடி செய்த பின் நிலத்தை தரிசு போட்டு பின் உழுது பயிரிட்டு வந்தார்கள். மேலும் ஒருவகைப் பயிருக்கு நிலம் ஏற்றதாயிராவிடில், அதற்குத் தகுந்த மற்றொருபயிரை விளைவித்துக்கொள்ளக் கற்றுக்கொண்டார்கள். 'வியவசாய அபிவிருத்தி' விஷயமாய்ப் பெரிதும் உழைத்திருக்கிற ஆர்தர் எங் (Arther Young) என்பவர் கி. பி. 1770ல் நார்போக்கு (Norfolk) மாகாணத்தில் சுற்றுப்பிரயாணம் செய்து அம்மாகாணத்தில் ஒரு பயிருக்குப் பின் மற்றொருபயிரிடும் முறையின் பிரயோசனத்தைத் தெரிந்து கொண்டார். இம்முறைதான் நார்போக் முறையென்றும் நால்விதப் பயிர்முறை யென்றும் வழங்குவது (Four course system). இம்முறையில் நிலத்தின்செழிப்பு கெட்டுப் போகாததால், அது பெரிதும் சிலாகித்துப் பேசப்படுகின்றது. அம்முறைப்படி முதலில் கோதுமை பயிரானபின், டர்னிப் என்ற ஒருவகை கிழங்கை (turnips) பயிரிடுவார்கள்.

அதற்குப்பின் வாற்கோதுமை விளைச்சலாகும். கடைசியாக, கிளோவர் (Clover) பயிரிடுவார்கள். இம்முறையின் நயத்தை, மேற்கண்ட பரிசோதனையிலிருந்தும் தெரிந்துகொண்டார்கள். பின்பு சாஸ்திரரீதியாய் இம்முறையின் நயம் தெரியவே, சிறந்த புது மாதிரிகளும் காட்டப்பட்டன. இம்முறையில் இன்னும் சில சீர்திருத்தங்களும் செய்திருக்கிறார்கள்.

*By a Specialist*

# சுகாதார விளக்கம்

## HYGIENE.

(பண்டித நடேச சாஸ்திரியார் எழுதியது.)

### முதல் அத்தியாயம்

#### நிலம்

1. நிலம்.—பூமியின் மேற்புறமாகிய நிலத்திலேதான் மானுடஜன்ம மெடுத்த நாம் எல்லோரும் வசிக்கின்றோம். நாம் எத்தன்மையான நிலத்தின் மேல் வசிக்கின்றோமோ, அந்நிலத்தின் நிலைமையும் குணங்களும் நமது சரீர சௌக்கியத்துடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

2. நிலத்தின் பாங்கு.—நிலத்தின் கண் உலோகங்களும், ஒஷதிவர்க்கங்களும், பிராணிவர்க்கங்களும், இவைகளின் கழிவுகளும், மடிந்திருக்கின்றன. இவ்விதக் கலப்புகள் கலந்த மண்ணின் இடையில் சிலவிடங்களில் வாயுவும் ஜலமும் காணப்படும். மண்ணிற் கலந்த வாயுவாலும், மண்ணிற் கலந்த ஜலத்தாலும் விளையும் சுகாசுகங்களைப்பற்றி விசாரிப்போம்.

3. மண்ணிற் கலந்த வாயு.—சூரிய காந்தியாலும் வெப்பத்தாலும் மண்ணின் கீழ் நிற்கும் வாயு சலனப்பட்டுக்கொண்டேயிருக்கின்றது. இவ்வித சலனம், மழையாலும் உண்டாகின்றது. அது எப்படியெனில், மழை பொழிந்து தண்ணீர் அதிகமாகிப் பூமியில் ஊறினதும், பூமியின் உள்ளடங்கியிருந்த வாயு, தான் நிற்க இடமில்லாமற் சரேலென்று வெளிப்படுகின்றது. நாம் ஒரு பள்ளத்தை மண் கொட்டித் தூர்த்து, அதின்மேல் ஒரு புது வீடு கட்டுவோமானால், மண் ஆழ்ந்து தளம் கெட்டிப்படுகிறவரையில், அவ்வீட்டில் பரிசுத்தமான ஆகாயமிருக்காது. தளம் கெட்டிப்படுகின்றதென்றால், அவ்வீட்டின் கீழ் அடங்கிய காற்றுக் கொஞ்சம் கொஞ்சமாக அகன்று போகின்றது என்பதாம். ஆகையால் நாம் வசிக்கும் வீட்டின் அடிக்காற்று மேற்கிளம்பாத வண்ணம், நாம் தரையை நன்றாகக் கெட்டிப் படுத்தலாவது தளம் போடலாவது நமது சரீர சௌக்கிய முறைகளில் முக்கியமானது. இதற்காகவே, சில நாடுகளில் வீடுகள் கட்டும்பொழுது மேல் தளத்தை கமான்களாக வளைத்து, வீட்டிற்கடியில் உண்டாகும் காற்றை, வீட்டில் சம்பந்தப்படாமல் அகற்றி விட்டு, அக்கமான்களின் மேற்புறத்தை வீட்டின் பிரதான தளமாகச் செய்து, வீடு கட்டுகின்றார்கள். சிமிட்டு (cement) முதலான சாதனங்களால் அழுத்தமான தளம்போட்டுக் கட்டப்படும் வீடுகள் எப்பொழுதும் நமக்கு தேக சௌக்கியத்தை விளைவிக்கும். இவ்விதமான கட்டிடங்களில் அடிக்காற்று மேற்கிளம்பாது. நாற்றங்களும் எளிதில் அலம்பி விடப்பட்டு அகற்றப்படும்.

4. மண்ணிற் கலந்த ஜலம்.—மண்ணிற் கலந்து நிற்கும் ஜலம், ஈரம் என்றும் கசிவு என்றும் இருவகைப்படும். மண்ணின் இடைவெளியில், கொஞ்சம் காற்றும் கொஞ்சம் நீரும் கலந்திருந்தால் அது ஈரம் எனப்படும். மண்ணின் கணங்கள் காற்று என்பதின்றி, நீரில் நெருங்கி மிதக்கும்பொழுது அது கசிவு எனப்படும்.

5. ஈரம்.—ஈரம் அதிகம் அல்லது குறைவு என்பது, மண்ணின் இயற்கையைப் பொறுத்திருக்கின்றது. சில மண்கள் நீரை அதிகமாகத் தமக்குள் இழுத்துக் கொண்டும், அந் நீரைக் கீழ் நோக்கிச் செல்லும்படி செய்து கொண்டு மிருக்கின்றன. சில மண்களில், நீர் இவ்வாறு கீழ் நோக்கிச் செல்ல, வல்லமை யில்லாமலிருக்கின்றது. ஈரம், மண்ணின் குணத்தைச் சார்ந்தது. அக்குணம், அபேத்யம் (Impenetrable) பேத்யம் (Penetrable) என்று இருவகை. தண்ணீர் எளிதில் நுழையக்கூடாத அல்லது இறங்க முடியாத மண், அபேத்யம் எனப்படுகின்றது. களிமண் இவ்வகையைச் சேர்ந்தது. தண்ணீர் எளிதில் இறங்கக் கூடிய மண், பேத்யம் எனப்படும். மணற்பாய்ந்த மண் இவ்வினத்தைச் சேர்ந்தது. மழை பொழிந்து, நீர் பூமியில் சுவருகின்றது. அப்பொழுதும் ஈரம் என்பது உண்டாகின்றது. இவ்வீரம் தரை

அபேத்யம் அல்லது பேத்யம் என்பதைச் சார்ந்திருப்பதுடன், பூமி பள்ளமா மேடா என்பதையும் சார்ந்திருக்கின்றது. இவைகளின்றி, மழை வெயிற்கால மழையா, அல்லது மழை காலத்து மழையா என்பதையும் நாம் சிர் தூக்கவேண்டும். இவைகள் எல்லாவற்றையும் நாம் யோசிக்கும்பொழுது, மழை நீர்; வேகமாக பூமியில் சுவருவதும் அல்லது மெதுவாக உள்ளடங்குவதும், அவ்வித காரணங்களால் ஈரம் உண்டாவதும், நமக்கு விளங்கும். ஈரம் மழையால் மாத்திரமல்லாமல் கசிவாலும் உண்டாகின்றது. கசிவுண்டாகு மிடத்திலிருந்து வெளிக்கிளம்பும் நீர் ஈரத்தை உண்டாக்குகின்றது.

6. கசிவு.—கசியும் நீர் பூமிக்குள் பல விடங்களில் வெவ்வேறு ஆழங்களில் எப்பொழுது மிருந்துகொண்டே யிருக்கின்றது. அவ்விடங்களினின்று கசிவு நீர் வெளிக்கிளம்புவதும் கிளம்பாததும், தரை அபேத்யமா அல்லது பேத்யமா என்பதையும், பூமி பள்ளமா மேடா என்பதையும் சம்பந்தித் திருக்கின்றது. கசிவு நீரை ஆகர்ஷிக்கும் சக்தி மரங்களின் வேர்களுக் கிருக்கின்றது. இதை உத்தேசித்தே சதுப்பு நிலங்களில், சவுக்கு, கர்ப்பூரமரம் முதலிய மரங்களைப் பயிரிடுகின்றார்கள். கசிவு அதிகம் அல்லது குறைவு என்ற மாறுபாடுகள் மழை அதிகமாகப் பொழிவது அல்லது பொழியாதது, கசிவு நிலங்கள் சமுத்திரத்திற்கோ அல்லது நதிக்கோ தூரத்தில் அல்லது சமீபத்தில் இருப்பது, இக்காரணங்களைச் சம்பந்தப் பட்டிருக்கின்றன.

7. ஈரத்தால் விளையும் நோய்கள்:—காய்ந்த தரையில் வசிப்பது எப்பொழுதும் நமது தேகத்துக்கு சௌக்கியத்தை விளைவிக்கும். ஈரத்தரையில் வசித்தல் நமது சுவாசாசயத்தைக் (lungs) கெடுத்து, காசம் முதலிய ரோகங்களை நமக்கு உண்டாக்குகின்றது.கபரோகம், சிலேஷ்ம ரோகம், சந்நிவாதநோய், முறை சுரம், விஷசுரம், வயிற்றில்கட்டி, விஷபேதி, இவ்விதமான நோய்கள், ஈரத்தரையில் வசிப்பதால் உண்டாகின்றன. இவைகளுள் விஷபேதி என்பது, எப்பொழுதும் ஈர நிலத்தினிடத்திலேயே உண்டாகின்றது.

8. கசிவாலுண்டாகும் வியாதிகள்:—கசிவு நிலங்களுக்குச் சமீபத்தில் வசிப்பதால் மேற்கூறிய வியாதிகள் உண்டாவதுடன், சீதபேதி சின்னம்மை முதலிய வியாதிகளும் விளைகின்றன.

9. நிலத்தின் அங்கங்கள்.—நாம் வசிக்கும் இடம் மலைநாடா, சமதரையா, மலைநாடாயிருந்தால் மலையின் உயரமென்ன, வடிவமென்ன, சமதரையாயிருந்தால் மேடான தரையா பள்ளத்தாக்கா, அந்தரைக்கு நீர் பாயும் கால்கள் யாவை, நீர் வடியும் கால்கள் யாவை என்று நாம் எப்பொழுதும் யோசித்துப்பார்க்கவேண்டும். ஏனெனில்,இவைகள் ஒவ்வொன்றும் நமது தேக சௌக்கியத்தை சம்பந்தித் திருக்கின்றது.

மலையின் உன்னத ஸ்தலம் எப்பொழுதும் சௌக்கியம். சமதரையில் கொஞ்சம் மேட்டுப்பாங்கான தரை, எப்பொழுதும் தேகாரோக்கியம். தரை உலருவதை மர நிழல் தடுக்கின்றபடியால், ஈர நிலங்களில் தோட்ட மதிகமாகவிருந்தால், அது சௌக்கியமல்ல. ஈரமில்லாத விடங்களிலும் விருக்ஷங்கள் அதிகமாய் அடர்ந்திருப்பது காற்றோட்டத்தைத் தடுக்கின்றபடியால், அவ்வாறு மரங்களை அடரவிடாமல் நாம் கழித்துக்கொண்டிருக்கவேண்டும். மலைப் பிரதேசங்களில் நாம் வாசம் பண்ணும்பொழுது நமக்கு நான்கு பக்கங்களிலும் மலைகள் ஓங்கி நிற்கும் இடங்கள் நமக்கு சௌக்கிய முள்ளவைகளல்ல; அவ்விடங்களில் காற்றோட்டமிருக்கமாட்டாது. அங்குள்ள அரணியங்களில் உதிரும் சருகுகள், அழுகிய துர்க்கந்தமும் விஷமும் நிரம்பிய காற்று சலனமின்றி யிருக்குமாகையால், அவ்விடங்கள்,தேகசௌக்கியத்துக்கு ஒவ்வாதவைகள். மலையடிவாரங்களும் நிலமட்டத்துக்குக் கீழ்ப்பட்ட பள்ளத்தாக்குகளும் அவ்வாறே.

10. நிலத்தின் நிறம். கரிசல் மண்ணில் சூரியனுடைய உஷ்ணம் அதிகமாகப் பிடிக்கின்றது. அக்கரிசல் மணற்றரையாக விருந்தால், அங்குண்டாகும் உஷ்ணத்திற்கு அளவேயில்லை.

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

பண்டிதநடேசசாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு.

### முதல் ஸருக்கம்

### உமாதேவி உத்பவம்

(1.) வடதிசையில் தேவரூபியாய் இமவான் என்று பெயருள்ள மலையரசர் விளங்குகின்றார்; அவர் கீழ் சமுத்திரம், மேல் சமுத்திரம், இவ்விரு சமுத்திரங்களிலும் எட்டி ஓங்கி நிற்பதால், இப்பூதலத்துக்கே ஓர் அளவுகோல்போலக் காணப்படுகின்றார்.

### இமயமலை வருணனை

(2.) முன்னொருகாலத்தில், பூமாதேவி பசுவுருவங்கொண்டபொழுது, அவ்வுருவங்கொண்ட இரகசியத்தைப் பிருது மகாராஜன் எல்லா மலைகளிடமும் தெரிவிக்க, மற்றை மலைகளெல்லாம் இவ்விமவானை அப்பசுவின் கன்றாகசெய்து, பால்கறப்பதில் மிக்க சமர்த்தனான மேருவைக்கொண்டு அப்பசுவைக் கறந்து, * மிகவும் ஒளிபொருந்திய ரத்தினங்களையும் உயர்ந்த மூலிகைகளையும் பெற்றுக்கொண்டார்கள்.

(3) கணக்கிட முடியாத எல்லாவித உயர்ந்த வஸ்துக்களுக்கெல்லாம் ஆதாரபூதமாயிருக்கும் இவ்விமயமலையின் மகிமையானது, அதனிட மிருக்கும் பனி என்பதனால், ஏதோ சொற்பம் குறைவுபடுவதாக நாம் கருதக்கூடாது; ஏனெனில் அநேக நற்குணங்களுடன் ஒரு தோஷம் கூடியிருப்பினும், அத்தோஷம் சந்திரபகவானுடைய கிரணங்களுக்குள் அவருடைய மாசுமறைவது போல் மறைந்து விடுமன்றோ?

* பசுவுக்குத் தன் கன்றினிடம் அதிக ஆசையாகையால், கன்றாய் நின்று பால்குடித்த ஹிமவானுக்கு மற்றை மலைகளுக்குக் கொடுத்த இரத்தினங்களையும் மூலிகைகளையும்விடச் சிரேஷ்டமான இரத்தினங்களையும் மூலிகைகளையும் பால் ரூபமாகக் கொடுத்திருக்கவேண்டும் என்பது கவியின் கருத்து. அதுவே உண்மையே. மற்றை மலைகளைக்காட்டிலும் இமயமலையிற்றான் இப்பொழுதும் எல்லாவித உயர்ந்த ரத்தினங்களும் மூலிகைகளும் கிடைக்கின்றனவென்பது உலகப்பிரஸித்தம்.

(4) அம்மலையின் சிகரங்களில் ஏராளமாயுள்ள காவிக்கற்களின் நிறம், மேகங்களின்மேல்படிவதனால் அந்திச் செவ்வானம் உண்டாயிற்று என்று மருண்டு அம்மலையிலிருக்கும் அப்சர மடந்தைகள் காலமில்லாக் காலத்திலும் தங்கள் மேனிகளை நகைகளால் அலங்கரித்துக் கொள்ளுகின்றார்கள்.

(5) அம்மலையில் வசிக்கும் ஸித்தர்கள் அதின் சிகரங்களுக்குக் கீழ் அடர்ந்து சஞ்சரிக்கும் மேகமண்டலத்துக்குள் நிழலாலும் மழையாலும் உண்டாகும் சுகத்தை அநுபவித்துவிட்டு, மழை அதிகமாய் பெய்ததன் குளிர்ச்சி சகிக்க முடியாமற்போகும் பொழுதெல்லாம், அம் மேகமண்டலத்துக்கு மேலாக ஓங்கி வெயிற்காய்ந்து விளங்கும் சிகரங்களை நாடிச் செல்லுகின்றார்கள்.

(6) யானைகளைக் கொன்று சென்ற சிங்கங்களின் இரத்தச் சுவடுகளைப் பனி பெய்து அழித்த காரணத்தால், அவைகளைப் பற்றி வேடர்கள் அச்சிங்கங்களைத் தேட முடியாவிடினும், அச்சிங்கங்களின் நகக்கண்களினின்றும் உதிர்ந்திருக்கின்ற யானைகளுடைய மஸ்தக நல்முத்துக்களால், அம்மலையில் அச்சிங்கங்கள் போனவழியைக் கண்டுபிடித்துக் கொள்ளுகின்றார்கள்.

(7) அம்மலையில் வசிக்கும் வித்யாதர ஜாதியைச் சேர்ந்த கட்டழகிகள் தங்கள் கணவர்களுக்கு அன்பான கடிதங்கள் அனுப்பவேண்டியிருக்கும்பொழுதெல்லாம், அம்மலையில் உண்டாகும் பூர்ஜபத்திரம் என்ற இலைகளில் காவிக்குழம்பு மையால் வயது சென்ற யானையின் துதிக்கையின்மேல் காணப்படும் பத்மவிந்துக்கள்போல் அழகான எழுத்துக்களால் காகிதம் எழுதி அனுப்புவார்கள்.

(8) இம்மலையில் வசிக்கும் கின்னரர்கள் இசை பாடும்பொழுதெல்லாம் இம்மலையின் குகையாகிற முகத்தினின்று வெளிக்கிளம்பும் காற்றானது வண்டுகளால் துளைக்கப்பட்ட மூங்கில்களை நிரப்பிக்கொண்டு அக்கின்னரர்கள் பாட்டுக்கு புல்லாங்குழலொத்துக் கொடுப்பதுபோலும் காணப்படுகின்றது.

(9) இம்மலையில் யானைகள் தங்கள் கபோலங்களில் காணும் தினவைப் போக்கிக்கொள்ள சால (ஆச்சா) மரங்களில் உறையும் பொழுதெல்லாம் அம்மரங்களினின்றும் பெருகும் பால் இம்மலையின் சாரல்களை பரிமளவாஸனையால் வாஸிக்கும்படி செய்கின்றது.

(10) இவ்விமயமலையில் குகைகளாகின்ற வீடுகளுக்கு முன்பாக வளர்ந்திருக்கும் சோதிக்கொடிகள் இரவுதோறும் விளக்குகள்போல் பிரகாசிக்கின்ற காரணத்தால், தங்கள்நாயகிகளுடன் சஞ்சரிக்கின்ற வேடர்களுக்கு, அவர்களோடு உல்லாஸமாக அக்குகைளிலிருக்க அச்சோதிக்கொடிகள் அவ்விரவு நேரங்களில் எண்ணெய் ஊற்றுமலெரியும் விளக்குகளாக விளங்குகின்றன.

(11) அம்மலையில் கல்லாக உறைந்திருக்கும் பனியானது குதிரை முகம் போன்ற முகங்களை உடைய கின்னரஸ்திரீகளின் நகங்களையும் குதிகால்களையும் அவர்கள் வழிநடக்கும்பொழுதெல்லாம் வருத்திய போதிலும், அவர்களுக்கு இயற்கையாகவே நிதம்பங்களும் ஸ்தனங்களும் பெரியவைகளாகையால் மெள்ள நடக்கவேண்டியிருத்தலால் அவர்கள் அவ்வருத்தத்தைச் சகித்துக் கொள்ளுகிறார்கள்.

(12) சூரியபகவானைக் கண்டு பயந்து ஓடி வந்து ஒளிந்திருக்கும் இருள் திரளையே, இவ்விமயமலை தனது குகைக்குள் காப்பாற்றி வைத்திருப்பது போலக் காண்கின்றது. அற்பனையும் அவன் சரணமடைந்த பொழுது அவன் பகைவனிடம் ஒப்புவிக்காமல் நம்மைச் சார்ந்தவன் என்று காப்பாற்றுவது சான்றோர்களின் குணமன்றோ?

(13) இம்மலையில் சவரிமான்கள் அங்கு மிங்கும் தங்கள் வால்களைத் தூக்கி தூக்கி உதரும்பொழுதெல்லாம் சந்திரனுடைய காந்திக்கொப்பானபிரகாசத்தை உண்டாக்கிக்கொண்டு, சஞ்சரிக்கின்றமையால் அவைகள் இவ்விமயமலைக்கு, மலைகளுக்கு மன்னவன் என்றபெயரை உண்மைப்படுத்த சாமரை வீசுவனபோல் காணப்படுகின்றனவாம்.

(14) இம்மலையில் கின்னரமடந்தைகள் எதாவது ஒரு சமயத்தில் தங்கள் ஆடைகளை இழந்து வெட்கி நிற்கும் பொழுதெல்லாம் அவர்களிருக்கும் குகைகளின் வாயிலை மேகங்கள் மூடுகின்றமையால், அவைகள் அவர்களுக்கு ஒரு திரையை உண்டாக்கிக் கொடுப்பன போலும் காணப்படுகின்றன.

(15) இம்மலையில் வேடர்கள் மிருகங்களை வேட்டையாடி அயர்ந்திருக்கும் பொழுதெல்லாம் கங்கை அருவிகளினின்றும் நீர்த்திவலைகளைத் தாங்கியும் தேவதாரு மரத்தின்மேல் தவழ்ந்தும் வீசும் சுகமான காற்றானது, அவர்கள் தங்கள் மேனிகளில் கட்டிக்கொண்டிருக்கும் மயில் தோகைகளைச் சற்றே அசைத்து அவர்களைச் சுகப்படுத்தி வைக்கின்றதன்றோ? (*)

(16) இம்மலையின் உச்சியில் ஸப்தரிஷிகளால் பறிக்கப்பட்டு மிகுந்து நிற்கும் தாமரை மலர்களை அச்சப்தரிஷி மண்டலத்தின் கீழே விளங்கும் சூரிய பகவான் அம்மலர்கள் உண்டாகும் ஓடைகளின் மீது மேல்நோக்கிப்போகும் தனது கிரணங்களை விழச்செய்து மலரச்செய்கின்றான். (‖)

(17) யாகத்துக்குச் சாதனமான சோமலதை முதலான வஸ்துக்களுக்கு இவ்விமயமலை காரணமாயிருப்பதையும்,(†)பூமியைத் தூக்கிப்பிடித்துக்கொண்டிருக்கும் பலம் இதனிடமிருப்பதையும், பிரமதேவர் கண்டு, இம்மலைக்கு யாகத்தில் எல்லாரும் ஒருபாகம் அளிக்க வேண்டும் என்ற திட்டத்தையும், இம்மலை மலைகளுக்கெல்லாம் மன்னவன், என்ற பட்டத்தையும் தாமாகவே கொடுத்தார். (இன்னும் வரும்)

---

'புஷ்பங்களுள் ராஜா தாமரை. ரோஜாவும் அல்லியும் ராணிகள். ரோஜாவின் பளபளப்பு தாமரைக்கில்லை. தாமரையின் கம்பீரம் ரோஜாவுக் கில்லை. தாமரையின் அழகு, புருஷனுடைய அழகு; ரோஜாவின் அழகு, ஸ்தீரீயின் அழகு. தாமரை, பூஜாயோக்கியம் ரோஜா பூஷணயோக்கியம். யானை, கருடன் தாமரை ஒருவர்க்கம். தாமரையின் குணம் கல்யாண குணம்.ரோஜாவின் குணம் நாயகி நாயகரது ஸரஸ ஸல்லாபகுணம். தாமரை பரிசுத்தத்துக்கும் ரோஜா அழகுக்கும் விசேஷம். தாமரையின் வாஸனை புருஷனுடைய வாசகாலம், ரோஜாவின் வாஸனை ஸ்திரீயின் வாசகாலம் ரோஜாவும் அல்லியும் முறையே உத்தானபாதருடைய மனைவிமார் சுனீசி சுருசியைப் போல.'

---

(*) ஒரு மலையின் உச்சியிலிருந்து மற்றொரு மலையின் உச்சிக்குப் பட்சிகள் போல் பறந்துபோக இமாலயத்தில்வேடர்கள் தங்கள்இரு விலாப்பக்கங்களிலும் மயில் தோகைகளைக் கட்டிக்கொள்ளுகின்றார்கள் என்பது லோகப்பிரஸித்தம்.

(‖) சூரிய மண்டலத்துக்கு மேலாக இம்மலை ஓங்கி நிற்கின்றதென்பது தாத்பரியம்.

(†) ஒரு தேருக்கு அதனடியிலிருந்து உச்சி வரையில் உள்ளாக அமைக்கப்பட்டிருக்கும் உள்ளாணி அத்தேரின் பாகங்களை ஒன்றாகச் சேர்த்துப் பிடிக்க சாதகமாவதுபோல், மலையும் இப்பூமியின் உள்ளாக அமைக்கப்பட்டு பூமியை இழுத்துப் பிடித்துகொண்டுமுனை மட்டில் மலை உருவாய் நமது கண்களுக்குக் காணும் உள்ளாணிபோல் விளங்குகிறது என்பதும் ஓர் வித சித்தாந்தம்.

# இந்துலேகை

(ஒரு மலயாள நாவல்)

## முதல் அத்தியாயம்.

### கதாமுகம்.

"இதென்ன மாதவா? ஏன் இப்படிபதட்டமாய்ப் பேசினை? சே, இப்படி கூடச் செய்யலாமோ? காரணவன் தன் இஷ்டம் போலத்தான் நடப்பார்; நாம் அவருக்கு அடங்கித்தான் நடக்க வேண்டும். என்னவென்றாலும் உனக்கு நாக்குப் பதட்டம் தான்" என்றான் சாத்தர் மேனவன்.

"ஒருக்காலுமில்லை" என்றான் மாதவன். "அப்படிப் பட்ட பக்ஷபாதம் கூடவேகூடாது. அவன் நியாயமாய்ச் செய்யவேண்டியதை செய்யாமற் போனால் போகட்டும். நானே சின்னனை அழைத்துக்கொண்டுபோய்ப் படிப்பு சொல்லிவைக்கிறேன்"

இதனிடையில் கும்மிணியம்மாள் குறுக்கிட்டு—"வேண்டாம் வேண்டாம், என் செல்வமே! இதுவரையில் நான் சின்னனை விட்டிருந்ததேயில்லை. வேணுமானால் நீ சாத்தரையாவது கோபாலனையாவது அழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்குப் படிப்புச் சொல்லிவை. எப்படியும் உன்மேல் காரணவனுக்கு அதிருப்தி உண்டாயிருக்கிறது. எங்கள் மேல் அவர் கோபித்துக் கொள்வது சாதாரணம். ஆனால் உன்னைப்பற்றி நல்ல அபிப்பிராயமே கொண்டிருந்தார்" என்றாள்.

"அதெல்லாம் சரிதான்" என்று சுறுக்கென புதிலுரைத்தான் மாதவன். "ஆனால் கோபாலனையும் எல்லோருக்கும் மூத்தவனாகிய சாத்தரையும் இப்பொழுது நான் அழைத்துக்கொண்டுபோய்ப் படிக்க வைத்தால் வெகு நேர்த்தியா யிருக்குமல்லவா?"

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டு நிற்கையில், ஒரு வேலைக்காரன் ஓடிவந்து மாதவனை அவன் அம்மானாகிய சங்கரமேனவன் அழைப்பதாகச் சொன்னான். உடனே மாதவன் தன் அம்மானிருக்கும் அறைக்குட் சென்றான். இந்த சமயத்தில் நாம் இந்தக்கதையை இம்மட்டிலேயே நிறுத்தி, மாதவனுடைய கல்வி, செல்வம், அந்தஸ்து முதலிய விவரங்களை விசாரிப்போம்.

மாதவன் அபாரசக்தியும் அழகிய ரூபமும் வாய்ந்த யௌவனன். அவன் இங்கிலீஷ் வாசிக்கத் தொடங்கினது முதல் பி. ஏ. பரிக்ஷையில் தேறினவரையிலும், எந்தெந்த ஸ்கூல்களில் படித்தானோ அவற்றிலெல்லாம் அவன் தவறாமல் முதன்மையாய் நின்று வெற்றிபெற்று விளங்கிய புகழே, அவனுடைய அருமையானசக்தி சாமர்த்தியங்களை வியக்தமாயும் சம்பூர்ணமாயும் அறிவித்தது. அவன் எப்படிப்பட்ட பரிக்ஷையிலும் எப்பொழுதும் தவறினதில்லை. எப். ஏ. பரிக்ஷையில் முதல் வகுப்பில் தேறினான். பி. ஏ. பரிக்ஷையில் ஸம்ஸ்கிருதத்தைத் தனக்கிஷ்டமான இரண்டாம் பாஷையாக எடுத்துக்கொண்டு படித்தான். ஸம்ஸ்கிருத இலக்கியத்தில் அவனுக்கிருந்த நுண்ணிய அறிவு அபாரம். பி. எல். பரிக்ஷையிலும் முதல்வகுப்பில் எல்லாருக்கும் முதன்மையாகத் தேறினான். இவையன்றி ஸ்கூல் பரிக்ஷைகள் பலவற்றிலும் அவன்மேலாக விளங்கி வித்யாபிவிருத்திக்காக ஏற்பட்டிருந்த பல பரிசுகளையும் ஸ்காலர்ஷிப் புகளென்ற வித்யார்த்தி சம்பளங்களையும் சம்பாதித்து, யுக்தியிலும் புத்தியிலும் இவனுக்கு நிகர் இவனுடன் படித்த பிள்ளைகளில் ஒருவருமில்லையென்று இவன் உபாத்தியாயர்களும் புகழ்ந்து மெச்சும்படி உயர்ந்து நின்றான்.

அவனது ரூபவிசேஷத்தைப் பற்றியோவெனில், இப்படிப்பட்ட அபூர்வமும் அத்புதமுமான புத்திக்கு உறைவிடமா யிருக்கவேண்டி, அதற்கு அநுரூபமாய்த்தான் படைக்கப்பட்டதோ மாதவனுடைய மேனி யென்று அவனைக் கண்டு பரிசயமானவர்களுக்கெல்லாம் தோன்றும். ஒருவனுடைய குணதோஷங்களை யாராயுங்கால் அவனது வடிவழகை வர்ணிப்பது சாதாரணமாக அநாவசியமாகையால், அவனது புத்தி, சாமர்த்தியம், கல்வி, ஆண்மை, விநயம், குணம் ஆகிய இவற்றை எடுத்துச்சொல்வதே போதுமானது. ஆகிலும் மாதவனது வடிவழகைப்பற்றி இரண்டொரு வசனமாகிலும் சொல்லாமலிருப்பது இக்கதையின் சிறப்புக்குக் குறையாகுமென்று இதைப் படிக்கும் எமது நண்பர்களுக்குத் தோற்றக் கூடுமாதலால், அவ்விஷயத்தைப்பற்றிச் சுருக்கமாய்ச் சிறிது கூறுகின்றேன்.

அவனது தேகம் தங்கநிறமாயிருந்தது. தினந்தோறும்செய்து வந்தசரீரப்பயிற்சிகளால்இந்த யௌவன காலத்தில் மாதவனுடைய மேனிமிக்க மநோஹரமாய் விளங்கியது. வேண்டுமளவுக்கு மிஞ்சித் தடிப்பாயிராமலும், ஒற்றைநாடியா யிராமலும் காணப்

பட்ட மாதவனது கைகளும் மார்பும் கால்களும் தங்கத்தால் வார்த்து வைத்தவைபோல் விளங்கின. குடுமியை யவிழ்த்துவிட்டால், அவனது நீண்ட கூந்தல், முழங்கால் வரையும் வந்து தொங்கும். அவனது முக காந்தியும் பௌருஷ சம்பத்தும் ஒவ்வொரு அவயவங்களுக்கும் தனித்தனியே யுள்ள சௌந்தர்யமும் அவையனைத்துக்கும் அந்யோந்ய முள்ள பொருத்தமும், அவ்வளவேன், அவனுடைய முகவிலாஸமும் மேனியின் எழிலும், அவை அவ்வளவும் ஒன்று சேர்ந்து விளங்கிய காட்சியே காட்சி! மாதவனுக்குப் பரிச்சயமாயுள்ள சகல ஐரோப்பியரும் முதல்தடவை பார்த்தபொழுதே, அவனிடத்தில் பிரியங்கொண்டு அதுமுதல் எப்போதும் அவனது நண்பர்களாகவேயிருந்து வந்தனர்.

மாதவன் இவ்வாறு யௌவனாரம்பத்தில், தன் சுந்தர மேனியையும் சாமர்த்தியச் செயல்களையும் சர்வஜனங்களும் கொண்டாடுவதைக் கண்டு, அது தனக்கொரு பெரும்பூஷணமெனப் பெருமை பாராட்டினான். அந்நல்லபிப்பிராயத்தைக் கெடுத்துக் கொள்ளக்கூடாதென்ற எண்ணத்தினாலோ, அல்லது அவனுக்கே இயற்கையாயுள்ள நல்ல தன்மையினாலோ, மற்றும் எதனாலோ அறியேம், மாதவன் ஸாதாரண வாலிபர்கள் தம் பதினெட்டாம் பிராயமுதல் கிரமமாய்க் கல்யாணம் செய்துகொண்டு கிருகஸ்தராகும் வரையிலுமுள்ள மத்தியகாலத்தில் துரதிருஷ்ட வசத்தால் சித்த சாபல்யங்கொண்டு, சிற்சில சமயங்களில் செய்யும் துர்வியாபாரங்களிலும் சேஷ்டைகளிலும் சிறிதும் பிரவேசித்தவனல்லனென்று நிச்சயமாய்ச் சொல்வோம். ஆகையால் தான், இயற்கையாயுள்ள தேக காந்தியும், திடகாத்திரமும் தன்னிகரில்லா ஆண்மையும், மாதவனுக்குப் பூர்ண யௌவனம் பிராப்தமானபோது சிறிதும் குன்றாமல் விளங்கின.

மாதவனுக்கு இங்கிலீஷில் நல்ல பாண்டித்திய முண்டாயிருந்த தென்பது இதுவரையில் சொல்லி வந்தவற்றாலேயே இனிது விளங்கும். அதோடு, லான் டேந்நிஸ், க்ரிக்கேட் முதலியஇங்கிலிஷ்தேகப்பயிற்சி விநோதங்களிலும் மாதவன் மிக்க நிபுணனாயிருந்தான். வேட்டையாடுவதில் அவனுக்கு இளமைமுதற்கொண்டே பழக்கமுண்டு. ஒருவேளை இது அவன் பிதாவாகிய கோவிந்த பணிக்கரிடத்திலிருந்து பெற்ற ஒரு பழக்கமாயிருக்கலாம். கோவிந்த பணிக்கர் வேட்டையில் அதிகப்பித்துக்கொண்டவர். அதுபோலவே மாதவனும் அதிலேயே மோகங்கொண்டு மூழ்கியிருப்பவனென்று சொல்லலாம். அவன் வேட்டைக்காகப் புறப்படும்போது, இரண்டு மூன்று விதமான சிறந்த துப்பாக்கிகளும் இரண்டு மூன்று 'பிஸ்தோல்'களும் 'ரிவால்வர்'களும் கொண்டுபோவான். விநோத சுகங்களில் அவனுக்கிருந்த பற்றானது, அதற்கு முற்றும் வேறான ரீதியில் மாறாதிருந்த வரையிலும் அவன் வேட்டைக்குச் செல்வதிலேயே விசேஷமாய் விநோத சுகமனுபவிப்பவனா யிருந்தான்.

இனி நம் கதையின் தொடர்ச்சியைச் சொல்லத் தொடங்குவோம்: வேலைக்காரன் வந்து கூப்பிட்டவுடன், மாதவன் தன் அம்மான் எதிரில் போய் நின்றான். உடனே சங்கரமேனவன் அவனைப் பார்த்து, "மாதவா, இது என்ன கதை, என்காது வரையிலும் எட்டினது? வயோதிகரான காரணவரோடு நீசுத்த அதிகப்பிரசங்கித்தனமாய்ப் பேசினாயாமே? அவர் எவ்வளவோ பணம் செலவழித்து உன்னை இங்கிலீஷ் படிப்பித்ததன் பலனோ இது" என்று கேட்டார்.

மாதவன், "அம்மான்கூட இப்படிப் பேசத்தொடங்கினால், அது எங்கள் துர்ப்பாக்கியமே. இப்படிப் பட்ட வியவகாரங்கள் வரும்போது, என் மனதில் உள்ளதை உள்ளபடியே சொல்லித்தான் ஆகவேண்டும். பயப்பட்டுக்கொண்டு வாய்மூடியா யிருக்கமாட்டேன். பெரிய மாமா சரீரகஷ்டப்பட்டு சம்பாதித்த பணத்தில் ஒரு காசாகிலும் எனக்குக் கொடுக்கும்படி நான் ஒரு போதும் கேட்கவில்லை. நான் சொன்னதெல்லாம் கூடி, நம் பெரியோர்கள் நமது பிரயோஜனத்துக்கும் யோக க்ஷேமத்துக்குமென்று சம்பாதித்து வைத்ததும், இப்போது பெரிய மாமா வசத்திலிருப்பதுமான திரவியத்தை நமது நியாயமான அவசிய காரியங்களுக்காக செலவழிக்க வேண்டுமென்பதேயன்றி வேறில்லை. குஞ்ஞினி அம்மாவும் அவள்பிள்ளை குட்டிகளும் இங்கே வேலைக்காரர் ஒப்பந்தம் உழைக்கிறார்கள். அவர்களை, பேன் பெரிய மாமா இவ்வளவு நிர்த்தயையாய்த் தள்ளிக் கழிக்கவேணும்? அவளுடைய இரண்டு பிள்ளைகளுக்கும் இங்கிலீஷ்படிப்பு சொல்லிவைக்கவேயில்லை. கல்யாணிக் குட்டிக்கும் தக்கமாதிரியான படிப்பு ஒன்றுங் காணோம். இதெல்லாம் பெரிய மாமாவின் கொடுமைதானே? அவர் மனம் போனபடியே இப்படி எங்களை வருத்துவதைக் கேட்பார் யாருமில்லையோ? இன்னும் அந்தப்பையன் சின்னன் எருமைக்கிடாபோல்

வளரட்டுமென் றிருக்கிறீரேயொழிய அவனைப் படிப்பிக்க வேண்டுமென்கிற யோசனையே அவருக்கில்லை. இதற்கு நான் ஒருபோதும் சம்மதியேன். நானே அவனை அழைத்துக்கொண்டுபோய்ப் படிக்க வைக்கிறேன்.''

சங்கரமேனவன்:—''படிப்பா! படிப்பா! விசேஷந்தான்! நீ எதைக்கொண்டு அவனைப் படிக்கவைப்பாயப்பா? உனக்கு வருவது மாதம் ஒன்றுக்கு ஐம்பது ரூபாய்தானே? அதைக்கொண்டு அவனையெப்படி படிக்கவைப்பாய்? பெரிய மாமாவுக்குக் கோபம் வரும்படி பண்ணுதே. அதனால் பின்னுல்வரும் கஷ்டம் இவ்வளவென்று சொல்லிமுடியாது. உடனே அவர் காலில் போய் விழுந்து, மன்னிக்கும்படி கேட்டுக்கொள்.''

பெரிய மாமாவுக்குக் கோபம் வந்தால், பின்வரும் கஷ்டம் இவ்வளவென்று சொல்லிமுடியாதென்று சங்கரமேனவன் சொன்னதைக் கேட்டவுடன், மாதவனுக்கு இந்துலேகையின் ஞாபகம் உண்டாக, அந்த க்ஷணமே அவனுடைய முகத்தோற்றம் பிரத்யக்ஷமாய் மாறுபட்டது. ஆயினும் அவன் அதை நொடியில் அடக்கிக்கொண்டு, அந்த அறையில் அப்படியும் இப்படியும் நடந்து, சிறிது மந்தஹாஸத்துடன் மறுபடியும் மொழியலுற்றுன்.

மாதவன்:—'அவருக்கு நான் எப்படிக் கோபம் வரும்படி பண்ணக்கூடும்? நான் நியாயமாய்ப் பேசினல் அவருக்கேன் கோபம் வரவேண்டும்? காரணமில்லாமல் அவர் என்மேல் கோபித்துக்கொண்டால் அதற்கெல்லாம் நான் பயப்படமாட்டேன்.'

சங்கர:—'சீ, மரியாதைக் குறைவாய்ப் பேசாதே.'

மாதவன்:—'என்ன மரியாதைக் குறைவு? அந்த வார்த்தையின் அர்த்தங்கூட எனக்குத் தெரியாதே.'

சங்கர:—'அது தெரியாததென்பதுதானே அங்கிருக்கும் விஷமமெல்லாம். அப்பு! நீ ஏதோ கொஞ்சம் இங்கிலீஷ் படித்து சமர்த்தனாய் விட்டதினாலேயே, நமது குடும்ப சம்பிரதாயங்களையும் ஆசாரங்களையும் தலைகீழாய் மாற்றி விடலாமென்று நினைக்கிறையோ? நீ சாப்பிட்டாயிற்றா, குழந்தாய்?'

மாதவன்:—இன்னும் இல்லை, மாமா. என் மனது அதிகமாய்க் கலங்கியிருக்கிறது. அம்மா பால் கஞ்சி எடுத்துக்கொண்டு வருவதை வழியில் பார்த்தேன்;

[அப்பொழுது பார்வதி அம்மாள் பால் கஞ்சியை ஒரு வெள்ளிக்கிண்ணத்தில் எடுத்துக்கொண்டுவந்து சேர்ந்தாள்.]

சங்கர:—'பார்வதீ! பையன் சொன்னதையெல்லாம் கேட்டையோ இல்லையோ?'

பார்வதி:—'ஆஹா கேட்டேன். சுத்தமாய் நன்றாயில்லை.'

மாதவன்.—''பால் கஞ்சியை இப்படிக் கொடு'' என்று அதை வாங்கி நின்றவிடத்திலேயே நின்றுகொண்டு இரண்டுவாய் குடித்துவிட்டுப் புன்சிரிப்போடு தாயாரின் முகத்தைப் பார்த்து ''அம்மா, நீ கூடவா என்மேல் விரோதமாயிருக்கிறாய்?'' என்றான்.

பார்வதி:—பின் என்ன? அதில் என்ன சந்தேகம்? பெரியவருக்கும் மாமாவுக்கும் எது இஷ்டமில்லையோ, அது எனக்கும் இஷ்டமில்லை. அதிருக்கட்டும், இந்த கஞ்சியைக் குடி; அப்புறம் பேசலாம். இப்பொழுதே உச்சிக்காலமாய் விட்டது. இந்தக் குடுமி என் இவ்வளவு அலங்கோலமாய் அலைகிறது? இப்படி வா நான் கட்டிமுடிக்கிறேன். குடுமியெல்லாம் அவிழ்ந்து தொங்குகிறதே.

மாதவன்:—அம்மா, சின்னனுக்கு இங்கிலீஷ் சொல்லிவைக்க வேண்டியது அவசியமோ இல்லையோ சொல்லு.

பார்வதி:—பையா, அது உன் பெரிய மாமன் தீர்மானிக்கவேண்டிய சங்கதி. அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. உனக்குப் படிப்புசொல்லி வைத்தவர் பெரிய மாமா தானே. அவனுக்கும் அவர் சொல்லித்தான் வைப்பர் ''

மாதவன்:—பெரிய மாமா சொல்லிவைக்காமல் போனாலோ?

பார்வதி:—அவன் படிக்க வேண்டாம்.

மாதவன்:—அதற்கு நான் ஒத்துக்கொள்ள மாட்டேன்.

அதைக்கேட்ட பார்வதியம்மாள், ''கிண்ணத்தை இப்படி கொடு, நான் போகவேணும். சாப்பிடுவதற்கு சீக்கிரம் வா'' என்று சொல்லி வேறொன்றும் பேசாமல் போய்விட்டாள்.

(இன்னும் வரும்)

# நீலி வசீகரம்

AN ADAPTATION OF SHAKESPEARE'S "TAMING OF THE SHREW"

(ஆங்கிலேய கவி "ஷேக்ஸ்பியர்" இயற்றிய நாடகத்தின் தமிழ் அமைப்பு.)

### நாடக பாத்திரங்கள்

ஒரு ஜமீந்தார்.

ஜம்புகராமன், ஒரு தகரக்கடைக்காரன், வேட்டைக்காரர், வேலையாட்கள், நாடகக்காரர், சத்திரக்காரி, கையாள். — பிரஸ்தாவனையில் வருபவர்கள்

ரகுநாததேவர்:—மதுரையில் ஒரு பெரிய தனிகர்.

நல்லநாயக உடையார்:—தஞ்சைப் பிரபு.

விஜயராகவ உடையார்:—நல்லநாயக உடையாரின் மகன். வனிதேசுவரியின்மேல் காதலானவர்.

நாராயணத்தேவர்:—உறையூர்ப் பிரபு. கௌதமியின் புருஷர்.

பொன்னம்பலத் தேவர், பிரதாபருத்திரத்தேவர் — வனிதேசுவரியை மணக்க வந்தவர்.

சுப்பராயன், கேசவன் — விஜயராகவ உடையாரின் வேலைக்காரர்.

பொன்னன், பழனியாண்டி — நாராயண தேவரின் வேலையாட்கள்.

ஒரு தீர்த்த யாத்திரி.

கௌதமி தேவி:—நீலி, வனிதேசுவரி — ரகுநாத தேவரின் குமாரத்திகள்.

சுசீலை:—பிரதாபருத்திரரின் மனைவி.

தையற்காரன், ஜவுளிக்கடைக்காரன், ரகுநாத தேவரின் வேலையாட்கள், நாராயண தேவரின் வேலையாட்கள்.

நாடக நிகழ்விடம்:—மதுரையிலும், உறையூர்ப் பக்கத்திலும்.

---

## நீலி வசீகரம்

### பிரஸ்தாவனை.

### அங்கம் 1. களம் 1.

இடம்:—ஓர் சத்திரத்துக்கு முன்பாக

பாத்திரங்கள்:—சத்திரக்காரியும்ஜம்புகராமனும்

ஜம்புகராமன்:—வாயை மூடு; இல்லாவிட்டால் கொன்றுபோடுவேன்.

சத்திரக்காரி:—நாசமாய்ப் போகிறவனே! என்ன, குடிமயக்கத்தில் ஒன்றும் தெரியவில்லைபோலவிருக்கிறது. அயோக்கியத் தனத்தைக் காட்ட வாரம்பித்துவிட்டாயா? ஜாக்கிரதையாகப் பேசு.

ஜம்புக:—கழுதைமுண்டை! யாரைப்பார்த்து அயோக்கியன் என்று பேசுகிறாய்? என்னுடைய குலம் கோத்திரங்களைக் கேட்டறிந்ததில்லையோ நீ? விசுவகர்மா குலத்தில் உதித்த நானா அயோக்கியன்! நீ தான் அயோக்கிய முண்டை.

சத்திர:—நீ உடைத்துவிட்ட பானையின் கிரயத்தைக் கொடுத்துவிடமாட்டாயா?

ஜம்புக:—ஒரு நாகூர்ச் சல்லிகூடக் கொடுக்கமாட்டேன். அடுப்பங்கரைக்குப் போய் மூக்காடு போட்டுக்கொண்டு குந்தியழு.

சத்திர:—வாங்குகிறவழி எனக்குத் தெரியாமல் போகவில்லை. போய், கொத்தவாலை அழைத்துக் கொண்டு வரவேண்டியதுதான். (போதல்.)

ஜம்புக.—கொத்தவாலைத்தான் அழைத்துவா; தச்சவாலைத்தான் அழைத்துவா; இந்த அதட்டலுக்கெல்லாம் நான் பயந்தவனா? அவன் மகாராஜனாக வரட்டும். (கீழே படுத்துத் தூங்கிப்போய் விடுகிறான்.)

(கொம்பினோசை, ஒரு ஜமீந்தார் வேட்டையினின்றும் திரும்பி, வேலையாட்களுடனும், வேட்டைக்காரருடனும் வருதல்)

ஜமீந்தார்:—நாய்களை எல்லாம் நன்றாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள். எல்லாவற்றிற்கும், இன்றைக்குப் பலமான காயம், நாளைக்கும் வேட்டைக்குப் போக வேண்டும், ஆதலால் அவைகளுக்கு நல்ல இரை வையுங்கள்.

முதல் வேட்டைக்காரன்:—அப்படியே செய்கிறேன், துரையே.

ஜமீந்:—இதென்ன! யாரோ மனிதன் கிடக்கிறனே! செத்துக் கிடக்கிறனு அல்லது குடித்து மயங்கிக் கிடக்கிறனு? உயிர் இருக்கிறதா வென்று சோதியுங்கள்.

இரண். வேட்டை:—உயிர்இருக்கிறது துரையே. குடிமயக்க மில்லாமற் போனல், இவ்வளவு ஈரத்தில் விழுந்து கிடக்கமாட்டான்.

ஜமீந்:—அடா, அசங்கியப் பன்றிக்குட்டி! என்ன கேவலமாய்க் கிடக்கிறன், பாருங்கள்!—இந்தக் குடிகாரனிடம் ஒரு வேடிக்கை செய்யலா மென்று நினைக்கிறேன். வெள்ளை வேஷ்டியுடுத்தி, வெண் சாந்து பூசி, விரல்களில் மோதிரங்களைப் போட்டு பஞ்சணையில் படுக்க விட்டிருந்து, விழித்துக் கொள்ளுகையில் வேலையாட்கள் பலர் பணி கேட்கச் சித்தமாய் நின்றல், இந்தப் பையன் தன்னை மறந்துவிட மாட்டானு?

முதல் வேட்டை:—துரையே! அவனுக்கு ஞாபகமிராது. ஏதோ கனவென்றே நினைப்பான்.

இரண். வேட்டை:—விழித்துக் கொண்டால் ஒருவேளை தெய்வலோகத்தி லிருப்பதாக நினைப்பான்.

ஜமீந்:—ஒருவேளை கனவென்று நினைத்தாலும் நினைப்பான். அவனைத் தூக்கிக்கொண்டு போய் எனது சயன மண்டபத்தில் ஒரு புதுப்படுக்கையின் மீது கிடத்துங்கள்; அவ்வறை முழுவதும் நல்ல வாசனைப் பொருள்களை நிரைத்து, அழகிய படங்களைத் தொங்கவிடுங்கள்; அவன் எழுந்திருக்கும்போது தேவகானம் காதுகளில் வீழ்வதுபோல, வாத்தியங்கள் கோஷிக்கப்படட்டும்; பேசவாரம்பித்தானுனல், வெகு பணிவாய்க் கை கட்டி வாய் புதைத்து நின்று கேளுங்கள்; ஒருவன் வெள்ளித் தட்டில் பக்ஷண பலகாரங்களை வைத்துக்கொண்டு நிற்கட்டும்; மற்றொருவன் ஸுகந்தமான பன்னீரை யேந்திக் கொண்டு நிற்கட்டும். வேறொருவன் விலையுயர்ந்த ஆடையாபரணங்களை வைத்துக்கொண்டு நிற்கட்டும்; இன்னொருவன் அவனது அழகைப் புகழ்ந்து கொண்டாடி இதுவரையில் சித்த சுவாதீனமில்லாதிருந்ததைச் சொல்லட்டும்; பின்னுமொருவன், அவனது நாயகி வருந்துகிறளென்று சொல்லட்டும்; அவனது உண்மை ஸ்திதியைக் கூறுவானுனல், அவன் கனவு காண்கிறதாகச் சொல்லுங்கள்; அவன் பெரிய ஜமீந்தாரனே யென்று வற்புறுத்துங்கள். இவைகளை யெல்லாம் ஸர்வ ஜாக்கிரதையாகச் செய்யுங்கள்; இன்றையப் பொழுது இப்படி விநோதமாகக் கழியட்டும்.

முதல் வேட்:—துரையே!நாங்கள் வெகுஜாக்கிரதையாக நடத்துகிறேம்; விழித்துக்கொண்டால், அவன் பெரிய பிரபுவென்று தன்னை நினைத்துக் கொள்ளுவானென்பதில் சந்தேகமில்லை.

ஜமீந்:—சரி; அவனை மெதுவாகத் தூக்கிக்கொண்டு போங்கள்; விழித்துக் கொண்டதும், ஒவ்வொருவனும் தன் தன் வேலையைச் சரியாய்ச் செய்ய வேண்டும். (ஜம்புக ராமன் தூக்கிக்கொண்டு போகப்படுகிறன். வெளியில் முரசறைதல்.) அடே! என்ன சப்தமென்று பார்த்துவா (ஒரு சேவகன் போதல்). யாரேனும் ஒரு பிரபு இன்றைக்கு இவ்விடத்தில் தங்கிப்போகலாமென்று வருவார்போலும். (சேவகன் திரும்பி வருதல்) என்? என்ன விசேஷம்? யார் வருகிறர்?

சேவகன்:—நாடகக்காரர் ஆட வருகின்றனர்.

ஜமீந்:—நல்லது; அவர்களை உடனே வரச்சொல்லு. (நாடகக்காரர் வருதல்.)

நாடகர் தலைவன்:—பிரபுவே! நமஸ்காரம் செய்கிறேம்; சந்நிதானத்தைக் கண்டு வெகு நாளாகிவிட்டது.

ஜமீந்:—ஆமாம்; முன்பு நாலு வருஷத்துக்கு முன் "அம்புஜவல்லி" நாடகத்தை யாடிக் காட்டவில்லையா?

நாடக தலை:—ஆமாம்; பிரபோ! அப்போது சந்நிதானம்செய்து போட்ட "தோடா" கூட இதோ இருக்கிறது.

ஜமீந்:—நல்லது; இன்றைய இரவு இங்கே இருக்கலாமா?

நாட. தலை:—சந்நிதானம் உத்திரவு செய்கிறபடியே நடக்கக் காத்திருக்கிறேம்.

ஜமீந்:—நீங்கள் இப்போது நல்ல சமயத்தில் வந்தீர்கள். நான் இன்றைய பொழுதை விநோதமாகக் கழிக்க வெண்ணினேன்; அதற்கு உங்கள் உதவியும் இருந்தால் நன்றய்ச் சோபிக்கும். இன்றைய இரவு ஒரு பிரபு உங்கள் ஆட்டத்தைக் காண வருவார்; அவர் இதற்கு முன்பு, ஆட்டம் என்பதைக் கேட்டது கூட இல்லை; ஆதலால் சற்று அதிசயப்பட்டவர் போல விருப்பார்; அதைக் கண்டு நீங்கள் ஆச்சரியப்பட்டு அவரை ஏறெடுத்

துப்பார்க்கக்கூடாது. வெகு மரியாதையாக விருக்க வேண்டும். கேலி பண்ணினல் அவருக்குக் கோபம் வந்து விடும்.

நாட. தலை:—துரையே! இதைப்பற்றிய கவலை யொன்றும் அவ்விடத்துக்கு வேண்டாம்; அந்தப் பிரபு கேவலம் கர்னுடக ஆஸாமியாக இருந்தாலும், நாங்கள் கேலி பண்ணமாட்டோம். வெகு ஜாக்கிரதையாக விருப்போம்.

ஜமீன்:—யாரடா, அங்கே? இவர்களை அழைத்துக் கொண்டுபோய், சாப்பாடு செய்துவை. (ஒரு சேவகனும். நாடகக்காரர்களும் போதல்) அடே! (இன்னொரு சேவகனை நோக்கி) நீ போய், எனது கையாள் கிருஷ்ணனுக்கு ஸ்திரீ வேஷம் போட்டு, அக்குடிகாரன் இருக்கும் அறைக்கு அழைத்துக்கொண்டு போ; உயர் குல ஸ்திரீகள் நடந்து கொள்வது போல நடக்க வேண்டு மென்று நான் சொன்னதாக அவனிடம் சொல்லு; அவன் அந்தக் குடிகாரனுடைய மனைவியைப் போல நடிக்கவேண்டும்; கட்டித்தழுவி, முத்தமிட்டுக்கொண்டு இதுகாறும் ஏழுவருஷமாக, நாயகனுகிய அவருக்குச் சித்தஸ்வாதீனமில்லாதிருந்ததினுல், தான் தெய்வங்களை வணங்கி வழிபட்டதின் பயனுக, அவருக்கு நற்போதம் வந்ததற்கு அத்தியந்த சந்தோஷப்படுவதாகச் சொல்லட்டும்; ஆநந்த பாஷ்பம் சொரிய வேண்டும்; வினைத்தவுடன் கண்களினின்றும் தாரை தாரையாய் நீரைப் பெருக்கவிடக்கூடிய ஸ்திரீகளின் சாமர்த்தியம் அவனுக்கு இல்லாத போனல், ஒரு கைக்குட்டையில் ஒரு வெங்காயத்தை மறைத்து, கண்ணருகில் கொண்டு போனல், கண்ணீர் ஏராளமாய் வரும். இந்த மாதிரி யெல்லாம் ஞாபகமாய்ச் சொல்லு; போ (சேவகன் போதல்). ஐந்தச்சும் ஸ்திரீயைப் போலவே அவனிருப்பான். குரல், நடை, அபிநயம் முதலியவற்றில் அவனுக்கும் உத்தம ஸ்திரீயொருத்திக்கும் அதிக வித்தியாசமிராது. குடிகாரனை, இவன் 'நாயகா' வென்று கூப்பிடுகையில், கூடவிருப்பவர்கள் பார்த்து நகைப்பார்கள். நான் கூட இருந்தால் அவர்கள் அடங்கியிருப்பார்கள். ஆதலால் நானும் போவேன்.

(போதல்.)

(இன்னும் வரும்.)

# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

ஈசுவர ஆராதனையின் பயன்:—ஓர் ஆஸ்திகனும் நாஸ்திகனும் ஒரேவழியாய்ப் போய்கொண்டிருக்க, அங்கு ஒரு பாழடைந்த கோயிலைக் கண்டார்கள். ஆஸ்திகன் அந்தக் கோயிலை மஹா பக்தியோடு வலம் வருகையில், நாஸ்திகன் அவன் மூடத்தனத்தைப் பார்த்து நகைத்துக்கொண்டு பாதையில் நின்றான். ஆஸ்திகன் வலம்வருகையில்,காலில் ஒரு முள் தைக்க, வலி பொறுக்கமுடியாமல் நொண்டிக்கொண்டு நாஸ்திகன் நிற்குமிடம் வந்துசேர்ந்தான். இவன் வருவதற்குள் நாஸ்திகனுக்கு அவன் நிற்குமிடத்திலேயே இரண்டணு காசு அகப்பட்டது. ஆஸ்திகனைக் கண்டவுடனே நாஸ்திகன், அப்பா! உன் பக்தியின் பலனையும், என் நாஸ்திகத்தின் பலனையும் பார்த்தாயா, இதனாலேயே கடவுள் இல்லை என்று தெரியவில்லையா' என்று பரிஹாஸம் செய்தான். இந்த நாவினல் சுட்டவடு ஆஸ்திகன் மனதில் நன்ருய்ப் பதிய 'இதென்ன விபரீதம், கடவுள் நியாய அரசாட்சியுள்ளும் இம்மாதிரியாயும் நடக்கின்றதே. இப்படியானல் கடவுளில்லை போலத் தோற்றுகிறதே என்று எண்ண, அவன் மனம் கலங்கியது. இவ்வாறு ஒருவன் சிரித்துக் கொண்டும் மற்றவன் அழுது கொண்டும் இருப்பதைப் பார்த்துக் கொண்டே ஒரு மஹான் அவ்விடம் வந்து, இவர்கள் இவ்வாறிருப்பதன் காரணத்தைத் தெரிந்துகொண்டார். உடனே நாஸ்திகனை நோக்கி 'அப்பா உன் கர்மானுஸாரம் உனக்கு இப்பொழுது ஒரு பெரிய புதயல் கிடைத்திருக்க வேண்டும், உன் நாஸ்திக புத்தியால் அது இரண்டு அணுவாகக் குறுகிப்போய் விட்டது' என்று சொல்லி, ஆஸ்திகனை நோக்கி, 'இந்தக் கெட்ட வேளையில் நீ ஒரு ஸர்ப்பந்தீண்டி இறந்திருக்க வேண்டும், உனது பக்தி உன்னை இவ்வளவு லகுவாய் விட்டது' என்று சொல்லி திடீரென மறைந்தார். இந்த ஸமாதானம் இருவருக்கும் நியாயமாய்த் தோன்ற,ஆஸ்திகனுக்கு பக்தி அதிகரித்தது: நாஸ்திகன் தான் இதுவரையில் செய்துவந்த காரியங்களை எண்ணித் துக்கித்து, கடைசியில் ஆஸ்திகனுக மாறினன் இதனல், உலகத்தில் நல்ல ஒழுக்கத்தால் ஒருவனுக்கு துக்கம் வருவது தோற்ற மாத்திரமே ஒழிய, உண்மையில் அவ்வாறல்ல என்பது நன்ருய்த் தெரியவரும்.

சுட்டபழம் வேண்டுமா சுடாதபழம் வேண்டுமா?

முன்பு ஔவை யென்று ஒருவள் இருந்தாள். அவள் ஒரு பண்டிதை. ஒரு சோலையில் அவள் நாவல் பழத்திற்குச் சென்று கொண்டிருந்தாள். பயல்கள் மரத்தின்மேல் பழமெடுப்பதைப் பார்த்து "அப்பா எனக்கும் இரண்டு பழம் தா" என்றாள். பையன் 'சுட்ட பழமா சுடாத பழமா' என்றான். இவளுக் கொன்றும் தெரியவில்லை. கடைசியாக சுட்டபழமென்றாள். என்றதும், அவன் ஓர்கிளையை விசையாக அசைத்தான். தபகுபலாகப் பழம் கீழ் விழுந்தன. கீழ் வீழ்ந்ததினால் மண்ணும் கல்லுமாய் இருந்தது. அதை எடுத்தவுடன் பயல்கள், கை சுடப்போகிறது ஊது ஊது என்று கூவிச் சிரித்தார்கள்.

***

யுந்தியேசக்தி:—ஒரு ஒட்டன், ஓர் குடியானவன் தோட்டத்தில் மிகக் குறைந்த தொகைக்கு ஒரு கிணறு வெட்டுவதாக ஒப்புக்கொண்டு, நான்கு நாள் கஷ்டப்பட்டு பத்தடி ஆழம் தோண்டினான். மறுநாட் காலையில், அவன் வழக்கப்படி வேலைக்கு வந்தபொழுது, அந்தக் கிணற்றின் பக்கம் இடிந்து விழுந்து, மேற் புரத்திலிருந்து இரண்டு அடி ஆழம் வரையில் மண் மூடியிருப்பதைக்கண்டு, தன் கஷ்டம் வீணாயிற்றென்று விசாரப்பட்டுக்கொண்டு, கொஞ்சம் ஆலோசித்து தன் மேல்வேஷ்டியை கிணற்றங்கரையில் வைத்துவிட்டு, எவரும் காணாதபடி தான் வீட்டுக்குப்போய் படுத்துக்கொண்டான். ஒருமணி நேரத்திற்குப் பிறகு, வீட்டார் கிணறு இடிந்து விழுந்திருப்பதையும், ஆளில்லாமல் மேல் வேஷ்டிமட்டும் கிணற்றங்கரையி-லிருப்பதையும் பார்த்து, ஒட்டன் இறந்தானென்று நினைத்து, அந்தச் சங்கதியை எல்லாருக்கும் தெரிவித்தார்கள். அயலார் பதின்மர்வந்து கிணற்றிலிறங்கி அதிவிரைவில் அந்த மணலை வாரி எடுத்துவிட்டார்கள். ஆனால் அதிக ஆழந் தோண்டியும், ஒட்டன் காணப்படாமையால், எல்லோரும் ஆச்சரியப்படத் தொடங்கினார்கள். அதற்குள் ஒட்டன், கையில் கடப்பாரையுடன் வந்து "அப்பன்மாரே என்பொருட்டு நீங்கள் மிகவும் கஷ்டப்பட்டீர்கள். உங்களுக்கு எப்படி நன்றியறிதலைக் காட்டுவேன். நான் விடிய ஒருமணி நேரத்துக்குமுன் இவ்விடம் வந்தேன். எனக்குத் தலைநோய் கண்டதினால், நிற்கமாட்டாமல் சற்றுக்கழித்து வரலாமென்று வீட்டுக்குப் போய்விட்டேன். அதற்குள் நீங்கள் எல்லோரும் எனக்கு இந்த உபகாரத்தைச் செய்தீர்கள், என் அதிர்ஷ்டத்தை என்னென்று சொல்வேன். உங்களுக்கு என்றும் நான் நன்றியறிதலுள்ளவனாயிருப்பேன். நான் ஏழையல்லவா" என்று சொல்லிக்கொண்டு கிணற்றிலிறங்கித் தோண்ட ஆரம்பித்தான். அப்பொழுது இருந்தவர்களில் சிலருக்கு அவன் வார்த்தை ருசிக்காமல் அவன் மேல் கோபங்கொண்ட போதிலும், மற்றவர்கள் களிப்புடன் சிரித்தார்கள்:—அறிவுடைமையால் எவ்வகையான ஆபத்தையும் விலக்கிக்கொள்ளலாமென்று இதனால் விளங்கும்.

***

கர்வம் கேடு விளைவிக்கும். சந்திரவம்சத்தில் யயாதி என்றொரு அரசன் இருந்தான். அவன் தனது பிள்ளையினிடம் ராஜ்யத்தை ஒப்புவித்து விட்டு வனம் சென்று தவம்செய்து ஸ்வர்க்கமடைந்தான். அங்கு கொஞ்ச காலம் வாஸம் செய்த பிறகு, இந்திரன் யயாதியைப் பார்த்து நீ யாரைப் போலத் தபோபலமுடையவர் என்று கேட்க, அதற்கு யயாதி 'ஒரு ரிஷியும் எனக்கு நிகரல்ல, என்று பெருமை பாராட்டினான். உடனே இந்திரன் 'நீ செய்த ஸத்காரியங்களெல்லாம், இந்த மறுமொழியோடு க்ஷீணித்து விட்டன. ஆகையால் உன்னை எனது ஸேவகர்கள் பூலோகத்திற்குத் தள்ளிவிடுவார்கள், போகலாம்' என்று யயாதியை ஸ்வர்க்கத்திலிருந்து தள்ளிவிட்டான். இதனால் 'துள்ளின மாடு பொதி சுமந்தும்' என்பது எளிதில் விளங்கும்.

***

ஸித்திகள்.—ஹடயோகி ஒருவன் ஓர் மஹானிடம் சென்று தனக்கு ஆகாயத்தில் பறக்கசக்தி இருக்கின்றதென்றும், பூமியின் கீழ் அனேக காலம் கிடக்குந் திறனுண்டென்றும், ஜலஸ்தம்பம் தெரியுமென்றும், இது போன்ற மற்றைய சித்து வித்தைகள் தெரியுமென்றும் பெருமை பாராட்டினான். அப்பொழுது மஹான் அப்பா பக்ஷிகள் ஆகாயத்தில் பறக்கின்றன, புழுக்கள் பூமியின் கீழ் அதிக காலம் மறைந்து கிடக்கின்றன, மீன்கள் ஜலத்தில் வஸிக்கின்றன, இம்மாதிரித் தாழ்ந்த ஜந்துக்களைப் போல் நடப்பதினால் என்ன பயன். கடவுளைப் போல நடக்க, கருணை முதலிய நற்குணங்களை விருத்தி செய், கர்வத்தையும் கோபத்தையும் அடக்கி விடு என்று மறுமொழி கூறினார். தாயுமானவரும் 'சினமிறக்கக் கற்றாலும் ஸித்தி எல்லாம் பெற்றாலும் மனமிறக்க கல்லார்க்கு வாயேன் பராபரமே' என்றசொல்லி இருக்கிறார். ஆகையால் மனது தனது வாஸனைகள்யாவையும் இழந்து, அதன் உண்மை நபத்தை அடைதலே ஸகல ஸித்திகளையும்விட மேலானது என்பது இக்கதையால் எளிதில் விளங்கும்.

கடன் படுவதினுல் வரும் கெடுதி:—

"கடமுண்டு வாழாமை காண்டலினிதே" என்றபடி எப்படிப்பட்டவராயினும், எக்காலத்திலும் கடன்வாங்காமல் உள்ள மட்டும் தமது கைப்பொருளைக் கொண்டு வாழ்வதே மிகவும் உத்தமமாம். "குறைக்குடம் கூத்தாடும்" என்பதுபோல் கைப்பொருளின்றிக் கடன்பட்டு வாழ்பவனும் யோக்கியனுகமாட்டான். கடன்பட்டவன் யதார்த்தவாதியாயிருப்பதும் கஷ்டமே. ஆனது பற்றியே கடனானது பொய்யைத்தன் முதுகில் தூக்கிக்கொண்டு வருகின்றதென்கிறார்கள். கடன்காரன் தான் வாங்கின கடனைக் கடன்கொடுத்தவனுக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டியதற்குக் காலதாமதம் செய்வதைப்பற்றிப் பலசாக்குப் போக்குகள் சிருஷ்டிக்க ஆரம்பிப்பான். ஒரு போதும் எங்கும் கடனே வாங்கக்கூடாதென்று ஒரே உறுதிப்பாடாயிருப்பவர்களுக்குக் கடன் வாங்காமலே வாழ்வது சுலபமான காரியந்தான். ஆயினும், முதலில் ஒருமுறை கேட்கும்போதே கடன்கிடைக்குமாயின், அவ்வண்ணமே அடுத்தடுத்துப் பல முறை கடன் வாங்கவேண்டு மென்று ஆசை பிறக்கின்றது. பின்பு அவன் சீக்கிரமே கடன் வலைக்குள் சிக்கிக்கொண்டு மறுபடி அதை விட்டு மீள வழி தெரியாமல் அல்லாடும்படி யாகின்றது. கடன் வாங்க முயல்வது பொய்சொல்ல முயல்வது போலவேயன்றி வேறல்ல. முதலில் ஒருபொய் பேசினுல் அதை மெய்ப்பிக்கப் பிறகு பலபொய் பேச வேண்டிவருவதுபோல, முதலில் ஒருதரம் கடன் வாங்கினுல் அதைத் தொடர்ந்து பிறகு பலதரம் மேன்மேலும் கடன் வாங்கும்படி நேரிட்டுக்கொண்டே வரும். அதை விட்டு விலக ஒரு போதும் வழி அகப்படாது. தான் கடன் வாங்கத் துவக்கின நாள் தொடங்கித் தனக்குச் சிறுமையே யொழியப் பெருமை ஒரு போதும் உண்டானதில்லை எனப்பெரியோர் ஒருவர் சொல்லி யிருக்கிறார். "கடன் வாங்கினவன் மடியில் கல நெருப்பு" கடன் வாங்கித்திரிவோன் மனங்கலங்கித் திரிவான்" என்றும் பழமொகள் வாஸ்தவ மென்று அனுபவசித்தமாய் அநேகர் அறிந்திருக்கிறார்கள். கடன்படாமல் உனக்கு, அமையாதாகில் நீ எவ்வகை இன்பத்தையும் விலைகொடுத்து வாங்காதே, ஒரு பொழுதும் கடன்படாதே, அதைவிட இழிவு வேறில்லை. ஆயினும் பிறர்க்குக் கடன் கொடுத்து உதவ வேண்டா மென்று நான் ஒருபோதும் சொல்லத் துணியேன். அப்படிக் கடன் கொடுப்பதனுல் நீ வாங்கின கடனை இறுக்கத்தடை யுண்டாகுமாயின், அப்படிப்பட்ட காரியத்தில ஒருபோதும் தலையிடாதே, எப்படிப்பட்டகாலத்திலும் ஒருபோதும் கடன் வாங்காதே என்று ஒருவர் தன் சிஷனுக்குப் புத்தி புகட்டி யிருக்கிறார்.

ஒருவன் உலகத்தில் தலையெடுக்கத் துவக்கும் போதே கடன் வாங்க ஆரம்பிப்பானுயின், அவன் அவ்வளவோடு அழிந்து போனவனே. கடன்வாங்குவது தகாத காரியமென்று மாத்திரம் எண்ணுதேயுங்கள். அதுவே பெருந்துக்கமென்று அனுபவத்தில் காண்பீர்கள். கடன் வாங்குபவன் உடனே தரித்திரத்துக்கு உள்ளாவான். தரித்திரமானது நன்மைசெய்யும் வழிகளை அநேகமாய் ஒழித்து, தீமைக்கு இடங்கொடாது நிற்கும் தேகபலத்தையும் மனேபலத்தையும் மிகவும் ஒடுக்கும்; ஆதலால் நல்வழியிலேயே ஏற்ற உபாயங்களைக் கொண்டு அதை விலக்குவது நமது கடன். ஆகவே எவனிடத்திலும் கடன் படாதிருப்பதே நமது முக்கியமான நோக்கமாயிருக்கவேண்டும்; நம்மிடத்திலுள்ளது எவ்வளவு சொற்பமான பொருளாயினும், சிறுகச்செலவு செய்து சுகமாயிருக்க வழிதேடவேண்டும். தரித்திரமானது நமது சவுக்கியத்துக்குக் கொடிய சத்துருவாம். அது நமது சுவாதீனத்தைப் போக்கடித்து சில நற்கருமங்களை நமக்குச் செய்ய அசாத்தியமாகவும் மற்றவைகளை மிகக் கடினமானவைகளாகவும் செய்துவிடும். மிதச்செலவு செய்வது மனவமைதிக்கு மாத்திரமே மூலகாரணமன்று; பரோபகாரம் செய்வதற்கும் மூலமாயிருக்கின்றது. பிறர் கையைப் பார்த்துக்கொண்டிருப்பவன் எவனும் தான் பிறர்க்கு உதவி செய்ய ஒருபோதும் வல்லவனுகமாட்டான். ஆதலின் "தன்னை மிஞ்சித் தருமம்" என்றபடி முதலில் தனக்கு வேண்டியதைத் தேடிவைத்துக்கொண்டு பிறகு இயன்றவளவு பிறர்க்கும் உதவிசெய்து வரவேண்டும்.

***

கைம்மாறு கருதும் பக்தியைப் பழித்தல்:—ஒரு அரசன் வேட்டையாடிக்கொண்டு வரும்பொழுது காட்டில் ஒரு ரிஷியைக் கண்டான். அவரோடு கொஞ்சநாழிகை வார்த்தையாடி வருகையில் அரசன் அவரது சிறப்பைக்கண்டு வியந்து, அடிபணிந்து தான் கொடுக்க எண்ணும் வெகுமதியை அங்கீகரித்துத் தன்னை அனுக்கிரஹிக்கும்படி மஹா விநயத்துடன் கேட்டுக்கொண்டான். அதற்கு அவர் 'அப்பா, எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை. எனக்கு

எவ்விஷயத்திலும், குறைவென்பதே கிடையாது. இம்மரங்கள் என் ஆகாரத்திற்கு வேண்டிய பழங்களைக் கொடுக்கின்றன. எனக்கு வேண்டிய தீர்த்தத்தை இந்த அழகிய ஆறு அளிக்கின்றது. நான் இக்குகைகளில் வஸிக்கின்றேன். நீ எவ்வளவு சிறந்த சக்கிரவர்த்தியாய் இருப்பினும் உன் வெகுமதிகளால் எனக்கு என்ன பிரயோஜனம்? என்று மறுமொழி சொல்ல, அரசன் "உமக்கு நான் கொடுக்கும் வெகுமதிகள் பயனற்றவையாய் இருப்பினும், நான் பரிசுத்தமாகி மேன்மை அடைவதற்காகவாவது, கிருபைகூர்ந்து என் வெகுமதிகளை அங்கீகரிக்க என்னுடன் என் பட்டணம் வரவேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். இவ்வளவு அரசன் சொன்னபின்பு, ரிஷி இதற்கு இசைந்து அரசன் அரண்மனை வந்து சேர்ந்தார். அங்கு எங்கு பார்த்தாலும், நகைகளும், ரத்னங்களும், சிறந்த வஸ்துக்களும், தனங்களும், அதிகார தோரணைகளும் காணப்பட்டன. அரண்மனை வந்ததும் அரசன் ரிஷியை ஓரிடத்தில் இருக்கச் சொல்லிவிட்டு அருகாமையில் ஓரிடத்தில் சென்று கடவுளை நோக்கி 'ஓ! பரம்பொருளே! எனக்கு தனம், குழந்தைகள் ராஜ்யங்கள் முதலியன வர வர விருத்தியாகிக்கொண்டே வர வேண்டும்' என்று கேட்டுக்கொண்டான். இதைக்கேட்டுக் கொண்டிருந்த ரிஷி உடனே எழுந்து வெளியே புறப்பட்டார். இப்படி எழுந்து போய்க் கொண்டிருந்த ரிஷியை அரசன் நோக்கி 'ஸ்வாமீ! ஏன் என் வெகுமதியைப் பெற்றுக்கொள்ளாது போகிறீர்கள்? தயவுசெய்து நில்லுங்கள்' என்று சொல்ல, அதற்கு அந்த ரிஷி 'பிச்சைக்காரப்பயலே! நான் பிச்சைக்காரரிடம் பிச்சை வாங்குவதில்லை. நீயே பிச்சை எடுப்பவனாக இருக்கையில் எனக்கு உன்னால் என்ன கொடுக்க முடியும்' என்று சொல்லிக் கொண்டே போய் விட்டார். ஆகையால் கடவுளை ஆராதிக்குங்கால் எனக்கு இவ்விவ் விஷயங்கள் வேண்டும் என்று கேட்பது கேவலம் வியாபாரமாகுமே ஒழிய பக்தியாக மாட்டாது. இவ்வித ஆராதனையால் சிறந்த பலன் ஒன்றும் உண்டாகாது.

* *

பரோபகாரத்தின் ஸ்வரூபம்:—பாண்டவர்களில் ஜேஷ்டரான தருமபுத்திரர் அசுவமேதயாகம் செய்து அதில் ஏழைகளுக்கு அளவிறந்த பொருள்களை தானம் செய்தனர். எல்லோரும் இந்த மாதிரியான பரோபகாரம் எங்கும் கண்டதில்லை என தருமபுத்திரரைப் புகழ்ந்து பேசினர். இப்படி இருக்கையில், அங்கு பாதி தேகத்தில் பொன்னிறம் பாய்ந்த ஒரு கீரிப்பிள்ளை வந்து யாகசாலை முழுவதும் புரண்டு எழுந்து 'இது என்ன யாகம், இதைச் சிறந்ததென நீங்கள் ஏன் வீணாகக் கொண்டாடுகிறீர்கள்' என்று அங்குள்ளவரை நோக்கிச் சொல்லியது. 'ஏன் நீ இவ்வாறு சொல்லுகிறாய்' என்று அங்குள்ளவர் கேட்டதற்கு கீரிப்பிள்ளை சொல்லத்தொடங்கியது. 'ஒரு சிறு கிராமத்தில் ஒரு பிராமணன், அவன் பெண்சாதி, அவன் பிள்ளை அவன் நாட்டுப்பெண், ஆகிய நால்வரும் உஞ்சவிருத்தியில் பிழைத்து வந்தார்கள். அந்த ஒரு காலத்தில் கொடிய பஞ்சம் வர, அப்பிராம்மணருக்கு ஐந்துநாள் வரையில் ஒன்றும் அகப்படவில்லை. ஆறும் நாள் அவர் வீட்டிற்கு கொஞ்சம் கோதுமை மாவைக்கொண்டு வந்து, அதை நான்கு ஸரிபாகமாகப் பிரித்து ஒவ்வொருவருக்கு ஒரு பாகத்தைக் கொடுக்க நால்வரும் சாப்பிடத் தொடங்கினார்கள். அத்தருணத்தில்ஒரு அதிதிவந்து கதவைத்தட்டபிராம்மணர் எழுந்து,தற்செயலாய் வந்த அதிதியை தெய்வமெனக்கொண்டாடி, தனது பாகத்தை அவர்முன் வைத்தார். அதிதி உண்டு பசியடங்காதது கண்டு, இன்னும் வேண்டுமென்று கேட்டார். பிராம்மணர் செய்த உபகாரத்தை மற்றைய மூவரும் பூர்த்தி செய்வதற்காகத் தமது பாகங்களை முறையே கொடுக்க, வந்த அதிதி பசி தீர்ந்து பிராம்மணரை வாழ்த்திச் சென்றார். அன்றிரவு அக்குடும்பத்தில் யாவரும் இறந்து மோக்ஷத்தை அடைந்தனர். அந்த வீட்டிற்கு நான் சென்று புரள, தரையில் சிந்தியிருந்த கோதுமைமாவு என்மேல் பட்டது. உடனே எனது பாதி தேகம் பொன்னிறத்தை அடைந்தது. இதைப் போன்ற சிறந்த பரோபகாரம் எங்கேயாவது இருக்குமா என்று நான் பார்த்து வருகிறேன். நான் இங்கும் என்னாலான மட்டும் புரண்டு பார்த்தேன். என் தேகத்தில் மற்றைப் பாதி பொன்னிறமாகவில்லை. ஆதலால்தான் இதை நான் சிறந்த யாகமென்று ஒப்புக்கொள்ளமாட்டேன்' என்றது. இதனால் உண்மையான பரோபகாரத்தின் ஸ்வரூபம் இன்னதென்பது நன்றாய் விளங்கும்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்
## LADIES' PAGES

ஆண் பிள்ளைகளுக்கு, தாய் தந்தை குரு இவர்கள் தெய்வமாகின்றார். பெண்களுக்கு கணவன்தான் பெரிய கடவுள்.

***

திருவள்ளுவர் தன் மனைவியைக் கூப்பிட்டார். அவள் கிணற்றில் நீர் தூக்கிக்கொண்டிருந்தாள். அவர் கூப்பிட்டது கேட்டதும், சகட்டிலேயே நீர்ப் பாத்திரத்தை விட்டுவிட்டு, உடனே ஓடிவந்தாள். அது எப்படி விட்டுவிட்டுப் போனாளோ, அப்படியே நின்றுக்கொண்டிருந்தது. இதுவே கற்பின்மகிமை.

***

தருமமென்கிற பண்டத்தைக் கொண்டு இல்லற வாழ்க்கை யென்கிற வண்டியை இழுக்க கட்டி இருக்கும் மாடுகள் கணவனும், மனைவியும்; இவ்விருவரும் சரியாக ஒத்து நடந்தாலன்றி சம்சார வாழ்க்கை ஸௌக்கியமாகாது.

***

முன் காலத்தில் ஜமதக்னி பகவான் என்று ஒரு மஹாரிஷி இருந்தார். இவர் பரசுராமருடைய தகப்பன். ஜமதக்னி பகவானுடைய மனைவி, தன் பதிவிரதா தர்மத்தினால்,மணலால் செய்த குடத்தில் ஜலமெடுத்து வருவது வழக்கம். ஒரு நாள் அவள் அவ்வாறு கொண்டுவரும் வழியில், மேல் சென்றுக்கொண்டிருந்த கந்தருவரின் அழகைப்பார்த்து அதிசயிக்கையில், பாதிவிருத்யம் பங்கமாய் விட்டதால், மணல்குட முடைந்து நீர் கீழ் சிந்திவிட்டது.

***

கண்களிரண்டும் சேர்ந்து ஒரே வஸ்துவைப் பார்ப்பதுபோல, கணவனும் மனவியும் ஒரே கருத்தை உடையவர்களாக இருக்கவேண்டும்.

***

திருவள்ளுவரென்று பெரிய தமிழ் கவி ஒருவர் இருந்தார்.அவர் மனைவி மகா பதிவிரதை. தன் பர்த்தாவினுடைய சிசுரூஷையே தனது வேலையென்று இருப்பவள். அவளிடத்து கொங்கணர் என்று ஒருவர் பிச்சைக்கு வந்து, மிக நேரம் காத்திருந்தார். அவர் தனக்கு தவமகிமை அதிகமென்று கர்வம் கொண்டிருந்தபடியால், அவளை அதிகாரம்செய்யத் தொடங்கினார். இதைக்கவனியாது, தன்கணவனுக்கு செய்யவேண்டிய காரியங்களைச் செய்துவிட்டு அவள் பிச்சையிடவந்தாள். அப்போது கொங்கணர் கோபித்துக்கொள்ள அவள் "கொக்கென்று நினைத்தனையோகொங்கணவா?" என்றாள். அவர் உடனே பயந்து போய் விட்டார். (அவர் ஓர் கொக்கைப்பார்த்து கோபித்துக் கொண்டபோது, அது இறந்து விட்டதாம். அதனால்தான் அவர் அவ்வளவு கர்வமுற்று இருந்தார். ஆகையால், அவள் எவ்வாறிந்த சங்கதியை யறிந்து சொன்னாளோ வென்று பயந்து போய் விட்டார்.)

***

எந்தக்காரியம்செய்தாலும் பிரதிப்பிரயோஜனத்தை எண்ணாமல் செய்யவேண்டும்.பிரதிப் பிரயோஜனத்திற்காக செய்வது பெரிதன்று. இதுவே கீதையிலும் சொல்லப்பட்டது. ஓர் பெண்ணும் தன் கணவனுக்கு தக்கவாறு நடப்பதில்,பிரதி பிரயோஜனத்தை எண்ணாமல் நடக்கவேண்டும். இல்லாவிட்டால் அவள் நடத்தை பதிவிர்தாதர்ம மாகாது.

***

நகர் சோதனை செய்துகொண் டிருக்கையில் இராமர் ஒருநாள், ஒரு வண்ணானுக்கும் அவன் மனைவிக்கும் நடந்த சம்பாஷணையில் "இராவணனிடத்திலிருந்த சீதையை இராமன் அழைத்துக்கொண்டது போல, நான் உன்னை அழைத்துக்கொள்ள மாட்டேன்" என்றுசொல்லியதைக்கேட்டு, இராமர் சீதையை காட்டில் விட்டுவரும்படி இலக்ஷ்மணருக்கு உத்திரவுசெய்தார். பெண்கள், தங்கள் புருஷர் வீடல்லாத விடங்களிலிருந்தால், அவர்களுக் கபவாதத்திற்கே இடமாகும்.

***

பார்வதி, ஸரஸ்வதி, லக்ஷ்மி இவர்களைப் பார்த்து நாரதர் நீங்கள் பதிவிரதைகளானல் இந்த கல் கடலையை சமையுமென்றார். அவர்கள் சிரித்து "ஏன் எங்களை பரிகாசம் செய்கிறீர்கள், எங்கேயாவது கல்லே சமைக்கமுடியுமோ" என்றார்கள். அவர் உடனே அத்ரிமகாரிஷியினுடைய பெண்சாதியிடத்தில் அவைகளைக் கொடுத்து, சமைக்கச் சொன்னார். அவள் உடனே அவரை உட்காரச்சொல்லி,விட்டு, பர்த்தாவினுடைய கமண்டலுவிலுள்ள நீரைத்தெளித்து தன் கணவனை ஸ்தோத்திரம் செய்து இந்த கல் கடலை பதமாக வேண்டுமென்று நினைத்தாள். நினைத்ததும் மல்லிகைப் பூப்போல் நன்றாக அவை பதமாயின. இதைக் கொண்டுபோய்

நாரதர், பார்வதி முதலானவர்களுக்குக் காட்ட அவர்கள் வெட்கமடைந்தார்கள். கர்வம் பதிவிரதா தர்மத்திற்கு பங்கமுண்டாக்குகின்றது.

* *

நாரதர் பதமான கல்கடலையைக் கொண்டுவந்து கொடுத்ததும், அந்த மூன்றுபேர்களுக்கும் அத்ரி பத்னியாகிய அனுஸூயையைமேல் காரமுண்டாகி விட்டது. உடனே அவர்கள் தங்கள் பர்த்தாக்கள் வந்ததும் அனுஸூயையின் கற்பை அழித்துவிடவேண்டுமென்று ஹடஞ்செய்தனர். அனஸூயையின் கற்பின் சிறப்பை வெளிப்படுத்தக் கருதிய திருமூர்த்திகள் அவ்வாறு செய்ய ஒத்துக்கொண்டு பிக்ஷுக வேஷத்துடன் அத்ரிமகாரிஷியில்லாத காலத்தில் அவர் ஆசிரமத்தில் சென்று, அனுஸூயையை நக்னமாக பிக்ஷையிடும்படி வேண்டினர். அவளும் அப்படியே ஆகட்டுமென்று தன் கணவன் உதகமண்டலுவின் நீரை அவர்மேல் தெளித்தாள். உடனே அவர்கள் மூன்று குழந்தைகளாய் விட்டார்கள். விட்டதும் அம்மணமாய் அக்குழந்தை மூவர்க்கும் அன்னமூட்டினள். இது வல்லவோ கற்பின் வலிமை.

* *

அநேக நாள்கள் கடந்தன. பிரம்மா விஷ்ணு மகேசுவரர் குழந்தைகளாக அனசூயை வீட்டில் இருப்பதாகத் தெரிந்து, லக்ஷ்மி, ஸரஸ்வதி பார்வதி இவர்கள் மூவரும் அவள் வீட்டிற்குச் சென்று தங்களுக்கு மாங்கல்யபிக்ஷை கேட்டதாக புராணங்கள் சொல்லுகின்றன. கீழ்மை அடைவதற்கு கர்வமும், குரோதமும் வழியைக் காட்டுகின்றன.

* *

அப்பொழுது திரிமூர்த்திகளும் அனஸூயையினது கற்புநிலைக்கு மெச்சித் தமது அம்சங்களால் அவளுக்கு பிள்ளையாக அமர்ந்தனர். அவரே தத்தாத்ரேய மஹாயோகி.

* *

மழையில்லா விட்டால் நாட்டிற்கு ஸுகமில்லை. மழையும், தபஸில்லாவிட்டால் கிடையாது. தபஸிகளும், கிரகஸ்தர்களை ஆச்ரயித்து இருந்தால் ஒழிய இருக்கமுடியாது. அப்படி ஆச்ரயிப்பதும் சரியான பத்னிகளிருந்தால் தான் முடியும்.

* *

வரும்படி எவ்வளவு வருகின்றதோ அதற்கு தகுந்த மாதிரி சிலவு செய்துக்கொண்டும், கணவனுக்கு செய்யவேண்டியதை செய்துக் கொண்டும் குலாசாரங்களை தவறுமல் நடத்திகொண்டும், கோபமில்லாமற் நற்குணமுடையவளாக எவள் இருக்கிறளோ, அவள்தான் சரியான பத்நியென்று சாஸ்திரங்கள் அலேமோதுகின்றன.

* *

உலக மேன்மைக்கு ஜனங்கள் நற்குணங்கள் உடையவர்களாக விருக்கவேண்டும். ஜனங்களுக்கு பெருந்தன்மை, தேசாபிமானம், முதலிய நற்குணங்கள் இருக்கவேண்டு மென்றால், இந்த குணங்கள் அவர் சிறு வயதிலேயே மனதிலுண்டாக வேண்டும். ஆகவே அவர்களுடன் சிறுவயதில் பழகுகிறவர்கள் அந்த குணங்கள் உண்டாகி தினே தினே விருத்தியாகும்படி செய்யவேண்டும். குழந்தைகளுடன் ஜாஸ்தியாய் பழகுபவர்கள் அவர் தாய்களேயன்றி வேறுயார்? ஆனதினால் அவர்களால்தான் குழந்தைகள் குணம் சிறக்கவேண்டும். அக்குழந்தைகளின் வளர்ச்சியின்மேல்தான் பின்னால் உண்டாகும் உலகஸுகம் நிலைத்திருக்கிறது. ஆனதினால் தாய்கள் தங்களுடைய நடத்தைகளினால் குழந்தைகளுக்கு நற்குணங்கள் உண்டாகும்படி செய்யவேண்டியது அவசியம்.

* *

கம்பரென்று பெரிய கவியொருவ ரிருந்தார். அவர் ஸீதை அசோகவனத்திலிருக்கும்போது "மென்மருங்குல்போல்" சரீரமுழுதுமாகிய தென்று வர்ணித்திருக்கிறார். இடை மிகவும் நுட்பமாக இருக்குமென்று வர்ணிப்பது வழக்கம். அதுபோல அவளுக்கு சரீர மிருந்த தென்றார். அதாவது மிகவும் கிருசமாயிருந்தது. கணவனைப் பிரிந்ததினால், இருந்தும் இல்லாமல் போல் ஆய்விட்டாள். கணவனை விட்டுப் பிரிந்த பெண்கள் நிலைமை நிலத்தில் இட்ட மீன் போலாகும். மிகவும் கொடிது.

* *

கிருஸெல்டா என்பவள் ஒரு ஏழைக்குலத்தில் பிறந்த ஓர் ஸ்திரீ ரத்னம். அவளுக்குக் கணவனாக வாய்த்த அரசன் ஒருவன் அவளை எவ்வளவோ விதமாகக் கஷ்டப்படுத்திக் கொஞ்சகாலம் பரிசோதித்துப் பார்த்தான். அவள் எப்பொழுதும் பொறுமையுடன் மனங்கோணுது தன் விஷயத்தில் அன்புடன் இருப்பதைக்கண்டு, அரசன் அவளை மிகுந்த ஆதரவுடன் கொண்டாடி அவளுடன் வெகுகாலம் ஸுகித்து வந்தான். இதனால் பெண்கள் கிருஸெல்டாவைப்போலப் பொறுமையாயிருந்தால் எவ்வளவு பிடிவாதம் உடைய கணவர்களையும் தம் வசப்படுத்தலாம் என்பது எளிதில் விளங்கும். (இக்கதை அடங்கிய சிறு புத்தகம் விலை அணா 3 தான்: வேண்டுபவர் விவேகபோதினி மானேஜரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்).

வா. சேஷகிரி சாஸ்திரி

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

1. விசேஷமான மோடார் வண்டிகள்:—தெருவில் அதிவேகமாகப்போகும் மோடார் வண்டிகளை அனேகர் கண்டிருக்கலாம். அதில் இப்பொழுது புதிதான யந்திரங்கள் அமைக்கப் பட்டிருக்கின்றனவாம். அவைகளின் பலத்தால் மோடார் வண்டிகளுக்கு, வேலி, சிறு கால்வாய்கள், முதலிய தடைகளை லக்ஷ்யம் செய்யாது தாண்டிப் போவதற்கும், போகும் வழியில் அதிகமாக நிலத்தில் பதியாது வெகு வேகமாகச் செல்லுவதற்கும் வேண்டிய சக்திகள் உண்டாயிருக்கின்றன. இந்த யந்திரங்களால், வேலி முதலியவைகளின் அருகில் வந்ததும், இவ்வண்டியின் முன் சக்கிரங்கள் உயரக் கிளம்ப, வண்டி வெகு லகுவாக அவைகளைத் தாண்டி அப்புறம் செல்லுகின்றது. கீழே விழுங்கால் வண்டிக்கும் அதனுள் இருப்பவருக்கும் அபாயம் வராதிருக்கும்படி சிற்சில யந்திரங்களும் அதனுள் அமைக்கப் பட்டிருக்கின்றன. ஒரு சுற்று சக்கரத்தின் சக்தியால் வண்டி ஓடும்பொழுது, பூமியில் அதிகமாகப் பதியாது இருக்கிறது. இதனால், ஸாதாரணமாகப் போகும் வேகத்தைப் போல் இருமடங்கு வேகமாக வண்டி போகும். கரடுமுரடான நிலப்பாகங்களிலும் இவ்வண்டிக்கு ஓடும் திறன் உண்டாகின்றது.

***

2. உரோமம் தேகஸௌக்கியத்தைக் காட்டும்:- இக்காலத்து வைத்தியர்கள் நகத்தின் வளர்ச்சியால், ஒருவனது தேகத்தின் நிலையை எளிதில் அறியலாம் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். நகங்கள் தளதளப்போடு சீக்கிரமாக ஒருவனுக்கு வளர்ந்துவருவது அவனுக்கு ரக்த ஓட்டம் ஜீர்ண சக்தி, தேகத்தின் பொது ஸ்திதி முதலியன நல்லநிலையில் இருக்கின்றன என்பதைக் குறிப்பிக்கின்றது. டோகியோ நகரத்திலிருக்கும் ஜபானிய வைத்தியர் ஒருவர் தேகக்கூறை அறிவதில் நகங்களின் உபயோகத்தை அங்கீகரிப்பதும் அல்லாமல், ஒருவனுக்கு உரோமம் வளரும் விதம், அவன் தேகத்தின் நிலைமையைநன்றாக வெளிப்படுத்துகின்றது என்று, மிகுந்த பரிசோதனை செய்து வெளியிட்டிருக்கிறார். அவர் பரிசோதனையால் வெளியாகும் விஷயங்கள் பின் வருவன. தேகஸௌக்கியம் குறையக் குறைய உரோமம் அடர்த்தியாயும், நீளமாயும், தடிமனும் வளர்வதில்லை. ஒருவனது அநேக உரோமங்களை எடுத்து அவைகளின் குறுக்குஅளவைக் கண்டு அவனுக்கு ஸௌக்கியக்குறைவு இவ்வளவு இருக்கலாம் என்று கண்டு பிடிக்கலாம். வழுக்கைத்தலை, தேகத்தின் பலக் குறைவையே காட்டுகின்றது. ஆனால் அந்த பலக் குறைவு வழுக்கைத் தலையுடையவருக்கு அவ்வளவு வெளிப்படையாகத் தெரியவரமாட்டாது. இவ்விஷயங்கள் ஸாதாரணமாக வைத்தியம் செய்யுங்கால் உபயோகப்படாமல் இருப்பினும், பிரேத பரிசோதனைகாலங்களில், இறப்பதற்கு முன் அம்மனிதனது தேகக் கூறு எவ்வாறு இருந்தது என்பதை அறிய மிகுந்த ஸஹாயமாக இருக்கும்.

***

3. வேஷச்செவிடனை வெளியாக்கும்விதம்:-ரஷ்யாதேசத்து வைத்தியர் ஒருவர் செவிடர் என்று வேஷம் போடுபவரைக் கண்டுபிடிப்பதற்கு நல்லவழி ஒன்று கண்டு பிடித்திருக்கிறார். செவிடன் என்று சொல்லிக்கொள்ளுபவனை ஒரு சட்டை போட்டுக் கொள்ளும்படி செய்து, அதேமாதிரியான சட்டை நாமும் போட்டுக்கொண்டு அவன் பின் புறத்தில் நாம் நின்று கொள்ள வேண்டியது. நாம் கையாலும், பிரஷாலும் அவன் முதுகில் இழுக்கப்போகிறதாகவும், அதை இன்னதால் தான் இழுத்ததாக அறிந்து சொல்லவேண்டும் என்று அவனுக்கு தெரிவித்து விடவேண்டும். அதன் பின்பு அவன் முதுகில் கையாலும் நமது மார்பில் பிரஷாலும், மறுபடியும் அவன் முதுகில் பிரஷாலும் நமது மார்பில் கையாலும் மாற்றிமாற்றி மெதுவாக இழுத்து அவனை இவைகளைஅறிந்து சொல்லும்படி செய்ய வேண்டும். அவன் காதுகேட்பவனாக இருந்தால், கூடிய சீக்கிரத்தில் முதுகில் உண்டாகும் சப்தமும், நமது மேல் உண்டாகும் சப்தமும் அவன் காதில்பட அவனுக்கு குழப்பம் வந்துவிடும். ஒன்றும் சொல்லமுடியாது. அவன் தத்தளிப்பான். செவிடனோ காது கேட்காததால் தன்முதுகில் படுவது இன்னது என்பதை தவறாது அறிந்துசொல்லுவான். பாசாங்குக்காரனுக்கு ஸ்பர்சம், சப்தம் இரண்டும் சேர்ந்து குழப்பத்தை உண்டாக்கிவிடுகின்றன. உண்மைச் செவிடனுக்கு ஸ்பர்சமாத்திரம் அறியும் வழியாக இருப்பதால் அம்மாதிரியவனுக்கு குழப்பம் உண்டாவதில்லை.

***

4. நெருப்பு பற்றாதமரம்:—அஸ்பெஸ்டாஸ்மரம் என்று ஓர் மரம் இப்பொழுது ஓர்வித நாரிலிருந்து உண்டாக்கப்படுகிறது. அது ஸாதாரண மரத்தை

விடச் சற்று பலக்குறைவாக இருப்பினும், இழைத்தால் அதில் மிகுந்த தளதளப்பு உண்டாகின்றது. தேக்கைப்போல எளிதில் அதில் அருமையான வேலைகள் செய்யலாம். ஆணி அடித்தால், அதில் நன்றாகப் பிடிக்கின்றன. இதில் நெருப்புப் பற்றுவதில்லை.

***

5. புதக்கிரகமும் அதன் உஷ்ணமும்:—புதக்கிரகமானது சூரியனைச் சுற்றிவரும் கிரஹங்களுள் அதன் அருகாமையில் உள்ளது. அது சுற்றிவரும்பொழுது, எப்பொழுதும் சூரியனிடமிருந்து ஒரே தூரத்தில் இருப்பதில்லை. ஒரு ஸமயத்தில் சூரியனிடமிருந்து அது அதிதூரத்திலும், மற்றைய ஸமையத்தில் அதி அருகாமையிலும் காணப்படுகிறது. இவ்விரண்டு தூரங்களுக்கும் சற்றேறக் குறைய 15,000,000 மைல் வித்தியாஸம் உண்டு. இது ஸூர்யனை 88 நாளைக்கு ஒருதரம் சுற்றிவருகிறது. நமது பூமியின் நிலை எவ்வாறிருக்கின்றது என்று பார்ப்போம். நமது பூமி ஸூர்யனிடமிருந்து சற்றேறக் குறைய புதனைப்போல் 2½ மடங்கு தூரத்திலிருக்கிறது நமது பூமி நடுக்கோடைகாலத்தில் ஸூர்யனிடமிருந்து அதிதூரத்திலும், நடு மழைகாலத்தில் அதி அருகாமையிலும் இருக்கின்றது. இவ்விரண்டு தூரங்களுக்கும் ஏறக்குறைய 3,000000 மைல் வித்தியாஸம். இதனால் நமக்குத்தோன்றும் உஷ்ணத்தையும் புதக்கிரஹத்தில் உள்ள உஷ்ணத்தையும் ஒப்பிட்டு நோக்கில், அது ஸூர்யனிடமிருந்து அதிக தூரத்தில் இருக்கும் பொழுது நமக்கு இருக்கும் உஷ்ணத்தைப்போல 5-மடங்கு உஷ்ணத்தையும், அதிக அருகாமையில் இருக்குங்கால் 11-மடங்கு உஷ்ணத்தையும் உடையதாக இருக்கிறது. இந்த உஷ்ணத்தால், தண்ணீர் காய்ந்த தோசை கல்லில் விட்டாற்போல உடனே ஆவியாகிவிடும். ஆகையால் வான சாஸ்திரிகள் புதக்கிரகத்தில் ஸமுத்திரம் நதி முதலியன இல்லை என்று உணர்ந்து அதில் நம்மைப்போன்ற ஜனங்கள் இல்லை என்று ஸ்தாபிக்கின்றனர்.

6. இதுவரையில் நாம் வைரம் ஒன்றுதான் மிகக் கடினமான வஸ்து என்றும், அது கண்ணாடி முதலிய கடின பதார்த்தங்களை எளிதில் அறக்கும் சக்தி உடையது என்றும் எண்ணியிருந்தோம். இப்பொழுது மாய்ஸன் என்ற பிரகிருதி சாஸ்திரி வைரத்தைப் போன்ற கடினமான இரண்டு வஸ்துக்களைக் கண்டுபிடித்திருக்கிறார்.

7. மின்சார சக்தி:-ஆகாயத்தில் மழைகாலங்களில் இந்தசக்தி ஏராளமாக இருக்கின்றது என்று, பிராங்களின் தாம் விட்ட காற்றாடியால் நிரூபணம் செய்திருக்கிறார். இக்காலத்தில் தூரஸம்பாஷணை யந்திர ஆபீஸ்களில் வேலையாக இருக்கும் வேலையாட்கள் சிலர் விட்ட காற்றாடிகளால் ஸாதாரண காலங்களிலும் இந்த மின்சார சக்தி ஆகாயத்தில் ஏராளமாக இருக்கின்றதென்றும், அதைக் கம்பிகள் மூலமாகக் கீழே இறக்கி சிறு டிராம் வண்டிகள் ஓட்டுதல் முதலிய காரியங்களையும் செய்யலாம் என்றும் காட்டி இருக்கிறார்கள். இவ்வாறு காற்றாடி விடுவதால், ஆகாயத்தில் இருந்து மின்சார சக்தியை கீழே இறக்கி உபயோகப்படுத்துவது எளிதாகிவிட்டால் அதை உண்டாக்குவதற்கு நாம் யந்திர விஷயங்களில் வீணாகச் செலவிடும் செலவை நிறுத்தி விடலாம். மின்சார சக்தி தண்ணீரை விட மலிவாகிவிடும். இனிமேல் காற்றாடி விடுவதற்கு வேண்டிய காற்று இல்லாத காலத்தும் அதைவிடக்கூடாத அதிகக்காற்றுக் காலங்களிலும் உபயோகப்படுத்தும் பொருட்டு நல்ல ஸமயங்களில் இருக்கும் மின்சாரசக்தியை சேர்த்துவைக்க ஒரு யந்திரம் மாத்திரம் கண்டு பிடித்துவிட்டால் மிகவும் நலமாக இருக்கும்.

***

8. மின்சாரசக்தியின் சிறப்பு:-இக்காலத்தில் இந்த சக்தியை எல்லோரும் சிறந்தது என்று எண்ணுவானேன்? கைத்தொழில் முதலிய எல்லா விஷயங்களுக்கும் இந்த சக்தி அதிக உபயோகமாக இருக்கின்றது என்பது ஒரு காரணமாக இருக்கலாம். இதுவுமல்லாமல் பிரகிருதி சாஸ்திர விஷயங்களில் இதன் உபயோகம் அளவிடமுடியாதிருக்கின்றது. மேலும் வர வர எல்லோரும் நமது உயிரும் மின்சாரசக்தியும் ஒரே தன்மையை உடையது என்று அறிந்து கொண்டிருப்பதே இதன் சிறப்பிற்கு முக்கிய காரணமாக இருக்கலாம். இதனால் இக்காலத்தில் வைத்தியர்கள் இதை வியாதியை ஸ்வஸ்தம் செய்வதில் ஸாதாரணமாக உபயோகப்படுத்தத் தொடங்கி விட்டார்கள். இதுவரையில் ஸ்வஸ்தமாகாத அஸாத்யவியாதிகளும் எளிதில் இனி மேல் ஸ்வஸ்தமாகி விடலாம்.

## புத்தக வரவு
## BOOKS RECEIVED

(1) வியவஸாய போதினி—இப்புத்தகம் மிகவும் சிரமம் எடுத்துக்கொண்டு மிஸ்டர் எ. சேதுருமய்யரவர்களால் எழுதப் பெற்றது—இதை பதிப்பித்தவர், சென்னை, எஸ்பிளநேட், மெஸ்ஸர்ஸ் ஜி.எ. நடேசன் அண்டு கம்பெனியார். விலை: போர்டு பதிப்பு 1-4-0: காலிகோ பைண்டு ரூ. 2 0 0

(2) மானிட மர்ம சாஸ்திரம்—இப்புத்தகம் மிஸ்டர் எஸ். சாமிவேல், பி.எ. அவர்களால் எழுதப்பெற்றது. 500 பக்கங்களுக்கு மேலுள்ளது. நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டு மிகவும் நேர்த்தியாய் பயிண்டு செய்திருக்கிறது. விலை ரூ—5—0—0.

3. ரம்யனும் ஜோலியதையும்—இந்நாடகம், ஷேக்ஸ்பீய மஹாகவி இயற்றிய நாடகத்தின் தமிழ் அமைப்பு. மிஸ்டர் எஸ். வி. சீனிவாஸய்யர், பி. எ ஆவர்களால் இயற்றப்பட்டது விலை அணா—8.

4. ஞானம்பாள்:—இப்புத்தகம் ஸ்ரீ கஜாம்பிகையம்மாளால் எழுதப்பட்டது—இதைப் பதிப்பித்தவர், திருவல்லிக்கேணி, லக்ஷ்மி விலாஸம் புத்தகசாலை ஸொந்தக்காரர் மிஸ்டர் பி. வைத்தினதய்யர் விலை அணா—6.

(இவைகளைப்பற்றி விரிவாய் அடுத்த சஞ்சிகையில் எழுதுவோம்:)

## சந்திரசேகரன் *

"லோகோபகாரி":—

"இவ்வருமையான புஸ்தகம் வங்காளி பாஷையிலிருந்து மஹேசகுமார சர்மா வென்பவர் எளிய தமிழ் நடையில் மொழிபெயர்த்திருக்கிறார். கவிகுல சிரேஷ்ட திலகரான பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயரால் சந்திரசேகரனென்னும் கதைப்புஸ்தகம் வங்காளி பாஷையில் எழுதப்பட்டது. அவருடைய கதைக்கு யாதொரு குறையும் உண்டாகாமல் தமிழில் நவரஸங்களோடு மேற் கண்ட புஸ்தகம் வெளி வந்திருப்பது மிகுந்த ஸந்தோஷத்தைத் தருகிறது. தமிழபிமானிகள் ஒவ்வொருவரும் இதை வாங்கி அவசியம் படிக்க வேண்டும், ஸ்திரீ புருஷர்களை நல்வழியில் நடத்த இந்த புஸ்தகம் தர்மதேவதையைப் போல் உபதேசம் செய்கிறது. இதன் பெருமையை எழுதப் புகுந்தால் இடம் போதாதென்றே சொல்ல வேண்டும். சைவலினி, பிரதாபன், சந்திரசேகரன் டலினி பீபி, ஸுந்தரி இன்னுமுள்ள ஸ்திரீ புருஷர்கள் செய்த ஸாஹஸ தைர்ய, பராக்கிரம குணவிசேஷங்களெல்லாம் அதிசயிக்கத்தக்கவை. தெய்வபக்தி, குருபக்தி, பதி பக்தி, மித்ரவாத் ஸல்யம், புருஷதர்மம் ராஜ நீதி, சாந்தம், தத்வார்த்தங்களெல்லாம் நீ முன், நா முன் என்று ஜயக்கொடிநாட்டுகின்றன. பிரஸித்த புருஷரான பங்கிம் சந்திர சாட்டர்ஜியினுடைய ஒரு கிரந்தத்தை மனம் வைத்துப் படித்தால் மட்டிலும் மதியை யடைவானென்றால் மற்றவர்களின் விஷயத்தில் சொல்லவும் வேண்டுமோ, கதாப்பிரியர்களும், ஸன்மார்க்கர்களும் வித்யாவதிகளும், இப்புஸ்தகத்தை ஆதரிக்க வேண்டுமென்பதே எமது கோரிக்கை, தமிழில் இவ்வித கிரந்தம் கிடைப்பது அருமை. அந்த குறையைத் தீர்க்க நமது ஆரிய ஸஹோதரர்கள் முன் வந்திருப்பதைப் பார்த்து ஆநந்த மடைகிறோம். மேன் மேலும் இவ்வித கிரந்தங்களைத் தமிழில் வெளிப்படுத்தும்படி வாசகர்கள் புரோத்ஸாகம் செய்வார்களாக.'

---

* இப்புத்தகம் சென்னை, மைலாப்பூர், ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனியாரிடம் கிடைக்கும். இதன் விலை அணா 8.

# விவேக போதினி.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" ——திருவள்ளுவர்

தொகுதி 1. } 1908-ஸு ஆகஸ்டுமீ { பகுதி 2.


## மதவிஷய ஆராய்ச்சியின் அவசியம்

## RELIGIOUS STUDY: A NECESSITY

முன்னர் நாம் எடுத்துக்கூறிவந்த யுக்தி, உருக்கம், ஊக்கம் ஆகிய இம்மூன்றும் மனத்தின் மூன்றுவித ரூபங்களே ஒழிய வேறல்ல. இம்மூன்றில் உருக்கம் ஸம்பந்தப்பட்ட நன்னடக்கையையே மதம் என்றோம். அது நிலைபெற்று ஒங்குவதற்கு ஊக்கமும் வேண்டும் என்றோம். இவைகளிலிருந்து மதவிஷயங்களை ஒழுங்காக ஆராய்ச்சி செய்தால், மனத்தின் மாறுபாடுகளாகிய யுக்தி உருக்கம் ஊக்கம் என்பவைகள் நன்றாக விருத்தியாகி, நாம் மேன்மையை எளிதில் அடைவோம் என்பது நன்றாய்த் தெரியவருகிறது.

இக்காலத்தில் பள்ளிக்கூடங்களில் புகட்டப்படும் கல்வியின் ஸ்வரூபத்தைச் சற்று ஆலோசனைசெய்தால், மதவிஷய ஆராய்ச்சியின் அவசியம் ஒருவாறு நமக்குத் தெரியவரும். நமது பள்ளிக்கூடங்களில் சிறுவர்களது யுக்தியை மாத்திரம் பலவித பாடங்கள் மூலமாக விருத்திசெய்கிறார்கள். இதனால் நமது சிறுவர்கள் கற்றறிமோழைகளாகி, 'நெய்க்குத் தொன்னை ஆதாரமா, அல்லது தொன்னைக்கு நெய் ஆதாரமா?' என்று தர்க்கித்து நெய்யை இழந்த தார்க்கிகனது நிலைக்கு வந்துவிடுகிறார்கள். இக்காலத்துப் படிப்பால் கேவலம் யுக்திவாதம் முதலியன சிறுவர்களுக்கு உண்டாகின்றனவே ஒழிய அவைகளால் நல்லவை என்று தெரியவரும் மார்க்கங்களில் நிலைபெற்று அவைகளில் நேராக நடந்தேறவேண்டியதற்கு முறையே அவசியமான உருக்கமும் ஊக்கமும் இல்லாமல் போய் விடுகின்றன. இதனாலேதான் இக்காலத்தில் படித்து வெளியேறும் சிறுவர்கள் உபயோகமற்றவர்களாகிறார்கள். ஆகையால் மனத்தின் ரூபங்களாகிய மூன்றும் விருத்தியாகி வருவதற்கு நமது மதவிஷயங்களை நமது சிறுவர்கள் ஆராய்ச்சி செய்தல்வேண்டும்.

இக்காலத்துப் படிப்பின்கொடுமை நமது சிறுவர்களை நேரானவழியில் விருத்தியாகாது தடுப்பதோடுங்கூட, சிற்சில கெட்ட விஷயங்களை அவர்களது மனதில் பதியும்படியும் செய்கின்றது. ஒவ்வொருவனும் சிஷ்யப்பருவம் தீர்ந்து பள்ளிக்கூடங்களைவிட்டு வெளிவருங்கால் நமது மதம் நாடு முதலியவைகளின் விஷயத்தில் நாஸ்திகனாக வருகிறான். அவன் உலக வாழ்க்கையில் அடிஇருங்கால், தன் தகப்பனுக்கு ஒன்றும் தெரியாதென்றும், தன் மூதாதைகள்

முழுமூடர் என்றும், வேதங்கள் யாகர்திகளைப் போன்ற உபயோகமற்றவைகளை அடக்கியுள்ளன என்றும், பிராம்மணர்கள் பிறரது சொத்துக்களை வாங்கித்தின்று வீண்காலங்கழிக்கும் ஜாதியார் என்றும், தனது தேசம் முழுவதும் நாகரீகம் அற்றதென்றும், தன் தேசத்தாருக்கு ஒருவித நற்குணங்களும் இல்லை என்றும், உள்ள எண்ணங்கள் அவன் மனதில் குடிகொண்டுவிடுகின்றன. இந்த எண்ணத்தின் முதிர்ச்சியால் சிலர் மதாந்திரங்களுக்குப்போய் கிறிஸ்தவர் முதலியவர்களாக மாறுகிறார்கள். சென்ற பத்துவருஷங்களாக விவேகாநந்தர், தியாஸாபிகல் ஸங்கத்தார் முதலியவர்களது மத விஷய ஆராய்ச்சிகளின் சிறப்பால் இவ்வித மாறுபாடுகள் இக்காலத்தில் அடிக்கடி உண்டாவதில்லை. இப்படி இல்லாவிடினும், நம் நாட்டவர்கள் இக்காலத்துப் படிப்பின் கொடுமையால், ஐரோப்பியரைப்போன்ற நடை உடை பாவனைகளில் வெகு ஊக்கத்தோடு பழகிக்கொண்டு நாடகத்தில்வரும் வேஷதாரிகளைப்போல நடித்துவருகிறார்கள். இந்த நிலை விருத்தியாகி நம்மை முழுவதும் கெடுத்துவிடாதிருப்பதற்கு தகுந்த மருந்து நமது மத விஷய ஆராய்ச்சியே ஒழிய வேறில்லை.

இதுவுமன்றி நமது மதத்தின் சிறப்பை விசாரிக்கப் புகுங்கால், இதை அவசியம் ஆராய்ச்சி செய்தே தீரவேண்டும் என்பது எளிதில் விளங்கும். நமது மதத்தின் சிறப்பை வேறு ஒரு ஸஞ்சிகையில் நன்கு விவரிப்போம். இங்கு அதை ஒருவாறு சுருக்கமாக எடுத்துக்காட்டுவோம். உலகத்தில் காணப்படும் எல்லா மதங்களைப்பார்க்கிலும் நமது மதமாகிய ஸநாதன தர்மம் என்பது மிகச்சிறந்தது. பாதிரிகள் முதலியோர் தமது மதத்தைக் காரணமின்றி துதிப்பதுபோல, நாம் இங்கு துதிக்கவரவில்லை. நன்றாய் விசாரிக்குங்கால் நமது மதத்தை ஒரு தனி மதம் என்றுசொல்ல இடமில்லை. ஒவ்வொருவரும் தமது மனோதர்மத்தைப் பின்பற்றி கடவுளை ஆராதித்து பரமபதத்தை அடைய ஏற்பட்ட அநேக மார்க்கங்களை அடக்கியுள்ள பெருந்தொகுதியே நமது மதம்; ஆகையால் நமது மதத்தை நன்றாய் ஆராய்ச்சி செய்பவர்களுக்கு, உலகில் காணப்படும் எல்லா மதங்களையும் அறிந்து தெளியும் திறன்வரும். மதத்துவேஷமாகிய பேய் அவர்களை அணுகாது. ஆகையால் நமது சிறுவர்களுக்கு நமது மதத்தின் விரிவு, நோக்கம் முதலியன தெரிந்திருந்தால், மனம் விசாலமாகி அவர்கள் மேன்மையை அடைவார்கள் என்பதற்கு என்ன ஸந்தேகம்?

மேலும் இப்பரதகண்டவாஸிகளாகிய நமக்கு மதவிஷயங்களே கதி. நமக்கு அவையே பிரதானம். மற்றவைகள் எல்லாம் நமக்கு இரண்டாம் பக்ஷமே ஒழிய வேறில்லை. வெளியூரில் நடக்கும் பெரிய சண்டைகள் முதலியவைகளை அறிந்துகொள்ளவேண்டும் என்ற ஆவல் நமது தேசத்தவர்களுக்கு அதிகமாக இல்லை. ஆனால் நமது மதம் ஐரோப்பா அமெரிக்கா முதலிய இடங்களில் விருத்தியாவதை யாவரும் ஆவலுடன் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். நமது அந்தரங்க நோக்கங்களின் ஸ்வரூபத்தை, தூரதேசங்களில் நமது மதத்தை ஸ்தாபித்துவந்த விவேகாநந்த ஸ்வாமிகள் பின்வருமாறு விவரமாக எடுத்துச்சொல்லி யிருக்கிறார். 'ஒவ்வொரு ஜாதியாருக்கும் ஒவ்வொரு விஷயம் முக்கியம். அதை உத்தேசித்துத்தான் மற்றவைகளை அவர்கள் கவனிப்பார்கள். அதற்கு ஸஹாயமாக இருப்பவைகளையே அவர்கள் நல்லவை என்றும், மற்றவைகளை அவர்கள் தீயவை என்றும் எண்ணுவார்கள். ஆங்கில ஜாதியாருக்கு ராஜாங்க விஷயமே முக்கியம்; அவர்களுக்கு மதவிஷயங்களைச் சொல்லவேண்டுமானால், அவைகளால் ராஜாங்கவிஷயம் எவ்வாறு விருத்தியாகி ஓங்கும் என்று முன் எடுத்துக்காட்டவேண்டும். இவ்வாறு செய்தால்தான் அவர்களுக்கு மதவிஷயங்களைக் கேட்க உத்ஸாஹம் பிறக்கும். அமெரிக்கர்களுக்கு ஸமூகவாழ்க்கையின் சிறப்பே முக்கியம்; அவர்களுக்கு மதவிஷயங்களை நன்றாகப் பதியும்படி சொல்ல

வேண்டுமானால் அவைகளால் ஸமூகவாழ்க்கை எவ்வாறு சிறப்புற்று ஓங்கும் என்று காட்டல் வேண்டும். இதுபோல, பரதகண்டவாஸிகளே! உங்களுக்கு மதவிஷயம் முக்கியம். ராஜாங்கம், ஸமூகவாழ்க்கை யாவும், மோக்ஷம் அடைய எவ்வாறு ஸஹாயமாக இருக்கவேண்டுமோ, அவ்வாறு இருந்தால்தான் அவை உங்களுக்கு நல்லவை எனத் தோன்றும். ஆகையால் உங்களுக்கு எவ்விஷயத்தில் மேன்மை உண்டாக வேண்டுமாயினும், எல்லாம் உங்கள் மத விஷயங்கள் மூலமாகத்தான் நடக்கவேண்டும். இந்த முக்கிய விஷயத்தைக் கைவிட்டுவிட்டால் நீங்கள் அதோகதியை அடைவீர்கள். ஆகையால் உங்கள் மதத்தை நன்றாய் அறிந்து கொண்டு அதன்மூலமாக எல்லாச்சிறப்பையும் அடையுங்கள்.' இம்மதவிஷயங்களை நமது மூதாதைகளாகிய ரிஷிகள் முக்கியமாக எடுத்துக்கொண்டுவிட்டார்கள். இது ஸாதாரணமான விஷயமல்ல. எல்லா விஷயங்களையும்விட தியாகம், தெய்வத்தன்மை, ஆகியஇவைகளேநோக்கமாக உடைய மதவிஷயமே சிறந்தது. ஆகையால் இம்மதவிஷயங்களை நாம் விட்டுவிடாது அவசியம் ஆராய்ச்சிசெய்தல் வேண்டும்.

ஸன்மார்க்கம், மதவிஷயஞானம் ஆகிய இவைகள் நிறைந்து சிறப்புற்றோங்கியிருந்த நமது நாட்டில், இப்பொழுது எல்லா விடங்களிலும், மூடநம்பிக்கையும், பலவித மருட்சிகளுமே குடியாகித் தங்கிவிட்டன. இவ்வளவுநாள் நாம் மதவிஷயங்களை காலத்தின் கொடுமையால் ஆராயாது விட்டிருந்தபடியால், இம்மாதிரியான கெட்டநிலை நமது தேசத்தோருக்கு வந்துவிட்டது. இனிமேலாவது முன்போல அசிரத்தையாயிராது, மிகுந்த ஜாக்கிரதையோடு மதவிஷய ஆராய்ச்சியைச் செய்யத் தொடங்கவேண்டும். நமது சிறுவர்களுக்கு பள்ளிக்கூடங்களில் மற்றைப்படிப்போடு நமது மதவிஷயத்தையும் கற்பித்து வருவோமாகில், இந்த கெட்டநிலை சீக்கிரத்தில் மாறி பழையமேன்மை மறுபடியும்உண்டாகும் என்பதற்கு ஐயமில்லை.

நமது மதவிஷயங்களை ஆராய்ச்சி செய்வது அதிக அவசியம் என்பதற்கு நாம் முன்னர் எடுத்துக்காட்டியுள்ள முகாந்தரங்களை இங்கு ஒருவாறு சுருக்கிச்சொல்லுவோம். இவ்வித ஆராய்ச்சியால் நமது முக்கியமான விஷயமாகிய மதம் விருத்தியாக, நமக்கு எவ்வித சிறப்புக்களும் அதன் மூலமாக நாள் அடைவில் வரும். மதத்துவேஷம் என்பதே நம்மை அணுகாது. மதாந்திரங்களுக்குப்போய்த்தான் மேன்மை அடையவேண்டும் என்ற பித்தும் தெளியும். உலகத்திலிருக்கும் மற்றைய மதங்களின் உண்மை நமக்கு எளிதில் விளங்கும். இக்காலத்துப் படிப்பின் கொடுமை நீங்கி நாம் ஸௌகம் பெறலாம். மனத்தின் ரூபங்களாகிய யுக்தி, உருக்கம், ஊக்கம், முதலியனவிருத்தியாக நாம் மேலான நிலையை எளிதில் அடையலாம். இவைகளே. மதவிஷய ஆராய்ச்சியால் உண்டாகும் பயன்.

இவையல்லாமலும் இக்காலத்தில் அநேகர் மதவிஷய ஆராய்ச்சி நமது சிறுவர்களுக்கு அவசியம் என்று வற்புறுத்துகிறார்கள். சிலர் இவ்வாறு சொல்வதோடுங்கூட மதவிஷயப் பயிற்சிக்குவேண்டிய பிரயத்தனங்களும் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். தியஸாபிகல் ஸங்கத்தார் இவ்விஷயத்தில் முயற்சித்து பாட புஸ்தகங்கள் எழுதி சிறுவர்களுக்கு அவைகளின் மூலமாக மதவிஷயஞானத்தைப் புகட்டிவருகிறார்கள். அவ்வாறு செய்வதே நலம் என்று அங்கீகரித்து, அதற்குத்தக்க உதவி செய்வதாக சிரிங்கேரிமடம் ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகளவாள் வாக்களித்திருக்கின்றனர். இதற்கேற்பவே அநேகம் கனவான்கள், இவ்வாராய்ச்சியின் அவசியத்தைப்பற்றி அடிக்கடி இந்த ராஜதானியில் உள்ள பத்திரிகைகளில் இப்பொழுது எழுதிக்கொண்டும் வருகிறார்கள். இதுகாறும் மதவிஷயங்களில் தலையிட்டுக்கொள்வதில்லை என்று ஒதுங்கி நின்ற நமது ராஜாங்கத்தாரும் நமது சிறுவர்களுக்கு மத விஷயங்களைக் கற்பிக்க வேண்டும் என்று ஸமயம் வாய்த்த வேளைகளில் எல்லாம்

இப்போது வெளியிட்டுவருகிறார்கள். நாம் அவசியம்வேண்டும் என்பதை அவர்களும் அனுமோதிப்பதால், இந்த விஷயத்தில் அவர்களது அபிப்பிராயத்தையும் நமதுவிஷயத்திற்குப்பலமாகக்கொள்ளலாம். முன்இவ்விஷயத்தில் எடுத்துக்காட்டிய முகாந்திரங்களோடு இவைகளையும் சேர்த்தால் மதவிஷய ஆராய்ச்சியின் அவசியம் இத்தன்மையது என்பது யாவரும் எளிதில் அறியக்கூடும்.

இவ்வாராய்ச்சி செய்வதற்கு ஸஹாயமாக இருக்கும்பொருட்டு நமது மதத்தின் பொது விஷயங்களைப்பற்றி பின்வரும் ஸஞ்சிகைகளில் தொடர்ச்சியாக எழுதிவருவோம். அடுத்த ஸஞ்சிகையில் ஸனாதனதர்மத்தின் விரிவையும் சிறப்பையும்பற்றி நன்குவிவரிப்போம்.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன், B. A., L.T.

## ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்ஸர் உபதேசமொழிகள்.

1. வீட்டின் கூரையின் மேல் ஏறுவதற்கு ஏணி, மூங்கில், படிக்கட்டு, கயிறு முதலிய ஸாதனங்கள் பயன்படுவதுபோல், ஈசனைக் காண்பதற்கும் பலவகை மார்க்கங்களும் ஸாதனங்களும் ஏற்பட்டிருக்கின்றன. உலகத்திலுள்ள பிரதி சமயமும் இவ்வழிகளில் ஒன்றைக் காட்டுகின்றது.

2. சமயபேதங்கள் யாவும் ஸர்வ சக்தியுள்ள பகவானைப் போய் அடைவதற்காக ஏற்பட்ட மார்க்கபேதங்களாம். காளிகட்டத்திலுள்ள ஸ்ரீ காளிதேவியின் ஆலயத்துக்குச் செல்ல வெவ்வேறான பலவகை வழிகளிருக்கின்றன. அவ்வாறே பகவானுடைய வீட்டுக்குச் செல்லும் வழிகளும் பல பலவையாம். ஒவ்வொரு சமயமும் பகவானை நோக்கிச் செல்வதற்கான ஒவ்வொரு மார்க்கமேயன்றி வேறில்லை.

3. ஒரே தங்கத்தினால் வெவ்வேறு வடிவமும் பெயருமமைந்த பலவகை நகைகளைச் செய்வதுபோல், ஒரே பகவானை வெவ்வேறு தேசங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு நாமரூபங்களால் உபாஸிக்கின்றார்கள். சிலர் அவனைத் தந்தையென்றும், சிலர் தாயென்றும், சிலர் அவனை நண்பனென்றும் சிலர் நாயகன் என்றும், சிலர் அவனைத் தங்கள் ஹிருதயகமலத்தில் விளங்கும் மாசிலாமணியென்றும், சிலர் ஜகன்மோகன பாலகோபாலனென்றும் இவ்வாறு பற்பல பாவனைகளாலும் பிரகாரங்களாலும் உபாஸித்தாலும், இப்பலவகைப் பிரகாரங்களாலும் உபாஸிக்கப்படுகிற பகவான் ஒருவரேயாவர்.

# தமிழ்த்தொகைநூல்

# TAMIL ANTHOLOGIES

முற்காலத்தில் மகம்மதியர்கள் காணும் ஒவ்வொரு கடிதக்கிழியையும் தங்கள் தெய்வமாகிய "அல்லா"வின் பெயரடங்கி யிருத்தல் கூடுமென்று எண்ணி அவைகளை யொன்றுசேர்த்துவைப்பார்கள். இத்தகைய குணம் உலக சரித்திரத்தை ஆராய்ந்துணர்ந்தால் ஒவ்வொரு சாதியாரிடமும் இருப்பதாக எளிதில் தெரியலாம். சிலாசாசனப் பரிசோதகர்கள் தங்கள் பார்வையிலகப்பட்ட பழைய எழுத்துக்களடங்கிய துண்டுக்கடிதங்களையும், சிலைகளையும் மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாக்கிறார்கள். இத்தகைய செயல் பாஷையின் இளமையில் எளிதில் செய்து முடிக்கலாகும். பாஷை விருத்தி யடையுந்தோறும் இத்தகைய பாதுகாப்பிற் கிடமில்லாமற்போகின்றது—அசாத்தியமாகின்றதென்றே சொல்லலாம். அச்சு யந்திரசாலையில்லாத "அலெக்சாண்டர்" காலந்திலேயே, நூற்பரப் பதிகமாயிருக்கின்றதென்று காப்பாற்றச் சக்தியிலராயினரெனத் தெரியவருகிறது. தற்காலத்திலோ அளவிறந்த அச்சுயந்திரசாலைகள் மூலைக்குமூலை ஏற்பட்டு நாழிக்குநாழி முற்காலத்திய இருபது வருஷத்திய நூற்பரப்பு போன்றவைகளை உற்பத்திசெய்கின்றது, முற்காலத்தில் அசாத்தியமாயினது இக்காலத்தில் மிகவும் சாதாரணமாயினது.

நாகரிகமுள்ள நாட்டினில் ஓடும் ஒருபெரிய நதிக்கு அணைகளும் வாராவதிகளும் எப்படி முக்கியமாகின்றதோ, அப்படியே நாகரிகர்களால் பேசப்படும் பாஷையிலெழுதப்படும் நூல்களைப் பாதுகாக்கும் பொருட்டு இது நல்லது இது பயனற்றது என்று ஆராய்ந்தெடுத்துத் தொகுத்துவைப்பது முக்கிய கடமையாகிறது. இது நல்லது இது பயனற்றதென்று ஆராய்தல் மிகவும் கடினமான செயல் என்பீர்கள். தமிழர் நூலாராய்ச்சியென்றால் குற்றங்கூறுதல் என்று நினைக்கிறார்கள். நம் பண்டிதர்களிடம் குடிகொ

ண்டிருக்கும் இவ்வகையான எண்ணம் ஒழிந்தபிறகே பாஷை சீர்ப்படும். முற்காலத்தில் ஒரு புத்தகம் வெளியாகுமானால் அதைப்பற்றி தமக்குள் அநேகர் பலவாருகப் பேசுவார்கள். இக்காலத்தில் அச்சுயந்திரசாலையி னுதவியால் ஆயிரக்கணக்கான புத்தகங்களை வெளிப்படுத்தி எவரும் எளிதில் படித்தறியும்படி நூலாசிரியர்கள் செய்கிருர்கள். முற்காலத்தில் ஒரு புலவன் ஒரு நூலையியற்றியதும் அரசன் முன்னமாயினும் பண்டிதர்கள் முன்னமாயினும் அரங்கேற்றுவது வழக்கமாக விருந்ததாகத் தெரிகிறது. அவ்விதம் ஒன்று கூடியவர் அந்நூலிலுள்ள குற்றங் குணங்களை வெளியிட்டுச் சமாதானம் நூலாசிரியரிடம் கேட்டுத் தெரிவார்கள். இலக்கணவாராய்ச்சியுள்ளவர் சிலரேயாவார். அச்சிலருள் தாம் ஒருவர் என்று நினைந்து கர்வமடைவாராயினும், அவர் தாம் ஒருநூலின் மேன்மையைப் பற்றியும் தாழ்மையைப்பற்றியும் அபிப்பிராயப்படுதல் நேரிது. இவ்விலக்கண முணர்ந்தவர்கள் சாதாரணமாக ஒரு நூலையும் மேலானதென்று சொல்லுவதில்லை. இதனுற்றான் அவர்களை ஒருவாறு தாழ்மையாகக் கவிகள் சொல்லுகின்றனர் எனினும் அவர்களே ஒரு நூலின்மேன்மையையும் தாழ்மையையும் சீர்தூக்கிச் சொல்ல வல்லவராகின்றனர். இதுபற்றியே "பில்கணீய"த்தில்,

இலக்கண முணர்ந்தோன் றன்னை
யேயுநற் றந்தை யென்றுங்
கலைகளி லான்ற தர்க்கங்
கற்றவன் ப்ராதா வென்றும்
நலமிகு வேதங்கற்ருேன்
நண் ணலும் புலையனென்ன
மலைவொடு நடுக்க மெய்து
மாண்புறுங் கவிதைக் கன்னி.
மதியினை யளிக்குநல்மீ
மாஞ்சையிற் றேர்ந்தோன் றன்பால்
வதிதராள் அலியே யென்று
மகிழ்வுடன் ருனே சென்று
மதிதருங் காப்பியத்தின்
மாண்புறு சுவையைக் கண்டோன்
இதமுற வடைகிற் பாளா
லெழிலுறுங் கவிதைக்கன்னி

என்று சொல்லியிருக்கின்றது.

இப்பொழுது ஒரு புத்தகந்தான் சிறந்ததென்று வேறுபடுத்தி எடுத்துரைத்தல் முடியாத காரியம். முற்காலத்திலோ இந்நூல் சிறந்ததென்று எடுத்துச் சொல்லுதல் சுலபமான தொழில். ஜனங்கள் எல்லோரும் ஒரே பாஷையைப் பேசிவந்ததால் அறிவினை வேருன வொன்றுடன் ஒற்றுப்பார்க்க முடியாமற் போயிற்று. ஆகவே முற்காலத்திய நூல்களில் பேறுங் காப்பியத்தையும் சிறுகாப்பியத்தையும் சிறப்பித்துச் சொல்லுதல் வழக்கமாயிருந்தது. அப்புத்தகங்களிலுள்ள சிறந்த விஷயங்களை மாத்திரம் எடுத்துத் தனியே தொடுத்து வெளியிடல் அருமை. ஜயின முனிவர் எண்ணாயிரவர் பஞ்சத்தினுற் பீடிக்கப்பட்டு சுதேசம்விட்டுப் பாண்டியநாட்டை யடைந்து அரசனுல் நன்கு பாராட்டப் பெற்ருர்கள். பஞ்சமொழிந்தும் பன்முறை வேண்டியும் அரசன் தம் நாட்டையடையச் செய்யாமையால், அவர்கள் தங்கள் ஆதனத்தடியில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வெண்பாவை எழுதிவைத்துச் சொல்லாமற் போயினர்கள். அப்பாடல்களில் ஒன்ருேடொன்று கருத்து முரணுவதைக் கண்ட பாண்டியன், அப்பாடல்களை வையை யாற்றில் எடுத்தெறிய உத்தரவிட்டான். அவ்விதம் எறியப்பட்ட பாடல்களில் நானூறுமாத்திரம் ஆற்றில் எதிரேறிக் கரைசேர்ந்தனவென்று அரசன முன்னம் புலவர்களால் கொணரப்பட்டது. இச்சரித்திரத்தில் பின்னர்க் கூறியதை முழுவதும் நம்பாமல் எண்ணாயிரம் பாடல்களில், நானூறு பாடல்களே சிறப்பினவென்று தொகுத்தனர் என்று கொள்ளுவாம். பிற்காலத்தில் பதுமனர் என்ற புலவர் இந்நானூறு பாடல்களை பால், அதிகாரங்களாக வகுத்தனராம். எங்ஙனமாயினும் இந்நூல் ஒருவர் செய்ததன்றென்றும், சிதறின பாடல்களா லமைக்கப்

பட்டதென்றும் விளங்குகின்றது. ஆயிரக் கணக்கான சமணமுனிவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாடலை வரைந்து வையைபிற் போட்டபொழுது நானூறு பாடல்களே எதிரேறிவந்ததெனக் கூறுவது உவமை வகையினால் ஆலோசித்தால், அப்பெருங்கூட்டத்துள் இந்நானூறு பாடல்களே சிறந்ததென்று தொகுத்து நாமனைவரும் படித்து ஆனந்திக்கும்படி வெளிப்படுத்திபிருக்கின்றனர் என்றுணர்வோம்.

கடைச்சங்கப் புலவர்கள் அருளிச்செய்த எட்டுத்தொகையும் சிறந்த நூல்களின் பாகங்களெனத் தெரிகின்றது. அவ்வெட்டுத் தொகையாவன:—

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்தபதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிநதார் சொல்லுங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத்தொகை."

இவைகளைத் தொகுத்தவர்முறையே பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி நற்றிணையையும்; பூரிக்கோ குறுந்தொகையையும்; புலத்துறை முற்றிய கூடலூர்க்கிழார் ஐங்குறுநூறையும்; உருத்திரசன்மன் அகநானூறையும், என்று விளங்குகின்றது. மற்றையதொகைகளைத் தொகுத்தார் இன்னாரென்று விளங்கவில்லை. பலவிஷயங்களைப்பற்றிய ஒரு தொகுதி சாதாரணமாகச் செய்வது அருமை. இக்குறையை ஒருவாற்றான் நீக்கற்பொருட்டே பாலவனத்தம் ஜமீன்தாரராகிய பாண்டித்துரைத்தேவரும், பன்னூற்றிரட்டு என்ற தலைச்சாத்திட்ட ஒரு தொகுதியை அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றனர். இந்நூல் அவ்வளவாக விரிவினையுடைய தன்றாயினும், முற்காலத்திய அரிய பெரிய விஷயங்களை நிரல்படக்கோவையாக வெளிப்படுத்துகின்றது. தற்காலத்திய புலவரின் சீரிய பாடல்களையும் ஒன்றுசேர்த்திருப்பின் மிகவும் மேன்மையதாகும். அன்றியும், அருமையான வசன காவியங்களின் சுருக்கங்களும் மேற்கொண்டிருந்தால் நலந்தரும். இத்தகைய தொகுதி நம் தமிழில் ஒன்று அச்சிட்டு வெளிவரல் வேண்டும். இத்தகைய ஒரு புத்தகத்தை நாம் பார்த்தவுடன் தமிழரின் புத்திவிசாலத்தின் மேன்மையையும், அறிவினையும், நாகரிகத்தையும் கண்ணாடியிற்போலக் காணலாம். அப்பொழுதுதான் வெளியாகு மொவ்வொரு நூலும் ஆங்கில உயிர்நூற் புலவரான "டார்வின்" (Darwin) என்பவரின், தகுந்தவை தங்கி நிற்றல், (survival of the fittest) என்ற விதியை அநுசரித்து நிற்கும். அதுபோலவே இரசமமைந்த எவையும் கண்ணாடியைக் கீறும் வைரத்தையொப்ப தான் அழியாமல் நிலைநிற்கும். பலவகைப் புஷ்பங்களினின்றும் சிறந்த புஷ்பங்களை எடுத்துத் தொடுப்பதையொப்ப அநேக புத்தகங்களினின்றும் சிறந்த பாகங்களை ஒன்று சேர்த்தல் சிறப்பான செயல். அப்படிச் செய்வதால் படிக்குநர்க்கு இனியவைகளை எடுத்துக்காட்டலுடன், எழுதும் புலவர் பெருமான்களின் சிறப்பினை விளம்பரஞ் செய்வதை யொக்கும்.

"தொன்று தோன்றிய யாவவை தூயன
வின்று தோன்றிய யாவவை தீயன"

என்று இக்காலத்திற்றோன்றும் நூல்களை இகழாமல் ஆராய்தல் வேண்டும்; அன்றியும்

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல காலவகையி னானே"

என்று எண்ணி பழைமையானவற்றை ஒழித்திடாமலும் இரண்டிலும் முக்கியமானவைகளைச் சேர்த்துத் தொகுத்தல் சீரிது.

சருக்கை-இராமசாமி ஐயங்கார், B. A.

## பெண் கல்வி

## THE EDUCATION OF WOMEN

ராமகிருஷ்ண விவேகானந்த ஸபையிலிருந்து கொண்டு சென்ற சிலவருஷங்களாக நமது நாட்டிற்கு வெகுவிதமாக உழைத்துவரும் நிவேதிதா அம்மை (Sister Niveditta) இவ்விஷயத்தைப்பற்றி மாடர்ன் ரிவ்யூ என்ற பத்திரிகையில் எழுதியிருக்கும் ஸங்கதிகளை ஒருவாறு நமது பத்திரிகைவாசிப்போரது நன்மைக்காகத் தொகுத்துக் கூறுவோம்:—

இப்பொழுது நமது தேசத்திற்கு ஆழ்ந்ததாயும் சிறந்ததாயும் உள்ள கல்வியே அவசியம். இவ்விஷயத்தில் நாம் அந்நியரது ஸஹாயத்தைப் பெரிதாக எண்ணக் கூடாது. நாமாகச் செய்யும் முயற்சிகளாலேயே நமக்குக் கூடியசீக்கிரத்தில் இம்மாதிரியான கல்வி விர்த்திக்கும்.

இக்காலத்தில் நாம் இந்த கல்வியின் ஸ்வரூபத்தை அறியும்படியான நிலைக்குவந்துவிட்டோம். ஏனெனில் நம்தேசத்தாருக்கு நமதுபழைய மத விஷயநோக்கத்தையும், ஜாதீய நோக்கத்தையும் அறிந்து, அதன்படி வெளியில் நடந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் வந்திருக்கிறது. ஆகையால் ஒவ்வொரு குடும்பமும் ஒவ்வொரு வீட்டார்களும் இந்த ஆவலைப் பூர்த்திசெய்வதற்கு வேண்டிய ஸஹாயத்தைச் செய்யத் திறனுடையவர்களாக இருத்தல்வேண்டும்.

கூடிவாழ்தலே குடும்பத்திற்கு பலம்; இம்மாதிரியான குடும்பங்களே நகரவாழ்க்கைக்கு பலம்; இம்மாதிரியாக சேர்ந்த நகரவாழ்க்கையே நமது இந்திய ஜாதிக்கு பலம். இது எந்த ஜாதியார் விஷயத்திலும் உண்மைதான். நம்மிடத்தில் முன் குறிப்பித்த நான்கு விஷயங்களும் இருக்கின்றன. நமக்கு மேலும் தொன்றுதொட்டு சிறந்த தர்மங்களும் இருக்கின்றன. ஆனால் இவைகளை நாம் நடுவே மறந்துவிட்டோம். இப்பொழுது இவைகளின் சிறப்பை நாம் நன்றாக அறியவேண்டும்.

ஜாதீய மனக்கிளர்ச்சி என்பது, வெளியில் பொதுவாகக் காணப்படும் விஷயங்கள். அந்த ஜாதியைச் சேர்ந்த ஒவ்வொருவன் மனத்திலும் ஸதா குடிகொண்டிருப்பதுவே. ஆகையால் இதற்கு ஆவசியகமாகிய நம் தேசாபிமானம், நம் ஜாதி அபிமானம் என்பவை நமது மனப்பூர்வமாக நடக்கும் விஷயங்கள் ஆகவேண்டும். இவைகள் நமது மனத்தை ஸதா கவர்ந்துகொண்டே இருக்க வேண்டும். இவ்வாறு இவ்வபிமானங்கள் நமது மனத்தில் மாறாது குடிகொள்ளும்படிசெய்வதே நமது கல்வியின் நோக்கமாக இருக்க வேண்டும். 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்பது உண்மையாயினும் நாம் இப்பொழுது குறிப்பிட்ட கல்விக்கு இவைகள் மாத்திரம் இருந்தால் போதாது. இவைகளால் வரும் ஞானத்திற்கு மேல், வேறுவிதஞானங்களும் நமக்கு ஆவசியகமாகும். இவைகளை பூகோளசாஸ்திரம், சரித்திரம், பிரகிருதிசாஸ்திரம் என்பவைகளால் உண்டாகும் ஞானங்களுள் அடக்கலாம். இவைகளின் ஸ்வரூபம் முறையே பிரபஞ்ச உணர்ச்சி, காலஉணர்ச்சி, உள்ளது உள்ளவாறு காணும் உணர்ச்சி ஆதலின், இவைகளிலிருந்துதான் நமது ஜாதீய நோக்கத்திற்கு ஸஹாயமான கல்வி என்பது உண்டாகும்.

எங்கெங்கெல்லாம் கல்விபயிற்றத் தருணம் வாய்க்குமோ அங்கங்கெல்லாம் முற்கூறிய விஷயங்களிலேயே பயிற்சி செய்யவேண்டும். அநேகவிஷயங்களில் நாம் ஒரு ஒழுங்காகக் கற்காது பெரும்பாலும் நமக்குச் சுற்றுமுற்றிலும் உள்ள விஷயபேதங்களிலிருந்து நாம் ஞானத்தை அடைகிறோம். ஆனால் ஒழுங்காக எழுதப் படிக்கத்தெரிந்துகொள்ளுதல் முற்கூறிய விஷயங்களை புத்தகங்கள், பத்திரிகைகள் மூலமாக

அறிந்துகொள்ள ஸஹாயமாக இருக்கும். இதனால் ஸகலவிஷயங்களுக்கும் பலமாக இருக்கும் குடும்பத்தவர்களுக்கு ஞானம் விருத்தியாகும். ஆகையால் எல்லாக்கல்விகள் மூலமாகவும்நமது வீட்டிற்கு ஆதாரமாகவும் உள்ள ஸ்திரீகளும் அவர்கள்மூலமாகக் குடும்பங்களும் ஞானத்தை அடைந்து, நம் ஜாதீயவிஷயங்கள் நிலைபெற வேண்டும்.

ஸகலவித கல்வி பயிற்றுவதற்கும், ஒவ்வொருவரும் தமது திறத்தாரது பொதுநன்மைக்கு ஸஹாயமாவதும், அதன்மூலமாக ஜாதீயநோக்கத்தைப் பூர்த்திசெய்ய ஸஹாயம் ஆவதுமே நோக்கமாக இருத்தல்வேண்டும். அந்தந்த ஜாதிய சிறப்பையே அவர் அவர்கள் பின்பற்ற வேண்டும். ஆகையால் நமது பெண்களுக்கு நமது பாரதஜாதிக்குத்தக்கவாறு நடப்பதற்கு வேண்டிய கல்வியைக்கொடுக்காது மற்றைய ஜாதியாரைப்போல நடித்து அவரது ஸமூகத்திற்கு உபயோகப்படும்படி கல்வி கற்பித்தல் முழுமூடத்தனமே ஒழிய வேறில்லை. பாரதஜாதியிற்பிறக்கும் சிறந்த புருஷன் ஒருவன்கூட இம்மாதிரியான பெண்ணை விவாஹம் செய்துகொள்ள ஒருநாளும் விரும்பமாட்டான்.

நமது பெண்களுக்கு நமது ஜாதிக்குத்தக்கபடி நடந்துகொள்ள வேண்டியதற்கு அவசியமான கல்வியைபயிற்ற ஒவ்வொரு வீட்டிற்கும் சக்தி உண்டு.வீட்டிற்கு எஜமானியாகவாய்க்கும் அம்மையே இதை ஒரு சிறந்த கடனாகக்கொண்டு தொழில்செய்யவேண்டும். இவ்விதக் கல்வி ஒவ்வொரு வீட்டிலும் குழந்தைகளுக்கு பயிற்றுவித்தால் அவர்களுக்கு ஞானம் விருத்தியாக, சக்தியும் விருத்தியாகும். ஆகையால் பெண்களுக்குக் கல்வியை வீட்டில் பயிற்றத் தொடங்கவேண்டியது அவசியம்.

சிறந்த கல்விக்கு மூன்று முக்கிய பாகங்கள் உண்டு. அவையாவன: முதலாவது, குழந்தை பருவத்திய கல்வி; இரண்டாவது தீர்த்தயாத்திரை; மூன்றுவது, தனக்கு ருசித்தவழியில்ஒருவன் தொழில் செய்யவேண்டியதற்கு ஸஹாயமான கல்வி ஆகிய இவைகளே. ஸாவித்திரியைப் போன்ற பெண்மணிகளும் இம்மூன்றுவிதக் கல்விகளைப் பயின்றே இருக்கிறுர்கள். நாம் இறக்கும் வரையில் கற்பவர்களாகவே இருக்கிறோம். இத்தொழிலுக்கு முடிவேகிடையாது. இப்படி இருப்பினும், நமது வாழ்க்கைத்தொழிலில் அமரும் முன்னர் தீர்த்தயாத்திரை நமது மனத்தை ஒழுங்குபடுத்தி விசாலப்படுத்திவிடும். இந்த யாத்திரை நம் பரதகண்டத்திற்குள்ளே தான் செய்யவேண்டும். பெண்களுக்கு அந்ய தேசயாத்திரை நல்லதல்ல. இவ்விதயாத்திரை ஒருநோக்கமும் இன்றி ஏற்படுவதால், அதிக போஜனம், அஜீர்ணம் எவ்வாறு தேகத்திற்குத் தீங்கு விளைவிக்குமோ அவ்வாறு நமது மனத்திற்கு இது தீங்கு விளைவிக்கும்.

பரதகண்டத்து உள்ளும், நோக்கம் இன்றி ஒருவன்யாத்திரை செய்தால்,அவனுக்கு சிறந்த ஞானம் உண்டாகாது. கேவலம் விசித்திர விஷயங்களைப்பார்க்க வேண்டும் என்ற ஆவலும், ஸதா மாறுதலையே அபேக்ஷிக்கும் பேராவலும் மேலித்திக்கும். குழந்தைப்பருவத்திற் கற்கும் கல்விக்கு நமது தேசாபிமானம் முதலிய நற்குணங்களை உண்டாக்கத்தக்க யாத்திரை முடிவில் அத்யாவசியகம். ஒருவன் யாத்திரைசெய்து அதிலிருந்து சிறந்த பயனை அடைய முன்னதாகவே நல்லவித கல்விப்பயிற்சி அடைந்திருத்தல் வேண்டும். சித்தூர், (ராஜபுதனம்) காசி, உச்சினிமாநகர், ரெய்கார்கோட்டை, ஆனைத்தீவு, காஞ்சீபுரம் முதலிய இடங்களைக்கண்டு ஆநந்திக்க முன்னதாக எவ்வளவு சிறந்த கல்விப்பயிற்சி அவசியம் இருத்தல்வேண்டும்? இந்தியாவில் உள்ளவிசேஷ ஸ்தலங்களில் இவைகள் எவ்வளவு?

இவ்விதக் கல்வியை ஒவ்வொரு வீட்டாரும் தாமே பயிற்றத் தொடங்கவேண்டும். இதனுல்

நமது ஜாதீய சிறப்பை அடைய ஒவ்வொருவனும் தகுந்தவனுவான். இத்தொழிலை ஒவ்வொருவரும் மனதார ஸ்வயநயம் கருதாது செய்தல்வேண்டும். கீர்த்தி முதலியன வரவேண்டும் என்ற எண்ணத்துடன் இத்தொழிலைச்செய்வதாற் பயனில்லை. இவ்விஷயத்தில் ஒவ்வொருவனுக்கும் தாய்நாடாகிய பாரத பூமியே மேல்! நான் எம்மாத்திரம்! என்றெண்ணம் வளரவேண்டும். இதனுல் தனது ஸுகம் முதலியவைகளைக் கவனியாது ஜாதீயச்சிறப்பிற்கு உள்ளபடி பாடுபடும் திறன் ஒவ்வொருவனுக்கும் வரும்.

பெண்களுக்கு இவ்விஷயங்களில் ஒன்றும் செய்ய முடியாதாயினும், அவர்கள் அவரது மனப்பூர்வமான எண்ணம், கடவுளைத்தியானித்தல் முதலிய சாந்தத்தொழில்களால் புருஷர்கள் தொழில்செய்ய வேண்டியதற்குத்தக்க ஸஹாயம் செய்யவேண்டும். இம்மாதிரி ஒவ்வொரு வீட்டிலும் சிறந்த எண்ணங்கள் பெண்களுக்கு ஏற்படுமாகில் இவைகளால் சிறந்தகாரியங்கள் நடக்கும் என்பதற்கு ஐயம் இல்லை. திடீரென்று சிறந்த தொழில்களைச் செய்யப் புகுவதைவிட உறுதியாக நல்ல எண்ணங்களைக் கடைப்பிடித்தலே சிறந்தது. பெண்கள் இந்த எண்ணங்களை உறுதிப்படுத்தவேண்டும். அப்பொழுது புருஷர்கள் இவைகளால் தூண்டப்பட்டு தொழில் செய்வார்கள். ஆதலால் பெண்களுக்குக் கொடுக்கவேண்டிய கல்வி, நன்ருக தொழில் செய்தல், எவ்வளவு கஷ்டம் வந்தாலும் தைரியமாக அனுபவித்தல், சிறந்த விஷயங்களில் பற்றுேடிருத்தல், தமது சுற்றுமுற்றும் உள் விஷயங்களை மறந்து மேல்நிலையை அடைதல், பெரிய பொதுவிஷயங்களை அறிந்து மனம் உருகுதல், ஜாதீய சிறப்பை எண்ணி அசைவற்றிருத்தல் ஆகிய சிறந்த விஷயங்களை உண்டாக்கத்தக்க தாக இருக்கவேண்டும் என்பது யாவரும் அங்கீகரிக்கவேண்டிய விஷயமே.

ஆ. சீ. க.

## உலக வாழ்க்கை

## WORLDLY LIFE

பண்டையகாலந்தொடங்கி அனைவரும் மானிட வாழ்க்கையின் அளவற்ற துன்பங்களைக்குறித்து முறையிட்டு வந்திருக்கிருர்கள். பேரின்பத்தையே தேடும் ஞானிகள் உலகவாழ்க்கையை 'வீண் மாயை' என்று வெறுத்திருக்கின்றனர். பெரியோர் சரீரத்தின் அற்பநிலைமையையும் வாழ்க்கையின் கஷ்டங்களையும் குறித்து 'வானிடுவில்,' 'மலையாடுமஞ்சு,' 'புன்னுனிமேனீர்' என்றும் 'பிறப்பெனும் பெருங்கடல் தீவினைப்பிறவி வெஞ்சிறை' என்றும் பலவாறு உவமித்திருக்கின்றனர். மானிடகதி துன்பமயமானது, இம்மையில் அச்சத்தையும் துக்கத்தையும் தருவதென்பதற்கு மற்றெல்லா விஷயங்களைவிட பிரத்தியக்ஷமாய், அதன் உண்மையை ஊறு ஓசை முதற் பொறியாவையும் இடைவிடாது மனதில் பதியச்செய்வதால், மேற்கோள் காட்டி சந்திப்பதே அனுவசியம்.

வாழ்க்கையை ஊன்றிநோக்கின், நிறை முறையின்றி பாடுபடுதல், வரையின்றி உழைத்துவருதல், எண்ணம் நிறைவேருமல்போதல், மனக்குழப்பத்தால் துக்கமடைதல், இவைகளையன்றி மற்றெதை அனுபவிக்கிருேம்? பூர்வ சரித்திரங்களைப்படித்தால் சண்டை சச்சரவு, தோல்வி, அக்கிரமங்கள், துர்தசை இவைகளையன்றி மற்றெதைக் காண்கிருேம்? ஒருவருஷம் பஞ்சம் வருகிறது; மற்றொரு வருஷம் பூகம்பம் வருகிறது. யுத்தங்களினுலும் தொத்து வியாதிகளினுலும் தேசங்கள் நிலைகுலைந்து இராஜாங்கங்கள் அழிந்துவிடுகின்றன. கொடுங்கோன்மன்னருடைய கொடிய கிருத்தியங்களினுலும் வெற்றியரசர் வெறியினுலும் உலகத்தின் சமாதானம் கெடுகின்றது. கேட்டின் விகாரங்களே எங்கும் நிறைந்திருக்கின்றன. நூதன சுகவழிகளால் வாழ்க்கையை இனிமையாக்குவதன்றி, சிலஜனங்கள் போர்க்களத்தில் வெற்றி கொள்வதிலும், பிறருக்குத் துன்பம் விளைவிக்கும் சக்தியிலும், சக்தி அடைந்தோர் என்னும் அகங்காரத்திலும் ஆனந்தம் அடைகின்றனர்.

உலகவின்பம் எவ்வளவென்று வெளியில் காணப்படுகிறதோ அதைவிட உண்மையில் மிகக்குறைவே பொதுஜன சௌக்கியம், அதாவது பொதுஜன கஷ்

டங்கள் அற்ப நிவாரணையான சமயங்களில், ஜனங்கள் திருப்தியடைந்து சுகமாய் வாழ்வதாய்க் காணலாம். எத்திசை நோக்கிலும் ஜயம், சம்பத்து, கொண்டாட்டம், கோலாகலம், பொதுஜனபயம், அபாயம் ஒன்றுமில்லை; முறையிடக் குறைகளேயில்லை. இத்தகைய பொதுஜன சமாதானத்தினல் பிரதி மனிதனுக்கும் உண்டாகும் நன்மை மிகச் சிறிதே. அதிருப்தி, வருத்தம், பகை முதலியவை கேடு இயற்றியவாறே யிருக்கின்றன; இவைகளால் நாசம் வந்துகொண்டே யிருக்கிறது; இவ்வகைத் துன்பங்களுக்கு இரையாய் நின்றுரை சுடுகாடு இழுத்த வண்ணமாயிருக்கிறது.

ஒருவன் ஒரு விநோத நாடகச்சபையில் நுழைகிறுன். அங்கிருக்கும் ஒவ்வொருவர் முகத்திலும் சந்தோஷமாகிய களையே காணப்படுகிறது. அவர் பிறரால் தாம் சந்தோஷப்படுவதையும் பிறரைத் தாம் சந்தோஷிப்பதையும் தவிர, வேறு நோக்கமில்லாதவர் போலவும், மற்றெந்த அலுவலுமில்லாதவர் போன்றும் உட்கார்ந்திருக்கின்றனர். இதைப் பார்ப்பவன் சகஜமாய் என்ன எண்ணக்கூடும்? பயமும் கவலையும் நீக்கப்பட்டு மனவமைதிக்கும் சந்துஷ்டிக்கும் பொருந்திய ஆனந்தாசிரமம் இதுவேயாகும் என்று நினைப்பான். கீழ்அந்தஸ்திலிருப்பவர் தங்களுக்கு எட்டாத ஆடம்பரம், விநோத விளையாட்டு, இவைகளைப்பார்த்து மேற்கூறியவாறே நினைந்தேங்குகின்றனர் என்று நாம் அறிதல் எளிது. ஆனல் இத்தகைய பிரபுக்களது உத்ஸவசபையில் கூடுவோரில், தன் அசமாதானத்தையும், தன் நேயர்களின் வாழ்க்கையை அரிக்கும் அவமானங்களையும் கஷ்டங்களையும் கணக்கிடுக்கிக் கூறமுடியாவதர் யாருளர்? அநேகர் ஒன்றுகூடி தாங்கள் அனுபவியாத ஆனந்தத்தை அனுபவிப்பதுபோல பாசாங்குசெய்து, எல்லாவிதக் கற்பனைகளையும் உபயோகித்து இவ்வாழ்க்கையை அலங்கரிக்க முயன்று, தங்கள் உண்மை ஸ்திதியை பிறரிடத்தினின்றும் மறைப்பதே உலகவாழ்க்கையின் உன்னத பதவியின் இயற்கையாயிருக்கிறது.

பிறர் கண்ணுக்கு உடனே புலப்படும் இன்பம் பொருளின் மேலது; இதுவும் பொய் இன்பமே. உண்மையில், இவ்வுலகின்கண் நாம் பார்ப்பதைவிட மிகக வறுமையுள்ளது. ஏனெனில் பெருஞ்செல்வம் படைத்தோர் பலர், தாம் பெற்ற பொருளினும் பெரியதோர் ஆசையுடையவர்களா யிருக்கிருர்கள்; அநேகர், பிறர் அனுபவிப்பதைப் பார்த்து தங்குறைகளைக் கணக்கிடுகிருர்கள். மற்றும் பலர் தம் வாழ்க்கைக்கு அவசியமான வஸ்துகளைத் தாம் வேண்டுவதை உலகவாழ்க்கையின் நிர்பந்தங்களாய் பிறரறியாமல் மறைத்து, தம் வாழ்க்கைக்கு இன்றியமையாத அநேக சுகசௌகரியங்களை விட்டொழித்து ஸ்திதிவந்தர் போலவும் மனமகிழ்ச்சியுள்ளவர் போலவும் நடிக்கிருர்கள்.

ஆயினும், அநேகர் தனவந்தர்களாயும், தரித்திரதசை யினின்று தூர நீங்கியவர்களாயும் இருக்கின்றனர். ஆனல் செல்வம் மனவமைதியை விலைக்கு வாங்க சக்தியற்றது. உன்னத பதவியடைந்த மானிடருக்கும், இல்வாழ்க்கையின் இனிமையை அழிக்கும் மனக்கிலேசம், சந்தேகம், பயம் முதலிய கேடுகளை நீக்கிவிடமுடியாது. இத்தகையோர் பிறரைக் காட்டிலும் எவ்வளவு உயர்ந்த ஸ்திதியிலிருக்கிருர்களோ அவ்வளவு தம் சிப்பந்திகளின் துரோகத்துக்கும், பெயரைக் கெடுப்போருடைய அவதூறுக்கும், எதிரிகளின் ஆக்கிரோஷத்திற்கும் ஆளாகின்றனர்.

துன்பம் உலகவாழ்க்கையினின்றும் பிரியாமலிருப்பது. மானிடர் அனுபவிக்கும் துன்பங்களில் தாரதம்மியம் காணப்படினும், அவருடைய நடவடிக்கைக்குத் தக்கவாறு அவை நேரிடுவதாகத் தோன்றவில்லை. நீதிசாஸ்திரம் பயின்ற நிபுணர் சிலர் ஒவ்வொருவர் வாழ்வும் அவரவர் கைக்குள்ளிருக்கிறதென்றும், பிற தெய்வங்களைவிட முன்ஜாக்கிரதையே பெருந்தெய்வமென்றும், ஆனந்தம் நற்குண நற்செய்கைகளின் தவறாத பலனென்றும் பெருமை பேசிப் பிதற்றுகிருர்கள். ஆனல் உண்மையிலோ, பரந்தாமன் எய்யும் பகழிகள் நல்லொழுக்கமேனும் வலிய கவசத்தையும் ஊடுருவிச் செல்லுமியற்கையன. துர்க்கிருத்தியங்களைச் செய்வதினலேயே நாம் எப்பொழுதும் கஷ்ட மனுபவிப்பதில்லை; அவைகளைச் செய்யாதிருத்தலினலேயே நாம் எப்பொழுதும் கஷ்டமனுபவியாம லிருப்பதில்லை. கீழோர் கிருத்தியங்களால் நன்மக்கள் நலியார் எனக்கூறற்பாலதோ? நோக்குங்கால், நல்லொழுக்கமே அதைக் கெடுக்கமுயலும் கொடிய பகையை உண்டாக்கக் கூடும். யோக்கியனயிருந்த மாத்திரத்திலேயே ஒரு மனிதனுக்கு துரோகம் செய்யும் போலிநண்பர், சொற்கேளாத மக்கள், கற்பற்ற மனைவி இரார் என்று கடவுள் ஏற்படுத்தவில்லை. அத்தகைய மனிதன் கவலையோடும் சிரத்தையோடும் ஈட்டிய பொருளை அவன் மக்கள் மிதமீறிச் செலவழித்து வீணுக்கு

வகையும் இவன் புத்திமதியை செவிகொடுத்துக் கேட்டு அனுசரியாது துர்வழியிலேயே நடத்தலையும், அவன் செய்த நன்றியை பிறர் மறத்தலையும், பிரத்தியக்ஷமாய்க் காணக்கூடும்; பொய்ப்பிராதுகளால் பெயர்கெட்டு பணமழிதல் கூடும், அநியாய தீர்ப்பினால் இறத்தலும் முடியும்.

நல்லோரும் தீயோரைப்போலவே, இயற்கையாய் சம்பவிக்கும் இடர்களுக்கு உட்பட்டவர்களே. நல்லவர் பயிரும், மழையின்றி வாடுகின்றது, அவர் கால்நடையும் வியாதிவந்து இறக்கின்றன; அவர் வீடுகளும் தீப்பிடித்து எறிந்துபோகின்றன; அவர் கப்பல்களும் கடலில் புயற்காற்றால் முழுகுகின்றன; மும்மையும் அறியவல்ல முழுஞானிகளாயினும் அவர் சரீரம் கணக்கற்ற கண்டங்களுக்கு உட்பட்டனவே; தேக அசௌக்கியத்தால் உண்டாகும் வலியை அவர் அனுபவித்தே தீரவேண்டும்; ஏதேனும் ஒரு நோய் அவரை வாதிக்கிறது. வாழ்நாளெல்லாம் அந்த நோயின் வேதனையினால் வருந்தி, சிலவேளை வலி பொறுக்கமாட்டாமல் பெருமூச்செறிந்தும் மற்றும் சிலவேளை எழுந்து நடமாட சக்தியற்று படுத்த படுக்கையாய்க் கிடந்தும் காலங் கழிக்கவேண்டி வருகிறது.

இவ்வாறு நல்லோருக்கும் தீயோருக்கும் கிரமவித்தியாசமின்றி துன்பம் விளைதலால், நீதிசாஸ்திரபண்டிதர் மறுமையுண்டென்று ஊகிக்கிறார்கள். ஏனெனின் இம்மையின் இன்பதுன்பங்கள் நல்லோர் தீயோராகிய இருதிறத்தோருக்கும் ஒரேவாறாய் அமைதலாலும் இறைவன் நிறையோனாதலாலும், மறுபிறப்பு உண்டென்றும், அப்பொழுது மானிடர் அவரவர் செயல்களுக்குத்தக்கவாறு பரிபாலிக்கவும் நிக்கிரகிக்கவும் படுவார்கள் என்று நிச்சயிக்கவேண்டி யிருக்கிறது.

மேலும் கடவுள் கருணைக்கடல் எனக் கூறப்படுதலாலும், இம்மை துன்பமயமானதாலும் மறுமை உண்டென்று ஊகிக்கக்கூடும். வாழ்க்கையின் இன்பமோ மிகச்சிறிது. மானிடவியற்கை, முன்பட்ட கஷ்டங்களை நினைத்து வருந்துவதும், இனிவரு மிடர்களை எண்ணி மனம் பதைத்து ஏங்குவதுமாயிருக்கிறது. மனிதற்கமைந்த ஐம்புலன்களேயன்றி அறிவுமுதலிய அதிசய சக்திகள் அவனை அடிமையாக்கி, நிறைவேறாத ஆசைகள் பல வாதிக்கின்றன; அவன் விலக்கு விற்கமுடியாத விபத்துகள் பல நேரிடுகின்றன. ற்றும் நேரிடப்போகாத ஆபத்துகளை அஞ்சி அயர்கிறான். இதையெல்லாம் எண்ணிப்பார்க்கில், கடவுள் அருள்மூர்த்தியாதலால் சகல சம்பூரண ஆனந்தங்கள் அடையலாவதோர் மறுமையுண்டென்றே சொல்லவேண்டியிருக்கிறது.

இதுநிற்க ஹிருதய சுத்திக்கும், மோக்ஷார்த்தமான சாதனங்களுக்கும் துர்திசையே முக்கிய மூலமாகும். சம்பத்தோ, சம்பூர்ணமின்றி கஷ்டங்களுடன்கலந்துவரினும், மதியைமயக்கி,மனதை இம்மையிலேயே இருத்தி, ஒருவிதப் பொய் உற்சாகத்தையும் மனப்பூரிப்பையும் உண்டாக்கி, தான் அனுபவிக்கும் செல்வம், செல்வாக்கனைத்தையும் அளித்த அண்ணலை அடியோடு மறக்கச் செய்யும். மானிடர் தாம் பொருளைத்தேடிவைத்த மாத்திரத்திலேயேஅது அழியாது என்ற நிச்சயமும் மனச்சமாதானமும் எள்ளளவும் உண்டாகாதென்னும் உறுதியையும் வேதாந்தவிஷயங்களையும், தமக்குத் துன்பம்நேர்ந்தகாலத்தன்றி அறிய மாட்டார்கள். மேலும் தமக்குப் பலித்த பாக்கியம், தமசாதுர்யம் தைரியம்முதலிய குணவிசேஷங்களால் அடைந்த பலனல்ல, பகவான் செயலே என்று எண்ணவும் மாட்டார்கள்.

இடைவிடாது நம்மைச்சுற்றி நின்று தூண்டும் சோதனைகளை விலக்கவேண்டின், யாக்கை நிலயாமையைப் பற்றியும், நம் கவனத்தைக் கவரும் பலவகையினிடங்களின் உண்மை இயற்கையையும் அவைகளின் சாசுவதமின்மையையும் சதாகாலமும் தியானிக்கவேண்டும்; அவ்வகைத்தியானம் துன்பமனுபவிப்போர்க்கே இயலும்; பொருளையே பெரிதாகவெண்ணி வாழும் புல்லறிவாளனுக்கு, யமனே, நீ எவ்வளவு கொடூரமுள்ளவனாகக் காணப்படுகிறாய்!

நம்வாழ்க்கை இன்பமயமாயும் ஒரேவாறாய் அமைதியும் சமாதானமு முள்ளதாயிருப்பின், வாழ்வின் இறுதியை உன்னலாற்றோம்,எமனோ இரவில் வரும் கள்ளனைப்போல் வந்து நம்முயிரைக் கவர்ந்து செல்வன்; அவன் வருமளவும் நாம் "யாக்கையாலாய பயன்கொள்ள" இன்றியமையாத சத்காரியங்களைத் தொடங்கியே யிரோம்.

இவ்வாறு இன்னல் இறைவன் சினக்குறியன்று; வீடடையும் வழி. பார் பாதம் தீண்டப்பொறாதமுனிகள் பலர் எவ்வளவோ இடர்பட்டிருக்கின்றனர். திருமூர்த்திகளுக்கும் ஒவ்வொரு காலங்களில் துயரடைய நேர்ந்ததென்று புராணங்கள் கூறுகின்றனவன்றோ?

கோ. சுந்தரமய்யர், B.A.

# விடாமுயற்சி
## PERSEVERENCE

நல்லகாரியங்கள் எவற்றில் நாம் பிரவேசிப்பினும் விடாமுயற்சி இன்றியமையாத சாதனம். தெய்வச்செயலால் ஸம்பவிக்கும் இடையூறுகளால், காரியத்தாழ்ச்சி உண்டாகும் பட்சத்தில் அது நம்முடைய குற்றமாக எண்ணப்படமாட்டாது. ஒருநாள் சோம்பலாயும், ஒருநாள் ஊக்கமாயுமிருத்தல் பலனைத்தராது. ஓர்காரியத்தை முடிக்கவேண்டுமாயின், மெய்வருத்தம், பசி, தூக்கம் முதலியவைகளைத் துறத்தல்வேண்டும். எறும்பு ஊறக் கல்லும் தேயுமாகையால், விடாது முயல்வோமாயின் முடியாதகாரியம் இல்லை. தாழாதுமுயல்வோர் விதியையும் வெல்லக்கூடும். சிலர்க்குச் சரீர அமைப்பே விடாமுயற்சிக்கு அனுகூலமாயிருப்பதாயில்லை. சிலர் சாதனங்கள் பலவிருந்தும் சோம்பற்பழக்க மிகுதியினால் ஒரு காரியத்திலும் ஊக்கம் வைப்பதில்லை. இப்படிப்பட்டவர்கள் உலகத்திற் முன்னுக்குவரமாட்டார்கள். செல்வவிருத்தியை உத்தேசித்தோ, கல்விப்பெருக்கை எண்ணியோ, எவன் இடைவிடாது முயலுகிறானோ அவனே புருஷன்; மற்றவர்களைத் திரணமாகத்தான் எண்ணவேண்டும். முன்யோசனையுள்ள எவர்க்கும் விடாமுயற்சியின் பயன் நன்றாய் விளங்கும். அவிவேகிகள் பிடித்தகாரியம் முடித்தலில் ஒரு காலத்தில் இருப்பதுபோல மற்றோர்காலத்தில் இல்லாமல் அவமானமடைவர். உலகத்தில் பெரிய காரியங்களைச் சாதித்தவர் அனைவரும் விடாமுயற்சியுடைவர்களா யிருந்திருக்கிறார்கள் என்பது பலதேச சரித்திரத்தாலும் நன்றாய் விளங்குகிறது:—கிருதயுகத்தில் மிகவும் தர்மமாய் ராஜ்யபரிபாலனஞ் செய்துவந்த ஸகர சக்கிரவர்த்தி இந்திரப் பட்டமடையவேண்டுமென்று அசுவமேதயாகஞ் செய்யத்தொடங்கினர். அதையறிந்து இந்திரன் அசூயை மேற்கொண்டு அந்த யஞ்ஞ குதிரையைப் பாதாளலோகத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த கபிலரிஷியின் பின்பக்கத்தில் ஒளித்துவைத்தான். இதனையறிந்து ஸகர சக்கிரவர்த்தியின் அறுபதினாயிரம் மக்களும் பூமியைப் பறித்துப் பாதாளத்திற்குச்சென்று கபிலரிஷியின் ஆசிரமம் புகுந்தனர். அவர்களுடைய சந்தடியைக்கேட்டு யோகநிஷ்டையிலிருந்து தபசி விழித்துக் கோபத்துடன் அவர்களைநோக்க அந்த அறுபதினாயிரம்பேரும் சாம்பலாயினர். அச்செய்தியைக்கேட்டுச் சக்கிரவர்த்தி துக்கம் மேலிட்டு மனம்புழுங்கி மாண்டனர். பின்பு சக்கிரவர்த்தியின் பேரனான அம்சுமந்தனுக்கு பட்டங்கிடைத்தது. அந்த அம்சுமந்தன் தன் சிற்றப்பன்மார் அநியாயமாய் மரித்துப்போனமையின், அவரது நீறை நீரிற்கரைத்து அவர்களுக்கு நற்கதி யுண்டாக்கவேண்டுமென்று எண்ணங்கொண்டு பிரயத்தனப்பட்டான். அச்சமயத்திற் கருடன்தோன்றி "அரசனே! தேவகங்கையைக்கொணர்ந்து அதனில் அந்தச் சாம்பலைக் கரைத்தால் உன் பிதுருக்களுக்கு நற்கதி வாய்க்கும்" என்று சொல்லிப்போயினன். அம்சுமந்தனும் அவன் புதல்வன் திலீபனும் கங்கையைக் கொண்டுவருவதற்கு பெருமுயற்சிகள் செய்தார்கள். ஆயினும் அவர்களுடைய எண்ணம் கைகூடவில்லை.

கடைசியில் திலீபனுடைய வம்சத்தில் உதித்த பகீரத மகாராஜர் சிறிதுகாலம் அரசுபுரிந்து பின்னர் ராஜ்யபாரத்தைத் தன் மந்திரிகளின் வசம் ஒப்புவித்துத் தம் முன்னோர்களுக்கு நற்கதி உண்டாக்கவேண்டுமென்று பிரம்மாவைக் குறித்து தவஞ்செய்தார்கள். பிரம்மா பிரத்தியட்சராகி "உனக்கு இஷ்டமான வரனை கேட்டுக்கொள்" என பகீரத மகாராஜர் "தேவகங்கையைப் பூமியில் விடவேண்டும்" என்று பிரார்த்தித்தார். பிரம்மா "ஐயா! கங்கையை யான் பூலோகத்தில்விடின் அவள் மிக்க ஆரவாரத்துடன் வருவாள். பூலோகம் நாசமாய்விடும். அவளது வேகத்தைத் தடுப்பதற்கு ஈசுவரரல்லாது மற்றெவராலும் முடியாது. அவளைத் தரிக்குமாறு ஈசுவரரை வேண்

டிக்கொள்.'' என்று சொல்லி மறைந்தார். உடனே பகீரதர் ஈசுவரரைக்குறித்துத் தவம் புரிய அவர் பிரத்தியட்சராகி அரசரது இஷ்டப்படி கங்கையைத் தரித்துக்கொள்ள ஒப்புக்கொண்டார். பின்னர் பிரம்மலோகத்திலிருந்து அதிக ஆரவாரத்துடன் கங்கை வந்துகொண்டிருக்கையில், அவளுக்கு அவ்வளவு அகங்காரமாவென்று பரமசிவன் கோபமடைந்து தம் சடையினால் அவளைக்கட்டினர். ஒருதுளி நீரும் இப்புறம் வராதநாயிற்று. அப்போது பகீரத மகாராஜர் ஈசுவரரைக்குறித்து மறுபடியும் தவம் புரிந்து, பூலோகத்திற்கு கங்கையைத் தயவு புரிந்து அனுப்பவேண்டும். இல்லையெனின் தம் பிரயத்தனம் வீண்போகுமென்று முறையிட்டுக்கொண்டார். கருணாநிதியான ஈசுவரர் மனமிரங்கி பகீரதரின் பின்னரே செல்லுமாறு கங்கைக்குக் கட்டளையிட்டார். அரசர் பாதாள லோகத்திற்குப் புறப்பட்டு, ஜன்னு என்னும் ரிஷியின் ஆசிரமத்தின்வழியே போய்க்கொண்டிருந்தார். அவர் பின்னரே வந்துகொண்டிருந்த கங்கையானவள் ரிஷியின் ஆசிரமத்தின் மீது பரவிச் செல்வாளாயினள். பர்ணசாலையெல்லாம் மிதக்கலுற்றது. அதைக்கண்டு ரிஷி கோபமூண்டு கங்கையை ஆபோசனம் செய்து விட்டனர். பகீரத மகாராஜர் "ஸ்வாமி! அநேக வருஷங்களாய் எம் பிதுருக்கள் கதிகாணாது கிடக்கின்றனர். கங்கையைக்கொணர்ந்து அந்தமூலமாய் அவர்களது பிரேதத்தன்மையைப் போக்கவேண்டுமென்று எம் முன்னோர் வெகுஸாஹஸப்பட்டனர். எல்லாம் வீணாயிற்று. நான் ஒருமுறை பிரம்மாவையும், இரண்டுமுறை ஈசுவரரையும் குறித்து அநேக வருஷங்கள் கடுந்தவம் புரிந்து மிக்க பிரயாசைப்பட்டு இந்த தேவகங்கையைக் கொணர்ந்தேன்! கடைசியில் எனது சிரமம் பயன்படாதாயிற்றே! இப்போது என் காரியமெல்லாம் கெட்டுப்போயிற்று. இனி எனக்குக் கதியென்ன! தமது கிருபையினாலேயே நானும் எம் பிதுருக்களும் கடைத்தேறவேண்டும்' என்று அந்த ரிஷியை நமஸ்கரித்துத் தம் விருத்தாந்தத்தை யுரைத்துக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டனர். அந்த தபசியானவர் மனமிறங்கித் தம் காதின்வழியே கங்கையை வெளியிட்டனர். சந்தோஷத்துடன் பகீரதர் அந்தக் கங்கையை அழைத்துக்கொண்டுபோய், தம் பிதுருக்களின் சாம்பலின்மீது பாய்ந்தோடுமாறு செய்தனர். அதனால் ஸகர மகாராஜரின் அறுபதினாயிரம் மக்களும் நற்கதியடைந்தனர். தாம் செய்த மகாபிரயத்தினம் நடந்தேறியதென்னும் மனவெழுச்சியுடன் பகீரதர் பிதுருகாரியங்களை நிறைவேற்றித் தம் ராஜ்யத்திற் கேகிக் குடிகளைப் பாதுகாத்துச் சுகமாயிருந்தனர். எத்தகைய காரியமாயினும் அதனைப் பகீரத மகாராஜரைப்போல் சிரமப்பட்டுச் சாதிக்கவேண்டும். விடாமுயற்சியென்பது நமக்கு இருக்க வேண்டிய நற்குணங்களுள் முக்கியமானது. பெரும் பிரயத்தினங்களுக்கேப் பகீரதப் பிரயத்தினம்' என்று பகீரதர் செய்த விடாமுயற்சியை உதகரித்துச் சொல்வது வழக்கம்.

அதமர்கள் (கடைமக்கள்) இடையூறு நேரிடுமென்னும் பயத்தினால் எந்தக் காரியத்தையும் செய்யத் தொடங்கார்; மத்தியமகள் தாங்கள் ஆரம்பித்த காரியத்திற்கு இடையூறுவரின் அதனைக் கைவிட்டுச் சும்மாவிருப்பர். உத்தமர்கள் (மேன்மக்கள்) தாங்கள் மேற்கொண்ட காரியத்திற்கு எத்தனை விக்கினங்கள் அடிக்கடி நேரிடினும் அக்காரியத்தை நிறைவேற்றாது விடார்.

என். ஆர். ராகவாசாரி.

# உழவுநூல்

## AGRICULTURE

(முன்தொடர்ச்சி)

சரித்திரம் :—

18-ம் நூற்றாண்டின் இறுதியில்தான் ஒரு பயிரிக்குப்பின் வேறொரு பயிரையிடுவதனால் விளையும் பலனை பிரத்தியக்ஷமாய்த் தெரிந்து கொண்டார்கள். முதலில் தானியப்பயிர்களைப் (cereals) பயிரிட்டு அதற்குப்பின் கால்நடைகளுக்குவேண்டிய புல் அல்லது தட்டையை விளைவிப்பார்கள். கால்நடைகள் யதேச்சையாய்ப் புல் மேய்வதால் அவை போதுமானபடி உரத்தைப்போடும். அவ்வுரம் முதலில் தானிய விளைச்சலால் நிலத்துக்கு உண்டான நஷ்டத்துக்கு ஈடாகும். நிலத்தின் கழிவு நீரை வாங்கிக்கொள்வதற்கு வடிகால் கட்டியும் மற்ற சாஸ்திரியமான முறைகளை யநுசரித்தும் வந்தார்கள். ஆனால் அவையெல்லாம் முற்றுப் பெற்றவையாயிருக்கவில்லை. குழாய்களை வழிக்கால்களாக உபயோகிக்கவில்லை. ஆனால் அவற்றிற்குப் பதிலாக கல்லையும் புல்லாம்பற்றையும் பனைமட்டையையும் உபயோகித்து வந்தார்கள். வியவசாயிகள் வழக்கமாகப் பயிரிட்டு வந்ததைவிடப் புதிதாய் வேறுபயிர்களும் விளைவிக்கலானார்கள். 1750ஆ உருளைக்கிழங்கை வயல்களிலும் புதிதாய்ப் பயிர்செய்யதொடங்கினார்கள்.

1790ஆ ஒரு வகை மதுரமான கிழங்கை (Sweet Turnips) பயிர்செய்தார்கள். 1795ஆ மான்கோல்ட் (mangold) என்னும் கிழங்குப்பயிரையும் வசந்தகாலத்தில் பயிராகும் கோதுமை (Spring variety of wheat) ஒரு விதப்பயிரையும் உண்டாக்கினார்கள்.

1760ஆ பேக்வேல் என்பவர் கால் நடைகளை விருத்திபண்ணுமுறையைக் கண்டுபிடித்தார். அதனால் அவை புஷ்டிப்பையும் மேன்மையையும் அடைந்தன. 1777-ஆ (Bath and West Society of England) என்னும் ஒரு சங்கம் ஏற்பட்டு வியவசாயத்தை விருத்திபண்ணுவதென்ற முக்கிய எண்ணத்துடன் உழைத்துவந்தன. இது தவிரவும் பிரத்தியேகமாக 'வியவசாயச்சங்கம்' ஒன்று உண்டானது. 1794-ஆ வரையிலும் இங்கிலாந்து வேல்ஸ் (England and Wales)ுள்ள சாகுபடி நிலத்தில் பாதிக்குமேலே வேலியால் அடைக்கப்படாமல் வெளியாய்க்கிடந்தன. ஸ்காத்லந்து (Scotland) தேசத்திலும் பெரும்பாலும் அப்படியேயிருந்தது. 1882-ஆ வரையிலும் இவ்வாறேகிடந்தன. இப்பொழுது முற்றிலும் மாறிப்போய்விட்டன. ஆகையால் முன்பு எப்படியிருந்தன வென்பதை அறிந்துகொள்வது அரிதாய்விட்டது. ஜனங்கள் பரக்கக் கிடக்கும் மட்குடிசைகளில் வசித்துக்கொண்டு பொதுவாய் நிலத்தைக் கூட்டுக்குப் பயிரிட்டும் தத்தம் குடிசைகளிலிருந்தே ஜீவனோபாயத்தைத்தேடியும் வந்தார்கள். முக்கிய பாட்டைகளிலிருந்து இக்கிராமங்களுக்குக் கிளைவழி கிடையாது. குடிசைகளிலிருந்து வயலுக்குப் போவதற்குச் சரியான பாதை கிடையாது. எல்லாம் சேறாகவும் நெருக்கமான ஒற்றடிப்பாதையாகவே யிருக்கும்.

இவ்வாறு தக்க பாதைகளின்மையால் ஒரு கிராமத்திலுள்ளவர்கள் மற்றொரு கிராமத்துக்குப்போய்வர சாத்தியமில்லை. அவர்கள் தத்தம் கிராமத்திலேயே யிருந்துகொண்டு பயிரிட்டு வந்தார்கள். வேலைக்குவேண்டிய கருவிகளையும் வீட்டுக்குத் தேவையான பாத்திரங்களையும் தாங்களே தமக்குத் தெரிந்தவாறு செய்துகொண்டார்கள். அவர்களுக்கு வேண்டிய உணவு உடைகளை வயல்களினின்றும் கால்நடைகளினின்றும் பெற்றுக்கொண்டார்கள். மேலும் எரிப்பதற்கு விறகும், மரமும் கிடைத்தன. கூடை, கயிறுமுதலியவற்றை நாரினின்று செய்துகொண்டார்கள். பொதுவாய் ஒவ்வொரு கிராமத்துக்கும் கொல்லனும் தச்சனும் உண்டு. அடிக்கடி ஈயம் பூசுகிறவனும் துணி ஆடை விற்பவனும் வந்துபோவார்கள்,

கிராமத்தைச் சேர்ந்த நிலமானது இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டது.--(Arake lands) சாகுபடியாகக்கூடிய நிலம், கால் நடைக்கு வேண்டிய மேய்ச்சல் நிலம் (Pasture). நிலத்தைக் கிராமத்தார் ஒவ்வொரு வருடமும் தமக்குள் பிரித்துக்கொண்டு பயிரிடுவார்கள். விளைச்சலாகும்வரை சுற்றிலும் வேலியால் அடைத்திருப்பார்கள். மற்றக் காலங்களில் வெட்டவெளியாயிருக்கும். சாகுபடி செய்யக்கூடிய நிலத்தை மூன்றுவிதமாய்ப் பிரித்துக்கொள்வார்கள். ஒன்று மாற்றி ஒன்றில் குறிப்பிட்ட தானியத்தைப் பயிரிட்டுவருவார்கள். உதாரணமாக, ஒரு நிலத்தில் கோதுமை அல்லது வேறு தானியப்பயிரைப் பயிர்செய்வார்கள். மற்றொன்றில் வாற்கோதுமை அல்லது கோதுமைப் பயிர்களில் ஒன்றை உண்டாக்குவார்கள். அடுத்தவருஷத்தில் தரிசுபோட்டுவிடுவார்கள். ஒவ்வொரு வயலையும், ஒரு ஏக்கரா அல்லது அரை ஏக்கரா விஸ்தீரணமாகப் பிரித்துக் கொள்வார்கள். இவ்வாறு பிரிக்கப்பட்ட நிலங்களுக்கு எல்லைக்குறியாக புல் பற்று வளர்த்திருப்பார்கள். ஒவ்வொருவரும் நிலத்தைத் தங்களுக்குள் சரியாகப் பிரித்துக்கொள்வார்கள். விதை விதைத்து அறுப்பாகிற காலம்வரை, பிரித்த நிலமானது அவரவர்க்கே யுரியது. பயிர் அறுத்தானபின் கிராமத்திலுள்ள கால்நடைகள் எந்த வயலிலும் மேயலாம்.

பயிரிடுகிற நிலத்திற்கு அப்பால் கிடக்கும் மேய்ச்சல் தரைகளில் கிராம சமுதாயத்துக்குப் பொதுவாய் மேய்க்கிற இடையன் ஆடுமாடுகளை மேய்ப்பான். கருங்கோடைக்காலத்தில் போதுமான புல் கிடைக்காது. ஆகையால் ஒரு போகப் பயிர் விளைந்தபின் அதற்குப்பின் விளைந்திருக்கும் பயிர்பச்சைகளில் அங்குமிங்கும் கால் நடைகள் மேய வேண்டியிருக்கும். இந்தக்காலத்தில் கால் நடைகள் போதுமான மேய்ச்சலின்றி மிகவும் மெலிந்துபோம். ஆகையால் கிராமத்தாரெல்லாரும் ஒருங்கு சேர்ந்து அந்தக்காலத்தில் கால்நடைக்கு மேய்ச்சல் குறைவில்லாதபடி ஏற்பாடு செய்யவேண்டும். மேலும் நிலத்தில் அபரிமிதமான ஈரம் தங்காதபடி சரியான வடிகால்கள் ஏற்பாடுசெய்து தண்ணீரை வடித்து விடவேண்டும். கால் நடைகள் வியாதியினால் பீடிக்கப்படாமல் சுகமாயிருக்க வேண்டுமானால், நோய்கண்டவற்றோடும், மெலிந்துபோனவையோடும் சேர்ந்து மேய, அவற்றை விடக்கூடாது. சிற்சில இடங்களில் சம்சாரிகள் மேற்குறித்த சீர்திருத்தங்களை அநுசரித்து வந்தபோதிலும் பொதுவாய் அவை யநுஷ்டிக்கப்படவில்லை. தற்காலத்தில் நம் நாட்டிலும் அவ்வாறே காண்கிறோம். நம் தேசத்தில் வியவசாயத்தின் நிலையையும் வியவசாயிகளது நிலைமையையும் பின்வருமாறு குறிக்கலாம்:

நயமற்ற கருவி கலப்பைகள் : கூடைகள் : கயிறு பின்னல்கள் : கிராமத்தச்சன் : ஒட்டை அடைப்பவன் (Tinker) : இட்ட பயிரையே திரும்பவும் இடுதல் : சரியான வேலியின்மை: கால் நடையெல்லாம் (நோய்பட்டது படாதது, இளசு, கிழடு) ஒரே மேனிக்கு மேய விட்டுவிடுவது : கால் நடைக்கு புல் கிடைப்பது அரிதாய்ப் போகும் காலத்துக்கு முன்னமே இரை சேகரித்து வைத்துக்கொள்ளாமை அவற்றைச் சரியானபடி காவாமை : அவை ஈனும்போது சௌகரியம் செய்து கொடுக்காமை : உரத்தைப்பற்றிக் கவனியாமை : தொழு எரு மற்ற உரத்தை அவ்வப்போது தக்கவிதம் சேகரித்துக்கொள்ளாமை : தக்க கருவிகளை உபயோகிக்காத்தால் வேலைப்பளு : சரியான ரஸ்தாக்களின்மை : மேற்கண்ட குறிப்புகளே இந்தியாவின் கிராமாந்தரங்களின் நிலைமையைக் குறிக்கின்றன. வியவசாயத்தை விருத்தி பண்ணுவதற்காக வியவசாய சங்கங்கள் புதிதாய்க் கிளம்பின. தானியத்தை வைக்கோலினின்று பிரித்துக்கொள்வதற்கும் அதிலுள்ள பதரை நீக்குவதற்கும் புதிதாக யந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்ட போதிலும் அவை பொதுவாய் ஜனங்களது உபயோகத்துக்கு வரவில்லை.

கால் நடைகளை விருத்தி பண்ணுவதற்கென்று சிலர் உழைத்துவந்த போதிலும் அவர்

கள் உழைப்பின் பலன் எங்கும் பரவிவிடவி ல்லை. பரிசோதனைப் பண்ணைகள் ஏற்படவி ல்லை. 'மில்டன்' (Milton) என்னும் கவிஞ ரது நண்பரான 'ஸாமூயல் ஹார்ட்லிப்' (Samuel Hartlib) என்பவர் 'வியவ்சாயக் கல்ாசாலை' ஒன்று ஏற்படவேண்டுமென்று மிகவும் சிரத் தை பாராட்டிவந்தார். மேற் குறித்தவையே 1790-ம்ஹு வரை இங்கிலாந்தில் 'வியவசாய' மிருந்த நிலைமையை உணர்த்துகின்றன. 1837-ஹு வரையிலும் கூட 'வியவசாயம்' விசேஷ விருத்தியடையவில்லை. அவ்வருஷத்தில் தான் சீமையில் ராஜாங்க வியவசாயச் சங்கம்' (Royal Agricultural Society) ஒன்று ஏற்பட்டது. அது வியவசாய விஷயமாய்ப் பெரிதும் சித்தி யளிக்க வல்லதாயிருந்தது.

வியவசாயம் அடைந்துள்ள விருத்தி :—1837-ம்ஹு மேய்ச்சல் நிலத்தை' (Grass lands) மேன்மைப்படுத்திவர முயன்றார்கள். வியவ சாயச் சங்கமொன்று ஏற்பட்டு சிறந்த மாதிரி யான புல் வகைகளை வளர்ப்பவர்க்குப் பரிசளி த்து செழிப்பான புல் பயிரிடும்படி விதித்து வந்தார்கள். ஜான் டியூக் என்னும் பெட்போ ர்ட் பிரபு (John Duke of Bedford) ஒருவர் 1874ம்ஹு 'புல்வகை' சம்பந்தமாய் (Sinclair) என்பவர் செய்துபார்த்த பரிசோதனைகளையும் அவற்றின் பலனையும் திரட்டி புத்தகமொன்று வெளியிட்டார்.

1837-ஹு வரையிலும் கூட 'ஓர் பயிரிட் டானபின் மற்றொரு பயிர் விளைவிக்கும்' முறை அதாவது, மாற்றுப் பயிரிடும் முறை (Rotation of crops) வழக்கத்துக்கு வரவில் லை.

கால்நடை விருத்தி பரிபாலன முறையை ப்பற்றி சுருக்கமான புத்தகமொன்று வெளி யிடலாயிற்று. கால் நடைகளை விருத்தி பண் ணும் விஷயமாய் பேக்வேல் (Bakewell) என்பவர் குறித்த கோட்பாடுகள் அவ்விஷய மாய் அளக்கரும் சித்தியைக் கொடுத்தன. 1798-ஹு ஸ்மித் பீல்ட் (Smithfields Club) என்ற சங்கமொன்று ஏற்பட்டுக் கால் நடை யின் க்ஷேம மேம்பாடு விஷயமாய் பெரிதும் உதவியாயிருக்கிறது.

வியவசாயசம்பந்தமாயுள்ள இரசாயன சாஸ் திரமும் பரிசோதனை ஆராய்ச்சிகளும் :—(Mr. Davy) டேவி என்பவர் 'வியவசாயத்துக் கும்' இரசாயன சாஸ்திரத்துக்கும் உள்ள சம் பந்த ஒற்றுமைகளைப்பற்றி பிரசங்கங்கள் செய் தார். அவ்விஷயமாகவே ஜான் லாஸ் (John Lawes) என்பவரும் தம்மாலியன்ற அளவு பரிசோதனைகள் செய்து விளக்கினார்.

1840-ஹு லீபிக் (Leibig) என்பவர் இரசா யன சாஸ்திரத்துக்கும் உடற் கூறு சாஸ்திரத் துக்கும் வியவசாய சாஸ்திரத்துக்கும் உள்ள ஒற்றுமைகளை விளக்கினதோடு பயிர்களின் உணவுப் பொருள்களுக்கும் நிலத்தில் கலந்தி ருக்கும் பொருள்களுக்கும் உள்ள சம்பந்தத் தையும் விரிவாய் எடுத்துக்காட்டினார். ஒரு விதச் சோடாவுப்பு (Nitrate of Soda) உரத் தை 1840-ஹு இட்டுப் பரிசோதனை பார்த்தார் கள். 1841-ஹு அவ்வாறே பெருவியன் தேச த்துப் பட்சி (Peruvian Guano) உரத்தையிட் டார்கள். 1840-ஹு லீபிக் (Leibig) என் பவர் கெந்தக திராவகத்தில் கரைத்த எலும் பை உரமாக உபயோகிக்கும்படி சொல்லிவந் தார். ஸர் ஜான் லாஸ் (Sir John Lawes) என்ப வர் மேற் குறித்த உரத்தை நன்கு தயாரிக்கும் முறையைக் கண்டுபிடித்தார். ஹென்க்ளோ (Henglow) என்பவர் 'செம்பு' சேர்ந்த உலோ கக்களிம்புகளையும் அவ்வாறே நல்லஉரமாக்க லாம் என்று தம் அபிப்பிராயத்தை வெளியிட் டார். இவ்விஷயமாய் (Royal Agricultural Society) இங்கிலாந்து இராஜ வியவசாயசங்கத் தார் பரிசோதனைகள் செய்து வந்தார்கள். 1877-ஹு கெய்னெட் என்னும் உரத்தை (Kainite) மரச்சாம்பல் உரமாக மிகவும் உப யோகித்து வந்தார்கள்.

Basic salt அல்லது (Thomas Phosphate) என்னும் உரமானது 1883-ஷ்த்தில் முதல் முதல் தயாரிக்கப்பட்டது.

*By a Specialist.*

# சுகாதார விளக்கம்

## HYGIENE

(பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது.)

### இரண்டாவது அத்தியாயம்

### நீர்

11. நீரின் உபயோகம்.—நல்ல ஜலம் நமது உபயோகத்துக்கு வேண்டியவளவு கிட்டாமற் போவதனாலும், நமக்குக் கிடைக்கும் ஜலம் அசுத்த ஜலமாக விருப்பதாலும் நமது சௌக்கியத்திற்கு நேரிடும் தீமைக்களவே யில்லை. ஜலத்தின் குணம், அதைத்தேக்கிவைக்கும்வகை, அதை நாம் உபயோகிக்கும் பொருட்டு எடுத்துக்கொள்ளும் பிரயாசை, பரிசுத்தமான ஸ்தலத்திலிருந்து ஜலம் நமது உபயோகத்திற்கு கிட்டுகின்றதா என்ற பலவிதமான விஷயங்களைப்பற்றி நாம் பரிசோதிக்கவேண்டும். நமக்கு அருந்துவதற்கும் உணவுகளைச் சமையல் செய்வதற்கும், நித்தியகருமங்களை நடத்துவதற்கும், துணிகளையும் பாத்திரங்களையும் துலக்குவதற்கும், நமது மாடுகள் குதிரைகள் முதலியவைகளைக் குளிப்பாட்டுவதற்கும், வீடுவாயில்கள் சாக்கடை முதலியவைகளைக் கழுவுவதற்கும், இன்னும் பலவித உபயோகங்களுக்கும் ஜலம் அவசியம் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே.

12. ஒவ்வொருவனுக்கும் வேண்டிய ஜலம்.—ஒவ்வொருவனுக்கும் அவன் சௌக்கியமாக விருக்க ஒரு நாளைக்குக் குறைந்தபட்சம் 5 பையிண்டு அதாவது 5 புட்டி ஜலம் அவசியம். இதில் ஏறக்குறைய 2 புட்டி ஜலம் அவன் தான் புசிக்கும் ஆகாரத்திலேயே உட்கொள்ளுகின்றான், மற்ற 3 புட்டி ஜலம் எப்படியாவது நீராகவோ அல்லது நீர்கலந்த உணவாகிய ரசம், மோர், காபி முதலிய ரூபமாகவோ அவன் உட்கொள்ளுகின்றான். இதல்லாமல் அவன் குளிக்க, பாத்திரங்கள் துலக்க, இன்னும் மேல்பிரகாரணத்தில் சொல்லியிருக்கின்ற காரியங்களுக்கு உபயோகிக்க, ஓர் விதக் கணக்கு ஏற்படுத்தி சில வைத்திய சாஸ்திரிகள் ஒரு மனிதனுக்குத் தேவையான ஜலம் சராசரி ஒரு நாளைக்கு 20 காலன் என்று கணக்கு ஏற்படுத்தியிருக்கின்றார்கள். இவ்வாறு ஒரு கணக்குண்டாக்கித்தான் அதன் பிரகாரம் நமது சென்னை முதலான நகரங்களில் குழல் வழியாக நமக்குக்கிடைக்க வேண்டிய ஜலத்துக்கு ஒரு ஜலாசயத்தையும் அதிகாரிகள் உண்டாக்குகின்றார்கள்.

13. ஜலத்தின் சங்கிரகணம்.—இயல்பாகவே பூமியிலிருக்கும் சிலபள்ளங்களிலிருந்தும் அல்லது பல சிற்றாறுகள் ஒன்றுகூடி உண்டான நதிகளிலிருந்தும் ஜலம் நமக்குக்கிடைக்கின்றது. இவ்வாறு இயல்பாக உண்டாகும் நீரை ஓரிடத்திற் சேர்க்க வேண்டியிருந்தால் அப்படிச் சேர்த்துவைத்துப் பெரிய ஊர்களுக்கு உபயோகமாகும்படி அதிகாரிகள் ஜலாசயம் உண்டாக்குகின்றார்கள். சிலவிடங்களில் மலையாகவிருந்தால் அதன் சாரல்களில் கசிந்து ஓடும் ஜலத்தை ஓடிப்போகாமல் அணைகட்டித் தேக்குகின்றார்கள். சமதரையில் மழை பொழியும் பொழுது அத்தரையின் நடுவே சிறுகால்கள் வெட்டி அவைகளின்வழியாய் ஓடிவரும் ஜலத்தைக் குளமாகவும் குட்டையாகவும் சேர்த்துவைத்துக் கொள்ளுகின்றார்கள். இவ்வாறு நாம் செய்யும் முயற்சிகள் மழைஜலம் மண்ணில் ஊறும் முன்னமேயே நமக்குக் கிடைக்கும்படியாக விருக்கவேண்டும்.

14. ஜலாசயம்.—பெரிய நகரங்களுக்குத் தேவையான ஜலத்தை ஒருவாறு கணக்கிட்டு அதற்கேற்றபடி ஒரு ஜலாசயம் உண்டாக்கி அவ்வாசயத்தில் ஜலத்தைத் தேக்கிவைத்துக் கொள்ளவேண்டும். சென்னைக்கு ஜலாசயம் புழல் ஏரி.

15. ஜலாசயத்துக்கு ஜலம் கொண்டுபோகும் விதம்.—மழை ஜலத்தை ஓர் ஜலாசயத்துக்கு கொண்டு போகும்பொழுது அம்மழை ஜலத்தை ஜலாசயத்துக்கு முன்பாக ஒரு பெரும் மணல் அணைகட்டித் தேக்கி அவ்வணைவழியே வடிகட்டி ஓடும்படி செய்து அதன் பிறகு அச்சலம் ஜலாசயத்தில் வந்து பாயும்படி நாம் பண்ணவேண்டும். இம்மணல் அணையையும் வருஷத்தில் இரண்டு மூன்று தடவை பரிசோதித்துப் பரிசுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும். பெரும் ஜலாசயத்திலிருந்து சிறுவாய்க்கால்வழியே ஜலத்தை சிறு ஜலாசயத்துக்கு கொண்டுவந்து சேர்க்கவேண்டும். இச்சிறு ஜலாசயம் சல்லும் சிமிட்டும்போட்டுக் கட்டப்பட்டு நன்றாக மூடப்பட்டிருக்க வேண்டும். காற்றோட்டம் குறைவில்லாதபடியும் அமைக்கப்பட்டிருக்கவேண்டும். இச்சிறு ஜலாசயத்திலிருந்துதான் குழல்கள் வழியாய் நகரத்தில் நமக்கு ஜலம் கிட்டுகின்றது.

16. குளம், கிணறு.—மழை ஜலத்தை நாம் குளத்தில் தேக்கிவைத்து அதை உபயோகிப்பதாகவிருந்

தால் அக்குளத்தை நாம் அடிக்கடி பரிசோதித்துப் பார்க்கவேண்டும். கிணற்று ஜலத்தை நாம் உபயோகிப்பதாகவிருந்தால் மழை பொழியும்பொழுது அக்கிணற்றில் மேற்றரைக்கசிவு ஜலமிறங்குமாகையால் அக்கிணற்றைச்சுற்றிச் சுவரெடுத்து மேடைபோட்டு மேடையில்விழும் ஜலம் பூமியில் நிற்காமல் வழிந்து ஓடும்படி ஏற்பாடு செய்யவேண்டும். கிணற்றில் நீர்மட்டத்துக்குமேல் உள்வாயிலிருந்து நீர்கசிந்து கிணற்றிலிறங்குவதாக விருந்தால் அவ்வாறுண்டாகாமற் றடுக்க நன்றாகக் கிணற்றின் உட்பக்கத்தில் சிமிட்டு பூசவேண்டும்.

17. மழை:—எல்லாவித ஜலத்திற்கும், மழையே முதற்காரணம். சூரிய கிரணங்கள் சமுத்திரத்தின் மேல் பரப்பில் அடித்துச் சலத்தைச் சோஷிக்கச் செய்கின்றது. அவ்வண்ணம் சோஷித்த ஜலம் நீராவியாக ஆகாயத்திற் கிளம்பி மேகமாக மாறி சீதத்தால் நிபிடமாக பண்ணப்பட்டு மறுபடியும் மழை உருவமாக பூமியில் இறங்குகின்றது.

18. மழைஜலம்.—ஆகாய மார்க்கமாய் ஜலம் பூமியில் விழும்பொழுது ஆகாயத்திலேயே மழைஜலம் நன்றாக வாயுவுடன் சம்பந்தப்பட்டே விழுகின்றது. நகரங்களில் அதிக பரிசுத்தமான வாயு வில்லாததினால் நகரத்தில் மழை பொழியும்பொழுது அம்மழை ஜலம் அதிகமான கெட்டகாற்றுடன்கலந்தே பூமியில் விழும். மழைநீர் கெடுவதற்கு அநேக காரணங்களிருக்கின்றன. மழை நீர் வீட்டுக்கூரைகளில் விழும்பொழுது அவைகளில் படிந்திருக்கும் குப்பை கூளம் முதலிய அழுக்குகள் அந்நீரில் கலந்தே அந்நீர் பூமியில் விழுகின்றது. மரங்களிலும் வீட்டுக் கூரைகளிலும் பட்சிகள் கழித்தமலங்கள் இருக்கின்றன. அவைகளும் மழை நீருடன் கலக்கின்றன. பூமியில் விழுந்த பிறகும் பூமியிலுள்ள பல விதமான மலங்களும் அம்மழை ஜலத்தில் சம்பந்தப்படுகின்றன. ஆகையால் மழை ஜலத்தை அது ஓடிவருகின்ற வண்ணம் கட்டித்தேக்கி குளத்திலோ மற்றவிடங்களிலோ தேக்கிவைத்தால் அதிற் பல விதமான அசுத்தங்கள் கலந்திருக்கும். பூமியில் விழும் மழை அப்படியே முற்றிலும் ஓடிக் குளமும் குட்டையுமாகத் தேங்காமல் ஒரு பாகம் அவ்வண்ணம் ஓடித்தேங்கி மற்றொருபாகம் பூமிக்குள் ஊறியிறங்கி ஊற்றுகளாகவும் கிணறுகளாகவும் தோன்றுகின்றது. ஆறுகளாகப் பெருகுகின்றது. மழை ஜலத்தில் எவ்வளவுபாகம் பூமிக்குள் இறங்குகின்றதென்பது பூமியின் வடிவையும் அமைப்பையும் பொருத்திருக்கிறது. மழை ஜலம் பூமியிலிறங்கும்பொழுது பூமிக்குள் அங்கங்கு பதுங்கி நிற்கும்கரியமலவாயுவை கிரஸனம் பண்ணிக்கொண்டேயிறங்குகின்றது. மணற்பாங்கான தரையில் இக்கரியமலவாயு குறைவு.

19. ஆற்றுநீர்.—படுகைகளின் கழிவாலும், பல சிற்றாறுகள் பலவிதநீரைக்கொண்டுவந்து கலப்பதாலும், ஆற்றுநீர் ஊற்றுநீரைவிட எப்பொழுதும் கலப்பாகவேயிருக்கின்றது. இன்னும் ஆற்று நீரில் பலர் துணிகளைத் துவைக்கின்றார்கள். நகரங்களுக் கருகாமையில் ஆற்றுநீரில் சாக்கடைநீர் சிலவிடங்களில் கலக்கின்றது. ஆற்றின் படுகைகளில் பலவித ஓஷதிமலங்களும் பிராணிமலங்களு மிருக்கின்றபடியால் மழைபெய்யும்பொழுது இவைகள் கரைந்து ஆற்று நீரில் ஓடிவந்து கலக்கும். மயானங்கள் நமது நாட்டில் பெரும்பாலும் ஆற்றங்கரைகளிலும் ஆற்றுள்ளுமிருக்கின்றன. அம்மயானங்களின் சாம்பல்களும் எலும்புகளும் ஆற்றிற்கொட்டப்படும். கால் நடைகளை ஆற்றில் எப்பொழுதும் குளிப்பாட்டுவார்கள். சாயக்காரர்கள் ஆற்றில் துணிகளுக்கு சாயம் துவைப்பார்கள். தோல்பதமிடும்சாலைகள், பஞ்சுநூற்கும் சாலைகள், இவைகளின் யந்திரக்கழிவு நீர்கள் சிற்சில சமயங்களில் ஆற்றிலோடி வந்து கலக்கும். இவ்வண்ணம் பலவிதகாரணங்களால் ஆற்று ஜலம் அசுத்தப்பட்டுப் போவதுண்டு.

20. ஊற்று ஜலம்.—ஊற்றின் ஜலம் சுத்தமா, சுத்தமில்லையா, என்பது எவ்விதமான மண்ணின் வழியாக ஊற்று ஜலம் ஊறி வந்து நமக்குக் கிட்டுகின்றதோ அதைப்பொருத்ததாகவிருக்கின்றது. எவ்விதமான மண்வழியாக நமக்கு ஊற்றுஜலம் வருகின்றதென்பது முக்கியமேயன்றி ஊற்று ஆழமான ஊற்று என்பது அவ்வளவு முக்கியமல்ல. கிணற்று ஜலமும் ஊற்று ஜலமாகையால் கிணற்றின் ஊற்றைப்பற்றியும் கவனிக்கவேண்டும். ஆனால் ஊற்று ஜலத்தைக் காட்டிலும் அதிகமான அசுத்தம் கிணற்று ஜலத்தில் பல காரணங்களில் உண்டாகின்றது. கிணற்றின் மேலிருந்தபடியே பல அசுத்தங்கள் கிணற்றில் விழுகின்றன. பல சிறு பூச்சி புழுமுதலிய ஜந்துக்கள், மரம், மட்டைகள் காற்றால் அடிக்கப்படும் சருகுகள், தூசிகள் கிணற்றில் விழாதபடி நாம் பார்க்கவேண்டும். ஜலம் ஊறும் ஊற்று எவ்வகை, அதாவது மண் எவ்வகை, என்பதை நாம் நன்றாகக் கவனிக்க வேண்டும்.

பாறையிலிருந்து கசியும் ஜலம் பெரும்பாலும் வெகுபரிசுத்தமானது.

பொதிமணல் (Loose Sand) தரையிலிருந்து ஊறும் ஜலம் பரிசுத்தமாகவேயிருக்கும். கொள்ளிடத்திலும் பாலாற்றிலும் பொதிமணலிலிருந்து ஊறும் ஜலத்தை எல்லா சுகஸந்தர்சன சாஸ்திரிகளும் வெகு பரிசுத்தமான ஜலமாக ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள்.

வேறு சில நதிகளில் பொதிமணற்றரையில் உவர் சம்பந்தமிருப்பதால் அவ்விடத்தில் ஊறிவரும் ஜலம் அதிக பிரயோஜனப்படாது.

களிமண்தரையில் ஊற்றுஜலம் கிட்டுவது அதிக அரிது. அவ்வித நீரும் நல்ல நீரல்ல.

களியும் மணலும் கலந்ததரையிலூறும் ஜலம்.— இதுவும் பரிசுத்தமல்ல.

கசிவுநீர்:— கொஞ்சமேனும் சுத்தமானதல்ல. சதுப்பு நிலத்திலிருந்து ஊறிவரும் நீரும், மயானம் பிணம் புதைக்குமிடம் இவைகளிலிருந்து ஊறிவரும் நீரும்அசுத்தமானவைகள்.

பாதாள கங்கைக்கிணறு:— (Artesian wells) இந்த ஜலம் வெகு ஆழத்திலிருந்து கிளம்பி வருகின்றபடியாலும் பெரும்பாலும் அயஸ்ஸம்பந்தம் (இரும்புச்சன்னங்கள்) இந்நீரிலிருப்பதாலும் இவ்வழியாக நமக்குக் கிடைக்கும் நீர் வெகு பரிசுத்தமானது.

21. பூமிக்குள்ளிருக்கும் நீரோட்டம்.— பூமிக்குள் பலவித ஆழங்களில் நீரோட்டம் இருந்துகொண்டேயிருக்கின்றது. அதிக சமீபத்திலிருக்கும் நீரோட்டம் பூமியிலிருந்து ஊறும் ஜலத்துடன் கலந்திருக்கும். ஆதலால் அந்த நீரோட்டத்திலிருந்து நாம் ஜலத்தை எடுப்பது அவ்வளவு பரிசுத்தமல்ல. கிணற்றை ஆழமாகத்தோண்டி 100-150 அடிகள் குடைந்து அதன் பிறகு ஊற்றை அடைவோமேயானால் அது பரிசுத்தமான நீராகவேயிருக்கும். அவ்வாறு கண்டு பிடிக்கப்பட்டவிடங்களிற்றான் குழல்களை பூமிக்குள்ளிறக்கி பாதாள கங்கைக்கிணறுகள் (Artesian wells) உண்டாக்குகின்றார்கள். இவ்விதக் கிணறுகளை நமதுதேசத்தில் புதுச்சேரியில் காணலாம்.

22. ஜலத்தட்டு.—ஒரு நகரத்துக்கு வேண்டிய ஜலம் குறைந்தாலோ, அக்காரணத்தால் விளையும் தீமைக்கு அளவேயில்லை. குளிக்க முடியாது. துணி துவைக்க முடியாது. வீடு வாயில்கள் நாறிப்போம். சாக்கடைகள் கழுவமுடியாது. எங்கும் துர்க்கந்தமே நிரம்பி நிற்கும். ஜலத்தட்டு வரும்பொழுதுதான் சர்மஸம்பந்தமான சொரி சிரங்கு முதலிய வியாதிகள் அதிகமாக உண்டாகின்றன. விஷஜ்வரத்துக்கு சாக்கடை கழுவாததொன்றே பிறப்பிடம். அஜீர்ணம், மலபந்தம், வயிற்றுக் கடுப்பு நரம்புச்சிலந்தி, வாந்திபேதி, இவ்வியாதிகள் நாம் அருந்தும் ஜலம் பரிசுத்தமாயில்லாத காரணத்தால் விளைகின்றன.

23. நாம் குடிக்கும் நீர்.—பலவைத்தியர்கள் ஏற்படுத்திய சித்தாந்தங்களால் நாம் அருந்தும் நீர் (1) யாதொரு விதக் கசடுகளுமில்லாமல் வெகு ஸ்வச்சமாக விருக்கவேண்டும்(2) அது ஒருவித மணமும் ருசியு மில்லாமலிருக்க வேண்டும் (3) அது ஜில்லென்றிருக்க வேண்டும் (4) அதில் பருப்பு எளிதில் வேக வேண்டும் (5) அதில் பிராண வாய்வு சம்பந்தித்திருக்கவேண்டும். இவ்வளவுதூரம் நாம் சொன்ன பிறகு எந்த ஜலத்தில் பருப்புவேகவில்லையோ அதை நல்ல ஜலமல்லவென்று நாம் நீக்கலாம். எல்லாவிதத்தாலும் பரிசுத்தமான ஜலத்தை நாம் அடைவதெப்படி?

24. ஜலநிஷ்கர்ஷணம்.— (Distillation)அதாவது நிஷ்கர்ஷணயந்திரத்தால் ஜலத்தைச் சோதித்து வடிக்கட்டி வாங்கி உபயோகிப்பது. இது எல்லாவிதத்தாலும் பரிசுத்தமான சலத்தை நமக்குத்தருகின்றது. ஆனாலிந்த விஷயத்தில் நாம் ஜாக்கிரதையாயிருக்கவேண்டிய முறைகள்—முதன்முதல் யந்திரத்தில் ஓட்டை ஒடுக்கு முதலியவைகளில்லாமலிருக்கின்றனவா என்று செவ்வையாகப் பரிசோதிக்கவேண்டும். இரண்டாவது ஜலத்தை நாம் நிஷ்கர்ஷணம்பண்ணி அதை நாம்பிடித்துக்கொள்ளும் பாத்திரம் பரி சுத்தமான பாத்திரமாக விருக்கவேண்டும்.

25. வெந்நீரருந்துதல்.—நிஷ்கர்ஷணத்துக்கு அடுத்தபடியிதைச் சொல்லவேண்டும். நீரை வெந்நீராகக் காய்ச்சும்பொழுது நோயை விளைவிக்கும் வித்துக்கள் (bacteria)-பாக்டேரியா என்று சொல்லப்படும் பூச்சிகள் ஏதாவது ஜலத்திலிருக்குமாயின் அப்பூச்சிகளை உஷ்ணம் கொன்றுவிடும். ஆகையால் இவ்வித குணம் நாம் வெந்நீராலடைய ஜலத்தை நன்றாகக் கொதிக்க வைக்கவேண்டும்.

ஆங்கிலேய வைத்தியர்கள் வெகு கெடுதலான ஜலத்தை நாம் ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் விதியில்லாமல் குடிக்கும்படி நேரிட்டால், அச்சலத்தில் தேயிலை அல்லது கசப்பு பாதுமைக்கொட்டை இவைகளைக் கலந்து காய்ச்சிக்குடித்தால் அந்நீரிலுள்ள தீமை முற்றிலும் நீக்கப்படுகின்றது என்று கண்டு பிடித்திருக்கின்றார்கள்.

சுக்கான் ஜலத்தை நாம் எப்பொழுதும் வெந்நீராகவே காய்ச்சி அருந்தவேண்டும். அப்படி நாம்

காய்ச்சும்போது அதிலுள்ள சுண்ணாம்பு அடியில் தங்கிவிடும்.

26. நீரைத் தெளியவைத்தல்:—நாம் ஊற்று முதலிய விடங்களில் எடுக்கும் ஜலம் பரிசுத்தமாக விருந்தாலும் அதில் சிறு மண்தூசிகள் மிதக்குமாகையால் அதைக் கொஞ்சநாழிகை தெளியவைத்தால் அச்சிறுமணற் கணங்கள் அடியில் தங்கிவிடும். அப்புறம் வடிக்கட்டி நீரை உபயோகிக்கலாம். சிலர் தேற்றாங்கொட்டை முதலான சாதகங்களை நீரில் கலந்து அதைத் தெளியச் செய்வதுண்டு. படிக்காரத்தைக் கொஞ்சம் பொடிபண்ணி ஜலத்தில் கலந்து வைத்தால் அது ஜலத்தின் கலங்கலைத் தெளியப்பண்ணும்.

27. ஜலத்தை வடிக்கட்டும் யந்திரம் (Filters):—ஏராளமாக ஜலத்தை வடிக்கட்டி ஒரு நகரம் போன்ற பெரியவிடத்துக்கு உபயோகித்துக் கொள்ளும் வழியாகிய மணல்அணை முதலியவைகளைப்பற்றி நாம் 15-வது பிரகரணத்தில் சொல்லியிருக்கிறோம். அதேமாதிரி ஒருவன் தன் வீட்டுக்குவேண்டிய ஜலத்தை வடிக்கட்டி எடுத்துக் கொள்ளும் முறையைப்பற்றி இங்கு சொல்லுவோம். மரத்தாலோ அல்லது மூங்கிலாலோ முக்காலி கட்டி அதில் ஒன்றின்மேலொன்றாக மூன்று சட்டிகள்வைக்கும்படி ஏற்பாடு செய்து மேல் இரண்டு சட்டிகளின் அடியில் துளைவிட்டு அவ்விரண்டு சட்டிகளிலும் முதற்சட்டியில் நல்லமணலும் இரண்டாவது சட்டியில் அடுப்புக்கரியும் போட்டு பாதி அல்லது முக்காற்சட்டிநிரப்பி நீரை முதற்சட்டியில் விட்டு, அது மணல்வழியாக இரண்டாவது சட்டியிலிறங்கும்படியும், இரண்டாவது சட்டிநீர் அடுப்புக் கரிவழியாக மூன்றாவது சட்டியி லிறங்கும்படியும் செய்து, அவ்வாறு மூன்றாவது சட்டியிலிறங்கின நீரைப் பரிசுத்தமான நீராக உபயோகித்துக்கொள்ள வேண்டும். இந்த யந்திரத்தில் நாம்போட்டு உபயோகிக்கும் மணலையும் அடுப்புக்கரியையும் நாம் அடிக்கடி புதுப்பிக்கவேண்டும். அவ்வாறு செய்ய சாத்தியப்படாவிட்டால் அவைகளை வெயிலிற் போட்டு நன்றாக உலர்த்தவேண்டும். இவ்வண்ணம் செய்யாமல் ஒரே மணலையும் அடுப்புக்கரியையும் நாம் உபயோகித்து வந்தால், அதனால் விஷம் ஜலத்தில் அதிகரிக்குமேயல்லாது நீங்கமாட்டாது. இம்மாதிரி மட்பாண்டங்களையன்றி பலவிதக்கருவிக ளிப்பொழுது ஜலத்தைவடிக்கட்ட ஏற்பட்டிருக்கின்றன. இவ்விதக் கருவிகளை நாம் உபயோகிக்கும்பொழுது நாம் இக்கருவிகளின் ஒவ்வொரு பாகமும் தனித்தனியே எடுத்துச் சுத்தம் பண்ண அவைகள் இடங்கொடுக்க வேண்டும். கருவியின் அங்கங்கள் ஏதாவது ஒரு உலோகத்தால் செய்யப்பட்டிருக்குமாயின் அதினின்று உண்டாகும் அழுக்குகள் நாம் அருந்துவதற்கு எடுக்கும் நீரில் சம்பந்திக்காமலிருக்கவேண்டும். வடியும் ஜலம் தடைப்பட்டு விழாமல் கடகடவென்று வடியும்படி யிருக்கவேண்டும்.

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

பண்டித நடேசசாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு.

---

### கதையின் ஆரம்பம்

18. மேருவுக்குத்தோழரான இவ்விமவான் உலக மரியாதையை அறிந்தவராகையால் அதை யநுசரித்து தென்புலத்தார் மனத்தினின்று உதித்தவளும், எல்லா முனிவர்களாலும் வணங்கப்பெற்றவளும், தனது அழகுக்குச் சமானமான அழகு அமைந்தவளுமான மேனை என்பவளைத் தமது வம்சம் விளங்கும் பொருட்டு சாஸ்திரப்பிரகாரமாய் மணம்புரிந்தார்.

19. அவர்களிருவரும் இல்லற தர்மத்தை நடத்திக் கொண்டிருக்கையில் அவ்விருவர்களும் தங்கள் அன்புக்கும் அழகுக்கும் ஏற்றபடி உல்லாஸமாயிருக்குங் காலத்தில் வெகுமனோகரமான இளமைப்பருவத்தி லிருக்கும் அவ்வுத்தமிக்குக் கர்ப்பம் உண்டாயிற்று.

20. அம்மேனகை முதல்முதல் மைனாகன் என்ற குமாரனைப்பெற்றாள். அவனோ நாக கன்னிகைகளுக்கேற்றநாயகனாய்,ஸமுத்திரராஜனுக்கு இணைபிரியாத் தோழனாய், மலைகளின் சிறகுகளை வெட்டவேண்டுமென்று பெருங்கோபங்கொண்ட இந்திரனுடைய குலிசாயுதத்தின் காயத்தில்* உண்டாகும் வேதனை இத்தன்மையது என்று அறியாதவனாய் விளங்கினான்.

21. மைனாகனை மேனை பெற்ற பிறகு, முன் ஜன்மத்தில் தக்ஷப்பிரஜாபதியின் பெண்ணாய், ஈசனுடைய முன் மனைவியாய்த் தனது தந்தை தனக்குச் செய்த அவமானத்தைச் சகிக்கவொண்ணாது, யோகத்தீ உண்டாக்கி அதில் குதித்துத் தனது பிராணனைப் போக்கிக்கொண்டவளாய், மகாபதிவிரதையாய்ப்பெயர்பெற்ற தாக்ஷாயணி என்பவள் மறுபடியும் தான் ஜனன மெடுப்பதற்காக அவ்விமய மலையின் மனைவியைத் தனது தாயாக வந்தடைந்தாள். †

---

* இந்திரன் எல்லா மலைகளுடைய சிறகுகளை வெட்டின பொழுது மைனாகன் சமுத்திரத்தில்போய் ஒளித்துக் கொண்டான் என்பது கதை.

† முன்னொரு காலத்தில் தாக்ஷாயணி தக்ஷருடைய யாகத்துக்காக வந்து தக்ஷர் தனது கணவராகிய பரமசிவனுக்குச் செய்த அவமானத்தைச் சகிக்க முடியாதவளாக தன் தந்தையையும் தனது கணவனையும் மறுபடி பார்க்க மனம்வெறுத்து, யோகத்தீவளர்த்துப் பிராணனை விட்டாள் என்பது கதை.

22. எல்லாவித கல்லியாண குணங்களும் நிரம்பப் பெற்ற அம்மாது, மலைகளின் மன்னவரான இமவானுக்கும்பல நோன்புகள் நோற்றபதிவிரதையாகிய மேனகைக்கும் புதல்வியாய்த்தோன்றியது சிறிதேனும் வழுவின்றி நன்றாகச்செலுத்தப்படும் நீதியினிடம் உத்ஸாககுணத்தால் சம்பத்து உண்டாக்கப் பட்டதுபோல் சோபித்தது.

23. அவ்வுத்தமி பிறந்தநாள் எல்லாத்திசைகளும் நிர்மலமாய்விளங்கிக்கொண்டும், தூசு என்பது கொஞ்சமேனுமில்லாத இளங்காற்று அடித்துக்கொண்டும், ஆகாயத்தினின்று சங்கநாதத்துடன் மலர்மாரி பொழிந்துகொண்டும், அசையும்பொருள் அசையாப் பொருள் முதலிய எல்லாப்பொருள்களும் சுகப்பட்டுக்கொண்டும் இருக்கக்காணலாயிற்று.

24. மின்னற்கொடிபோல் சோபித்த அக்குழந்தையால் மேனையானவள் விதூரமலையின் தாழ்வரையில் புதிதாய்த்தோன்றிய மேகம் இடியிடிக்கும்பொழுது இரத்தின முளைகள் மேற்கிளம்பிவிளங்குவதுபோல் விளங்கலானாள் ‡.

25. அவ்வாறுதோன்றிய அப்பெண்குழந்தை சந்திரனுடைய இளங்கலைபோல நாளுக்குநாள் வளர ஆரம்பித்துச் சந்திரனுடைய காந்தியைத் தங்களுக்குள் அடக்கி கொண்டிருக்கும் கலைகள் அதிகமாக அதிகமாக, அதிக அழகைக் காட்டுவதுபோல இவளும் அதிக லாவணியத்தை வெளிக்காட்டலானாள்.

26. எல்லாப்பந்துக்களுக்கும் வேண்டியவளான அக்குழந்தையை, அந்தப் பந்துக்கள் தொன்றுதொட்டுக் குலத்துக் கமைந்தபடி பார்வதி என்ற பெயரால் அழைக்கலானார்கள். * பார்வதி பிற்காலத்தில் தவஞ் செய்யப் புறப்படும் பொழுது "குழந்தாய்! உன்னால் தவம் செய்ய முடியாது, என்று தாய் தடுத்த காரணத்தால் அவள் "உமை † என்ற மற்றொரு பெயரையு மடைந்தாள்.

27. இமவானுக்கு குழந்தைகள் பலவென்றாலும் அவன் கண்கள் பார்வதியினிடம் ஒருபொழுதும் ஆவலடங்காதவண்ணம் அன்புபாராட்டி வந்தன. வஸந்தகாலத்தில் எண்ணிறந்த மலர்கள் உண்டான போதிலும் வண்டுக்கு மாமலரில் அதிக அன்பன்றோ!

28. பெரும் பிரகாசத்தைக்கொடுக்கும் ஜ்வாலையால் விளக்கு தன்னைப்பெரியதாகக்கருதிக்கொள்ளுவதுபோலும், ஆகாசகங்கையால் சுவர்க்கம் தன்னைப் பெருமைபாராட்டிக்கொள்ளுவதுபோலும், வித்வான் இலக்கணந்தெரிந்ததால் இலக்கியத்தில் விளங்குவதுபோலும், இமவானும் அப்பார்வதியால் தான் அதிகபரிசுத்தியையும் கௌரவத்தையும் அடைந்துவிட்டதாக எண்ணிக்கொள்ளலானார்.

29. அப்பார்வதியும் குழந்தைப்பருவத்தில் விளையாட்டு ஸந்தோஷத்தை முற்றிலும் அனுபவிப்பவளாய்த் தனதுதோழிகளுடன் கங்கையின் மணல்திட்டுக்களில் திட்டாணிகட்டியும் பந்து விளையாடியும் பதுமைகளைக் குழந்தைகளாய்ப் பாவித்துவைத்துக் கொண்டு விளையாடியும் கழிக்கலானாள்.

30. சூக்ஷ்மத்தில் அறிந்துகொள்ளும் சாமர்த்திய முள்ள அப்பார்வதிக்கு படிப்புக் கற்றுக் கொள்ளும் காலம் வந்ததும் சரத்காலத்தில் கங்கையை நாடி அன்னங்கள் வருவனபோலவும், இராக்காலத்தில் சோதிக்கொடியை நாடிப் பிரகாசம் வருவதுபோலவும், அவள் முற்பவத்திலறிந்திருந்த வித்தைகளெல்லாம் அவளை நாடி வந்தன.

31. சரீரத்துக்கு ஒருவித பிரயத்தனமும் நாம் செய்த வில்லாமலே ஓர் அழகாயும், மத்தியம் முதலிய சாதனங்களின்றி மதத்தை உண்டாக்கப்பட்டதாயும், மன்மதனுக்கு மலர்ப்பாணமல்லாத மற்றொரு விதபாணம் என்று சொல்லப்பட்டதாயுமிருக்கும் யௌவனம் என்ற பருவத்தைப் பார்வதியானவள் தனது இளம்பருவத்தைத் தாண்டி அடைந்தாள்.

32. இவ்வாறு தோன்றிய யௌவன பருவத்தால் பார்வதியின் மேனியானது தூரியக்கோலால் கண் திறக்கப்பட்ட சித்திரம்போலும், சூரிய கிரணங்களால் மலர்த்தப்பட்ட தாமரை மலர்போலும், குற்றங்குறை என்பவை ஒன்றுமில்லாமல் எல்லாவிதத்திலும் சோபிக்கலாயிற்று.

---

‡ விதூரமலை இரத்தினக்கனிகள் நிரம்பியிருப்பதாகவும், இடியோசை உண்டாகும்பொழுதெல்லாம் இரத்தினமுளைகள் அக்கனிகளினின்று மேற்கிளம்புவதாகவும் ஒரு கதை.

* பர்வத ராஜன் மகள் பார்வதி யென்றபடி.

† உமை என்பதற்கு வடமொழி உமா. உ என்றால் குழந்தாய என்றும், மா என்றால் செய்யாதே என்றும் வடமொழியில் அருத்தம். மேற்கூறியபடி பார்வதி தவம் செய்யப் புறப்பட்ட பொழுது மேனகை உ! மா என்றாள்! அதாவது குழந்தாய! நீ தவம் செய்யச் செல்லாதே என்றபடி அக்காரணத்தால் உமை என்ற பெயர் பார்வதிக்கு வந்தது.

# இந்து லேகை

(ஒரு மலயாள நாவல்)

## இரண்டாவது அத்தியாயம்

இந்த அத்தியாயத்தை எழுதவேண்டியதற்கான ஆவசியகம் உண்டாகுமென்று எனக்குத்தோற்றிய போது, என் கதாநாயகியின் ரூபலாவண்யத்தை வர்ணிக்கும் யோக்கியதாம்சம் என்னிடத்தில் சிறிதேனும் இல்லையென்பதையறிந்த என்மனதில் பிரமாதமான ஆசங்கை ஜனிக்கலாயிற்று; ஆனால் இந்த காரியத்தினின்றும் தப்புவதற்கு வழியொன்றும் காணப்படாமையால் எனக்குற்ற இக்கடமையை என்சக்தியாலியன்ற வளவும் முயன்று மிக்க நன்றாய்ச் செய்துதானாகவேண்டும்.

நமது கதை தொடங்கும் காலத்தில், இந்துலேகைக்குச் சுமார் பதினெட்டு வயதாயிருந்தது. அவளுடைய வடிவத்தின் வசீகரமான வனப்பையும் எழிலையும் தனித்தனியாக விவரமாயெடுத்து வர்ணிப்பதிலும் அவளுடைய மேனி அங்க அமைப்பு ஆகிய இவைகளின் காந்தியைச் சுருக்கமாகவும் பொதுப்படையாகவும் விவரிப்பது எவ்வளவோ சுலபமானது. வெவ்வேறான எவ்வெந்த அம்சங்களும் பகுதிகளும் வெவ்வேறு விதமாகச்சேர்ந்து சௌந்தர்யமென்னும் குணத்தை உண்டாக்குகின்றனவோ அவைகளை எடுத்துரைப்பது பாஷையின் சக்திக்கும் அதீதமானது; அன்றியும் இந்த சௌந்தரியமென்னும் குணமானது ஒரே மாறாத வகையாகத்தான் இருக்கிறதென்று அறுதியிட்டுச் சொல்வதும் மானிடரின் மானஸ சக்தியின் அதிகாரத்துக்குப் புறம்பானதாகும். எந்தெந்த நிலைமைகளிலும் சேர்க்கைகளிலும் கலந்து சௌந்தரியமானது வெளிப்பட்டு விளங்குமோ அவைகளை முன்னதாகவே நம் மானஸ கற்பனையால் பாவித்துக்கொள்வது அசாத்தியமாம்; ஆனால் எந்தெந்த நிலைமைகளையும் சேர்க்கைகளையும் பற்றி பூர்வத்தில் நமக்கு எவ்வித பாவனையும் உண்டாயிருந்ததில்லையோ அந்த நிலைமைகளிலும் சேர்க்கைகளிலும் நாம் சௌந்தரியத்தைப் பார்க்கக்கூடும்; நிச்சயமாய்ப் பார்த்துக்கொண்டுமிருக்கிறோம். ஆகவே அழகிய மேனியானது அட்டக்கரியான நிறமுள்ளதாயிருப்பது அசம்பாவிதமென்று பொதுவாய் நினைப்பது உலக வழக்கம்; ஆனால் (இப்படிச் சொல்வதிலிருந்து, இந்துலேகை அட்டைக் கறுப்பாயிருப்பளென்று நமது வாசகர்கள் தீர்மானம் செய்துவிடக்கூடாது) இந்தக்கரியநிறமானது இதரலக்ஷணங்களுடன் சேரும்பொழுது எழிலுற்றுப் பளபளவென்று காந்திவீசி விளங்காநின்ற நிதர்சனங்கள் நிஸ்ஸங்தேகமாய் இருக்கின்றன. அப்படியே தங்க நிறம்போன்ற தேக காந்தியானது அதையுடைய ஸ்திரீ அல்லது புருஷனுக்கு அழகையளிக்கிறதென்று கருதுவது வழக்கமாயினும், இந்த விதியானது யாதொரு விலக்குமில்லாமல் எல்லாக் காலதேச வர்த்தமானங்களுக்கும் பொருந்துவதல்லவென்று அனுபவத்தில் தெரியவருகிறது.

இவ்விஷயத்தில் என் சொந்த அபிப்பிராயமென்னவெனில் உண்மையான சௌந்தரியத்தின் சாரம் காந்தியிலும் தேஜோமயத்திலுமே இருக்கிறதென்றும், இந்த குண விசேஷங்கள் எங்கெங்கே இருக்கின்றனவோ ஆங்கே சௌந்தரியமும் இருக்குமென்றுமேயாம்.

நமது பாரத வர்ஷத்தில் பெருமையாய்ப் போற்றப்படும் ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள அலங்கார சாஸ்திரங்களிலே கரிவண்டுக் கூட்டத்தை நிகர்த்த கூந்தலும் நீலோற்பலத்தைப் பழித்த விழிகளுமே சிறந்தவையென புகழப்படுகின்றன.

ஆங்கிலக்கவிவாணரோ பொன்னிறக் கூந்தலும் மந்தமான ஒளியுடன் திகழும் மெல்லிய நீல விழிகளும் உடைய மங்கையரையே மகா ரூபவதிகளென்று விரும்பி வர்ணிப்பர். ஆனால், ஸம்ஸ்கிருத நூலாசிரியர் ஆங்கில நூலாசிரியர் ஆகிய இவ்விருபாலார் ஏற்படுத்தியுள்ள சௌந்தரிய லக்ஷணங்களும் சரியென்றே எனக்குத் தோற்றுகின்றது. ஏனெனில், கருங் கூந்தலானது காந்தாமணிகளுக்குப் பேரழகைத் தருகிறதென்று நமக்குள் எப்படி ஏற்பட்டிருக்கிறதோ, அப்படியே ஐரோப்பியமாதர்களுக்குள்ளே, அடர்ந்த பொன்னிறக் கூந்தலுடன் கூட முகத்துக்குக் களையும் காந்தியு மளிக்கும் நீல விழிகளும் சேர்ந்திருந்தால் அவை அந்த ஜாதிக்குப் பொருந்தின சிறந்த லக்ஷணமெனக் கருதப்படுகிறது. சுருங்கக் கூறில், ஐரோப்பிய அங்கனாமணிகளுக்குள்ளே அத்தகைய கூந்தலும் விழிகளும் பெற்ற பாக்கியவதிகள் லாவண்யத்தில் ரதியையும் பழித்த மோகனாங்கிகளென்றே எனக்குத்தோற்றுகின்றது. ஆகவே, ஒரு ஸ்திரீயினிடத்தில் அங்க அவயவங்களின் அமைப்பு தோற்றம், வடிவம், மேனியின் நிறம் ஆகிய இவைகள், எவ்வளவுக்கெவ்வளவு பரஸ்பரானுகூலத்தோடும் மனோஹரமாயும் ஒருமிக்கப் பொருந்தியிருக்கின்றனவோ அந்தப் பொருத்தத்திற்குத் தக்கவாறு அந்த

ஸ்திரீ ரூபவதியென்பதோ அல்லவென்பதோ துணியப்படுமென்று நினைக்கிறேன்; ஆகையினாலே யே, நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறபடி, ஏதோ தனிமையான வழக்கப்பட்ட ஒரு ரூபத்தையோ தேக நிறத்தையோ மனதில் முன்னதாக பாவித் துக்கொண்டு அதுதான் சௌந்தரியத்தின் சிறந்த லக்ஷண மென்றும் அதற்குமேலானது ஒன்றுமில்லை யென்றும் கருதுவதும் யுக்திக்கொவ்வாத தென்று அபிப்பிராயப்படுகிறேன். அன்றியும், ஒரு ஸ்திரீயின் பாதாதி கேசபரியந்தமுள்ள சகல அங்க அவயவங் களையும் தனித்தனியே நோக்கும்போது அவை குற்ற மற்றவைகளாய்த் தோற்றினாலும், மொத்தத் தில் அவளுடைய ஆகிருதியானது அந்தமற்று அழ கு குன்றியிருப்பதும், அவ்வாறே இன்னொரு ஸ்திரீ யின் ரூபரேகா விலாஸங்கள், தனித்தனியே தோ ஷமுள்ளவைகளா யிருந்தாலும் பொதுவாய் அவ ளுடைய தோற்றம் மனோஹரமா யிருப்பதும் அசா தாரணமானவை யல்ல. பின்சொன்ன லக்ஷணம மைந்த லலனாமணிகளே ஸ்திரீரத்னங்களெனப்ப டுவதற்கு உரியவர்களென்பது என் கருத்து. முக விலாசமும் ரூப சௌந்தரியமும் உடைய யாதொரு ஸ்திரீ வாஸ்தவத்தில் ரூபவதிதானா என்று தீர்மானி க்கும்படி என்னைக் கேட்கும்பட்சத்தில், அவளது பாதாதிகேசாந்தமுள்ள சர்வ அங்க அவயவங்களும் பிரதமத்தில் அவைகளைப் பார்க்கும்போது என்ன பாவனையுண்டாகிறதோ அதில் மாத்திரமல்லாமல், அவைகளொவ்வொன்றையும் வெகு கவனமாய் பரி சீலனை செய்யும்போதுகூட கோமளமாயும் சுகுமா ரமாயும் உள்ளத்தையும் உயிரையும் கொள்ளைகொள் ளத்தக்க லாவண்ய விலாஸமுள்ளவைகளாயுமிருக்க வேண்டுமென்று எனக்குத் திருப்திகரமாக ஏற் படவேண்டும்; அன்றியும் அவளது சர்வாங்க ஸ்வரூ பமும் சுடர்வீசி ஜொலித்துக்கொண்டிருக்கவேண்டி யதுடன் பிரதமதர்சனத்தில் அவளால் உண்டாகும் மோஹன சக்தியானது அவளைக்கண்டு பரவசமு ற்று அவளது அழகைக் கொண்டாடிப்புகழும் யௌ வனர்களுக்குத் தெவிட்டுதலை உண்டாக்காமல் சர் வகாலமும் ஒரே மாதிரியாய் அவர்களை உள்ளத்தை அடிமை கொள்ளத்தக்கதாயு மிருக்கவேண்டும். அப்ப டிப்பட்ட அழகமைந்தவர்களே உண்மையில் ரூப வதிகளாவார். அப்படிப்பட்ட ரூபவதிகளுக்குள்ளே எமது கதாநாயகியாகிய இந்துலேகை முதன்மைபெ ற்று விளங்குகிறவளாவாள்.

இந்துலேகையின் தேக காந்தியைப்பற்றி இரண் டொரு வார்த்தை சொல்வது இங்கே அயுக்தமாகா தென நினைக்கின்றேன். அவள் மலையாள மங்கை யர், சாதாரணமாய் ஆடையணிவதுபோல் தன் இடையைச்சுற்றியும் மற்ற அங்கங்களை மறைத்தும் அணிந்திருந்த பூக்கள் சித்தரித்த சேலையின் பொற் சரிகைக் கரையை அவளது தேகச்சாயை அவ்வளவு ஒத்திருந்தபடியால், அவற்றைப் பார்த்த மாத்திரத் தில் அவளது தேகநிற மெது. பொற்சரிகையின் வர்ண மெது வென்று ஒன்றுக்கொன்று தாரதம்யங் காண் பது அரிதாயிருந்தது. அவளுடைய கேசபாசம் கார்முகில்போல் கருத்தும் பட்டுப்போல் கைக்கு மெ ல்லியதாயும், நீண்டும் அடர்த்தியாயும் வளர்ந்திருந் தது; கொவ்வைக்கனிகளை வெட்கச்செய்த அவளது அதரங்களுக்குச் சமானமாக ஐரோப்பிய ரமணிகளி ன் இதழ்களை ஒருக்கால் உரைக்கலாமேயன்றி மற்றப் படி அவைகளுக்கு நிகர் வேறெங்கும் ஒருபோதும் கண்டது கிடையாது. அவளுடைய நயனங்கள் "கஞ்சத்தின் அளவிற்றேனும் கடலினும் பெரிய கண்கள்" என்றபடி காதளவும் ஓடி விசாலமாயும் அக்கண்களின் காந்தியான கோமளமாயும் ஸ்பஷ் டமாயும் ஒளிர்ந்தன; அவளது கடை கண்ணோக்கத் தினின்று வீசும் மின்னற்கொடியின் மாண்பையுணர் ந்தவர்களே அக்கூரிய கடைக்கண் பார்வை எவ்வ ளவு ஆழமாய் மனிதரின் நெஞ்சங்களைப் பிள ந்து வாட்டியதென்பதை யறிவர். நான் எந்த கால த்தைக் குறித்து எழுதுகிறேனோ அந்த சமயத்தில் அவளுடைய சிரசு முதல் இடைபரியந்தமுள்ள அங்கங்கள் நன்றாய் முதிர்ச்சியடைந்து பூர்ண யௌ வனம் ததும்பப்பெற்றிருந்தது; அவளுடைய வக்ஷஸ் தலமோ பத்தரைமாற்றுத்தங்கத்தின் நிறத்தையும் பழித்த காந்தியுடன் பிரகாசித்தது. ஆனால் கணக்க ற்ற எத்தனை ரூபரேகா விலாஸங்கள் ஒன்று சேர்ந்து இந்து லேகையைத் தன்னேரில்லா மங்கையர் திலக மாய்ச் செய்தனவோ அவைகளை யெல்லாம் ஒன்று விடாமல் வர்ணிக்க எத்தகைய கவிவாணனாலும் ஆகாது. இனி அவளது மேனியின் சுவர்ணகாந்தி யையும் முத்துக்களின் வரிசைபோன்ற பற்களையும் பவளவாயிதழ்களையும் நீலோற்பல மலரை வெட்கச் செய்யும் நேத்திரங்களையும் பட்டுபோல் மழமழவென் றிருக்கும் கருங்கூந்தலையும் சிற்றிடையையும் கண்டு சந்தோஷத்தால் சித்திரப்பதுமைபோல் அசை வற்று நின்ற ஆடவர்களின் அகமகிழ்ச்சியையும் ஆநந்தக்களிப்பையும் பேருவகையையும் எடுத்துரை க்க எவராலுமாகாதென்பதை நான் பிரியமாய் இங்கு ஒப்புக்கொள்ளுகின்றேன்.

(இன்னும் வரும்)

## நீலி வசீகரம்

AN ADAPTATION OF SHAKESPEARE'S "TAMING OF THE SHREW"

(ஆங்கிலேய கவி "ஷேக்ஸ்பியர்" இயற்றிய நாடகத்தின் தமிழ் அமைப்பு)

நாடகபாத்திரங்கள்

ஒரு ஜமீந்தார்.

ஜம்புகராமன், ஒரு தகரக்கடைக்காரன், வேட்டைக்காரர், வேலையாட்கள், நாடகக்காரர், சத்திரக்காரி, கையாள். } பிரஸ்தாவனையில் வருபவர்கள்

ரகுநாத தேவர்:—மதுரையில் ஒரு பெரிய தனிகர்

நல்லநாயக உடையார்:— தஞ்சைப் பிரபு.

விஜயராகவ உடையார்:—நல்ல நாயக உடையாரின் மகன். வனிதேசுவரியின்மேல் காதலானவர்.

நாராயணத்தேவர்:—உறையூர் பிரபு கௌதமியின் புருஷர்.

பொன்னம்பலத் தேவர், பிரதாப ருத்திர தேவர் } வனிதேசுவரியை மணக்க வந்தவர்.

சுப்பராயன், கேசவன் } விஜயராகவ உடையாரின் வேலைக்காரர்.

பொன்னன், பழனியாண்டி } நாராயண தேவரின் வேலையாட்கள்.

ஒரு தீர்த்த யாத்திரி.

கௌதமி தேவி:—நீலி, வனிதேசுவரி } ரகுநாததேவரின் குமாரத்திகள்.

சுசீலை:—பிரதாப ருத்திரரின் மனைவி.

தையற்காரன், ஜவுளிக்கடைக்காரன், ரகுநாத தேவரின் வேலையாட்கள், நாராயண தேவரின் வேலையாட்கள்.

நாடக நிகழ்விடம்:—மதுரையிலும், உறையூர்ப் பக்கத்திலும்

## நீலி வசீகரம்

களம்:— 2. ஜமீந்தாரின் மாளிகையில் சயன மண்டபம் (ஜம்புக ராமன் திவ்ய வஸ்திர தாரியாக விருக்கிறான். சேவகர்களில் சிலர், வஸ்திரங்களையும், சிலர் வெள்ளித் தட்டுக்களையும், சிலர் வேறு பொருள்களையும் வைத்துக் கொண்டு நிற்கின்றனர். ஜமீந்தார் ஒரு சேவக வேஷம் பூண்டு பிரவேசித்தல்.)

ஜம்புக:— போகட்டும், இன்னும் ஒரு மொந்தை போடு.

முதல். சேவகன்:— துரையே! நேர்த்தியான பானகம் இருக்கிறது, அருந்துகிறீர்களா?

இரண். சேவ:— பிரபுவே! இந்தப் பணியாரவகைகளில் பிரியம் உண்டோ?

மூன்ற. சேவ:— ஆண்டவனே! இன்றைக்கு எவ்விதமான உடைதரித்துக்கொள்ள விருப்பம்?

ஜம்புக:— நீங்கள் யாவர்? நான் துரையுமில்லை, பிரபுவுமில்லை, ஆண்டவனுமில்லை. நான் ஜம்புக ராமன். எனது வாழ்நாளில் நான் பானகத்தையும் பணியாரங்களையும் கண்டதே யில்லை. வேண்டுமானால் இரண்டொரு தோசை கொடுங்கள். எந்த உடைதரித்துக் கொள்ளவேண்டு மென்று கேட்கிறீர்கள்? என்னுடைய கௌபீனத்தைத் தவிர, எனக்கு வேறு வஸ்திரம் ஏது?

ஜமீந்தார்:— மகாராஜ்! தாங்கள் இன்னும் இவ்விதமாகப் பேசுவது நன்றாக விருக்கவில்லை; தங்களைப்போன்ற கீர்த்திப் பிரதாப சௌந்தரிய மகாநுபாவருக்கு இந்த அற்பவெண்ணம் தகாது.

ஜம்புக:— என்ன, என்னைக் கேவலம் பைத்தியம் பிடித்தவனாகச் செய்து விடுவீர்கள்போல விருக்கிறதே! நான் ஜம்புக ராமன் அல்லவா? எனது தகப்பன் கொடும்பாளூர்ச் சுப்பராமன் அல்லவா? பிறவியால் நான் ஒரு மறவன்; கல்வியால் குறவன்; சகவாசத்தால் குரங்காட்டி; இப்போதைய தொழிலால் தகரக்கடைக்காரன். நான் சொல்வது சந்தேக முள்ளதாக விருந்தால், வள்ளியைப்போய்க் கேளுங்கள். அவளுக்கு நான் பதினாலு காசு கடன் கொடுக்கவேண்டும். அவள்

ஆமாம் என்றுசொல்லாமற்போனல், என்னைவெரும் பொய்யன் என்று கூப்பிடுங்கள்.

மூ. சேவ:—ஓ! இதனுல் தானே தங்கள்தேவி மனம் வருந்துகிருள்!

இர. சேவ:—ஐயோ இதனுலேயே தங்கள் வேலைக்காரர்கள் எல்லோரும் விசாரப்படுகின்றனர்!

ஜமீ:—இதனுல்தான் தங்கள் உற்ருர் உறவினர் தங்கள் வீட்டுக்கு வராமல் போகின்றனர். துரையே! தங்கள் மேன்பிறப்பை நினைத்துப் பார்க்க வேண்டும்; இந்த அற்ப எண்ணங்களை யெல்லாம் தூர அகற்றிவிடவேண்டும். தங்கள் சேவகர்கள் எல்லோரும் அவரவர்கள் வேலைகளைச் செய்வதற்கு எவ்வளவு பணிவுடன் நிற்கிருர்கள். தாங்கள் சற்று சங்கீதம் கேட்கிறீர்களா? (சங்கீதம்) இனிய குரலுடன் தேவ கானம் கேட்கின்றதே! சற்று நித்திரை செய்கிறீர்களா? மிருதுவான பஞ்ச சயனத்துக்குக் கொண்டு போகிருேம்; சற்று உல்லாஸமாப் பிரியமா? பாதை முழுவதும் சுத்தமாகச்செய்யப் பட்டிருக்கிறது.ஒருவேளை,குதிரையேறிச் சவாரி செய்ய இஷ்டமாயின் உயர்ந்த அராபிக்குதிரைக்கு விலையுயர்ந்த சேணங்கள் பூட்டிக்கொண்டுவந்து நிறுத்துகிருேம்; வேட்டைக்குப் புறப்படப் பிரியமானுலும், வேட்டை நாய்களைத் தயாராக்கி வைத்திருக்கிருேம்.

மூ. சேவ.—பிரபுவே! தங்களுக்கு அழகிய படங்களின் மேற் பிரியமோ? மந்தஹாஸத்தோடு மோகினி ஊஞ்சலாடும் படமும், திலோத்தமை வெகு அழகாகப் பந்தடிக்கும் படமும் கொண்டு வரட்டுமா?

ஜமீ.—சகுந்தலா ஜனன படம் வேண்டுமானுலும் கொண்டுவருகிறேன்.

இர. சேவ.—ராதாகிருஷ்ண படத்தைப் பார்க்கிறீர்களா?

ஜமீ.—தாங்கள் ஒரு பெரிய ஜமீந்தார் என்பதை மறந்துவிட்டீர்களோ? ரதிதேவியும் தோற்றுப் போகும்படி அழகுடன் விளங்கும் ஸ்திரீ யொருத்தி தங்களுக்கு நாயகியாகவிருப்பதையும் நினைக்கவில்லையா?

மூ. சேவ.—பிரபுவே! தங்கள் தேகஸ்திதிக்குப் பெரிதும் வருந்தி அவள் அழுதழுது கண்ணீர் சொரிய,முகம்வாட,நிற்கின்றனள் என்ருலும் தங்கள்தேவியின் அழகுக்கு நிகராய் எவரும் இல்லையென்றே சொல்லவேண்டும்.

ஜம்புக.—ஆனல், நான் ஒரு ஜமீந்தாரர் தானு? எனக்கு அப்படிப்பட்ட மனைவி யொருத்தி இருக்கிருளா? நான் கனவு காண்கிறேன் போலத் தோன்றுகின்றது. இல்லை இல்லை; விழித்துக் கொண்டேயிருக்கிறேன்; நீங்கள் நிற்பதைக் காண்கிறேன்; உங்கள் வார்த்தைகளைக் கேட்கிறேன்; நானும் பேசுகிறேன்; நறுமணம் வீசுவதையும் உணர்கிறேன்; ஆதலால் இது கனவன்று; உண்மையில் நான் ஜமீந்தாரன்தான். தகரக் கடைக்கார ஜம்புகராமன் அன்று—நல்லது, நம்முடைய மனைவியை யழைத்து வாருங்கள்; அதற்குள் இன்னெரு மொந்தை போடமாட்டீர்களா?

இர. சேவ:—பிரபுவே! முகத்தைத் துடைத்துக் கொள்ளுகிறீர்களா? (ஒரு பாத்திரத்தில் ஜலத்தையேந்திக்கொண்டு ஒருசேவகன் நிற்கிருன்.) இத்தனை நாளாய் மதிமயங்கி யிருந்தீர்களே. பதினைந்து வருஷங்களாக, கனவு கண்டவர் போலவிருந்து, இப்போது சுயபுத்தி வந்ததற்கு, நாங்கள் மிகவும் சந்தோஷிக்கிருேம்.

ஜம்புக:—பதினைந்து வருஷமா? பேஷ்! பேஷ்! நல்ல தூக்கந்தான் தூங்கியிருக்கிறேன்; அப்போதெல்லாம் நான் ஒன்றும் பேசினதே யில்லையா?

மூ. சேவ:—பேச்சுக்கு என்ன குறை? என்னென்னவோ பிதற்றினீர்கள்; இந்த அற்புத மண்டபத்தில் கிடத்தியிருக்கையிலும், வீட்டைவிட்டுத் துரத்திவிடப்பட்டதாகப் பேசுவீர்கள்; எல்லோரையும் கண்டபடி வைவதும், அடிப்பதும் வழக்கம். எங்கள் எஜமானியை வள்ளியென்று கூப்பிட்டு, அடிப்பீர்கள்.

ஜம்புக:—ஆமாம்; அது தானே அவள் பெயர்.

மூன்று சேவக:—துரையே! அப்பெயருடைய ஸ்திரீ ஒருத்தியும் தமது மாளிகையில் இல்லை, சப்பன் என்றும், சடையன் என்றும், கணபதி என்றும் கூப்பிடப்பட்டவர்களும் இங்கு இல்லை.

ஜம்புக:—போனது போகட்டும் ;இப்போதாவது எனக்கு நற்போதம் வந்ததே. இதற்காகப் பிள்ளையாருக்குப் பத்துத் தேங்காய் உடைக்கிறேன்.

எல்லோரும்:—ததாஸ்து

ஜம்புக:—உங்களுக்கெல்லாம் வந்தனம்; என்னை நன்ருகக் காப்பாற்றினதற்காக உங்களுக்கு விசேஷ வெகுமதி செய்யப் போகிறேன்.

(ஸ்திரீவேஷம் பூண்டு கையாள் கிருஷ்ணன், பரிவாரசகிதம் வருதல்.)

கையாள்:—எனது அருமை நாதரின் தேகஸ்திதியெப்படியிருக்கிறது?

ஜம்புக:—நன்ருகத் தானிருக்கிறது. நம்முடைய மனைவி யெங்கே? இன்னும் வரவில்லையா?

கையாள்.—நாதா? இதோ நிற்கிறேனே. என்ன செய்யவேண்டு மென்கிறீர்கள்?

ஜம்புக:—நீதான் என் மனைவியோ? மறந்து போய்விட்டது. அவளை எப்படிக் கூப்பிடவேண்டும்?

ஜமீந்தா:—'நாயகி' யென்று.

ஜம்புக:—'ரங்க நாயகி' யென்றா, 'தையல் நாயகி' யென்றா?

ஜமீந்தா—'நாயகி' யென்று மாத்திரம் தான்; பிரபுக்கள் எல்லோரும் தங்கள் மனைவிகளை அப்படித்தான் அழைப்பார்கள்.

ஜம்புக:—நாயகி! நான் பதினைந்து வருஷமாக மதிமயங்கி யிருந்தேன் என்கிறார்களே வாஸ்தவம் தானா?

நையாள்:—அதையேன் கேட்கிறீர்கள்? அவர்களுக்குப் பதினைந்து வருஷமாக விருந்ததானது எனக்கு முப்பது வருஷமாக விருந்தது. உங்களுக்கு நேர்ந்த வியாதியால் எனக்கிருந்த வருத்தம் இவ்வளவு அவ்வளவு என்றில்லை.

ஜம்புக:—போதும் சேவகர்காள்! நீங்கள் உடனே போய்விடுங்கள்; என் மனைவி மாத்திரம் இங்கேயே இருக்கட்டும்

நையாள்:—நாதா! இன்னும் இரண்டொருதினம் மாத்திரம் பொறுத்துக்கொள்ளுங்கள். நான் உங்களுடன் கூடியிருந்தால் பழயபடி மதி மயக்கம் வந்துவிடுமென்று வைத்தியர்கள் திட்டமாய்ச் சொல்லி யிருக்கிறார்கள். ஆதலால் மன்னிக்கவேண்டும்.

ஜம்புக:—சரி! தொலையட்டும், அப்படியே அதுவரையில் பொறுத்திருக்கிறேன். இல்லாதபோனால்தான் பழயபடி வியாதிவந்து விடுமென்கிறாயே!

(ஒரு சேவகன் வருதல்)

சேவகன்:—பிரபுவே! தங்களுக்கு உடம்பு சௌக்கியமாய்விட்டதைக் கேட்டு, தங்கள் நாடகக்காரர்கள் வந்திருக்கின்றனர். மனதிலுள்ள விசாரத்தால்தான் இந்த வியாதி வந்ததென்றும், நல்ல வேடிக்கையான நாடகங்களைப் பார்த்து ஆநந்தப்பட்டால் மனச்சந்தோஷ முண்டாகி, வியாதி தீருமென்றும் வைத்தியர்கள் சொல்லியிருக்கின்றனர். அதனால் ஆயுள்கூட விருத்தியடையுமாம். இஷ்டத்தைத் தெரிவிக்கவேண்டும்.

ஜம்புக:—அப்படியானால் அதையும் பார்ப்போம்; நம்முடைய குக்கிராமங்களில் காளிகோயிலில் ஆடும் "கம்சவதக் கூத்தைப்போல விருக்குமா?

சேவகன்:—இல்லை, பிரபுவே! அதைக்காட்டிலும் வெகு வேடிக்கையாகவிருக்கும்.

ஜம்புக:—என்ன, அகமுடையான் பெண்டாட்டி கதையோ?

சேவகன்:—இல்லை, துரையே! நிஜமாக நடந்தசரித்திரம் ஒன்றை ஆடுவார்கள்.

ஜம்புக:—சரி, வரட்டும்; பார்ப்போம்; நாயகியம்மாள், கிட்டவந்து உட்கார்; நாம் வேடிக்கை பார்ப்போம். (உட்காருதல்)

பிரஸ்தாவனை முற்றிற்று.

## சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES.

கடவுளின் மகிமை:—மரத்தின்மேல் இரண்டு புறாக்கள் உட்கார்ந்திருக்கின்றன. அதில் ஒன்று ஆண், ஒன்றுபெண். இவைகளைக் கொல்ல, நாணில் அம்பு பூட்டின வண்ணமாக ஒரு வேடன் பூமியில் நிற்கிறான். மேல், இராஜாளி இவ்விரண்டு பட்சிகளையுங் கொல்ல குறிப்பாகச் சுற்றிக்கொண்டிருக்கிறது. ஆ! தெய்வமே என்ன செய்வோம் என்று அவை துன்பமடைகின்றன. வேடனைப்பாம்பு கடித்தது. அவன் செத்தான். கைதளர்ந்து கையிலிருந்த அம்பு புறப்பட்டு இராஜாளியைக் கொன்றது. பட்சிகள் சௌக்கியமடைந்தன. கடவுளின் மஹிமையை காணவல்லவர் யார்.

***

கடவுள் ஸர்வாந்தர்யாமி:—தமையன் தம்பியை நோக்கி "அப்பா நீ கடவுள் இருக்கும் இடத்தைக் காட்டுவாயானால் உனக்கு ஒரு மாம்பழம்தருவேன்" என்றான். அதற்குத் தம்பி, "அண்ணா நீ கடவுள் இல்லாத இடமொன்றைக் காட்டுவாயானால் உனக்கு இரண்டு மாம்பழம் தருவேன்" என்றான். இதுவும் அன்றி மஹாபக்த சிரோமணியான பிரஹ்லாதாழ்வாரை நோக்கி அவரது பக்தியற்ற கொடிய தகப்பனாகிய ஹிரண்யன், 'நீ புகழ்ந்து பேசும் ஹரி எங்கு உளன், காட்டு' என, அதற்கு அவர் 'சாணினும் உளன், ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட கோணினும் உளன்; மாமேருக்குன்றிலும் உளன்; இந்நின்ற தூணினும் உளன்; நீ சொன்ன சொல்லிலும் உளன்; இத்தன்மை காணுதி விரைவில்'' என்றார். இவைகளால் கடவுள் எங்கும் பரவி இருக்கின்றார் என்பது வெளியாகின்றது.

***

உலகத்தைச்சுற்றி வருதல்:— ஈசுவரன் ஒரு நாள் பார்வதியோடு வீற்றிருக்கையில் தமது பிள்ளைகளாகிய கணபதி ஸுப்ரஹமணியன் ஆகிய இவர்களை அழைத்து,'அப்பா என்னிடத்தில் ஒரு அருமையான பழம் இருக்கின்றது. உங்களுள் எவன் ஒருவன் பிரம்மாண்டம் முழுவதையும் சுற்றி விட்டு முதலில் என்னிடம் வந்து சேருகிறானோ அவனுக்கு அதை கொடுத்துவிடுவதாக எண்ணி இருக்கிறேன்' என்றார். ஸுப்ரஹ்மணியருக்கு அந்த பழத்தை அடையவேண்டும் என்ற ஆவல் உண்டாக உடனே பிரம்

மாண்டத்தை வலம்வரத் தமது மயிலின்மேல் ஏறினுர்.அது அவரைவாயுவேகமனோவேகமாகஎடுத்துச்சென்றது. கணபதியோ தன் தம்பியின் தலை மறையும் வரை, சும்மாவிருந்து விட்டு, பின்பு மெதுவாக எழுந்து தமது தாய் தகப்பன்மாரை வலம் வந்து 'இப்பொழுது இருக்கிறதும், இதுவரையிலும் இருந்ததும், இனிமேல் உண்டாகப் போகிறதும் ஆகிய அண்டங்கள்யாவும் உம்முள்ளேயே அடங்கி இருக்கின்றன. நான் உங்களைச் சுற்றிவந்தால் இவைகள் எல்லாவற்றையும் வலம் வந்தவனுவேன். ஆகையால் பழம் என்னைச்சேரவேண்டியது' என்று சொன்னுர். இந்த மொழியைக் கேட்டு பார்வதிபரமேசுவராள் மகிழ்ந்து கணபதிக்கே அந்த அருமையான பழத்தைக் கொடுத்தனர். இந்தக்காரியம்முடிந்து வெகு நாழிகைக்குப் பிறகு, வேர்க்க விருவிருக்க தமது மயிலின்மேல் ஏறிவந்த ஸுப்ரஹ்மணியர் தாம் மோசம்போய் விட்டோம் என்று அறிந்தாரே ஒழிய வேறில்லை. இக்கதையை உள்ளவாறு எடுத்துக்கொண்டு சண்டையிடக் கூடாது. இதில் அடங்கி இருக்கும் உட்பொருளே மிகச்சிறந்தது. அதாவது 'கடவுளை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும். வெளிப்பிரபஞ்சத்தை எவ்வளவு நுட்பமாக அறிந்தபோதிலும் அதனுல் நமக்கு ஞானம் என்னும் பழம் ஒரு நாளும் கிடைக்காது வெளிஞானம் வரும் என்பதற்கு ஸந்தேகமில்லை, ஆனுல் முதிர்ந்த ஞானமும் அதனுல் உண்டாகும் சாந்தியும் ஆனந்தமும் நம்மை அணுகா' என்பதே.

***

மனம்மாற ஜகம்மாறும்:—ஒருநாள் கிருஷ்ணபகவான் தருமபுத்திரருக்கும் துரியோதனனுக்கும் உள்ள தாரதம்யத்தை வெளியாக்க எண்ணி தருமபுத்திரரை அழைத்து 'அப்பா, நீ தேடிப்பார்த்து பத்து கெட்டவர்களை அழைத்துவா' என்றும், துரியோதனனை அழைத்து 'அப்பா நீ பத்து நல்லவர்களைத் தேடி அழைத்துவா' என்றும் ஏவினுர். அப்பொழுது துரியோதனன் மிகுந்த ஆவலோடு தேடத் தொடங்கினுன். இந்த ஆவலை விருத்தி செய்ய பகவான், கிடைக்கும் நல்லவரை வைத்துக்கொண்டு ஒரு யாகத்தை செய்து முடித்தால் அதனுல் பாண்டவர்களை எளிதில் அழித்து விடலாம் என்று அவனுக்கு ஆசைகாட்டி இருந்தார். துரியோதனன் எவ்வளவுதேடியும் அவனுக்கு ஒரு நல்லவன் கூட அகப்படவில்லை. ஏனெனில் அவனுக்கு எங்கும் சிறுகுற்றங்கள் இருப்பனவாகவே தோன்றிற்று. இதுபோல தருமபுத்திரரது ஊக்கமும் பயனற்றதாக முடிந்தது. அவருக்கு திருடன், கொலையாளி தாயைக் கொன்றவன், தகப்பனைக் கொன்றவன் முதலிய கொடியவர்களும் அஞ்ஞானத்துக்கு ஆளாகித்தத் தளிப்பவர்கள் என்றும், அவர்களுக்கு உண்மைஞானமிருக்குமாயின் தமது தொழிலை உடனே விட்டுவிடுவார்கள் என்றும் தோன்றிற்று. ஆகையால் ஸகலகுணபூரணரானதர்மபுத்திரருக்கு எல்லாம் தெய்வத்தன்மை வாய்ந்த சிறந்த வஸ்துக்களாகவே தோன்றின. ஆகவே திரும்பிவருகையில்அவர் பகவானை நோக்கி, 'பரம்பொருளே! நான் ஒரு குற்றவாளியையும் கண்டிலேன். குற்றவாளியைக் காணவேண்டும் என்ற ஆவலோடு புறப்பட்ட நானே குற்றவாளி' என்று நொந்துகொண்டார். இதனுல் உலகத்தின் நிலை ஒருவன் மனோநிலைமையைப் பொருத்தது, என்று தெரியவருகிறது.

***

மனதை ஜயித்தவனே வீரன்:-மஹாபலி என்றொரு அசுர அரசன் இருந்தான். அவன் திருலோகங்களையும் ஜயித்து சிறப்பை அடைந்தான். அவனுக்கு இன்னும் நாம் ஜயிக்கத்தக்க இராஜ்யங்கள் இல்லையே என்ற ஏக்கம் உண்டாயிற்று. அப்பொழுது புத்திசாலியாகிய மந்திரி அவனை நோக்கி, 'நீங்கள் உலகம் முழுவதையும் ஜயித்த தென்னமோ உண்மை தான், ஆனுல் இவைகள் எல்லா வற்றையும் விடப் பெரிதாயும், செல்வச் சிறப்புற்றதாயும் உள்ள ஒரு ராஜ்யம் இருக்கிறது. அதை நீங்கள் ஜயிக்கும் வரையில் உங்களுக்கு வீரர் என்ற பெயர் தகாது' என்ருன். இதைக் கேட்டதும் அரசனுக்கு அந்த ராஜ்யத்தை ஜயிக்கவேண்டும் என்ற ஆவலுண்டாக, 'அந்த ராஜ்யம் எங்கே இருக்கிறது. யார் அதற்கு அரசன்' என்ற விசாரணைகளைச் செய்யத் தொடங்கினுன்' அதற்குமந்திரி, 'அந்த ராஜ்யத்தின் அரசன் ஸாது; குற்றமற்றவன். ஆனுல் அவன் மந்திரி தந்திரசாலி; அவனைக் கொல்லுவது அஸாத்யம், அவனை எப்படியாவது அடக்கின பின்புதான் அந்த ராஜ்யத்தை அணுக முடியும்' என்ருன். உடனே அரசன்அதை ஜயிக்க மஹா வீராவேசத்தோடு ஸேனைகளைச் சேர்க்கத் தொடங்கினுன். இதைக் கண்டு மந்திரி நகைத்துக்கொண்டு 'நான் சொல்லி வரும் ராஜ்யம்

உள்ளேயே இருக்கிறது' என்று குறிப்பாக எடுத்துக் காட்ட, அரசன் புத்திமானுகையால் இந்தக் குறிப்பை அறிந்து கொண்டு 'நீ சொல்வது உண்மை தான்; எனக்குள் இருக்கும் ராஜ்யத்து அரசனுகிய ஆத்மாவை அனுக அவன் மந்திரியாகிய மனதை ஜயிக்காது முடியாது. ஆயினும், ஆத்மாவைக் கவனியாது உலகை ஜயிப்பதால் பயன் என்ன?' என்று வாய்விட்டுச் சொல்லிவிட்டு, அன்றுமுதல் அவன் பிரம்மநிஷ்டை பழகத்தொடங்கினன்.

***

நைம்மாறு கருதாப் பக்தி.—மஹா தர்மிஷ்டரான தர்மபுத்திரர், தனது சகோதரரான துரியோதனுதியரால் துரத்தப்பட்டு இமயமலைச்சாரலில், தனது தம்பிமார் நால்வர், திரௌபதி ஆகிய இவர்களோடு, வனவாசம் செய்யும் காலத்தில், ஒருநாள் அவரைப் பார்த்து, "நீங்கள் இவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்குங் காலத்திலும் கடவுளை மறவாது பக்தி செய்து வருகிற தெவ்வாறு?" என்று திரௌபதி வினவினள். அதற்கு யுதிஷ்டிரர், "பெண்ணே! இதோ இந்த இமயமலையைப் பார். எவ்வளவு மனோரம்மியமாய் இருக்கிறது, எனக்கு இதை எப்பொழுதும் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் என்ற ஆவல் உண்டாகின்றது. எனக்கு ஏதாவது இந்த மலை பிரத்யுபகாரம் செய்கின்றதா? இப்படி இருந்தபோதிலும், கம்பீரமாயும், மனோரம்யமாயும், இருப்பவைகளிடத்தில் ஆவலிருப்பது என் ஸ்வபாவம், ஆனதினுலேதான் இதனை மிக விரும்புகிறேன். இதுபோலவே நான் கடவுளையும் பக்தி செய்கிறேன். அவர் இந்த உலகிலுள்ள ஸகல காம்பீர்யத்திற்கும் அழகிற்கும் மூல காரணம். மெய்யன்போடு விரும்பத்தக்க வஸ்து கடவுள் ஒருவரே; அவரை விரும்புவது என்னுடைய ஸ்வபாவம். ஆகையால் நான் அவரை பக்தி செய்கிறேன். இப்படிச் செய்வதற்கு நான் ஒரு கைம்மாறும் அபேக்ஷிக்கவில்லை. இப்படி பக்தி செய்வதே எனக்கு திருப்திகரமாயும் சுககரமாயும், இருப்பதால் நான் இவ்வாறு இருக்கிறேன். இந்தப் பக்தியை வியாபார ரூபமாய்க் கைம்மாறு கருதிச் செய்வது என்றால் முடியாது" என்று மறுமொழி சொன்னர்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

"கணவன் வீடே எனது கோவில். கணவனே எனக்குக் கடவுள். கணவனுக்கு வேண்டியதைச் செய்தல்தான் எனக்கு தர்மம். கணவனுக்காக உயிரை அளித்தல்தான் எனக்கு யாகம். இவைகளை இடைவிடாமல் செய்வதற்கு என் கணவன் எனக்கு அருள்புரிவாராக" என்று எவள் மனதிலுதிக்கிறதோ அவளே பதிவிரதை.

***

தலனிபேகம் என்றொருவளிருந்தாள். அவள் ஒரு டெல்லிபாச்சாவின் மனைவி. அவள் தமையன், பாச்சாவின் சேனுதிபதி. சேனுதிபதியும் தலனியும் தமையன் தங்கையென்று பாச்சாவுக்குத் தெரியாது. சேனுதிபதி திருட்டுத்தனமாக இராஜ்யத்தைக்கவர எண்ணங்கொண்டான். இதை வெளிக்காட்டாமல் பாச்சாவை இங்கிலீஷ்காரர்மேல் படையெடுக்கச்சொன்னன். தலனி பாச்சாவுக்குத் தெரியாமல் இராத்திரியில் அண்ணனிடம்போய் படையெடுக்கவேண்டாமென்று கெஞ்சினள். என்னப்பிரயோஜனம்.

***

"தலனீ, நீ பயப்படவேண்டாம் பாச்சாபோனுல் மற்றொருவனை மணக்கலாம்" என்றான். "துரோகி நீ எனக்கு கூடப்பிறந்தவன் அல்லவே யல்ல. நீ பரம சண்டாளன். என்கணவன்தான் எனக்குயிர். இன்றுமுதல் நான் உன்தங்கை என்று எண்ணவேண்டாம் உன்னை தமையன் என்று எண்ணுவதே பெரும்பாவம்" என்றாள். சரியான பத்னிக்கு கணவனைப்பற்றி ஏதேனும் தாழ்மையாக ஒருவர் சொன்னல் பின்பவர் முகத்தைக்கூட எட்டிபார்க்கமாட்டார், அதுவே பதிவிரதையின் லக்ஷணம்.

***

தன் எண்ணத்தை தலனி எங்கு பாச்சாவிற்கு தெரிவித்துவிடுவளோ என்று பயந்தான். தன்னூருக்கு வெளியில் அவளை அவ்விரவில் விடாமலிருக்க காவற்காரருக்கு உத்தரவு செய்தான். காலையில் போனல் பாச்சா இவளைக் கொன்றுவிடுவான் என்பது அவன் கருத்து. துருக்கர் வீட்டில், மனைவி வீட்டைவிட்டு போகக்கூடாது. போனுல் வீட்டில் சேர்த்துக்கொள்ளமாட்டார்கள்.

தலனி பிறர் கையி லகப்பட்டுக்கொண்டு கஷ்டமடைந்து கொண்டிருக்கிறாள். சிலரவளை வியபசாரி என்று அரசனிடம் சொன்னார்கள். பாச்சா அவளுக்கு விஷம்கொடுத்து கொன்றுவிடு என்றான். இந்த சங்கதி தலனிக்குத் தெரிந்தது. அவள் விஷம்வாங்கிக்கொண்டு "நான் என்கணவன் வார்த்தையை ஒருநாளும் தவறவில்லை. அவர் விஷம் என்னை வாங்கிக்கொள்ளச்சொன்னால் இதோ வாங்கிக்கொள்ளுகிறேன். இதை அவர் பார்த்து சந்தோஷிக்க கொடுத்துவைக்கவில்லையே" என்று சொல்லிக்கொண்டு குடித்துவிட்டாள். இதுவல்லவா நாயகபக்தி.

***

கணவனுடைய உபகரணமாக இருப்பவளே மனைவி. அவன் எவ்வாறு செய்யவிரும்புகிறானோ அவ்வாறு செய்தலேஅவள் தொழில். அவன் எந்த மாதிரி நடந்தால் சந்தோஷமடைவான் என்று அறிந்து நடப்பது தான் அவள் குணத்திற்கு பெருமை.

***

கணவன் எது சொல்லியபோதிலும் அதை உடனே செய்துவிடவேண்டும். அப்படி செய்வதுதான் அவனுக்கு மனைவி இடத்து சந்தோஷம் கொள்ளும்படி செய்யும். அவன் சந்தோஷமடைவதுதான் அவளுக்கு பெருமை. இக்கருத்தை மனதில் எவள் பதித்துக்கொண்டு நடக்கிறாளோ அவள்தான் சரியான மனைவி.

***

அஹலிகை என்பவள் கௌதம ரிஷியின் மனைவி. இவள் கற்பை அழிக்க இந்திரன் கோழி உருவெடுத்து விடியற்காலத்தில், காலத்திற்குமுன்னமே கூவி கௌதமர் காலைக்கடன் கழிக்கபோகும்படி செய்தான். பின்பவன் கௌதமர் ரூபம்கொண்டு அவள் கற்பை அழித்தான். இதை அறிந்த கௌதமர் அஹலிகையை கல்லாகும்படி சபித்தார். அந்தமாதிரி நான் நடக்கமாட்டேன் என்று சத்யம் செய்வதற்காகத்தான் ஒவ்வொருபெண்ணும் அம்மிக்கல்லை கலியாண காலத்தில் மிதிப்பது; அதாவது "நான் சரியாக நடக்கா விட்டால் நான் கல்லாய் காலால் மிதிக்கப்படுவேனாக" என்று மனைவிசொல்வது. அது அவள் பிரதிக்ஞை ஆகும்.

***

முள்ளை முள்ளால் வாங்கிவிடுகிறோம். உஷ்ணத்தை உஷ்ணத்தால் நிவாரிக்கிறோம். வைரத்தை வைரத்தால் வெட்டிவிடுகிறோம். கஷ்டத்தை கஷ்டத்தால் போக்கிவிடுகிறோம். எவ்வித மாயா நெருப்பையும் பதிவிரதா தர்மம் என்கிற நெருப்பாலெரித்துவிடலாம்.

கடவுளை மனிதர்கள் தொழும்பொழுது சாம்யார்த்தமாக செய்யக்கூடாது. இது நமது மதக்கொள்கை. ஒரு பெண் தன் கணவனிடம் ஒரு லாபத்தைக்குறித்து ஆசையாய் இருப்பதென்றால் பக்தி ஆகமாட்டாது. அப்படிசெய்வது வியாபாரமாகும். மணஞ்செய்துக்கொள்வது வியாபாரஞ் செய்வதற்கல்ல. மனைவி கணவனிடத்தில் அழுந்தி மனைவியுங் கணவனுங்கூடி பிரமத்தில் ஐக்கியமாக வேண்டியது. இதுவே நமது மதக்கொள்கை. இதுவே மணஞ்செய்துக்கொள்வதின் முக்கியக்கருத்து.

***

விவாஹம் செய்துக்கொள்ளும்பொழுது கலியாணப்பெண்ணை "அருந்ததியைப் பார்த்தையா" என்று புரோஹிதர் கேழ்க்கின்றார். அவள் "பார்த்தேன்" என்று பதில் சொல்லுகிறாள். அருந்ததி மஹா பதிவிரதை. அவளைப் பார்க்கச்சொல்வது, அருந்ததியைப் பார்த்து அவளைப்போல் பதிவிரதையாகவிருந்து நாரீரத்னமாக வேண்டுமென்பதுதான். பெண் "பார்த்தேன்" என்பது அவளைப்போல் நடந்து நானுமொரு அருந்ததி போலிருப்பேன் என்று வாக்களிப்பதுதான்.

***

தன் கணவன் கோபங்கொண்ட காலத்திலும் தனது பொறுமையால் தணிக்கின்றவள் தான், சரியான மனைவி. அவர் கோபத்திற்கு எதிர்க்கோபங்கொள்வது நீலித்தன்மை. அது அவர் கோபத்தையும் அடக்காது. பெருகத்தான் செய்யும். பொறுமைதான் உலகையாளும். மனைவிக்கு உலகமும் உயிரும் அவள் கணவன்தான். அவனை பொறுமையினாலே ஆளவேண்டும்.

***

கோபங்கொண்ட மனைவி, கலங்கிய ஜலம் இரண்டும் சமானமென்று ஒரு மஹாகவி கூறுகின்றார். கலங்கிய ஜலம், குழம்பாயும், மண்கலந்ததாயும், அழகு நீங்கியதாயுமிருக்கின்றது. கலங்கிய ஜலத்தின்குணம் சுத்தஜல மென்பதில்லாமையைக் குறிக்கும். கோபங்கொண்ட மனைவியும் அழகில்லாதவளாகிறாள்; ஏனென்றால் பெண்களுக்கு பொறுமைதான் அழகு. கோபங்கொண்ட மனைவிக்கு சித்தசுத்தியும் கிடையாது. அது குழம்பி இருக்கும். கலங்கிய ஜலத்தைக் குடிக்கமுடியாது, குடிக்க உதடு வைத்தாலும், உதடு கெட்டுவிடும். கோபங்கொண்ட மனைவி இடத்து கணவன் கிட்டவா முடியாது. "சீ அந்த கோபம் எனக்கேன்" என்று கோபத்தை உதரி விட்டவளே, பதிவிரதை.

காட்டில் ஹரிச்சந்திரனும் சந்திரமதியும் காலில் கல்பட்டு ரத்தம் சிந்த நடந்துக் கொண்டிருக்கிறார்கள். விசுவாமித்திரனால் அவர்கள் காட்டிற்கு துரத்தப்பட்டார்கள். கூட நக்ஷத்திரகன் அவர்களை வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்ளுகிறான். விசுவாமித்திரர் மாயையினால் நெருப்பாறு ஒன்று உண்டாக்கினார். அதைக் கடக்கவேண்டுமென்று நக்ஷத்திரகன் வாயார வைகிறான். "நாதா, நீர் பயப்படவேண்டாம் நான் இந்நெருப்பிற்கு இறை ஆகிறேன், நீங்கள் பின்பிதை சௌக்கியமாக கடந்து போகலா" மென்று சொல்லி விட்டு சந்திரமதி நெருப்பில் விழமுந்தினாள். அந்நெருப்பிருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. அதுவே பதிவிரதையின் மஹிமை.

***

கணவன் கஷ்டமடையுங் காலங்களில் அவனுக்கு சமாதானமும் யுக்தியும் ஆன காரியங்கள் செய்பவள்தான் பெண்கள் நாயகமாகிறாள். நற்சமயத்தில் மந்திரிபோல் வரும்பொருளுரைத்து நல்லவை செய்தல்தான் பார்யையுடைய கடைமை ஆகிறது.

***

அன்பென்பது வெறும் வாயால் வரும் பால் போல் ஒழுகும் வார்த்தை அல்ல. தான் யாரிடம் அன்பு கொண்டானோ அவனுக்காக தன் உயிரையுமளித்துக் காத்தல்தான் அன்பெனப்படும். இது தன் ஆத்மாவானது யாரிடம் அன்பு கொண்டதோ அவனையே தானாக பவிக்கும் நிலையாகும்—ஒரு பெண்ணும் தன் கணவனிடம் அன்பு கொண்டு வாழ்பவளாகையினால், தன் ஆத்மாவானது அவன் ஆத்மாவில் லய்யமாவதே அவளது தருமமாகும்.

***

ஹரிச்சந்திரன் விசுவாமித்திரருக்கு, பணம் காசி போய்க் கொடுத்துவிடுகிறேன் என்றான். விசுவாமித்திரர் நக்ஷத்திரகனை "கூடப்போய் வாங்கிவா" என்று சொன்னார். காசியில் கொடுக்கவேண்டிய தவணையும் வந்துவிட்டது. பணம் எங்கும் வரவில்லை. அவன் மனங்கலங்கி நின்றான். உடனே சந்திரமதி "ஆர்ய! நானும் குழந்தையும் உம் உடைமையாய் இருக்கிறோம். எங்களை விற்றுவது முனிவர்க்கு கொடுக்கவேண்டிய பணத்தைக்கொடும்" என்று சந்தோஷமாக சொன்னாள். எப்படியாவது கணவன் நிலையினின்று பிறழாது பொய்யாவிரதம் காக்கவேண்டுமென்பதே அவள் கோரிக்கை. அவளல்லாவா பெண்களில் பெருமை அடைந்தவள்?

# விசேஷ வர்த்தமானங்கள்
## GENERAL NEWS

1. மோரின் குணம்:—மோருக்கு மிகுந்த நல்ல குணங்கள் இருக்கின்றதென்று ஒரு வைத்தியர் எழுதுகிறார். நமது ரக்தக்குழாய்களில் உள்ள மண் ஸம்பந்தமான அசுத்த பதார்த்தங்கள் எல்லாவற்றையும் மோர்ப்புளிப்பாபனது எளிதில் கரைத்துவிடுகின்றதாம். ஆதலால் அக்குழாய்கள் வழியாக ரக்தம் தடைபட்டு ஓட தேகத்தின் பூட்டுகளில் இம்மாதிரியான மண்ஸம்பந்தமான வஸ்துக்கள் தங்க இடமில்லாமலும், சதைப் பாங்கில் விஷ வஸ்த்துகள் தங்க இடமில்லாமலும் போகின்றது. மேலும் ரக்தக் குழாய்கள் இம்மண் ஸம்பந்தமான வஸ்துக்கள் தங்குவதால் தடிப்பு ஏரிப்போய் பலஹீனமானதால் ஒருவனுக்குக் கிழத்தனம் உண்டாகின்றதாம். ஆகையால் மோரைதாராளமாக சாப்பிட்டு வந்தால் சாதாரணமாக வரும் காலத்துக்கு பத்து அல்லது இருபது வருஷம் பிந்தித்தான்கிழத்தனம் வரும். தேகத்தில் மிகுதியாகும் அசுத்த பதார்த்தங்கள் ஸரியாக வெளியில் வேர்வை, மூத்திரம், பித்தம் முதலியவைகள் ரூபமாக வெளியில் போகாமல் இருப்பதால் கீலவாதம் என்றநோய் உண்டாகின்றது. இதற்கும் மோரே தக்கமருந்து. இது மிகுதியாகும் உபயோகமற்ற பதார்த்தங்களை எளிதில் தேகத்தை விட்டு வெளியாகும்படி செய்கின்றது. மோர் சோற்றுப்பையை நல்ல நிலையில் வைத்துக்கொள்வதுடன் நல்ல சிவந்த ரக்தம் உண்டாவதற்குவேண்டிய வஸ்துக்களையும் அதற்குக் கொடுக்கிறது. அப்போதைக்கு அப்போது புதிதாகக் கடைந்தமோரை பூட்டுக்களில் வலிவீக்கம் முதலியன உடையவர்கள் தாராளமாக சாப்பிடவேண்டும்.

***

2. பாம்புகடித்த நாய் மனிதனுந்து விஷம் ஏற்றுதல்:—ஆஸ்திரேலியா தேசத்தில் ஒரு நாயைப் பாம்புகடிக்க அது சீக்கிரத்தில் இறந்துவிட்டதாம். அதற்குள் அருகாமையிலிருந்த ஒரு மனிதனை அது கடித்துவிட்டதாம். உடனே அந்த மனிதனுக்கு, பாம்புகடித்தால் உண்டாகும் அடையாளங்கள் யாவும் உண்டாய்விட்டனவாம். ஆனால் இந்த நாய்க்கடியால் இறவாது வரவர அவன் வியாதி குணமாய்க் கொண்டுவருகிறதாம். இதனால் நாய் பூனை முதலிய ஜந்துக்களை வளர்த்து அவையோடு விளையாடி

வருபவர் அவைகளோடு அதிகமாய் நெருங்கி பழகக் கூடாதென்றும், அப்படிச்செய்வதில்பாம்பு முதலிய வைகளால் தீண்டப்பட்ட நாய் பூனை முதலியவைக ளால் நாம் இறக்கும்படி நேரிடும் என்றும், இதில் அகப்படுக்கொள்வது குழைந்தைகளாகில் மரண ம் விசித்தம் என்பதையும் தெரிந்துகொள்ள வேண் டியது.

***

3. நிலக்கரியைத் தண்ணீரால் காப்பாற்று வது:—நிலக்கரியை மூடாது காற்றுப் படும்படி போட்டு வைத்தால் அது கெட்டுப்போகும். பின்பு அதைப் பிடிக்கால் அதற்கு உஷ்ணப்படுத்தும் சக்தி குறைந்து போகிறது. நிலக்கரியை தண்ணீருள் போட்டு வைத்திருந்தால், இம்மாதிரி அது கெட்டுப் போவதில்லை. நல்ல தண்ணீரை விட உப்பு ஜலம் அல்லது ஸமுத்திர நீர் இவ்விஷயத்தில் மிகச் சிறந் தது. தண்ணீரிலிருந்து எடுத்து $1\frac{1}{2}$ நாள் வெயிலில் உலர்த்தி விட்டால் பின்பு இதை உபயோகிக்கத் தொடங்கலாம்.

***

4. உலகில் காற்று அதிகுளிர்ச்சியாயும் உஷ்ண மாயும் இருந்தும் இடம்:—ஒரு தத்துவ சாஸ்திரி பூமியின் மத்திய பிரதேசத்தில் உயர இருக்கும் கா ற்று அதிகுளிர்ச்சியாயும், வடக்கு தெற்கு ஓரங்களி ல், மேல் இருக்கும் காற்று அதிக உஷ்ண மாயும் இருக்கின்றது என்று சொல்லி யிருக்கி றார். இதை நோக்கில் பூமியின் மத்திய பிரதே சங்கள் அதிக உஷ்ணமாயும், வடக்கு அல் லது தெற்கு ஓரங்கள் அதி குளிர்ச்சியாயும் இருக்க, இந்த தத்துவ சாஸ்திரி சொல்லுவது எப்படி உண் மையாய் இருக்கு மென்ற சங்கை நமது மனதில் உதிக்கலாம். ஆனல் அவர் இலேசான காற்றடைத் த விமானங்களில் உஷ்ணம் பார்க்கும் யந்திரத்தை வைத்து மனிதர் ஒருவரும் இன்றி அதை $12\frac{1}{2}$ மயி ல் பூமியின் மத்தியப் பிரதேசங்களில் ஏறவிட்டுப்பார் த்து மேலே 140° குளிர்ச்சி இருக்கிறதாகக்கண்டிரு க்கிறார். பூமியின் வடக்குப் பிரதேசங்களில் இம்மா திரிவிட்டு 85° குளிர்ச்சியிருப்பதாக கண்டிருக்கிறார். இம்மாதிரியான பரிசோதனைகளால் அந்த தத்துவ சாஸ்திரி பூமிக்கு மேல் 6 முதல் $6\frac{3}{4}$மைலுக்குள்ளா கத்தான் காற்று அதிககுளிர்ச்சியாக இருக்கின்றது என்றும், அதற்கு மேல் இதுவரையில் தத்துவசாஸ் திரிகள் எண்ணியிருந்ததற்கு விரோதமாக காற்று வரவர அதிக உஷ்ணமாக மாறுகிறதுஎன்றும் ஸ்தா பிக்கிறார்.

***

5. விசித்திர கடிகாரம்:—அமெரிக்காவில் ஒரு மாகாணத்தில் ஒரு விசித்திர கடிகாரம் இருக்கிற தாம். அந்த கடிகாரத்தின் முக்கிய யந்திரம் அதன் அருகாமையிலுள்ள ஒரு உஷ்ணஜல ஊற்றோடு வெ கு தந்திரமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறதாம். அந்த ஊற்றில் 38 விநாடிக்கு ஒருதரம் உஷ்ணஜலம் வெளிக்கிளம்பி வருகிறதாம். அப்பொழுது அத னோடு கடிகாரத்திற்கு இழுக்கும் ஸம்மந்தமூலமாக அது அதன் விநாடி முள்ளை 38 கோடு முன்னே தள்ளிவிடுகிறதாம். இவ்வாறு அந்த கடிகாரம் உஷ் ணஜல ஊற்றின் சக்தியால் எப்பொழுதும் ஸரியா ன மணியைக்காட்டிவருகிறதாம்.

***

5. காந்த எறும்பு:—வட ஆஸ்திரேலியாவில் காந்த எறும்பு என்று ஒருவித எறும்பு இருக் கிறதாம். அதன் மணற் புற்றுக்கள் ஒவ்வொன் று 2 முதல் 3 அடிவரை அகலமுள்ளதாயும், 10 முதல் 15 அடிவரை நீளமுள்ளதாயும் இருக்கின்றன வாம். இப்புற்றே வடக்கு நோக்கியாகி அதன் நீள பாகத்தில் ஒருநுனி ஸதா வடக்கையும் மற்றொருநு னி ஸதா தெற்கையும் காட்டிக்கொண்டிருக்கிறதாம்.

***

7. மானிட சிருஷ்டி:—டிலேஜ் என்ற ஒரு தத் துவ சாஸ்திரி முட்டைகளில் குஞ்சுகள் விருத்தி யாகி வெளிவரும் மாறுபாடுகளை நன்ருகப் பரிசோ தித்து உணர்ந்து அம்மாதிரி யந்திரம், வஸ்துவிசே ஷங்கள் மூலமாக சிற்சில ஜந்துக்களை சிருஷ்டிக்க முயற்சிசெய்தார். வெகுகாலம் முயன்றதன்பேரில் அவரால் நான்கு ஸமுத்திர ஜந்துக்கள் சிருஷ்டிக்க முடிந்ததாம். அவைகள் ஜந்துக்களைப்போல நகர வும் மூச்சுவிடவும் செய்கின்றனவாம். ஆனல் அவை களால் ஆகாரம் மாத்திரம் ஏற்றுக்கொள்ள முடிய வில்லையாம். அவர் பூதக்கண்ணாடி வைத்துப்பார்த்த தில் அவைகளுக்கு ஜீர்ண யந்திரமே இல்லை எனக் கண்டார். இப்படி இருந்தும் அவர் அதைரியத்தை அடையாது, அவ்வித யந்திரங்கள் இல்லாமல்போன தன் காரணத்தை அறிந்து அதற்கு வேண்டிய பரி ஹாரங்கள் செய்ய முயற்சியும் செய்துகொண்டிக் கிறாராம்.

***

8. முன்கோபத்திற்குக் காரணம்:—எல்லோரும் அதிகவேலை, வேலையில் உண்டாகும் மனத்தளர்ச்சி, வியோகதுக்கம், தீஉன்றுஉண்டாகும் விஷயங்க ளால் ஏற்படும் பிரமை ஆகிய இவைகள் முன்கோப த்திற்கு காரணம் என்று எண்ணுவது ஸகஜம். ஆனல் ஒரு சிறந்தவைத்தியர் இவைகளால் எவ்வளவு தான் முன்கோபம் விருத்திஅடைவதாக இருந்த போதிலும், இவைகள் அதற்குக் காரணமாகமாட்டா என்று அபிப்பிராயப்படுகிறார். மனம்போன போக் கிலும் கெட்டவழிகளிலும் இளம்பிராயத்தில் நடப் பதுவே முன்கோபத்திற்குக் காரணம் என்று அவர் சொல்லுகிறார். ஏனெனில் இவை மனத்தைப் பற் றியவை. மேலும் இவைகளால் அநேக மனோவியாதி களும் உண்டாகின்றன என்பது யாவரும் அறிந்தவி ஷயம்.

## புத்தகக் குறிப்பு
## REVIEWS OF BOOKS

### வியவசாய போதினி

இப்புத்தகம் ம-௱-௱-ஸ்ரீ ஏ. சேது ராமய்யரவர்களால் இயற்றப்பட்டது. இதில் பயிர் செய்வதற்கு வேண்டிய சாதனங்களைப் பற்றி விரிவாக எழுதப்பட்டிருக்கிறது. முதல் பாகத்தில் நிலத்தை சீர்திருத்தல், உரம் சேகரித்தல், விதை விதைத்தல், இவைகளைப்பற்றியும், விவசாயக் கருவிகளைப்பற்றியும், இரண்டாம் பாகத்தில் தானியம், எண்ணெய்வித்து, சர்க்கரையீனும் பயிர், சாயப்பயிர், நார், கிழங்கு, கறிகாய், பதார்த்தப்பயிர் இவைகளைப்பற்றி எழுதப்பட்டிருக்கிறது. வட இந்தியா ஆயுதங்களையும் மேல் நாட்டாரது கிருஷியந்திரங்களையும் இதில் விவரித்திருக்கிறது. நமது ஜனங்களுக்குத்தெரியாத புதிய புதிய பயிர்களைப்பற்றி எழுதி இருக்கும் பக்ஷத்தில் இன்னும் தரமாயிருக்கும். இதிலிருக்கும் சித்திரங்கள் அளவிறந்தன. அச்சு முதலியவற்றைப்பற்றி இத்துடன் மெஸர்ஸ் ஜி.ஏ. நடேசன் கம்பெனியார் வெகுவாய் சிரத்தை யெடுத்திருப்பது மிகவும் புகழத்தக்கது. இப்புத்தகம் ஷை யாரிடமே கிடைக்கும். விலை ரூபா 1-4-0

### மானிடமர்ம சாஸ்திரம் *

"சிசு உற்பத்தி சிந்தாமணி" என்றுபெயர் கொண்ட இப்புத்தகம், இந்தியா இங்கிலாந்து அமெரிக்காமுதலிய தேசங்களில் எழுதப்பட்டிருக்கும் தேகசம்பந்தமான பல சாஸ்திரங்களையும் ஆராய்ந்து அவைகளின் சாராம்சத்தைதிரட்டித் தெளிவாய்க் காட்டியிருக்கிறது. இதில் (1) மானிட ஜீவியத்தின் நான்கு பருவங்கள், (2) இல்லற இன்பரகசியம், (3) ஜனனேந்திரியங்களின் அமைப்பும் அற்புதமும், (4) மாதாவின் மாட்சிமை, (5) சிசுஉற்பத்தி, (6) கர்ப்பகால சுகாதாரவிதிகள், (7) கர்ப்பகாலநோய்களும் பரிகாரங்களும் (8) மருத்துவ சாஸ்திரம், (9) சிசு பரிபாலனம் (10) ஆண்பெண் மலடு, (11) ஆண்மையின் அழிவும், அதன் மீட்சியும், (12) சமயோசித சஞ்சீவி; என 12 பெரும் பாகங்களாக பிரிக்கப்பட்டு 500 பக்கங்களடங்கிய அருமையான ஒருபெருத்த தர்மசாஸ்திரமென்றே இதனை சொல்லவேண்டும்.

மேற்கூறியவைகளில் சிற்சில நமக்குப் புதுமையல்லவென்று சிலர் நினைப்பினும், 4 முதல் 8 வரையிலுள்ள அத்தியாயங்களில் சொல்லியிருக்கப்பட்ட சமாசாரங்கள் ஆண் பெண் அனைவரும் அறிந்து அனுசரிக்கவேண்டுவதன் அவசியம் பெரும்பாலர் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிருக்கின்றது. மானிட மர்மசாஸ்திர புஸ்தகமாயிருப்பினும் மிஸ்டர் சாமிவேல் அவர்களுடைய அனுபோக சக்தியினால் அவர் சொல்லும் ஒவ்வொரு ஸமாசாரமும் நன்குவிளங்கும்படி சுலபமான வார்த்தைகளாலாகிய தெளிவான பாஷையில் இந்நூலை எழுதியிருக்கிறார். இத்தகைமை உபயோகமுள்ள அவசியமான கிரந்தத்தைத்தமிழ் பாஷையில் இது காறும் நாம் கண்டிலேம். ஆகையால் இவ்வரிய பிரபந்தத்தை யாவரும் வாங்கி வாசித்து ஆனந்திப்பதுடன் அதில்சொல்லிய விதிகளை யனுஷ்டித்து அரோக திட காத்திரராவார்களென்று எண்ணுகிறோம். (மிஸ்டர் எஸ் சாமிவேல் B. A. அவர்களியற்றியது விலை ரூபா. 5-0-0)

### இரம்பனும் ஜொலிதையும்*

இப்புத்தகம், ஆங்கிலகவீந்திரரும் ஒப்புயர்வற்ற மெய்ப்புலவரெனப்பெயரெடுத்திருப்பவருமா... விஷேக்ஸ்பியரால் இயற்றப்பட்ட அடங்காக் காதலினால் வருங்கேட்டைவிளக்குவதற்கான "ரோமியோஅண்டு ஜூலியட்டு" என்னும் ஆங்கில நாடகத்தின் மொழிபெயர்ப்பு. தமிழுணர்ந்தோர் எளிதிலறியும்படியான தெளிவான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இக்கதையானது காதற்றிறமையையும்; கற்பின் சிறப்பையும், ஆத்திரத்தினால் வருங்கேட்டையும் நன்குவிளக்குகின்றது. படிப்போரது மனதைக் களிக்கச்செய்வது; பெண்பாலரும் படித்தறியக்கூடியது; சுலபமான எளிய நடையிலேயே எழுதப்பட்டிருப்பது. இதையெல்லோரும் வாங்கிப்படித்து அதனின்பத்தை அனுபவிப்பதற்கே விலையும் குறைவுப்பட்டிருப்பது. மிஸ்டர். எஸ் வி. சீனிவாஸய்யர் B. A., அவர்கள் இயற்றியது விலை அணா 0-8-0

*இப்புத்தகங்கள் வேண்டுவோர், "விவேக போதினி" மானேஜருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

## ஞானம்பாள்

முன்பு யாம் கிடைத்ததென்ற இப்புத்தகம் ஓர் பெண்மணி எழுதியதாகத் தெரியவருகிறது. இதில் கிரிஸ்தவப்பாதிரிகள் போதனைகளால் ஹிந்துப் பெண்கள் நமது நடை, ஒழுக்கம், குணம் பாவம், இவை முதலிய கெட்டு, பரபிரஹ்மத்தில் தானும் கணவனுங்கூடி லயித்தலென்னும் கலியாண விஷயத்தை எண்ணாமல் மதிமயங்கி அப்பையில் உமன்கள் (Bible Women) கூறியவாறு கலியாணம் நினைத்தபொழுது பிரியக்கூடியதோர் காமச் சேர்க்கை என்ற பொய்யா வேசம் கொண்டு, நாயகவாஞ்சை என்பதொழிந்து, பாதிரிகளிட்ட மாயவலையிற் சிக்கி மாதாந்தரம் சென்று தமது ஜாதிஒழிந்து, அப்பாதிரிகளால் அலக்ஷியம் செய்யப்பட்டு தாம் செய்த தப்பிற்கு தத்தளித்து பிராணசங்கடங்களை அடைவதைக் கூறப்படுகிறது. நமது ஜாதிக்குத்தக்க கல்விச்சாலைகள் நம் பெண்களுக்கு ஆவசியகமென்று வற்புறுத்துகின்றது. பாவப்போக்கும், ஸரள நடையும் நயக்கத்தக்கன. அச்சு பதிப்பு முதலிய மிக்கதரமாக இருக்கின்றன. விலையும் மிகக்குறைவே. ஒவ்வொரு பெண்ணும் அவசியம் படிக்க வேண்டிய புத்தகங்களில் இது ஒன்று. இப்புத்தகம் திருவல்லிக்கேணி, லக்ஷ்மிவிலாஸ புத்தகசாலை ஸொந்தக்காரரான மிஸ்டர் பி. வைத்தினதய்யரால் பதிப்பிக்கப்பட்டது. விலை அணா 6

## புத்தகவரவு

## BOOKS RECEIVED

1. கந்தபுராணச்சுருக்கம்:- (வசனம்) ம-ா-ா-ஸ்ரீ, இராமனதபுரம் வீ. தங்கவேலு ஸாமித்தேவர் இயற்யது. ... ... ... ... விலை அணா 10.

2. இந்து சாஸ்திராபிமானி:—கல்லிடைக்குறிச்சி, ம-ா-ா-ஸ்ரீ, வா. முத்துகிருஷ்ண ஐயரவர்களால் இனியநடையில் எழுதியது. விலை அணா 6.

3, பாலகங்காதர திலகர் சுருக்கமான ஜீவ்யசரித்திரம்:—இச் சிறுபுத்தகம் ம-ா-ாஸ்ரீ, சென்னை, எம். வி. ஈஸ்வரர் அவர்களால் இயற்றப்பட்டது. ம-ா-ா-ஸ்ரீ, வி. சக்கரை செட்டியார், பி.எ., பி, எல். எழுதிய ஆங்கிலமுகவுரையுடன்கூடியது. விலை அணா 4,

இவைகளைப்பற்றி விரிவாய் அடுத்த சஞ்சிகையில் எழுதுவோம்.

# விவேக போதினி.

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி 1 } 1908-ஹு செப்டம்பர் மீ { பகுதி 3

## ஹிந்துமதத்தின் விரிவு
## THE EXTENT OF HINDUISM

நமது மதமாகிய ஹிந்து மதமென்று சொல்லப்பட்டது ஒரு ஞான சாஸ்திரமாகும். அது எடுத்துரைக்கும் விஷயங்களெல்லாம் மூடத்தனமாக நம்பவேண்டியவைகளல்ல; பின்னும் ஆராய்ச்சி செய்து அவைகளின் உண்மையையறியத்தகாத கோட்பாடுகளுமல்ல. ஹிந்துமதத்தில் அடங்கி இருக்கும் விஷயங்களாவன:-(1) உண்மையை உணரவேண்டுமென்று உள்ளங் கனிந்து பாடுபட்ட மஹான்களுடைய அநுபூதி விசேஷங்கள்; (2) இவ்வநுபூதிகளை நம் போன்ற பாமரர் அடைவதற்கு வேண்டிய ஸஹாயமான விதிகளும் மார்க்கங்களும் ஆகிய இவைகளே. ஹிந்து மதத்தினுடைய ஸ்வபாவத்தை அறியாதவர்களும், மத விஷயங்களை மூடத்தனமாய் நம்பப் பழகி இருக்கிறவர்களும், மத விஷயங்களை எவ்வாறு ஒழுங்கான சாஸ்திரமென்று சொல்வது என்று சங்கிக்கலாம். "மனவாக்கினிற் றட்டாமனின்ற" வஸ்துவை நாம் மூடத்தனமாய் நம்பவேண்டியதேயொழிய, அதை சாஸ்திர விஷயங்களைப்போல் புத்தி பூர்வமாக ஒழுங்காய் அறியமுடியாதென்பது இவர்களுடைய கொள்கை. இப்படிப் பட்டவர்களுக்கு ஹிந்துமதம் ஒரு ஒழுங்கான ஞானசாஸ்திரமென்பது யுக்திக்குப் பொருந்தாது. ஆகவே இவர்கள் ஹிந்து மதத்தை ஒரு சாஸ்திரமென்று அங்கீகரிக்கமாட்டார்கள். பிரகிருதி சாஸ்திரங்களின் உண்மையான மூல விஷயங்களை, இவ்வாறுதான் இருக்கவேண்டுமென்று ஒழுங்காய் உற்றுநோக்கல், சோதனை, அநுமானம் முதலியவைகளால் நாம் ஒருவாறு தெரிந்து கொள்ளுவதைப்போலப் பெரியோரால் அநுபவிக்கப்பட்ட "மனவாக்கெட்டாச்சிந்தருவாய்" இருக்கும் பரம்பொருளானது அவர்கள் வருணித்தவாறு இருக்குமா இல்லையா என்று முன்சொன்ன ஒழுங்காய், அநுபூதி இல்லாத நாம் ஒருவாறு தெரிந்துகொள்ள முடியும் என்பதை அவர் மறந்துவிட்டார்போலும். உண்மையை உணரவேண்டுமென்ற ஆவலுடைய ஒருவன், ஒரு மதவிஷயக் கொள்கையையும், முன் சொன்ன ஒழுங்காய்ப் பரிசோதித்துத் திருப்தி யடைந்தாலல்லது, மூடத்தனமாய் நம்பவேமாட்டான். இதற்கேற்ப ஞானவாஸிஷ்டத்தில் வஸிஷ்டமகாமுனி ஸ்ரீராமபிரானை நோக்கி "உண்மையானது பாலர்களிடத்திலிருந்து வந்தாலும் சந்தோஷமாய் அதை அங்கீகரிக்கவேண்டும்; சந்தேகத்திற்கிடமானது பிரம்மதேவனிடத்திலிருந்து வந்தாலும், அதைத் தைரியமாய் நிராகரித்துவிடவேண்டும்," என்று

உபதேசித்தருளி இருக்கிறார். முன் சொன்ன மாதிரியாய் மதவிஷயங்களையும் சாஸ்திர ஒழுங்கையும் பிரிக்காமல், ஒன்றுக்கொன்று ஸஹாயமாய்ப் பொருந்தி இருப்பதுதான் ஹிந்து மதத்தினுடைய ஒப்புயர்வற்ற மேன்மைக்கும் விரிவிற்கும் காரணமாகும்.

ஹிமாசலம் முதல் ஸேதுவரையிலுள்ள மதவாதிகளால் ஸித்தாந்தப்படுத்தப்பட்ட ஹிந்துமதத்தினுடைய பாகங்களாகிய மதவிசேஷங்களை உற்று நோக்கின், அவைகளுடைய அனந்தபேதத்தைக் கண்டு திடுக்கிட்டு, இவைகளை எல்லாம் எப்படி ஹிந்துமதமென்று சொல்வது என்று சங்கிக்கவேண்டி வருகிறது. இந்த மத விசேஷங்களுள் சிற்சில தம்முள் விரோதமாகவும் காணப்படுகின்றன. இந்த பேதத்தை நோக்கியே தாயுமானவரும் "செய்யும் வினையனந்தம், கருத்தோ வனந்தம், ஸ்வர்க்க நரகமு மனந்தம், நற்றெய்வமு மனந்தபேதம் திகழ்கின்றசமயமு மனந்தம்" என்று சொல்லி, பின்பு மதவாதிகளெல்லாரும் "பிறவுமே மொழிவ ரிவையாற்பாத ரஸம்போல மனது சஞ்சலப்படுமலாற் பரமஸுக நிஷ்டை பெறுமோ" என்று பரிதபித்திருக்கிறார். இம்மாதிரியான மாறுபாடுகள் இருந்தபோதிலும் இவைகளெல்லாம் ஹிந்து மதத்தின் பாகங்களே என்று சொன்னால், ஹிந்துமதம் ஒருவித்யாமண்டலம்போல் பல மாறுபாடான விஷயங்க ளடங்கிய மதமென்று சொல்லுதல் வேண்டும்.

ஹிந்து மதத்தில் அடங்கிய விஷயங்களை எல்லாம் நன்றாய்ப் பிரித்துப் பார்த்துப் பின் வரும் மூன்று பாகங்களுள் அதனை அடக்கிவிடலாம். முதல் பாகத்திற்கு பக்திமார்க்கமென்று பெயர். இதில் மூன்று உட்பிரிவுகள் உண்டு; அவையாவன:-பயத்தால் பக்திசெய்தல்; ஸ்வர்க்காதிபோகங்கள் வேண்டுமென்று பக்திசெய்தல்; கைம்மாறென்றும் கருதாது பக்திசெய்தல்; ஆகிய இவைகளே. இரண்டாவதுபாகத்திற்குக் கர்மமார்க்கமென்று பெயர். இது இரண்டு உட்பிரிவுகளையுடையது; அவையாவன:- போகங்கள் ஸுகங்கள் முதலியவைகளைக் கருதி கர்மம் செய்தல்; கைம்மாறு கருதாது நிஷ்காம்யகர்மம் செய்தல்; ஆகிய இவைகளே. மூன்றாவதாயும், மேலானதாயும் இருக்கிற பாகத்திற்கு ஞானமார்க்கமென்று பெயர். நமது தேசத்தில் வழங்கிவரும் மதங்களில் இந்தப் பாகங்களெல்லாம் காணப்பட்ட போதிலும் சிலவற்றில் சில பாகங்கள் அதிகமாகக் காணப்படும். இதனால் தான் ஹிந்துமதத்தில் இம்மாதிரியாயுள்ள விசித்திர மதங்கள் காணப்படுகின்றன.

முதற் பாகமாகிய பக்தி மார்க்கமே உலகில் ஸாதாரணமாகக் காணப்படும் மதங்களில் முக்கியமான பாகம். அதிலும் காம்யபக்தியே எல்லோரும் ஸாதாரணமாக அனுஷ்டித்து வரும் மதம். இந்த மார்க்கத்தை இங்கு விசாரிக்கப்புகுந்தால் மிகவும் விரியும். ஆதலால் அடுத்த ஸஞ்சிகையில் இந்தப் பாகத்தைப்பற்றி விஸ்தாரமாக எழுதுவோம். இப்பொழுது கர்மமார்க்கத்தையும் ஞானமார்க்கத்தையும் இங்கு விசாரிப்போம்.

சிலர், மஹா தீவிரமாய்த் தங்கள் ஜாதிக்குரிய கர்மங்களாகிய ஸ்நானம், நித்யகர்மாநுஷ்டானம், வேதாத்யயனம், புராண படனம், யக்ஞயாகாதிகளைச் செய்தல், பொது நன்மைக்குப் பாடுபடுதல் ஆகிய இவற்றைத் தினந்தோறுமாவது, மாதந்தோறுமாவது, வருடந்தோறுமாவது, இஹலோக பரலோக ஸுகம் ஸித்திக்க வேண்டுமென்ற ஆவலோடு, செய்கிறார்கள். இதற்கே காம்யகர்மம் என்று பெயர். இவர்களுக்கும், காம்ய பக்தி செய்கிறவர்களுக்கும் கிடைக்கும் பலன் கொஞ்சம். அதுவும் நீடித்து நிற்கமாட்டாது. இவர்கள் தாம் செய்த புண்ணியம் இருக்கிற வரையில் ஸ்வர்க்கத்தில் வசித்து, அப்புண்ணியம் முடிந்த உடன் இவ்வுலகத்துக்கு வந்துவிடுகிறார்கள். அதனாலே மறுபடியும் அவர்கள் பிறப்பு இறப்

பாகிய 'புனரபிஜனனம் புனரபிமரணம் புனரபி ஜனனீ ஜடரேசயனம்' என்கிற பவஸாகரச் சுழலில் அகப்பட்டுக் கொள்கின்றனர்; ஆதலின் அவர்களடையும் பலன் நீடித்து நிற்பதல்ல.

முன் சொன்ன ஸ்நானம் முதலிய கர்மங்களை பலத்தி லிச்சை விட்டு ஈசுவரார்ப்பணம் செய்து கொண்டு, சிலர் அனுஷ்டிக்கிறார்கள். இந்தக் கர்மத்திற்கு நிஷ்காம்ய கர்மம் என்று பெயர். பலத்தி லிச்சை இல்லாமலிருப்பதினாலே அவர்களுக்குத் துக்கமும் பயமும் நிவிருத்தியாகின்றன. இதற்கேற்ப மஹான்களும் "ஆசையே பரமதுக்கம்; நிராசையே பரமஸுகம்" என்று சொல்லி இருக்கிறார்கள். இந்த நிராசையால் கர்வம் நமது மனதில் தலை எடுக்கவே மாட்டாது. ஈசுவரார்ப்பண புத்தியானது வரவர அதிகரித்து "அவனன்றி ஓரணுவுமசையாது" என்ற புத்தியை உண்டாக்கிக் கடைசியாய், "எல்லா முனடிமையே, யெல்லா முனுடைமையே, யெல்லாமுன்னுடைய செயலே, எங்கணும் வியாபிநீ," என்று நமது மனதில் நன்றாய்ப்படும்படி செய்யும். ஆகையால் இந்த ஈசுவரார்ப்பண புத்தியானது ஸ்வயநயம் கருதலாகிய அகங்காரத்தை மாய்ப்பதற்குத் தகுந்த மருந்தாகும். ஆகவே நிஷ்காம்ய கர்மத்திற்கு இரண்டு விஷயம் அவசியம் இருக்க வேண்டும்; அவை (1) நிராசை (2) ஈசுவரார்ப்பணபுத்தி, ஆகிய இவை யிரண்டுமே. இந்த மாதிரியான கர்மானுஷ்டானம் பண்ணினதற்கு தேவவ்ருதர் என்னும் பெயர்பெற்ற பாரதசிரேஷ்டராகிய பீஷ்மரே உதாரணம். இவ்விரு திறத்தார்களுக்கும் கர்மமார்க்கிக ளென்று பெயர்.

வேறு சிலர் இவ்விரு மார்க்கங்களிலும் சேராதவர்களாய், உண்மைப்பொருள் இன்னதென்று அறிய மனதை நிஷ்காம்ய கர்மத்தால் சுத்தப்படுத்தி குரு ஈசுவரன் ஆகிய இவர்களுடைய கிருபையை முன்னிட்டுக் கொண்டு, முயல்கிறார்கள். இவர்களே ஞானமார்க்கிகள். இந்த ஞானத்தின் ஸ்வரூபத்தை, "எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர் எடுத்துக் காட்டி இருக்கிறார்.

நாம் அஞ்ஞானத்தால் படவேண்டிய பாடுகள் எல்லாம் பட்ட பின்பே, நமக்கு ஞானம், அதாவது கடவுளோடு இரண்டறக் கலத்தல், என்கிற நிலைவந்து கூடும். "கடவுள் அகண்ட ஸச்சிதானந்தமாய்க் கிரகணத்தி லிருந்து விடுபட்ட சூரியனைப்போல் பிரகாசிக்கிறார். அவரைவிட மஹத்தாயும், நுட்பமாயும், புராதனமாயும் உள்ள வஸ்து ஒன்றுமே கிடையாது" என்றிருக்கும் பரம்பொருளின் உண்மை நிலையை உபநிஷத்துக்களில் எடுத்துக் காட்டியவாறு, உள்ளபடி அறிபவன் இந்நிலையை அடைந்த ஒருவனே. இவனுக்கே ஞானி எனப்படுவது. இவன் இருக்குமிடமே மஹாபுண்யஸ்தலம். இவனால் நமக்குண்டாகும் நன்மைகள் மிகச் சிறந்தவை. ஞானி செய்யும் உபகாரமாகிய பந்த நிவிருத்திக்கு ஈடான உபகாரம் ஒன்றும் இல்லை. ஏழைகளுக்கு உபகாரமாகச் சத்திரம், வைத்தியசாலை முதலியவைகளைக் கட்டி அன்னதானம் ஔஷத தானம் முதலாகச் செய்யும் மஹாதர்மங்களும் ஞானி செய்யும் உபகாரத்திற்குத் தாழ்ந்தவைகளே; ஏனெனில் பசி பிணி ஆகிய இவைகள் திரும்பித் திரும்பி வருபவை; ஆதலால், அவைகளை வராமலே இருக்கும்படி செய்யமுடியாது. இந்நிலையிலிருப்பவன், தான் கற்க வேண்டியவைகளை எல்லாம் கற்று, தனக்கும் உபாத்தியாயருக்கும் பேதமே தெரியாத மேன்மையான நிலையிலிருக்கும் மாணாக்கனுக்கு ஒப்பாவன். இந்நிலையில் இருக்கும் ஞானிக்குத்தான் நமது மதத்தின் விரிவும், அதன் உபயோகங்களும், அதன் ஒழுங்கும் நன்றாகத் தெரியவரும். ஞானிகளாகிய பெரியோர்களது ஏற்பாட்டின் பிரகாரமே நமது மதம் எல்லோரையும் கரை ஏற்ற இம் மாதிரியான விரிவுகொண்டு விளங்குகின்றது.

இந்த விரிவின் நோக்கம், அதனால் நமது மதத்திற்கு உண்டாகும் சிறப்பு சக்தி முதலியவைகளைப் பின்வரும் ஸஞ்சிகைகளில் முன்னோரான நமது ஞானிகள் எடுத்துக்காட்டியபடி நன்கு விவரிப்போம்.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன், B.A., L.T.

# ஈச்வர சந்திர வித்யா ஸாகரர்

## ISWARA CHANDRA VIDYASAGAR

*(A Life-Sketch)*



தற்காலத்தில் நாம் பள்ளிக்கூடங்களில் படிக்கும்பொழுது நமக்கு ஐரோப்பாவில் புகழ் பெற்று விளங்கின பிட் (Pitt) ஹேம்டன் (Hampden) முதலியவர்களின் சரித்திரங்களை சவிஸ்தாரமாகப் போதிக்கிறார்களே தவிர நம் பரதக் கண்டத்திலேயே பிறந்து வளர்ந்து, கீர்த்தியும் சிறப்பு மெய்தி ஆத்மார்த்தியாகம் என்பதையே கடைப்பிடியாகக் கொண்டு பரோபகார சிந்தனையே மேலிட்டு வசித்தவர்களது சரிதைகளை நமக்கு விளக்கிக் காட்டுகிற தில்லை. இதற்குக் காரணங்கள் பல கூறலாம். அவைகள் எவ்வாறிருப்பினும், நாம் நம் முன்னோர்களின் சரித்திரங்களை அறிய வேண்டிய தவசியம் என்பதை யாவரும் ஒப்புக் கொள்ளுவார்களென்பதற்கைய மில்லை. சிறுவர்களும் சிறுமிகளும் இம் மாதாந்திர சஞ்சிகையைப் படித்து பெரியோர்களின் வாழ்நாட்களைக் கவனித்து அவர்களைப்போலத் தாங்களும் தங்கள் வாழ்நாட்களை வீணுக்காமல் தேச நன்மைக்காகச் சிறிதேனும் உழைப்பார்களெனக்கருதியே அவர்களின் சரித்திரத்தை எழுதத் துணிந்தனன்.

நம் தேசத்தைச் சீர்திருத்தி நல்ல ஸ்திதிக்குக் கொண்டு வர முயன்றவர் சிலருள் ஈச்வர சந்திர வித்யாஸாகரர் என்பவரும் ஒருவர். இவர் ஹூக்ளி (Hoogli) ஜில்லாவில் பர்ஸிங்கா (Birsinga) என்னும் ஊரில் 1820-ம் வருஷம் பிறந்தார். இவர் தகப்பனுருக்குத் தாகூர்தாஸ் பேனர்ஜி என்றுபெயர்; அவர் மிகவும் ஏழையாயிருந்தபோதிலும், கல்வி விஷயத்தில் மிகவும் சிரம மெடுத்து 1829-வருஷத்தில் அப்பொழுது பிரசித்திபெற்று விளங்கின கல்கத்தா ஸம்ஸ்கிருத கலாசாலையில் சேர்ந்தார். அவ்விடத்திலேயே 1841-வருஷம் வரை கடத்தியதில், படிப்பைப்பொருத்த மட்டில் வெகு சுறுசுறுப்பும், சுலபமாய் கிரஹிக்கும் சக்தியும் இவரிடம் நிரம்பியிருந்தன. படிப்பு முடிந்ததும் போர்ட் வில்லியம் காலேஜில் பிரதம பண்டிதராய் மாதம் ஒன்றுக்கு ரூ 50 சம்பளத்தில் நியமனம் பெற்றுப் பின்னர் 1846 வருஷத்தில் அக்காலேஜுக்கே உதவி ஸுப்பிரண்டெண்டாக அமர்ந்தார் எனினும் அவ்வேலையை ஒருவருஷத்திற்கெல்லாம் ராஜினமாக் கொடுத்துவிட நேர்ந்தது. 1849-ம் வருஷம் அக்காலேஜுக்கே மாதம் 80 ரூ சம்பளத்தில் தலைமை குமாஸ்தாவாக நியமிக்கப்பட்டு 1850ம் வருஷம அக்கலாசாலையில் ரூ 90 சம்பளத்தில் ஒரு உபாத்தியாயராகவே நியமிக்கப்பட்டார். இவரது கல்விப்பயிற்சியையும் மாணவர்க்குக் கற்பிக்கும் வன்மையையும் கண்ட கலாசாலை அதிகாரிகள் 1851-ம் வருஷத்தில் மாதம் ரூ 150 சம்பளத்தில் அக்கலாசாலையின் பிரதம உபாத்தியாயராக வித்யாஸாகரரை நியமித்தார்கள். அவர் அக்கலாசாலையி னுபாத்தியாயரா யிருக்கும்பொழுது தம்மால் கூடியவரை சிரமப்பட்டு அனேக ஸம்ஸ்கிருதப் புஸ்தகங்களெழுதியும், சிலவற்றை

வங்காளிபாஷையில் மொழிபெயர்த்தும் படிக்கும் சிறுவர்களுக்கு நல்ல ஞானத்தைப் புகட்டினார். நான்கு வருஷங்களுக்குப்பிறகு, அதாவது 1855ம் வருஷத்தில்இவர் மாதம் ஒன்றுக்கு ரூ 500 சம்பளத்தில் ஹுங்லி ஜில்லா பள்ளிக்கூடம் இன்ஸ்பெக்டராக நியமனம் அடைந்தார். இவ் வுத்தியோகத்திலும் இவர் பள்ளிக்கூடங்களுக்கு உபயோகமான அநேக புஸ்தகங்களைப் பிரசுரஞ் செய்து போதனை முறையைச் சீர்திருத்தி, பெண்கல்வியை விருத்தி செய்யவேண்டு மென்று கங்கணங் கட்டிக் கொண்டு அநேக பெண் கலாசாலைகளையும் பல இடங்களில் ஸ்தாபித்தார். 1858-ம் வருஷம் இவருக்கும் இவர் மேலதிகாரிக்கும் ஏதோ அபிப்பிராயபேதமுண்டானதன்மேல் தன் வேலையைத் தக்ஷணமே இராஜிநாமாக் கொடுத்து விட்டார். இவருக்கு முக்கிய சிநேகிதரான பங்காள மாகாண கவர்னர் இவரை ராஜிநாமா கொடாமலிருக்கும்படி வேண்டிக் கொண்டும் வித்யாஸாகர் தாம்கொண்ட மனவுறுதியைமட்டும் மாற்றவில்லை. இவர் உத்தியோகத்திலிரா விட்டாலும் இவர் வரும்படி குறைந்ததோவெனின், அல்ல, மாதம் ஒன்றுக்கு இவர் எழுதிய அநேக புஸ்தகங்களின் விற்பனையினாலேயே இவருக்கு ரூ 5000 கிடைத்து வந்தது.

இளமைப் பருவத்தில் இவரது தகப்பனார் இவரைக் கோபமாய் அடித்துவிடுவது வழக்கம். அவ்வளவடியையும் பொறுத்துக் கொண்டு 'இவர் அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று நம்பி அவர்களுக்குவேண்டிய உபசாரங்களைச் செய்வார். வித்தியாஸாகர் இன்ஸ்பெக்டராயிருந்தபொழுது அவரது அருமை அன்னையிடமிருந்து அவரை உடனே வரும்படி ஒரு தந்தி கிடைத்தது. போகு மார்க்கத்திலோ பிரவாகமிருந்த நதி; காலமோ காரிருள் கவ்விய ஸமயம்; நாள்முழுவதும் நதியில் உழைத்து வருத்தந்தீரப் படகுக்காரர்களெல்லாம் தத்தம் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். இவர் ஒன்றும் தோன்றாது சற்றுமயங்கி, எப்படியாவது தன்னை யீன்றெடுத்த தாயை அன்றிரவே போய்ப்பார்க்க வேண்டுமென்று தீர்மானித்து, மேல்சட்டையைக் கழற்றிக்கரையில் வைத்து நதியில் குதித்து நீந்தி, அக்கரையேறி வீடுபோய்ச் சேர்ந்தா ரென்பதை வாசிக்குங்கால், இவர் கொண்ட மாதுர்பக்தி எத்தன்மையது பாருங்கள்!

'மகன்தந்தைக் காற்று முதவி இவன் தந்தை என்னோற்றான்கொ லென்னுஞ் சொல்' என்றார் திருவள்ளுவ நாயனாரும். இவர் தாய் தந்தை உயிரோடிருக்கு மளவும் தன் சம்பளத்தை அவர்கள் கையில் கொடுத்து நமஸ்காரஞ் செய்த பிறகே வேண்டியதைப் பெற்றுக் கொள்வார் என்றும் சொல்லப்படுகிறது.

இவரது கீர்த்தியோ புவியெலாம் புகழ்மிகுந்து விளங்கியது. இவர் உண்மையையே சத்தியமாகக் கொண்டு போலிமதஸ்தர்களைக் கண்டித்து சாஸ்திரார்த்தங்களை எடுத்து விளக்கி நம் தேசம் முன்னுக்கு வரவேண்டிய முக்கிய சீர்திருத்தங்களை எடுத்துக் காட்டினார். நம் வருணத்தில் நாம் சாஸ்திரார்த்தங்களை யறியாமல் பால்யத்தில் விவாகம் செய்து அதனால் ஸ்திரீகள் விதந்துவானவுடன் அவர்களை எவ்வெவ் விதமாய் சுகமறியாமல்செய்யவேண்டுமோ அவ்வவ்விதமாய்ச் செய்து அவர்கள் பூமியில் ஜனித்ததே ஜன்மாந்தர பாபமென்று சொல்லி வீணான ஜீவஹிம்சை செய்து வருகிறோமே. இவ்வழக்கம் பங்காளத்தில் குடிகொண்டிருந்தது. இவர் பால்ய விவாகத்தைக் கண்டித்தார். இவ் விஷயத்தில் 1854-வருஷம் பங்காளி பாஷையில் துண்டுப் பத்திரிகைகளையும் அச்சிட்டு நாடெங்கும் பரவச்செய்தார். தற்காலத்தில் பொதுக் கூட்டங்களில் எல்லாம் உறக்கப் பேசிப் பின் வீடுபோய்ப் படுத்துறங்கிவிட்டு பேச்சோடு நின்றுவிடுகிற சீர்திருத்தக்காரர் போன்றவரல்லரிவர். ஜனங்களுக்கு உபதேசித்து வந்ததையே தாம் அநுஷ்டானத்துக்குக் கொண்டுவந்தார். தம் குமாரத்திகளுக்கு 13-ம் வயது வரையில் கல்யாணம் செய்யவில்லை. அனேகருக்கு இவ்விஷயத்தில் பொருளுதவியும்

செய்தார். தமக்கு வரும் 5000 ரூ போதாமல் அதிகமாகக் கடன்வாங்கியும் செலவுசெய்தார். இவர்பெரிய உத்தியோகத்திலிருந்த பொழுதுங் கூட வீட்டுவாசற் படியில் சேவகர்களிருந்தால் நாடிவரும் யாசகன் போய்விடுவானோ என்றெண்ணி சேவகர்களைப் பாருக்கொடுக்கச் செய்வதில்லை. 'கருணை வள்ளல்' என்றால் இவருக்கே தகும். தம்மூரிலேயே ஒரு தர்ம இங்கிலீஷ் பள்ளிக்கூடமும் வைத்தியசாலையும் ஏற்படுத்தினர். இவ்வளவு மனோதிடத்துடன் இவர் முன்வந்த போதிலும் பொது ஜனங்கள் இவரைத் தொந்திரவு செய்தது, இப்பக்கங்களிலிருக்கிற நமக்கு நன்குவிளங்கும். கொழும்புக்குப் போய் இரண்டுநாள் தங்கி பின் வந்தவர்களை ஜாதிக்கட்டிலிருந்து விலக்கிவைக்கிற நம் பண்டிதர்கள் பால்ய விவாகம் செய்யாதவரை எவ்வளவுகொடூரமாய்நடத்தியிருப்பார்கள்? இதுபோன்ற சமயங்களில், மனச்சாட்சிக்கு விரோதமில்லாது நடந்து தன் காரியத்தைச் சாதிக்கிறவனே உண்மையான தேசபக்தனாவான். இவர் ஸம்ஸ்கிருத வங்காளி பாஷைகளி லெழுதிய புஸ்தகங்கள் இப்பொழுதும் பாடங்களாகவே யுபயோகிக்கப்படுகின்றன. 1877 ம்வருஷம் கல்கத்தாவில் நடந்த தர்பாரில் இவருக்கு ஒரு யோக்கியதா பத்திரம் கொடுக்கப்பட்டது. 1890-ம் வருஷத்தில் இவர் C.I.E.,பட்டத்தையும் பெற்றார். ஸ்ரீ மான் ஸ்வாமிவிவேகாநந்தரின் குருவும் ஈச்வர அவதார மென்றே பலரால் கருதப் படுபவரும் வங்காளத்தில் சென்ற நூற்றாண்டிலிருந்தவருமான ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரே நேரில் இவர் வீடு சென்று இவருடன் மதவிஷயங்களை விவகரித்து இவரைப்பற்றிப் புகழ்ந்து பேசியுமிருக்கிறா ரென்றால் இவரது பிரதாபத்தைப்பற்றி இங்கு நாமின்னும் விரித்தெழுதவும் வேண்டுமோ? * இம்மஹான் தன் தேசத்தாரின் ஊக்கமின்மைக்காக மிகவும் மனம் நொந்து 1891-ம் வருஷத்தில் தேகவியோகமானர்.

இப்பொழுதும் வருஷத்திற் கொருமுறை இவர் பிறந்தநாளில் ஒரு பெருங்கூட்டம் கூடி அநேக பெரியவர்கள் அக்கிராசனம் வகித்து இவர் வாழ்நாட்களைப் பற்றியும், இவர் நன்கொடையைப்பற்றியும், இவர் செய்த நூல்களைப் பற்றியும் இவரது மனோதிடத்தைப்பற்றியும் உபந்நியாஸம் செய்கிறார்கள். இவர் போன்ற பெரியோர்களால் நம்தேசம் நல்ல ஸ்திதிக்கு வர வேண்டுமே ஒழிய, வீண்பேச்சு முதலியவைகளால் நல்ல ஸ்திதிக்கு வராதென்பதை எல்லோரும் அறிந்து நம் தேசாசாரங்களைச் சீர்திருத்த முயன்றால் மட்டும் நாம் இப்புவியில் பிறந்தது வீணல்லவென்பதை விளக்கியவர்களாவோம்.

ஜீ. ஸுந்தரேசய்யர், B.A., L.T.

---

* ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கும் ஈசுவர சந்திர வித்யாஸாகரருக்கும் நடந்த ஸம்பாஷணை:

பரமஹம்ஸர் :—எனக்கு இன்றைக்கு ஸாகரத்திற்கு வரும்படியான அதிர்ஷ்ட மிருந்ததுபோல் இருக்கிறது. இதுவரையில் கால்வாய்கள், சதுப்புநிலங்கள், நதிகள் முதலியவைகளில் நான் தடுமாறிக்கொண்டிருந்தேன். வித்யாஸாகரர் :-அப்படியானல் ஸாகரத்திலிருந்து உமக்கு வேண்டுமான அளவு உப்புஜலம் கொண்டுபோகலாம். தடை ஒன்றும்இல்லை. ப:—நீர் லவணஸாகரமல்ல. உம்மிடத்தில் அவித்தையா குடிகொண்டிருக்கிறது? நீர் வித்தையாகிய ஞானம்நிறைந்த க்ஷீரஸாகரம். வி:—நீர் வேண்டுமாகில் அப்படிச் சொல்லிக்கொள்ளலாம். எனக்கு அதை அங்கீகரிக்க மனம் வரவில்லை. ப:—உமது குணம் ராஜஸம்பந்தமான ஸத்வமே. அதனால் தான் நீர் பொதுநன்மைக்கு இவ்வளவு பாடுபடுகின்றீர். பற்றின்றியும் கடவுள் பக்தியோடும் தானம் தயை முதலியவைகளில் பழகிவந்தால் பரமபதம் ஸித்திக்கும் என்பதற்கு என்ன ஸந்தேகம்! மேலும் நீர் ஸாதாரணமாக ஒரு உபயோகமுமின்றி புத்தகப் பூச்சிகளாக இருக்கும் பண்டிதர்களைப்போலவா? தயை தானம் முதலியவைகளால் உமது மனம் கனிந்திருக்கவில்லையா? ஆகையால் உமக்கு ஸித்தர் (அதாவது வேகவைத்த பதார்த்தைப்போலப் பக்குவமானவர்,)என்ற பெயர் தகும்.

# ஊக்கம்

## TRY, TRY, TRY AGAIN

பள்ளிக்கூடத்தில் சிறுவர்கள் படித்து வரும் பாடல்களிலெல்லாம்,

"உறுதிபயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப—இறும் உயிர்க்கும்
ஆயுள் மருந்து ஒழுக்கல்தீது அன்றால் அல்லன
ஆவனவும் உண்டு சில" [போல்

என்னும் நீதிநெறிவிளக்க வெண்பாவிலுள்ள இனிமையாகிய சுவையை உடையன மிகவும் சிலவேயாகும். மனம் முறிந்து, இனிமேல் நாம் செய்து முடிக்கக்கூடியது ஒன்றுமில்லை என்று தளர்ச்சியடையும் ஆண்மக்களுக்கும் இப்பாடல் தக்க ஊக்கத்தை உண்டாக்கும் மந்திரமாகும். எவனொருவனுக்கும் தான் ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கிய பிறகுதான் தனக்கு எவ்வளவு ஆற்றலுண்டென்று கண்டறியக்கூடும். புதிது புதிதாய்த் தொடங்கும் காரியங்கள் எவையும் மிக்க அருமையும் பெருமையுமுடையவைகளாகவே தோன்றும். ஆனால் அடுத்து முயன்று ஒரு காரியத்தைச் செய்யப் பழகியபின் மனமும் உறுதியடைந்து எத்துணையபெரியகாரியத்தையும் வருத்தமின்றி செய்து முடிக்கத் துணிவு உண்டாகும்.

ஒரேவழி செல்லுமிருவரில் "நான் என்ன செய்வேன்" என்று ஏங்கி நிற்பவன் சேற்றில் காலழுந்தி வழிப்போக்கர்களுக்கும் இரடுகட்டையாய் நிற்பான். வருத்தம் பாராமல் முன்னேக்கிச் செல்லும் துணிவோடு செல்பவனே தான் இழுத்துச்செல்லும், நிரம்ப மூட்டையடுக்கிய, வண்டியைக்கூட கொடிவழிகளிலுமிழுத்துச் செல்வான். பிராணனுக்கு வந்தபோது ஓட்டமெடுக்கத் தயங்கலாமா? முயற்சியானது அதிமாயமான வினோதங்களை வெளிப்படுத்தும். சிறு தேனீக்கள் ஒன்றுகூடி 'முயல்வோம்' என்றன. மலையிலும் காட்டிலுமுள்ள பூக்களெல்லாம் மதுரமான தேனாக மாறின. மிக்க அற்ப ஜந்துக்களாகிய அணில்கள் 'முயல்வோம்' என்றன. அவை நீள்கடலில் வானரவீரர்கள் கட்டிய சேதுவின் மேடுபள்ளங்களெல்லாம் மணல்தூவிச் சமனாக்கின வென்பது ஓர் பழங்கதை. ஆகாயத்திலிருந்து விழும் சிறு மழைத்துளியொன்று 'முயல்வேன்' என்றது. கடலில் ஆழவழுந்திக் கிடக்கும் சிப்பி வயிற்றிற் புகுந்து பல நாள் தவஞ்செய்து பிறகு பெருகொளி முத்தாய் மேம்படலாயிற்று. கண்ணளவில் அடங்கும் உருவமுள்ள சூரியன் 'முயல்வேன்' என்றான். மலையின் கொடுமுடிகளிலுள்ள பனிப்பாறையெல்லாம் தண்ணீராய்க் கரைந்தோடிற்று. முட்டையை விட்டு வெளியேவந்த சிறுபறவைக்குஞ்சுகள் மெள்ளப்பறந்து பார்த்தன. இருக்க இருக்க தங்களிறகுகள் தங்களை வெகுதூரம் தாங்கிச் செல்லும் வலிமையுள்ளனவென்று கண்டுகொண்டன. ஏரில் கட்டிய கடா 'உம்' என்றது. பாழ்நிலமெல்லாம் பாங்குபட்டுப் பயிர் விளையலாயிற்று. முயற்சியின் மாயமே மாயம். பறக்கின்ற பறவைக்கு எது தூரம்? ஏறிச்செல்லத் துணிந்தவனுக்கு எந்த மலைதான் உயரம்? உழுகிறவன் களிமண்ணென்று விட்டுவிடுகிறானா? இறைக்கத் துணிந்தவனுக்கு வற்றாத கிணறும் உண்டோ? அல்லது தைத்து நிரப்பும் வேலைசெய்வோனுக்கு இணங்காக் கந்தைத்துணிதானுமுண்டோ? எறும்பூரக் கல்லுங்குழியும். அடிமேலடியடித்தால் அம்மியும் நகரும். ஆற்றுக்கு அணை மலைமலையாய்ப் பிடுங்கிப்போடுகிறார்களா? கூடைமண் கூடைமண்ணைத்தானே கொட்டுகிறார்கள். உலகத்தில் ஏதேனும் ஒரு காரியத்தை ஒருவன் செய்து முடிப்பானேயானால் அக்காரியம் மற்றவர்களும் செய்து முடிக்கக்கூடியதே; செய்து முடியாத காரியம்கூட ஒருவேளை அடுத்து முயல்வோனுக்குப் படிந்து வரலாம்.

சலப்பையைக் கைப்பற்றிக் காடுகளை உழுவோர் கோழைபடாச் செல்வம் அடைதலும், குயக்கலம் வனைவோர் குபேரனாவதும், திரைகடலோடித் திரவியந்தேடுவோர் அரசரோடிருந்து அரசு ஆள்வதும் இம்முயற்சியின் மாயமே யன்றோ? மேலுக்கு வர வேண்டும் என்னும் முன்னேக்க முள்ளோர் இடுப்பில் துணியை எடுத்துக் கட்டுதல் நலம். தொங்கவிட்டுக் கட்டுபவன் தொங்கியே போவான்.

"உறுவினைகாய்வோன் உயர்வு வேண்டல் பொய்"

விருப்பமிருந்தால் வேரிலும் காய்க்கும். மன உறுதியுள்ளவழி காரியம் கைகூடும் வழியுமுண்டு. சூரியன் பிரகாசித்தல் பெரியோர்க்கும் சிறியோர்க்கும் ஒருங்கே. ஆதலால் கடவுளை நம்பித் தொடுத்த காரியத்தைத் தளராது கைப்பிடித்து சோர்வில்லாத ஊக்கமுடையவரைக் குன்றும்வழி தடுப்பதில்லை. கோழை நெஞ்சுடையோன் கோமளவல்லியைக் கைக்கொள்வது முண்டோ? மக்களே! தங்களிரு

தோள்களையே தனித்துணையாகக் கொள்ளுவோர்களுக்கே பரம்பொருள் பக்கத்துணையாய் நிற்கும். அதிர்ஷ்டம் என்னும் பேச்சை ஆற்றில் விடுங்கள். அது கண்காணாததாகவே போகட்டும். அல்லது உண்டு, உடுத்து, குடித்து, மயங்கும் குண்டுணிகளிடத்திலேயே குடிகொள்ளட்டும். நன்மையை வேண்டுவோன் செய்துவைத்த புண்ணியம் அசாவாத ஆண்மையே.

மனிதர்களுக்கு உயர்வு அவரவர்களுடைய உள்ளம் எத்தனை நீட்டமுடையதோ அத்தனையே. திருவினை ஆக்குவது முயற்சிதான். ஊக்கமும், மிக்க உரமும், ஒன்றிய சூழ்ச்சியும் உள்ளவனை விட்டு ஆக்கம் அகலாது. 'அடுத்து முயன்றாலும் ஆகும் நாளன்றி எடுத்த கருமங்களாகா' என்று பாடிக்கொண்டு முயற்சி செய்யாமலே யிருந்தால் முடியுமா? கருமங்கள் மனிதர் கருதியவாறு ஆகா, பிரமன் எழுதியபடியே என்னும் மடநெஞ்சோடு இரங்கி நிற்பார் இரங்கியே நிற்க. புண்ணியம் வந்தெய்தும் போதல்லாமல் எண்ணியொரு கருமமும் செய்ய வொண்ணாது, என்பாரும் ஏங்கி நிற்க. 'வருந்தி அழைத்தாலும் வாராத வாரா' என்பாரும் வாளா நிற்க. 'மாத்திரைக் கோலெறிந்தாலன்றி மாங்காய் விழாது' என்பாரோடு இணங்குவோம் யாம். வித்து இல்லாவிட்டால் சம்பிரதமும் இல்லாதது போல, கைவினை இல்லாத விடத்துக் கருமங்களும் ஆகா. 'எழுதினவன் ஓலை பழுது' என்பது எழைமை. அங்காடித் தெருவில் அலைந்து மேய்ந்த பழங் கன்றும் பின்னுக்குப் பெரிய எருதாவ தில்லையோ? காற்றுக்கு அசையும் சிறிய செடியும் காலஞ் சென்று காழடைந்து யானைகள் கட்டும் கட்டுத்தறியாகும் பலம் அடைதலில்லையோ? வீணுக்கு விதியே வலிது என்று வாதாடாதேயுங்கள். அனுதினமும் முயற்சி செய்பவர்க்கே கடவுளும் கடாக்ஷிப்பார். செய்யவேண்டிய முயற்சிகளை யெல்லாம் செய்திட்டாலே செய்யவள் மணாளனும் வேண்டும் யாவையும் விருப்பொடு கொடுப்பான். முயற்சி செய்யானேல் நயத்தகு போகம் அளித்திடான் என்பது அறிஞர்கூறிய அரும்பத உரை. முயற்சியில்லாமலே நினைத்தகாரியம் பூர்வ புண்ணியத்தால் கைகூடும் என்றிருப்போர்க்கு அரிசியும் காயும் சமைக்காமலே சாப்பிடத்தகும் பக்குவம் பெறலாமே. கலத்திலிட்டதைக் கையாலெடுத்து வாயில் போட்டுக் கொண்டாலொழிய தானாகவே வாயில் புகுந்து வயிற்றிலிறங்கிப் பசித்தழலை அவிக்குமோ? விதியே வலிது என்பார்க்கு மாறுகோளாக:—

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்."—என்றும்
"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்".—என்றும்

வற்புறுத்தினர் வள்ளுவனார். ஆகையால் உடையவர்கள் என்னும் பட்டம் பெறவிரும்புகிறவர்கள் யாவரும் ஊக்கம் உடையவர்கள் ஆதல் அவசியம். ஊக்கமில்லாதார் உடையவராதலில்லை. இசையாத காரியமாயினும் எவ்விதத்தேனும் தன் ஆற்றல் கொண்டு இயற்றி அசையாது நிற்பதே ஆண்மையாகும். அரியதே யாயினும் சிறு முயற்சி செய்து உறுபயன் கொள்ளப் பெறுமாகில் ஒள்ளிய ஒழுக்கமுடையோர் அவ்வினை செய்யத்தாழ்வரோ? தாழார். கருமமே கண்ணாயினவர்கள்மெய்வருத்தம் பார்ப்பரோ? மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை, தானம், தவம், உயர்ச்சி, தாளாண்மை, பெண்ணாசை ஆகிய பத்தையும் பறக்கடிக்கும் பசியைத்தான் பொருட்டாக்குவரோ? கண்துஞ்சுவரோ? தமக்குமாறாய்ப்பிறர் இழைக்கும் தீமையைத்தான் மேற்கொள்ளுவரோ? தம்முடைய செவ்வியையேனும் தொடுத்த கருமத்தின் அருமையையேனும் கருதுவரோ?

"பெருமை யுடையதன் அருமை பழியார்"
"அருமை யுடையதன் பெருமை பழியார்"
"நிறையச்செய்யார்க்குறைவினை பழியார்"

என்ற ஆன்றோர் முதுமொழியின் உண்மை தெரியாத வன்மைமிக்க வம்பர் செய்யும் அவமதிப்பைத்தான் பொருட்டாய்க்கொள்வரோ? ஊக்கமுடைமையே ஆக்கத்திற் கழகு. "முயற்சியுடையோர் இகழ்ச்சி யடையார்" என்பது பழமொழி. பகீரதன் கங்கை கொணர்ந்ததும், கொலம்பஸ் அமெரிக்காவின் இருப்பைக்கண்டு பிடித்ததும், ஆகிய இவை போன்ற பலவும் இப்பழமொழிக்குச் சாக்ஷிபூதமான திருஷ்டாந்தங்கள்.

பக்கத்துணைபார்த்திருத்தல் பயனற்றது. தங்கள் தங்கள் தடக்கைகளே எக்காலத்திலும் உற்றதுணையாகும். அவைகளே இடுப்பில்கட்டிய துணி கலையும் பொழுது உதவுவதுபோலத் தப்பாமல் உதவுவன. தானுந்தனியுமாய் முயல்வதே உறுபயன் கொள்ளுதற்கு உலையா உபாயம்.

"தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தான்செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி"

என்றது பழமொழிவெண்பா. ஆளை அனுப்புதல் அதமம்; மகனைப்போகவிடுத்தல் மத்திமம்; உடையான்செல்லல் உத்தமம் என்ப. விளைந்த வயலில் கூடுகட்டிக் குஞ்சு பொறித்த வானம்பாடி வயலறுத்தற்குப் பிறருதவியை உடையவன் எதிர்பார்த்துப்பேசிய நாள் தன் குஞ்சுகளை இடம்பெயராமல் படுத்திருக்கச் சொன்னதும், தானும் தன்மக்களுமே கதிரறுக்கத்துணிந்தது செவியிற்படவும் வேற்றிடம் தேடிச்சென்றதும், இவ்வுண்மையை வெளிப்படுத்துதற்கு இயற்றப்பெற்றகதை.'உதட்டு வாழைப்பழத்தை உள்ளேதள்ளுவாருண்டோ' என்றிருப்பார் பரியாசிறக்க வேண்டியவர்களே. பிறன்கைபார்த்து நிற்பவன் பேதையிற் பதர். பொய்க்கால் கட்டிப் பத்தடி நடப்பதற்குள் வெறுங்கால் வெகுதூரஞ் செல்லும். ஏனையோரை எதிர்பார்த்து ஏமாந்து போகாமல் கடவுளை நம்பிக் கைவினைகரவாமல் கருமம் புரிவோர் கைவிடப்படார்.

கையில்பொருள் மிகுந்திருந்தாலன்றோ காரியங்களைத் தொடங்கவாய்க்கும், என்று ஏங்கி நில்லற்க. வினைவல்லானை வீசியெறிந்தாலும் கீழே விழாமல் குதித்து நின்று வேலைசெய்து வருவாய் தேடவாய்த்தவழி வினவுவன். கைம்முதல் கனத்தவர் கடைசியில் கந்தை உடுத்தலுமுண்டு.

'முன்பெருகலின் பின் சிறுகாமை சிறந்தன்று'

தான் தேடிய பொன்னுக்கே மாற்றும் உறையும் உண்டு. தந்தை தேடிவைத்த மணிகளும் கல்லாம், பொன்னும் மண்ணும். இன்மையோடு தொடங்குவோன் இனிமையோடு முடிப்பான் தன் வாழ்நாளை. பசித்தவனுக்கே புசித்தல் சுவையுடைத்து. கடுத்தின்றோனே கட்டியின் சுவை கடிதில் காண்பன். காணி முதலாளி கோடீசுவரன் ஆவதும் உண்டு.

இடத்தாழ்வால் இழிவுபெற்றோம், ஆதலால் ஏற்றமடைதல் எமக்கு ஏலாது, என்றல் ஏழைமை. தாழ்ந்த கள்ளியின் வயிற்றில் பிறந்த அகில் கட்டையை அரசரும் ஆதரிப்பர். குப்பையில் கிடந்தது காற்றடித்துக் கோபுரத்தில் ஏறுதலில்லையோ? கைதேர்ந்த வினையாளன் தன் கூர்ந்த புத்தியையும் செலுத்துவானேல் மற்றவர்கள் இழக்கும் எந்தக் காரியத்திலும் தான் பயன் பெற்றுப் பணக்காரனாவான்.

"சீருடை ஆண்மை செய்கையின் அறிப"

ஆரியக்கூத்தாடினாலும் காரியத்தின்மேல் கண்ணுடையவர்களாய்ப் பொருளைப்போற்றி வாழ்வோர்கள் ஏற்றமடையாத நிலம் எந்த நிலம்?

கருமம் செய்வுழி மெய்வருத்தம் கண்டு கலுழுவோர் கசடர். கனியில் கொட்டையுண்டென்று கழிப்பரோ? முள் உண்டென்று முழுமணம் கமழும் ரோஜாப் பூவை மோப்பதில்லையோ?

துன்பம் வெய்யோர்க்கே இன்பம் எளிது?
'மிகுதி வேண்டுவோன் தகுதி தண்டான்'
'இன்பம் வேண்டுவோன் துன்பம் தண்டான்'
'சோம்பரென்பவர் தேம்பித்திரிவர்'.

அசைவில்லாத ஊக்கமுடையாரிடம் ஆக்கம் அடையும்வழி தேடிச்செல்லும். உள் அடைபட்டுப் படுத்து உறங்கும் நாயைத்தான் உண்ணி உறிஞ்சும். வேட்டைநாய் அதை அறிந்ததுமில்லை. வெறுஞ்சோம்பேறி வெள்ளம் வடியும்வரை வழிபார்த்து வீண்போது போக்குவான். முயற்சி யுடையானே வெள்ளம் நீந்திக்கடந்து பட்டினத்தில் பண்டம் மாறிப் பயனெல்லாம் பெறுவன்.

பல்லோர் போட்டியால் பயனிழந்தோம் என்பர் பொருள் ஈட்டும் முயற்சியில்லாதார் எவரும்: தென்னை மரத்தில் தேள் கொட்டிற்றென்றால் பனை மரத்தில் நெறி ஏறிற்று என்பவரும் இவரும் ஒருவரே. நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினதே சாக்கு. பொய்யோ பிழையோ பழிசுமக்கப் பிறர்உண்டு. ஊர் நிறைந்திருந்தாலும் வேலைசெய்வோனுக்கு வெளியிடமில்லாமற் போகாது. பத்துப்பூனை பதுங்கிக் காத்திருந்தாலும் தப்பிப்பிழைத்து நுழைய எலிக்கு வளை எப்படியாவது ஏற்படும். நல்ல வினையாளனை நாட்டோர் நாளும் நாடுவர். நல்ல மாடு தன்னூரிலேயே விலைபோகும். பஞ்சைக்கடையிலும் பத்துக்காசுக்கு விற்கும். மழுங்கச் சிரைத்த தலையிலும் மற்றொருவன் கத்திக்கு மயிருமகப்படும். சிறக்கச்செய்த காரியங்களையும் மேன்மேலும் சிறப்பிக்கலாகும். ஒப்பற்ற வேலைத்திறமை உடையவன் எவனோ அவனையே ஊராரெல்லாம் வேண்டுவார்கள். ஆகையால் ஊதியம் எல்லாம் அவனதே. ஆங்காங்கு பஞ்சுமுதலிய ஆலைகள் அடர அமைக்கப்பெற்ற

தால் ஆள்களுக்கு அலுவல் அழிந்து அறக்கூழ்ச்சாலை அடையல் ஆயிற்று என்பார்கள் அந்தியில் அடையக் கூடிய ஆக்கம் அழிக்கும் கள் உண்ணும் அறிவிலிகள். இவ்வாலைகளால் பண்டங்கள் நயத்து பண்டைக் காலத்தில் பத்துப்பொன் பெற்றதெல்லாம் பின்னுக்கு பத்துப்பணத்துக்குப் பெறல் அநேகருக்கு ஒருங்கே அலுவல் அளிக்கல் ஆனதும் முதலிய பெரும்பயன்கள் அவர்கள் மயங்கிய கண்களுக்கு புலப்படாவாயின. குப்பைமேடு குப்பைமேடாய்த் திரிவதே மணியமாயிருப்பவன் காலமெல்லாம் கந்தைகட்டிக் கழிக்க வேண்டியவனே. அப்படிச்செய்வதை விட்டு சற்றே புத்திசெலுத்தி இங்கே கொஞ்சம் அங்கே கொஞ்சமாய்க் கைவினை கற்பானுகில் காட்டாளும் வீட்டாளாகலாம். 'காலங் கெட்டுப்போச்சுது, என்பார்கள் கசடர்கள். கொட்டாவி விட்டுக்கொண்டு குணம் இல்லாதவனுய்த் திரிவோனுக்கு எந்தக் காலமும் கெட்டுப்போன காலமே. நல்லகாலம் வரவே வராது.

எந்த விதத்திலும் காரியத்தைச் செய்து முடித்தே தீரவேண்டும் என்ற மனத்துணிவோடு தொடங்காமையாலேயே மக்களிற் பலர் மேன்மையடைவதில்லை. அரைப்பணம் சேமிப்பதுதான் கஷ்டம்; பிறகு ஆயிரம் சேமித்தலெளிது. 'முதல்போடு போட்டதும் பாதிப்போர் முடிந்தது' என்பார்கள். கள்குடுவையை கண்காணுத்தூரம் கடாசிவிட்டு 'முயல்வேன்' என்னும் கொடியை யுயர்த்தி வினை செய்வதையே நாடிச் செல்வானுகில் சிறிது சிறிதாக மீத்துவைத்து நிதிகளில் ஈட்டிக் கடைசியில் நிகரற்ற நிதிக்குவையுடையோனுகலாம். என் தலை விதி நான் தரித்திரனுகவே யிருக்கவேண்டும் என்று எண்ணி ஏங்கிநிற்போன் என்றைக்கும் ஏழையாகவே தானிருப்பான். ஆனல் கடையரிற் கடையனுகிய வறியனுக்கும் வளவனுக வாய்த்த வழியுண்டு ; பவளம் பார்த்து விழித்தகடை; பெண்டாட்டியென்ற கால் விலங்கும் பெற்ற பிள்ளைகள் என்ற சுள்ளாணிகளும் கட்டுப்படுத்தாமுன், இவ்விலங்கங்கள் ஏற்பட்ட மேல் சுமையின் பளுவைச் சுமக்க முடியாமல் வாழ்வென்னும் வழிச்செலவில் பின்னிட்டவனுய், பசியாறக்கஞ்சியும் கட்டக்கந்தையும் கிடைத்தால் அதுவே கோடி பாக்கியம் என்று கொள்ளவேண்டியவனே. ஆனல் அப்படியும் சொல்வதற்கில்லை. குஞ்சுகள் மிஞ்சினல் கோழிகுப்பைகிளறுவதும் அதிகம் தான். நெஞ்சழுத்தமுள்ள நெடியோன் குன்றின் நெடுமைகண்டு உள்ளம் அழிவனே? மலையேறிச் செல்லல் எவ்வம் உடைத்தே. ஆயினும் படிபாங்காயிருந்தால் போதாதோ? அது கண்டு மனத்துணிவோடு மலையேறும் ஊக்க முடையோன் தப்பாமல் உச்சியடைவான். பட்டபாடெல்லாம் நினைப்புக்கு இனிப்பு. சிறுகாலையிலேயே இளையோர்கள் செவ்வி பாராமல் மெய்வருந்தி, கடிது முயன்று, கூழ் குடித்து, காசு மீத்து வைப்பாரேல், காலத்துக்கும் கஷ்டப்பட்டுக் கஞ்சிகுடிக்கக் காரணமிராது. சிக்கனத்தைக்கருதியேனும் கள்குடியைக்கழிப்பாராக. கண்ணிற்சிறந்த உறுப்பு இல்லாதது போல தண்ணீரிற் சிறந்த உண்ணீருமில்லை. அதுவோ இயந்திரங்களையும் இயக்கும் வலிமையுள்ளது. அரிமாவும் பரிமாவும் பருகுவதும் அதுவே. கள்ளுக்கடைக்காசுக்கு கதவுவைத்த வீடு கடிதிற் கட்டலாம். 'கள்ளுண்போன் சோர்வு இன்மை பொய்.'

இம்மையில் நன்மை புரியவேண்டும் இச்சையுடையோர்க்கும் 'முயல்' என்னும் அச்சிறுமொழியே முன்னிற்கும். தெய்வத்துக்குத் தொண்டு செய்யப் பல்வேறுதுறைகளுண்டு. அவற்றிலொன்றேனும் ஒருவர்க்கு ஏற்றதாய் அமைவது திண்ணம். பல்லோர் குழாத்தில் பரக்கப்போதிக்கப் பேராற்றல் இல்லையென்று ஒன்றும் செய்யாமல் ஓயவேண்டியதில்லை. பக்கத்திலுள்ள பாமரர் பத்துப்பேர்க்கேனும் போதித்தலே போதும். சிறு புலத்திலும் பெருங்கதிர் விளையும். பெரியபானையில் காய்ச்சினல்தான் பால் உருசிக்கும் என்பதில்லை. சிறு குடிசைகளிலும் பெருந்தவசிகளிருக்கலாம். திருடன் வந்தானென்று தட்டியெழுப்பச் சிறுநாயும் போதும். சிறுபொறியேனும் உள்ளிருப்பது நெருப்பே. சிறு குறளிலும் விழுமியபொருள் ஆழ்ந்து கிடக்கும். செய்வனவற்றைத் திருத்தமாகவும் செவ்வையாகவும் செய்து, மனதார மாயோனை வாழ்த்தி நிறுத்தினல், பயன் கொடுக்கும் பாரம் பரம்பொருளுடையது ஆகும்.

அந்தோ! விழலுக்கிறைத்த நீர்போலும், காட்டுக்கெரித்த நிலவுபோலும், அநேகர்க்குப் புகட்டும் அரிய புத்திமதிகள் ஆற்றிற்கரைத்த புளியாம். கழுதைக்குபதேசம் காதிலே சொன்னலும் அழுகைக்குரலொழிய அங்கொன்றுமில்லை. பருவத்தில் பயிரிடாமல் தூங்கினல் அறுவடைக்காலத்தில் அழவேண்டியவனே. முன்யோசனையின்றிக் கண்டதே காக்ஷி, கொண்டதே கோலம் என்று அன்றுகொண்டதை அன்றே துய்த்து அழிப்பார்க்கு மறுநாள் மருந்துக்கும் சோறின்றி மடிய வேண்டிவரும் என்பது ஒருதலை.

மணியே பொன்னே மண்ணே பொருளே
அணியேதுணியே அகமே நலனே
இகமே சுகமே இவைதாமெல்லாம்
ஊக்கமே யுன்னை யுரைகுறி யன்றே!

ஜ. வே. சுப்பிரமண்யம்

## சுகாதாரவிளக்கம்
## HYGIENE

(பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது)

### மூன்றுவது அத்தியாயம்
### உத்ஸிருஷ்டங்களை யகற்றல்
### REMOVAL OF EXCRETA

28. உத்ஸிருஷ்டம் என்றால் வெளியில் விடப்பட்டவைகள் என்று அருத்தம். அதாவது மலம் மூத்திரம் முதலியனவாம்.

நகரங்களிற் பெரும்பாலும் விளையும் பெரும் நோய்களுக்கு அந்நகரங்களிலிருக்கும் உத்ஸிருஷ்டங்கள் செவ்வையாக அகற்றப்படாமலிருப்பதே காரணம்.

அதிக ஜனஸங்கமில்லாத கிராமங்களில் வசிக்கும் ஜனங்கள் தங்கள் இருப்பிடங்களுக்கு வெளியில்தூரத்திற்சென்று தங்கள் தேகபாதைகளைத் தீர்த்துக் கொள்ளுகிறார்கள். இக்காரணத்தால் உத்ஸிருஷ்டத்தின் தீமை அவர்களுக்கு உண்டாகிறதில்லை. அது மட்டுமல்ல, நகரத்தில் நோயை விளைவிக்கும் உத்ஸிருஷ்டம், கிராமத்தில் நிலங்களைச் செழிக்கச்செய்யும் எருவாகின்றது. அதிக ஜனத்தொகை நெருங்கிய நகர வாசத்திற்றான் உத்ஸிருஷ்டம் அந்நகரத்துக்கு விஷமாய் முடிகின்றது. அதை அப்போதைக்கப்போது அகற்றிவிடாமலிருந்தால் அந்நகரத்தின் நிலம் நீர், வாயு, எல்லாம் கெட்டுப் பெருநோய்கள் விளையவும் இடங்கொடுக்கின்றன.

29. உத்ஸிருஷ்டங்களை உபயோகித்தல்.—நகரவாசிகளுக்கு இவ்வண்ணம் நோயை விளைவிக்கும் உத்ஸிருஷ்டம் பூமியைச் சீர்திருத்திப் பயிர்செய்து பிழைப்பவர்களுக்கு வெகு உபயோகமாகின்றது. உத்ஸிருஷ்டத்தை பூமியில் எருவாகப் போட்டால் அதைவிட அப்பூமியைச் செழிக்கச் செய்யும் எரு வேறொன்றுமில்லை. ஆகையால் உத்ஸிருஷ்டங்களை அப்போதைக்கப்போது நகரத்தைவிட்டு அகற்றி, அவைகள் தேகத்துக்கு நோயை விளைவிக்காமல் பூமியிற் புதைக்கப்பட்டு பூமியைச் செழிக்கப்பண்ணக்கூடிய ஸௌகஸந்தர்சனவிதிகள் எவையோ அவற்றை நாம் எப்பொழுதும் கவனிக்கவேண்டும்.

ஒவ்வொரு மனிதனும் ஸராஸரி தினந்தோறும் தனது தேகத்தைவிட்டு 7 அவுன்ஸ் மலத்தையும் 50 அவுன்ஸ் ஜலத்தையும் மூத்திரத்தையும் கழிக்கிறான்.

30. சாக்கடை.—நமது வீடுகளிலும் வாஸஸ்தலங்களிலும் அழுக்கு முதலியவைகளை அலம்பிவிட்டால் அக்கழிவு ஜலத்தையும், மழை ஜலத்தையும், இன்னும் ஒருவீட்டில் அசுத்தமாகச் செய்யப்பட்டுக் கழித்துவிடப்பட்ட ஜலத்தையும், வெளியிற் கொண்டுபோகக் கட்டப்பட்டிருக்கும் சாதனங்கள் சாக்கடைகளாம். இவ்வாறு அகற்றப்படும் சாக்கடை ஜலத்தில் மல மூத்திரங்களும் கொஞ்சமாவது கலந்திருக்கும். இவ்வண்ணம் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் அகற்றப்படும் ஜலத்தை நாம் சிறு சாக்கடைகள்வழியாக அகற்றிப் பொதுவாகத் தெருவிற்போகும் பெருஞ்சாக்கடையில் கொண்டு போய் விடுகின்றோம். இவ்வாறு சிறு சாக்கடைகளும் பெருஞ் சாக்கடைகளும் ஒவ்வொரு பட்டணத்திலும் இருந்தே தீரவேண்டும்.

31. சாக்கடைகளின் உற்பத்தி.—முதல் முதல் சாக்கடைகளெல்லாம் சாதாரணமாக பூமியில் சிறு வாய்க்கால்களாக வெட்டப்பட்டு உண்டாயிருக்க வேண்டும். அதன்பிறகு நாகரிகம் அதிகரிக்க அதிகரிக்க இச்சிறுவாய்க்கால்கள் நமது தேகசௌக்யத்தைக் கெடுக்காம லிருப்பதற்காகவும் பார்வைக்கு அழகாகத் தோன்றுவதற்காகவும் செங்கல், கருங்கல், சுண்ணாம்பு, சிமிட்டி முதலிய சாதனங்களாற் கட்டப்பட்டதுமன்றி அதிக நாகரிகம் பொருந்திய லண்டன் முதலான நகரங்களில் இரும்புக்குழாய்களாலும் அமைக்கப்பட்டிருக்கின்றன. பலதுளி பெருவெள்ளம் என்றபடி ஒவ்வொரு வீட்டிலிருந்து சேரும் சாக்கடைத்தண்ணீர் ஒவ்வொரு பட்டணத்திலும் ஒருபெரும் சாக்கடை ஆறாகப் பெருகுகின்றதை நாம் நமது பிரதான நகரமாகிய சென்னையிலேயே பார்க்கின்றோம். இச்சாக்கடையில் பலவித துர்க்கந்தங்கள் பலவிதமாக நமது தேகசௌக்கியத்தைக் குறைக்கின்றபடியால் இவ்வாறு விளையும் தீங்கை நாம் எவ்வளவு சீக்கிரமாக அகற்றுகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு நமக்குச் சௌக்கியம்.

32. சாக்கடைத் தண்ணீரை உபயோகித்தல்.—மலம், மூத்திரம், சாக்கடைத்தண்ணீர் இவைகள் நமக்கு எவ்வளவோ தீங்கை விளைவிக்கின்றவைகளாயிருந்தபோதிலும் புற்பூண்டுகளுக்கு இவைகளே தாம் முக்கியமான எருவாகின்றனவென்பது சாஸ்தி

ரப்பிரகாரம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. உத்விருஷ்டங்கள் புற்பூண்டுகளுக்கு ஆகாரமாகின்றன. அப்புற்பூண்டுகள் மிருகங்களுக்கும் மானிடர்களுக்கும் உதவுகின்றன. ஆனதுபற்றி நமக்குப் பெரும் தீங்காக முதன்முதல் ஏற்படும் இவ்வுத்விருஷ்டங்களை நகரத்தை விட்டு அகற்றி அவைகளைப் பயிர்களுக்கு எவ்வாறு உபயோகிக்கலாம் என்ற வழியை நாம் தேடவேண்டும். அவ்வழிகளில் வெகுமுக்கியமானதும் சுலபமானதும் சாக்கடைத் தோட்டங்கள் தாம்(Sewage Farms). ஒவ்வொரு நகரத்திலுமுண்டாகும் மலஜலங்களையும் மற்ற கழிவுகளையும் பெருஞ்சாக்கடைவழியாக அந்நகரத்துக்கு வெளியே கொண்டுபோய்த் தேக்கி அச்சாக்கடை ஜலத்தை பூமியிலிறைத்துப்பாயும்படி செய்து தோட்டங்களை உண்டுபண்ணுவதுதான் நமது தேகசௌக்கியத்திற்கு நாம் செய்துகொள்ள வேண்டிய முக்கிய முறை. நாம் கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் கிராமங்கள் உள்பட எந்த ஊரிலும் குப்பைமுதலிய எருப்போடாமல் ஒரு பயிரும் விளைகின்றதில்லை என்பது விளங்கும். எந்த நிலமும் நமக்கு இரண்டொருதடவை மாசூலைக் கொடுத்துவிட்டு அதன்பிறகு நன்றாக விளையும் சக்தியை யிழக்கின்றது. அவ்வாறு குன்றும் சக்தியை மறுபடி அந்நிலத்திற்குக் குப்பை கூளங்களைப்போட்டு நாம் திரும்பிவரச்செய்து பயிரிடுகின்றோம். இக்குப்பைகூளங்களில் எச்சக்தியிருக்கின்றதோ அந்த சக்தி சாக்கடை நீரிலிருக்கின்றது. அப்படியிருக்கும் சாக்கடைநீரை நாம் ஏன் தோட்டத்துக்கு உபயோகித்து அவ்வாறு செய்வதால் இருவிதலாபத்தை அடையக்கூடாது? முதல் லாபம் அச்சாக்கடை ஜலம் நகரத்தில் நின்று நமது தேகசௌக்கியத்தைக் கெடுக்காமலப்போதைக்கப்போது அகற்றப்படுவது. இரண்டாவது லாபம், அதே ஜலம் நமக்கு அதி அவசியமான எருவாக உபயோகப்படுவது. எவ்வளவு தூரம் நாம் இச்சாக்கடைநீரை நகரத்துக்கு வெளியே கொண்டுபோகலாமோ அவ்வளவு தூரம் கொண்டுபோய் அங்கு அதைத் தேக்கி அது எவ்வளவு தூரம் ஓடிப் பாயுமோ அவ்வளவு தூரம் தோட்டமுண்டாக்கி அந்த ஜலத்தை அத்தோட்டத்திற் பாய்ச்சி பயிருண்டாக்கவேண்டும். சென்னை முனிசிபாலிடியார் இவ்வாறுண்டாக்கியிருக்கும் தோட்டங்களைப் பார்த்தால் இதன் ஸித்தாந்தம் விளங்கும்.

**33. சாக்கடைகளின் ஸந்திப்பு.—** வீட்டிலிருந்து நாற்றத்தை அகற்றிக்கொண்டு ஓடும் சிறு சாக்கடை, வீட்டிற்கு முற்றிலும் வெளியிற்கடந்து சென்று பெருஞ் சாக்கடையிற் கலக்கவேண்டும். இதின் முக்கியக் கருத்து பெருஞ்சாக்கடைக்குள்ளுண்டாகிவீசும் நாற்றம் சிறு சாக்கடையிற் பிரவேசித்து வீட்டுக்குள் திரும்பிப்புகுந்து அங்கிருக்கும்வாயுவை விஷவாயுவாக மாற்றக்கூடாதென்பதாம். இதற்காகவே ஒவ்வொருவீட்டுச் சிறு சாக்கடையும் பெருஞ்சாக்கடையில் தனித்தனியே கலப்பதும் அவ்வாறு கலக்கப்படுமிடங்கள் பெருஞ்சாக்கடைக்கும் சிறு சாக்கடைக்கும் நடுவிற் கொஞ்சம் இடைவெளியிருக்கும்வண்ணம் பிரிந்திருக்கவேண்டும். பெரும் சாக்கடைகள் ஜலம் கசியாதவண்ணம் பெரும்பாலும் குழல்களால் கட்டப்பட்டிருக்கின்றன. நன்றாகச் சிமிட்டுபோட்டு கட்டுவதால் ஜலம் பூமிக்குள் கசிவது நின்றுவிடுகின்றபடியால் சிமிட்டாலும் கட்டுகின்றார்கள். பல குழல்களைக்கொண்டு பெருஞ் சாக்கடைகள் கட்டப்பட்டிருக்கின்றபடியால் அக்குழல்களிணைக்கப்படும் இடங்கள் ஜலம் கசியாதவண்ணம் நன்றாக ஈயம் காய்ச்சிவிடப்பட்டு இணைக்கப்படவேண்டும். சிறுசாக்கடை பெருஞ் சாக்கடையிற் கலக்குமிடங்கள்தோறும் இடைவெளியிருப்பதற்கும் அவ்விடைவெளியிற் கிளம்பும் நாற்றம் வீட்டு ஜனங்களை வருத்தாமலிருப்பதற்கும் தற்காலம் நமது சென்னையின் ஒரு பாகமாகிய மைலாப்பூரில் அச்சந்துகளிற் குழல்களை நிறுத்தி அக்குழல்களை ஆகாயம் பார்த்து ஓங்கி நிற்கச்செய்து ஒவ்வொரு வீட்டு உயரத்திற்குத் தக்கபடி உயரம் வைத்து அதின் வழியாகப் பெருஞ்சாக்கடையிலுண்டாகும் நாற்றத்தை வீட்டுக்குள் புகவிடாமல் ஆகாயத்தைநோக்கிச் செல்லும்படி செய்திருக்கின்றார்கள். தற்காலம் கண்டுபிடிக்கப்படுகின்ற சுகாதார முறைக்குள் இது வெகு உயர்ந்த முறையென்றும் இதனால் தேகசௌக்கியத்தைப் பாதுகாப்பதற்குக் கொஞ்சமேனும் ஸந்தேகமேயில்லை என்றும் நிச்சயிக்கப் பட்டிருக்கின்றது. அக்குழல்கள் வழியாக பெருஞ்சாக்கடைக்குள்ளுண்டாகும் நாற்றம் வீட்டின் உயரத்துக்குமேலாகக் கிளம்பி ஆகாயத்திற் கலக்கின்றது. வெகு உயரக்கிளம்பிக் கலக்கும் விஷவாயு நமது தேகசௌக்கியத்துக்கு ஒருவித தீமையையும் செய்யாமல் பலவாறு மாறிவிடுகின்றது.

**34. சாக்கடைகளைக் கழுவுதல்.-** இரும்புக் குழல்களாலும், சுண்ணாம்பு, சிமிட்டு, செங்கல் இவைகளால் வெகுகெட்டியாகக்கட்டப்பட்ட வாய்க்கால்

களாலும் அமைக்கப்படும் பெரும் சாக்கடைகள்தாம் தேகசௌக்கியத்திற்கு ஓர்விதக் குறைவையுமுண்டாக்காம லிருக்கின்றன. இக்குழல்களும் இக்கட்டிடங்களும் வட்டவடிவமாகவே யிருக்கவேண்டும். அப்பொழுதுதான் தண்ணீர் தங்காமல் ஓடும். இவ்வாறு அமைக்கப்படும் சாக்கடைகளை அப்போதைக்கப்போது பரிசோதித்துப் பார்க்க அங்கங்கு சிறு துவாரங்கள் ஒருமனிதன் இறங்கிச் சோதிக்க இடங்கொடுக்கும் வண்ணம் ஏற்படுத்த வேண்டும். இதை(Man-hole) மனிதனிறங்கும் துவாரம் என்று சொல்லுகிறார்கள். இத்துவாரங்கள் இரும்புக் கதவுகளால் அழுத்தமாகச் சாத்தப்பட்டிருக்கவேண்டும். அவ்வாறு செய்யாதபக்ஷத்தில் அதன்வழியாக எப்பொழுதும் நாத்தமுள்ள விஷக்காற்று வீசிச் சுகக்குறைவை விளைவிக்கும். முதன்முதல் நன்றாகத் தண்ணீரை விட்டுச் சாக்கடைகளைக் கழுவி கடகடவென்று ஓடச்செய்யவேண்டும் மனிதனைக் கொண்டு சோதிப்பதற்குமுன்னமே இவ்வாறு தண்ணீரால் நாம் சாக்கடைகளைச் சோதிக்க வேண்டும். வீட்டிலிருந்து ஒடிக்கலக்கும் சிறுசாக்கடைகளைச் சுண்ணாம்பு கலந்த ஜலத்தை ஊற்றிக் கழுவவேண்டும். பெருஞ் சாக்கடைகளை ஸமிருத்தமாகத் தண்ணீர் ஓடச்செய்து கழுவ வேண்டும். இதைத்தான் (flushing) நிரம்பவிட்டுக் கழுவுதல் என்பார்கள். அவைகளிலுள்ள கெட்டகாற்று வெளியே செல்லுவதற்கும் நற்காற்று உள்ளே புகுவதற்கும் ஆங்காங்கு வழிகளை அவசியம் வைத்தே பெருஞ்சாக்கடைகளை நாம் கட்டவேண்டும். இவ்வண்ணம் வழி வைப்பதற்கு ஒரு முறையை எடுத்துக்காட்டுவது சாத்தியமல்ல. ஏனெனில் பெருஞ்சாக்கடைகள் அவைகள் ஓடுகின்ற இடங்களுக்குத் தக்கபடி கோணலாகவும் நேராகவும் கட்டப்பட்டிருக்குமாகையால், எவ்விடத்தில் நாற்றம் அதிக ஸுலபமாக வெளிக்கிளம்பலாம் என்று தோன்றுகின்றதோ அவ்விடங்கள்தோறும் அந்நாற்றம் வெளிப்போக வழியும் அமைக்கவேண்டும். இதில் நாம் எப்பொழுதும் மனதில் கவனிக்கவேண்டிய ஒரு பிரதான முறையாதெனில் நீரோட்டம் ஓடும் திசையேயாம். அத்திசையை அனுசரித்தே நாற்றம் வெளிக்கிளம்ப வழியை நாம் அமைக்கவேண்டும்.

பெருஞ் சாக்கடையைக் கழுவிவிடப் போதுமான ஜலமில்லாததாலும், ஏதாவது சாக்கடையிலடைத்துக்கொண்டு ஆங்காங்கு சாக்கடை ஜலம் எதிர்த்துத் தேக்கமாய் நிற்பதாலும் சாக்கடை சரியாகக் கழுவப்படாமற்போகலாம். அக்காரணங்களால் உண்டாகும் அசௌக்கியத்திற்கு அளவேயில்லை. அப்பொழுது சாக்கடை கழுவுகின்றவன் சாக்கடையிலிறங்கி அதிலிருக்கும் அசுத்தங்களை வாரிவெளிப்படுத்தவேண்டும். ஸமிருத்தமாய் ஜலம் ஓடச்செய்து கழுவுவதுதான் உத்தமமென்பதும், மற்றவிதங்கள் அவ்வளவு சுத்த மல்லவென்பதும் ஸுக ஸந்தர்சன சாஸ்திரிகளின் கொள்கைகள்.

35. சாக்கடைத் தண்ணீரை அப்புறப்படுத்துதல்.—சாக்கடைத்தண்ணீரை யிறைத்துத் தோட்டமுண்டாக்குவதைப்பற்றி (Sewage farms) நாம் முன்னமேயே சொல்லியிருக்கின்றோம். சிலவிடங்களிற் பெருஞ்சாக்கடைத்தண்ணீரை சிமிட்டாலும் கல்லாலுங் கட்டிய பெரிய குளங்களிற் றேக்கி அந்நீரிலிருக்கும் கனபதார்த்தங்களை எல்லாம் அக்குளத்தினடியிற் படியச்செய்து நீரைமட்டும் அக்குளத்தின்வாயில் மற்றொரு சிறுதுவாரத்தில் வழியச்செய்து அவ்வாறு வழிந்தநீரை ஓர்வித பிரயோஜனத்துக்கும் உள்ளாக்காமல் வீணாய் இறைத்துவிடுவது வழக்கம். நீரை யிவ்வாறு அகற்றியபிறகு முதற்குளத்தி னடியிற்படிந்த கனபதார்த்தங்களை வெளியிலெடுத்து உலர்த்தி மண்ணுடன் கலந்துவிடுகின்றார்கள். இது சரியான முறையல்ல. இத்தண்ணீரை இதிலிருக்கும் கனபதார்த்தங்களுடன் தோட்டத்திற்காக உபயோகிப்பதே நேரான முறையென்று எல்லா ஸுக ஸந்தர்சன சாஸ்திரங்களும் வெளியிடுகின்றன.

36. சாக்கடைத் தண்ணீரைக் கடலிற் போக்குவது.—இம்முறையை சென்னையில் நாம் பார்க்கலாம். இவ்வாறு நாம் சீராகச் செய்யவேண்டுமானால் சமுத்திர நீர்மட்டத்திற்குக் கொஞ்சம் பள்ளமாகவே அச்சாக்கடை சமுத்திரத்திற் கலக்கும் துவாரத்தை நாம் ஏற்படுத்தி அத்துவாரத்தின் வழியாக சமுத்திர நீர் எதிர்த்துச் செல்லாத வண்ணம் கெட்டிக் கதவுகள்போட்டு கடல் உள்ளடங்கியிருக்கும் வேளைகளிற் சாக்கடைவாயைத் திறந்துவிட்டு சமுத்திரம் உயரும் வேளைகளில் அவ்வாயைமூட ஏற்பாடு செய்யவேண்டும்.

37. சாக்கடையை நதியிற் போக்குவது.—சாக்கடையை சிலவிடங்களில் நதியில் விடுகின்றார்கள். இவ்வாறு செய்யுமிடங்களில் சாக்கடைவாயிற் சல்லடைபோன்ற கதவுகளை யமைத்து அக்கதவுகளின் உட்பக்கத்தில் கனபதார்த்தங்களைத் தேக்கி வெளியில் வாரி எறிந்து சாக்கடைநீரை மட்டும் ஆற்று

நீரிற் கலக்க வற்பாடு செய்கின்றார்கள். இவ்வாறு இவர்கள் செய்வது சாக்கடைநீரில் விஷமில்லையென்றும் அதிலுள்ள கனபதார்த்தங்களிற்றான் விஷமிருக்கிறதென்றும் அபிப்பிராயங் கொண்டதுபோலும். இது முற்றிலும் தப்பான அபிப்பிராயம். அதிக விஷம் சாக்கடை நீரிலேயே யிருக்கின்றது. நதி சலத்தில் சாக்கடைநீர் கலக்க இடங்கொடுக்கவே கூடாது.

38. சாக்கடைத் தோட்டம்:-நாம் சாக்கடைநீரை தோட்டங்களுக்குப் பாய்ச்சி எருவாகப் பண்ணிப் பயிரிடுவதுதான் எல்லாவிதத்திலும் உயர்ந்த முறை. இவ்வாறு உண்டாக்கப்படும் தோட்டம் அச்சாக்கடைநீர் ஓடிப்பாயும் காலின் இருபக்கங்களிலேயும் சரிவாய் (sloping) இருக்கவேண்டும். நாம் இறைக்கும் சாக்கடை நீர் சரேலென்று எங்கும் ஒரே அளவாக ஓடிப்பாயவேண்டும். அப்பொழுதுதான் அதிலிருக்கும் எரு பூமியின்மேல் எங்கும் சம்பந்திக்கும். இவ்வெருவால் சில புற்கள், கிழங்குகள், பருப்பு இனத்தைச் சேர்ந்த காய்கறிகள் முதலியன வெகுசெழிப்பாய் விளைகின்றன. சென்னையில் விசேஷமாய் இச்சாக்கடை ஜலத்தாற் பைம்புற் பயிரிடுகின்றார்கள். அப்புல் வெகு ஏராளமாயும் வெகு செழிப்பாயும் விளைகின்றது. இவ்வாறுண்டாகும் புல்முதலிய பதார்த்தங்களால் உடம்பிற்கு ஓர் வித தீங்குமில்லை. பூமி அடிக்கடி எருவை வாங்கிக்கொள்ளுவதால் அதின் செழிப்பு குறைவுபடாமல் எப்பொழுதும் மாகூலைக் கொடுக்கின்றது.

இத்தோட்டங்களை உண்டாக்குவதில் நாம் கவனிக்கவேண்டியது முக்கியமாக ஒன்றுண்டு. இத்தோட்டங்கள் ஜனங்கள் குடியிருக்குமிடங்களுக்குச் சமீபத்திலிருந்தால் அச்சாக்கடை நீர் இறைபடும்பொழுது உண்டாகும் நாற்றம் ஜனங்களுடைய சுகத்தைக் கொஞ்சம் மாற்றும். பூமியிற் கலந்த பிறகு ஒருவித உபத்திரவத்தையும் உண்டாக்காது. ஏனெனில், அந்நாற்றம், அந்நாற்றஜலம், நாற்றமண் முதலியவைவெல்லாம் பூமியிற்படிந்து ஒஷதிகள் ஆகர்ஷித்து வளரப் பெரும் எருவாகும். அத்தோட்டங்கள் கிணறுகளுக் கருகாமையிலிருந்தால் அத்தோட்டத்தின் மண்ணிற்பதியும் ஜலம் அடித்தரைமட்டும் பொசிந்து ஒருகால் அக்கிணறுகளின் ஜலத்தைக் கெடுக்கலாம். நகரத்துக்கு வெகுதூரம் சாக்கடைகளைக் கொண்டுபோவதால் இத்தீமையை நாம் முற்றிலும் அகற்றலாம். அல்லது தோட்டங்களை விசாலமாகப்பண்ணி பூமிக்குள் 4, 5, அடிகள் மட்டும் அச்சாக்கடைநீர் படியும்படிசெய்து, அதின்மேல் நாம் ஒஷதிவர்க்கங்களை உண்டாக்கிவரவேண்டிய ஜாக்கிரதையைச் செய்துவந்தால் அந்நான்கு ஐந்து அடிக்குள்ளேயே இவ்வோஷதிவர்க்கங்கள், எல்லா மலத்தையும் அந்நீரிலிருந்து ஆகர்ஷித்துக்கொண்டு கூடியமட்டும் சுத்தஜலமே அடிக்கிணறுகளில் இறங்கும்படி செய்யும். இவ்வாறு ஜாக்கிரதையாக விருப்பதால் இத்தீங்கு முற்றிலும் நீங்கும்.

39. மலத்தை யகற்றல் மூன்று விதம்:—(1) மலத்தை அவ்வாறே அகற்றி அப்புறப்படுத்துவது (2) மலத்தை அதிக ஜலத்தால் சாக்கடையிற் கலக்கச் செய்து சாக்கடை ஜலத்துடன் அப்புறப்படுத்துவது (3) மலத்திற் சாம்பல் அல்லது கரி அல்லது மரத்தூள் இவைகளைக் கலந்து அப்புறப்படுத்துவது.

(1) மூத்திரத்தைமட்டும் சாக்கடையிற் கலக்கச் செய்து, மலத்தைத் தனியே அப்புறப்படுத்தி அம்மலத்தால் மலபஸ்மம் "Poudrette" என்ற ஒரு எரு உண்டாக்குவார்கள். இது வெகு உயர்ந்த எரு. இம்மலபஸ்மம் உண்டுபண்ணுவதற்காக யந்திரங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவ்வியந்திர சாலையில் வேலை செய்கின்றவர்களுக்கு நாற்றத்தால் உபத்திரவம் கொஞ்சமிருக்கலாம் என்றாலும் அவர்களுடைய தேகசௌக்கியத்திற்கு ஓர்விதக் குறைவு மில்லை.

(2) அதிக ஜலமிருக்கும் நகரங்களில் சாக்கடைகளிலேயே மலத்தையும் மூத்திரத்தையும் முற்றிலு மலம்பிவிட்டு அகற்றி நகரவாசத்துக்கு 500 கஜங்களுக்கு அதிகமான தூரத்தில் அவ்விதச் சாக்கடைகளைக் கொண்டுவந்து தேக்கி அவ்வாறு தேக்கப்பட்ட சாக்கடைநீரை வெளியே யிறைத்துத் தோட்டங்கள் உண்டுபண்ணுவதால் வெகு செழிப்பான தோட்டங்கள் உண்டாவதுடன் ஜனங்களுடைய தேக சௌக்கியத்திற்கு ஓர்விதக் குறைவு முண்டாகின்றதில்லை. இவ்வாறுசெய்ய ஏராளமான தண்ணீர் வேண்டும். இவ்வித சாக்கடைகளிலிருந்து கெட்டகாற்று வீட்டுக்குட் புகாதவண்ணம் பெருஞ் சாக்கடைகள் வெகு கெட்டியாகவும் கொஞ்சங்கூட தேக்கங்களின்றி ஓடுகின்றவைகளாகவும் கட்டப்பட்டிருக்கவேண்டும்.

(3) அடுப்புக்கரிப் பொடி, சாம்பல், சாதாரணமான ரம்பத்தூள், நாற்றத்தை மாற்றும் தூள்கள் (Deodorising Powders) இவைகளை மலத்துடன் கலந்து மலத்தை வீட்டைவிட்டு அகற்றி அவ்வண்

ணம் குவிக்கப்பட்ட மலத்தை அப்படியே பூமிக்குள் புதைத்து எருவாக்கவேண்டும். இம்முறை தான் நமது தேசத்தில் இப்பொழுது அதிகமாக வழங்கிவருகின்றது.

40. குப்பை, கூளம், முதலியவை:—உத்விருஷ்டங்கள் மட்டுமேயன்றி பலவித குப்பைகள் நமது வாஸஸ்தலங்களைச் சுற்றிலும் வாஸஸ்தலங்களிலும் எப்போதும் உண்டாய்க்கொண்டிருக்கின்றன. வீட்டுச்சாம்பல், அடுப்புக்கரி, கஞ்சி, கழுவுநீர், லாயம் மாட்டுப்பட்டி இவைகளிலிருந்து வெளியே கொட்டப்படும் குப்பை, கசாப்புக்கடையிலிருந்து அகற்றப்படும் அசுத்தங்கள், வீடுவாயில்களை அடிக்கடி கூட்டிச் சேர்க்கப்படும் குப்பை இவைக ளெல்லாவற்றையும் நாம் அகற்றக் கடைமைப் பட்டவர்களாக விருக்கின்றோம். அதே மாதிரிதான் சவங்களையும்.

சாம்பல், சருகு, எச்சிலிலை இவைகள்போன்ற குப்பைகளை எல்லாம்கூட்டி குப்பைத்தொட்டியிற்கொட்டி வண்டிகளால் அகற்றி புலங்களுக்கு எருவாக்க வேண்டும். சிலவிடங்களில் இக்குப்பைகளை நகரத்துக்கப்பால் பள்ளங்களில் கொட்டி நிரவி அதன் மேல் அரை அடிமண் இழுத்துவிட்டு மூடுகின்றார்கள். இவ்வாறு மூடப்படும் குப்பை மண்ணோடு மண்ணாய் மாறி தேகத்துக்கு ஓர்விதத் தீங்குஞ்செய்யாமலிருக்க குறைந்தபட்சம் ஏழு வருஷங்களாக வேண்டும். இவ்வண்ணம் குப்பைகொட்டி மூடிய யிடத்தையே பெரும்பாலும் சாக்கடைத்தோட்டங்களாகப் பண்ணிப் பயிரிடவேண்டும்.

41. தகனஸ்தம்பங்கள் (cremators):—நகரத்திற் குவியும் குப்பைகளை பூமியிற்கொட்டி மூடுவதைக்காட்டிலும் நெருப்பில்கொடுத்து நீறுக்குவது எல்லாவிதத்திலும் மேலானது. தகனஸ்தம்பங்கள் (cremators) கட்டி எல்லாவிதக் குப்பைகளையும் அவ்விடங் கொண்டுவந்து உடைந்த ஓடுகள், கண்ணாடிகள், இரும்பு, தகரம் முதலிய கனக்குப்பைகளை வேறாகவும் இலேசான குப்பைகளை வேறாகவும் எரிக்கவேண்டும். கனக் குப்பைகளை எரித்து ஒருவித சாள் உண்டாக்கி ரஸ்தாக்களுக்குப்போட்டுக் கட்டிக்கலாம். இலேசான குப்பையால் உண்டாக்கும் நீற்றை உயர்ந்த எருவாக உபயோகிக்கலாம்.

இவ்வாறு குப்பையை எரிக்க உண்டாக்கப்படும் தகனஸ்தம்பம் வெகு சாஸ்திரோக்தமாய்க் கட்டப்படவேண்டும். இல்லாவிடில் அவைகளிலிருந்து குப்பை எரியுங் காலத்தில் உண்டாகும் நாற்றம் அசௌக்கியத்தைவிளைவிக்கும். சென்னையில் இத்தகனஸ்தம்பங்கள் கொஞ்சவருஷங்களுக்கு முன்னற்பிசகாகக்கட்டப்பட்டு உபயோகிக்கப்படாமலிருந்தன. இப்பொழுது இரண்டு ஸ்தம்பங்களை சாஸ்திரப்பிரகாரங் கட்டி அவைகளில் குப்பைகளை எரித்து வருகின்றார்கள். நமது நாட்டில் இம்மாதிரியான ஸ்தம்பங்கள் கல்கத்தா நகரத்தில் விசேஷமாய் வெகு சாஸ்திரோக்தமாய் உபயோகிக்கப்பட்டு வருகின்றன.

42. பிணத்தை யகற்றல்:— பிணமும் ஓர் உத்விருஷ்டம். ஆனால் ஒவ்வொருவரும் தமது மதாசாரப்பிரகாரம் பிணத்தை அடக்கஞ்செய்கின்றார்கள் அல்லது எரிக்கின்றார்கள். பாரஸ்கஜாதியார் கழுகுக்கும் பருந்துக்கும் விருந்திடுகின்றார்கள். இம்மூன்று விதங்களுள் பிணத்தை எரிப்பதே எப்பொழுதும் சிலாக்கியம். ஜர்மனி, இதாலி தேசங்களிலும் பிணத்தை எரிப்பதை வழக்கத்தில் கொண்டுவந்து அதுவே உத்தமம் என்று ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள். பிணத்தை எரிப்பதால் ஒருமணிக்குள்ளாக அதை நீறுக்கிவிடலாம். அக்காரணத்தால் பிணத்தால் உண்டாகும் நாற்றம் நோய் முதலியவைகளை பிழைத்திருக்கும் நமக்கு உண்டாக்கமாட்டா.

43. பிணத்தைப் புதைத்தல்:—ஒவ்வொரு பிணத்தையும் நாம் புதைப்பதாயிருந்தால் நமது நாடு முழுமையும் பிரேத பூமியாகவே மாறிவிடும். சில மண்ணில் சவம் சீக்கிரம் அழுகும், சிலமண்ணில் நாட்பிடிக்கும். பிணம் புதைத்தவிடங்களிலிருந்து கிளம்பும் விஷக்காற்று பிழைத்திருக்கப்பட்டவர்களுடைய தேகசௌக்கியத்திற்குப் பெருந்தீங்கை விளைவிக்கின்றது. நூறு வருஷங்கள் அழுகிக்கிடந்து நோயை விளைவிக்கும் பிணம், எரிப்பதால் ஒரு மணிக்குள் நீறுய்விடுகின்றது. மதாசாரங்களை நாம் எளிதில் மாற்ற முடியாததலால் புதைக்கும் வழக்கமுள்ளவர்கள் குழியை ஆழமாகத்தோண்டி சவத்தை வைத்து அத்துடன் சுண்ணும்பு அல்லது மரக்கரி இவைகளைக் கொட்டி மூடுவதால் இவ்வித அசௌக்கியம் கொஞ்சம் நீங்கும்.

44. நோயால் சாகும் சவங்கள்:—நோயில் வருந்திச் சாகும் மிருகங்கள் மகாமாரி முதலிய தொத்துநோயால் மாண்டுபோகும் மனிதர்கள் இப்பிணங்களை எப்பொழுதும் எரிப்பதே நலம். இவைகளை யகற்றிவெளியே கொண்டுபோகும்பொழுது .தொத்து நோய் மற்றவர்களைப் பற்றமலிருக்க துணியை ஒருவித திராவகத்தில் நனைத்து அத்துணியால் இச்சவங்களை நன்றாக மூடி வெளியிற் கொண்டுபோக வேண்டும்.

45. மயானங்கள்:—பிணத்தைப் புதைக்கும் இடம், எரிக்கும் மயானம் இவைகள் நமது வாஸஸ்தலங்களுக்கும் நாம் நீர் எடுக்கும் இடங்களுக்கும் வெகுதூரத்தில் ஒதுங்கி யிருக்கவேண்டும்.

# புளிய மரம்

## THE TAMARIND TREE

இந்தியாவிலுள்ள பயன்தரு மரங்களுள் புளிய மரமும் ஒன்று. அது இந்தியாவில் நெடு நாளாயுள்ளது. வெப்பமான நிலங்களிலுள்ள மரங்களில் புளிய மரத்தைப் பார்க்கினும் பயன் படுவன வேறு இல்லை. புளியமரத்தின் குணங்களை முதலில் இந்துக்களிடமிருந்து அரபியர்கள் கற்றுக் கொண்டார்கள்; அவர்களிட மிருந்து ஐரோப்பியர் கற்றுக்கொண்டார்கள். அரேபியா தேசத்திலும் பாரசீகத்திலும் புளியமரம் ஒரு காலத்தில் இந்து நாட்டுப் பேரீந்து என்னும் பேரால் வழங்கினது. புளி இந்தியா தேசத்தில் எல்லா விடங்களிலும் உண்டாகின்றது. சென்னை இராஜதானியிலும் நடு இந்திய நாடுகளிலும் அது அதிகம். புளி நடுவதற்கு மாரிகாலமே தகுந்தது. புளியங்கொட்டைகளை நல்ல ஈரமுள்ள இடத்தில் முளைக்கப் போடவேண்டும்; முளைத்து இரண்டு மூன்று வருஷங்களில் அவை பெரிய கன்றுகளாய் விடும். காடுகளிலும் மலை சார்ந்த இடங்களிலும் புளியமரங்கள் பெருந் தொகையாக வளருகின்றன. அவை சில வருஷங்களில் பெரிய மரங்களாகி நெடுநாளைக்கு அழியாமல் நிற்கும். புளியமரம் எழுபத்தைந்து எண்பது அடி உயரம் வளரும்; அதன் கிளைகள் நான்கு புறத்தும் விரிந்து படர்ந்து மிக அழகாகத் தோன்றும்; அதன் பாரரை இருபத்து நான்கடிச் சுற்றுள்ளதாக விருக்கும். அது சித்திரை வைகாசி மாசங்களில் பூத்து, ஐப்பசி கார்த்திகை மாசங்களில் பழுக்கும். ஒரு பெரிய மரத்தில் ஐந்தாறு மடங்கு பழம் பறிக்க முடியும். புளியம்பழம் கறிகள் துவையல்களுக்கு உபயோக மாகும்; அது பெருந் தொகையாகப் பிறதேசங்களுக்கு ஏற்றுமதியாகின்றது. இந்தியாவிலுள்ளவர்கள் ஒவ்வொருவருக்கும் புளி ஓரின்றியமையாத உணவுப்பொருள். மாங்காய் பலாக்காய் இல்லாமல் காலந் தள்ளினும், புளியில்லாமல் ஒருவர் காலந் தள்ள மாட்டார்கள். புளியமிலைமுதல் புளியம்பழக்கோது ஈறுக எல்லாம் உணவுப் பொருளாகப் பயன்படுகின்றன.

புளியின் பிரயோசனத்தைப்பற்றி வங்காளதேசத்தில் ஒருகதை வழங்குகின்றது. அதுவருமாறு:--நாடியா என்னுமூரில் தருக்கசாஸ்திரி ஒருவர் இருந்தார். ஒருநாள் அவர் வீட்டில் சமைப்பதற்குச் சிறிது அரிசியேயன்றிக் கறிக்கு ஒரு பொருளுமில்லாதிருந்தது. அவர் மனைவி வந்து என்ன கறிசமைப்பது என்று அவரைக் கேட்டாள்; அதற்குத் தருக்கசாஸ்திரி திடீரென்று எழுந்து புளியமரத்தை உற்றுப்பார்த்தார். அதை அவள் அறிந்துகொண்டு, புளியமரத்தருகில் சென்று, சில இலைகள் பறித்துப்போய் ஒரு கறிசமைத்துவைத்தாள். தருக்கசாஸ்திரி வெளியே போய்த் தனது வேலைகளை முடித்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பிவந்து சாப்பாட்டிற்கு உட்கார்ந்தார். மனைவி சாதத்தைப்படைத்துப் புளியமிலைக்கறியை இட்டாள். அவர் அதைமிகவிருப்பத்தோடு சாப்பிட்டார். திருப்தியாகச் சாப்பிட்டபின் சாஸ்திரியார் "இந்த அமுத முதவும் புளியமரம் எங்கள் வீட்டில் நிற்கும் வரைக்கும் எங்களுக்கொருகுறைவுமில்லை" என்று சொன்னார். இது புளியமரத்தின்பிரயோசனத்தை நமக்கு அறிவுறுத்தற்பொருட்டு வழங்கிவரும் ஒரு கதை யென்றாலும், நாம் புளியினது பயனின் மிகுதியை மறந்து விடுவதற்குச் சிறிதும் இடமில்லை.

புளியினிடத்து மனிதர்களுடைய உடம்பிற்குச் சுகஞ்செய்வனவாகிய மருந்தின் குணங்கள் பலவுள. புளியங்காயைத்தின்பது பித்தத்தைப் போக்குவதோடு வாதநோய்க்கு மருந்துமாகும். புளியம்பழத்தின் புளியை உடம்பிலுண்டாகும் கட்டிகளுக்குப் பூசினால் அவைகள் விரைவில் பழுத்து உடைந்துபோகும். புளியிலிருந்து டார்டாரிக் ஆசிட் (tartaric acid) முதலிய பொருள்கள் செய்யப்படும். புளியம்பழத்தின் ஓடுகளைச் சுட்ட சாம்பலிலிருந்து மருந்திற்குரிய ஒருவகை உப்புச்செய்யப்படுகின்றது. புளியமிலையைத்துவைத்து உடம்பில் நோவுள்ள இடங்களுக்குப் பூச நோவுதணியும்; அதன் சாம்பலிலிருந்து செய்யப்படும் உப்பு உணவுருமை நோய்க்கு நல்ல மருந்தாகும்.

புளியமிலையை வெந்நீரிலிட்டுநன்றாய் அவித்து நீல நிறமுள்ள ஆடைமேல் போட்டால் அவ்வாடை செந்நிறமாய் விடும். தக்கிண நாட்டுத்தட்டார் புளியைக் கொண்டு ஒருவகைப் புளிப்புச்செய்து வெள்ளிப்பாத்திரங்களை அழகுபெற மினுக்குவார்கள்.

புளியங்கொட்டையை ஒரு பயனுமில்லாததென்று பலரெறிந்து விடுகிறார்கள். அது பயன்படும் விதத்தை அவர்கள் அறியார்கள். பஞ்சகாலத்தில் வறிய சனங்கள் புளியங்கொட்டையைத் தின்பார்கள். அவர்கள் அதை முதலில் அரைமணி நேரம் நீரில் ஊறவைத்துப் பின்பு அவித்துச் சாப்பிடுவார்கள். சிலர்

புளியங்கொட்டையை முதலில் வறுத்துப் பின்னர் அவிப்பார்கள். புளியங்கொட்டையை அவித்து அதன் மேல்தோலை உரித்து விட்டால், உள்ளிருக்கும் பருப்புத் தின்ன நல்ல ருசியுள்ளதாயிருக்கும். புளியம்பருப்பைச் சிலர் வெயிலில் காயவைத்து அல்லது வறுத்துப் பின்பு மாவாக அரைப்பார்கள். இந்த மாவிலிருந்து ரொட்டியும் பலகாரமும் செய்யலாம்.

புளியங்கொட்டையைத் தின்றதனால் சிலவிடங்களில் நோயுண்டானதாகச் சொல்லப்படுகின்றது. புளியங்கொட்டையைத் தின்றோர் சிலர்க்கு மலம்போகாது வயிற்றுவலி உண்டானதுமுண்டு. இவற்றிற்குக் காரணம் புளியங்கொட்டையை மேல்தோலை நீக்காது தின்றமையே யாம். புளியங்கொட்டையி னுள்ளிருக்கும் வெண்ணிறமுள்ள பருப்புத் தேகவளர்ச்சிக் கேற்றதென்று பரீக்ஷித்துத் தெளியப்பட்டிருக்கின்றது. ஆயுர்வேதமுடையார் புளியங்கொட்டையைப் பொடிசெய்து வாதநோய்க்கு மருந்தாகப் பிரயோகிப்பார்கள்; யூநானிவைத்தியர் புளியங்கொட்டைத் தூளை அழுக்குத் தேமலுக்கு மருந்தாகப் பாவிப்பார்கள். வையிற்று என்னும் இங்கிலீஷ் வைத்தியர் (Dr. White) புளியங்கொட்டை மாவைப் புற்றை செய்து கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாமென்று சொல்லுவர்!

புளியங்கொட்டையை இடித்து அவித்து ஒரு வகைக் கஞ்சி காய்ச்சுவார்கள். அந்தக் கஞ்சியைப் பெரும்பாலும் பட்டு நெய்வோர்கள் பட்டுநூலுக்கிடுவார்கள். புத்தகங் கட்டுவோரும் குதிரையுடுப்புத் தைப்போருங்கூட அந்தக் கஞ்சியை உபயோகிப்பார்கள். புளியங்கொட்டைப்பசை உடைந்த மரத்துண்டுகளைப் பொருத்த உபயோகமாகும். ஐம்பது வருஷத்துக்குமுன் எழுதிய ஒருவிவசாய நூலில் புளியங்கொட்டையிலிருந்து ஓர் எண்ணெய் எடுத்ததாகச் சொல்லியிருக்கின்றது. எண்ணெயெடுத்தற்குச் செய்யும் முயற்சிக்குத்தக்க அளவு எண்ணெய் புளியங் கொட்டையில் இல்லாமையால் இந்தத்தொழில் கைவிடப் பட்டது போலும். எவ்விடத்திலாவது புளியமெண்ணெய் செய்து விற்பதாய் இப்போது கேள்வி இல்லை.

ஆயினும் புளியங் கொட்டையைக் கொண்டு ஒருவர் ஒரு விருத்தி எளிதில் செய்து கொள்ளலாம். அறியாமையால் நாம் நமது காலடியிற் கிடக்கும் பொருளை வீணாய் எறிந்து விடுகிறோம். புளியங்கொட்டையைக் கிராமங்களில் எளிதாகச் சேகரிக்கலாம்; அதைப்பின்பு மின்சாரத்தினாற்றலால் ஓடும் எந்திரத்திலிட்டு மாவாக அரைக்கலாம். புளியங்கொட்டையைக் கொண்டு ஒரு விருத்திசெய்து கொள்வதற்குக் கொஞ்சமுதல்போதும். இதைப் படிப்பவர்கள் யாராவது இவ்வகை ஒரு விருத்தி செய்துகொள்ளுவார்களாக.

[இது இண்டியன் எக்கானமிஸ்ற்று (Indian Economist) என்னும் பத்திரிகையில் கண்டது.]

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

பண்டித நடேசசாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு

பார்வதியின் பாதாங்குஷ்டந்தொடங்கி வருணனை

33. கொஞ்சம் மேலெடுப்பான நகங்களமைந்தவைகளாய், பூமியில் கால்வைக்கப்படும்பொழுதெல்லாம் சிவப்பு நிறத்தை வெளியில் கக்குகின்றவைகள்போல் தோன்றுகின்றவைகளாய், விளங்கிய பார்வதியின் பாதங்கள் பூமியில் சஞ்சரித்தபொழுதெல்லாம் வரம்பைவிட்டுப் பூமியின்மேல்வந்து நடமாடும் தாமரைமலர்களை ஒத்திருந்தன.

34. அவள் அழகாய் நடந்த நடையை பார்த்தபொழுதெல்லாம் அவள் கால் சதங்கை ஒலிக்கும் ஒலியைக் கற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக அவளுக்கு வேறு ஒரு வித்தையைக் கற்றுக்கொடுத்த ராஜ அன்னங்களால் அந்நடை பயிற்சிசெய்து வைக்கப்பட்டாளோ என்று சந்தேகிக்க வேண்டியதாயிருந்தது. *

35. அவளுடைய இரண்டு முழங்கால்களும் உட்டமாய்ப்பரந்து அழகாய் அதிக நீளமில்லாமலும் வர்த்துலமாய் அமைக்கப்பட்டிருந்ததைப் பார்க்கும் பொழுது அவ்வுருவை அமைக்கப்பிரமதேவன் சேகரித்த எல்லா அழகுகளையும் அம்முழங்கால்களிலேயே செலவிட்டுவிட்டபடியால் மற்றை அவயவங்களை அமைக்க வேறு அழகுகளைத்தேட அவன் சிரமப்பட்டான் என்று எண்ணவேண்டியிருந்தது.

36. உலகத்தில் தொடைக்கு உபமானமாய் யானைத் துதிக்கையையும் வாழைமரத்தையும் சொல்லுவது வழக்கம் என்றாலும்யானைத்துதிக்கைத்தோல்

* வித்தையால் வித்தை என்ற சாஸ்திரப்படி நமக்குத் தெரிந்த வித்தையை நாம் ஒருவனுக்குக் கற்றுக்கொடுத்து அதற்குப் பிரதியாக அவனுக்குத் தெரிந்த வித்தையை நாம் அவனிடமிருந்து கற்றுக் கொள்ளலாம் என்பது விதி. அன்னப்பறவைகள் பார்வதியினிடமிருந்து அவள் சதங்கை ஒலியைக் கற்றுக்கொண்டு அவளுக்கு தங்களுடைய நடை என்ற வித்தையைக் கற்றுக்கொடுத்தனபோலும். இந்தச் சுலோகத்தால் பார்வதியின் நடை, சதங்கை ஒலி இரண்டும் வருணிக்கப்பட்டனபோலும்.

காடுமுரடாயிருப்பதாலும் வாழை ஒரே சீதளமாயிருப்பதாலும் உமையின் தொடைக்கு அவையிரண்டும் உபமானமாகா.

37. வேறு ஒரு மடந்தையாலும் ஒருபொழுதும் மனத்தால்கூடக் கருதமுடியாத ஈசனுடைய மடியில் பார்வதியின் நிதம்பம் ஏற்றிவைத்துக்கொள்ளப்பட்ட தென்பதினாலேயே அதன் அழகை நாம் ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாமன்றோ !

38. அப்பார்வதியின் அழகான உந்தியில் புகுந்த அவளுடைய உரோமாவலி அவள் இக்கு முடிப்பைத் தாண்டி அவள் ஒட்டியாணத்தில் நடு நாயகமாய் விளங்கிய நீலக்கல்லின் ஒளிபோலும் சோபிக்கலாயிற்று.

39. யாகமேடைபோல் (மார்பு அகன்று இடை சிறுத்து) விளங்கிய தனது வயிற்றில் பார்வதி அழகான மூன்று மடிப்பு விழப்பெற்றாள். அவைகள் காமன் நடந்து போகும்பொருட்டு யௌவனன் என்ற கொத்தனால் கட்டப்பட்ட படிகள் போலும் காணப்பட்டன.

40. கருங்காம்பு பெற்று ஒன்றுடன் மற்றொன்று உரைந்துக்கொண்டுவளர்ந்த பார்வதியின் வெளுமையான மார்புகள் "இழையிடைபுகாத என்ற வண்ணம்" தங்கள் இடைவெளியில் தாமரைத்தண்டின் நூல்கூட புக இடமில்லாமல் அவ்வளவு நெருக்கமாய் விளங்கின.

41. அவளுடைய கைகள் சிரீஷ மலரைக்காட்டிலும் அதிகமிருதுவானவைகள் என்று எனக்குத் தோன்றுகின்றது. ஏனெனில் முதலில் தோற்ற மன்மதன் அவைகளையே சிவபெருமானுடைய கழுத்துக்குப் பாசங்களாய்ச் செய்தான் அன்றோ!

42. பார்வதியின் கழுத்தும் அவள் அக்கழுத்தில் அணிந்திருந்த உருண்டைமுத்தால் அமைக்கப்பட்ட மாலையும் ஒன்றையொன்று பரஸ்பரம் அழகுசெய்யும் மகிமை உண்டானபடியால் எதை எது சிறப்பாகக்காட்டியது என்ற பெருமை அதிகமாகத் தோன்றாமல் ஒன்றை மற்றொன்று சாதாரணமாய் அலங்கரித்ததாகக் காணப்பட்டது.

43. எப்பொழுதும் சஞ்சலித்துக்கொண்டேயிருக்கும் லட்சுமீதேவி சந்திரனிடமிருக்கும் பொழுதெல்லாம் தாமரைமலரின் சுகத்தை அனுபவிக்க முடியாதவளாகவும் தாமரை மலரிடமிருக்கும் பொழுதெல்லா சந்திரனுடைய சுகத்தை அடைய முடியாதவளாகவும் தவித்தாள். † ஆனால் உமையின் முகத்தை அவ்விலட்சுமி நாடிவந்தடைந்ததும் சந்திரன், தாமரை இவ்விரண்டினுடைய சுகத்தையும் ஒருங்கே அனுபவித்தாள்.

44. மாவிளந்தளிரின்மேல் வெண்மலரைவைத்துப் பார்த்தாலும் அல்லது பவளத்தின்மேல் நல்முத்தைவைத்துப் பார்த்தாலும் அக்காட்சி பார்வதி சிவந்த தனது உதட்டில் காந்தி பரவச்சிரிக்கும் புன்சிரிப்புக்கு ஒருவாறு ஒத்திருக்கும்.

45. வெகு மதுரமாய்ப் பேசும் அப்பார்வதி அமுதம்மொழியும் வண்ணம் பேசுங்கால், கோகிலத்தின் குரலுங்கூட தந்திகள் தப்பிதமாய் இயைக்கப் பட்டு வாசிக்கப்படும் வீணைபோல் நமது காதுகளுக்கு விகாரமாய்க்கேட்கும்.

46. அதிகக்காற்று வீசுமிடத்திலிருக்கும் கருங்குவளைமலரை ஒத்ததாக விளங்கிய அப்பார்வதியின் அழகான பார்வையானது அம்மாதால் மான் பேடுகளிடமிருந்து கற்றுக்கொள்ளப்பட்டதோ அல்லது அம்மான்பேடுகளால் அம்மாதினிடமிருந்து கற்றுக்கொள்ளப்பட்டதோ என்று சந்தேகிக்க வேண்டியதாக விருந்தது.

47. எழுதுகோலைக்கொண்டு மையால் எழுதப் பட்டவைகள்போல் விளங்கிய அப்பார்வதியின் விசாலமான புருவங்கள் எவ்வாறு சோபித்தனவென்றால் வெகு உல்லாஸத்துடன் விளங்கிய அவைகளைப் பார்த்தபிறகு மன்மதன் தன்னுடைய வில்லின் அழகே அழகு என்று அடைந்திருந்த கர்வத்தை விட்டான்.

48. கவரிமான்களுக்கு மனத்தில் சிறிதும் வெட்கமென்பது இருக்கும் என்கிற பட்சத்தில்

---

†. சந்திரன் இரவிலும் தாமரை பகலிலும் சோபிக்கின்றனவைகள். இரண்டையும்ஒரேகாலத்தில்இலட்சுமி அனுபவிக்காதகாரணம் இதுதான். பார்வதியின் முகம் தாமரைபோலும் சந்திரன்போலும் விளங்கிற்று என்றபடி.

* கவரிமான்களுக்குத் தங்கள் வால்களின்மேல் அதிக அன்பு என்றும் அவ்வாலினின்று ஒரு மயிர் உதிர்ந்தால் அவைகள் தங்கள் பிராணனை விட்டுவிடும் என்றும் அதை அறிந்தே கவரிமான்களைப் பிடிக்கச்செல்லும் வேடர்கள் அவைகளைத் தாங்கள் கொல்லாமல் முள்வேலி ஒன்று காட்டில் கட்டி அவ்வேலி வழியாய்க் கவரிமான்களை துரத்துகின்றார்கள் என்றும் அவ்வண்ணம் ஓட்டப்படும்பொழுது அம்மான்களின் வால்கள் முள்ளில் பட்டதும் மயிர் கலைந்த காரணத்தால் அவைகள் தங்கள் உயிரை மாய்க்கின்றன என்றும் சொல்லுகின்றார்கள்.

அவைகள் பார்வதியின் கூந்தலைப் பார்த்த பிறகு தாங்கள் தங்கள் வால்களின்மேல் வைத்திருக்கும் அன்பைக்குறைத்துவிடும்.

49. ஒப்பிடவேண்டிய எல்லாவஸ்துக்களையும் ஒருங்குசேர்த்து அவ்வவைகளுக்கேற்ற இடங்களில் அவ்வவ்வஸ்துக்களை வைத்து வெகுசிரமத்தால் பிரமனால் உண்டாக்கப்பட்டவள் போலவும், எல்லாவித அழகையும் ஒரேபடத்தில் பார்க்க ஆசைகொண்ட அப்பிரமனால் சிருஷ்டிக்கப்பட்டவள்போலவும் பார்வதி விளங்கினாள்.

50. (நாரதர் சொன்ன ஸந்தோஷ ஸமாசாரம்):— ஏதோ தன்மனப்போக்குப்படி சஞ்சரித்துக்கொண்டிருந்த நாரதர் ஒருசமயத்தில் இமவானுக்கருகாமையில் பார்வதி நிற்கக்கண்டு அவள் சிவபெருமானுடைய பாதிசரீரத்தை அன்பால் கொள்ளைகொள்ளும் அவரது ஒரே மனைவியாய்ப் பின்னால் ஆகப்போகின்றாள் என்பதை அம்மலை மன்னவனிடம் சொல்லிப்போனார்.

51. (இமவான் தன் பெண்ணுக்கு வரந்தேடாமலிருந்தது).—இமவானும் பார்வதிக்கு மணத்துக்குத் தக்கவயது வந்திருந்தபோதிலும் நாரதர் சொன்ன சொல்லைக் கேட்டபிறகு வேறொருவரையும் தேட மனமில்லாதவராயிருந்தார். மந்திரமோதி ஓமஞ் செய்யப்பட்ட அவிசை ஒப்புக்கொள்ள அக்கினியாலல்லாது மற்ற ஒளியால் முடியுமா?

52. ஈசன் தன்னிடம் வந்து பெண்ணைக்கொடு என்று யாசிக்காதவரையில் தான் அவரிடம்சென்று என் பெண்ணை வாங்கிக்கொள் என்று சொல்ல மலைகள்மன்னவனுக்கு மனம் வரவில்லை; ஏனெனில் நல்லோர்கள் தாங்களேபோய்க் கேட்டால் எங்கு காரியமே நிறைவேறாமற் போய்விடுமோ என்ற பயத்தால் தங்களுக்கிஷ்டமான காரியங்களிலும் உதாஸீனர்களாயிருக்கின்றார்கள் அன்றோ?

# உழவுநூல்

# AGRICULTURE

(48-ம் பக்கத்தொடர்ச்சி)

## 1837ஆு வரையிலுள்ள வியவசாயக் கருவிகள்

சில இடங்களில் அதிகப்பளுவில்லாத உருளையோடுகூடிய கலப்பையை உபயோகித்து வந்தார்கள். ஆனால் நாட்டுப் புரங்களில் 'இரசல் நிலங்களிலும்' கூட (Light soils) பளுவான கலப்பையைக்கொண்டு உழுது வந்தார்கள். 1851-ம்ஆு, முதல்முதல் நீராவியின் சக்தியினால் வியவசாயத்தை நடத்திப் பார்த்து 1857-ம்ஆு அதைக்கொண்டே நிலத்தை உழுதார்கள். ஜேம்ஸ் மியக்கிள் (James Meikle) என்கிற சாஸ்திரிய நிபுணர் 1710-ம்ஆு தானியத்தினின்று பதலைப்பற்றிப் பதரை நீக்கும் இயந்திரத்தைக் கண்டு பிடித்தார். அவர் குமாரர் அண்டுரூ (Andrew) என்பவர் வைக்கோலினின்று தானியத்தைப் பிரிக்கும் இயந்திரத்தைக் கண்டுபிடிக்கலானார். மனிதனுக்கு உணவையும், உடையையுந் தரத்தக்க பயிர்களையும், கால்நடைகளையும் விருத்திபண்ணுவதே வியவசாயத்தின் நோக்கமாகும்.

இயற்கையிலேயே நானாவிதக் காய்கறிகளும், மற்றுமுள்ள உயிர் ஜெந்துக்களும் செழித்து வளருகின்றன. மனிதன் தன் சாமர்த்தியத்தால் இயற்கையிலேயே கொடுக்கப் பட்டிருக்கும் சௌகரியங்களைத் தன் உபயோகத்துக்கும் சேவைக்கும் வேண்டியவாறு திருப்பி அமைத்துக்கொள்கின்றான். குடியானவன் தன் சாமர்த்தியத்தாலும் தொழிலாலும் சிறந்த மாதிரியான காய்கறிகளையும் கால்நடைகளையும் விருத்தி பண்ணி அவற்றை விற்றுப் பலனடைகிறான். சூரிய வெளிச்சம் இல்லையெனின், ஒன்றுமே நடைபெறாது. அவனும் தன்னால் கூடியமட்டும் தனக்கு வேண்டியவாறு இயற்கையிலுள்ள சக்திகளை உபயோகப் படுத்திக் கொள்ளுகிறான். "எவனொருவன் முன் ஒரு

பயிர் வளர்ந்த இடத்தில் இரண்டு பயிர் வளரும்படி செய்கிறானோ அவனே தேசத்தாரது மேலான நன்றி பாராட்டற்குப் பாத்திரனாகிறான்.''

வியவசாயியினது நோக்கம் மேற்குறித்ததே. வியவசாய சாஸ்திரம் என்பது வியவசாயத்தை சாஸ்திர ரீதியாய் விருத்திபண்ணும் நோக்கத்தைக் கொண்டதாகும்.

சாஸ்திரீயமான கோட்பாடெல்லாம் பரிசோதனை அனுபோகங்களினின்றும் அனுமானிக்கப்பட்டவையே. 'கோட்பாடு' என்பது பலவிதமாய் இயற்கையால் அமைந்துள்ள உண்மைகளினின்றும் நிலைநிறுத்தப்படும் பொதுச்சட்டமேயாம். புத்திப் பிரகாசமுடையோராலும் விஷயங்களைச் சரிவர ஆராய்வோராலும் இயற்கையில் அமைந்துள்ள உண்மைகளைப் பொதுவாய்விளக்கும் சட்டமேயாகும். சித்தாந்தமும் அநுபோகமும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவை. ஏனென்றால் 'அநுபோக'த்தினின்றுமே 'சித்தாந்தம்' கிடைத்தது. பரிசோதனைகள் செய்து நாம் புதிதாய் விஷயங்களைக் கற்றுக்கொள்ளுகிறோம். ஆகையால் அவற்றைப் பிழையற நடத்தினாற்றான் உண்மைகளைச் சரிவற அறியலாகும். நாம் பொதுவானமுடிவுக்குவந்து அதன் உண்மையை ஊகிக்குமுன் பரிசோதனைகள் பலவற்றைப் பலவிதமாகச்செய்து பார்க்கவேண்டும். இவ்வாறு எவ்வளவுக்கெவ்வளவு சாக்கிரதையுடன் பரீக்ஷைசெய்கிறோமோ அவ்வளவுக்கேற்றபடியே உண்மையின் நிச்சயமும் தெரியலாம். வியவசாயிகள் தாமே தம்மாலியன்றவரை அதிகப் பணம்செலவின்றி வியவசாயப் பரிசோதனைகள் செய்து பார்த்துக்கொள்ளலாம். ஆனால் பொதுவாய் பரிசோதனைகளைத்தக்கபடி செய்வது அவர்களுக்கு சாத்தியமில்லை. ஆகையால் ஏற்கனவே கண்டு தெளிந்த பரிசோதனைகளின் பிரயோசனத்தைத் தாமே அறிந்துகொள்ள முயலவேண்டும்.

இவைகளையெல்லாம் உத்தேசித்தே நம் காருண்ய கவரன்மெண்டார் இதற்குமுன் சைதாப்பேட்டையிலும் தற்காலம் கோயமுத்தூரிலும் வியவசாயக் கலாசாலையும் ஏனைய முக்கியவிடங்களில் வியவசாயச் சோதனைப் பண்ணைகளும் ஸ்தாபித்து நடத்திவருகிறார்கள். ஆதலால் ஆங்காங்கு நடக்கும் சோதனையின் பிரயோசனத்தை நாம் தக்கவாறு ஊகித்து பார்த்துப் பின்பற்ற முயலவேண்டும்.

பொதுவாய் மாதிரிப் பண்ணைகளின் முக்கிய நோக்கங்களாவன:—

(1) இந்தியாவில் பயிர்க்குப்பின் வேறொரு பயிரை அதாவது 'மாற்றுப்பயிர்முறை' (Rotation of crops) இடும் முறையைப் பரிசோதனைகளால் பரீக்ஷித்து நிச்சயித்துக்கொள்ளல்;

(2) கிழங்குப்பயிர் செய்வதா லுண்டாகும் நன்மையை யறிதல்;.

(3) புதுமாதிரியான பயிர்களை விளைவித்தல்;

(4) புதிதான விதைகளைக்கொண்டு பயிர் செய்து பார்த்தல்;

(5) பலவிதமான பயிர் செய்வதில் ஒவ்வொன்றும் தனித்தனியே நீரினாலடையும் பயனை உய்த்துணர்தல்;

(6) சுண்ணத்தையும், மற்ற உரங்களையும் உபயோகிப்பதால் கிடைக்கும் பலன்களை அறிதல்;

(7) கிராமாந்திரங்களில் புதுமையும் அதிக உபயோகமுமான வியவசாயக் கருவிகளை பழக்கத்துக்குக் கொணர்தல்;

(8) பொதுவாய்க் கால்நடைகளை விருத்திபண்ணி அவற்றிற்கு வேலைகொடுத்து, அதனின்றும் பிரயோசனத்தை யடைதல்.

ஐரோப்பாவில் கிருஷி.—உழுது பயிரிடும் முறை, அதற்கு வேண்டிய கருவிகள் முதலியன—மிகவும் தேர்ச்சியடைந்து சாஸ்திர திட்டத்தைப் பெற்றிருக்கிறது. ஆனால் இந்தியாவில் கல்விகற்றவர்கள் வியவசாயத்தை இழி

வாய் எண்ணுகிறார்கள். அவர்கள் கற்றகல்வியை உபயோகப்படுத்தி வியவசாயத்தை விருத்தி பண்ண ஆவலற்றவர்களாயிருப்பதால் இத்தேசத்தில் பயிர்த்தொழில் மிகவும் கேவலமான நிலைமையி லிருக்கின்றது. உண்மையாகவே, ஜனங்கள் அத்தொழிலைப் பற்றிய சாதாரண முறைகளைக்கூடத் தெரிந்து கொள்ளவில்லை. பயிரிடுவதனால் நிலத்தின் செழுமை அடிக்கடி குறைந்துபோகும்; செழிப்புக்குறைவை திரும்பவும் நிலத்திற்கு ஊட்டும் முறையை நம் பரதகண்டத்துளோர் பெரும்பாலும் அநுஷ்டித்து வருவதில்லை; அதனாலே இந்தியா வரவரத் தரித்திரமடைந்தும் தேசத்திலுள்ளவர்கள் தமக்கு போதுமான உணவை பெறுதற்கு இயலாமலும் இருக்கின்றது.

கீழேநாலும் அட்டவணையினால் தினே தினே பயிரிடும் நிலங்கள் நம்நாட்டில் அதிகரித்து வருவதைக் காணலாம்.

| | | |
|---|---|---|
| 1861 ஆம் | 1,96,000,000 | ஏக்கரா |
| 1871 | 2,40,000,000 | ஷை |
| 1881 | 2,53,000,000 | ஷை |
| 1891 | 2,87,000,000 | ஷை |
| 1901 | 3,00,000,009 | ஷை |

உணவைப் பெறும் முறைகள்

முற்காலத்தில் ஜனத்தொகை குறைவாயிருந்தது; சாகுபடிக்கு வேண்டியமட்டும் நிலம்கிடைத்தலும் அரிது; எனினும் ஜனங்கள் அவ்வளவு கஷ்டப்படவில்லை. ஆனால் தற்காலத்தில் ஏறக்குறைய நாட்டிலுள்ள நிலமுழுதும் சாகுபடிக்கு கொண்டுவரப் பட்டிருந்தும் ஜனத்தொகை முன்னினும் பதின் மடங்காய்ப் பெருகியிருப்பதால் நவீன வியவசாய முறைகளை உபயோகித்து நிலத்தினின்றும் அதிகப் பலனைப்பெற வேண்டும்.

அக்பர் என்கிற மோகலாயச் சக்ரவர்த்தியினது அரசாட்சியில் மந்திரிஸ்தானம் வகித்திருந்த தோடர்மால் என்னும் நிபுணரால் தயாரிக்கப்பட்ட அயினி அக்பாரி (Ainy Akbari) என்னும் அரசிறை சம்பந்தமான கணக்கு புத்தகத்தில் இந்தியா முழுவதிலும் நிலத்தினின்று கிடைத்த பலனை ஒழுங்காகவும் திட்டமாகவும் குறித்திருக்கின்றது.

இந்தியாவில் ஒரு ஏக்ராவின் விளைபொருள்

| | 17-ம் நூற்றாண்டில் | 19-ம் நூற்றாண்டில் |
|---|---|---|
| நெல் ... | 1338 இராத்தல் | 998 இராத்தல் |
| கோதுமை ... | 1155 இராத்தல் | 600 இராத்தல் |
| நயமானபருத்தி ... | 223 இராத்தல் | 52 இராத்தல் |

அந்நிய தேசங்களில் தற்காலச் சராசரி விளைவு

நெல் 2500 இராத்தல். ஐரோப்பாவில் ஒரு ஏக்ராவுக்கு சராசரி கோதுமை விளைச்சல் 1500 இராத்தல். இங்கிலாந்தில் 30 புஷல் அல்லது 1800 இராத்தல். அமெரிக்காவில் நயமான பருத்தி ஒரு ஏக்ராவில் சராசரி 200 இராத்தல்; எகிப்து தேசத்தில் 300 முதல்400 இராத்தல் வரை பருத்தி விளைவாகிறது.

இந்தியாவில் வியவசாயம் முக்கியமாயிருப்பதேன்:—நாட்டுப் புறத்திலுள்ளவர்களில் 100-க்கு 90-பேரும் தேசஜனத்தொகையால் 100-க்கு 80-பேரும் தம் ஜீவனோபாயத்துக்கு நிலத்தையே சார்பாகக் கொண்டிருக்கிறார்கள். க்ருக் (Crooke) என்பவர் இத்தேசத்தாரையும் வியவசாயத்தையும் குறித்துப் பின் வருமாறு சொல்லுகிறார்:—

"வியவசாயிகளை மற்றெந்த தேசத்திலாவது, தேசசரித்திரங்களிலாவது கண்டும் கேட்டுமிருப்பதைவிட அதிகம் இத்தேசத்திலேதான் அவர்கள் அதிக பரிதாப நிலையிலிருப்பதைப் பார்க்கிறோம். தொன்றுதொட்டு வந்த பழக்கத்தைப் பின்பற்றித் தடுமாறுவதை இவ்விடத்திலேயே காண்கிறோம். இவர்கள் பழைய முறைகளையே கைக்கொண்டும் பொறுமையுடன் வருந்தி உழைத்தும் வருவதை நோக்க பரிதாபமாயிருக்கிறது. பெரும்பாலர் அன்றன்று காய்ச்சிக் குடிக்கிற நிலைமையிலிருந்தபோதிலும் கொஞ்சமேனும் வருங்காலத்துக்கு மீந்துவைக்காததால் சந்ததி விருத்தி மேன்மேலும் ஆக முன்னினும் அதிக கஷ்டம் அடையவேண்டி வருகிறது."

வியவசாயத்தின் பற்பல பகுப்புகள்

வியவசாயமாவது நிலத்தைப் பண்படுத்தி உழுவதும் அந்தந்த இடத்துக்குத் தகுந்த தானியங்கள், நார் வகை, எண்ணெய் வகை, சாயப்பயிர், சர்க்கரைப்பயிர் முதலியவற்றை

விளைவிப்பதும், கால்நடைப்பிராணிகளை விருத்திபண்ணி மேன்மைப் படுத்துவதும், கறவை ஆடுமாடு முதலியவைகளினின்றும் கறந்தபாலை பலவிதமாக உபயோகிப்பதும், கோழி வாத்து முதலானவற்றை வளர்ப்பதும், தேனீக்களை பலுகப்பண்ணி அதனின்றும் விஷயங்களை அறிந்துகொள்வதும் (Sericulture), மீன்களைத் தண்ணீரில் விட்டு அதின் உபயோகத்தை யறிவதும், பட்டுப்பூச்சி வளர்ப்பதும், மரஞ்செடி புஷ்பங்களைப் பயிரிடுவதும், ஆகிய இவைகளே பயிர்த்தொழிலின் பற்பல பகுப்புகளாம்; இன்னும் இவ்விஷயமாய்ச் சொல்வதற்கு எத்தனை யோவித அம்சங்கள் இருக்கின்றன, விரிக்கிற் பெருகும்.

அந்தந்த இடத்துக்கு ஏற்றபடி வெவ்வேறு விதமான பயிர் செய்வதில் முக்கியமாய் கவனிக்கவேண்டிய குறிப்புகளாவன:—

(1) தேசமிருக்குமிடம்;

(2) சமுத்திர மட்டத்துக்குமேல் எவ்வளவு உயரத்திலிருக்கிறது என்பது;

(3) நிலத்தின் பாங்கு (தன்மை);

(4) சீதோஷ்ண வித்தியாசங்கள்;

(5) அவ்வவ்விடத்தின் தேவைகள்;

(6) வியவசாயம் நடத்துவதற்கு மூலதனம்;

(7) பாசனமுறை;

(8) ஜனங்களின் இயற்கை; இன்னும் இவை போன்றவைகள்.

நாம் வசிக்கும் சென்னை இராஜதானி 23 ஜில்லாக்களாகப் பிரிக்கப் பட்டிருப்பதில் 5-சுதேச இராஜ்ஜியங்களும் இருக்கின்றன.— திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை, பல்லாரி ஜில்லாவிலுள்ள சாந்தூர், கர்நூலிலுள்ள பங்கனப்பள்ளி ஆகிய. இராஜதானி மொத்தம் 1,50,798 சதுரமைல் கொண்டது. 9,609 சதுர மைல் சுதேச ராஜ்ஜியமாகும். மீதம் 1,41,189 சதுரமைலில் 19,167 சதுரமைல் வடசர்க்காருக்குள்பட்ட ஏஜெண்டு துரைத்தன ஆளுகையைச் (Agency Tracts) சேர்ந்தது. 29,624 சதுர மைல் ஜமீந்தாரிகளைச் சேர்ந்ததாகும்.

*By a Specialist.*

# நீலி வசீகரம்

## TAMING OF THE SHREW

அங்கம் I.

களம் 1. மதுரை நகர். தெரு வீதி.

(விஜயராகவ உடையாரும் சுப்பராயனும் வருதல்)

விஜயராகவ:— சுப்பராயா! இன்றைக்குத்தான் யான் உடம்பெடுத்த பயன் பெற்றவனானேன்; முத்தமிழ்ச்சங்கத் தெய்வப்பாவலர் வீற்றிருந்த பாண்டிநாட்டைக் காணப்பெற்ற பாக்கியத்தை என்னென்றுரைப்பேன்!

* "முருகன் சங்கத் திருப்பவனும் முக்கட்கடவுணிற்பவன்வா
ளரசன் புயலை விலங்கிட்டோ னனலும் புனலுமியலறியும்
பூமு மதுர மான புரம் புல்வாய் புலியின் முலையுண்ணும்
நரியும் பரியா நதியிதழி மணக்குங் கன்னி நன்னாடு."

*"தாரணி மவுலிக் கொற்றத் தசரதன் மகனார் வந்து
கூறுகி ரெண்கு முன்னைக் குரக்கின வெள்ளங் கொண்டு
வாரிகள் குலைப்ப டுத்தி வலியவா ளரக்கற் காய்ந்து
காரண னானை யேத்தி யரும்பழி கழுவு நாடு"

என்று சான்றோர்களால் புகழ்ந்து போற்றப்பட்ட நாட்டில் பண்டை, நான்மறைக்குமெட்டாப் பராபரன் மனிதர்போலத் திருவிளையாடல் எட்டெட்டும் செய்திட்ட மதுரை நகர்க்கு இணையான வேறொரு நகருமுண்டோ? இப்புண்ணிய நகரைப் பார்க்கவேண்டுமென்று வெகுநாளாக என்னுள்ளத்திருந்த விருப்பம் இன்றுதான் நிறைவேறிற்று. எனது பிதாவின் கிருபையும் ஆசீர்வாதமும், உனது உயிர்த்துணையும் எனக்கிருக்கையில், நான் ஒன்றுக்கும் அஞ்சவேண்டியதில்லை. சான்றோர் நிரம்பிய தஞ்சயம் பதியில் பெரு நிதியம் வைத்தபிரான் மரபில் தோன்றிய நல்லசாபக உடையாரின் மகனை வுதித்த நான், உறையூரில் கற்றகல்வியை இவ்விடத்தில் பூர்த்தி செய்வது பொருத்தமுள்ளதாகும். நீர் நகை

---

* திருவாலவாயுடையார் திருவிளையாடல்: நாட்டுச் சிறப்பு.

கொண்டவன், அற்பநீருள்ள குண்டத்தை நீத்து, நீர் நிரம்பிய தடாகத்தைத் தேடிவருவதுபோல, நானும் சமயக் கணக்கர் திறங்கேட்கவே இங்கு வந்திருக்கிறேன். இதில் உனது அபிப்பிராயம் என்ன?

சுப்பராயன்:—அய்யனே! என் கருத்தும் அதுதான்; தத்துவார்த்தத்தைக் கிரகிக்கவேண்டுமென்று தங்களுக்குப் பூர்ண பிரீதியுண்டென்பதைக் கேட்டு அளவில்லாத ஆநந்தமடைகிறேன். ஆனால், கேவலம் வேதாந்தியாகவிருந்து லோகாநுபவமில்லாதிருப்பது மாத்திரம் நன்றன்று என்று தோன்றுகிறது. லோகாநுபவமில்லாத மகரிஷி ரிஷ்யசிருங்கரை இரண்டு ஸ்திரீகள் ஏமாற்றி விட்டனரல்லவா? ஒழிந்த நேரங்களில் லோகாநுபவம் உண்டாகும்படியான மற்றை நூல்களையும் பார்க்கவேண்டும். இடையிடையே ஸங்கீதம், காவியம், கணிதம், தர்க்கம், முதலியவைகளை அப்பியஸிக்கவேண்டும். இல்லாவிட்டால் "கற்றறி மூடன்" என்ற பெயர் வந்துவிடும்.

விஜயராகவ:—பேஷ்! உனது புத்திமதி வெகு உபயோகமானதென்பதற்குச் சந்தேகமில்லை; கூடியவரையில் அவைகளையும் அப்பியஸிப்போம். இந்நேரம் கேசவன் வந்துவிட்டால் நாம் காரியத்தைத் துவக்கலாம். முதலில் நமக்கு ஒரு தனி விடுதி யமர்த்தவேண்டியது அவசியம். நாம் இருக்கிறது தெரிந்தால் நண்பர்களில் பலர் நம்மைக் காணவருவார்கள்:--இரு இரு இதென்ன! யார் யாரோ வருகிறார்களே!

சுப்பரா:— ஏதோ வேடிக்கை போலவிருக்கிறது. தனியாக நின்றுகொண்டு பார்ப்போம். (ரகுநாததேவர், கௌதமிதேவி, வநிதேசுவரி, பொன்னம்பலதேவர், பிரதாபருத்திரதேவர், வருதல்.)

ரகுநாத:— நண்பர்காள்! நான்தான் முன்னமேயே சொல்லிவிட்டேனே! அடிக்கடி கேட்பதில் என்ன பயன்? பெரிய பெண்ணுக்கு எங்கேயாவது வரன் நேர்ந்தால்தான் இளையபெண்ணின் கல்யாணத்தைப்பற்றி யோசிப்பேன். உங்களில்யாருக்காவது கௌதமியைக்கல்யாணம் பண்ணிக்கொள்ள இஷ்டமுண்டாகில், சொல்லுங்கள்.

பொன்னம்பல:— அதைவிடப் பிடாரியைக் கட்டிக்கொண்டு மாரடிக்கலாம். இந்த குணவதியெனக்கு வேண்டாம்; பிரதாபருத்திரர் இருக்கிறார்; அவருக்கு விருப்பமிருக்கும்.

கௌதமி:—(ரகுநாததேவரைநோக்கி) அப்பா, இந்த இரண்டு குரங்குகளுக்கிடையில் என்னைத் தள்ளிவிடப் பார்க்கிறீரோ?

பிரதாப:—நாங்கள் குரங்காகவிருந்தால் நீ கருங்குரங்காகவிருக்கிறாய். உன்னைக் கல்யாணஞ்செய்து கொண்டால் போதும், வேறுவினை வேண்டியதில்லை; உடனே ஏதாவது "காவி" யாகவிருக்கும் ஸந்நியாஸ மடத்திற்கு "மனு" செய்து கொள்ளவேண்டியதுதான்.

கௌதமி.—அப்படியெல்லாம் சந்தேகப்படவேண்டாம்; நான் உங்கள் ஜோலிக்கே வருகிறதில்லை; ஒருவேளை விதியிருந்து வந்துவிட்டால், இருக்கவே இருக்கிறது; என்னுடைய ஸாமர்த்தியம் எங்கே போய்விட்டது? கட்டேகால் மரியாதையுடனேயே நடத்துகிறேன்.

பிரதாப.—கிருஷ்ண! கிருஷ்ண! போதும்! போதும்! இப்படிப்பட்ட உத்தமி வேண்டவே வேண்டாம்.

பொன்னம்.—மஹாராஜியாய் உனக்கு இஷ்டமானவரைத் தேடியடை. நீ இல்லாத இடம் தேவலோகமாகவிருக்கும்.

சுப்பராயன்.—(மெதுவாய்) ஐயா! நல்லவேடிக்கை இது. இந்தப்பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும், அல்லது, பேய் பிடித்திருக்க வேண்டும்; இல்லாதபோனால் இப்படிப் பேசுவாளா?

விஜயராகவ.—ஆனால் பக்கத்தில் நிற்கும் மற்றொருத்தியைப் பார்த்தால், உத்தம ஸ்திரீகளுக்குள்ள நற்குணங்கள் எல்லாம் ஒருங்கே காணப்படுகின்றனபோல் தோன்றுகிறது. நீ பேசாதிரு.

சுப்பரா:---ஐயா! நான் பேசவில்லை; நன்றாகப் பாருங்கள்.

ரகுநாத:—அம்மா! வநிதை! நீ உள்ளேபோ; விசனப்படாதே. சீக்கிரத்தில் நன்மையுண்டாகும்.

கௌதமி:—அவளுக்கென்ன கேடு வந்திருக்கிறது; விசனம்! என்ன விசனம்?

வநிதேசுவ:—அக்கா! நான் வருந்துவது உனக்குச் சந்தோஷமாக விருக்கிறதா?—ஐயா, தாங்கள் சொல்லியபடியே கேட்கிறேன். எனது புஸ்தகங்களும் விளையாட்டுப்பொருள்களும் எனக்குத் துணையாக விருக்கின்றன.

விஜயராகவ:—சுப்பராயா, கேட்டாயா? எவ்வளவு இனிய குரலுடன் பேசுகிறாள், பார்;

பிரதாப:—ஐயா! ரகுநாததேவர்வாள்! தாங்கள் செய்வது அதிசயிக்கக் கூடியதாக விருக்கிறது. எங்களது நல்லெண்ணம் வஸிதேசுவரிக்குத் துக்கத்தை யுண்டு பண்ணுவதை நினைக்க, எனக்குத் துக்கமாக விருக்கிறது.

பொன்னம்ப:—இந்த ராக்ஷஸிக்காகவா, வஸிதேசுவரியைச் சிறையிலடைக்கிறீர்? நீங்கள் செய்வது கொஞ்சங்கூட நன்றாகவில்லை.

ரகுநாத:—நீங்கள் சொல்வதெல்லாம் ஸரிதான்; ஆயினும் நான்தான் முன்னமேயே தீர்மானித்து விட்டாதாகச் சொல்லி விட்டேனே! அடிக்கடி கேட்காதேயுங்கள்—வஸிதை! நீ உள்ளேபோ (வஸிதேசுவரி போதல்). அவளுக்குப் பாட்டிலும் வாத்தியங்களிலும், காவியங்களிலும், அதிகப்பிரீதி. அவைகளில் பாண்டித்தியம் பெற்ற உபாத்தியாயர் ஒருவரை வீட்டிலேயே வைத்துக்கொண்டு பாடஞ் சொல்லிக்கொடுக்கச் செய்கிறேன். உங்களில் யாருக்காவது தெரிந்த உபாத்தியாயர் இருந்தால் அழைத்து வாருங்கள்; சம்பளம் ஜாஸ்தியாகக் கொடுக்கிறேன்; குழந்தைகள் விருத்திக்குவரும் விஷயத்தில் செலவைப்பார்க்கக் கூடாது. ஸரி, நீங்கள்போய்வாருங்கள்.—கௌதமி! நீ இங்கேயே இரு; குழந்தை வஸிதையிடம் சில வார்த்தை சொல்லவேண்டியிருக்கிறது (போதல்.)

கௌதமி:—நானும் போகிறேனே. போகக் கூடாதா? எனக்குப் பள்ளிக்கூடம் போக வேண்டுமாக்கும்? வேண்டியதும் வேண்டாததும். இன்னதென்று தெரியாத சிறு குழந்தையோ நான்? நிரம்பவும் நன்றாகவிருக்கிறது! (போதல்.)

பொன்னம்பல:—போ, சனீசுவரன் கோவிலுக்கு, மூதேவிமுண்டை! உன்னை எந்த மடையன் கட்டிக் கொள்ளப் போகிறானோ? பிரதாபருத்திரரே! நீர் போய் வாரும். வஸிதேசுவரியிடம் எனக்குள்ள ஆசைக்காகவாவது, ஒரு கெட்டிக்கார உபாத்தியாயரை அழைத்துக்கொண்டு போய் அவள் தகப்பனார்முன்பு விடவேண்டும்.

பிரதாப:—நானும் அப்படியே செய்யப் பார்க்கிறேன். உம்மிடம் ஒரே ஒருவார்த்தை பேசவேண்டியிருக்கிறது; நாம் இருவரும் வஸிதேசுவரியைநேசிப்பதைப்பற்றி இதுவரையில் வாய்ச்சண்டை போட்டுக்கொள்ளவில்லை; என்றாலும் நாமிருவரும் சேர்ந்து ஒரு விஷயத்தை முடிக்கவேண்டும்.

பொன்னம்:—என்ன விஷயம்?

பிரதாப:—ஏன், எங்கேயாவது பார்த்து, அவள் அக்காளுக்கு ஒருவரன் தேடுவதுதான்.

பொன்னம்:—வரனா? நாசமாய்ப்போயிற்று, போம்! அந்தக்கழுதையை யார் கட்டிக்கொள்வானென்கிறீர்? அவள் தகப்பன் மிகுந்த ஆஸ்திக்காரனாகவிருந்தாலுங்கூட, ஸர்வமுட்டாள்கூட அவளைக் கல்யாணம் செய்துகொள்ளமாட்டானே! உமது யோசனை குருட்டு யோசனைதான்.

பிரதாப:—அவள் கடுமையாக வார்த்தை சொல்வதும் நடப்பதும் உமக்கும் எனக்கும் பொறுக்க முடியாதனவாயினும், எல்லா துர்க்குணங்கள் இருந்தாலும், அவைகளைப் பணத்தால் மூடிக்கொடுத்தால் அவளைப் பெற்றுக்கொள்வதற்கு யாரேனும் ஒருவன் சித்தமாக விருப்பான்.

பொன்னம்:—அப்படி எவனாயினும் இருப்பானென்று நான் நினைக்கவில்லை; ஆனால் தினந்தோறும் நாற்சந்தியில் காலைவேளையில் சவுக்கினால் நூறடி அடிப்பதாக விருந்தால் மாத்திரம் நான் அவளுடைய சீதனத்தைப் பெற்றுக்கொள்வேன்.

பிரதாப:—நீ சொல்வது நிஜந்தான்; அழுகிய பூசணிக்காயை யார் விரும்புவார்? இருந்தாலும் அவளை எப்படியாவது ஸரிப்படுத்திவிட்டால்தான் நம்முடைய காரியம் கைகூடும். உமக்கு என்ன தோன்றுகிறது?

பொன்னம்:—ஸரி, பார்ப்போம்; இதுமுதல், அந்தப் பிடாரியைக் கட்டிக்கொள்பவன் யாவன் என்று பார்த்துத்திரிகிறேன்; அப்படியொருவன் அகப்பட்டானானால், அவனுக்கு நூறுபவுன் இனாமாகவும் கொடுப்பேன்; கல்யாணம் பண்ணிக்கொண்டு வீட்டைவிட்டு அழைத்துக்கொண்டுபோய் விடட்டும்.

(பிரதாபருத்திரதேவரும் பொன்னம்பலதேவரும் போதல்.)

சுப்பராயன்:— ஐயா! இப்படி திடீரென்று காதல் உண்டாவது ஸாத்தியமா?

விஜயராக:—இது வரையிலும் ஸாத்தியமில்லையென்றுதான் நினைத்திருந்தேன். ஆனால் இப்போது என் ஸொந்த அநுபவத்தினால் அஃது ஸாத்திய

மென்றுதான் நினைக்கிறேன். இதோ பார், நான் சும்மா பார்த்துக்கொண்டிருக்கையிலேயே என் மனம் மாறிவிட்டது. உயிர்த்துணையாயிருக்கிற உன்னிடம் உண்மையைச்சொன்னாலென்ன? நான் அந்தப்பெண்ணைப் பார்த்ததுமுதல் என் மனநிலை ஒரு வழியாகவில்லை; அவளைப்பெற்றால் தான் உயிர் வாழ்வேன்; இந்த வேளையில் நீதான் மார்க்கந்தேடிக் காப்பாற்றவேண்டும்.

சுப்பரா:— இப்போது, உங்கள் மேல் குறை கூறுவதில் பயனில்லை, உங்களுக்குள்ள காதல் ஆழ்ந்ததாக இருந்தால்மாத்திரம் பின்னால் சுகமுண்டாகும். ஒருவேளை அந்தப்பெண்மணியை நன்றாய்க் கவனித்தீர்களோ இல்லையோ?

விஜயராக:—போடா, போ; அவள் முகத்தில் காணப்படும் சோபையின் அழகைப்போல நான் இதுவரையில் வேறொருவரிடத்தும் கண்டதேயில்லை. அவளைக் காமன் காண்பானாயின் படையிட்டு நடுங்குவான்; ஆடவர்கண்டால் அகறலுமுண்டோ? பேடியரன்றோ பெற்றியினின்றிடில்?

சுப்பரா:—இதைத்தானா தாங்கள் பார்த்தீர்கள்? பக்கத்தில் நின்றுகொண்டிருந்த அவள் அக்காள் கூச்சலிட்டுக் கர்ணகரேமாய்ப் பேசினதைக் கேட்கவில்லையா?

விஜயராக:—இவளும் பேசினதைக் கேட்டேன்; வெகு இன்பமாகவேயிருந்தது. இவளிடம் நான் கண்டவையெல்லாம் மனோரம்யமாகவேயிருந்தன.

சுப்பரா:—ஐயா! கொஞ்சம் விழித்துக்கொண்டு யோசிக்கவேண்டும்; அவளுடைய அக்காள் ஒரு நீலியாகவிருக்கிறாள்; அவளை எங்கேயாவது தொலைத்த பிறகுதான் உமது காதலியின் கல்யாண யோசனை செய்யப்படும். இதற்காகவே, ஆடவர் அணுகாத கன்னியாமடம் போன்றதொரு விடுதியில் உமது காதலியை அவள் தகப்பனார் வைத்திருக்கிறார்.

விஜயராக:—அவர் வெகு பொல்லாதவர்போலும்! ஆனால், அவர் கெட்டிக்காரரான உபாத்தியாயரைக்கொண்டு தம் மகளுக்குப் பாடஞ்சொல்லிக் கொடுக்க வெண்ணுவதாகச் சொன்னதை நீ கவனிக்கவில்லையா?

சுப்பரா:—ஆமாம்; ஆமாம்; காரியம் வெகு எளிதில் கைகூடும் வழியொன்று கண்டுபிடித்துவிட்டேன்.

விஜயரா:—நானும் ஒருவழி யோசித்திருக்கிறேன்.

சுப்பரா:—ஐயா! நம்முடைய யோசனை இரண்டும் ஒரேமாதிரியாகத்தானிருக்கும் என்று தோன்றுகிறது.

விஜயரா:—உன் யோசனையை முதலில் சொல்லு.

சுப்பரா:—தாங்களே உபாத்தியாயராகவிருந்து அப்பெண்ணுக்குப் பாடஞ்சொல்லிக்கொடுக்கலாமென்று நினைக்கிறீர்கள், அதுதானே?

விஜயரா:—அதுதான்: அப்படிச் செய்யலாமா?

சுப்பர:—அது முடியாதென்று தோன்றுகிறது. நல்லநாயக உடையாரின் மகனென்று சொல்லிக்கொண்டு, இங்கு படிப்பதும், நண்பர்களை வரவேற்பதும் செய்வது யாவர்?

விஜயரா:—இதற்கு வழிதெரியாதா? நம்மை இன்னாரென்று அறிந்தவர் இவ்வூரில் ஒருவருமில்லை; முகத்தைக்கண்டு அடையாளந் தெரிந்துகொள்ளக்கூடியவருமிங்கில்லை; நான் எஜமானனென்றும் நீ வேலைக்காரனென்றும் ஒருவருக்கும் தெரியாது; இப்பொழுது செய்யவேண்டியதென்னவெனில்:—நீ எஜமானனாகவிருந்து, எனக்காக எல்லாவேலைகளையும் செய்துகொண்டிரு; நான் வேறு யாதாயினும் ஒரு வேஷம் போட்டுக்கொண்டுவிடுகிறேன்; இந்தா, உடைகளை நீ தரித்துக்கொள், கேசவன் வந்தால் நீதான் எஜமானனென்று எண்ணி நடக்கவேண்டும்; அவன் வாயை மூடிக்கொண்டிருக்கும்வழி நான் செய்துவிடுகிறேன்.

(உடுப்புகளை மாற்றிக்கொள்ளல்.)

சுப்பரா:—ஐயா! எல்லாவிதத்திலும் தங்களுக்குத் துணை செய்யப்பட்டவனாகையால் இவ்விஷயத்திலும் தாங்கள் சொன்னபடியே கேட்கிறேன். நானே விஜயராகவ உடையாராக வேஷம் போட்டுக்கொள்ளுகிறேன்.

விஜயரா:—அப்படியே யிரு; நான் ஒரு வேலைக்காரன் வேஷம்பூண்டு என் மனத்தைக் கலக்கிய கண்மணியை அடையும் வழியைத் தேடுகிறேன்.— காமாட்டிப்பயல் இதோ வருகிறான்.

(நேசவன் வருதல்.)

ஏலே! எங்கடா போயிருந்தாய்?

நேசவன்—நான் எங்கேபோயிருந்தேனு? அது இருக்கட்டும்; நீங்கள் எங்கே யிருக்கிறீர்கள்? சுப்பராயன் எஜமானர் உடையைத்திருடிக்கொண்டானு, அல்லது எஜமானர்தான் சுப்பராயனின் உடையைத் திருடிக்கொண்டவரா, என்பது தெரியவில்லை, என்ன சங்கதி?

விஜயரா:—கழுதைப்பயலே! இப்போது தான் வேடிக்கை பண்ணுகிறதோ? நான் இந்த ஊருக்கு வந்ததும் ஒரு மனிதனைக் கொன்றுவிட்டேன்; அதற்காக என்னை ஊரார் தேடித்திரிகின்றனர்; எனது உயிரைக் காப்பாற்றுவதற்காக சுப்பராயன் எனது உடைகளைத் தரித்துக்கொண்டு என் வேஷம்போட்டுக்கொண்டிருக்கிறுன். நான் ஓடிப் போவதற்காக அவனுடைய வேஷத்தைப் போட்டுக்கொண்டிருக்கிறேன்; என்னைப்போலப் பாவித்து, அவனிடம் அடங்கியிருக்க வேண்டும்; தெரிந்ததா?

நேசவன்:— தெரிந்தது, தெரிந்தது; அணுவளவும் கோணுமல் நடக்கிறேன், சாமி.

விஜயராக:— சுப்பராயன் என்றவார்த்தையே உன் வாயில் வரக்கூடாது; சுப்பராயன் விஜயராகவ உடையாராய் மாறிவிட்டான்.

நேசவன்:— அவனுக்கு நல்லது தான்; எனக்குக் கூட அவ்விதமாக மாற இஷ்டந்தான்.

சுப்பரா:— இன்னொருதடவை ஆகட்டுமே; உடையார் இப்போது ரகுநாததேவரின் இளைய குமாரியை அடையட்டும்:—அடே! நீ மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்; நான் தனியாக விருந்தால் சுப்பராயா என்று கூப்பிடு; கூட யாராவது இருந்தால் நான் உனது எஜமானர் விஜயராகவ உடையார் என்று நினைக்கவேண்டும். இதெல்லாம் எனக்காகச செய்யவேண்டாம், உன் எஜமானருக்காகமாத்திரம் செய்.

விஜயரா:— சுப்பராயா! நாம் போவோம்; இன்னொரு விஷயம்: அந்தப் பெண்மணியைக் காதலித்த இருவரோடு நீயும் சேர்ந்துகொள்ளவேண்டும்; அதற்குத்தகுந்த காரணங்கள் இருக்கின்றன; பிறகு கூறுகிறேன்.

(போதல்)

# சிறுவர்க்கான பக்கங்கள்

# CHILDREN'S PAGES

தீவிரமோக்ஷாபேக்ஷை:---ஒரு சிஷ்யன் ஒரு குருவினிடத்திற்சென்று, 'எனக்கு மேலான நிலையை அடையவேண்டும் என்ற ஆவலிருக்கிறது, ஆகையால் அது லித்திக்கும்படி எனக்கு ஞானோபதேசம் செய்தருளவேண்டும்,' என்று வணங்கிச்சொன்னுன். குரு ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந்துவிட்டார். இச்சிஷ்யனே பிரதிதினமும் வந்து குருவை முன்சொன்னபடி பிரார்த்தித்துக்கொண்டுவந்தான். சிஷ்யனைப்பார்க்கிலும் அக்குரு நன்ருகத்தெரிந்தவராகையால் பின்னும் மௌனமாக இருந்துவிட்டார். இச்சிஷ்யனே பிரதிதினமும் வந்து இவரை மிகுந்த நயத்துடன் வேண்டிக்கொண்டு வந்தான். இப்படி இருக்கையில் மிக உஷ்ணமான ஒருநாள் குரு சிஷ்யனைநோக்கி, 'நதிக்குச்சென்று நீராடி வருவோம் வருகிருயா?' என்றுர். சிஷ்யன் நல்லது என்று குருவின் பின்சென்றுன். இருவரும் ஸ்நானத்திற்காகத் தண்ணீரில் இறங்கினுர்கள். உடனே குரு சிஷ்யனுடைய காலைப்பற்றி நன்ருக இழுத்துக்கொண்டு, அவனைத் தண்ணீரடியிலேயே கொஞ்சநேரம் வைத்திருந்தார். சிஷ்யன் சிறிதுநேரம் கஷ்டப்பட்டபிறகு அவனை வெளியேவிட்டார். இருவரும் கரை ஏறினபின்னர் குரு சிஷ்யனைப்பார்த்து, 'அப்பா! நீ தண்ணீரடியிலிருக்கும்பொழுது உனக்கு எது அவசியமாக வேண்டியிருந்தது?' என்று கேட்க, சிஷ்யன், 'கொஞ்ச வாயுதான் அவசியம்வேண்டி இருந்தது,' என்றுன். உடனே குரு, 'எவ்வளவு ஆவலொடு அப்பொழுது வாயுவை விரும்பினுய் அப்பா! நீ அவ்வளவு ஆவலோடு மேலான நிலையை அடையவிரும்பினுயானுல் உனக்கு அது உடனே லித்திக்கும்,' என்றுர். இதனுல் ஒருவன் மனப்பூர்வமாகப் பாடுபட்டால் அவனுக்குஅஸாத்யமானகாரியம் ஒன்றும் இல்லை என்பதும், உண்மையாகப் பாடுபடுவது இத்தன்மையது என்பதும் தெரிய வருகிறது.

***

பெரியோர் தரிசனவிசேஷம்.—'ஒருகாலத்தில் நாரத முனிவருக்கு, பெரியோர்களது தரிசனத்தால் உண்டாகும் மேன்மையாது?' என்ற சங்கை உண்டாக அதை கிருஷ்ண பரமாத்மாவைக்கண்டு தீர்த்துக் கொள்ளத் துவாரகை வந்து சேர்ந்தார். அப்

பொழுது பகவான் 'ஒரு ராஜக்கிரியினிடஞ்சென்று அந்தக் கேள்வியைக்கேட்டு தெளிவடையும்' என்று கட்டளையிட, நாரதர் அவ்வாறேசெய்தார். அவர் வார்த்தை அந்தக் கிரியின் காதில் விழுந்தவுடன் அது காலை உதைத்துக்கொண்டு இறந்தது. இதைக்கண்டு மிகவும் துக்கித்துப் பகவானிடம்வந்து நாரதர் நடந்தவைகளைச் சொல்ல, அதற்கு அவர், 'ஒரு கிளிப்பிள்ளையிடம் சென்று இக்கேள்வியைக்கேள்' என்று உத்தரவு செய்தார். முன் நடந்தது போல நாரதர் கேள்வியைக்கேட்டதும் கிளிப்பிள்ளை மறுமொழி ஒன்றும் சொல்லாது உடனே உயிர்விட்டது. முன்னினும் அதிக துக்கத்தோடு பகவானிடம் நடந்தவைகளை விண்ணப்பம் செய்ததும், 'அதே கேள்வியை ஒரு மானிடம் சென்று கேள்' என்று அவர் சொன்னார். மானின் கதியும், கிரி கிளி முதலியவைகளது கதிபோலாக, 'பகவானது நோக்கம் எவ்வாறு இருக்குமோ? நாம் துக்கப்பட்டுப் பிரயோஜனம் இல்லை' என்று அறிந்துகொண்டு மறுபடியும் பகவானை அணுகித் தமது கேள்வியைக்கேட்டார். அப்பொழுதும் பகவான் நேரான மறுமொழி கூறாது, அவரை ஒரு கன்றினிடம் போகச்சொல்ல அந்தக்கன்றும் உடனே மாண்டுபோயிற்று. அவர் போகும் இடங்களில் எல்லாம் இவ்வாறு கொடிய மரணம் உண்டாவதைக்கண்டு மனம் பதறி, நாரதர் பகவானே தமக்கு கதி என்று வந்து சரணம் புகுந்தார். உடனே பகவான் புன்நகையுடன், 'ஒரு சக்கிரவர்த்தி அருகாமையில் இருக்கிறான். அவனுக்கு இப்பொழுதுதான் ஒரு குழந்தை பிறந்திருக்கிறது. அதனிடம் இந்தக்கேள்வியைக் கேட்டால் உமக்குத் தகுந்த பதில் கிடைக்கும்' என்று ஏவ, நாரதர் பகவத்வாக்கியத்தில் பூர்ண நம்பிக்கையுடன் மனங்கலங்காது அவ்வாறே செய்தார். அப்பொழுது அந்தக் குழந்தை நாரதரை நோக்கி, 'உத்தமரே! உமக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. ஆயினும் நானும் என்னால் கூடியமட்டும் உமது கேள்விக்கு விடைகொடுக்கிறேன். முன்னர் தாங்கள் முறையே பார்த்த கிரி, கிளி, மான், கன்று முதலியவைகள் யாவும் நானே. ஒவ்வொரு ஜன்மத்திலிருக்கும் பொழுதும் உம்மைப்போன்ற மஹானது தர்சன விசேஷத்தால் எனக்கு அடுத்த மேலான ஜன்மம் கிடைக்க இப்பொழுது மேலான மானிடஜன்மம் கிடைத்திருக்கிறது. இப்பொழுது எனக்கு உமது தர்சனம் கிடைத்துவிட்டது. இனிமேல் எனக்கு மாறாநிலையாகிய மோக்ஷம் கிடைக்கும் என்பதற்கு என்ன ஸந்தேகம்' என்று சொல்ல, நாரதர் மனமகிழ்ந்து நிஸ்ஸந்தேகராக லோகோபகாரத்திற்காக திரிலோக ஸஞ்சாரம் செய்யத்தொடங்கினர். இதனால் பெரியோர்களது தர்சனத்தால் நமக்கு மேன்மை உண்டாகி ஞானவைராக்யாதி நற்குணங்கள் அமைந்து முடிவில் மோக்ஷமே எளிதில் கிடைக்கும் என்பது விளங்கும்.

* * *

ஸ்வதர்ம அனுஷ்டானத்தின் சிறப்பு:—ஒருகாட்டில் ஓர் மரத்தடியில் ஹடயோகாதி அப்பியாசங்களை கௌசிகன் என்ற பிரம்மசாரி செய்துகொண்டு வந்தான். இவ்வாறு இருக்கையில் ஒருநாள் காலையில் அம்மரத்தின்மேலிருந்த ஒரு கொக்கு கௌசிகன் தலையில் எச்சமிட்டது. இதனால் அவனுக்கு அடங்காக்கோபம் உண்டாக அந்தக் கொக்கைக் கண்விழித்து அண்ணாந்து பார்த்தான். உடனே அது சாம்பலாய் விழுந்தது. இதைக் கண்டதும் கௌசிகப் பிரம்மசாரிக்கு முதலில் ஒரு உயிர்ப்பிராணியை அநியாயமாகக்கொன்றுவிட்டோமே என்ற துக்கம் வந்தபோதிலும், முடிவில் தனது தபஸ் இவ்வளவாவது பலித்ததே என்ற கர்வமே மேலிட்டது. மத்தியான்ன ஸமயம் வந்ததும் கௌசிகன் அடுத்த கிராமம் சென்று ஓர் வீட்டுவாசலில் 'பவதி பிக்ஷாம் தேஹி' (தாயே பிக்ஷையை யாசிக்கிறேன்) என்று சொல்லிக்கொண்டு நின்றான். அங்கு வெகு நாழிகை அவன் காத்திருக்கவேண்டிவந்தது. அதன் பின்பு அந்தவீட்டு எஜமானி அவனுக்கு பிக்ஷை கொண்டுவந்துபோட்டாள். அவளை இவன் வெகுகோபமாய்க் கண் விழித்துப்பார்த்தான். அதற்கு அவள் 'என் கணவனே எனக்குச்சிறந்த தெய்வம். அவர் பசியோடிருப்பதைக்கண்டு அவருக்கு வேண்டிய உபசாரங்களை செய்துவிட்டபின்பு 'உமக்கு பிக்ஷை கொண்டுவந்தேன். பிராம்மணர்களை நான் அவமதிப்பவள் அல்ல. என்னை மன்னிக்கவேண்டும்.' என்று எவ்வளவு சொல்லியும் பிரம்மசாரியின் கோபம் அடங்காதது கண்டு 'நான் கொக்கல்ல. என்னை இப்படி எரிப்பவர் போல் என் நோக்குகிறீர்' என்று பரிஹாஸம் செய்தாள். அதன் பின்புதான் தனது தர்மமாகிய கணவன் சிசுருஷையைத் தவறாது செய்ததால் தனக்கு கௌசிகன் காட்டில் செய்தது தெரிந்தது என்றும், கோபம் சண்டாளம் அதை ஸமயத்தில் அடக்காது விட்டுவிட்டால் அது கேடுவிளைக்கும் என்றும் இதைவிட மேலான விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமாகில் மிதிலாநகரத்திற்கு போய் அங்கு உள்ள கசாப்புக்காரனிடம்இருந்துதெரிந்துகொள்ள

லாம் என்றும் சொல்லி அந்த பதிவிருதை தனது வீட்டிற்குள் போய்விட்டாள். கௌசிகன் கர்வம் கொஞ்சம் அடங்கவும் கசாப்புக்காரனிடமிருந்தும் நாம் சிறந்ததைக் கிரஹிக்கலாம் என்று அவனுக்குத் தோன்ற, அவன் மிதிலாநகரம் சென்று தர்மவியாதன் என்ற கசாப்புக்காரன் கடையருகில் போய் நின்றான். உடனே அவன் இவனை உட்காரும்படி சொல்லி, 'நீர் ஒரு பதிவிருதா ஸ்திரீயினிடமிருந்து வருகிறீர். உமது எண்ணமும் எனக்குத் தெரியும். சற்றுப் பொறும், என்று சொல்லி தன் வேலையை முடித்துக்கொண்டு அவனைத் தனது வீட்டிற்கு அழைத்து சென்றான். அங்கு அநேக அரிய விஷயங்களை கௌசிகனுக்கு தர்மவியாதன் உபதேசித்தான். இந்த உபதேசத்திற்கு வியாதகீதை என்று பெயர். இதன் பின்பு கிழவராகிய தனது தாய் தந்தையரை கௌசிகனுக்குக்காட்டி அவர்களுக்குத் தவராத தொண்டு செய்வதாலும், தனது வேடத் தொழிலை நன்றாய்ப்பார்த்தலாலும் தனக்கு ஞான திருஷ்டி முதலிய அரியகுணங்கள் உண்டாயின என்று சொல்லிமுடித்தான். கௌசிகன் கர்வம் முழுவதும் அடங்கத் தபஸுக்குச்சென்றான். இதனால் ஒருவன் தர்மம் தாழ்ந்ததாயிருந்தாலும் அதனால் அவனுக்குத்தாழ்வு இல்லை. அதை அவன் விடாது அனுஷ்டிக்கவேண்டும். எந்த தர்மத்தையாகிலும் நன்றாய் நடத்தாமல் விட்டால்தான் தாழ்வு. ஸ்வதர்மத்தை செய்வதால்சிறந்த குணங்கள் எவனுக்கும் உண்டாகாமல் போகாது என்பது விளங்கும்.

* * *

மானஸபூஜையின் சிறப்பு:—ஓர் அரசன் ஒரு அழகியதும் சிறந்ததுமான ஒரு கோயிலைக்கட்டி அதை விஷ்ணுவிற்கு அற்பிதம்செய்து பகவான் விக்கிரஹத்தை அங்கு பிரதிஷ்டைசெய்ய நாளும் ஏற்படுத்திவிட்டான். கும்பாபிஷேகத்திற்காக அளவிடமுடியாத பணத்தைச் செலவிடுவதாக எண்ணி அவன் ஏற்பாடு முதலியவைகளையும் செய்து தன் ஸ்நேகிதரான அடுத்த ஊர் அரசர் முதலியோருக்கு இந்த ஸங்கதியைத் தெரிவித்து அவர்களையும் கும்பாபிஷேகத்திற்கு அழைப்பதற்கு வேண்டிய முயற்சிகளையும் செய்துகொண்டிருந்தான். அப்பொழுது இரவில் பகவான் அரசன் கனவில் தோன்றி, 'ஓர் ஏழைக்குயவன் தன் மனதில் எனக்காக ஓர் கோயில் தயார்செய்திருக்கிறான். அவனும் எனக்கு அதை அற்பிதம் செய்ய நீ பார்த்திருக்கும் வேளையையே பார்த்திருக்கிறான். நான் அவனிடம் அன்று இருக்கவேண்டும். ஆகையால் நீ வேறுநாள் பார்த்துக்கொள்' என்று சொல்லிமறைந்தார். மறுநாள் எழுந்ததும் அரசன் 'ஆ! என் கோயிலைவிட பகவானுக்குக் குயவன்கோயில் எவ்வளவு பெரிதாகப் போய்விட்டது. நான் என்னமோ அபிப்பிராயமாக கர்வப்பட்டு சீர் அழிந்தேனே! பணம் முதலியவைகளைவிட நிஜபக்தி எவ்வளவு சிறந்தது!' என்று எண்ணமிட்டுக்கொண்டு அந்த குயவசிரேஷ்டனைத் தேடிப்பிடித்து அவனுக்கு சிஷ்யனானான்.

## ஸ்திரீகளுக்கான பக்கங்கள்
## LADIES' PAGES



ஸாவித்ரி ஸத்தியவான்

"அவனன்றி ஓர் அணுவும் அசையாது. என் கணவன் அருளன்றி என்னால் எதுவும் செய்யமுடியாது. அவன் ஆட்டிவைப்பதுபோல் நானாடுகிறேன். என் கணவனே எனக்கு சரணாகதி. ஆபத்துக்காலங்களில் எனக்கு ஆனந்தமுண்டாக்குகிறவன் அவனே. அவனுக்கு யான் வணங்குகின்றேன்"—இதுதான் பத்தினிப்பெண்ணின் நித்திய ஸ்தோத்திரம்.

* * *

அன்பு அன்பு என்று எல்லோரும் அலக்ஷியமாய்ப் பேசிவிடுகிறார்கள். அன்பென்பது வீண்பேச்சா? யார்மேல் அன்பு செலுத்தப்படுகிறதோ அவர் பொருட்டு உன் ஹ்ருதயத்தில் கவலை உண்டாகிறதா? அவருக்காக உன் லாபத்தைவிட்டுவிட்டு உழைக்கவேண்டுமென்று தெரிகிறதா? அவர்க்காக உன் உயிரையுமளிக்க சித்தமாயிருக்கிறாயா? அது நிச்சயமானால் தான் அவர்மேல் உனக்கு அன்பு இருக்கிறதென்று நிச்சயம். மனைவியும் தன் கணவன்மேல் அன்புடையவள் ஆகையால் அவனுக்காக தன்னுயிரையுங் கொடுக்க சித்தமாயிருந்தால் தான் பதிவிரதை ஆகிறாள்.

* * *

அசுவபதி என்றொரு அரசன் இருந்தான். அவன் அநேகநாள் தவஞ்செய்து ஓர் பெண்குழந்தையைப் பெற்றான். அவள்தான் ஸாவித்ரி. அவ

ளுக்கு பதினாறுவயதும் கடந்தது. அரசர்கள் எத்தனையோ பேர்களை மணக்கமாட்டேன் என்று விட்டாள். கடைசியாக தெருவில் போய்க்கொண்டிருந்த யௌவன புருஷனொருவனை மணக்க மனங்கொண்டாள்; அவன்தான் ஸத்தியவான்.

* * *

அசுவபதிக்கு மனக்கவலை உண்டாய்விட்டது. நாரதர், ஸாவித்ரி பிறந்த காலத்து, சொல்லிய மொழிகள் அவன் மனதைப் புண்படுத்தின "குழந்தாய்! ஸத்தியவானுக்காயுள் இருபது வருஷந்தான். இனி அவனுக்கிருக்கும் நாளோ பன்னிரண்டு மாதங்கள்தான். அவனைவிட்டு வேறு யாரையாவது மணந்தால் எனக்கு சம்மதம்" என்றான். உடனே ஸாவித்ரி "என் மனம் எப்பொழுதவர்மேல் சென்றதோ அப்பொழுதே யான் மணந்துவிட்டேன். இனி மற்றொருவரை மணப்பது பாதிவிரத்யமாகாது. ஆகையினால் இப்பொழுதே அவர் இறக்க நேரிட்டாலுங்கூட நான் அவரையே மணப்பேன்" என்று மறுத்துவிட்டாள். அரசனுக்கு மனக்கவலையினால் என்ன பிரயோசனம்?

* * *

அரசன் மகளாய்த்தான் இருந்தாலென்ன? அன்றி, ஏழைப்பெண்ணாகப் பிறந்தால்தான் என்ன? அவ்வவர்களுக்கு அவர்கள் நாயகன் வீடுதானே சொந்தமாகிறது. பிறந்தவீடு ஸ்திரமாகுமா? தாய் வீட்டாசையை ஒழித்தவள்தான் பெண். அவ்வாசை இருந்தால் தன் கணவன் வீட்டிலிருப்பதற்கு கொஞ்சம் அருவருப்பு உண்டானாலும் உண்டாகலாம். ஆனதினால் அதை விட்டுவிடுவதே பெண்களுக்கு முதல் வேலை.

* * *

காட்டில் ஸாவித்ரி ஆச்ரமத்தில் வசித்துக்கொண்டிருக்கிறாள். மாமி மாமன்மார்களுக்கு நித்யம் செய்ய வேண்டியவைகளை செய்துவிட்டு, தனது நாயகனுக்குத் தக்கமாதிரி நடந்துகொண்டுவருகிறாள். கலியாணமாய் பன்னிரண்டுமாதம் ஆய்விட்டது. ஸத்தியவானுக்கு ஆயுள்காலம் முடிவடைய இன்னம் ஒருநாள்தான் இருக்கிறது. மஹா கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறாள். சூரியனும் உதயமாய்விட்டது. மனம் துடிக்கிறாள். முகம் கழுவிக்கொண்டு மாமி மாமன்மார்களுக்கு நமஸ்கரித்தாள். தீர்க்கஸுமங்கலீ பவ என்றார்கள். அவளுக்குள்ளம் சற்றுகுளிர்ந்தது.

* * *

பெண் தனது கணவன் சொல்லியப் பிரகாரம் நடக்கவேண்டியது மூல தர்மமாகும். கணவனுக்கு தன் தாய் தந்தை குரு இவர்கள் கூறியவண்ணம் நடக்கவேண்டியது அத்யாவச்யகம். ஆனதினால் பெண் எதையேனு விரும்பிடில், கணவன் தன் மேலோர் அநுக்ரஹமின்றி செய்யக்கூடாது. இது தான் நமது தர்மம்.

"ஆர்ய! நான் இதுவரைக்கும் உம்மை ஒன்றும் கேட்டதில்லை. இன்று எனக்கொரு அபீஷ்டமிருக்கின்றது. அது ஸித்திக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றாள் சாவித்ரி. "அது என்ன?" என்றான் சத்தியவான். "நான் தங்களோடு நீங்கள் ஸமித்து முதலானவைகளைக் கொண்டுவரப்போகும் பொழுது, கூடவர எனக்காசையாய் இருக்கிறது. இவ்விடம் வந்து பன்னிரண்டுமாத காலமாய் வாசற்படி கடவாமலிருக்கிறேன். எனக்கு காடு முதலிய இடங்களைப் பார்க்க ஆவலாய் இருக்கிறது: தடை செய்யாமல் ஆகட்டும் என்று சொல்லவேண்டு" மென்று கெஞ்சினாள். "ஆஹா! அதற்கென்ன, என் தாய் தகப்பன்மார் உத்தரவு பெற்றுக்கொள்; உன்னை அழைத்துக்கொண்டுபோகிறேன்" என்றான்.

* * *

மனைவிக்கு ஸஹதர்மணி என்று பெயர். அதாவது அவள் தன் நாயகன்செய்யும் தர்மத்தையே தானும் நடத்தல். இதைச் செய்வதில் அவள் தன் மாமி மாமன் முதலியோருக்கு கோபம் வாராமலிருக்கும்படி செய்வதுதான் அவள் நடத்தைக் கழகு.

* * *

சாவித்ரி, மாமி மாமன்களுக்கு நமஸ்கரித்தாள். அவர் "தீர்க்க ஸுமங்கலீ பவ" என்றார். "அம்மா! இதுவரைக்கும் என் கணவன் காட்டிற்குப்போய் மிக கஷ்டப்பட்டு விறகுமுதலியவை கொண்டுவந்தார். புத்திதெரியாமல் சும்மா இருந்துவிட்டேன். என் கடமையை மறந்துவிட்டேன். இன்று முதல் நான் என் கணவனுடன் சென்று அவர்க்கு வேண்டியதைச் செய்ய ஆவல்கொண்டேன். என்னைத் தடுக்காமல், போய்வாவென்று ஆசீர்வதியுங்கள், அம்மா!" என்றாள், நமஸ்கரித்தாள். "குழந்தாய்! நீயோ சிறியவள். உன்னால் அங்குபோக முடியாது, வேண்டாமம்மா" என்றாள் மாமி. "அம்மா, அப்படி சொல்லாதேயுங்கள், உமக்குத் தெரியாத தொன்றுமில்லை, நான் ஸகதர்மணி, என் கணவன் செய்வதை நானும் செய்யவேண்டும். தயவுசெய்து என் தருமத்தினின்று என்னைத் தடுக்காதேயுங்கள்" என்று வேண்டிக்கொண்டாள். "ஆனால் ஸரி ஜாக்ரதை: சத்தியவானுடனே செல். வேறெங்கும் போகாதே" என்றாள் மாமி. "மாமி, என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள்" என்று நமஸ்கரித்தாள். "தீர்க்க ஸுமங்கலீ பவ."

* * *

"பரமாத்மா! உன்மேல் எனக்கேனிவ்வளவு ஆசை. நீர் ஜகன்மோஹனராய் இருக்கிறீர். என் ஹ்ருதயகமலத்தில் நாட்டியஞ் செய்துகொண்டிருகிறீர். உம்மைப்புகழ்ந்து பாடுவதென்றால் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது. உமக்காக சிரமம் கொள்வதுகூட ஆனந்தமாகவே இருக்கிறது. நீர் இருக்க எனக்குக் கஷ்டம் ஏது? கஷ்டமென்பது எனக்கு இன்னதென்று தெரியவில்லை. எல்லாரும் கஷ்டம் கஷ்டம் என்கிறார்கள். கஷ்டம் என்று

அவர் சொல்வதெல்லாம் எனக் கானந்தமாகத்தான் இருக்கிறது" என்று நினைந்து நினைந்து தன் கணவனுக்காக தன்னுயிரையும் தியாகஞ் செய்ய ஸர்வ வித்தமாயிருப்பவளே பெண்களில் பெரியபெண். அவளுக் கென்றும் புகழே கவச மாய்விடுகிறது.

***

அவனிடம் மயங்கிய ஆத்மா அவனேயன்றி வேறாகுமா? அவனெங்கெங் கிருக்கின்றனோ அங்கங் கேயிருக்கும். அவன் சுஷுப்தியிலிருந்தால் அதுவும் சுஷுப்தியிலிருக்கும். அவன் யோகத்திலிருந்தால் அதுவும் யோகத்திலிருக்கும். அவன் ஜாக்ரதையிலிருந்தால் அதுவும் ஜாக்ரதையிலேயேஇருக்கும். இது வேதாந்தமதம் என்றும் பொய்யாப் பெரும்பொருள். மனைவியும் தன் கணவன் இடத்தில் ஐக்கியம் ஆய்விட்டால் அவன் எங்கோ அவளும் அங்கே. அவன் இங்கிருந்தால் இங்கிருப்பாள். அங்கிருந்தாலங்கிருப்பாள். இது அவன் ஒற்றுமை ஆகும். இது அவள் லக்ஷணத்தின் லக்ஷியமாகும்.

***

காட்டில் களைத்து அயர்ந்து ஸாவித்ரி மடியில் ஸத்தியவான் தூங்குகிறான். விறகுமூட்டை எல்லாம் கட்டி ஆய்விட்டது. சமித்துந் தர்ப்பமும் எடுத்தாய்விட்டது."ஆ! அதென்ன கருமேகம்போல் வருகிறதே" என்றலறினள் ஸாவித்ரி. "அம்மா நான்தான் காலபுருஷன். என்னை இவ்வுலகத்தில் யமன் என்று சொல்வார்கள். தங்கள் கணவர்க்குக் காலம் ஆய்விட்டது. இனி நீங்கள் அவரை என்னிடம் ஒப்புவித்துவிட்டு உங்கள் வீட்டுக்குப்போங்கள். அவரவர்களுடைய செயல்களுக்குத் தகுந்தமாதிரி அவரவர்கள் அனுபவிக்கவேண்டும். நீங்கள் மயங்குவதில் பிரயோஜனமில்லை" என்று வணக்கமாக காலநேமி சொன்னான். "உன்னிடம் என் தலைவனை ஒப்பிவிக்கவாவேண்டும்! உனக்கும் அவர்க்கும் அவ்வளவு பாத்யதை?" என்று சீறினள் ஸாவித்ரி. "தாங்கள் கோபிப்பதில் என்னபிரயோஜனம்? அவரவர் வந்தவழியைத் தேடவேண்டியது தான். இவ்வளவுதான் உமக்குமவர்க்கு மிசைந்தபொருத்தம். தாங்கள் பதிவிரதை ஆனதினால் உம்மிடத்தி லிவ்வளவு வணக்கமாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். தடங்கல் செய்யாதேயுங்கள். பின்பு நான் வேறு விதம் ஸத்தியவானைக் கொண்டு செல்லப் பிரயத்தினப்படுவே" னென்றான் யமன். பதில் ஒன்றுமில்லை.

***

யமன் சொல்லியதொன்றும் ஸாவித்ரி காதில் விழவில்லை. அவள்மனம் அங்கு இல்லை. கணவனிடம் மயங்கிவிட்டது. கணவனே தானாய்க் கலந்துவிட்டது. யமன் பார்த்தான். காத்திருந்தான் சற்றுநேரம். கோபமதிகரித்தது. பாசத்தை வீசினான். ஸத்தியவான் உயிரைக் கவர்ந்தான். கடந்துபோனான். ஸாவித்ரியும் பின்னே சென்றாள். அவன் எந்தரூபம் எடுத்தாலும் ஞானேந்திரியத்தால் ஸாவித்ரி அறிந்துவிடுகிறாள். பின்பிதைப் பார்த்து "ஸாவித்ரி என் வீணாக அலைச்சல்படுகிறாய். பிரயோஜனமில்லாமல் ஏன் கஷ்டப்படுகிறாய். வீட்டிற்குத் திரும்பிப்போ" என்றான் யமன். "எனக்கு வீடு நாடு ஒன்றுமங்கிடையாது. என்கணவனே எனக்கு ஊரும் நாடும் உத்தமதெய்வமும்; அவரெங்கிருக்கிறாரோ அங்கிருத்தலே எனக்கு தர்மமும். நான் ஸக தர்மணி, என்கணவன் தொழிலே எனது தொழில்; அவர் போகுமிடத்துக்கு நானும் வருவேன்" என்றாள் ஸாவித்ரி.

***

"காரணமில்லாமல் காரியமிராது. வாசனையில்லாமல் மலருமிராது. காற்றிலாமல் உயுருமிராது. பக்தி இன்றி பூஜையுமிராது. அன்பிலாமலானந்தமிராது. நாயகன் இன்றி நாயகியுமிருக்கமுடியாது" இதுவே ஸாவித்ரியின் கொள்கை.

***

யமன் என்ன செய்வான்? விழிக்கிறான்; என்ன செய்தாலும் ஸாவித்ரி விடுபவளாகக் காணவில்லை. மாயமாய் போகலாமென்றாலும் முடியவில்லை. அவளிடத்து மாயம் பலிக்குமா? ஞானம்வந்தால் பின் மாயையும் நிற்குமா? கடைசியாக "ஸாவித்ரி உனக்காக நான் மெச்சினேன். ஆனாலும் உன்கணவனை உனக்குக் கொடுக்கமுடியாது. வேறு ஏதேனும் வரன் கேள் கொடுப்பேன்" என்றான். "ஆனால் சரி என்மாமனர் சந்தோஷமாக தன் பேரனைப்பார்த்துக் களிப்பாக விளையாடி முத்தமிடும்படியாக ஈதோர் வரம் தா" என்றாள் ஸாவித்ரி. "கொடுத்தேன்" என்றான் யமனும். "இனியாவது என் கணவனைத்தராமல் தடுக்கமுடியாது. வீண்கஷ்டம் உண்டாக்குவதில் பிரயோஜனமில்லை. உம்முடைய வாக்கைக் காப்பாற்றும்" என்றாள் ஸாவித்ரி.

***

"நீயே பதிவிரதை, நீயே பெண்ணுள் பெரியவள் உன்னைக்கண்டு மெச்சினேன். உன் நாயகனை எடுத்துப்போ" என்று மாயமானான் யமன். ஸத்தியவான் தூங்கி எழுந்தவன்போல் எழுந்தான். இருவரும் ஆச்ரமம் சென்றார். சுகமே வாழ்ந்தனர் :—என்பது நமது புராணகதை.

***

"ஸாவித்ரீ! உன்னாலல்லவோ உலகம் பெருமை அடைகிறது. உன்னாலல்லவோ எமனும் வெல்லப்பட்டான். உன்னாலல்லாவா விதியும் அன்பினால் ஜயிக்கப்பட்டது. உன்னைப்போல் நடப்பதல்லவா பெண்களுக்குப் பெருமை. உன்னை ஸ்துதிக்கிறோம். நீ யமனை ஜயித்ததை வருஷந்தோறும் * கொண்டாடுவோம். 'அதற்கே காரடையான் நோம்பு என்று பெரியோர் பெயர்வைத்தார்கள். உன்போல் நடந்து, உன்னைப்போற்றி' எம் கணவருக் கிணங்க உருதியாய் நடப்போம். இதோ ஸத்தியஞ் செய்கிறோம்" என்று சொல்பவர்தான் பதிவிரதைகள்.

* இதற்கு பொருள் யமன் (கணவன்) கிட்ட வராத விரதம். இதைஜனங்கள் காரடியா நோம் பென்று வழங்குகிறார்கள்.

வா. சேஷகிரி சாஸ்திரி.

# விசேஷவர்த்தமானங்கள்

## GENERAL NEWS

சமாசார பத்திரிகை:—பிரான்சு தேசத்திலுள்ள கணக்காளி ஒருவர் உலகத்தில் 82,000 சனங்களுக் கொரு சமாசாரபத்திரிகை உளதாகக் கணக் கிட்டிருக்கிறார். ஐரோப்பாக் கண்டத்தில் ஜர்மனி தேசம் இவ்விஷயத்தில் முதலா யிருக்கின்றது. அங்கே 5500 பத்திரிகைகள் உள்ளன; அவற்றில் 800 தின பத்திரிகைகள். அடுத்து நிற்பது ஆங்கில தேசம் அங்கு 3000 பத்திரிகைகளுள்ளன; அவற்றுள் 809 தினந்தோறும் பிரசரமாவன. மூன்றாவதாயுள்ளது பிரான்சு தேசம். அங்கு 2819 பத்திரிகைகளுள்ளன. அவற்றுள் நாலிலொரு பங்குதான் தினமும், அல்லது வாரத்துக்கு மும்முறை, அல்லது இரு முறை பிரசரிக்கப்படுவன. ஐரோப்பாக்கண்டத்தில் எல்லாமாக 20,000 பத்திரிகைகள் உள்ளன. அமெரிக்காக் கண்டத்திலுள்ள ஐக்கிய மாகாணங்களில் 12,300 பத்திரிகைகள் உள்ளன; அவற்றுள் 1000 தின பத்திரிகைகள்; 120 கரிய நீகிரோச் சாதியாரால் பிரசரம் செய்யப் படுவன. ஆசியாக் கண்டத்தில் 3000 பத்திரிகைகள் உள்ளன. அவற்றுள் பெரும்பாலன இந்தியாவிலும் ஜப்பான் தேசத்திலும் பிரசரமாவன. ஜப்பான் தேசத்திலுள்ள பத்திரிகைகளின் தொகை மாத்திரம் 1500. ஆபிரிக்காக் கண்டத்தில் ஆக 200 பத்திரிகைகளே உள்ளன. அவற்றுள் முப்பது எகிப்து தேசத்திலும் மற்றையவை நேட்டால், கேப் கலனி முதலிய ஐரோப்பியர் வாழுநாடுகளிலுந் தோன்றுவன.

**

மோட்டார் வண்டியும் தேக ஸௌக்கியமும்:— மோட்டார் வண்டியில் போவதால் நமது தோலுக்கு ஒரு தளதளப்பும், ரக்தபுஷ்டியும், மூச்சுவிடும் சக்தியும், நரம்புகளின் நல்ல நிலையும் உண்டாகின்றனவாம். ஆகையால் ரக்தசோஷம், தூக்கம் இன்மை, பசி மந்தித்துப்போதல் முதலிய ஸாதாரணவியாதிகளுக்கு மோட்டார் வண்டியில் தக்கவேகமாகப்போய் வருதல் அவசியம் என்று ஒருவைத்தியர் அபிப்பிராயப்படுகிறார். இதையும் அவரே பரீக்ஷித்துப்பார்த்திருக்கிறாராம். ஒருவருஷத்தில் அநேக ருதுக்களில் மோட்டார் வண்டியில் ஏறிச்சென்று முடிவில் தன்தேகத்தில் ரக்தபுஷ்டி உண்டானதை அவரே கண்டறிந்திருக்கிறாராம். சுமார் 4,000 அல்லது 5,000 அடி உயரத்தில் மலைப்பிரதேசங்களிலிருந்தால் நமக்கு எவ்வளவு தேகஸௌக்கியம் உண்டாகுமோ அவ்வளவு ஸௌக்கியம் மோட்டார் வண்டி ஸவாரியால் உண்டாகின்றதாம்.

க்ஷயரோகம் பரவும் விதம்:—இதுவரையில் எல்லோரும் ஒருக்ஷயரோகி உமிழும் எச்சிலிலிருந்து வரும் நீராவியையாவது அல்லது அவன் இருமுங்கால் உண்டாகும் எச்சில்திவலைகளையாவது மற்றையவர் தாம் இழுக்கும் மூச்சோடுசேர்த்து சுவாஸம் இழுப்பதால் க்ஷயம் விருத்தியாகிப் பரவுகின்றது என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள். ஆனால் இக்காலத்திய சில வைத்யர்கள் சுவாஸயந்திரத்தின் மூலமாக இந்த வியாதி பரவுவதில்லை என்றும், இவ்வியாதிக்குறிய புழுக்கள் நமது குடலுக்குள் பிரவேசித்து அதன் மூலமாக சுவாஸ யந்திரத் தருகில் போனால் மாத்திரந்தான் இவ்வியாதி உண்டாகும் என்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். க்ஷயரோகமுள்ள பசுவின்பாலைக் குடித்தால் அநேகம் குழந்தைகளுக்குக் குடல் மூலமாக இவ்வியாதி உண்டாயிருப்பதே இதற்குப்போதுமான ஸாக்ஷியாகும். இனிச்செய்யப்படும் பரிசோதனைகளால் முடிவில் க்ஷயரோகம் சுவாஸமூலமாக உண்டாவதல்ல என்று ஸ்தாபிக்க இடமுண்டாகலாம். இதோடு க்ஷயரோகமுடைய பசுக்களே இல்லாத சீனதேசத்திலே இவ்வியாதி விருத்தியாகிப் பரவக்காரணம் இன்னது என்பதும் வெளிவரலாம்.

**

வலக்கையின் உபயோகம் புத்திந்தெளிவைக் குறிக்கும்:— இடக்கையைப்போல வலக்கையையும் உபயோகிக்கப் பழகவேண்டும் என்ற விஷயத்தை அனேகர் அங்கீகரிக்கின்றார்கள். ஆனால் ஒரு பெரியவர் அவ்வாறு செய்வது அஸாத்தியம் என்றும், நல்லதல்ல என்றும் ஆக்ஷேபிக்கிறார். நமது வலது கை மிகுந்த உபயோகமாக இருப்பது நமது ஸொந்த முயற்சியால் அல்ல, மனுஷ்ய தேகக்கட்டின் ஸ்வபாவத்தைப் பொருத்தது. முன்புறத்திலிருக்கும் மூன்றாவது மூளை மடிப்பைப்பற்றிச் செய்த ஆராய்ச்சியில் அதன் இடது பக்கத்திற்கு ஏதாவது கெடுதி வந்தால் வலக்கையை அதிகமாக உபயோகிக்கும் ஒருவனுக்கு பேசும் சக்திபோய்விடும் என்றும் இடதுகையையே அதிகமாக உபயோகிக்கும் ஒருவனுக்கு அவ்வாறாகாது என்றும் தெரியவருகிறது. ஆகையால் வலது கையையே அதிகமாக உபயோகிக்கும் ஒருவனுக்கு மூளையின் இடது பாகத்தில் பேசும் சக்தியும் மற்றைய ஒழுங்கும் அதிகமாக இருத்தல் வேண்டுமென்பது விளங்கும். வலதுகையை எல்லோரும் வெகுகாலமாக உபயோகித்து வருகிறார்கள். சிற்சில வேலைகளில் இருகைகளையும் ஒரே சக்தியுடன் உபயோகிக்கும் சக்தி அவசியமாக இருக்கலாம். ஆனால் எல்லோரும் அந்த சக்தியை உடைத்தாய் இருக்கவேண்டும் என்று வற்புறுத்துவது அனர்த்தமாகமுடியும். மூளையின்பாகங்களுக்கு அனாவசியமாக அதிக வேலை உண்டாக அவை தளர்ச்சி அடையும். இது பைத்தியம் உண்டாவதற்குத் தக்க லக்ஷணம் என்பதை யாவரும் அறிந்த விஷயமே.

# இந்துலேகை

(ஒரு மலையாள நாவல்)

## இரண்டாவது அத்தியாயம்

(96 - வது பக்கத்தின் தொடர்ச்சி.)

இந்துலேகை அணியும் ஆபரணங்கள் சாதாரணமாய் வெகு சொற்பமாகவே யிருக்கும். அவளுடைய அம்மான் கொச்சு கிருஷ்ணமேனவனும் பாட்டனாரும் கணக்கு வழக்கில்லாமல் அவளுக்குப் பண்ணிப்போட்ட நகைகளும், அவளுடைய தாயாருக்கு அவளுடைய பிதா பண்ணிப்போட்டவைகளில் அவளுடைய பாகத்துக்கு வந்த நகைகளும் சேர்ந்து அவளிடத்தில் திரண்டிருந்த ஆபரணங்களின் சேகரம் அளவற்றதா யிருந்தாலும், இந்துலேகையானவள் அவ்வாபரணங்களில் அதிக பிரியம் வைக்கவில்லை. ஆகவே பண்டிகை நாட்களிலும் உற்சவகாலத்திலும் விசேஷவிதியாய் ஸர்வாபரணங்களையும் அணியவேண்டிய ஆவசியகம் ஏற்படும்போது, தன் தாயாராவது பாட்டனாராவது நிர்ப்பந்தமாய்க் கட்டாயப்படுத்தினாலொழிய அவள் அவ்வாபரணங்களை யணியமாட்டாள். காதில் தோடும், கழுத்தினடுவில் தொங்கிக்கொண்டிருக்கும் ஒரு தங்க சரட்டின்மேல் ஒரு சிறிய பதக்கமும் அதன்கீழே ஒரு அகன்ற பொன்சரட்டின் மேல் நல்ல விலையுள்ள வைரமும் பச்சையும் கெம்பும் பதித்த பதக்கமும், கைகளில் தஞ்சாவூரில் கிழக்குதேச வழக்கப்படி செய்யப்பட்ட காப்பும், கைவிரல்களில் சில மோதிரங்களும் ஆகிய இவைகளே அவள் சாதாரணமாய் அணியும் ஆபரணங்கள். ஆனால் ஆபரணங்களில் அவளுக்கு அவ்வளவு அதிகமாய்ப் பிரீதி இல்லாமற்போனாலும், வஸ்திராலங்கார விஷயத்தில் அவள் அதிக அக்கரையாயிருந்தாள். மிகவும் மெல்லிய இழையுள்ளவையாய்த் தங்கசரிகைக் கறைபோட்ட வஸ்திரங்களை தினந்தோறும் வெளுக்கப்பட்டுத் தான் காலை மாலைகளில் ஸ்நானஞ் செய்தவுடன் உடுத்திக்கொள்வதற்குத் தயாராயிருக்க வேண்டுமென்று திட்டஞ்செய்வாள். அவள் மார்பிலும் தோளிலும் பொன் பூபோட்ட துப்பட்டாவை எப்போதும் தரித்திருப்பாள். இவ்வளவுதான் அவளுக்கு வழக்கமாயுள்ள உடுப்பு.

இந்துலேகை என்னும் பெயரானது, இந்தக் கதையில்வரும் இதர ஸ்திரீகளின் பெயர்களை நோக்கும்போது, சிறிது பொருத்தமற்றதாகத் தோற்றுகிறதென்றும் இப்படிப்பட்ட பெயரை நாயர் குடும்பத்து ஸ்திரீகளுக்கு ஒருபோதும் வைப்பதில்லையென்றும் அப்படி ஒருவேளை வைத்தாலும் அது வெகு அபூர்வமென்றும் இக்கதையை வாசிக்கும் நண்பர்கள் எண்ணி ஆச்சரியப்படக் கூடும். ஆனால் இப்பெயரிட்டழைத்ததற்கு வாஸ்தவத்தில் காரணபூதமானவர் கொச்சு கிருஷ்ணமேனவனே. என் கதாநாயகிக்கு நாமகரணஞ் செய்யும்போது வைத்த பெயர் மாதவி என்பது. ஆனால் அவள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் அழகில் வளர்ந்துவருவதைக் கண்டு கிருஷ்ணமேனவன் அவளுக்கு சந்திரரேகையென்று அர்த்தமுள்ள 'இந்துலேகா' என்று பெயரிட்டான். அதுமுதல் அப்பெயரே வழங்கத்தொடங்கியது. ஆனால் அவளை இந்தக் கதை தொடங்குங் காலத்தில் மாதவியென்று ஒருவன் மாத்திரமே அழைத்துவந்தான். அவன் மாதவனைத் தவிர வேறொருவனுமல்ல. இவ்வளவு அழகு வாய்ந்தவனும் ரஸிகனும் வித்வானும் ஸமர்த்தனும் தன் பெரியதகப்பன் மருமகனுமாகிய மாதவனுக்கும் இந்துலேகைக்கும் அந்யோந்ய ஸ்நேகமிருப்பது ஸகஜமேயென்று நான் சொல்லவேண்டியதில்லை யல்லவா? உண்மையில், இக்கதை தொடங்குங் காலத்தில், இவர்களுக்கு அந்யோந்யமாய் அந்தஃகரணவிவாகம் நடந்தேறிவிட்டது.

இந்துலேகையானவள் ரமணீயமும் மனோஹரமுமான சகலபதார்த்தங்களும் திரண்டுருண்டு அவதாரமெடுத்து வந்ததுபோல் அவ்வளவு அற்புதமாய் விளங்கியபடியால் அவளுடைய எண்ணத்துக்கும் இஷ்டத்துக்கும் சிறிதேனும் ஆக்ஷேபிக்கின்றவர் அவளுடைய பாட்டனார்வீட்டில் ஒருவருமில்லை. ஆனால் அவள் அந்தக் குடும்பத்திலே ஒரு மஹாராணிக்குறிய பதவியை இவ்வாறு வஹித்து வந்தபோதிலும் அவள் செய்யும் காரியங்களில் எதைப்பற்றியாவது அவளுடைய நடத்தையைப் பற்றியாவது ஒருவரும் எவ்வித தோஷாரோபணமாயினுஞ்செய்து முணுமுணுத்ததில்லை.

இந்தக் கதை தொடங்குங் காலத்தில் இந்துலேகைக்கும் மாதவனுக்கும் பரஸ்பரம் அந்தஃகரண ஆத்மவிவாகம் நடந்தேறிவிட்டதென்று நான் குறிப்பாய்ச் சொன்னதிலிருந்து அவர்களுக்குள் பரஸ்பரமுள்ள அந்யோந்யத் தன்மை இவ்விதமானதென்று நன்ருய் விளங்குமோவென்று சந்தேகிக்கின்றேன்

இப்படிப்பட்ட மிருதுசுபாவமுள்ள இவ்விருவரின் ஹிருதயங்களிலும் அந்யோந்ய அநுராகம்

உண்டாகாமலிருக்க முடியாதென்று என் வாசகர்கள் ஏற்கனவே ஊஹித்தறிந்திருக்கக்கூடும்; ஆனல் இவ்விஷயத்தைக் கேவலம் ஊஹித்தறியப்படும்படி விட்டுவிடுவதைவிட, மாதவனுடைய காதலின் உற்பத்தியையும் வளர்ச்சியையும் ஸ்பஷ்டமாயும் சுருக்கமாயும் எடுத்துரைப்பது நல்லதென்று தோற்றுகிறபடியால், சிறிது பூர்வகதா பிரசங்கஞ் செய்கின்றேன்.

இந்துலேகையின் கல்விப்பயிற்சி பூர்த்தியானபிறகு அவள் ஸ்வயமாகவே தன் யுக்தாயுக்தபுத்தியைச் செலுத்தி, தன்னைப் பாணிக்கிரஹணம் செய்யத் தகுதியுடையவர்களாய்ப் போட்டி போட்டுவரும் புமான்களுக் கிடையிலே அவளுக்கிஷ்டமானவனை அவளே கணவனாக வரித்தெடுக்க வேண்டுமென்றே அந்தப் பெருந்தகையான கிருஷ்ணமேனவன் எப்போதும் உத்தேசித்திருந்தார். ஆனல் அவர் இதைப்பற்றி அதிகமாய் யாரோடும் ஒன்றும் பேசினது கிடையாது. பெண்ணுக்குப் பத்து பதினொரு வயதானதுமுதல் விவேகிகளான பலரும் இதுவிஷயமாய்ப் பேஷ்காரின் மனதை யறிய முயன்றும் முடியாமற்போய்விட்டது. அவர் இறந்துபோவதற்குச் சிலநாள் முன்பு ரஜாபெற்றுக்கொண்டு இந்துலேகையுடன்கூடத் தன் பிதாவைப் பார்க்க வந்திருந்தார். அப்போது பஞ்சுமேனவன் அவருடன், 'இந்துலேகைக்கு வயது 15-க்கு மேலாய் விட்டதே, சரியான நல்ல சம்பந்தமொன்று தேடவேண்டாமா?' என்று பிரஸ்தாபித்தார். அதற்குக் கிருஷ்ணமேனவன், இந்துலேகையின் வித்தியாப்பியாசம் இன்னும் பூர்த்தியாகவில்லையென்றும், அது முடிந்தபிறகே அவளுடைய விவாகத்தைப்பற்றி ஆலோசித்தாற்போதுமென்றும், இந்துலேகையை அவளுடைய ஸ்திரீஜாதிக்கும் அந்தஸ்துக்கும் தகுதியாகத்தக்கவிதமாய் நடந்துகொள்ளும்வண்ணம் அவளைக் கல்வியிற்பயிற்றுவதே தனக்கேற்பட்டமுதற்கடமையென்றும், அந்தமுயற்சி கைகூடினல், பிறகு அவளைப்பற்றிய விவகாரங்களிலெல்லாம் அவளே பிரவர்த்திக்கத் தகுமென்று இந்துலேகையை பத்திரமாய் நம்பி விட்டுவிடலாமென்றும் சொன்னர். கிருஷ்ணமேனவனுடைய கருத்து முழுவதையும் அந்தக்கிழவர் தெரிந்துகொண்டாரோ இல்லையோ, அப்படித்தெரிந்துகொண்டிருந்தால் அதை அங்கீகரித்தாரோ இல்லையோ எனக்குத் தெரியாது. ஆனல் அவ்விஷயத்தைப்பற்றிப் பிறகு அவர் தன்மகனைக் கேட்கவேயில்லை.

(இன்னும் வரும்.)

# புத்தகக் குறிப்பு

## REVIEWS OF BOOKS

---

ஸ்ரீஸ்கந்தபுராணச் சுருக்கம். *—(விலை அணா 10 இராமனுதபுரம் வித்வான் மாப்பிள்ளை வி. தங்கவேலுஸ்வாமித் தேவர் இயற்றியது). கந்தபுராணம் ஸம்ஹிதைகளென்ற பெயரையுடைய ஆறு பெரிய பாகங்களை உடையது. அவைகளின் பெயர் முறையே ஸநத்குமார ஸம்ஹிதை, ஸூதஸம்ஹிதை, சங்கரஸம்ஹிதை, விஷ்ணு ஸம்ஹிதை, பிரம்மஸம்ஹிதை, ஸூர்யஸம்ஹிதை ஆகிய இவைகளே. இவைகளுள் சங்கரஸம்ஹிதை என்று சொல்லப்படுவதே ஸுப்ரஹ்மணியருடைய அற்புதச்செயல்களைக் கூறுவது. ஆகையால் இந்த ஸம்ஹிதையையே தமிழில் கந்தபுராணமாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த சங்கரஸம்ஹிதையைத்தான் தேவரவர்கள் மிகுந்த இனிமையாயும் அதிக கடினமில்லாததாயும் உள்ள தமிழில் சுருக்கமாகவும் விஷயங்கள் ஒன்றும் விட்டுப்போகாமலும் எழுதி இருக்கின்றனர். இதுகாறும் விரிவாக இருந்து பலராலும் எளிதில் வாசிக்கமுடியாத சங்கர ஸம்ஹிதையை இவ்வாறு எழுதி வெளியிட்டதற்கு நாம் எல்லோரும் தேவரவர்களிடத்தில் நன்றிபாராட்டவேண்டியது அவசியமே. மேலும் இச்சுருக்கத்தில் உற்பத்தி விஷயங்களைப்பற்றிச் சொல்லும் உற்பத்திக்காண்டம் அஸுரகாண்டம் என்பவைகளில் சிறுவர்களும் சிறுமிகளும் வாசிக்கத்தகாத விஷயங்களைவிட்டு கதைக்கோர்வை விடாது வெகு சாதுரியமாக எழுதப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் எல்லோருக்கும் ஆனந்தத்தை விளைவிக்குமென்பது எங்கள் துணிபு. தேவரவர்கள் தமிழில் இன்னும் வெளிவராத மற்றைய ஸம்ஹிதைகளையும் எழுதி வெளியிடுவாராயின், இப்பொழுது அவர் செய்யத்தொடங்கிய பேருதவி முற்றும் முடிவுபெற்றதாகும்.

பாலகங்காதர திலகர். * (சுருக்கமான ஜீவ்யசரிதம் விலை அணா ¼ தான்). இச்சிறுபுத்தகத்துள் மஹாத்மா பால கங்காதர திலகரைப்பற்றி எவ்வளவு சொல்லமுடியுமோ அவ்வளவும் சொல்லப்பட்டிருக்கிறது. முன்பாகங்களில் அவர் இளம்பிராயமுதல் இவ்வாறு அநேகவிதமாக ஜனங்களது பொதுநன்மைக்காக உழைப்பவராய் இருந்தார் என்பதையும், நூதனமாக நமது தேசத்தில் அப்பொழுது தொடங்கியிருந்த ஆசாரச் சீர்திருத்த விஷயத்தில் அவருக்கு இன்ன அபிப்பிராயம் இருந்தது என்பதையும், அதன் மூலமாக கண்மூடிகளாய் ஆசார சீர்திருத்தங்களை திடீரென்று உண்டாக்கவேண்டும் என்ற ஆத்திரக்காரரால் அவர் இவ்வாறு தாக்கப்பட்டார் என்பதையும், பின்பு ஸ்வதேசியம் உண்டானகாலத்து அவர் தமது எண்ணமே ஜனங்கள் மனதில்தோன்றி இவ்வாறு வெளியாயிருக்கின்றது என்று அதை ஸந்தோஷமாக

அங்கீகரித்து அதற்கு கூசாது தலைவரானர் என்பதையும் நன்ருகக் காட்டி இருக்கிறது. மேலும் திலகாது மனோநிடம், கருமமே கண்ணு யிருக்குந்தன்மை முதலியவைகளை நன்கு வெளிப்படுத்த ஸூரத் காங்கிரஸில் 1907 வருஷத்தில் நடந்த கலகத்தின் கதை, திலகர் கவர்ன்மெண்ட் உத்தியோகவிஷயத்தை விசாரிக்கவந்த ஸங்கத்தார்முன் கொடுத்த வாக்குமூலம், முதலியவைகளையும் எடுத்து எழுதப்பட்டிருக்கிறது. மேலும் ஸ்வதேசாபிமானிகளின் (அமிதவாதிகள் என்றபெயர் அவ்வளவு தகுந்ததல்ல) கொள்கையைத் திலகர் செய்த 'ஸ்வதேசிகளின் ஸித்தாந்தம், ஸத்திய நோக்கம், ஸிவாஜிக் கொண்டாட்டம், எங்கள் மார்க்கங்களும் ஒற்றுமையும், என்ற உபந்யாஸங்கள் மூலமாகவும் நேராகவும் அழகாய் இப்புத்தகத்தில் வெளியிட்டிருக்கிறது. முடிவில் ஸ்வதேசீயத்திற்கு திலகர் சிந்திக்கும் ஸ்ருஷ்டிகர்த்தர் என்று விஷயத்தைவற்புறுத்தி இருக்கிறது. இச்சிறுபுத்தகத்தை எழுதி ஸாதாரண ஜனங்களுக்கும் திலகமஹாத்மாவின் அற்புதசரிதையை எளிதில் புலப்படும்படி செய்த ஸ்ரீ ஈசுவருக்கு தமிழ் பேசுவோர் யாவரும் அவசியம் நன்றிஅறிதல் உடையவராய் இருத்தல்வேண்டும். இப்புத்தகம் தமிழ்பேசுவோன் ஒவ்வொருவன் வீட்டிலும் அவசியம் இருத்தல் வேண்டும். இதைச் சிறந்த நூல்களுளொன்ருக நாம் பாவிக்கவேண்டும். இப்புத்தகத்தை எல்லோரும் வாங்கி ஆதரிப்பாராக.

யசோதரகாவ்யம்.--*(பண்டித வெங்கடராமஅய்யங்கார் அவர்களால் இயற்றப்பட்டது. விலை அணு 8). இது ஐந்து பாகங்களையுடைய ஒரு ஜைன நூல். முதற்பாகத்தில் ஔதேய தேசத்து மாரிதத்தன்என்ற அரசன் காளிக்கு அபயருசி அபயமதி ஆகிய இருவரையும் நரபலிகொடுக்க எண்ணி வாளைவீசிக் கொண்டு வருகையில், அவர்களிருவரும் நகைக்க, அவர்களை வெட்டாது நிறுத்திவிட்டு, அவர்கள் சிரித்ததன் காரணத்தைக் கேட்டகாலத்தில், அவர்கள் தமது பூர்வஜன்மவரலாருகிய யசோதரசரித்திரத்தைசொல்லத் தொடங்கிய இக்கதையின் வரலாறு விவரிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாம்பாகம் யசோதரன் பிறப்பு அவன் ராஜ்யம் ஆண்டவிதம், அவன் மனைவி பரபுருஷனை இச்சித்துக் கெட்டதால் அவனுக்குண்டான வியாகூலம்தீர மாவால்செய்த கோழியை தாயின் புத்திமதிப்படி அவன் காளிக்கு பலி கொடுக்க, அந்த பாபத்திற்காக அவனும் அவன் தாயும் அவன் பெண்சாதியால் விஷம் வைத்துக் கொல்லப்பட்டது ஆகிய இக்கதையைச் சொல்வது. மூன்றாம் பாகம் யசோதரனும் அவன் தாயும் இறந்தபின்னர் முறையே மயில்: நாய்: முள்ளம்பன்றி: கரும்பாம்பு: மீன்: முதலை: ஆடு: மாடு: கோழிகள்: ஆகிய விலங்குகள் பறவைகள் முதலிய தாழ்ந்த ஜன்மத்தில் சுழன்று தமது பாபபலனை அனுபவித்த ஒழுங்கை வெளியிடுகின்றது. நான்காம் பாகம் கடையிசில் கோழி ஜன்மத்தில் இவ்விருவரும்தமது பிள்ளை யசோமதியின் தோட்டத்தில் கூண்டுகளில் இருக்க, அப்பொழுது அங்கிருந்த அகம்பனயோருக்கும் யசோமதியின் தளவரன் சண்டகருமனுக்கும் நடந்த ஞானஸம்பாஷணையைக் கேட்டுத் தெளிந்து சந்தோஷத்தால் கொக்கரிக்க, அதனுல் குறைத் தூக்கத்தில் எழுப்பப்பட்ட யசோமதியால் அவர்கள் இறந்து யசோமதிக்கே அபயருசி என்ற பிள்ளையும் அபயமதி என்ற பெண்ணுமாகப் பிறந்து நற்கதி யடைந்த கதையைக் கூறுகிறது. யசோமதி அரசன் ஜினதீக்ஷை பெற்று ராஜ்யம் நீங்கித் தவஞ் செய்யச் சென்றதையும், பின்பு அபயருசி தனது தம்பியினிடம் ராஜ்யத்தை ஒப்புவித்து தவக்கோலங்கொண்டு தனது தங்கையோடு வந்ததையும் அப்பொழுது தமக்கு வந்த ஆபத்தையும் எடுத்துரைக்க மாரிதத்தன் தெளிந்து நல்லொழுக்கத்திற்கு வந்து நற்கதி அடைந்ததையும் ஐந்தாம் பாகம் கூறுகின்றது. இக்கதை அஹிம்ஸாப் பரமோதர்மஃ என்ற அருமையான வேதக்கொள்கையின் சிறப்பையும் அதன்படி நடவாமலிருந்தால் விளையும் தீங்கையும் நன்கு எடுத்துக் காட்டுகின்றது. இப்புத்தகத்தை வாசிப்பவருக்கு ஜைனர்கள் உண்டானதால் வைதிகமதத்தின் சிறப்பு எவ்வாறு வெளிப்பட்டு விளங்கியது என்பது நன்ருகத் தெரியவரும். இவர்களாலேயே தான் அஹிம்ஸாப் பரமோதர்மஃ என்ற வேதக்கொள்கையின் சிறப்பு பலர் அறிய வெளிவந்து நம்முள் இருந்த மாம்ஸபக்ஷணம் முதலிய கெட்ட காரியங்களை நிறுத்திவிட்டது. இந்தச் சிறப்பை இக்கதை வெளியாக்குகிறது. இதை அச்சிட்டிருக்கும் பண்டிதர் அவர்களும் ஜைனமதம் முதலிய பொது விஷயங்களைப்பற்றியும் கதையின் சுருக்கம் முதலியவைகளைப் பற்றியும் இக் காவ்யத்தின் ஆரம்பத்தில் நன்ருக எழுதியிருக்கிருர். இவைகளின் ஸஹாயத்தை வைத்துக்கொண்டு காவ்யத்தை எளிதில் வாசித்து உணரலாம். தமிழ் பாஷையில் விசேஷப்ரீதி உடையவர்கள் வீட்டில் இப்புத்தகம் ஒன்று இருத்தல் அவசியம்.

1. பீமலா:—* (ம-ா-ா-ஸ்ரீ, R. P. குலந்தஸாமி பிள்ளை B. A. L.T. யவர்கள் இயற்றியது-சைகான் சின்னயா அச்சுக்கூடம்' புதுவை.) இது ஆக்பர் காலத்து விளக்கும் கதை. இராஜாங்கத்தார் தாம் செய்த தப்பைத்தெரிந்து அதை ரத்து செய்து நியாத்தை ஸ்தாபித்ததை விளக்குகின்றது. நற்குணமுடையவன் கொடியனை அழிக்க ஆவேசம் கொண்டு, பிரதிக்ஞை செய்து, எளியோரைக் காக்கவாக்களித்து, அதுவே தன் ஆவேசக்காரியத்திற் தடங்கலாக, மனம் திகைத்து கடைசியாக அன்பெனு மருந்தால திகரிக்கப்பட்டு கொடியவனுடைய கொடுமையை அழித்து அவனைத் தான் செய்த தப்பிற்கு அபராதமடையும்படி தர்மஸ்தாபனம் செய்வதே இதன் மூலக் கருத்து. தீமை அழியும் நன்மை வளரும் என்பது நன்குவிளக்கப்பட்டு இருக்கின்றது.

* இப்புத்தகம் வேண்டுவோர், "விவேக போதினி" மேனேஜருக்கு எழுதிக்கொள்ளவும்.

பீமலாவின் அன்பெனும் வேதியரால் ஆதரிக்கப்பட்டு செய்நன்றி மறவாது தருமவழியே நாடி விரத்தையும் ஸத்யத்தையும் நாட்டிய இந்திராதித்தன், விசுவாசகாதகனுகிய குணனென்னுங் காந்தத்தினல் கிரஹிக்கப்பட்டு குரூரவழியைநாடி நல்லோரைக் கெடுக்க எண்ணம் கொண்ட சிக்சிந்தன்—இவ்விரண்டு பேரின் குணமும் அதற்குள்ள ஏற்றத் தாழ்வும் ஒவ்வொரு விஷயத்திலுமறியலாம்; மஹாகிதையின் நாயகவாஞ்சையு மதனுலுண்டான வீராவேசமும் இந்திராதித்தனுடைய ஆத்மத்தியாகமும், இரக்ககுணமும், பீமலாவின் பித்ருவாஞ்சையும் ஆத்மத்யாகம் இவைகளோடு நடுநடுவில் சாராலாவின்மெல்லிய மொழியும் சாந்த குணமும் நம் மனதிலானந்தத்தை நிறைத்து விடுகின்றன. சகுணன்கொடுமை அவனைக் கொலைசெய்ய உத்தரவளித்தான் என்றது ஒழிந்தான் பாபி என்று தோன்றும்படி செய்து விடுகின்றது. இக்கதைஸ்ரீமான் ரோமேஷ்சந்திர தத்தரால் பங்காளியி லெழுதப்பட்டதைத் தமிழில் ம-௱-௱-ஸ்ரீ குழந்தை சாமியார் எழுதி இருக்கிறூர். நடை முதலியன நன்ருய் இருக்கின்றது. விலையும் ஆறு அணு தான். எல்லாரும் வாங்கக் கூடியதே.

"இந்துசாஸ்திராபிமானி"—"இந்து சாஸ்திராபிமானி" எனப் பெயர்கொண்ட இப்புத்தகம் சென்னையில் பிரசுரஞ் செய்யப்படும் "லோகோபகாரி" என்னும் பத்திரிகைக்கு கல்லடைக்குறிச்சிம-௱-௱-ஸ்ரீ முத்துகிருஷ்ணய்யர் நாளாவர்த்தியில் எழுதிவந்த அருமையான ஸமாசாரங்கள் அனைத்தையும் அடக்கியுள்ளது. "பிரம்மைவஸத்தியம்," "ஸம்சாரபந்தம்," "ஈச்வரபக்தி" முதலான வேதாந்த விஷயங்களையும், "கேரளரகசியம்" முதலிய தேசாந்தர நடையுடைபாவனையின் விவரங்களையும், "பிராசீன ஆசாரம்," "முயற்சி," "பெண்கல்வி," "அஜாமளன்" இவைபோன்ற முக்கியமான சில்லரை நீதிகளடங்கிய உபந்நியாசங்களையும் வெகுபரிஷ்காரமாய் எல்லாரும் வாசித்தறியும்படி எளியநடையில் எழுதி, நல்லகாகிதத்தில் அச்சிட்டு ஸுலபமான விலைக்கு விற்கப்படுகிறது. பெண்பாலர் பலரும் வாசித்தறியவேண்டிய ஸமாசாரங்கள் இதில் ஜாஸ்தியாயிருக்கிறபடியால், எல்லோரும் இதை வாங்கி வாசித்து ஆனந்திப்பார்களென்று நம்புகிறோம்.

---

## புத்தக வரவு

## BOOKS RECEIVED

---

ராஜாங்கமும் தேசாபிமானமும் ம-௱-௱-ஸ்ரீ C. சுந்தரமய்யரவர்கள். B.A., எழுதியது. மெஸ்ஸர்ஸ் ஸ்ரீனிவாஸ வரதாசாரி அண்டு கம்பெனியாரவர்களால் தெளிவாய் அச்சிடப்பட்டது. விலை அணு 3





---

# V. Kalyanram Iyer & Co., BOOK-SELLERS, ESPLANADE, MADRAS.

மஹாபாரதம்

## சாந்திபர்வம்.

கும்பகோணம்

பிரும்ம ஸ்ரீ பாரத சாமாசாரியாரவர்களால்

எளிய தமிழ்நடையில் மொழி பெயர்க்கப்பட்டு,

பிழையறப் பரிசோதித்து

நல்ல காகிதத்தில் பெரிய எழுத்தில் அச்சிட்டு காலிகோவில் நன்றாய்ப் பயிண்ட் செய்திருக்கிறது.

இப்போழுது தயாராயிருக்கும்

| | | | |
|---|---|---|---|
| 1-ம் பாகம் ... ... ரூ. | 2 | 0 | 0 |
| அச்சிலிருக்கிற 2-ம் பாகம் ... | 2 | 0 | 0 |
| இப்பொழுதே இரண்டாம் பாகத்துக்கும் சேர்த்து முன்பணம் அனுப்புகிறவர்களுக்கு ... ... ... | 3 | 0 | 0 |

"அதிப்பிரவிஷித்தர்களாகிய ஸ்ரீமத் பாகவதம் சாமண்ணாசார்யரவர்கள் தமிழில் மொழி பெயர்த்து வைத்திருக்கும் ஸ்ரீ மஹாபாரதம் சாந்திபர்வத்தின் வசன நடையிற் சில பாகங்களை படித்துப் பார்த்தேன். அவை பொருட் சிறப்புற்று மிக்க இன்பத்தை விளைவிக்கின்றன. இதுபோன்ற ஸரியான மொழிபெயர்ப்பைத் தமிழ் நாடு இதுவரையிற் பெற்றிலதென்று சொல்லலாம்.

பாரதத்தில் இப்பர்வமானது பலவகைப்பட்ட தருமங்களையும் உபாக்கியானங்களையும் தெரிவிக்கும் ஸாரமான பகுதியென்பதும் அவற்றைத் தெரிந்து கொள்ளுதல் இரு பாலார்க்கும் பெரும் பயனை விளைவிக்கு மென்பதும் யாவரும் அறிந்த விஷயங்கள். வடமொழிப் பயிர்ச்சியில்லாதவர்கள் மேற்கூறியவற்றைத் தெரிந்துகொள்ளுதற்கு இம்மொழி பெயர்ப்பைப் போன்ற சிறந்த கருவி வேறேயில்லை யென்பது திண்ணம். * * *"

இங்ஙனம்,

19-10-1907. வே. சாமிநாதையன்,

*Pundit Presidency College, Madras.*

| | | | |
|---|---|---|---|
| நாலாயிர திவ்யப்பிரபந்தம்.---640 பக்கம் ... ... | 3 | 0 | 0 |

இப்பதிப்பு (1) ஆழ்வார்களின் காலவைபவக்குறிப்பும், (2) ஆழ்வார்கள் அருளிச்செய்த பிரபந்தங்களின் அட்டவணையும், (3) ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்விய தேசங்களின் அட்டவணையும், (4) அந்த தேசங்களின் வைபவக்குறிப்பும், (5) பாசுரங்களின் முதலடி அகராதியும் (6) பாடபேதக் குறிப்புகளும் சேர்த்துபலபிரதிகளுடன் ஒத்திட்டுப்பார்த்து, நன்றாய் அச்சிடப்பெற்றுளது.

| | | | |
|---|---|---|---|
| மனுதர்மசாஸ்திரம் 2647 கிரந்த சுலோகங்களும் அவைகளின் தமிழ் மொழி பெயர்ப்பும்—560 பக்கம் ... | 2 | 4 | 0 |
| ஸ்திரீ புருஷசாமுத்ரிகாலட்சணம்... | 1 | 0 | 0 |

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயண வசனம்

பண்டித-நடேச சாஸ்திரியாரால்

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு,

தகுந்த தமிழ் வித்வான்களால் பார்வையிடப்பட்டு, பிழையறப் பரிசோதித்துப்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்திரீகளும் சிறுவர்களுங்கூட எளிதில் தெரிந்துகொள்ளும்படியாகத் தெளிவான எளிய நடையில் வசனரூபமாய் இவ்வால்மீகி ராமாயணம் எழுதப்பட்டிருக்கிறது. இப்பதிப்பு இதன் ஆதிகிரந்தத்தின் கௌரவத்திற்கும் மகிமைக்கும் தக்கவாறு கனமான உயர்ந்த காகிதத்தில் பெரிய எழுத்தில் பிழையறப் பரிசோதித்து, செவ்வையாய் அச்சிட்டு நேர்த்தியான காலிகோவில் அழகாய்ப் பயிண்டு செய்திருக்கிறது.

தயாராயிருக்கும் காண்டங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| பாலகாண்டம் ... ... | ரூபா. | 1 | 12 | 0 |
| அயோத்தியாகாண்டம் ... | ,, | 3 | 0 | 0 |
| ஆரணியகாண்டம் ... | ,, | 1 | 12 | 0 |
| கிஷ்கிந்தாகாண்டம் ... | ,, | 1 | 12 | 0 |
| 4 காண்டமும் சேர்த்துவாங்கினால் | ,, | 7 | 4 | 0 |

மற்றய காண்டங்கள் இப்பொழுது விரைவாய் அச்சிடப்பட்டு வருகின்றன. சீக்கிரம் வெளிவரும்.

---

## இதரத் தமிழ்ப் புத்தகங்கள்

நன்றாய்ப் பார்வையிட்டு நல்ல காகிதத்தில் தெளிவாய் அச்சிட்ட சிறந்த பதிப்பு.

| | | | |
|---|---|---|---|
| மூவர் தேவாரம்-பண் முறை---1044 பக்கம் ... ... ... | 3 | 0 | 0 |

இப்பதிப்பில் (1) சம்மந்தர், அப்பர், சுந்தரர் இம்மூவர்களின் சரித்திரக் குறிப்பும், (2) தேவாரவரலாறும், (3) தேவாரப்பண் அட்டவணையும், (4) தேவாரப்பாடல்பெற்ற ஸ்தல அகராதியும், (5) தேவார ஸ்தலங்களுள்ள நாடுகளின் விபரமும், (6) அட்டவீரட்டானங்களைக்குறிப்பிக்கும் செய்யுளும், (7) தேவாரப்பொது பாடல்களின் பக்க அட்டவணையும், (8) தேவார வைப்பு ஸ்தல அட்டவணையும், (9) காரைக்காலம்மையார் அருளிச்செய்த மூத்த திருப்பதிகமும் நூதனமாய்ச் சேர்க்கப்பட்டுள்ளன.

வேதாந்த விஷயமான புஸ்தகங்கள்

| | | | |
|---|---|---|---|
| வாசுதேவ மனனம் ... ... | 1 | 0 | 0 |
| சிவபோகசாரம் & சிவஞானவிளக்கம் | 0 | 2 | 0 |
| சுகர் கைவல்லியம் ... ... | 0 | 2 | 0 |
| வைராக்கிய சதகம் ... ... | 0 | 2 | 0 |
| ஜன்மாந்திரம் (அல்லது இராமதாசர் உபவள்ளலார் சாஸ்திரம் ... ... | 1 | 8 | 0 |
| மகாராஜா துறவு ... ... | 0 | 6 | 0 |
| தாயுமானவர்பாடல் ... ... | 0 | 12 | 0 |
| வேதாந்தபோதினி ... ... | 0 | 8 | 0 |

வி. கல்யாணராமய்யர் அண்டு கோ., புக்ஸெல்லர்ஸ், எஸ்பிளனேட், சென்னை.

# விவேக போதினி.

" எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "——திருவள்ளுவர்

தொகுதி 1 } 1908-ஞு நவம்பர் மீ { பகுதி 5

## ஸநாதன தர்மம்

### SANATANA DHARMA

இங்கிலீஷ் படிப்பும், உலகத்திலுள்ள மதங்கள் இவ்வாறு இருக்கின்றன என்ற அறிவும், இல்லாத நமது சாஸ்திரவித்வான்களை, "உமது மதம் என்ன" என்று கேட்டால் தகுதியான மறுமொழி சொல்லமுடியாமல் தத்தளிப்பார்கள். கச்சேரி விஷயமான பத்திரங்களில், இவர்கள் தம்மை வைஷ்ணவரென்றோ, சைவரென்றோ சொல்லிக்கொள்வது வழக்கம். ஆனால் வைஷ்ணவமும் சைவமும் ஹிந்துமதத்தில் சில கூட்டத்தார் கடவுளை விஷ்ணுரூபமாகவாவது சிவரூபமாகவாவது வழிபட்டு உய்ய ஏற்படுத்திய சிறிய பாகங்களே தவிர வேறில்லை. ஆகவே நாம் இவற்றிலொன்றை 'நமது மதம்' என்று எடுத்துரைத்தல் பொருந்தாது. முன்சொன்ன வித்வான்களுடைய குழப்பத்திற்குக் காரணம் தங்கள் மதத்தின் உண்மையை அறியாதிருத்தலே என்று சிலர் சொல்லுகிறார்கள். உண்மையான காரணம் அதுவல்ல. தங்களுடைய மதக்கோட்பாடுகளை, ஏற்படுத்தினவர்களுடைய கௌரவத்தை நோக்கி மூடத்தனமாக நம்பும் வழக்கம் இல்லாதிருப்பதும், உண்மையை உள்ளபடி உணர வேண்டுமென்ற ஆவலும், ஆகிய இவைகளே முன்சொன்ன குழப்பத்திற்கு உண்மையான காரணம். வரவர இவர்கள் மனோதர்மத்தில் விருத்தியடைந்துகொண்டு, மேன்மேலும் உயரச் செல்லுகிறார்கள். போகப்போக மனம் விரிதலால் மேலான உண்மைகள் அதில் தோன்றுகின்றன. ஆகவே கீழான நிலையில் ஒருபடி போல் உதவிய கொள்கைகளைப் பழிக்க அவர்களுக்கு மனம் துணியாது. ஆனால் அந்தத் தாழ்ந்த கொள்கைகளே உண்மையானவை, மேலான உண்மை இல்லவே இல்லை என்று சொல்வதற்கு வேண்டிய பிடிவாதம் அவர்களுக்கு வர இடமே இல்லை. இவர்கள் எந்த மார்க்கங்களால் இப்பொழுது இருக்கும் நிலைக்கு வந்திருக்கிறார்களோ, அவைகளை எல்லாம் தமது மதம் என்று சொல்லவேண்டியதாய் வருகிறது. ஏனெனில், அவர்கள் தமக்கு உபயோகமாய் இருந்த பல கொள்கைகளையும் பழித்து, இப்பொழுது தாம் இருக்கும் நிலையையே தமது மதம் என்று சொல்ல எப்படி மனந் துணிவார்கள்? ஒரு காலத்திலும் இப்படிச் சொல்லத் துணியவேமாட்டார்கள். ஆகையால் தமது மதம் இன்னதென்று சொல்வதற்கு அவர்கள் மிகவுந் தத்தளிப்பார்கள். இப்படி

உண்மையை உணர்ந்து மௌனமாய் இருக்கும் அவர்களை, "தங்கள் மதம் இன்னதென்று சொல்லத்தான் வேண்டு" மென்று வற்புறுத்தினல் அவர்களுக்கு வேறென்றும் சொல்லமுடியாமல், தமது மதம் 'உண்மைமதம்' என்று சொல்ல வேண்டியதாக வரும். ஆனல் இந்தப் பெயர் நன்றாகவும் ஒழுங்காகவும் இருப்பதாகத் தோற்றவில்லை. இப்பொழுது பெரும்பாலராலும் அங்கீகரிக்கப்பட்டு, நமது மதத்திற்கு ஸநாதன தர்மம் என்ற பெயர் வழங்கிவர ஆரம்பிக்கிறது. இனி நாமும் இந்தப் பெயரை நமது மதத்திற்கிட்டு வியவகரிப்போம்.

நமது மதத்திற்கு இப்பொழுது ஹிந்து மதம் என்ற பெயர் இருக்க, இப்புதிய பெயரை நாம் ஏன் அங்கீகரிக்கவேண்டும் என்ற சங்கை சிலரது மனதில் உதிக்கலாம். ஹிந்து மதம் என்றபெயர் நமது மதத்திற்கு அவ்வளவு நல்ல பெயர் அன்று. முதலாவது இந்தப் பெயர் தேவபாஷையாகிய வடமொழிப் பெயர் அன்று. முன்காலத்தில் யவனர் நமது தேசத்திற்கு வந்தபொழுது, சிந்துநதிக்கரையில் நமது முன்னோர்கள் இருந்ததைக் கண்டு, அவர்களை ஹிந்துக்கள் என்று பெயரிட்டு அழைத்தார்கள். இரண்டாவது ஹிந்துமதம் என்ற வார்த்தைக்கு சிந்துநதிக்கரையி லிருப்பவர்களுடைய மதம் என்ற பொருளேயொழிய வேறில்லை. ஆகையால் ஒருவிதமாய் உற்று நோக்குங்கால் இப்பெயரில் அதிவ்யாப்திதோஷம் இருக்கிறது. (குறிப்பிடப்படாததில் குறிப்பிட்ட லக்ஷணம் இருப்பதே இந்த தோஷத்தின் ஸ்வரூபம்.) ஏனெனில், சிந்துநதிக்கரையில் இக்காலத்தில் மஹம்மதியர் கிறிஸ்தவர் முதலிய பல மதஸ்தர்கள் இருக்கிறார்கள், அவர்களையும் இப்பெயர் உள்ளடக்கி விடுகிறது. இவர்களது மதத்தை ஹிந்துமதம் என்று சொல்வது பொருந்தாது. வேறொருவிதமாய் நோக்குங்கால் இந்தப்பெயரில் அவ்வியாப்திதோஷமும் இருக்கிறது. (இலக்ஷணமானது குறிப்பிட்டதின் ஒரு பாகத்திலிருந்து மற்றொருபாகத்தில் இல்லாதிருப்பதுதான் இந்த தோஷத்தின் ஸ்வரூபம்). ஏனெனில் இம்மதஸ்தர்கள் இப்பொழுது நமது இந்தியாதேசம் முழுவதும் பரவி இருப்பதினல் அவர்களெல்லாரையும் இப்பெயர் உள்ளடக்கிக் கொள்ளவில்லை. மூன்ருவது, இந்தப்பெயர் இம்மதத்துள் அடங்கியவிஷயங்களையாவது, இம்மதத்தைக் கண்டுபிடித்தவர் (அப்படி ஒருவர் இருந்தால் அவருடைய) பெயரையாவது உணர்த்தவில்லை. கண்டு பிடித்தவர் ஸம்பந்தமான பெயர்கள் இதர மதங்களுக்குத் தக்கபடி அமைந்திருக்கின்றன. ஆகவே ஹிந்து மதம் என்ற பெயரைத் தள்ளிவிட்டு வேறு பெயரை அங்கீகரிப்பது அதிக அவசியம்.

ஸநாதன தர்மம் என்ற பெயரோ முன் சொன்ன தோஷங்கள் ஒன்றும் இல்லாததாய் இருக்கிறது. இதுவே நமது மதத்திற்குத் தகுந்த பெயர். இப் பெயரில் அடங்கிய இரண்டு பதங்களும் வடமொழிப் பதங்கள். வடமொழியில் எப்பொழுதும் என்று பொருள்படும் சதா என்ற தாது திரிந்து, இருத்தல் என்று பொருள்படும் தன என்ற தாதுவோடு சேர்ந்து, ஸநாதன என்ற பதம் உண்டாய் இருக்கிறது. ஆகவே ஸநாதன என்ற பதத்திற்கு எப்பொழுதும் மாறாதிருக்கும் என்பது பொருள். தர்மம் என்ற சொல்லானது தாங்கும் என்று பொருள்படும், த்ரு என்ற வடமொழித் தாதுவிலிருந்துண்டானது ; தாங்கல் அல்லது ஊன்றுகோல் என்று பொருள்படும். ஒருவன் அவசியம் செய்யவேண்டிய காரியம் அவனுக்கு ஊன்றுகோலுக்கு ஸமானமாதலின், தர்மம் என்ற சொல்லுக்கு அவசியம் செய்யவேண்டிய காரியம் என்ற பொருள் உண்டாயிற்று. கடவுள் வழிபாடும், அதற்கனுகூலமாக ஏற்பட்டுள்ள மதக்கோட்பாடுகளின்படி நடத்தலுமே ஒருவன் செய்யவேண்டிய அவசியமானவைகளாதலின், தர்மம் என்ற சொல் கடைசியாய் மதம் என்று பொருள்பட்டது. இந்த மூன்ருவது பொருளிலேதான் இங்கே இந்தச் சொல் உபயோகப்படுத்தப்பெற்றிருக்கின்றது,

ஆகையினலே ஸனாதன தர்மம் என்ற பதத்திற்கு நித்யமதம் அதாவது நித்யவஸ்துவைப் பற்றிச் சொல்லும் மதம் என்றும், எக்காலத்திலும் ஸ்திரமாய் நிற்கும் மதம் என்றும் அர்த்தம். ஆகையால் இப்பெயர் நமது மதத்திற்கு நன்ருகப் பொருந்தும்.

ஸனாதனதர்மம் என்பது எந்நாளும் மாருத உண்மையாய் இருப்பவைகளைச் சொல்லுமானல், அதில் அடங்கிய பாகங்களெல்லாம் இம்மாதிரியான உண்மைகளைச் சொல்லவேண்டும் என்பது அவசியமில்லையா? ஆனல் முன்சொன்ன ஞானஸோபானத்தில் தாழ்ந்தபடியில் இருக்கும் மதமானது மேன்மையான உண்மையை ஒருவாறு காட்ட, இந்த உண்மையைப்பற்றிய எண்ணம் மேன்மேலும் விருத்தி யடைந்துகொண்டு வருகிறது, என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தக் கீழ்ப்படியில் இருக்கும் மதத்திற்கு ஸனாதன தர்மம் என்ற பெயர் எப்படிப் பொருந்தும்? என்ற சங்கை உண்டாகலாம். அரை குறையாய் அறிந்த ஒருவன் ஸனாதன தர்மத்தின் உண்மையைப்பற்றி ஒருவிதமான எண்ணங்கொண்டால் ஸனாதன தர்மத்தின் உண்மைக்குக் குறைவொன்றுமில்லை. கண்நோய்க்காரனுக்கு சூரியன் மிகவும் களங்கமும் மங்கலும் உடையதாய்த் தோன்றினபோதிலும், உண்மையில் சூரியன் எப்படி நிஷ்களங்கமும் பிரகாசமும் உடையதாய் இருக்கிறதோ, அப்படியே ஸனாதனதர்மத்தின் உண்மையும் நிஷ்களங்கமும் பரிசுத்தமும் உடையதாய் இருக்கும். கண்நோய்க்காரன் அது நீங்கிவிட்டபின்பு, சூரியன் உண்மையில் எவ்வாறு இருக்கிறதோ, அவ்வாறே அறிவான். இதுபோல அரைகுறை அறிந்தவனுக்கும் மனது சுத்தமானதும் ஸனாதன தர்மத்தின் உண்மை உள்ளபடி விளங்கும். முதலில் விளங்காமைக்குக் காரணம் அவனது மனதில் உள்ள களங்கமே. மேலும் ஒரு மனிதன் சூரியனைநோக்கிப் புறப்பட்டு, போய்ச் சேருமளவும் ஒவ்வொரு இடத்திலும் சூரியனைப் படம் எடுக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் படப்பெட்டியை எடுத்துக்கொண்டு போவதாக வைத்துக் கொள்வோம். ஒரு இடத்தில் எடுத்த படத்திற்கும் மற்ருெரு இடத்தில் எடுத்த படத்திற்கும் அதிக பேதம் காணப்படும். அவன் திரும்பி வரும்பொழுது பல்லாயிரம் விசித்திர படங்களோடு வருவான். அந்தப் படங்கள் வெவ்வேறுவிதமாய் இருந்தபோதிலும், ஒரே சூரியன் அநேக விடங்களில் தோன்றும் விதத்தால் இவ்வாறு ஆயின என்று நமக்கு நன்ருய்த் தெரியும். இப் படங்கள் போலவே ஸனாதன தர்மத்திலுள்ள மதங்களும் பற்பல பேதமாகக் காணப்படுகின்றன. உயர்ந்தனவும் தணிந்தனவுமான, தத்துவங்கள் மூலமாகவாவது, கொள்கைகள் மூலமாகவாவது, கர்மங்கள் மூலமாகவாவது, நுட்பமும் ஸ்தூலமுமான இருவகைக் கதைகள் மூலமாகவாவது, ஸனாதன தர்மத்தின் பாகங்களாகிய மதங்களெல்லாம் ஒரே உண்மைப்பொருளைத் தெரிவிக்கின்றன. ஆகையால் இம்மதங்கள் எல்லாவற்றிற்கும் ஸனாதன தர்மம் என்ற பெயர் பொருந்தும்.

மேலும் ஸனாதன தர்மம் தன்னைப் பின்பற்றி இருக்கும் ஒவ்வொருவனையும் அவனவனுக்கு தகுந்த மார்க்கங்கள் மூலமாக படிப் படியாய் அவனறியாத வண்ணமே அவனைத் திடமாக மேலான நிலைக்குக் கொண்டு வந்து பிழைக்கும்படி செய்கின்றது. இம்மாதிரியான சீர்திருத்தும் வழியை நமது மதம் மாத்திரம் சிறப்பாக உடைத்தாயிருத்தலால் இதற்கு எக்காலத்திலும் மாருது ஸ்திரமாக நிற்கும் சக்தி உண்டாயிருக்கின்றது. இக்காரணம் பற்றியும் நமது மதத்திற்கு ஸனாதன தர்மம் என்ற பெயர் பொருந்தும். நமது மதத்தில் வாய்ந்திருக்கும் இந்த அற்புதமான சீர்திருத்தும் சக்தியைப்பற்றி அடுத்த ஸஞ்சிகையில் விவரிப்போம்.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன், B.A., L.T.

## சார்சு - அக்லோ - போப், துரை சரிதம் கிரிஸ்தவ போதகர், ஜனனம். கி. பி. 1820, மரணம் 1908.

## THE REVD-GEORGE UGLOW POPE, D. D.

இந்தத் துரையவர்கள் தமிழில் வல்லவர், அநேக நூல்களை இயற்றியுளர், அறிவில் சிறந்தவர், அவர் இறந்து இன்னும் ஒருவருஷங்கூட ஆகவில்லை, ஆதலால் அவர் நம் காலத்தைச் சேர்ந்தவர். ஆகையால் இச்சீரியர் சரித்திரம் நாம் உவந்து அப்பியஸிக்க யோக்கியமானது.

அமெரிக்கா கண்டத்துக் கடுத்த புதிய ஸ்காத்லண்ட் என்று பொருள்படும், பெயரை உடைய (Nova Scotia) நோவோ ஸ்கோஷியாத் தீவே இவர் பிறந்த விடம். பின்னர் இங்கிலண்ட் சீமையில் (Hocton College) ஆக்டன் காலேஜில் கல்விகற்று, (Wesley) வேஸ்லி போதகாசிரியர் இனத்தில் சேர்ந்து, இந்தியாவுக்கு வர நினைத்திருந்தார். அப்படிச் செய்ய முடியாது, இவர் (Church of England) இங்கலண்ட் சர்ச்சுப்போதகர்கள் கூட்டத்தில் சேர்ந்தனர். இந்தியாவுக்கு வரும் முன்னமேயே இங்லண்டில், தமிழையும், தெலுங்கையும், கற்றார். இந்தியாவுக்குவரக் கப்பலில் '-மாத காலம் அடைபட்டிருந்த பொழுதும், கப்பலில் தமிழ்ப்புத்தகங்களைப் இவர் படித்துவந்தார். அக்காலத்தில் ஆப்பிரிக்காவைச் சுற்றி வரவேண்டி இருந்ததால் இப்பொழுது 18-நாளில் முடிவாகும் பிரயாணத்திற்கு அப்பொழுது 6-மாதம் வேண்டியதா யிருந்தது. மதிராஸில் இறங்கியபின், இவர் தமிழ்மாத்திரமே அன்றி, தெலுங்கும், இந்துஸ்தானியும் படித்தார். முதல் முதலில் திருநெல்வேலி ஜில்லாவில் சாயர்புரத்துக் கிரிஸ்தவ தேவஸ்தானத்து அத்தியக்ஷராய் அமர்ந்தார். அவ்விடத்தில் கிரிஸ்தவர் கூட்டம் பலமானது, இவர் வேலையில் சேர்ந்தபின், விசேஷம் பேர் மேன்மேலும் சேர்ந்தனர், திருக்கூட்டம் வலிவுபெற்று, கூட்டத்தினர் சிலர்களாயினர். இன்றைக்கும் சாயர்புரம் சிறந்த கிரிஸ்தவத் திருக்கூட்டத்தலம். அவ்விடத்தில் தாம் உத்தியோகவேலைக்காக உழைத்ததுமல்லாமல், பாடசாலை நடத்தித் தமிழ்படிப்பில் மென்மேலும் தாம் தேர்ச்சிபெற்றனர். இவ்வளவு உழைத்தபடியினால் உடல் நோய்பட்டு இவர் சீமைக்குப் போய் ஒய்வு உற்றுச் சிகிச்சை செய்துகொள்ளும்படி நேரிட்டது. இச்சமயத்தில், ஆக்ஸ்போர்டில் Oxford (Bishop Wilberfoce, F. D. Maurice, Professor Selwyn) வில்பர்போர்ஸுக் குரு, எப்-டி-மாரிஸ், ஸேல்வின் பண்டிதர், இவர்களுடைய நண்பினராக இவருடைய புலமையை அப்பெரியோர்கள் நன்குமதித்தனர். இந்தியாவுக்கு இவர் திரும்பியும் வந்தபொழுது, தஞ்சாவூர்ப் பள்ளிக் கூடத்துத் தலைமை உபாத்தியாயராய் நியமிக்கப்பட்டனர். இப்பள்ளிக்கூடமே, பிற்காலங்களில் மார்ஷ்துரை, (Dr. Marsh) (Mr. Blake) ப்ளேக் துரை இவர்களால், உயர்தரப் பாடசாலையாக ஆக்கப்பட, அநேகர் ஆண்டுதோறும் பி. ஏ. பட்டப் பரீக்ஷை தவறாது கொடுத்து வந்தனர். இந்தகாலேஜ் கொஞ்சநாளைக்குமுன் பாகத்தான் நிர்வாகக்குறைவால் முடப்பட்டது. போப் துரை இந்தப் பள்ளிக்கூடத்தை நடத்திய காலங்களில், படிப்புஇலாகா என்று வேறாய் பிரிவுகள் ஏற்படவேண்டும், அங்கங்கே தேசபாஷைகள், இங்லிஷ் நூல்கள், கணிதம், சாஸ்திரங்கள், இவைகளில் படிப்பு சொல்வதற்குப் பாடசாலைகள் துரைத்தனத்தார் ஆதரணையில் ஏற்படவேண்டும், என (Sir Charles Wood's Educational Despatch,) சீமையிலிருந்து உத்தரவு வந்தது. பாடம்சொல்லப் புத்தகங்கள் சரியானவை தமிழில் கிடையாமைபற்றி, போப் துரை மேல் அதிகாரியாயும், இந்தியப்படிப்பாளிகளில் அனேகர் துணையராயும், கொண்டு துரைத்தனத்தார் ஒருஸங்கம் ஏற்படுத்தவே, தமிழ் இலக்கணப்புத்தகங்கள், மேல், இடை கீழ்த்தாரமாக-மூன்று, இவரால் எழுதப்பட்டுப் பிரசுரமாயின. இம்மூன்றையும் (Madras School Book Society) மதிராஸ் பாடசாலைக் கிரந்த சபையார்—வாங்கித் தமது ஆதீனத்தில் பதிப்பித்தனர். செய்யுட்கலம்பகம் என்னும்

பன்னூற்றிரட்டு ஒன்றும் நன்னூலும், போப் துரை போடவெருநாள் பள்ளிக்கூடங்களில் அவை பாடமாக வைக்கப்பட்டு விசேஷமாய் விலையாகி (Church Missionary Society)— சர்ச்சு மிஷன் கூட்டத்தாருக்குந் திரண்ட பொருள் வரும்படி செய்தன.

இதன்மேல் உடற்சுகத்துக்காக உதகமண்டலத்துக்கு இவர் மாற்றலாக அனுப்பப்பட்டு, அவிடத்தில் துரைமார் பிள்ளைகளில் மிகச் சிறுவர்களுக்கு கிராமர்ஸ்கூல் (Grammar School) ஒன்றும், முதிர்ந்த பிள்ளைகளுக்கு பாண்டித்தியப் பாடசாலை (College) ஒன்றும், ஸ்தாபிக்க முயன்றனர். அவிடத்தில், ஊர்வாசிப்பு மடம் (Public Library) ஒன்றும், ஸேண்ட் (Thomas's Church) தாமஸ் கோவில் ஒன்றும், இவரால் உருவாக்கப்பட்டன. பின்னர் இவர் பங்களூரில் (Bishop Cotton's School) பிஷப் காடன் பள்ளிக்கூடத்துக்கு, (Warden) மேலதிகாரியாய் இருந்து 10-வருஷகாலம் வேலைபார்த்து வந்தனர். வயதானதின்மேல் இங்கலண்ட் தேசத்தில் தம் விருத்தாப்ய காலத்தை கழிக்க நிச்சயித்து இவர் சீமைக்குச் சென்றனர்.

இவர் விசேஷப் பொருள்படைத்தவரல்லர் விவாகம் செய்துகொள்ள வில்லை என்று நினைக்கிறோம், இவர் சீமை சென்று ஆக்ஸ்போர்ட்டில் அமர்ந்தனர். அங்கு (Balliol) பாலியல் காலிஜுக்குசமய ஆசிரியராயும்,(Civil Service Examination)கலெக்டர் உத்தியோக பரிக்ஷையில் தேறினோர்க்குத் தமிழ் தெலுங்கு பாடம் சொல்லும் உபாத்தியாயராயும் நியமிக்கப்பட அதிலிருந்து வந்த வரும்படியினால் ஜீவனம் செய்துவந்தனர்.

இங்கிலாந்திலிருக்குங்கால் துரைமார் தமிழ் கற்றுக்கொள்ள இவரால் எழுதி வெளியிடப்பட்ட தமிழ்வாசகப் புத்தகம் அநேகம் இப்பொழுதும் நம்மூர் புத்தகசாலைகளில் விற்கப்பட்டு வருகின்றன.

இங்கிலண்டில் பலர் சிபார்சியின் பேரில் 1901-ம் வரு முதல் இந்திய துரைத்தனத்தார் கௌரவச் சம்பளம் மீ 1-க்கு சுமார் ரூ 150 இவருக்கு அளித்துவந்தனர்.

ஆக்ஸ்போர்டில் (Oxford) M. A. பட்டமும், சிறந்தகுரு என்னும் டி. டி. D.D. ப்பட்டமும் இவருக்குக்கிடைத்தன. (Royal Asiatic Society) ராயல் ஏஷியாடிக் ஸொஸைடியாரால் வித்வத் சம்பாவனையாக தங்கப்பதக்கமும் இவர் (Medal) பெற்றார்.

ஆக்ஸ்போர்டில் இவர் வாழ்ந்த காலத்தில் தமிழில் முக்கியமாகிய பொதுநூலாம், நாலடியார், குறள், சமயநூலாம் திருவாசகம்; இவற்றை தமிழ் அச்சுவார்ப்பித்து விசேஷவுரைகளுடன் இங்லீஷில் பாஷாந்தரப் படுத்திப் பிரசுரம் செய்திருக்கிறார். திருவாசகப் பதிப்பில் சைவசித்தாந்தத்தைத் இங்கிலீஷில் மொழிபெயர்த்து தெளிவுற எடுத்துக் காட்டியிருக்கின்றார். அதனைப்படிக்க, இவரது தமிழ்ப் புலமை விளங்கும், இவர் சைவசமயத்தில் மனப்பற்று உடையவர் எனத்தெரிய வரும்.

மொழிகளுக்கு பிறப்பு, பொருள், பிரயோகம் இங்லீஷில் காட்டும் அகராதிகளைப்போல, தமிழிலும் அகாரதி இல்லாமையைக்கண்டு அப்பேர்ப்பட்டத் தமிழ் அகராதி ஒன்றை எழுதி வெளியிட இவர் விடாமல் முயன்றார் இதற்குப் பொருள் உதவி செய்ய மதிராஸ் துரைத்தனத்தார் இணங்கினர், சுமாராய் வேலையும் முடிந்திருக்கிறதாம், இனிமேல் புஸ்தகம் (Clarenden Press) கிளரண்டன் அச்சுக்கூடத்தாரால் கூடிய சீக்கிரத்தில் வெளியாகலாம்.

1908-ம் வரு துவக்கத்தில் இவர் உடல்பிரிய, உடனே பெருமை தங்கிய கவர்னர் அவர்கள் பாலவனத்தம் ஜமின்தார் துரையவர்கள், இன்னும் பலர், சேர்ந்து செய்த, திரவிய சகாயத்தின் பேரில் தோட்டக்காடு ம-ா-ா-ஸ்ரீ ராமகிருஷ்ணபிள்ளையவர்கள், நமது கலாசாலைச்சங்கத்தில் இவர்பேரில் தமிழில் பரிசு அளிக்கும் படி ரூ 1,000 இப்பொழுதுதான் அநுப்பியுளர். இதிலிருந்து கிடைக்கும் வருமனத்தைக்கொண்டு சிறந்த தமிழ்நூல்களை அச்சிடுவோருக்கும் அவைகள் விஷயமாகத் தக்க ஆராய்ச்சி முதலியன செய்வோர்க்கும் தகுதியான பரிசு அளிக்க யோசனை நடந்துவருகிறது.

தாம் பதிப்பித்திருக்கும்திருக்குறள் முகவுரையில் இவர் கிறிஸ்தவச் சமயத்தினர், ஸஹவாஸத்தால் ஆதியில் தமிழர் விக்ரக ஆராதனம் பயனற்றதெனத்தெரிந்து கொண்டதாக அபிப்பிரா

யப்படுகிருர். இந்த அபிப்பிராயம் யுக்திக்குப் பொருந்தினதாகக் காணப்படவில்லை. இவர் கிறஸ்தவராதலால் இவ்வாறு அபிப்பிராயப்பட்டார். ஆயினும் இவருடைய மனது சிறந்த தமிழ் நூற்பயிற்சியால் சைவஸித்தாந்தத்தின் சிறப்பிற்கு ஈடுபட்டிருக்கிறது என்று தெரிய வருகிறது.

The world takes nothing away, and nothing can give;
It has but the seeming—'t is in God that we live

வாழ்வினுல் சிவத்துக்குப்பழுது இல்லை, ஆவது மில்லை,
வாழ்வாவது மாயம், சிவமே வாழ்விணுக்கு உயிராம்.

இவ்வாறு எழுதியவர் ஸதா நமது பரதகண்டத்தைப் பற்றி எண்ணிக்கொண்டே இருந்திருக்க வேண்டும் என்றும், அவர் இறந்தகாலத்தும் நமது சீரிய நாட்டைப்பற்றிய எண்ணம் அவர் மனதை விட்டு அகலாதிருந்திருக்க வேண்டும் என்றும் எமக்குத் தோன்றுகிறது. நமது தேசக்ஷேமத்திற்கு அவர் பட்ட பாட்டிற்கு நாம்போதுமான மட்டும் கைம்மாறு செய்ய முடியாதென்பது எளிதில் விளங்கும்.

போப்துரை சரித்திரத்தை ரங்கூன் Mr. சாமவேல் அவர்கள் தாம் எழுதியுள்ள புத்தகம் ஒன்றில் பின் வருமாறு சுருக்கிச் சொல்லியிருக்கிருர்:—

'தயாதாக்ஷிண்ணிய தைரிய செளரியாதி சகல கல்யாண குணபரிபூரண காருண்ணிய சாக்ஷாத் ஜெகதீசன் பாதாரவிந்தத்தை யனுதினமும் தியானித்து ஞான நிஷ்டையிலிருந்தவரும், அருள்பெற்ற பேர்க்கெல்லாம் ஒளிபெறச்செய்யும் வேதநீதி சாஸ்திரோபதேசம் பீடமாகிய சர்வகலாசாலைகளை இந்தியாவின் பற்பல இடங்களிலுமமைத்து நம்பாலியர்க்கு ஞானாமிர்தத்தை யூட்டிக் கீர்த்திநிரம்பப் பெற்றவரும், சீமையிலிருந்து தென்னிந்தியாவுக்குக் கலெக்டராகவரும் ஐரோபியருக்குத் தமிழ், தெலுங்கு முதலிய பாஷைகளைக் கற்பித்ததேயன்றித் தக்ஷிண நாட்டவர்களின் சன்மார்க்க பக்தி வைராக்கிய சற்குணங்களை வெகுவாய்ப் பிரசுரஞ் செய்து ஆங்கிலேயர் மனதில் நம் நாட்டவரைப்பற்றி நல்லெண்ணம் புகச்செய்து வந்தவரும், சைவசித்தாந்தம் என்னப்பட்ட, இந்து வேதாகம தத்துவநூலின் சமயக்கொள்கைகளை எடுத்து விவரிக்கும் அரியநூல்களையும், மாணிக்கவாசக சுவாமிகள், திருவள்ளுவ நாயனர் முதலிய மகாத்துமாக்களின் திவ்ய சரித்திரங்களையும், இன்னும் திருவாசகம், திருக்குறள், நாலடியார், தனிப்பாசுரத்தொகை, இலக்கண சூத்திர முதலிய அரிய நூல்களையும் ஆங்கிலேய பாஷையில் தமதன்போடு பாடி அக்கிட்டவருமாகிய மகாமகத்துவந் தங்கியவர், இப்போப் துரையவர்கள்.'

டி, ஆர், ராமநாதய்யர். B. A., L. T.

# இயற்கை அற்புதங்கள்

# WONDERS IN NATURE



## 11-எரிமலைகளின் இயற்கை

## VOLCANOES—A DESCRIPTION

எரிமலைகள் தமது சிகரம் முதலிய இடங்களிலிருந்து நெருப்புக் கக்கும் மலைகள். இம்மாதிரியான ஒரு மலையில், அது ஓய்ந்திருக்குங் காலங்களில்,ஏறி நெருப்பு வரும் இடத்தை நோக்கினுல் அது அகன்ற குழியாகக் காணப்படும். அதற்கு எரிமலைவாய் என்று பெயர். அதிலிருந்து ஒரு குழாய் கீழே பூமியின் உட்பாகத்தை நோக்கிப்போகும். எரிமலைவாயையும் அதிலிருந்து கீழேபோகும் குழலையும் நோக்கினுல் அவை ஒருபெரிய பெய்குழலைப் போலக் காணப்படும். அதன் வழியாகத்தான் மலை அக்கினியைக் கக்குகின்றது. சிற்சில மலைகளைப் பரிசோதிக்குங்கால் ஒரே பெரியவாயுள் அநேக சிறியவாய்களும், மலைச்சாரலில் ஏராளமான வெடிப்புகளும் காணப்படும். இவைகளின் வழியாகவும் நெருப்பு வழிவது உண்டு. உலகத்தில் பெரும்பாலும் எரிமலைகள் அதிக உயரமாகக் காணப்படவில்லை. அமெரிக்கா தேசத்திலுள்ள கோடபாக்ஸி

முதலிய இரண்டொரு எரிமலைகளும், கீழ் இந்திய தீவுக் கூட்டங்களில் உள்ள இரண்டொரு எரிமலைகளுமே அதிக உயரமானவை. கொடபாக்ஸி முதலிய எரிமலைகளின் வாய் மிகப் பெரிதாயும் ஸாதாரணமாக மற்றைய எரிமலைகளின் வாய் சிறிதாயும் இருக்கும். எரிமலைகளிலிருந்து நல்ல கந்தகம் வெளிவருவதுண்டு, எரிமலைவாயுள்ளும் அது காணப்படும். அதை எடுக்க அநேகர் எரிமலைக்குழாயுள் இறங்குவதுண்டு. அமெரிக்கா தேசத்தில் ஒரு எரிமலைக்குழாயுள் சில வேலைக்காரர்கள் ஒருக்கால் கந்தகம் எடுக்க இறங்கினராம். அங்கு குழாயின் அடிப்பாகத்தில் அக்கினிகுளம் ஸதா கொதித்துக்கொண்டிருந்ததை அவர்கள் கண்டு அது வீசும் அனலையும் ஒளியையும் பொறுக்கமுடியாது, நரக தர்சனம் கண்டாற்போல வெருண்டு வெளியே முதலில் ஓடிவந்து விட்டனராம். இம்மாதிரி பயங்கரமான வாயும் குழலுமே எரிமலையின் முக்கியமான பாகம். இது ஸாதாரணமான மலைகளில் இருப்பதில்லை.

உலகில் எரிமலைகள் அமைந்திருக்கும் ஒழுங்கை உற்றுநோக்குவோம். உலகில் உள்ள எரிமலைகள் யாவும் ஸமுத்திரக் கரையோரமாகவே அமைந்திருக்கின்றன. இவற்றுள் பெரும்பாலும் பஸிபிக் மஹா சமுத்திரத்தைச் சுற்றியே உள்ளன. அமெரிக்கா கண்டத்தின் மேல் கரை ஓரமாக உள்ள மலைத்தொடர்களிலே தான் உலகில் உள்ள அதிக உயரமான எரிமலைகள் காணப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானவைகள் பயங்கரமான கோடபாக்ஸி, சிம்பரோஸோ, ஓரிஸாபா, போபோகாட்பீடல் முதலியன. இவைகளே பஸிபிக் மகா சமுத்திரத்தின் கிழக்கரையில் காணப்படும் எரிமலைகளுள் முக்கியமானவை. அமெரிக்கா கண்டத்தின் வடமேற்பாகத்திலுள்ள தீவுகளின் வழியாக ஆசியா கண்டத்தின் கிழ்கரைக்கு வரும்வழியில் அநேக எரிமலைகள் வரிசையாக உண்டு. பின்பு ஆசியாவின் கீழ்கரையும் பஸிபிக் மகா சமுத்திரத்தின் மேல்கரையும் இருக்கிற பாகத்தின் வழியாக தெற்கே வந்தால் வழியிலுள்ள ஜபான் தீவுகள், பார்மோஸா, பிலிபைபின் தீவுகள், கீழ் இந்தியத் தீவுக்கூட்டங்கள் முதலியவைகளிலும் எரிமலைகள் அமைந்திருக்கின்றன. இறுதியில் கூறிய தீவுக் கூட்டங்களுள் சேர்ந்துள்ள ஜாவா என்னும் ஒரு சிறுதீவில் சற்றேறக்குறைய 40 எரிமலைகள் இருக்கின்றன. அங்குள்ளவர்கள் இவைகளை ஸம்ஹாரக்கடவுளாகிய சிவபெருமானது வெளிப்படைத்தோற்றம் என்றும், இவைகள் அவரது இருப்பிடம் என்றும் கொண்டு அவைகளுக்கு வந்தனைவழிபாடுகள் செய்கின்றனராம். பஸிபிக் மஹாஸமுத்திரத்தின் மத்தியில் உள்ள தீவுகளில் பெரும்பாலும் ஒவ்வொன்றில் ஒவ்வொரு எரிமலை இருக்கலாம். அவற்றுள் ஸாண்ட்விச்தீவில் ஸதா எரிந்துகொண்டும் கொதித்துக்கொண்டும் இருக்கும் உருகிய மண்கற்கள் நிறைந்த குளம் ஒன்றிருக்கிறது. இவ்வாறு பஸிபிக் மஹா ஸமுத்திரத்தைச் சுற்றியுள்ள எரிமலை ஒழுங்கிற்கே எரிமலைச்சக்கிரம் என்று பெயர். இதில் உள்ளவைபோக உலகிற் சிற்சில இடங்களிலும் எரிமலைகள் காணப்படும். அவையாவன ஐரோப்பாகண்டத்தின் வடபாகத்தில் இருக்கும் ஐஸ்லெண்டுத் தீவிலுள்ள ஹெக்ளா, அக்கண்டத்தின் தென்பாகத்தில் உள்ள ஸிஸிலித்தீவிலிருக்கும் எட்னா, அதன் அருகாமையில் உள்ள தீவிலிருக்கும் ஸ்டார்ம்போலி, தீபகல்பமாகிய இடலி என்ற தேசத்தில் நேபல்ஸ் என்ற நகரத்தின் அருகாமையில் உள்ள விஸூவியஸ் ஆகிய இவைகளே. நமது சென்னைக்கருகில் ஸமுத்திரத்தில் 7½ மைலுக்கப்பால் ஒரு எரிமலை மூழ்கிக் கிடக்கிறதாம். ஐரோப்பாவில் பிரான்ஸ் தேசத்தில் எரிமலைபோன்ற வாயையுடைய சிறுகுன்றுகள் காணப்படுகின்றன. ஆகவே உலகிலுள்ள எரிமலைகள் எங்கிருப்பினும் கடலோரமாகவே ஏற்பட்டுள்ளன.

இவ்வாறு அமைந்துள்ள இவ்வற்புத மலைகள் மூன்று விதமாகக் காணப்படுகின்றன. ஸ்டார்ம்பொலியைப் போன்ற சில மலைகள்

எப்பொழுதும் விடாது எரிந்துகொண்டிருக்கின்றன. இம்மாதிரி மலைகளுக்கு எரியும் எரிமலை என்று பெயர். உலகில் இம்மாதிரியான மலைகள் 270 இருக்கின்றன. இவற்றுள் பஸிபிக் மஹா சமுத்திர எரிமலைச் சக்கிரத்துள் 190 அடங்கி இருக்கின்றன. முற்கூறிய ஸ்டார்ம்பொலி ஐரோப்பாவின் தெற்கிலுள்ள பூமத்யக் கடலின் நடுவில் இருக்கின்றது. அந்தக் கடலுள் கப்பல்கள் பிரவேசித்துவிட்டால் இரவில் ஸ்டார்ம்பொலியின் ஒளியைக் கண்டுகொண்டேயிருக்கலாம். ஆகையால் அதற்கு பூமத்யக் கடலின் தீபஸ்தம்பம் என்று பெயர் வந்திருக்கின்றது. வேறு சில எரிமலைகள் இப்பொழுது எரிந்துகொண்டிராமல், முற்காலத்தில் அநேகந் தரம் எரிந்திருப்பதைக் குறிப்பிக்கும் அடையாளங்களை உடைத்தாய் இருக்கின்றன. அவை பிற்காலத்தில் எந்த ஸமயத்தில் எரிந்தாலும் எரியலாம். இம்மாதிரி மலைகளுக்கு அடங்கி இருக்கும் எரிமலை என்று பெயர். கொடபாக்ஸி, விஸூவியஸ், எட்னு, ஹெக்ளா, பட்டணத்தருகில் உள்ள எரிமலை ஆகிய இவைகள், அடங்கியிருக்கும் எரிமலைகளே. பிற்காலத்தில் எப்பொழுதாவது திடீரென்று இவை எரியத்தொடங்கலாம். மற்றுஞ் சிலமலைகள் பார்வைக்கு எரிமலைபோன்ற வாய்களை உடையனவாய் இருக்கும். இதுவரை எரிந்ததாக ஊகித்தறிதற்குவேண்டிய அடையாளங்கள் இவைகளில் காணப்படுவதில்லை. இவைகளுக்கே அவிந்த எரிமலைகள் என்றுபெயர். பிரான்ஸ்தேசத்தின் மத்தியபாகங்களில் காணப்படும் மலைகளில் அநேகம் அவிந்த எரிமலைகளே.

எரிமலைகள் எரிந்துகொண்டு அக்கினி கக்கும் தொழிலாகிய உற்பேதம் என்ற தோற்றத்தைச் சற்று விவரிப்போம். எரிமலைகளில் உற்பேதம் தொடங்குவதற்குமுன் தூரத்தில் முழங்கும் இடிபோன்ற சப்தமும், பூகம்பமும் உண்டாகும். வரவர இவைகள் அதிகரிக்கும். பின்பு எரிமலை குழலில் அடிக்கடி பீரங்கிபோட்டாற் போன்ற சப்தம் உண்டாகும். உடனே எரிமலை வாயிலிருந்து ஸநமான தூசிக் குவியல்களும், நீராவியணுக்களும் வெகுவேகமாக ஆகாயத்தில் எறியப்பட்டு வெகு உயரம் கிளம்பும். இந் நீராவி உயரப்போய் மழையாக மாறி எரிமலைமேல் இறங்கும். அப்பொழுது இடி, மின்னல்கள் உண்டாகும். எரிமலைவாயின் வழியாக வரும் தூசிக்குவியல் ஸூர்யன்ஒளியைத் தடுக்க, மலையைச்சுற்றிலுமுள்ள காதவழி தூரம் இருண்டுபோகும். இப்பொழுது விவரித்தவை யாவும் விஸூவியஸ் உற்பேதத்தில் ஸாதாரணமாக உண்டாவன. இதற்கு மேலாயும் கொடபாக்ஸி முதலிய அமெரிக்கா எரிமலைகளில் பயங்கரமான தோற்றங்கள் உண்டாகும். அதிக உஷ்ணமான மிகப்பெரிய கற்கள் எரிமலை வாயிலிருந்து வேகமாகப் பெரிய சப்தத்தோடு கிளம்பி ஒன்றோடொன்று அடிபட்டுச் சிதறி வெகு தூரம்போய் விழும். இவைகள் விழுந்த விடங்களில் உள்ள ஊர்கள் தடையின்றி அழிந்துவிடவேண்டியதுதான். இரவில் இந்த குழப்பம் தொடங்கிவிட்டால் இக் கற்களிலிருந்து உண்டாகும் நெருப்பு முதலியன மிகப் பயங்கரமாக இருக்கும். கொடபாக்ஸி சிற்சில ஸமயங்களில் உற்பேத பலத்தால் 7-யானை கனமுள்ள பெரிய கற்பாறைகளை ஒன்பது மைல் ஏறும்படி எறியுமாம். அமெரிக்காவில் உள்ள வேறொரு எரிமலை 36 மைல் உயரம் ஏறும்படி கற்கள் எறியுமாம். இவ்வாறு உற்பேத ஆரம்பத்தில் வெளியாகி மிகுந்த உயரம் கிளம்பும் லகுவான வஸ்துக்களாகிய தூசி முதலியன ஆகாயத்தின் மேற்பக்கத்திலுள்ள காற்றோட்டங்களால் தள்ளப்பட்டு ஆயிரக் கணக்கான மைல்தூரம் போய் அங்குள்ள ஊர்களின்மேல் விழுமாம். சிற்சில ஊர்களில் சில காலங்களில் உண்டாகும் ரக்தமழை மண்மாரி முதலியவற்றிற்கு இம்மாதிரியாகக் காற்றால் தள்ளப்பட்ட எரிமலைத் தூசியே காரணமாய் இருக்கலாம். ஸுமார் 35 வருஷங்களுக்கு முன்பாக ஜாவாத்தீவிலுள்ள 40 எரிமலைகளில் ஏககாலத்தில் உண்டான உற்பேதங்களால்

எழுப்பப்பட்ட தூசி, புகை முதலியவைகளால் நம் பரதகண்டத்தில் ஸூர்யன் மூன்று நாள் நீலமாக இருந்ததாம். சில எரிமலைகளில் உற்பேதத் தொடக்கத்தில் அநேக அடி உயரம் அக்னிஜ்வாலை தோன்றுவது முண்டு.

இவ்வாறு பூகம்பம், இடிமுழக்கம், மழை, மண்மாரி, இருள், கல் எறிதல், அக்கினிஜ்வாலை முதலியவைகளால் எரிமலைச் சுற்றுப்பிரதேசங்கள் கொஞ்சகாலம் அல்லோல கல்லோலப் பட்டபின் எரிமலை உற்பேதமாகிய அக்கினி கக்குதல் தொடங்கும். அப்பொழுது வரவர சப்தம் குறைய நிச்சப்தமாக உருகின மண்கற்கள் பூமியுள்ளிருந்து எரிமலைக்குழாய் வாய்சாரலில் உள்ளவெடிப்பு முதலியவற்றின் வழியாக வழியத் தொடங்கும். இந்த உருகிய மண்கற்களுக்கே அக்கினிக்குழம்பு என்றுபெயர். இது தொடங்கியதும் ஆரம்பக்குழப்பம் அடங்கிக் கொண்டுவரும். அப்பொழுது வெளிவரும் அக்கினிக்குழம்பு வைதரணீ நதி (யமனுலகில் உள்ள அக்கினியாறு) போல தகதகாயமான மாக மிகக்குரூரத்தோடு எரிமலையிலிருந்து ஒடிவரும். இது ஆரம்பத்தில் அதிகவேகமாக ஓடத்தொடங்கி வரவர வேகம் குறைந்து முடிவில் அசையாது நின்றுவிடும். இதுவழிந்து ஒடித்தாக்கும் இடங்கள் எல்லாம் தவிடுபொடிதான். எதுதான் இந்த ஊழித்தீமுன் எதிர் நிற்கும்? அதுபோகும் வழியில் ஊர், நீர்நிலை, மலை, கடற்கரை முதலியவற்றுள் எது அகப்பட்டாலும் அதனால் மூடப்பட்டு அது அழியவேண்டியதுதான். எரிமலையிலிருந்து சொறியும் மண்மாரியும் அக்கினிக்குழம்பும் சேர்ந்து அருகாமையிலுள்ள எல்லாவற்றையும் புதைத்துவிடும். இம்மாதிரிதான் கி. பி. 79-ல் உண்டான விஸுவியஸ் உற்பேதத்தில் அதன் அருகாமையிலிருந்த இரண்டு செழிப்பான பட்டணங்கள் மூடப்பட்டு அழிந்தன. ஆயிரவருஷங்களுக்குப் பின்பு இவ்வூர்கள் வெட்டி வெளியாக்கப்பட்டன. கோரமாய் வழிந்தோடும் அக்கினிக்குழம்பு ஏராளமாக எட்னா உற்பேதத்திலும் ஹெக்ளா உற்பேதத்திலும காணப்படுகின்றது. இதை கண்ணுறுவோருக்கு நரகத்தையே கண்ணுற்றபயம் உண்டாகி மூர்ச்சை வந்துவிடும். இவ்வாறு வழிந்தோடும் அக்கினிக்குழம்பு சீக்கிரம் குளிர்ந்துபோவதில்லை; உள்கூடு 4 அல்லது 5-வருஷம் இருக்கும். மேற்பாகங்கள் குளிருங்கால் அங்கு பிளவுகள் உண்டாகும். அதன்மேல் நடப்பவர்கள் எளிதில் தமது காலடியில் கொதிக்கும் அக்கினிக்குழம்பை பிளவுகள் வழியாகக் காணலாம். சிற்சில அமெரிக்கா எரிமலைகளின் உற்பேதங்களில் மீன்கள் ஏராளமாக வந்து விழுவது வழக்கம். இவை மலையில் உள்ளவைகளே. இதுதான் நிலத்தில் உள்ள எரிமலைகளில் உண்டாகும் உற்பேதங்களின் இயற்கை.

பட்டணத் தருகாமையில் கடலில் மூழ்கிக் கிடக்கும் எரிமலையில் எவ்வாறு பிற்காலத்தில் உற்பேதம் உண்டாகலாம் என்ற சங்கை நமக்குவரலாம். 1866ஆ ஜனவரி மாதம் க்ரேக்க தீவுக் கூட்டங்களில் உள்ள ஓர் தீவின் அருகாமையாய் முழ்கிக்கிடந்த ஓர் எரிமலையில் உற்பேதம் உண்டானது. அநேக பீரங்கிகள் வெடித்தசப்தம் முதலில் உண்டானதாம். கொஞ்ச நாழிகைக் கெல்லாம் அவ்வெரிமலையின் வாயிலிருந்து அக்கினிஜ்வாலை உண்டாகி கடல் நீருக்கு மேல் 15 அடி வரையில் கிளம்பியது. இவ்வாறு 20 நாள் வரையில் இருக்க, கடலில் மிகுந்த குழப்பம் உண்டாயிற்று. அநேக விடங்களில் புகை வேகமாகக் கிளம்பி வெகு உயரம் சென்றது, சப்தம் உண்டாயிற்று, அக்கினிஜ்வாலை கிளம்பியது. இதில் உண்டான அக்கினிக்குழம்பால் ஒருதீவு திடீரென்று கடல் மத்தியில் உண்டாக அருகாமையிலிருந்த தீவொன்று கடலில் மூழ்கிவிட்டது. இவ்வாறு கடலில் மூழ்கிக் கிடக்கும் எரிமலை உற்பேதங்களால் புதியதீவுகள் உண்டாகலாம், இருந்ததீவுபோய் விடலாம், சேர்ந்திருந்த பூமிகள் பிரிந்துவிடலாம், சேராதிருந்த பூமிகள் சேர்ந்துவிடலாம். இம்மாதிரியான மாறுபாட்டைக் கடலிலுள்ள எரிமலைகள் உண்டாக்குகின்றன.

அடுத்த சஞ்சிகையில் எரிமலைகள் உண்டாவதற்குக் காரணம் என்ன என்ற விஷயத்தைப் பற்றி விசாரிப்போம்.

# தேக ஆரோக்கியம்

## HEALTH

---

### "நோயற்ற வாழ்வே வாழ்வு"

யௌவன திசையில் பல மடச்செயல்களைப் புரிந்து முதுமையில் அவற்றைப்பற்றி நினையுந்தோறும் வீண்வருத்தமும் அருவருப்புங் கொள்வது மானிட இயற்கையா யிருக்கிறது. இத்தகைய மடமைகளில் சரீரசௌக்கியத்தை அலக்ஷியஞ்செய்வது ஒன்றாகும். இத் தவறைக்குறித்து யாரேனும் எச்சரிக்கை செய்தாலும் அது பயன்படாமற் போகிறது. நம் தேகக்கருவிகளின் மூலாதாரங்கள் வலுவுடன் இயங்கும்பொழுதும், இந்திரியங்களனைத்தும் இரத்த ஓட்டத்தால் போஷிக்கப்பட்டு வரும்பொழுதும், செல்லும் ஒவ்வொரு நாழிகையும் நம் தேகபலத்தைக் குறைக்கிறதென்பதை நாம் அறிந்து நடப்பது கடினம்; இப்பொழுது இவ்வளவு உறுதியுடன் இறுகியிருக்கும் நாடி நரம்புகளும், இவ்வளவு விரைவுடன் எளிதில் இயங்கும் அவயவங்களும், காலத்தின் கொடிய கைப்பிடிப்பால், தம் வலுக்குன்றி சோர்வடைந்து தடுமாறுமென்பதை நாம் நம்புவதும் துர்லபம்.

உலக வாழ்க்கையின் துன்பங்களைப்பற்றி முறையிடுதல் வீண் என்பதைச் சாதிக்கவேண்டி தத்துவ சாஸ்திரிகள் பல காரணங்களை எடுத்துக் காட்டியிருக்கின்றனர். அதுவிஷயமாய், முறையிடுவோன் வெளியிடும் துன்பங்களைக் கேட்கின்றவர்கள் அவற்றை முற்றும் நம்புவதில்லையென்ற காரணத்தையும் சேர்த்துக்கூற தத்துவஞானிகள் மறந்தனர் போலும். கண்ணீர் சொரிந்து முறையிடுவோரின் நோக்கமென்னவோ யாமறியேம். பிறர் பார்த்து பரிதபிக்கவேண்டும் என்பதானால், விருத்தரும் பலஹீனர்களும் தங்கள் குறைகளைக் கூறிக் கொள்வது பயனற்றது; ஏனெனின், பரிதாபம் உதிக்கப் பரோபசிந்தை அவசியம். ஒரு நோயை அனுபவியாதவர் அந்நோய் தம்மை எவ்வாறு வருத்தும் என்று பாவனை செய்து கொள்வது அசாத்தியம். இவ்விஷயம் யாரும் எளிதில் அறியக்கூடியதே. ஒவ்வொரு மனிதனும் சிறிது ஞாபக சக்தியினால், தான் இளவயதில் விருத்தர்களைக் கண்டு ஏசியதையும், அவர் கூறிய நன்மொழிகளை இகழ்ந்ததையும், அவர் பூண்ட கோபத்தைத் தவறென்று எண்ணியதையும் நினைத்தல் கூடும். ஆனால், அந்தோ, தான் பிறருக்குச் செய்த அவமதிப்பைத் தன் விருத்தாப்பியத்தில் தானே அனுபவிக்க வேண்டிவருகிறதை அவன் அறிகிறான்.

லோபி, திரவியம் சேர்ப்பதைத் தன் இச்சைகளில் ஒன்றாயன்றி தன் வாழ்க்கையின், ஒரே நோக்கமாகக் கருதிவருவதால் எப்படி 'செட்டு' என்னும் நற்குணமும் இகழ்ச்சிக்கு இடமாகிறதோ, அப்படியே நோயாளி தேக ஆரோக்கியமே மற்றெதையும் விட விசேஷமானதென்று எண்ணிவருவதால், சரீர சௌக்கியத்தின்மேல் சிந்தை செலுத்துவதும் நகைப்புக் கிடமாகிறது. இவ்விருதிறத்தாரும் ஒரே வாறாய் மூலத்தை முடிவென்றெண்ணி மதிமயங்குகின்றனர். லோபிகள் செல்வராக மாத்திரம் வேண்டி பணஞ் சேர்ப்பதுபோல் இவர்கள் நோயற்று மாத்திரம் வாழவேண்டி தேகசௌக்கியத்தை நாடுகின்றனர். இவ்வாறு நடந்துவருவதில், அவர்கள், இவ்வுலகத்தில் நாம் அடையக்கூடிய சம்பத்தின் பிரயோஜனமெல்லாம் அதை நல்வழியில் பிரயோகிக்கும் சக்தியை நாம் அடைவதே என்பதை மறந்து விடுகின்றனர்.

வாழ்க்கையின் சுகானுபவத்துக்கு மாத்திரமேயன்றி நம் கடமைகளுக்கும் தேக ஆரோக்கியம் அத்தியாவசியமானது. ஆதலால் தேகத்தைப் பற்றி அஜாக்கிரதையா யிருப்பது மடமை மாத்திரமன்றிபெருங் குற்றமுமாகிறது. சிறிது இன்பத்தை அபேக்ஷித்து பலஹீனத்தையும் வியாதியையும் சம்பாதித்துக்கொண்டும், விளையாட்டின் வெம்மையிலும் களிப்பின் கோலாகலத்திலும் சில வருஷங்கள் அனுபவிக்க விரும்பி முதிர்ந்த அறிவின் காலமாகிய தன் நிரம்பிய வயதெல்லாம் தன் வீட்டறையிலும் படுக்கையிலும் செலுத்திவரும் மனிதன் தனக்குரிய சுகத்தை கெடுத்துக்கொண்டதுமன்றி பொதுஜன சமூகத்தையும் கொள்ளை கொண்டவனாகிறான். ஏனெனில் அவன் தன் பதவிக்குரிய கடமையை நிறைவேற்றுதற்கு வேண்டிய தேகபலத்தைத் தானாகவே போக்கடித்துக் கொண்டு, பொதுஜன சமூகத்துக்குரிய உழைப்பின் தன் பங்காகிய கடமையையும் செய்யத் தவறுகிறான்.

விசேஷ சக்தி அமைந்து இடைவிடாது இயங்கும் மனம், நோயால் பீடிக்கப்பட்ட சரீரத்தில் கட்டுப்பட்டுத் தத்தளிப்பதைவிட பரிதாபமான காக்ஷி வேறில்லை. அத்தகைய மானிடரின் வாழ்நா

ளனைத்தும் வீண் ஆலோசனையிலேயே கழிந்துவிடுகின்றன; அவர் வல்லமை எல்லாம் பயனற்ற ஏற்பாடுகள் செய்வதிலும் வீண் நம்பிக்கைகளிலும் அழிந்து போகிறது; தாம் நினைத்ததைச் செய்து முடிக்கும் சமயம் அவர்களுக்கு நேர்வதேயில்லை. அவர் நாள் தோறும், மறுநாள் செய்யக்கருதியதை நினைந்து களித்து உறங்குகின்றனர்; தாம் இனி யடையப் போகும் கீர்த்தியையும் புகழையும்பற்றி மனோராஜ்ஜியஞ் செய்து தம் ஆவலைத் திருப்திப்படுத்திக்கொள்ளுகிறார்கள்; தாம் பிறருக்குச் செய்யப்போகும் நன்மைகளைக் குறித்து நினைந்து தம் மனதைத் தேற்றிக்கொள்ளுகின்றனர், ஆனால் மறுநாள் பொழுதுவிடிந்தாலோ, உடம்பு பளுவாயிருக்கிறது, மனம் அமைதியின்றி பலவிஷயங்களின்மேல் பரவுகின்றது; தம் அசௌக்கியத்தைவிட்டு வேறு எதன் மேலும் கவனம் செல்வதில்லை.

காலன் எவ்வாறு உயர்வு தாழ்வு வேற்றுமை பாராது எல்லாரையும் கவருகின்றானோ, அவ்வாறே நோயும் எல்லாரையும் சமமாகப் பீடிக்கிறது. நோய் பற்றிய மாத்திரத்தில், உற்சாகத்துடன் பேசும் வழக்கமுடைய மனிதரும் உல்லாசமற்றிருக்கிறார்கள்; கல்வியிற் சிறந்த மகா பண்டிதரும் தம் போதனா சக்தியை யிழந்துவிடுகின்றனர்; தைரியமும் கீர்த்தியும் மறைந்துபோகின்றன; தத்துவம் பேசும் ஞானியும் பேசத்தத்தளிக்கிறான்; மானிடர் அனைவரும் தம் பேதமையையும் எளிமையையும் வெளியிட்டு வருந்தி ஏங்குகின்றனர்.

தேகம் ஆரோக்கியமா யிருந்தாலன்றி மற்றெந்த சௌக்கியமும் அடைந்து சுகப்பட முடியாது; வாழ்க்கையின் சாரமே வற்றிப்போம். எப்படி சூரிய வெப்பமின்றேல், புற் பூண்டுகள், செடி மரங்கள் வளராவோ, அப்படியே தேக சௌக்கிய மில்லாவிடின் மற்றெந்த சுகானுபவமும் உண்டாவதில்லை. இவ்வளவு உபயோகமானதும் அவசியமானதும், தவஞின்றிப் பெற்ற நல்வரன் போன்றதுமான தேக ஆரோக்கியத்தை ஜனங்கள் பெரும்பாலும் புத்தி கெட்டோ, அசட்டையினாலோ, அல்லது தம் தேக திடத்தைப் பரிசோதனை செய்யவேண்டுமென்ற மடத்தனமான இச்சையினாலோ, இழந்துவிடுகின்றனர். அதன் மகிமையை யறியாமலும், அறிந்தால் அதைப் பிறருக்கு வெளிப்படுத்தத் தூண்டும் தம் ஆவலினாலும், ஜனங்கள் தேக ஆரோக்கியத்தை அழித்துக் கொள்ளுகின்றனர். சில வேளை துர்நடத்தையும் தற்செயலும் ஆரோக்கியத்தை ஆண்டு வருகின்றன; சிலவேளை கொண்டாட்டத்துக்கும் விபசாரத்துக்கும் சரீர சௌக்கியம் விலைக்கு விற்கப்படுகிறது.

இன்பநுகர்ச்சியினால் மதிமயங்கியே மானிடர் தம் தேகபலத்தை யிழக்கின்றனரென்று சொல்வதற் கிடமில்லை. உலகத்தின் பற்பல வியாபாரங்களில் பாடுபடுவோரும் பற்பல கலைகளைக் கற்போரும், தங்கள் உழைப்புக்கும் ஜீவனத்துக்கும் ஆதாரமாகிய யாக்கையை அலக்ஷியஞ் செய்கிறார்கள். சிலர் இடைவிடாத சிற்றின்ப நுகர்ச்சியால் திடமிழந்தால், மற்றுஞ் சிலர் மிதமீறிக் கல்வி கற்பதனால் வலிகுன்றி ஆரோக்கியத்தை அழித்துக்கொள்ளுகின்றனர். சிலர் தம் சரீரத்தை அதிகப் பிரயாஸத்துக்கு உட்படுத்தி அதைக் கெடுக்கின், மற்றஞ் சிலர் தேகப்பயிர்ச்சியின்மையால் அதைக் கெடுக்கின்றனர்.

சரீர சௌக்கியத்தை யிழந்தால் சுகவாழ்க்கையின் சுவையே கைத்துவிடும் என்பதை நிரூபிக்க விசேஷ சக்தி வேண்டியதில்லை யெனினும், மதுபானிகளாகிய மாக்களுக்கு நீதி கூறுதல் பயனற்றதாகும். அவர்கள் செய்யும் விகார சந்தடியில் நாம் அவர்களுக்கு ஓதும் உபதேசம் ஏறுமோ? அவர்கள் மதுபான வாழ்க்கையைத் தடுக்க ஞானோபதேசமும் சக்தியற்றது.

மேலும், ஆயிரத்தோடு ஆயிரம் சேர்க்க விரும்பி, ஓய்வின்றி உழைக்கும் மனிதரும் தாங்கள் கருதியதை யடைய நிதானமுடன் செல்லும்படி நாம் வழி காட்டினும், நமது வார்த்தையை லக்ஷியஞ் செய்யமாட்டார்கள். ஆயினும், பணத்தின்மேல் ஆசைவைப்பவர் சாதாரணமாய் தீர்க்காலோசனையும் நிதானமு முடையவர்களாதலால், அவர்களாவது பெரிய நன்மையை நாடி சிறிய நலனைக் கைவிடக்கூடாதாவென்று நினைக்கலாம். செல்வத்தைவிட தேக ஆரோக்கியம் ஆக்ஷேபணையின்றி சிலாக்கியமானதே. ஏனெனின், தேகதிடத்தால் தான் பணம் சேகரிக்கக்கூடும். அன்றியும், ஆயிரக்கணக்காய் பணத்தை வாரியிறைத்தாலும்; வாயுப்பிடித்தத்தின் நீடித்த கொடும் வலியைத் தணிக்கவும், கெட்டுப்போன ஐம்புலக்கருவிகளை ஒழுங்குபடுத்தவும், அவிந்துபோன ஜீரண சக்தியை உயிர் பெறச்செய்யவும் சாத்தியமாகா. தரித்திரம் என்னும் கொடும்புலியின் வாயினின்றும் தப்பிப் பிழைக்க நாம் எத்தனிப்பது நியாயந்தான்; ஆனால் ஒரு எதிராளிக்கு அஞ்சி ஓடுவதில், மற்றொரு பகைவன்

கையில் அகப்பட்டுக் கொள்ளாமலும், நோய் என்னும் கொடியவனைச் சரணமடையாமலும் காத்துக் கொள்ளவேண்டியதும் அவசியமே.

சிலர் கலைகள் கற்பதில் பேராவல்பூண்டு காலக்கிரமமின்றி இரவும் பகலும் உழைத்து வருகின்றனர். இவர்கள் இவ்வாறு செய்தல் பெருந்தவறேயாகும். சரீரசக்திக்கு மீறி வேலைசெய்தால் அதனாலுண்டாகும் பலனைவிட நஷ்டம் அதிகம். இளைப்புக்கும் களைப்புக்கும் சேரவேண்டிய காலத்தை எவனொருவன் தன் உபயோகத்துக்கு வாங்கிக்கொள்ளுகிறானோ அவன் அவ்வளவு காலத்தை மாத்திரமன்றி, கடும் வட்டியுடன் சேர்த்துத் திருப்பிக் கொடுக்கும்படி கட்டாயப்படுத்தப் படுவான். ஏதோ ஒருவாறு அனுபவித்த சில மாதங்களுக்கு பதிலாக பல வருஷங்கள் பலஹீனத்துடனும் வருந்தவேண்டி வரும். அப்படி மனப்பயிற்சியை நாடி உழைப்பவர், அப்பயிற்சி யாக்கையைப் பீடிக்கும் நோயால் குந்தகப்படுவதுமன்றி அபாய மடைகிறதென்றும், பல ஹீனத்தாலும் நோயாலும் உண்டாகும் துக்கம், கோபம் முதலியவைகளால் அறிவே அழிந்து விடுகிறதென்றும் நாளடைவில் அறியினும், அவ்வறிவினால் அவர்கள் பிரயோஜனம் அடையக்கூடாமல் போய்விடுகிறது.

C. சுந்தரமய்யர், B. A.

---

நவம்பர் எரி நட்சத்திரமழை.—இந்மாதத்தில் இரண்டு நட்சத்திரமழை உண்டு. அவை முறையே 13-ம் தேதியிலும், 27, 28 தேதிகளிலும் வருவன. முன்பின்னாக இரண்டொரு நாளுக்குள்ளாகவும் வரலாம். நவம்பர் 13-தேதியில் வரும் மழை ஸிம்மராசியிலிருந்து வருவது போலக் காணப்படும். இந்த மழையில் வரும் நட்சத்திரங்கள் எல்லாம் கிழக்கே இருந்து மேற்கு நோக்கி ஓடுவதால் அதிகப் பிரகாச முள்ளன வாகவும் வேகமாக ஓடுவன வாகவும் காணப்படும். இதற்குக் காரணம் பூமி மேற்குப் பக்கத்திலிருந்து கிழக்கு நோக்கிச் சுற்றுவதே. இந்த மாதம் ஞாயிற்றுக்கிழமை 15-ம் தேதி ஒரு மிகுந்த பிரகாசமான எரி நட்சத்திரம் இரவு ஒன்பதரை மணிக்குக் காணப்பட்டதாம். அது என்போல உள்ளே விளக்கண்டை இருந்தவர்களுக்கு ஒரு பிரகாசமான மின்னலாகத் தோற்றி இருக்கலாம். நான் ஒரு அவுட் என்று எண்ணி அதன் சப்தத்தை எதிர்பார்த்திருந்து சப்தம் வெகு நாழிகை வரை, வந்து எட்டாததால் அதை கவனியாது இருந்து விட்டேன். அந்த ஸமயத்தில் ஒரு பெரிய நட்சத்திர மழை உண்டாய இருக்கலாம். அது இந்தமாதிரி ஒரு பிரகாசமான எரி நட்சத்திரமாகத் தோன்றியது. 13-ம் தேதி நட்சத்திரமழை 33 வருஷத்திற்கு ஒருதரம் ஸிம்மராசியிலிருந்துகிளம்பும். இயற்கை அற்புதங்கள் என்ற பாகத்தில் பின்னர் இந்நக்ஷத்திர மழையின் ஸ்வரூபம் காரணங்கள் இவைகளைப்பற்றி நன்கு விவரிப்போம்.

# பொறுமை

## PATIENCE

அறிவினும் பொறுமையே சிறந்தது. பிடியளவு பொறுமை கூடையளவு மூளையினுங் கனமுள்ளது. பொறுமையை வாழ்த்தாதார் யாரொருவரில்லை; ஆனால் அதிற் பழகிப் பயில்பவரோ சிற்சிலரே. அது எந்நோயையுந் தீர்த்தற்குக் கைகண்ட ஔஷதமாதலின் அதைக் கைக்கொள்ள உலக அனுபவமுள்ளவர் யாரும் உபதேசிப்பார்கள். ஆயின் அவ்வவுஷத மூலிகைகள் வளரும் புலங்கள் தாம் அரியன. காலுந்தலையும் வலித்து உடம்பெல்லாம் குத்தும் நோவும் வருத்தும்பொழுது முக்கி முணகுதல் சகஜந்தான். ஈக்கள் மொய்த்துக் கடிக்கும் பொழுது தலையை யசைக்காத குதிரையுண்டோ? ஓட்டைச் சக்கரம் ஓசை செய்யாமல் ஓடும் வண்டிதானுமுண்டோ? பொறுமையென்னும் பதத்துக்கும் பொருளுக்கும் புவிக்கெல்லாம் பொய்யா விளக்காய்ப் பொலியும் இப்பாரதகண்டத்துள்ளோரும் ஏனையோரைப்போலவே பொறுமையைப் போற்றாராயின் பெரியோருக்கும் சிறியோருக்குமுள்ள ஏற்றத்தாழ்வு என்ன? இந்துமதத்தின் ஏற்றம்தான் எங்கே? இடையனைப்போலவே படைவீரனும் சண்டைக்குப் பின்னிட்டால் அவனைப் பட்டாளத்திலிருந்து பறக்கடித்தலே பயனுடைத்தாம். காட்டுக்களாமரத்தினும் காட்டுமாமரத்தில் கனிகள் கனிசமாய் காய்க்கவேண்டுமென்று எண்ண இடமுண்டு. படுபோர்க்களத்தில்,

"கௌந்தேய! இந்திரியஸ்பர்சங்களே குளிர்
" வெப்பத்தையும் இன்பதுன்பங்களையும் கொடுத்
" துத் தோன்றிமறையுந் தன்மையனவாய் அநித்தி
" யமா யிருக்கின்றன; ஆகையால் பாரத! அவற்
" றைப் பொறுக்கக்கடவாய்"

என்று பகவத்கீதையில் போதித்தருளிய பகவான் பாதகமலங்களைப்பற்றி யொழுகும் பாக்கியம் பெற்றோர் பொறுமை சாதித்தல் பொருந்திய கடமை. 'பல்லைக் கடித்துக்கொண்டு பொறுத்துக் கொண்டிரு' என்பது பெண்டிர்சொல்லும் பழமொழி ஆயினும் 'சிரித்துப் பொறுத்துக்கொள்' என்பது அதனினும் ஏற்றமுடைத்து. உற்றுநோக்கில் உலகத்தில் நாம் செய்யும் துஷ்கிருத்தியங்களுக்குத் தகுந்தபடி கஷ்டங்கள் விளைகின்றன என்பதற்கும்

இல்லை. தோளின்மேல் தொண்ணூறு அடி விழுந்தாலும் துடைத்துவிட்டால் ஒன்றுமில்லை என்று திரிகிறோம். ஆனாலும் துன்பத்துக்குப் பின்விளைவது இன்பமே. மேலும் "பட்டால்தான் தெரியும் பார்ப்பானுக்கு." திரவியந்தேடிக் கொணர்தல் திண்ணமாயின் திரைகடலோடத் தயங்குதல் தகாது.

பொங்குங்குணமுள்ள சூரியர் துன்பங்களுக்கே அன்புடன் நீர்பாய்ச்சி வளர்த்துப் பயிர் செய்து இன்பங்களைக் களைகளாகக் கழிப்பர். விசனங்களை வருந்தி யழையாமலே வாசல்தேடிவரும் வம்பர்கள். அப்படியிருக்க எப்பொழுதும் குறைகூறுங் குணத்தைக்கொள்ளல் அவ்விசனங்களையேற்றி எதிர்கொண்டு வீட்டுக்கு அழைத்துவர வண்டிகளையனுப்புதலாம். மக்களிற் பலர் அழுதுகொண்டே பிறந்து, குறைகூறிக்கொண்டே வாழ்ந்து, மனமுறிந்து சாகிறார்கள். அவர்கள் கசப்புமாத்திரையைக் கடித்துத்தின்பவர்கள். கடிக்காமல் பொறுமையென்னும் ஜலத்தில் ஒருகிண்ணம் வாயில்விட்டுக்கொண்டு மாத்திரையை முழுதாய் விழுங்கும் புத்திமாத்திரம் இருக்குமேல் தாங்கள் சாப்பிட்டது கசப்புமாத்திரையென்றுகூட அவர்களுக்குத் தெரியக் காரணம் இராது. அவர்கள் கண்களுக்குப் பிறர் சுமக்கும் பளுவெல்லாம் இலகுவென்றும் தங்கள் தோளிலேறிய மயில் தோகைக்கட்டே பாரமுள்ளதென்றும் புலப்படும். தங்களுக்குமட்டுமே கஷ்டம் உண்டாகிறதென்பது அவர்கள் தேற்றம்.
அவர்களைக் கேட்டால் தங்கள் வீட்டண்டைதான் வெயிலின் வெப்பம் அதிகம் என்பார்கள். அடிக்கும் வாடைக்காற்றெல்லாம் தங்கள் வாசல் திண்ணையிலேயே என்பார்கள். ஆனால், உண்மையுரைக்கும் அளவில், அவர்களுக்கு இடுக்கண்கள் விளைவிப்பன அவர்கள் ஊழ்வினையல்ல, மனப்பேயே. தாங்கள் சுகம் அனுபவிப்பதாய் எண்ணம்மாத்திரம் கொள்ளட்டும்: அநேகருக்கு ஆத்மானுபவமும் அப்படியே அமையும்.

"இன்னா இயைக இனிய ஒழிகென்று

"தன்னையே தான்இரப்பத் தீர்வதற்கு —என்னை
கொல்" என்ற முதுமொழிப்படி திருப்தியென்னுந் தெண்ணீரைக் கலந்துகுடிக்கும் கஞ்சி அமரர்நாட்டு அமிழ்தினும் இனிதானதே.

வறுமை யெப்பொழுதும் இன்புடைத்தன்று; ஆயினும் அதனினும் கொடியனவும் உண்டு. சிறுபாதுகைகள் காலைக் கடிக்கச்செய்தல் இயல்பே; ஆனால் சிறுபாதங்களில் தரித்தால் கடித்தல் இல்லை. வருவாய் சிறுகினால் ஆசையும் சிறுத்தல் நலம். வறுமையில் இளிவரவில்லை; அதுகண்டு மனம்புழுங்கல் இளிவரவே. சில விஷயங்களில் பணக்காரனினும் ஏழையேமேல். ஏழை வயிற்றுக்குச்சோறு தேடித்திரிந்தால் சோறுகிடைப்பது திண்ணம். ஆனால் சோற்றுக்குப் பசிதேடித்திரியும் பணக்காரனுக்குப் பசி வாய்த்தல் இல்லையாம். ஏழைக்கு வேண்டிய உப்பும், புளியும், அரிசியும், பருப்பும் எளிதிற் கிடைக்கும். வெண்ணெயும் சர்க்கரையும் வெல்லமும் நெய்யும் தேடிச்செல்லவேண்டிய அலுவல் அவன்மட்டில் வேண்டாதாயிற்று. வயிறு நிறைந்தவனுக்கு வெல்லமும் கசக்கும். பசித்தவனுக்கோ புளிங்காடியும் இன்னடிசிலாம். கடும்பாடு படுபவனுக்கே கட்டமைந்த பலமும் ஆரோக்கியமும் உண்டாகும். கோடியைசுவர்யக் குவியல்களினும் ஆரோக்கியமே ஆசைப்படத்தக்கது. நம்மைச் சுகப்படுத்துவது நம்மிடம் இருக்கும் பொருட் குவையல்ல; பொருளை யனுபவிக்கும் பண்பே. பானை நிறைந்த புளிங்காடியினும் சிறு சர்க்கரைக் கட்டியே சுவையுடைத்து. பண்டங்கள் பெருத்திருப்பதனாலேயே பணக்காரராகக்கொள்வதற்கில்லை; அப்பண்டங்கள் பகவான்கொடுத்த பாக்கியம் என்று கொண்டால்தான் பாக்கியசாலி என்பது உண்மை. முழுப்பூசணிக்காயினும் பலாவின் ஒரு சிறு சுளையே மேம்பட்டது. அக்காரம் பாலோடு அடியும் பிடியுமாப் அருந்துதலினும் அன்போடு அளாவிய கூழும் அவாவறுத்தலோடு கலந்த அடகுமே ஆக்கம் அளிப்பவாம். குடிக்கக் கஞ்சிகாய்ச்சச் சிறு சுள்ளிகள் போதுமாயிருக்க காட்டிலுள்ள கட்டையெல்லாம் கொள்ளவில்லையே என்று ஏக்கமுறுதல் ஏழைமை.

துன்பங்கள் அடுத்துவருங்காலத்தில் கடவுளைக் கண்டபடிக்கெல்லாம் நோதலில் உறுபயன் ஒன்றும் இல்லை. அப்படி நோதல் வசியின்மேல் காலையுதறியுதைத்துப் புண்ணாக்கிக்கொள்வதை யொக்கும். கடுங்காற்றுக்கு மரங்கள் வளைந்து நிமிர்தல்போல நாமும் துன்பங்களுக்குப் பொறுத்து நிமிர்தல் வேண்டும். ஆடு தான் கதறும் ஒவ்வொருவேளையும் ஒருவாய் உணவை யிழத்தல்போல நாமும் குறைகூறும் ஒவ்வொருவேளையும் கடவுளின் அனுக்கிரகத்தை இழந்தவர்கள் ஆகிறோம். குறைகூறல் என்றைக்கும் நல் வியாபாரமன்று; அதில் ஊதியம் ஏதும் இல்லை. பொறுத்தலோ பொன்னும் பூஷணமும் பொலிவது. பொறுத்தவரே பூமியாள்வார். மழையும் மந்தாரமும் கழிந்த மேல் பகலவன் ஒளி பளிச்சென்று பரக்கின்றது. நமக்கு வேண்டா விருந்தான கருங்காங்கைக்கும் பறந்து ஓடிப்போகச்

சிறகுகள் உண்டு; பனிக்காலமேகப் பலம்பூவிரைக்கும் வசந்தகாலம் விரைவில் வரும். காரிருளுக்குப் பின்சூரியோதயமே வரும். ஒரு துறை மூடப்பட்டிருந்தாலும் வயிறுவளர்க்க வேறுவழி கடவுள் காட்டுவார். நன்செய் விளையாவிட்டால் புன்செய் விளையும்; ஒவ்வொரு பொருளுக்கும் ஒருபக்கம் பளபளப்புண்டு. கடவுளோ எங்கும் நிறைந்திருக்கிறார். எவ்வளவு கஷ்டகாலத்திலும் எங்கேயாவது ஒரு மூலையில் ஒடி ஒதுங்க ஏற்ற இடம் இருக்குமேயொழிய இல்லாமற்போகாது. அப்படியில்லாவிட்டாலும் கஷ்டங்களைக் கடந்துசெல்லக் கடவுள் ஆற்றல் அளிப்பர். ஆகையால் பொறுமையைக் கைக்கொண்டு கஞ்சி குடித்துக் காலத்தை இனிது செலுத்துவோமாக. துஷ்டர்களோடும் பேராசைக்காரரோடும் சேர்ந்து வீணுக்குக் கடவுளை நொந்து பாவத்தை ஈட்டுதலினும் இது எத்தனையோ மேலானது. பொறுக்கமுடியாத் துன்பத்திற்கு மருந்து பரம்பொருளின் ஆணைக்குப் படிந்திருப்பதே. தமக்கமுடியாத பாரத்தை எடுத்துத்தான் தொலைக்கவேண்டும். பாலும், தெளிந்தேனும் பாகும், பருப்பும் கிடைக்கவில்லையேனும் பழங்கஞ்சியாவது கிடைத்ததற்குப் பரம்பொருளை மனதார வாழ்த்தல் வேண்டும். "அப்படித்தானிருந்துதீரவேண்டும்" என்பது கடித்தற்குக் கடினமான கொட்டையேனும் உள்ளிருக்கும் பருப்பு உண்மையில் இனிப்புள்ளதே. கடவுளைக் கடைப்பிடித்துள்ளோர்க்கு வரும் கஷ்டங்கள்கூடப் பின்னுக்குச் சுகத்தை விளைவிப்பதற்கே. விசும்பினின்று வீழும் எதுவும் என்றைக்கேனும் நிலத்துக்கு நன்மை விளைவிப்பதே. அதுபோலவே கடவுள் விதிக்கும் எதுவும் நமக்கு நன்மைபயத்தற்கே.

சுபாவத்தில் நாம் எவரும் கஷ்டத்தை விரும்புதல் இல்லை. புலிக்கும் பசுவுக்கும் தோழமை உண்டாகுமேல் மனிதனுக்கும் துன்பங்களில் விருப்பமுண்டாகலாம். ஆனால் துன்பங்களையேற்று வணம்புகுந்த பாண்டவரும், இராமசந்திரனும், துன்பங்களின் ஏற்றத்தைச் செய்விதில் விளக்கியுள்ளார்கள்.

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
"யிகழ்வார்ப் பொறுத்த றலை"

என்றும்

"ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்
"பொன்றுந் துணையும் புகழ்" [குப்

என்றும்

வாய்மைகூறினர் பொய்யா மொழியார்.

ஐ. வே. சுப்பிரமணியப்.

# மக்பெத் கதை

## STORY OF MACBETH

இங்கிலாந்துதேசத்திற்கு வடக்கிலுள்ள ஸ்காட்லண்ட்தேசத்தில் ஸுமார் 1000 வருஷங்களுக்கு முன் டங்கன் என்ற அரசன் அரசாண்டுவந்தான். அவனுக்கு இரண்டு பிள்ளைகள். அவர்களுள், மூத்தவனுக்கு மால்கம் என்று பெயர். அவ்வரசன் மிகுந்த மிருதுவான சித்தம் உடையவனாதலின் பிரஜைகளுக்கு அவனால் மிகுந்த ஸுகம் உண்டானது. அதனால் அவனுக்கு ஸாந்மீகீ என்ற பெயர் ஏற்பட்டது. அவனுக்கு மக்பெத், பாங்கோ என்ற இரண்டு தளகர்த்தர்கள் உண்டு; அவர்களுள் மக்பெத் அவனுக்குக் கிட்டின பந்து, மிகுந்த வல்லமையுடையவன். அவனுக்கு கிளாமிஸ் பிரபு என்ற பட்டப்பெயர் உண்டு. அவனுக்கு மேலானநிலையில் காடார் பிரபு ஒருவனிருந்தான்.

டங்கன் நெறிவழுவாது அரசாண்டுவருகையில் அருகாமையில் உள்ள நார்வேதேசத் தரசன் ஸ்காட்லண்ட்மேல் படையெடுத்துவர, அவனோடு காடார் பிரபு சேர்ந்துகொண்டான். அப்பொழுது அரசன் உத்தரவின்படி மக்பெத்தும் பாங்கோவும் நால்வகை ஸேனைகளோடு சென்று யுத்தந்தொடங்கி, அன்றுமாலைக்குள் நார்வே அரசனை தோற்று ஓடும்படிசெய்து, காடார் பிரபுவையும் கொன்றுவிட்டார்கள். மக்பெத்துக்கும் அரசனுக்கும் காடார் பிரபுவின் நம்பிக்கைமோசம் தெரியாது. ஆனால் யுத்தத்திலிருந்து அடிபட்டு ஓடிய ஒரு ரணவீரன் டங்கனிடம் யுத்தகளத்தில் நடந்தவிசேஷங்களையும், காடார் பிரபுவின் நம்பிக்கைத் துரோகத்தையும், மக்பெத்தின் போர்ச்சிறப்பையும் எடுத்துச்சொல்ல, மேலான காடார்பிரபு என்ற பெயரை மக்பெத்திற்கு இட்டு அழைக்கும்படி இரண்டொரு பிரபுக்களை அவன் உடனே யுத்தகளம்நோக்கிப் போகும்படி அனுப்பிவிட்டான்.

இதற்குள் மக்பெத்தும் பாங்கோவும் யுத்தகளம் விட்டு ஸாயங்காலவேளையில் ஊர்நோக்கித் திரும்பிவிட்டார்கள். வரும்வழியில் ஒரு சம்பம்புல் வெளியில் மூன்று கருத்த கோரரூபங்கள் அவர்கள் கண்ணில் பட்டன. அவைகள் பெண்ணுருப்போலவும், தாடி உடையனவாயும், கிழவிகள் போலவும் காணப்பட்டன. இவைகளின் ரூபவைசித்திரியத்தைக்

கண்டதும் பாங்கோவிற்கு ஆச்சரியமுண்டாக அவைகளை நீங்கள்யார் என அவன் நிர்ப்பயமாக வினவ, பேசாதே என்றுபொருள்படும்படி அவைகள் குச்சி போன்ற தமது விரல்களை தம் வாயின்மேல் வைத்தன. அப்பொழுது மக்பெத் அவைகளைப் பேசும்படி கேட்க அம்மாயினிகளுள் ஒன்று 'கிளாமிஸ்பிரபுவே வாழ்க!' என்றும், இரண்டாவது 'காடார்பிரபுவே வாழ்க!' என்றும் மூன்றாவது 'நீ அரசனாகி வாழ்வையே!' என்றும் மக்பெத்தைநோக்கி ஆசீர்வதித்தன. அப்பொழுது பாங்கோ விளையாட்டாக, 'என் தோழனுக்கு மாத்திரம்தானா இவ்வளவு வாழ்வும்? எனக்கொன்றுமில்லையா? உங்களுக்கு ஜோஸ்யம் தெரியுமாகில், உங்கள் வார்த்தையின் குறை குணங்களை மதியாத எனக்கு என்னவரப்போகிறது சொல்லுங்கள் பார்ப்போம்?' என்றான். அப்பொழுது ஒரு மாயினி 'மக்பெத்தைவிடக் குறைவுதான், ஆனாலும் உனக்கு மேன்மையுண்டு என்றும்' இரண்டாவது, 'நீ அவ்வளவு ஸுகியாகமாட்டாய் ஆயினும் உனக்கு நிரம்ப ஸுகம்உண்டு,' என்றும் மூன்றாவது, 'நீ, அரசனாகாவிட்டாலும் நீ அரசர்களைப்பெறுவாய்,' என்றும் விடுகதையைப்போலக் குறிச்சொல்லிவிட்டன. அப்பொழுது தான் கிளாமிஸ் பிரபுவென்று அக்கிழங்கள் எவ்வாறறிந்தன என்ற ஆச்சர்யம் ஒருபக்கம், காடார் நல்ல பிரபுவாக இருக்க தனக்கு அந்தப்பெயர் எவ்வாறு வருமென்ற ஸந்தேகம் ஒரு பக்கம், அரசன் நிலை தனக்கு ஒருக்காலும் வாராது என்ற நிச்சயம் ஒருபக்கம், கிடந்து வருத்தத்தை உண்டாக்க இவைகளின் உண்மையை மேலுங் கேட்டறிய மக்பெத்திற்கு ஆசை உண்டாயிற்று. அதற்குள் மாயினிகள் மறைந்தன. பாங்கோ 'நீர்க் குமிழிபோல இவைகள் மறைந்துவிட்டன' என்று ஸாதாரணமாகப் பேச, மக்பெத் ஆழ்ந்த யோசனையோடு 'உனக்கென்னப்பா! உன் பிள்ளைகள் அரசர்களாவார்கள்' என்று மனம்பதைத்துச் சொன்னான். அதற்கு பாங்கோ 'நீயே அரசனாகப்போகிறாய் அப்பா!' என்று பரிஹாஸஞ்செய்து வாய்மூடும் முன் டங்கன் அனுப்பியிருந்த பிரபுக்கள் வந்து மக்பெத்திற்கு காடார்பிரபு என்ற பட்டத்தைக் கொடுத்து அதன் வரலாற்றை எடுத்துரைத்தார்கள். ஸுகத்திலிருப்பவர் மனம்பித்து, அதிலும் மக்பெத்துக்கு வரவேண்டிய சிறப்பு இன்னும் மேலானதாக இருக்கிறது. உடனே 'அரசனாவோம்' என்ற எண்ணம்வர, பாங்கோவைநோக்கி 'உன் பிள்ளைகள் அரசர்களாவார்கள் என்பதற்கு என்ன ஸந்தேகம்'? என்றான். தன் நண்பன் மாயினிகளின் ஜோஸ்யத்தின் வாய்ப்பட்டு வீணே கொடிய தொழிலில் இறங்கிவிடுவான் என்று பயந்து 'மாயினிகள் வாக்கை நம்பி ஒன்றுஞ் செய்துவிடாதே. அவைகள் உன்னை எளிதில் மீளாநரகிற்கு ஆளாக்கும்' என்று எச்சரிக்கைசெய்தான். இதைக்கேட்டும் மக்பெத் மனம் மாயினிகளின் வாக்கைவிட்டு திரும்பவே யில்லை. ஸாத்மீகியாகிய டங்கனிடமிருந்து அரசாட்சி எவ்வாறு தனக்குவரும் என்ற எக்கம் அவனுக்கு பிடிக்க, ஒவ்வொரு ஸமயங்களில் டங்கனைக் கொலைசெய்தே அதைப் பெறவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. முதலில் அது அவனுக்கு பயங்கரமாகத்தோன்ற ஒருவாறு அதைத் தள்ளப் பார்த்தான். அது மறுபடியும் எழ அவன் மனதில் குழப்பம் பிறந்தது.

இந்த மனக்குழப்பத்தை வெளிக்காட்டாது மறைத்துக் கொண்டு மக்பெத் டங்கன் ஸபைக்கு பிரபுக்களால் வழிகாட்டப்பட்டுவந்தான். அவன் உள்ளே வந்ததும் டங்கன் காடார்பிரபுவின் கொடிய நடத்தையைப்பற்றி 'கொடியவரது அகத்தை முகத்திற்காண எப்படிமுடியும்? அவன் (காடார்பிரபு) இப்படி இருப்பான் என்று யார்தான் எண்ணியிருப்பார்கள்?' என்று சொல்லி வாய்மூடும் தருணமாக இருந்தது. இந்த ஸமயத்தில் வந்த மக்பெத்தைக் கண்டு டங்கனுக்கு ஸந்தோஷம் உண்டாக அவன் அவனை மிகக் கொண்டாடினான். பின்பு பாங்கோவின் வல்லமையைப் புகழ்ந்துவிட்டு அந்த ஸபையிலேயே டங்கன் தன் பிள்ளை மால்கமிற்கு இளவரசுப் பட்டங் கட்டினான். இந்தக் கோலாஹல ஸங்கதியின் பின்பு டங்கன் மக்பெத்தைநோக்கி 'உன் வீட்டிற்கு நாங்கள் எங்கள் பரிவாரங்களோடுவந்து உன்னையும் உன் மனைவியையும் களிப்படுத்துகிறோம்' என்று ஆஞ்ஞாபிக்க, மக்பெத் அரசனுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யத் தனது அரண்மனை நோக்கிப் புறப்பட்டான். போகையில், அவனுக்கு 'டங்கனை இனிமேல் கொலைசெய்தாலொழிய மாயினிகள் சொல்லியபடி எனக்கு இராஜ்யம் கிடைக்காது' என்ற எண்ணம் திடப்பட்டது.

இவன் தன் அரண்மனைக்குப் போவதற்கு கொஞ்சம் முன்னமே தன் மனைவிக்கு ஒரு ஆள்மூலமாக மாயினிகள் விஷயத்தையும் தன் அபிப்பிராயத்தையும் எழுதி அனுப்புவித்திருந்தான். மக்பத் மனைவிக்குத் தன் கணவன் குணம் நன்றாகத் தெரியும். அவனுக்குக் கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை

என்பதுபோல டங்கனைக்கொன்று அரசாளவும் ஆசை, கொலைத்தொழிலால் கெட்டபேர் வரக்கூடாதென்றும் ஆசை என்பது அவள் அறிந்த விஷயமே. மாயினிகள் ஸங்கதியை அவள் அறிந்தது முதல் எப்படியாவது தன் கணவன் இராஜ்யம் அடைந்து ஸுகிக்கவேண்டுமென்ற ஆவல் அவளுக்கு மேலிட்டது. அவன் கொலைத்தொழிலுக்கு அஞ்சாது இருப்பதற்கு தான் வேண்டுமான அளவு புத்திசொல்லி அவன் மனதை திடப்படுத்துவதாக அவள் தீர்மானித்துவிட்டாள். இப்படி இருக்கையில் ஒருதூதன் ஓடிவந்து டங்கன் அன்றிரவு அங்கு விருந்தாக வரப்போகிற ஸங்கதியைத் தெரிவித்தான். உடனே அன்றிரவே கொலையை மக்பெத்மூலமாக நடத்திவிட்டால் நலமாக இருக்குமென்று அவள் தீர்மானித்துவிட்டாள். இதுதான் மக்பெத்தை ஸுகப்படுத்தும்வழி என்று அவள் அறியாமையால் எண்ணி இருந்தாள். இந்த பாபத்தின் பலனை அவள் பின்பு அனுபவிக்கவேண்டிவந்தது. இதற்குள் மக்பெத்தும் அங்கு வந்துவிட்டான். உடனே அவள் தனது தீர்மானத்தை அவனுக்குத் தெரிவித்தாள். பின்பு அன்றிரவு அவர்கள் டங்கன்விஷயத்தில் மிகுந்த மரியாதையாய் இருப்பதுபோல வேஷம்போடவேண்டிய விஷயத்தைப்பற்றிப் பேசினாள்.

இதற்குள் டங்கனும் அங்கு வந்துவிட்டான். மக்பெத்தும் அவன் மனைவியும் தாம் கொண்ட கருமம் முடிப்பதற்காக மிகுந்த அன்பு உடையவர்போல நடித்தனர். அப்பொழுது டங்கன் சாப்பாட்டிற்காக வேலைக்காரர்கள் சாப்பாட்டுக்கூடத்தில் ஓடியாடி வேலைசெய்துகொண்டிருந்தார்கள். டங்கன் வேறோரிடத்தில் காற்று வாங்கிக்கொண்டு உல்லாஸமாக இருந்தான். இந்த ஸமயத்தில் மக்பெத் தனிமையாக ஓரிடஞ்சென்று 'கொலையோடு எல்லாம் முடிந்து ஸுகம் மாத்திரம் உண்டாகும் ஆகில் இக்கொலையைச் செய்வது நலம். ஆனால் இதைச் செய்துவிட்டபின்பு நமக்கு என்ன கெடுதிவருமோ? டங்கனே நமக்கு உறவு. நான் அவனது பிரஜைகளுள் ஒருவன். எப்படிநான் அவனைக்கொலை புரிவது? மேலும் இங்கு அவன் அதிதியாக வந்திருக்கிறான். அவனைக் காக்கவேண்டியது என் கடமையாகவிருக்க நான்எப்படி அவனைக் கொல்லத் துணிவேன்? மேலும் அவனே ஸாத்மிகி. அவனைக் கொன்றால் எல்லோரும் அவன்விஷயத்தில் துக்கம் பாராட்டி உருகுவர். அப்பொழுது எனக்கு என்ன ஸுகம்? ஆசையால் கொலைசெய்யத்தக்க முகாந்திரங்கள் ஒன்றும் காணோமே. ஆனாலும் எனக்கு இருக்கும் பேராசைமாத்திரம் கட்டுக்கு அடங்காதுபோலக் காண்கிறதே'! என்று எண்ணமிட்டுக் குழம்பிக்கொண்டிருந்தான். அந்த ஸமயத்தில் அங்கு தற்செயலாய் அவன் மனைவி வந்து அவனுக்கு ஸுகம் உண்டாக்கவேண்டும் என்ற ஆவலோடு அவனைக்கொலைசெய்யத் தூண்டினாள். அவன் மனச்சஞ்சலத்தை இகழ்ந்துபேசி, தான் ஒரு கொடியகாரியம் செய்தே தீரவேண்டுமென்று தீர்மானித்திருந்தால் அதை எப்படியாவது செய்துமுடிக்க, தனக்கிருக்கும் தைரியங் கூட அவனுக்கு இல்லையென்று பரிஹாஸஞ்செய்தாள். பின்பு டங்கனைக்கொன்று ரக்தத்தை அவனருகே தூங்கும் காவலாளர்களின் கன்னத்தில் தடவிவிட்டால் எல்லா ஸந்தேகமும் அவர்கள் மேல் போக, தாம் ஸுகமாக வாழலாம் என்பதாகவும் அதற்காக காவலாளிகளுக்கு அன்றிரவு அதிக சாராயங் கொடுப்பதாகவும் சொன்னாள். தன் கொலைத்தொழிலை மறைத்து ஸுகம்பெற வழிஅறியாது மயங்கிய மக்பெத்திற்கு இது நியாயமாகப் பட அவன் கொலைசெய்வதாகத் தீர்மானித்துவிட்டான்.

டங்கன் சாப்பாடு முதலியன நடந்தன. அந்த ஸமயத்தில் தனக்கு வந்த ஸந்தோஷத்தால் அவன் மக்பெத் மனைவிக்கு ஓர் வைரம் வெகுமதிகொடுத்தான். அவள் மிகுந்த விநயமுடையவள்போல நடித்தாள். கொஞ்ச நாழிகைக்கெல்லாம் டங்கன் பள்ளியறை சென்றான். காவலாளர்கள் இருவரும் மக்பெத் மனைவி அன்புடன் அதிகமாக அளித்த சாராயத்தை வயிறுவீங்கக் குடித்துவிட்டு அரசன் அரைக்கு எதிர் அரையில் வந்து சாய்ந்தனர். மக்பெத் மனைவி நடுநிசியில் மணி அடிப்பதாகச்சொல்ல மக்பெத் தூக்கம்பிடிக்காதவனாக வெளியேவந்து முற்றத்தில் பாங்கோவைக்கண்டு வெகுநாழிகை மாயினிகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தான். இதற்குள் எங்கே தன் கணவன் பயத்தால் கொலைசெய்யாது வீண்பழிக்கு ஆளாகிப் பின் வருந்தப்போகிறானோ என்ற ஸந்தேகம் மக்பெத் மனைவிக்கு உண்டாக அவளே காடாரியை எடுத்துக்கொண்டு டங்கனைக் கொல்வதாகப் புறப்பட்டாள். என்ன ஆவலிருந்தாலும் பெண்தானே! டங்கன் படுக்கையண்டை போனதும் அவன் முகத்தில் தன் தகப்பன் முகஜாடை இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. கொல்ல மனது வாராமல்போக அவள் திரும்பிவிட்டாள். இதற்குள் நடுநிசியாக அவள் பரபரப்புடன் மணியை

அடித்தாள். அப்பொழுது மக்பெத் முற்றத்தில், பாங்கோ போய்விட, தனிமையாக இருக்க, அப்பொழுது ஒரு கத்தி முனையிலிருந்து ரத்தம் சொட்டுவது போன்ற உறு வெளித் தோற்றத்தைக் கண்டு பயந்து கொண்டிருந்தான். கொஞ்சநாழிகையில் அவன்தேறிவர கடுமிசியின் பயங்கரம் அவனுக்குத்தோன்றியது. இத்தருணத்தில் அவன்மனைவி அடுத்த மணி காதில் பட வேகமாக டங்கன் பள்ளிஅறைசென்று அவனை ஒரே வீச்சாய் வீசிக்கொன்றான். அப்பொழுது பிரக்ஞை தவறியிருந்த காவலாளிகளில் ஒருவன் 'கொடுங்கொலை' என்று உளறினன். மற்றவன் சிறித்தான். முன்னவன் 'கடவுள் கிருபை கூர்வராக' என, மற்றவன் 'ததாஸ்து' என்றான். இருவரும் விழுந்து உறங்கினர். உடனே மக்பெத் 'ததாஸ்து' என்று சொல்ல முயன்றான். அவன் கொடியபவிலை அவனை அவ்வாறு சொல்ல விடவில்லை. இம்மாதிரியான விஷயங்களைக் கண்டு பயந்து நடுநடுங்கிக்கொண்டு கத்தியுங்கையுமாய் மெதுவாகத் தன் மனைவியிருக்கும் இடம்நோக்கி வருகையில் அவன் காதில் 'மக்பெத் தூங்குபவரைக் கொன்றதால் அவனுக்கு தூக்கம்பிடிக்காது' என்ற சப்தம் கணீர் என்று விழுந்தது. இதைக்கேட்டதும் பயம் அதிகமாக மக்பெத் கேசாதிபாதபரியந்தம் நடுங்கிக்கொண்டு தன் மனைவி முன்வந்து நின்றான். அப்பொழுது அவளும் எங்கே நமது கணவன் கொலை செய்யாது திரும்பிவிடுகிறாரோ என்று குழம்பிக்கொண்டிருந்தாள். மக்பெத்தைக் கண்டதும் அவள் பயந்தெளிந்தது. அவன் தான் கேட்டவைகளைச் சொல்ல அவள் கத்தியை காவலாளிகள் பக்கத்தில் வைத்து அவர்கள் கன்னத்தில் ரக்தத்தைப் பூசிவிட்டு வரும்படி அவனை ஏவினள். அவன் மறுபடியும் போகப் பயப்படுவதைக்கண்டு அவனைக் குற்றங்கூறிவிட்டு, அவளே கத்தியைக்கொண்டுபோய்ச்செய்யவேண்டியவைகளை எல்லாம் செய்தாள். இவள் போய் இருக்கையில் பொழுதுவிடியத்தொடங்க வாயிலில் யாரோ கதவைத்தட்டினார்கள். ரக்தமும் கையுமாக இருந்த மக்பெத்துக்கு பயம் அதிகரித்தது. இதற்குள் அவன் மனைவிவர இருவரும் கைகளை ஜாக்கிரதையாகக் கழுவிக்கொண்டு இரவு உடுப்பைப் போட்டுக்கொண்டு ஒன்றும் அறியாதவர்கள் போல நடித்தனர்.

இப்படி இருக்க வாயிலில் இருந்த வாயிற் காப்போன் தூங்குங்கால் தான் நரகவாயில் காப்போனாகவும், அங்கு ஒவ்வொரு பாபிகளாக உள்ளேவிடும் அதிகாரத்தில் இருப்பதாகவும் ஸ்வப்நம் கண்டு கொண்டிருந்தான். கதவை இடிக்க இடிக்க அவனுக்குத் தான் ஒவ்வொரு பாபியாக உள்ளே விடுவதாகத்தோன்றிக்கொண்டிருக்க, கதவைத்திறக்காமலே அவன் ஸ்வப்னம் கண்டுகொண்டு வெகு நாழிகை இருந்து விட்டான். வெகுநாழிகைக்குப் பின்பு சப்தம் அதிகமாக, விழித்துக்கொண்டு அவன் கதவைத்திறக்க, மக்டப் பிரபுவும் வேறொரு பிரபுவும் உள்ளே நுழைந்து மக்பெத்தைப்பற்றி விசாரித்தனர். அப்பொழுது மக்பெத் வெளியே வந்து சேர்ந்தான். அதிகாலையில் தன்னை வந்து சீக்கிரம் எழுப்பும்படியாக அரசன் தனக்கு கட்டளை யிட்டிருப்பதாக மக்டப் சொல்ல மக்பெத் அவனை அரசன் பள்ளி அறைக்கு அழைத்துப் போவதாகச் சொன்னான். 'வீண்சிரமம் உமக்கு எதற்கு? என்வேலையை யானே செய்கிறேன்' என்று மக்டப் அரசன் பள்ளியறை சென்று அங்கு நடந்திருந்த அலங்கோலத்தைக் கண்டு நடுங்கிப்போய் தேகம் தெரியாதவனாக 'கொலை! கொடுங்கொலை!' என்று கதறிக்கொண்டு ஓடிவந்தான். மக்பெத் ஒன்றும் தெரியாதவனைப்போல மற்றப்பிரபுவை அழைத்துப்போய் பார்த்துவிட்டு மிகுந்த துக்கத்தில் ஆழ்ந்தவன்போல வீரிட்டு அழுதுகொண்டு மக்டப்பிடம் வந்துசேர்ந்தான். இதற்குள் மக்டப்பின் தடபடலாய் அபாயமணி அடிக்க எல்லோரும் வெருண்டெழுந்து வந்து விட்டனர். மக்பெத் மனைவி ஸங்கதி கேட்டதும் மூர்ச்சைபோனாள்! பாங்கோ மனதார உருகினான். மால்கம் பாவம்! மதிமயங்கி நின்றான். எல்லோரும் காவலாளர்களே கொன்ற கொடியவர் என்று அப்பொழுது தீர்மானித்தனர். மால்கம் பயத்தால் இங்கிலாந்திற்கு உடனே ஓடிப்போய் விட்டான். மற்றைப் பிள்ளை அயர்லாண்டிற்குப் போனான். ஆகவே பட்டத்திற்கு உரியவர் ஒருவரும் இல்லாமற்போக மாயினிகள் வாக்கின்படி மக்பெத் அரசனானான். முதலில் எல்லோரும் காவலாளர்களே டங்கனைக் கொலை செய்தவர்கள் என்று எண்ணியிருந்தபோதிலும் வர வர கொலையால் அதிக நன்மையை அடைந்தவன் மக்பெத் ஆகையால் அவனே கொலைக்குக் காரணமாக இருந்திருக்க வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டனர்.

இனிமேல் இக்கொடுந் தொழிலால் மக்பெத் பட்டபாட்டை அடுத்த ஸஞ்சிகையில் விவரிப்போம்

# குமார ஸம்பவம்
## BIRTH OF KUMARA

பண்டித நடேச சாஸ்திரியாரால்மொழிபெயர்ப்பு

16. இவ்வாறு தேவர்கள் வெகு உண்மையாகவும் மனப்பூர்வமாகவும் தோத்திரம் பண்ணினதை பிரமதேவர் கேட்டு அவர்களுக்கு அனுக்கிரகம்பண்ண விரும்பியவராய் பின்வருமாறு மறுமொழி சொல்லலானார்.

17. வெகு புராணபுருஷராய் கவிதாவாயிருக்கும் அந்தப்பிரமதேவருடைய நான்கு வாய்களாலும் சொல்லப்பட்ட சொற்கள் நான்கு அடங்கு பயன் அமைந்தவைகளாய் வெளிக்கிளம்பின.

18. எல்லாவித பல பராக்கிரமமும் பொருந்திய தேவர்களே. உங்கள் அதிகாரங்களை உங்கள் சாமர்த்தியத்தால் நீங்கள் அடைந்து இப்பொழுது ஒரேகாலத்தில் இங்குவந்திருக்கும், நீண்டகைபடைத்தவர்களே! உங்கள் வரவு நல்வரவாகுக.

19. ஏ, தேவர்களே! பனியால் மறைக்கப்பட்டிருக்கும் நக்ஷத்திரங்கள் காந்தி குறைந்திருப்பதுபோல் ஏன் உங்கள் முகங்கள் முன்போல இயற்கையான காந்தியுடன் விளங்கவில்லை.

20. தேவேந்திரனுடைய வச்சிராயுதம் காந்தி குன்றி மின்னுமலிருக்குங் காரணத்தால் முனை மழுங்கிப் போனதுபோல காணப்படுகின்றது.

21. சத்துருக்களால் ஒருபொழுதும் அணுக முடியாத வருணபகவானுடைய கைகளிலிருக்கும் பாசமென்ற கயிறு காருடமந்திரத்தில் தனது வல்லமையையிழந்த ஸர்ப்பத்தின் பேதைமைபான நிலைமையிலிருப்பதாகக் காணப்படுகின்றது.

22. தனது கதாயுதத்தைக் கைவிட்டு அக்காரணத்தால் கிளைகள் எல்லாம் தறிக்கப் பெற்றமரம்போல் காணப்படும் குபேரன்கை அவனது மனத்தில் அம்புபோல் குத்தும் ஏதோ ஒருவித அவமானத்தை வெளியிடுகின்றது.

23. ஒளியற்ற தனது தண்டாயுதத்தால் யமன் பூமியில் கோடு இழுத்துக்கொண் டிருப்பதால் ஒரு நாளும் வீண்போகாத தனது யமதண்டத்தை ஒரு கொள்ளிக்கட்டையைக் கருதுவதுபோல் கருதியிருக்கின்றான்.

24. தங்களுடைய ஒளிகுன்றிய காரணத்தால் இப்பன்னிரண்டு ஆதித்தியர்களும் சித்திரத்தில் எழுதப்பட்ட ஆதித்தியர்கள்போல் மற்றவர்கள் நன்றாகக் கண்களைத்திறந்து தங்களைப் பார்க்கக்கூடிய நிலைமையை யடைந்தார்கள்.

25. மேட்டை நோக்கிப்பாயும் தண்ணீரின் வேகம் குறைவதுபோல், வாயுக்கள் ஏதோ குழம்பி நிற்பதால் அவர்களுடைய வேகம் குன்றியிருப்பதுபோலுங் காண்கின்றது.

26. வாடித்தொங்கும் சடைகளின் நடுவில் நழுவிக்கொண்டு நிற்கும் சந்திரலேகைகளையுடைய இப்பதினொரு ருத்திரர்களுடைய முகங்களும் "ஹுங்காரம்" தங்களைவிட்டு அகன்றது என்பதை சொல்லுவதுபோலும் காண்கின்றன.

27. இதற்குமுன் நற்பதவியிலிருந்த நீங்கள் பொது விதிகளை அவற்றின் சிறப்புவிதிகள் தள்ளுவனபோல உங்களைவிடப் பலமானவர்களால் உங்களிடங்களிலிருந்து ஓட்டப்பட்டீர்களா என்ன?

28. என் குழந்தைகளே, எல்லாரும் ஒன்றுசேர்ந்து என்னிடம் என்னவேண்டி வந்தீர்கள். உலகத்தைப் படைப்பதுமட்டும் என் வேலை என்றும் அவ்வுலகத்தை ரக்ஷிப்பது உங்கள் பாடு என்றும் உங்களுக்குத் தெரியாதா?

29. இவ்வாறு பிரம்மதேவன் கேட்டதும் இளங்காற்றால் அலைக்கப்படும் தாமரைக்குளம்போல விளங்கும் தனது ஆயிரம் கண்களினால் தனது குருவாகிய பிரகஸ்பதியை மறுமொழி சொல்லும்படி இந்திரன் சாடை காட்டினான்.

30. இந்திரனுடைய ஆயிரங்கண்களுக்கும் மேம்பாடுள்ள இரண்டு கண்களை அமையப்பெற்ற இந்திரபகவானுடைய (ஆயிரத்தோராவது) கண்ணான பிரகஸ்பதியும் அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு பிரமதேவரைநோக்கிப் பின்வருமாறு சொல்லலானார்.

31. எல்லாவித ஐசுவரியங்களையும் பெற்ற தெய்வமே! நீங்கள் சொன்னது உண்மையே. எங்கள் பதவிகள் சத்துருக்களால் அபகரித்துக் கொள்ளப்பட்டன. ஒவ்வொருவர் மனத்திலும் புகுந்துபார்க்கும் வல்லமைபடைத்த உங்களுக்கு இது ஏன் இதுவரையில் புலப்படவில்லை.

32 தங்களிடமிருந்து வரம்பெற்றுச் செருக்கடைந்திருக்கும் தாரகன் என்ற பெயருள்ள ஓர் பெரும் அசுரன் ஓர் வால்வெள்ளிபோல் இவ்வுலகத்தை நாசஞ்செய்யவேண்டுமென்றே தோன்றியிருக்கின்றான்,

33. அவனுடைய பட்டணத்தில் சூரியபகவான் தான் எவ்வளவுமட்டும் வெயிலடித்தால் அவனுடைய தாமரை ஓடைகளிலிருக்கும் தாமரைப் புஷ்பங்கள் மலருமோ அவ்வளவுமட்டுந்தான் வெயிலை அடிக்கின்றான்.

34. சந்திரபகவானோ எந்நாளும் தனது எல்லாக் கலைகளோடும் அத் தாரகாசுரனை சேவித்து வருகின்றான். ஈசுவரனுடைய தலையில் ஆபரணமாய் விளங்கும் அந்த ஒரு கலையைமட்டும் சந்திரன் தன்னிடம் வரவழைத்துக் கொள்ளுகின்றதில்லை.

35. மலரைத் திருடினவனென்று எங்கு தன்னைத் தாரகன் தண்டிப்பானோ என்று நடுங்கி அவன் தோட்டத்துக்குள் நுழைய வழியேயின்றி அவனருகாமையிலிருந்துகொண்டு ஒரு விசிறியினால் வீசினால் எவ்வளவு காற்றுண்டாகுமோ அவ்வளவு காற்றுக்குமேல் உண்டாகாதபடி பயந்து வாயுபகவான் அடித்துக்கொண்டு வருகின்றான்.

36. ஆறு ருதுக்களும் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் இயற்கைபோல் தோன்றுவதைவிட்டு எப்பொழுதும் மலர்கள் கொய்துகொண்டுவந்து கொடுப்பதிலேயே கவனமுள்ளவர்களாய் தாரகனுடைய தோட்டக்காரர்கள்போல் அவனுக்குப் பணிவிடை செய்கின்றார்கள்.

37. நதிகளுக்கெல்லாம் நாயகனான சமுத்திரராஜன் தாரகனுக்கு தான் காணிக்கையாகக் கொடுக்கவேண்டிய ரத்தினங்கள் எப்பொழுது நன்றாக முதிரும் என்று ஸமுத்திரஜலத்துக்குள் புகுந்து எதிர்பார்த்துக்கொண்டே யிருக்கின்றான்.

38. வாஸுகி முதலான சர்ப்பவேந்தர்களும் இரவுகளில் எப்பொழுதும் பிரகாசிக்கும் தங்கள் சிரோமாணிக்கங்களை ஒரேமாதிரி நின்றெரியும் விளக்குகளாக ஏந்திக்கொண்டு அத்தாரகனுக்குப் பணிவிடை செய்கின்றார்கள்.

39. இந்திரனும் அத்தாரகன் நமக்கு எப்பொழுது அநுக்கிரகம் பண்ணப்போகின்றான் என்று அவனுடைய தயவை எதிர்பார்த்துக்கொண்டு கற்பதருக்களிலுண்டாகும் மலர்களைக் கொய்து அவனிடம் தூரத்திலிருந்தபடியே கொடுத்துக்கொண்டு அத்தாரகனை தன்னிடம் நல்லவிதமாக நடக்கும்படி பண்ணிக்கொள்ளுகின்றார்.

40. இவ்வண்ணம் எல்லாராலும் பணிவிடை செய்யப்பெற்றபோதிலும் அத்தாரகாசுரன் மூவுலகங்களையும் இம்சிக்கின்றான். தீயன் தீமை செய்யப்பெற்றால் அடங்குவானேயன்றி நன்மை செய்யப்பெற்றால் ஒருபொழுதும் அடங்கமாட்டான்.

41. தேவமடந்தைகளும்கூட தங்கள் கைகளால் வெகு கருணையுடன் கொய்யும் இளந்தளிர்கள் அமைந்த இந்திரனுடைய சிங்காரவனத்திலிருக்கும் மரங்களோ இப்பொழுது தாரகன் கைவசப்பட்டு அவனால்வெட்டவும் முறிக்கவும்பட்டு அவஸ்தைப் படுகின்றன.

42. அத்தாரகாசுரன் தூங்கும்பொழுது அவனால் சிறைபிடிக்கப்பட்ட தேவஸ்திரீகள் சுவாஸத்துக்கொப்பான இளங்காற்றுண்டாகும்படி தங்கள் கண்ணீர்த் திவலைகளை வாரி இறைக்கும் விசிறியால் விசிறிக்கொண் டிருக்கின்றார்கள்.

43. சூரியபகவானுடைய குதிரைகளின் கால் குளம்புபட்டுத் தேய்ந்திருக்கும் மேருமலையின் சிகரங்களை அத்தாரகன் பிடுங்கி தனது மாளிகைக்குள் அழகான சிங்காரக்குன்றுகளாக வைத்துக்கொண் டிருக்கின்றான்.

44. தாரகாசுரனுடைய பொற்றாமரைக்கு எது ஓடையென்றால் முன்னர் திசைக்கரிகளுடைய மதத்தால் வாஸித்துக்கொண்டிருக்கும் மந்தாகினியின் ஜலமே.

45. சுவர்க்கலோகத்தி லிருக்கின்றவர்களுக்கு பூலோகத்தைப்போய்ப் பார்த்துவருவோமென்ற ஆசையே போய்விட்டது. தாரகன் எங்கு வழியில் வந்து விடுவானோ என்றபயத்தால் சுவர்க்கலோகத்தார்கள் விமானம் செல்லும் வழியும் புல் முளைத்துப்போயிற்று.

46. யாகம் பண்ணுகின்றவர்கள் தாங்கள் யாகஞ்செய்யும்பொழுது எங்களுக்குக் கொடுக்கும் அவிஸ்ஸை நாங்கள் கண்களைத்திறந்து உட்கார்ந்துகொண்டிருக்கும்பொழுதே எங்கள் முன்னிலையில் அக்கினிபகவானுடைய வாயிலிருந்தபடியே தாரகாசுரன் பிடுங்கிக்கொண்டு போகின்றான்.

47. அத்தாரகன் இந்திரபகவானுடைய உச்சைசிரவஸ் என்ற ஜாதிக்குதிரையை இந்திரன் வெகு காலமாய்த்தேடி தனது உடம்புடனுடம்பாக வைத்திருக்கும் புகழை அபகரித்துக் கொண்டு போவது போல் அபகரித்துக் கொண்டு போய் விட்டான்.

(இன்னும் வரும்.)

# உழவுநூல்
## AGRICULTURE

(86ம் பக்கத்தொடர்ச்சி)

### இராஜதானியின் பொது அமைப்பு

கிழக்குத்தொடர்ச்சி மலையானது (Eastern-Ghauts) இராஜதானியின் வட எல்லையிலிருந்து ஆரம்பித்து தென்மேற்கு திசையாய்த் தொடர்ந்திருக்கிறது. கிருஷ்ணாநதிக்கப்பால் நேர் தெற்கே தொடர்ந்து (Coromandel Coast) கீழ் கடற்கரைக்கு சமமாக (Pulicat) புலிக்காடு வரைவரை ஓடி அதற்கப்புறம் முன்போலவே தென் மேற்காகத் திரும்பிக் கடைசியாக நீலகிரிமலையில் முடிந்து மேற்குத்தொடர்ச்சிமலையோடு (Western Ghauts) சேர்கிறது. கிழக்குத்தொடர்ச்சி மலையின் சராசரி உயரம் 3000 அடி ஆகும். அதிலுள்ள உன்னத சிகரம் 5000 அடி உயரமுள்ளது. சேர்வராய்மலைத் தொடர்ச்சி 4000 அடி உயரமாகும். கிழக்குத்தொடர்ச்சிமலையானது இருபுறங்களிலும் நதிகள் ஓட நடுவில் ஓங்கியிருக்கும் பீடபூமியன்று. (Not a Watershed or water parting) ஏனென்றால் கோதாவரி, கிருஷ்ணா நதிகள் அதை ஊடுருவியும் ஓடுகின்றன.

மேற்குத்தொடர்ச்சிமலை.—இது பம்பாய் இராஜதானியின் கிழக்கு எல்லைவழியே தொடர்ந்து வந்து கன்னியாகுமாரிமுனையில் கடலுக்கு 10, 15 மைல் தூரத்திலே முடிகிறது. இது கிழக்குத்தொடர்ச்சிமலையைவிட விசாலமானது. முக்கியமாய் கீழ்ப்பக்கத்தில் அதிக செங்குத்தானது. இத்தொடர்ச்சியின் சராசரி உயரம் கிழக்குத்தொடர்ச்சி மலையினும் அதிகம். இது தன் இருசாரல்களிலும் நதிகளோட, நடுவே பீடபூமியாயிருப்பதால் நீர்ப்பிரிப்பு (Water parting) என்று சொல்லலாம். என்றாலும் நீலகிரிமலைக்குத் தெற்கே பிளப்பும் கணவாய்களு மிருக்கின்றன.

பாலக்காடு மலை பிளப்புக்குத் தெற்கேயுள்ள அண்ணாமலை, பழனிமலைத் தொடர்ச்சிகள் மேற்குத் தொடர்ச்சி மலையின் கிளைகளாகும்.

முக்கிய நதிகள்:—கோதாவரி, கிருஷ்ணா, பெண்ணையாறு, பாலாறு, காவேரி, வைகை, தாம்பரபரணி.

### மழையும் பருவக்காற்றுகளும்

ஜூன்மாதம் முதல் செப்டம்பர்வரை தென்மேற்குத் திசையிலிருந்து இராஜதானியின் இடையே வீசுகின்ற ஈரச்சத்து மிகுந்த பருவக்காற்றுகள் இராஜதானியின் பலபாகங்களில் இடத்துக்கு ஏற்றபடி மழையாகப் பெய்கின்றன. இவைதான் தென்மேற்கிலிருந்துவரும் பருவக்காற்றுகளாகும். இதற்குத்தான் தென்மேற்குப் பருவக்காற்றுமழையெனப் பெயர் (South West Monsoon).

அக்டோபர்மீ முதல் டிசம்பர்மீ வரை வடகிழக்குப் பருவக்காற்றுகள் மழையை ஏராளமாகக் கொண்டு வருகின்றன. இதற்குத்தான் வடகிழக்குப் பருவக்காற்றுமழையெனப் பெயர். ஜனவரிமாதமுதல் மார்ச்சுமாதம்வரை வறண்டகாலமாகும். ஏப்ரல்மாதம் தொடங்கி மேமாதம்வரை இடி மின்னல்களோடு கூடின புயற்காற்றும், சூறையும் அடிப்பதோடு சொற்பமழையும் பெய்யும்.

### வருஷத்தின் காலப்பிரிவுகள்

ஏப்ரல், மேமாதங்கள்—கோடைக்காலம்.

ஜூன்முதல் செப்டம்பர்வரை—தென்மேற்குப் பருவக்காற்று மழைகாலம் அல்லது சாரல்காலம்.

அக்டோபர் முதல் டிசம்பர் வரை வடகிழக்குப் பருவக்காற்று மழைகாலம் அல்லது காலமழை காலம். (North East Monsoon).

ஜனவரி முதல் மார்ச்சு வரை வறண்டகாலம் (Dryweather).

இராஜதானியின் ஜில்லாக்கள்தோறும் மழை ஒரே அளவாய்ப் பெய்கிறதில்லை. பற்பல ஜில்லாக்களிலும் ஒரேஜில்லாவில் பலவிடங்களிலும் இடங்களுக்கேற்றபடி வெவ்வேறு அளவாய் மழை பெய்கிறது.

மேற்குக்கடலோரத்தில் சராசரி வருடாந்திர மழையளவு 100 முதல் 200 சுழியாகும். ஆனால் விடுபட்ட நாடுகளில் அதாவது கடப்பை, கர்நூல், பல்லாரி, அநந்தபூர், (Ceded districts,) ஜில்லாக்களிலோ சுமார் 20 சுழிமட்டுமேயாகும்.

### மழையின் அளவை நிதானிக்கக்கூடிய முக்கிய காரணங்கள்

(1) உஷ்ணத்தின் அளவு அதிகரிப்பதற்கேற்ப ஈரச்சத்தை (Saturation point) அதிகமாகக் கொள்ளக்கூடியது.

(2) நிலத்தின் சரிவும் காற்றின் திசையும்.

(3) குளிர்ந்தகாற்றும் நிலமும்.

### இராஜதானியில் பெய்கின்ற மழையின் அளவு

முன் சொன்னபடி மேற்குக் கடற்கரை யோர நாடுகளில் தென்மேற்கிலிருந்துவரும் பருவக்காற்றுகள் ஏராளமான மழையைக் கொட்டுகின்றன. அவ்விடங்களில் சராசரி மழையின் அளவு 100 சுழி. கடப்பை, கர்னூல், பல்லாரி, அநந்தப்பூர் ஜில்லாக்களில் 20 சுழி, ஜெய்ப்பூரில் 50 முதல் 70 சுழி வரை பெய்கிறது.

வடகிழக்குப் பருவக்காற்றுகளில் அவ்வளவு ஈரச்சத்தில்லை. பெரும்பாலும் கடற்கரைக்குச் சமீபத்திலேயே பெய்துவிடுகின்றன. மேற்குறித்த பருவக்காற்றுகள் அடிக்க ஆரம்பிக்கவும் விதைப்பு காலம் தொடங்குகிறது. அவ்வக்காலத்திற் பெய்யும் மழைக்குத் தக்கபடி பயிர் விளைவிப்பார்கள். கோடைகாலத்தில் போதுமான மழைபெய்தால் அப்போதே புன்செய்களை உழுது பயிரிட ஆரம்பித்துவிடுவார்கள். பொதுவாய் அக்காலத்தில் விளைவாகும் பயிர்களாவன.—பெரும்பான்மை எள்ளும், சிறுபான்மை சோளமுமே.

தென்மேற்குப் பருவக்காற்று மழையை எதிர்பார்த்தே பெரும்பாலும் விதைக்கவும் சற்று மணற்பாங்கான (Light classes of soil) நிலங்களை உழுது பயிரிடவும் ஆரம்பிக்கிறார்கள்; இப்பருவக்காற்றுகள் இராஜதானி முழுமையுமே உபயோககரமாயிருக்கின்றன. பருவந்தப்பிப் பெய்தால் குறித்தகாலத்தில் விதை விதைக்க முடியாது. அக்காலத்தில் வழக்கமாய் பயிராகவேண்டிய பயிர்களை சரியானபடி பயிர்செய்ய இயலாது. ஆகையால் அவற்றிற்குப் பதிலாக தகுதியான வேறுபயிரை விளைவிக்கவேண்டியதுதான். மழைகாலந் தப்பிப்பெய்தாலும் பெய்யவேண்டிய காலமுழுவதிலும் அமோகமாகப் பெய்யுமானால் களிப்புற நிலங்களுக்கு பாதகமில்லை. ஏனென்றால் அவை ஈரத்தைக் காத்துக்கொள்ளக் கூடியவையாதலாலும் அந்நிலங்களில் அக்டோபர் மாதத்தில் மழைபெய்ய ஆரம்பித்ததற்குப் பின்னரே விதைக்கிறதாலுமே யாம். தென்மேற்குப் பருவக்காற்று மழை இராஜதானியின் எல்லைக்குப் புறம்பாகப் பெய்யுமானால் மிக்க உபயோககரமாயிருக்கிறது. ஏனென்றால் அப்படிப்பெய்வதால் கோதாவரி, கிருஷ்ணா, காவேரி, தாம்பிரபரணி முதலிய பெரும் நதிகளில் வெள்ளம் ஏராளமாக வருகிறது. வடகிழக்கு பருவக்காற்றுகள் மாகாணத்தின் மற்ற பாகங்களில் வியவசாயம் நடப்பதற்கு இன்றியமையா. அம்மழையினாலேயே ஏரிகளுக்கும், கண்வாய்களுக்கும், குளங்களுக்கும், ஜலம் பெருகவேண்டியிருக்கிறது. அவற்றின் உதவியினால் புன்செய் நிலங்களில் பயிர்செய்கிறார்கள். மிகவும் தெற்கேயுள்ள இடங்களில் அவற்றை எதிர்பார்த்தே களிப்புநிலங்களிலே பருவ ஆரம்பத்தில் பயிர்செய்துவிடுகிறார்கள். அவ்விடங்களில் இரசலான பூமியில் சீக்கிரம் விளைவாகக்கூடிய பயிர்களை செய்கிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவிலும் மதுரை, கோயம்புத்தூர் ஜில்லாக்களின் சில பாகங்களிலும் புன்செய் சாகுபடிக்கு இப்பருவமழை இன்றியமையாதது. மேலும் களிப்பு நிலங்களுக்கும் (Heavy soils) அப்படியேயாகும்.

ஜனவரிமுதல் மார்ச்சுவரை (கோடைகாலத்தில்) சிறுதூத்தல்மட்டும் எப்போதாவது தூறுவதால் அம்மாதங்களில் வியவசாயம் நடத்துவதற்கு உதவியாகமாட்டாது.

அத்தூத்தல்களால் புல் வளர்ந்து மேய்ச்சல் நிலம் அதிகரிக்கும். போட்டதும் சீக்கிரம் விளையக்கூடிய பயிர்கள் செய்வதற்கும் ஒருவாறு உபயோகமாயிருக்கின்றன. நீர்ப்பாய்ச்சி உண்டாக்கின பயிர்களுக்கும் உபயோகமானவை. இராஜதானியின் சில பாகங்களில் மே மாதம் முடிவுக்குள் பருவமழை பெய்ய ஆரம்பிக்கிறது. முக்கியமாய் மேற்குக் கரை நாடுகளிலேதான் அவ்வாறு பெய்கிறது.

எப்ரில், மே, ஜூன் இம்மாதங்களில் அடிக்கடி சுழற்காற்றுகளும் வீசுகின்றன. மே மாதம் ஆரம்பிக்கிற பருவமழை பெரும்பான்மை பருவக்காற்றுகளாலும் ஒரு சிறிது வேறுகாரணங்களாலும் கிடைக்கிறது. ஜூன்மாதத்தில் பருவக்காற்றுகள் மழையைக் கொணர்ந்துவந்தாலும் ஆகஸ்டு, செப்டெம்பர் மாதங்களில்தான் ஏராளமான மழை வருவிக்கிறது. செப்டெம்பரீ இறுதியில் மேற்குத் திசைக் காற்றுகள் நின்றுவிடுகின்றன. இப்பொழுது கீழ்கரைநாடுகளில் கனத்தமழை பெய்ய ஆரம்பிக்கிறது. இம்மழைதான் வடகிழக்குப் பருவகாற்று மழை என்பது.

(இன்னும் வரும்.)

*By a Specialist.*

---

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின் செல்பவர்.

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழலவர்.

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.——குறள்.

# சுகாதாரவிளக்கம்

## HYGIENE

(பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது)

ஐந்தாவது அத்தியாயம்

வாஸஸ்தலம்

57. சௌக்கியமான வாஸஸ்தலம்.—நாம் எல்லாவிதத்திலும் சௌக்கியமான ஒரு வாஸஸ்தலத்தை அமைத்துக்கொள்ள வேண்டுமாஞல் அடியிற் சொல்லப்படும் நிபந்தனைகளை நாம் நன்ருகக் கவனிக்கவேண்டும்:—

முதன்முதல், உலர்ந்த தரை; இதில் விஷக்காற்றுக்கு இடமேயிருக்கக்கூடாது. இந்தவிடத்தில் பரிபூர்ணமான வெளிச்சமும் நாற்புறமும் சுற்றிப் பார்த்தால் உற்சாகமும் இருக்கவேண்டும்.

இரண்டாவது, பரிசுத்தமான தண்ணீர் நமக்கு ஏராளமாகக் கிடைக்கக்கூடிய இடமாகவும் அத்தண்ணீர் நமக்கு உபயோகப்பட்டபிறகு நமது வீட்டைவிட்டு வெளியே செல்ல ஏற்பாடுகள் அமைந்தவிடமாகவு மிருக்கவேண்டும்.

மூன்ருவது, நமது வீட்டின் உத்யிருஷ்டங்களும் சாக்கடை வண்டல்களும் அப்போதைக்கப்போது அடிக்கடி அகற்றப்படுமிடமாக நமது வாஸஸ்தல மிருக்கவேண்டும்.

நான்காவது, நமது சுவாசாசயத்திலிருந்து வெளிப்படும் கரிமலவாயு நமது வாஸஸ்தலத்தைச் சூழ்ந்து நிற்காதவண்ணம் எப்பொழுதும் காற்ருேட்டமிருக்கும் வீடாக நமது இருப்பிட மிருக்கவேண்டும்.

ஐந்தாவது, நமது வாஸஸ்தலத்தின் கட்டிடம் அஸ்திவாரம், சுவர், கூரைமுதலிய ஒவ்வொருபாகத்திலும் ஈரந்தாங்கி நிற்காதவண்ணம் எப்பொழுதும் உலர்ந்தவைகளாகவே யிருக்கவேண்டும்.

இவ்வாறு நாம் குறிப்பிட்ட எல்லாவித நிபந்தனைகளையும் நன்ருகக் கவனித்துப் பார்க்கும்பொழுது முக்கியமாக நமது வாஸஸ்தலத்தின் வாயு பரிசுத்தமான வாயுவாக இருக்கின்றதா என்பதுதான் பிரதானமாகும். அதை நாம் கவனிக்கும் பக்ஷத்தில் மற்றெல்லாவற்றையும் கவனித்தவர்களாவோம்.

தனவான்களின் மாளிகைகளும் ஏழைகளின் குடிசைகளும் காய்ந்த தரையுள்ள விடங்களிற் கட்டப்பட்டு நிர்வளம் பொருந்தியவைகளாக விருக்குமாயின் அவ்விரண்டு வாஸஸ்தலங்களுள்ளும் ஒருவித வித்தியாசமுமிருக்கமாட்டாது. பெரும்பாலும் ஏழையின் குடிசையே அதிக சாக்கடையில்லாத காரணத்தால் தனவான் மாளிகையைவிட அதிக சௌக்கியமாயிருக்கும். ஆனல் அக்குடிசையில் அதிக ஜனசங்கம் வசிக்கும்படி வந்தால் சரியான காற்ருேட்டத்துக்கு வழியில்லாமையால் அவ்வாஸஸ்தலம் கெட்டுவிடும்.

58. வாஸஸ்தல மிருக்கவேண்டிய விதம்.—சிறு வீடுகளிலும் குடிசைகளிலும் வசிப்பதாலேயே ரோய்கள் உண்டாகமாட்டா. அஸ்திவாரமும் அடித்தரையும் காய்ந்தவைகளாகவிருந்து உத்யிருஷ்டங்களும் சாக்கடைக் கும்பிகளும் நிற்காமல் அகற்றப்பட்டு இரவில் தூங்கும்பொழுது சாக்கடை நாற்றம் சம்பந்தித்த மலவாயுவை முகராமல் சிறுவீடுகளிலும் குடிசைகளிலு மிருப்பவர்கள் நித்திரை செய்வார்களேயானல் அவர்களுடைய தேகசௌக்கியத்திற்குக் குறைவுண்டாகமாட்டாது.

59. காய்ந்ததரை.—காய்ந்ததரை நமது வீடுகளுக்கு எப்பொழுதும் இருக்கவேண்டுமானல் நமது வீடுகளின் அஸ்திவாரங்களுக்கு 4-5 அடி கீழேயுங்கூடக் கசிவில்லாதவண்ணம் நாம் பார்க்கவேண்டும். அஸ்திவாரத்து அடியில் களிமண் தட்டுப்படுமேயானல் அக்களிமண்ணின்மேல் சுண்ணும்பு செங்கல் இவைகளாற் றளம்பரப்பி நமது வாஸஸ்தானத்துக்கு எப்பொழுதும் உலர்ந்ததரை கிட்டும் சுகத்தை நாம் அடையவேண்டும். நமது வீட்டைச்சுற்றி நாம் எடுக்கும் சுவர்கள் ஈரம் பற்ருதவண்ணம், கூரைகளிலிருந்து வழியும் தண்ணீர் சுவரிலிறங்கி அச்சுவரை ஈரமாகச் செய்யாதவண்ணம் வீடு கட்டவேண்டும். சிலவிடங்களில் சுவரைச் சிமிட்டிபூசி ஈரம் பிடிக்காதவண்ணம் பாதுகாக்கின்றர்கள். வீட்டின் தளம் சரிவர உலர்ந்திருக்கும் நிலைமையை நாம் எப்பொழுதும் கவனிக்கவேண்டும். வீட்டின் தளத்தின்மேல் எப்பொழுதும் காற்ருேட்டமிருக்கின்றதா என்பதை நாம் நன்ருகக் கவனிக்கவேண்டும். தளத்தில் ஏதாவது ஓட்டைகள் அல்லது வங்குகளிருந்தால் அவைகளின் வழியாய் பூமிக்குள்ளிருந்து மலவாயு கிளம்பி வீட்டை அபரிசுத்தமாக்காதவண்ணம் நாம் அவ்வங்குகளையும் ஓட்டைகளையு மடைக்கவேண்டும். மழைபொழியும்பொழுது அம்மழை நீர் பூமியிலேயே ஆழ்ந்துவிடாதவண்ணம் தாராளமாய் ஓடி வெளியே சேரும் வழிகளை

நாம் வசிக்கும் வீட்டில் உண்டாக்கி வைக்க வேண்டும்.

60. வீட்டுச்சாக்கடை.—நாம் ஒரு வீட்டிற்குள் புகும்பொழுது நாற்றமிருக்குமாயினும் அந்நாற்றத்துடன் பூமியின் கசிவுமிருக்குமாயின் அவ்விருவித அடையாளங்களும் அவ்வீட்டின் சாக்கடை சரியான ஸ்திதியிலில்லை என்பதற்குப் பெரும் அடையாளங்கள். நாம் குடியிருக்கும் வாஸஸ்தலங்களில் ஒவ்வொரு அறைக்கும் எதிரும் எதிருமாக இரண்டு விசாலமான ஜன்னல்கள் இருந்தே தீரவேண்டும்.

61. தூங்கும் அறை.—நாம் இரவிற்படுத்து நித்திரைசெய்யும் அறைகளிலேயோ அல்லது மற்ற இடங்களிலோ அதிக அடைசல் எப்பொழுதுங்கூடாது. காற்றோட்டம் எப்பொழுதும் இருக்கவே வேண்டும். குளிர் காலத்திலும் பனிக்காலத்திலுங்கூடக் குளிரும் பனியும் நம்மைப் பாதிக்காவண்ணம் நாம் பாதுகாத்துக்கொண்டு காற்றோட்டம் போதுமானவரையில் வைத்தே நமது வாஸஸ்தலங்களை அமைக்கவேண்டும். அன்றியும் அப்படுக்கை அறையிலுள்ள மெத்தை, பாய், தலையணை, போர்வை இவைகளை எல்லாம் அடிக்கடி நாம் வெயிலில் போட்டுத் தட்டி எடுத்தும், துணிகளையும் போர்வைகளையும் உறைகளையும் தோய்த்தும் மாற்றியும், வைத்துக்கொள்ளவேண்டும். இல்லாவிடில் நமது வியர்வை முதலியவைகளால் நமது படுக்கைமுதலியவைகள் கெட்டு அந்நாற்றத்தால் நமது படுக்கைஅறையின் வாயு விஷவாயுவாக மாறும். தூங்குமறைக்குள் விளக்கெரிவதாகவிருந்தால் அதனால் வெளிவிடப்படும் விஷவாயு நமது சுவாசத்துக்கு சாதனமாகும் வாயுவுடன் கலக்காமல் அகன்றுபோகும் வண்ணம் அவ்விளக்கை ஒதுக்கிவைக்கவேண்டும். நாம் தூங்கும் அறையில் வண்ணான் அழுக்குகள் அல்லது உலருவதற்காகக் கொடிகளில் விரிக்கப்பட்ட ஈரவேஷ்டிகளிருக்கக்கூடாது. நமது அரைக்குச் சமீபத்தில் விஷவிருக்ஷங்கள் அல்லது விஷவாயுவை கக்கும் செடிகளிருந்தால் அவைகளால் தேகத்துக்கு அசௌக்கியமுண்டாகும். நமது வீட்டுக்கு நான்கு பக்கங்களிலேயும் வெயிற் படும்படிக்கும் காற்று சஞ்சாரமிருக்கும்படிக்கும் கட்டிக்கொள்ளவேண்டும்.

ஒருவீட்டில் வசிக்கும் நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் இரவில் இரண்டொருதடவை எழுந்திருந்து தேகபாதையைத் தீர்த்துக்கொள்ள வேண்டியிருக்கும். நமது உத்விருஷ்டங்களால் நமது வாஸஸ்தலத்துக்கு வாயு கெடாதவண்ணம் அவைகளை ஜலம் கொட்டி அலம்பியோ அல்லது சாம்பலைப்போட்டு மூடியோ வைக்கவேண்டும். நாம் தூங்கும் அறைகளில் அதிகமாகத் தட்டு முட்டுப் பெட்டி முதலிய சாமான்களிருக்கக்கூடாது. இவைகளிருப்பின் நமது ஆரோக்கியத்துக்காக அவ்வறையிலிருக்கவேண்டிய சுத்தாகாயத்தை இவைகள் குறைப்பதுடன் இவைகளிற் சில குறைவாயிருக்கும் அவ்வாகாயத்தையும் கெடுத்துவிடுகின்றன. நாம் படுத்துக்கொண்டு தூங்கும் அறையில் நமது புசிப்புக்கு என்று ஒருவித ஆகாரத்தையும் ஒருபொழுதும் வைக்கவேகூடாது. அவைகள் கெட்டு விஷமாய்ப் போவதுடன் நமக்கு வேண்டிய காற்றையும் கெடுக்கும். ஒருகால் தீராதவண்ணம் வைத்துக்கொள்ளும்படி சம்பவித்தால் அவ்வாகாரத்தை ஒரு பாத்திரத்தில் நன்றாக மூடிவைத்து உபயோகிக்கவேண்டும்.

62. வீடுகட்டஉதவாத இடங்கள்.—பூமி மட்டத்துக்குக் கீழேயிருக்கும் நிலவறைகள், சதுப்பு நிலங்கள், அதிக மரங்களடர்ந்து வெகு நெருக்கமாகவிருக்குமிடங்கள் நாற்றங்கள் வெளிக்கிளம்பும் தொழில்கள் நடக்குமிடங்கள்.

63. பள்ளிக்கூடங்கள் கட்டப்படவேண்டிய விதங்கள்.—பள்ளிக்கூடங்கள் பெரும்பாலும் பெருந்தெருக்களுக்கும் அதிக சத்தமுண்டாகுமிடங்களுக்கும் ஒதுங்கியிருக்கவேண்டும். பள்ளிக்கூடத்திற் பல அறைகளிருக்குமாகையால் ஒரு அறையிலுண்டாகும் சத்தம் மற்ற அறையில் ஏகமாகக் கேட்கப்படாமலிருக்கும்படியாக ஒவ்வொரு அறையும் அமைக்கப் பட்டிருக்கவேண்டும். ஒவ்வொரு வகுப்பிற்கென்று ஏற்பட்டிருக்கும் அறையில் நாற்பது பிள்ளைகளுக்கு மேலுட்காரக்கூடாது.

64. ஆசுபத்திரி முதலியவை கட்டுதல்.—ஆசுபத்திரி கட்டுதல், கைதிகளை அடைக்கும் சிறைச்சாலை கட்டுதல் இவைகளை வேண்டிய முறைகளைப் பற்றி அதிகாரிகள் சுகசந்தர்சன விதிப்பிரகாரம் நிபந்தனைகளை உண்டாக்கியிருப்பதுமல்லாமல் அவ்வாறு அக்கட்டிடங்கள் கட்டப்படும்படியும் விதித்திருக்கின்றார்கள். அந்நிபந்தனைகளை நாம் இங்கு எடுத்துரைப்பது அனாவசியம்.

65. சரியான வாஸஸ்தலமில்லாதகாரணத்தால் விளையும் நோய்கள்.—வாய்ப்புண் அல்லது தொண்டைக்கட்டு - (Sore throat) - தொண்டைச் சதைவளர்ச்சி (Diphtheria) சிவப்பம்மை (Scarlet fever) இரத்த விஷஜென்னி (Blood poisoning) சூதிகவாயு ஜென்னி (Puerperal fever) - கபஜ்வரம் (Pneumonia) பேதி (Diarrhœa) விஷஜ்வரம் (Enteric fever.)

## நீலி வசீகரம்

## TAMING OF THE SHREW

### அங்கம் II.

களம் 1. மதுரை ரகுநாதேவரின் வீட்டி லோர் அறை.

(கௌதமிதேவியும் வசிதேசுவரியும் வருதல்.)

வசி.—அக்கா! என் என்னை இம்மாதிரியெல்லாம் துன்பப்படுத்துகின்றனை? உன்னுடைய வேலைக்காரியாக நினைத்து அற்பவேலைகளை யெல்லாம் செய்யச்சொல்லுகிறாயே! இதைச்சகிக்க முடியவில்லை. என் கைக்கட்டை அவிழ்த்துவிடு; அதற்குப்பிறகு நீ சொன்னவைகளையெல்லாம் செய்கிறேன்.

கௌ.—அது கிடக்கட்டும்; நீ யாரைக் கல்யாணம் செய்துகொள்ளப்போகிறாய்? ஒளிக்காமல் பதில் சொல்லு.

வசி.—அக்கா! உன்னிடத்தில் உண்மையை என் ஒளிக்கவேண்டும்? நான் இன்னும் ஒருவர்மீதும் காதல் கொள்ளவில்லை.

கௌ.—பட்டி முண்டை! பொய் சொல்லுகிறாயா? பிரதாபருத்திரதேவரை நீ காதலிப்பதில்லையா?

வசி.—அக்கா! உனக்கு அவர்மேல் விருப்பமாயின், வேண்டுமானால் நானும் உனக்காகப் பரிந்துபேசுகிறேன்.

கௌ.—ஓகோ! அப்படியானல் நீ இன்னும் பணக்காரனைப் பார்க்கிறாய் போலிருக்கிறது, பொன்னம்பலத்தேவரோ?

வசி.—நான் அவரைக் கல்யாணஞ்செய்துகொண்டு விடுவேன் என்பதாக நீ பயப்படுகிறாயா? நீ என்னைப் பரிகாசஞ் செய்கிறாயென்று தோன்றுகிறது; அக்கா! கைக்கட்டை அவிழ்த்துவிடு; கெஞ்சிக் கேட்கிறேன்.

கௌ.—ஆமாம்; உன் கிட்டத்தான் எனக்குப் பரிகாசம் பண்ணவேண்டும்! அதெல்லாம் பரிகாசமாகவிருந்தால், இதுவும் பரிகாசமாக விருக்கட்டும். (வசிதேசுவரியை அடித்தல்).

ரகுநாததேவர் வருதல்

ரகு.—என்னடி, யிது? என்ன அமளி? ஒரு நாழிகைப்பொழுதாவது சும்மாவிருக்கமாட்டாயா? வசிதே, தூரப்போ:—பாவம்! அழுகிறாளே:—உள்ளேபோய்ப்படி; இவளோடு ஒன்றும் பேசவேண்டாம். கௌதமி! உனக்கு வயதாயிற்றே! உன்னோடு அவள் சண்டைக்கு வருகிறாளா? நீ என் அவளை அடிக்கிறாய், இந்தத் துஷ்டத்தனம் என்றைக்குத்தான் உன்னைவிட்டு நீங்குமோ?

(வசிதேசுவரி போதல்)

கௌ.—இப்போதுதான் தெரிகின்றது; உமக்கு அவள்தான் அருமைப்பெண்; நான் எக்கேடு கெட்டுப்போனால் உமக்கென்ன? வேலைகள் செய்வதற்கு நான்; செல்வமாய்ச் சீராட்டப்படுவதற்கு அவள். உமக்கு இத்தனை அசுயை ஆகாது. நான் இங்கே இருக்கவில்லை; போகிறேன், போம். (போதல்)

ரகு.—அட, அப்பா! எனக்கு இப்படித் துன்பம் நேரவேண்டுமா? இதோ வருகிறவர் யாவர்?

(எளிய வேஷம்பூண்ட விஜயராகவ உடையாருடன் பொன்னம்பலத்தேவரும், பாடகவேஷம் பூண்ட பிரதாபருத்திர தேவருடன் நாராயணதேவரும், கேசவன் தலையில் புஸ்தகங்களையும் ஒரு வீணையையும் வைத்து அழைத்துக்கொண்டு சுப்பராயனும் பிரவேசித்தல்.)

பொ.—தேவர்வாள்! நமஸ்காரம்; சௌக்கியமா?

ரகு.—யார்? பொன்னம்பலத் தேவரா? வாருங்கள்; இவர்கள் யாவர்?

நா.—ஐயா! நமஸ்காரம்; தங்களுக்கு அழகிலும் குணத்திலும் சிறந்த கௌதமியென்றொரு பெண்ணிருக்கிறாளல்லவா?

ரகு.—ஆமாம்; என் பெண் ஒருத்திக்குக் கௌதமி தேவியென்று பெயர்.

பொ.—ஐயா! நீர் திடீரென்று குறுக்காகப் பாய்கிறீரே! வழியோடே போம்.

நா.—நீர் வாயைமூடிக்கொண்டிரும்;—ஐயா, பெரிய தேவர்காள்! நான் இருப்பது உறையூர்; தங்கள் குமாரத்தியின் அழகையும் சாமர்த்தியத்தையும், நற்குணங்களையும், சாந்தத் தன்மையையும் நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன்; இப்போது நேராகப் பார்த்து அறிந்துகொள்வதற்காகவே இங்கு வந்தேன்; உமது பெண்ணுக்கு சங்கீதத்திலும் கணிதத்திலும் விற்பத்தி யுண்டென்று கேள்வி; அவைகளை விருத்திசெய்வதற்காக நான் ஒருகெட்டிக்கார உபாத்தியாயனை அழைத்துக்கொண்டு வந்திருக்கிறேன். (பிரதாபருத்திரதேவரைக்

காட்டி) இவரை நீங்கள் வேலையில் அமர்த்திக் கொள்ளலாம். இவர் பெயர் கோவிந்தவாத்தியார் என்பது.

ரகு.—நீங்கள் இரண்டுபேரும் வந்ததைப்பற்றி நிரம்பவும் சந்தோஷப்படுகிறேன். ஆனல் என் மகள் கௌதமி மாத்திரம் உமக்குத் தகுந்தவள் ஆக மாட்டாளென்பதை நினைக்க எனக்கு வருத்தமாக விருக்கிறது.

நா.—அப்படியானல், அவளை விட்டுப்பிரிய உங்களுக்கு இஷ்டமில்லைபோ லிருக்கிறது; இல்லாவிட்டால் என்னைக்கண்டால் பிடிக்கவில்லையோ?

ரகு.—ஐயோ! அப்படியெல்லாம் தப்பு அர்த்தம் பண்ணிக்கொள்ளக்கூடாது; இருப்பதைச் சொன்னேன். நீங்கள் இருக்குமிடம் எது? உங்கள் பெயர் என்ன?

நா.—என் பெயர் நாராயண தேவன் என்பது; என் தகப்பனர் பெயர் உறையூர் முத்துராமலிங்கத் தேவர் என்பது; அவரை அறியாதவர் இந்தத் தமிழ்நாட்டில் இல்லவேயில்லை.

ரகு.—எனக்கு அவரைத் தெரியாதா? நாங்கள் இருவரும் வெகுநாளைய நண்பர்களாயிற்றே! நீர் வந்தது நிரம்ப சந்தோஷத்தைக் கொடுக்கிறது.

பொ.—நாராயணத்தேவரே! உமது காரியத்தைச் சொல்லிவிட்டீர்; எங்கள் காரியத்தையும் சொல்லிவிடுகிறோம்; சற்று தயவு செய்யும்.

நா.—தாராளமாய்ச் சொல்லும்; நானு வேண்டாமென்கிறேன்?

பொ.—தேவர்வாள்! நல்லகெட்டிக்கார உபாத்தியாயன் ஒருவனை அழைத்துவரச் சொன்னீர்களே; அப்படியே அழைத்துவந்திருக்கிறேன்; (விஜயராகவ உடையாரைக்காட்டி) இவர் மகா கெட்டிக்காரர், காவியம், சாஸ்திரம் முதலியவற்றில் அசாமான்ய விற்பத்தியுண்டு. இவர் பெயர் சாமிநாதவாத்தியார்; இவரையும் வேலையில் அமர்த்திக் கொள்ளலாம்.

ரகு.—மிகவும் நல்லது; சாமிநாதவாத்தியாரே! நிரம்பவும் சந்தோஷம்;—(சுப்பராயனை நோக்கி) ஐயா! நீர் தனியாக நிற்பதைப்பார்த்தால், அந்நியர்போலத் தோற்றுகின்றதே. வந்த காரியத்தைச் சொல்லலாமோ?

சுப்.—கேட்காமல் வந்து விட்டதற்கு மன்னிக்க வேண்டும்; இந்த ஊருக்கு நான் புதியோன்; வந்ததும், உமது இளைய குமாரத்தி ரூப லாவண்ய குணவதி வஸீதேசுவரியைப்பற்றிக் கேள்விப்பட்டேன்; ஒருவேளை கல்யாணத்துக்கு இயைந்தால் பார்க்கலாமென்று வந்தேன். ஆனல் இதற்குப் பிரதிபந்தகமாக உமது மூத்தபெண்ணின் கல்யாணம் இருக்கிறதென்பது எனக்குத் தெரியாததல்ல; ஆனல் என்னுடைய குலம் கோத்திரங்களைக் கேட்டால், நீங்களே வலிய வந்து உங்கள் பெண்ணைக் கொடுப்பீர்கள். உமது பெண்ணுக்காகவே, இந்த வீணையையும், இந்தப் புஸ்தகங்களையும் கொண்டுவந்திருக்கிறேன். அங்கீகரிக்கவேண்டும்.

ரகு.—உமது பெயர் என்ன?

சுப்.—விஜயராகவ உடையார்.

ரகு.—எந்த ஊர்?

சுப்.—தஞ்சை நல்லநாயக உடையாரின் மகனல்லவா நான்?

ரகு.—அடே, யப்பா! அந்த மகாநுபாவரைப்பற்றி விசேஷமாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். நிரம்பவும் சந்தோஷம்.—(பிரதாபருத்திரரை நோக்கி) நீர் இந்த வீணையை யெடுத்துக்கொள்ளும். (விஜயராகவ உடையாரைநோக்கி) நீர் இந்த புஸ்தகங்களை யெடுத்துக்கொள்ளும். நீங்கள் பாடஞ் சொல்லிக்கொடுக்கப் போகவேண்டும்.—யாரடா, அங்கே?

(ஒரு சேவகன் வருதல்.)

அடே! இவர்களை யழைத்துக்கொண்டுபோய், குழந்தைகளிடம் விட்டுவா; இவர்கள்தாம் அவர்களுக்கு உபாத்தியாயர்; ஜாக்கிரதையாக விருக்கச் சொல்.

(சேவகன், பிரதாபருத்திரதேவன், விஜயராகவ உடையார், கேசவன் போதல்.)

அவர்கள் போகட்டும், நாம் தோட்டப்பக்கம் போய் உலாவிவிட்டு வருவோம்; நல்ல காற்று அங்கே யடிக்கும். நீங்கள் அனைவரும் சங்கோஜப்படாமல் சொந்தவீடுபோல நினைத்து நடக்கவேண்டும்.

நா.—ஐயா! தேவர்வாள்! எனக்குச் சில அவசரமான காரியங்கள் உள்ளன; வழக்கு வியாஜ்யங்கள் சில தீர்க்கப்படவேண்டியிருக்கின்றன. ஆதலால் நான் சீக்கிரமாகவே ஊருக்குப் போய்விடவேண்டும்.—நான் உமது பெண்ணைக் கல்யாணஞ் செய்துகொண்டால், அவளுக்குச் சீதனம் என்ன கொடுக்க வுத்தேசம்?

ரது.—என் ஆயுளுக்குப்பிறகு எனது ஆஸ்தியில் பாதி கொடுத்துவிடுகிறேன்; இப்பொழுது ரொக்கத்தில் இருபதினாயிரம்பொன் கையில் கொடுத்துவிடுகிறேன்.

நா.—நான் போடுகிற நகை முதலியவைகளைப் பற்றி நீர் விசாரப்படவேண்டியதில்லை. ஏராளமாக என் தாயார் நகைகளிருக்கின்றன.

ரது.—ஆமாம்; அதெல்லாம் சரிதான்; அவள் அடங்காப் பிடாரியாயிற்றே. அவளை எப்படி வழிக்குக் கொண்டுவருவீர்?

நா.—இது ஒரு பிரமாதமா? அவளுக்கு எவ்வளவு அகம்பாவம் இருக்கிறதோ அதற்குமேலாக என்னிடம் கண்டிப்பு இருக்கிறது; இரண்டு பெரு நெருப்பு ஒன்றாகச் சேருமானால், சீக்கிரம் அவைகளுக்கு உணவாகவிருந்தபொருள் தீய்ந்துவிடும்; சிறிய நெருப்புடன் சிறியகாற்று சேர்ந்தால் பெருந்தீயாகும்; பெருங்காற்றடித்தால் நெருப்பு அவிந்துபோகும்; நான் வெகு முரடனாயும் கண்டிப்பானவனாயும் இருப்பேன்; தானே அவள் அடங்கிப்போய்விடுவாள்.

ரது.—இதைக் கேட்கச் சந்தோஷந்தான்; ஆனால் இரண்டொரு கடும் வார்த்தைகளைச் சகிக்க முடியுமா?

நா.—கவலைப்படவேண்டாம்; காற்று எவ்வளவு பலமாக அடித்தபோதிலும், மலைகளை அசைக்கமுடியவில்லையே.

(உடைந்த மண்டையுடன் பிரதாபருத்திரதேவர் திரும்பிவருதல்.)

ரது.—என்ன சங்கதி? முகமெல்லாம் வெளுத்துப் போயிருக்கிறதே!

பிர.—போதும், போதும்; உமது பெண்ணைப்பற்றி இதுவரையில் நான் சாமான்யமாக நினைத்திருந்தேன்; அவள் ஒரு போர்வீரனாகலாம்போலிருக்கிறது. எப்போதும் முகத்தைச் சுளித்துக்கொண்டிருப்பது நன்றன்று என்று மாத்திரம் சொன்னேன்; உடனே ஆவேசம் வந்தவள்போலச் சிறி எழுந்து, என்கையிலிருந்த வீணையைப்பிடுங்கி, அதனாலேயே என் மண்டையில் ஓங்கியடித்துவிட்டு, அடித்ததற்கு வட்டியாக ஓயாமல் வாயில் வந்தபடியெல்லாம் திட்டினாள். எனக்குப் பயமாகவிருந்தது; ஓடிவந்துவிட்டேன்.

நா.—ஆகா! பேஷ், பேஷ்! அவள்மீது எனக்குள்ள காதல் முன்னையைக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமாகிவிட்டது; அவளுடன் வார்த்தையாடவிருந்த ஆவலுள்ளவனானேன்.

ரது.—போனது போகட்டும்; நான் அழைத்துக் கொண்டுபோகிறேன், வாரும்; சின்னக் குழந்தைக்குப் பாடஞ்சொல்லிக்கொடும்; அவள் நன்றாய்ப் படிப்பாள்; நாராயணத்தேவரே! நீர் எங்களுடன் வருகிறீரா, நான் கௌதமியை இங்கே உம்மிடம் அனுப்பட்டுமா?

நா.—நிரம்பவும் சந்தோஷம்; அப்படியே. அனுப்புங்கள்; இங்கேயே இருக்கிறேன்.

(ரகுநாததேவர், பொன்னம்பலத்தேவர், சுப்பராயன், பிரதாபருத்திரதேவர் போதல்)

நாராயணதேவர்.—(தனிமையில்). அவள் வந்ததும், இனிய வார்த்தைகளால் மயக்கிவிடவேண்டும்; வைதாளானால், குயில் கூவுவதுபோலப் பேசுகிறாள் என்று நேர்படச் சொல்லுகிறேன்; கோபக்குறியுடன் பார்ப்பாளானால், அன்றலர்ந்த தாமரைப்பூப்போல முகமிருக்கிறதென்கிறேன்; ஊமையைப் போல வார்த்தையொன்றும் பேசாது மௌனமாக விருப்பாளானால், சரமாரியாய்ப் பிரசங்கிப்பதுபோல் பேசுகிறாள் என்று ஸ்தோத்திரம் செய்கிறேன்; ஓடிப் போவென்று சொல்வாளானால் இன்னும் ஒருவாரம் தங்கியிருக்கச் சொன்னாற்போல அவளுக்கு நன்றி கூறுவேன்; கல்யாணம் பண்ணிக்கொள்ள மாட்டேன் என்பாளானால், முகூர்த்த நாள் என்றைக்கு வைத்துக்கொள்ளுகிறதென்று கேட்கிறேன்— இதோ வந்து விட்டாளே! இனி ஜாக்கிரதையாகவிருக்கவேண்டும்.

(கௌதமிதேவி வருதல்.)

# இந்துலேகை

(ஒரு மலையாள நாவல்)

## இரண்டாவது அத்தியாயம்.

(முன் தொடர்ச்சி)

இந்துலேகை கிருஷ்ணமேனவனுடன் தாமசித்துக்கொண்டிருந்த காலத்திற்கூட, அவன் மாதவனை அடிக்கடி காண்பதுண்டு. கிருஷ்ணமேனவனுக்கு மாதவனிடத்தில் அத்தியந்த பிரீதி இருந்தது. மாதவன் மிக்க புத்திசாலியான வாலிபனென்ற பலதடவையும் பலரோடும் அவர் பேசிக்கொண்டிருக்கும்போது சொல்வதை இந்துலேகை கேட்டிருந்தாள். ஆனால் அதற்குமேல் மாதவனைக் குறித்து அவர் அதிகமாய் ஒன்றும் பேச அவன் கேட்டதில்லை. மாதவன் இந்துலேகைக்குத் தகுதியானவனா யிருக்கக்கூடுமென்று கிருஷ்ணமேனவன் மனதில் எண்ணியிருந்தாரோ இல்லையோ அது ஒருவருக்கும் நிச்சயமாய்த் தெரியாது. கொச்சு கிருஷ்ணமேனவன் காலஞ்சென்றதன்மேல் இந்துலேகை பூவரங்கில்வந்து வசிக்கத் தொடங்கினது முதல்தான், அவளுக்கும் மாதவனுக்குமிருந்த நட்பு விசேஷமாய் வளர்வதாயிற்று. மாதவன் சென்னப்பட்டணத்திலிருந்து ஊருக்குத் திரும்பிவரும் சமயங்களில் எப்போதும் அவ்விருவரும் தமக்குள் பேசியும் விளையாடியும் களித்தும் உல்லாசமாய்க் காலங் கழிப்பார்கள். இப்படி சிலநாள் கழிந்தபின், அவர்களுக்குள் பரஸ்பரம் காதலுண்டாகத் தொடங்கியது. ஆனால் அதை ஒருவரேனும் செய்கையாலாவது இங்கிதத்தாலாவது சிறிதாகிலும் வெளிப்படுத்தினார்களில்லை. மாதவனுடைய படிப்புக்கு எங்கே விக்கினம் உண்டாய்விடுமோவென்று பயந்து இந்துலேகை தன் ஆசையை வெளிப்படையாய்க் காட்டவில்லை. மாதவனும் தன் ஆசையை வெளிப்படுத்தாமல் மௌனமாயிருந்ததற்குக் காரணம் முதலில் லஜ்ஜையும், பிறகு, தனக்கு இந்தக்காரியம் பிரயாசையில்லாமல் கைகூடுமோவென்ற நம்பிக்கைக் குறைவுமேயாம். அப்படி அவன் சங்கிப்பதற்குத் தக்க ஆதாரமில்லாமற் போகவில்லை. ஏனெனில் இந்துலேகையானவள் ஸ்திரீகளுக்குட் சிறந்த ரத்தினமென்று அவளுடைய பெயரும் புகழும் மலையாள நாடெங்கும் பரவியிருந்தது. அதையறிந்த மகாராஜாக்கள் முதல் பலரும் இந்தக்குட்டியை மணக்கவேண்டுமென்று ஆவல்கொண் டிருந்தார்களென்ற சங்கதி பஞ்சுமேனவனுக்கு அடிக்கடி வந்துகொண்டிருந்த கடிதங்கள்மூலமாக மாத்திரமல்லாமல் பூவரங்கிலுள்ளவர்கள் தமக்குள் இதைப்பற்றிப் பேசிக்கொள்ளும் வதந்திகளாலும் மாதவனுக்குப்பரிஷ்காரமாய்த் தெரிந்திருந்தது. விவகாரம் இப்படியிருக்கையில் கேவலம் ஸ்கூல் பிள்ளைகளாகிய தனக்கு இது எப்படி சாத்தியமாகப் போகிறதென்று அவன் சிலசமயம் தனக்குள்ளேயே தர்க்கிக்கலானான். முதலில் அவனுக்கு இவ்வாறே யோசனையுண்டான போதிலும், படிப்படியாய் இந்துலேகையினிடம் அவனுக்குக் காதல்வளர்ந்துகொண்டேவந்தது. ஆகவே அவன் சென்னமாநகரத்திலிருந்து ஊரில் வந்திருக்கும்போதெல்லாம் பகல் முழுவதும் இந்துலேகையுடனேயே கழிப்பான். அவர்கள் ஒன்றாகப் படித்தும் பாடியும் பியானோ வாசித்தும் சதுரங்கமாடியும் காலத்தை விநோதமாய்ப் போக்கி, இராவுவேளையில் பிரியவேண்டிவரும்போது, இவ்வளவு சீக்கிரத்தில் பகற்பொழுது போய்விட்டதேயென்று அவவிரு காதலரும் விசாரமுறுவார்கள். இவ்வாறு சிறிதுகாலம் மாதவன் சென்னப்பட்டணத்திலிருந்து ஊருக்குவந்திருக்கும் சமயமுழுவதும் அவ்விருவர்களுக்குள்ளும் பரஸ்பரம் விநோதத்திலும் வேடிக்கையிலும் சரசசல்லாபத்திலும் கழிந்துகொண்டிருந்தது.

இந்துலேகைக்கும் மாதவனுக்கும் பரஸ்பரமிருந்த ஒருவிதமான உறவின்முறை ஒருபுறமிருக்க, ரூப சௌந்தரியத்திலும் கல்வியறிவிலுங்கூட அவர்கள் சிறந்த அந்யோந்யப் பொருத்தமுள்ளவர்களா யிருந்தபடியால், அவ்விருவரும் இவ்வாறு ஒருவர்மேலொருவர் ஆசைவைத்திருந்த தனது ஏதோ அருமையைக் குணமுள்ள சிலருக்குத்தவிர மற்றெல்லோருக்கும் மகிழ்ச்சியை யளித்தது. ஆனால் இந்துலேகை மாதவனுக்கு மனைவியாய்க் கிட்டுவளோவென்று பின்னும் ஒருசங்கை எல்லோருக்கும் உண்டாயிற்று. மலையாளநாட்டின் சம்பிரதாயங்களை யறிந்தவர்களுக்கு இந்த சங்கையுண்டாவது சகஜமேயென்பது தோற்றாமற்போகாது. ஏனெனில் திருவாங்கூர் மஹாராஜா (பொன்னுதம்புரான்)கூட இந்துலேகையைத் தம் பட்டமஹிஷியாக்கிக்கொள்ள வேண்டுமென்று ஆலோசித்துக்கொண்டிருந்தாரென்று அக்காலத்தில் பஞ்சுமேனவன் வாயிலிருந்தே வெளியாயிற்று. ஆகவே மேலேசொன்னபடி சங்கை உண்டானதில் அற்புதமொன்று மில்லையல்லவா?

இப்படி யிருக்கையில், நம்முடைய கதை ஆரம்பிப்பதற்குமுன்பு மாதவன் பி. எல். பரீக்ஷைக்குப் போனான். பரீக்ஷை முடிந்தவுடனே, அவன் ஊருக்குத் திரும்பிவந்து, வழக்கம்போலவே, இந்துலேகையுடன் வேடிக்கை விநோதங்களில் காலங்கழித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது அவனுக்கு இந்துலேகையின் மேலுள்ள காதலானது நாளுக்கு நாள் விருத்தியடைந்து கடைசியில் பொறுக்கமுடியாத காமஜ்வரமாய்க் காயத்தொடங்கியது.

"திருவாங்கூர் மகாராஜாவானு லென்ன? ராஜாவானால் எனக்காகவேண்டியதென்ன? என் இந்துலேகை எனக்குத்தான் பெண்டாட்டியாவாள். அப்படி யாகாவிட்டால் என்னால் உயிர்வைத்திருக்கவே முடியாது" என்று மாதவன் தனக்குள்ளேயே வெதும்பினான். அது முதல் அவனுக்கிருந்த சங்கை நீங்கி திடநிச்சயம் அவன்மனதில் குடிகொள்ளலாயிற்று.

இந்த சமயத்தில் இந்துலேகையின் மனதில் என்னென்ன எண்ணங்கள் உண்டாயிருக்கின்றனவோ வென்றறிய மாதவன் பெரிதும் ஆவலாயினான். அவனிடத்தில் தோன்றிய இந்தப் புதிய காதலுணர்ச்சியைக் கண்டு இந்துலேகையும் முன்னிலும் அதிகமாக அவன் மேல் ஆசைகொண் டிருக்கக்கூடுமாயினும் தன் மனோபாவம் அவனுக்குத் தெரியும்படி அவள் எத்தகைய குறிப்பாலும் சிறிதும் காட்டிக்கொள்ளவில்லை. அவள் எப்போதும்போலவே உல்லாசமாயும் உற்சாகமாயு மிருந்துகொண்டு வழக்கம்போலவே அவனோடு படிப்பதும் பாடுவதுமாயிருந்தபடியால் அவள் தன்னிடம் நடந்துகொண்ட மாதிரியிலிருந்தும் யாதொன்றும் கண்டுகொள்ள மாதவனால் முடியவில்லை. மாதவன் மாத்திரம் கள்ளங்கவடற்ற சுபாவமுடையவனானபடியால் தன் மனோபாவங்களை இனிச் சிறிதேனும் மறைத்துவைக்க அவனாலாகவில்லை. அம்மனோபாவங்கள் இந்துலேகைக்கு எவ்விதத்திலும் அருவருப்பை யுண்டாக்கவில்லையென்று கருதக் கூடுமாயினும் மாதவன்மேல் தனக்கிருந்த இரகசியமான காதலை அவனுக்குத் தெரியவொட்டாமல் வெகு ஜாக்கிரதையாக மறைத்து வைத்தாள்.

இவ்வாறிருக்கையில், மாதவனும் இந்துலேகையும் ஒருநாள் சதுரங்கம் விளையாடிக்கொண்டிருக்கும்போது, மாதவன் தான் வைக்கவேண்டிய காயைக் கையிலெடுத்துக்கொண்டு அதற்குமேல் விளையாடாமல் எதைப்பற்றியோ நினைத்துக்கொண்டு இந்துலேகையின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கலாயினான்.

"என் ஆடவில்லை? நீ ஆடவேண்டிய தாயிற்றே?" என்று கேட்டாள் இந்துலேகை.

அதற்கு விடையாய்: "ஆடுவதில் இன்றென்னவோ எனக்கு அவ்வளவு புத்தி செல்லவில்லை" என்றான் மாதவன்.

"இதுவரையிலும் உன் எண்ணெங்கள் எங்கெங்கேயோ அலைந்துகொண்டிருந்தன. ஒருவேளை உன் பரீட்சையின் முடிவைப்பற்றி கவலைப்படுகிறாய்ப்போலிருக்கிறது. ஆனால் அதைப்பற்றி இப்போது நினைப்பதில் பிரயோஜனமில்லை. வீணாக மனதுக்கு வேதனை வைத்துக்கொள்ள வேண்டாம்" என்றாள் இந்துலேகை.

"பரீட்சையைப்பற்றி நான் நினைக்கவேயில்லை. ஒருவனுக்கு சுகமுண்டாவதற்கும் துக்கமுண்டாவதற்குமான காரணங்கள் அவன் வசத்திலில்லாதிருக்கும்போது அவன் எப்படி வேதனைப்படாமல் மனதை சுவாதீனமாக்கி வைத்துக்கொள்ள முடியும்?" என்றான் மாதவன்.

"வைக்கத்தான் வேண்டும். அதில்தானே புருஷனுடைய யோக்கியதை இருக்கிறது."

"ஸ்திரீயின் யோக்கியதையோ?" என்றான் மாதவன்.

"மனதுக்கு நிம்மதியில்லாததால் ஆட்டத்தில் புத்திசெல்லவில்லை யென்று இப்போது சொன்னது ஸ்திரீயல்லவே. அப்படி சொன்னது யாரோ மாதவனென்னும் பெயருடைய புருஷனென்று நான் நினைக்கிறேன்" என்றாள் இந்துலேகை.

"ஒருவேளை இந்துலேகையால் தான் எப்போதும் மனதை சுவாதீனப்படுத்தி வைத்துக்கொள்ள முடியும்போலும்" என்றான் மாதவன்.

"நான் அதை ஒருபோதும் பரீட்சித்ததில்லை. மனது சுவாதீனத்தி லில்லாதபோது தானே அதை சுவாதீனப்படுத்த முயலவேண்டும். இதுவரையிலும் என்மனம் அப்படி என் சுவாதீனத்துக் குட்படாமல் போகவில்லை. இந்தவிதமாய் நீ இவ்விஷயத்தை யோசித்துப் பார்க்கும் பட்சத்தில், மனதை ஸ்வாதீனப்படுத்தவேண்டிய பிரயத்னத்தை இதுவரையிலும் நான் செய்யவேண்டிய பிரமேயமே ஏற்படவில்லையென்று தெரியவரும்" என்றாள் இந்துலேகை.

(இன்னும் வரும்.)

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

புருஷார்த்தங்கள்.—உலகில் உள்ளமனிதர்களால் விரும்பக்கூடியவைகளை எல்லாம் ஒழுங்குபடுத்தி நோக்கின் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கனுள் அடங்கும். ஆகையால் இவை நான்கனுக்கும் சதுர்வித புருஷார்த்தங்கள் என்று பெயர். (அர்த்தம் என்ற பதம் இதே பொருளில் வித்தியார்த்தி அர்த்தார்த்தி என்பவைகளில் காணப்படுகிறது.) இவற்றிற்கு முறையே அறம், பொருள், இன்பம், வீடு என்று தமிழில் பெயர்.

இவைகளுள் தர்மம் அல்லது அறம் என்பது மனு தர்மசாஸ்திரம், ஸ்மிருதிகள் முதலிய விதிவிலக்கு சாஸ்திரங்களில் ஒவ்வொரு ஜாதிக்கும் செய்யத்தக்கவை என்று விதித்துள்ளவைகளைத் தவறாது அந்தந்த சாதியார் செய்வதும், செய்யத்தகாதவை என்று விலக்கியுள்ளவைகளைச் செய்யாமல்விடுவதுமேயாம். அர்த்தம் அல்லது பொருள் என்பது முற்கூறியதர்ம வழியில் இருந்து கொண்டு ஸம்பாதிக்கும் பொன், தான்யம் முதலியன. காமம் அல்லது இன்பம் என்பது தர்மவழியில் ஸம்பாதித்த பொருளை தர்மசாஸ்திரங்களில் காட்டியிருக்கும் வழிகளின்படி உபயோகப்படுத்தி அடையும் இஹலோகஸுகங்களேயாம். இவைகள் எல்லாவற்றையும் தாழ்ந்தவையெனத் துறந்து உலகப்பற்றுகளிலிருந்து விடுபட்டு அடையப்படும் நிரதிசய ஆனந்தநிலைக்கு மோக்ஷம் அல்லது வீடு என்று பெயர். நீதிநூல்கள் எழுதியிருக்கும் பெரியோர்கள் இவைகளையே தமது நூலுக்குப் பாகங்களாகக் கொண்டு விவரித்திருக்கின்றனர். அவர்களுள் தெய்வப்புலமைத்திருவள்ளுவனார் தாம் எழுதிய திருக்குறளில் தர்மம் அல்லது அறம் என்பதை ஜாதிகள்தோறும் பேதப்படும் விதிவிலக்கின்படி அனுஸரித்து நடத்தல் எனக் கொள்ளாது எல்லோருக்கும் பொதுவாயும் அங்கீகரிக்கத்தக்கவையாயும் உள்ள கார்ஹஸ்தியம் அல்லது இல்லறம், ஸந்யாஸம் அல்லது துறவறம் என்று கொண்டு விவரித்திருக்கின்றனர். மேலும் மோக்ஷம் அல்லது வீடு என்பது

'சிறுகாலையிலா நிலையோதிரியா
குறுகா நெடுகா குணம் வேறுபடா
வுறுகால் கிளர்பூதமெலா முகினும்
மறுகாநெறி

ஆதலால் அதைப்பற்றி நேராக நூல்களில் சொல்லமுடியாதாயினும் அதை துறவறம் என்றதன் காரணவகையாகச் சொல்லிருக்கிறார். ஆதலால் புருஷார்த்தம் நான்காயிருப்பினும் அவற்றை திருக்குறளில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பாகங்களுள் அடக்கி இருக்கின்றது. இது போலவே மற்றைய நீதிநூல்களிலும். புருஷார்த்தங்களின் ஸ்வரூபத்தை ஔவை என்ற கவிமாது

'ஈதலறந், தீவினை விட்டீட்டல் பொருள், எஞ்ஞான்றும்
காதலிருவர்கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம், பரனை நினைந்திம் மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

என்று ஒருபாட்டில், தடையின்றி கொடுத்தலே தர்மம், நல்லவழியில் ஸம்பாதிப்பது அர்த்தம். இருவர் மனம்ஒத்து வாழ்தலே இன்பம், பரம்பொருளை எண்ண, இம்மூன்றிலிருந்து விடுபடுவதுவே மோக்ஷமென்று சுருக்கமாகச் சொல்லிவிட்டாள்.

மேலும் தர்மத்திற்கு இம்மை, மறுமை, வீடு முதலிய மூன்றையும் கொடுக்கும் சக்தியும்; பொருளுக்கு இம்மை, மறுமை இவ்விரண்டையும் கொடுக்கும் சக்தியும்; தர்மம் இன்பம் ஆகிய இவைகளுக்கு ஸஹாயமாகும் சக்தியும், இன்பத்திற்கு இம்மை ஒன்றைக்கொடுக்கும் சக்திமாத்திரமும் உண்டு. இவைகளிலிருந்து விடுபடுவதே வீடு ஆகையால் புருஷார்த்தங்களை அறம், பொருள், இன்பம், வீடு என்ற ஒழுங்கில் அமைக்கப்பட்டிருக்கின்றது.

இப்புருஷார்த்தங்களை அடைய முக்கிய ஸாதனங்கள் யாவை? அறத்தை நன்குநடத்த நல்லொழுக்கமும், பொருளை ஸம்பாதிப்பதற்கு உண்மையாக உழைப்பதும், இன்பத்தை ஸம்பாதிப்பதற்கு கிடைத்தபொருளை நியாயமார்க்கங்களில் செலவிட்டு, வியஹாரங்களில் அறநெறிதவறாது நடப்பதும், வீடு அடைவதற்கு பரம்பொருளது உயர்வையும், உலக விஷயங்களின் தாழ்வையும் அறிதலுமே தகுந்த ஸாதனமாகும். ஆனால் இவைகள் எல்லாவற்றிற்கும் முக்கியஸாதனம் கல்வி ஒன்றே. நன்றாக கல்விப் பயிற்சி செய்பவர்.

'கற்க கசடற, கற்பவைகற்றபி
னிற்க வதற்குத்தக'

என்ற கோட்பாடை மறவாதிருப்பார்களாயின் அவருக்கு நான்கு புருஷார்த்தங்களும் தடையின்றி ஸித்திக்கும். இதுபற்றியே குமர குருபரஸ்வாமிகளும் தமது நீதிநெறிவிளக்க ஆரம்பத்தில்,

'அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
* * *
கல்வியினூங்கில்லைச்
* * *
சிற்றுயிர்க்குற்றதுணை'

என்று வற்புறுத்தியிருக்கிறார்.

கடவுள் தியானம்.—திரை செறிகடற் சூழ்ந்த இப்பூவுலகத்தின் கண்ணுள்ள சராசரப் பிரபஞ்சங்களனைத்தும் படைத்து அவைகட்குரிய வினைப்போகங்களை யூட்டி யாட்டுபவர் கடவுளேயாம். கொஞ்ச தூரத்திலுள்ள அக்னி நமது கண்ணுக்குப் பிரத்தியக்ஷமாகப் புலப்படா விடினும் அவணிருந்து மேலே கிளம்பும் புகையினால் அங்கு அக்னியிருத்தல் வேண்டுமென்று நாம் ஊகித்தறிவதுபோலவும் நாம் காற்றை நேரே பார்க்கமுடியா விடினும் அதன்ஸ்பரிசவுணர்ச்சியினாலும்செய்கையினாலும் அத்தகையப் பொருள் ஒன்றிருத்தல் அவசியமெனக் கருதுதல்போலவும் நாம் கடவுளைக் கண்கூடப் பார்க்காவிடினும், அவரின் ஆக்கினையினாலேயே இவ்வூரிலுள்ள சேதன சேதனப்பொருள்கள் இயங்கிவரும் விசித்திரத்தினால் அப்படிப்பட்டப் பொருளொன்று இருத்தல் வேண்டுமென்ற உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயமற துணிவுடனறிந்து கொள்ளலாம். நாம் ஒரு புத்தகத்தை அச்சியற்றக் கருதி அதைக் காகிதத்திலெழுதி ஓர் அச்சியந்திரசாலையில் ஓர் புறத்து வைத்துவிட்டு வருவோமாயின், அப்புத்தகத்திற்குவேண்டிய எழுத்துக்கள் யாவும் குறைவின்றி அவண் கிடப்பினும் எவ்வாறு அவையாவும் புத்தகரூபமாக தாமே யமையாதவாறு போல் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் எனும் பஞ்சபூதங்களும் இவற்றின் ரூபமாகிய மற்றப் பொருள்களும் இவ்வுலகத்திலே குறைவின்றி நிறைந்திருப்பினும் சர்வஞ்ஞராகிய கடவுளின் ஆணையின்றி அவைகள் ஒருபொழுதும் ஒழுங்காக நடவா. நாம் வசிக்கின்ற இவ்வுலகமும் இதையொப்ப கணக்கிலாப் புவனங்களும் ஆகாயத்திலே யந்தரமாய் இயங்குவதும் அதிக ஆழமும் விஸ்தீரணமு முள்ள கடல் இப்பூமண்டலத்தை நாற்புறமுஞ் சூழ்ந்திருந்தும், யாதொருவித வரம்பின்றி தனக்கு வரையறுக்கப்பட்டுள்ள வெல்லைக்குட்பட் டிருப்பதும், சூரியசந்திர கிரகங்களியாவும் தத்தமக்கு வரையறுக்கப்பட்ட காலக்கிரமத்தில் இம்மியழுவாது ஒழுகிவருவதும், நாமும், இன்னும் மற்றப் பிராணிகளும் அவ்வவ்விடத்தில் தத்தமக்கேற்ற வழிகளினின்று சுகமாய் வாழ்வதற்குத் தக்க சாதனங்கள் அமைந்திருப்பதும் கடவுளின் கருணையினாலும் வல்லமையினாலுமே.

அத்தகைய கடவுளுக்கு எட்டுக்குணங்களுள. அவையாவை யெனின்:—தன்வயத்தனாதல் (சுவதந்திரத்துவம்) தூயவுடம்பினனாதல் (விசுத்ததேகம்) இயற்கை யுணர்வினனாதல் (நிராமயான்மா) முற்றுமுணர்தல் (சருவஞ்ஞத்துவம்) இயல்பாகவே பாசங்களினீங்குதல் (அநாதிபோதம்) பேரருளுடைமை (அலுப்தசத்தி) முடிவி லாற்றலுடைமை (அநந்தசத்தி) வரம்பி லின்பமுடைமை (திருப்தி). அல்லாமலும் அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்த்தி, பிராகாமியம், ஈசிதை வசிதை முதலிய வெட்டும் எண்குணங்களென்றும் கடையிலாவறிவு, கடையிலாக்காட்சி, கடையிலாவீரியம், கடையிலாவின்பம், நாமபின்னம், கோத்திரபின்னம், ஆயுவின்மை, அழியாவியல்பு முதலிய வெட்டும் எண்குணங்களென்றும் கூறவாறுமுளர்.

தெய்வபக்தியுள்ள வொருவனுக்கும் அஃதில்லா வொருவனுக்குமுள்ள பேதம் கண்ணுள்ளவனுக்கும் இல்லாதவனுக்கு முள்ளபேதமே. எழுத்துக்கள் எவ்வாறு அகரத்தை முதலாகவுடையனவோ அதுபோல் உலகம் ஆதிபகவனை முதலாகவுடையது. கடவுளைத் தொழாவிடின் எத்துணைக் கல்விமானாயினும் பயனில. விருப்பு வெறுப்பிலா கடவுளைத் தியானித்தவர்கள் என்றும் சுகமுற்றிருப்பார்கள்; அல்லாமலும் பரலோகவின்பத்தை யடைவார்கள்.

நாம் சுகத்தை யனுபவிக்கச் செய்வதும், துக்கத்தை யனுபவிக்கச் செய்வதும் கடவுளே யானதினால், சுகமனுபவிக்கும் போது கடவுளிடத்து நன்றிபாராட்டுவதுபோல் துக்கமனுவிக்கும் போதும் அந்தனை வழிபாடுகள் செய்து நன்றிபாராட்டுவது நமது கடமையே. துன்பம்நேரிட்டபோது கடவுளை நிந்திப்பது மூடத்தனமே. அத்துன்பங்கள் யாவும் நம்முடைய மாசையகற்றவே ஆகையான் நாம் என்றும் கடவுட்டியானஞ் செய்யவேண்டும்.

* * *

அச்சாணி அன்னதோர் சொல்.—'வேதாந்தம் ஒரு சிறந்த சாஸ்திரமென்று பலர் கூறுகின்றனர். ஆனால் என்னமோ தெரியவில்லை, என்மண்டையில் அது ஏறவேமாட்டேன் என்கிறது,' என்றார் ஒரு பிரபு மிகவும் அலக்ஷியமாக. அவரோ, மேல் மேலும் தமக்கு உலகசிறப்பு வந்து கைகூடுமென்ற எண்ணத்தோடு ஸுகத்தில் மூழ்கிக் கிடப்பவர். இதைக் கேட்டுக்கொண்டு அருகாமையிலிருந்த அவர் ஸ்நேகிதன் ஒருவன் 'உமக்கு வேதாந்தம் படிக்கும்படியான நிலை என்னய்யா வந்துவிட்டது! அதுதான் உமக்கு அது விளங்கவில்லை' என்று ஆணி அறைந்தாற்போல் மறுமொழி கூறினான். உண்மையிலேயே வீண் மனோராஜ்யமாம் உலக இன்பங்களில் மூழ்கித்தத்தளிக்கும் பாமரர்க்காக வேதாந்தம்உண்டாகவில்லை. அவைகளின் நிலையாமையையும் இழிவான தன்மையையும் அறிந்தவருக்காகவே உண்டானது அச்சாஸ்திரம்.

## ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்பது பழமொழி. தினை அளவு நல்லது செய்தால் கூட அதை பனை அளவாகக் கொள்வது பெரியோர் சுவபாவம். நன்றி செய்தவரை மதியாதிருப்பது மூடத்தனமல்லவா? அதுபெருமை ஆகுமா? தெரிந்தும், செய்தவரை அலட்சியம் செய்வது பெருந் தப்பிதமாகிறது. "அந்தமாதிரி நான் செய்யமாட்டேன். எனக்கு சௌக்கியமுண்டாக்கிய என் தலைவனுக்கென்றும் காலாலிட்ட வேலையை தலையாலே நான் செய்வேன். அவர் எனக்கு வேண்டியதைக் கொடுக்கின்றார். அவருடைய பெருமையால்தான் நிலைத்திருக்கிறேன். அவருக்கு என்றுங் கடமைப்பட்டவளாயிருக்கிறேன். அவருக்கு செய்யவேண்டியதைக் காட்டிலும் எனக்கு வேறு என்ன வேலை. என் கொழுனனுக்குவேண்டியவெலாம் நானே செய்வேன். நானே ஆதரிப்பேன். இது நிச்சயம்" என்று எவள் மனதி லுதித்தவ்வாறு நடக்கிறளோ அவள் பெருமை அடையாமலிருக்க முடியுமோ?

***

பெரியோரது தரிசனமாத்திரமே உலகத்திற்கு சுகமுண்டாகிறது. பெரியோரில்லாத நாட்டுப்பெருமை கெடுகிறது. நாடுகெட நிலமும்கெடுகிறது. ஜனங்களும் கீழ்மை அடைகிறார்கள். நியாயம் நிலைதவறி போகின்றது. இதற்கெல்லாம் ஆதிகாரணம்—பெரியோர் இல்லாமலிருப்பதல்லவா? பெரியோரிருத்தலும் ஜனங்களின் வளர்க்கையினு லுண்டாகிறது: வளர்த்தலும் தாய்த்தந்தை வேலை. அதிலும் தாய்தான் தன் மகனிடத்து அதிகமாகப் பழகுவது. ஆனதினல் தாயினல்தான் சிறுவரெல்லாம் பெரியோராகவேண்டும். ஒவ்வொரு பெண்டிரும் இதைக் கொஞ்சம் கவனமாகயோசிப்பாராக!

***

"பேய்கொண்டாலும் கொள்ளலாம் பெண்கொள்ளலாகாதே" என்று பாடினர் ஒருகவிராயர். இம்மாதிரியானப் பட்டம் வந்ததைக் குறித்து சரியானப் பெண்கள்கேட்டும் பிழைத்திருப்பா ரென்பது சந்தேகம். "சரியாக நடந்து நல்லபெயர் எடுத்து வாழ்வதுதான் எனக்கு பெருமை, நான்வந்த குலத்திற்குப் பெருமை. நான் புகுந்த வீட்டிற்கும் பெருமை" என்று எவள்மனதிலுதிக்கிறதோ அவள்தான் சரியான பெண்.

தண்டவாளத்தின் மேல் சென்றால் தான் புகைவண்டி சரியாக ஓடும். இல்லாவிடில், தடைப்பட்டு நின்று விடுவதும் அல்லாது உள்ளிருப்பவர்களுக்கும் கஷ்டத்தை உண்டாக்குகிறது. தண்டவாளமும் சக்கிரமும் ஒத்திருந்தால் எல்லார்க்கும் சௌக்கியம்—அதுபோல், வீட்டுவேலை முதலியவைகளைச் சரியாய் செய்துக்கொண்டிருந்தால் பெண்களும் சரியான வாழ்க்கையை அடைவார்கள், இல்லாவிடில், தானுங்கெட்டு, தன்னை பெற்றார் உற்றார் பேரையும் கெடுக்கிறார்கள். அவ்வாறு நடவாமல் சரியாக நடப்பதே பெண்டிர்களுக்கு முதல்முதல் வேலை.

***

கவரிமான் ஒரு மயிரை இழந்துவிட்டால் கூட பிராணனை விட்டுவிடுகிறது. மானத்தை இழப்பதைக் காட்டிலும் பிராணனை மாய்த்துக்கொண்டுவிடலாம். இது எல்லார்க்கும் சம்மதந்தான். பெண்டிருக்கு மப்படியே. தன் மானம் போகாமல் பாதுகாத்துக் கொள்வதுதான் அவர்க்கு முதல்வேலை. தன் கணவனுக்கு ஒரு அவமானமுண்டாகும்படியானக் காரியத்தைத் தான் செய்யக்கூடாது. அவனுடைய மானம்தான் இவளுக்கு மானமாகிறது. அவனுக்கு அவமானம் வராமலிருக்கும்படி நடக்கிறதுதான் இவளுக்கு மானமாகிறது.

***

"பானை தொட்டவள் பாக்கியவதி" என்றொரு பழமொழியுண்டு, அதாவது பானையைத் தொடுவதாவதென்ன? பானை - அதாவது மண்பானை அல்லது வெண்கலப்பானை, அது எதுவானாலுஞ் சரி - பானையில் அன்னஞ்சமைத்து தன் கணவன் முதலியோர்க்களித்தல். அதாவது தான் புக்கவீட்டில், தன்வீடென நினைத்து, கணவன் முதலியோருக்கு சோறு சமைத்திட்டு வாழ்தல். அவ்வாறு வாழ்வது அவளுக்கு பெருமை ஆனமையால் அவள் பாக்கியவதி ஆகிறாள். அவளுக்குப் பெருமைதான் செல்வம். செல்வம் வேறு என்ன வேண்டும்?

***

"மதியாதார் தலைவாசல் மிதிக்கவேண்டாம்" என்றாள் ஔவை. பெண்ணும் தன் கணவனை மதியாதவர்வீட்டு நிழலில்கூட நிற்கக்கூடாது. அப்படி நின்றால் தன் கணவன் மனதிற்கு ஆயாசமுண்டாகும். தன் சௌக்கியமும் குறைந்துவிடும். ஆனதினல் தனக்குக் கஷ்டமுண்டாகும்படி காரியஞ் செய்வானேன்?

பனைமரத்தின்கீழ் பால்குடித்தாலும் கள்குடித்தானென்பது சுபாவமல்லவா? அது தெரிந்தும் அப்படி செய்வது தப்பல்லவா? தனக்கலுவலில்லாத விடத்தில் ஓர் பெண் சென்றாலும் சந்தேகத்திற்கிடமுண்டாகும். அதை விட்டுவிடுவதே அவளுக்கு பெருமையை உண்டாக்கும்.

***

கல்லைக் குத்தினால்கைநோகுமேயொழியவேறில்லை; ஆனதனால் கெட்டவர்களை திருத்தவ தசாத்திய மென்பார் சிலர். ஆனால் கல்லையும் குத்தும் வழியால் குத்தினால் அழகமைந்த விக்கிரகங்கள் உண்டாகின்றன. ஆனதினால் கெட்டவன் திருந்தமாட்டான் என்பது சரியல்ல. அவனைத்திருத்தும் வழியாய்த் திருத்த வேண்டும். பெண்டிருக்கு மப்படியே. சரியாய் நடவாதவரை சரியான வழிக்குக் கொண்டுவர முயல்வதுதான் பத்தினிக் கழகு.

***

தான் சௌக்கியமாயிருப்பது பெருமை ஆகமாட்டாது; அநேகரை சௌக்கியமடையும்படி செய்வது தான் பெருமை ஆகும்.— தான் பதிவிரதையாக இருப்பது பெரிதல்ல. எல்லாரையுமப்படி இருக்கச்செய்வது உயர்ந்த பெண்களுக்கு பெருமை. இது அவர்களுக்கு தர்மம் என்க.

***

கோடுபோட்ட கட்டமில்லாமல் சதுரங்கமெப்படி ஆடமுடியும்? முடியாது. அதுபோல, தன் நேசபாசங்களைச் செலுத்த ஒரு லக்ஷியமில்லாமலெப்படி இருக்கமுடியும்? கணவனென்னும் லக்ஷியமல்லாமல் பதிவிரதையின் லக்ஷணமெப்படி இருக்கும்? இருக்கமுடியாது.

***

ஆற்றுமணலை வெறும்பொடியாகிய கற்களின் கூட்டமென்று எண்ணாமல் தோண்டினால், எவ்வளவு ஆழம் தோண்டுகிறோமோ அவ்வளவு அதிகமாக சுத்தமான தீர்த்தம் தோன்றி நமது தாகத்தை அடக்குகிறது. பெண்ணும் தன் கணவனை வெறும் ஆணென எண்ணாமல் அவன் சொற்படிநடந்து அவன் குணங்களை ஆராய்ந்தால் அவனிடத்து ஒரு தெய்வீகத் தன்மையைக்கண்டு அதனால் ஆனந்தமடைகிறாள். இதுதான் பதிவிரதையின் சுபாவம்.

***

விவாகம் பலபேர் பல எண்ணங்களோடு செய்துகொள்ளுகிறார்கள்; இதைப்போ விழிவானதெதுவுமில்லை. சிலர் ரூபலாவண்யத்தை அநுபவிக்கச் செய்துகொள்ளுகிறார்கள்; இது மத்தியமம். சிலர் குணகணங்களைப்பார்த்து பெண்ணை வரிக்கின்றனர்; இது தான் உத்தமம். பெண்ணானவள் பொறுமையும் பெருமையுமுடையவளாக இருத்தல்தான் வீட்டிற் கழகு.

***

"இந்த பாழும்வீடு எப்படிபோனாலென்ன"? என்று வாய்விட்டு இரவும் பகலும் ஓயாமல் தகுந்த இடம் தகாத இடங்களில் நாய்போல் குரைப்பவள் பெண் ஆகமாட்டாள். நாயாகிலும் தானுண்ட வீட்டை இடைவிடாமல் காக்கிறது. இவள் நாயிலும் கடைகெட்டநாய்.

***

"இந்த இராவணனை 'சொல்லினால் சுடுவேன்' ஆனால் அது என் நாயகன் வில்லிற்கு பெருமையைக் குறைத்துவிடும் என்று எண்ணி செய்யவில்லை" என்றாள் சீதை அவளை ஹனுமார் வந்து அசோகவனத்தில் கணையாழியுடன் கண்டபொழுது. இதுதான் பதிவிரதையின் லக்ஷணம். கணவனது பெருமை லவலேசமும் குறையாம லிருக்கவேண்டுமென்பது அவள் கருத்து.

***

"ஆலும் வேலும் பல்லுக்குறுதி
நாலுமிரண்டும் சொல்லிற்குறுதி
வாளும் வேலும் அடலுக்குறுதி
பாலும் நெய்யும் உடலுக்குறுதி"—என்பது ஒரு பழமொழி.

"பல்லைத் தேய்த்துச் சுகமாகவைக்கவேண்டுபவர் ஆலங்குச்சியும் வேலங்குச்சியு முபயோகிப்பாராக! தமிழ்ச்சொல்லின் அருமையை அநுபவிக்க இஷ்டங்கொண்டவர்கள் திருவள்ளூர் எழுதிய திருக்குறளும், ஜைனமுனிவர்க ளியற்றிய நாலடியாரையும் படித்தறிவாராக! சண்டைசெய்து யுத்தம் ஜயிக்க விரும்புவோர் வாளையும் வேலாயுதத்தையும் பிரயோகிக்கக் கற்றறிவாராக! உடம்பைச் சரியாகக் காப்பாற்ற விரும்புவோர் பாலையும் நெய்யையும் அருந்துவாராக!" என்பது இதன் கருத்து. அதேமாதிரி வீட்டின் அழகைக் காணவிரும்புவோர் பத்தினிக்கு உரியகுணங்களை அடைவாராக.

***

"கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என்றாள் ஔவை. சொற்றிறம்பாமையாவது என்ன? தனது நாயகன் மனதுகோணாமல் நிற்கு நிலை. அவர் ஒருவேளை சிலதப்பிதங்கள் செய்தாலும் அதைப் பொறுத்து நடப்பதுதான் பெண்களுக்குப் பெருமை. அவர் மனது கோணும்படி நடத்தல் தனது அகங்காரத்தைக் காட்டுகிறது. வணக்கம் தான் பெருமை உண்டாக்கும். வணக்கமடைந்து கணவனுக்கு தக்கமாதிரி நடக்க மனங் கொண்டு வாழ்வதுதான் பெண்களுக்கு பெயரை உண்டாக்கும். அப்படியே நடந்து பெருமை அடைவாராக.

வா. சேஷகிரி சாஸ்திரி,

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

---

**ஸமுத்திரத்தில் அடிக்கும் புயல் சென்று தாக்கும் ஆழம்.**—ஸமுத்திரத்தில் அடிக்கும் பயங்கரமான புயல்காற்றுக்களின் வேகம் 15-அடி ஆழத்திற்குக் கீழே தெரிகிறதே இல்லை என்று பூதத்துவ சாஸ்திரிகள் பரிசோதனையின்மேல் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதற்கு முக்கிய ஆதாரம் முத்து முதலியவைகளை எடுத்துவர குளிப்பவர்கள் ஸமுத்திரத்தின் அடியில் மேலே நடக்கும்படியான அல்லோலகல்லோலங்களை அறியாமலே தமது தொழிலை நடத்துவது ஒன்று. இன்னும் சிற்சில ஸமயங்களில் ஸமுத்திரத்தில் மூழ்குவோர் நல்ல இளங்காற்று வீசும் ஸமயங்களில் மூழ்கி வெளிவருங்கால் பெரும்புயல் அடிப்பதைக் கண்டிருக்கிறார்கள். வெளிவரும் வரையில் அவர்களுக்கு புயலடிப்பதாகத் தோன்றவே இல்லையாம். இது மற்றொரு ஆதாரம்.

* * *

**வர்ணக்கண்ணாடி போட்டுக்கொள்வதால் உள்ள குணதோஷங்கள்.**— ஸாதாரணமாக கண்ணாடிகளில் நீலம், மஞ்சள், பச்சை ஆகிய இவ்வர்ணமுடைய கண்ணாடிகளே அதிகமாக உபயோகத்தில் இருப்பவை. இவைகளுள் நீலக்கண்ணாடி ஸூரிய வெளிச்சத்திலுள்ள உஷ்ணத்தையும் அதிலுள்ள கெட்ட குணத்தையும் எடுக்கும் சக்தியுள்ளது. ஆனால் அது ஸூர்யவெளிச்சத்தை அதிகமாக வளையும்படி செய்வதால் அதிகமாக தூரதிருஷ்டி குறைந்தவருக்கு அவ்வளவு உபயோகமாக இருக்கிறதில்லை. இதுபோட்டுக்கொண்டால் வெளிவஸ்துக்களின் பிரகாசம் அதிகமாகக் குறைவதில்லை. பச்சைக் கண்ணாடிக்கும் நீலக்கண்ணாடியின் குணங்கள் உண்டு. ஆனால் அதன் குற்றங்கள் ஒன்றும் இல்லை. வெளிவஸ்துக்கள் சற்றுமங்கலாகக்காணப்படும். ஆகையால் மிகுந்த பிரகாசமுள்ள வெளிச்சங்களைப் பார்த்து கண்ணில் ஓர்விதக் கூச்சம் உடையவர்களுக்கு இது அதிக உபயோகம். மஞ்சள் கண்ணாடிக்கு அதிப்பிரகாசமான வெளிச்ச பாகங்களைத் தடுக்கும் சக்தி இல்லாததால் அது போட்டுக் கொள்வதற்குத் தகுந்த கண்ணாடி அல்ல.

* * *

**சீமை பேரிக்காய் மூச்சுவிடுவது.**—சீமையில் ஒரு வித்வான் பேரிக்காய் மூச்சுவிடுவதை பரிசோதித்து வெளியிட்டிருக்கின்றனர். பேரிக்காய்களை ஓர் இடத்தில் சேர்த்து வைத்திருந்தால் அவைகள் ஜந்துக்களைப்போலக் கரியமல வாயுவை வெளியே விடுகின்றனவாம். அவைகள் இவ்வாறு மூச்சுவிடுவதால் வரவர மிருதுவாக அவைகளின் கனமும் குறைகின்றதாம். அப்பேரிக்காய்களை அதிக குளிர்ச்சியான இடங்களில் சேர்த்துவைத்தால் அவைகள் அதிகமாக மூச்சுவிடுவதில்லையாம். ஆகையால் அப்பழத்தில் வியாபாரஞ் செய்வோர் அவைகளைப்பறித்த உடன் குளிர்ந்த இடங்களில் சேர்த்து வைக்கவேண்டும். இல்லாவிடில் அவைகளுக்கு நீடித்துக் கெடாதிருக்கும் சக்தி போய்விடும்.

* * *

**மாற்றி எழுதும் குழந்தை.**—ஆறுவயதுள்ள ஒரு சுறுசுறுப்புள்ள பையன் ஒருவன் எழுதக் கற்றுக்கொண்டிருந்தான். எழுதியிருக்கும் எழுத்தைப்பார்த்து அவன் ஸரியாக எழுதுவான். அவனையே தனியாக எழுதும்படி விட்டுவிட்டால் அவன் காகிதத்தின் வலதுபாகத்தில் தொடங்கி இடதுபாகவரையின் வெகு லகுவாக மாற்றி எழுதிவிடுவான். அதை வாசிக்கவேண்டுமாகில் கண்ணாடிக் கெதிரில் பிடித்து நிழல் மூலமாக அதை எளிதில் வாசித்து விடலாம். அவனுக்கு இரண்டுவிதமான எழுத்துக்களையும் எளிதில் வாசிக்கும் திறனுண்டு. எது ஸரியான எழுத்தென்று அவனைக் கேட்டால் வலது பக்கத்திலிருந்து இடது பக்கம்வரைமாற்றி எழுதும் எழுத்தே ஸரியானது என்பான். அவன் படம் எழுதும் ஸமயத்தில் படத்தை ஸரியாக எழுதிவிடுகிறான். ஒருதரம் ஒரு நீராவி வண்டிப்படம் ஒன்றைப் பார்த்து ஸரியாக எழுதிவிட்டான். ஆனால் அதில் இருந்த எழுத்துக்களைத் தலைமாற்றி எழுதிவிட்டான். ஆகவே இவனுக்கு எழுத்து விஷயங்களில் மாத்திரந்தான் இந்த குற்றம் போலத் தோற்றுகிறது காணப்படுகின்றது.

* * *

**இக்காலத்திய நாகரீகம்.**—ஒரு பெரிய வித்வான் ஒருவர் 'இக்காலத்தில் பிரகிருதிசாஸ்திர ஞானம் நாகரீகம் முதலியன அதிகமாக இருந்தபோதிலும் நாம் முற்காலத்தவர்களைவிட மேன்மையான நிலையில் இல்லை. முற்காலத்தவர்கள் சரித்திரங்கள் அவர்கள் செய்திருக்கும் வேலைகள் முதலியவைகளால் அவர்களுக்கு இருந்த புத்தி விசாலமும் நற்குணங்களும் நம்மிடம் அதிகமாக இல்லையென்று தெரியவருகின்றது. ஆகையால் முற்காலத்தவர்கள் நம்மைவிட

புத்திக்குறைவு உடையவர்கள் என்பது வீணான எண்ணமேயொழியவேறில்லை. அவர்களைபக்ஷபாதமின்றி, உள்ளபடி அறியவேண்டுமென்ற ஆவலோடும் அன்போடும் அவர்கள் விஷயங்களை ஆராய்வோமாகில் அவர்களுக்கும் நமக்கும் புத்திவிஷயங்களில் அதிக பேதங்கள் இல்லை என்பது வெளிவரும். உலகத்தில் உள்ள நாகரீகமற்ற ஜாதியார்களிடத்தும் காணப்படும் நற்குணம் ஸமூகவாழ்க்கை முதலியவைகளை உற்று நோக்கில் அவர்களுக்கு எவ்வளவுதான் நாகரீகம் இல்லையாயினும் அவர்கள்நம்மைப்போன்றதேகம்,புத்தி, குணம் முதலியவைகளில் சிறப்பை உடையவர்கள் என்பது தெரியவரும்' என்று அபிப்பிராயப்படுகிறார்.

***

பறந்தும்கப்பல்கள்.— அநேகம் பிரகிருதி சாஸ்திரிகள் ஆகாயத்தில் பறக்கும்படியான கப்பல்களை உண்டாக்கலாமென்று எண்ணமிட்டுக்கொண்டிருக்கிறார்கள். இதைப்பற்றிச் சிலர் கதைகளில் எழுதியும் வெளியிட்டிருக்கின்றனர். இக்காலத்தில் பறக்கும் கூண்டுகள் ஸம்பந்தமாக பெரிய கப்பல்களைச் சேர்த்து ஆகாயத்தில் கிளம்பும்படி செய்து அதில் ஜனங்கள் ஏறிச்செல்ல ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றது. இன்னும் சொஞ்சகாலத்தில் ஆகாயமார்க்கமாக நாம் எளிதில் யாத்திரைசெய்யத்தக்க ஸௌகரியங்கள் ஏற்பட்டாலும்படலாம். இப்பொழுது சிற்சிலஇடங்களில்ஆகாயயாத்திரைநடந்துகொண்டிருக்கின்றது. ஆனால் அது எல்லோருக்கும் உபயோகமாகும்படியான ஸ்திதிக்கு வரவில்லை. கூடிய சீக்கிரத்தில் அவ்வாறு வந்து விடும்போலக் காணப்படுகின்றது.

***

சண்டை வண்டிகள்.—இதுவரையில் நடந்த சண்டைகளில் காலாட்கள், குதிரை ஸேனை, பீரங்கி ஸேனை ஆகிய மூன்றுமே அதிகமாகக் காணப்பட்டன. இப்பொழுது சண்டையில் தாமாகவே ஓடும் வண்டிகளைஉபயோகிக்கத்தொடங்க ஏற்பாடுகள்நடக்கின்றன. முற்காலங்களில் இந்தஸ்தானத்தில் ரத சேனை இருந்தது ஆனால் அதற்கும் இந்தப் புதிய சண்டைவண்டிகளுக்கும் அதிக பேதமுண்டு. முற்காலத்து ரதங்களுக்கு ஸாரதி குதிரை முதலியன, வேண்டும். எதிரிவிடும் பாணுதிகளைத் தடுக்கத்தக்க ஏற்பாடுகள் அதில் இல்லை. இக்காலத்தில் ஏற்பாடு ஆகும்சண்டைவண்டிகளுக்குத் தாமாகவே நகரும்சக்தி உண்டு. அதில் பீரங்கி முதலியன வைக்க இடமுண்டு. அது ஒருசிறு கோட்டையைப் போன்ற பந்தோபஸ்துகள் உடையது. அது சண்டையுள் போகும்போது ஸேனைகளைச் சின்னாபின்னப்படுத்தும். மேலும் ஸேனாதிபதி இம்மாதிரியான வண்டிகளில் ஏறிக்கொண்டு சண்டை கோரமாக நடந்து கொண்டிருக்கும் பொழுதே எதிரிகளின் குண்டுகளை லக்ஷியஞ் செய்யாது தைரியமாக தனது ஸேனையை மேல்பார்வை பார்த்து வரலாம். கூடிய சீக்கிரத்தில் இவ்வண்டிகள் இக்காலத்து ஸேனைகளில் ஒரு அங்கமாகப்போக ஸேனைகள் ரதம், குண்டு, குதிரை காலாட் படைகள் ஆகிய சதுரங்கஸேனைகளாகிவிடும் போலத்தோற்றுகிறது.

***

ஊசிகள் தேகத்துள் பாய்ந்துபோவது.—மனித தேகத்துள் ஊசிகள்போய் இடம்விட்டு இடம் ஓடிப் போகின்றதாம். ஒருத்திக்கு இடது காலில் ஊசிகுத்தி உள்ளே ஏறிவிட்டதாம். அதுபோனது அவளுக்குத் தெரியாமற்போக அது அவள் தேகத்துள்ளேயே 30-வருஷம் இருந்ததாம். அது அதற்குப்பின் அவளது வலது முழங்கையில்தோன்ற அதை எளிதில் எடுத்து விட்டார்களாம். மற்றொருவளுக்கு இடது கட்டை விரலில் ஊசி குத்தி முறிந்து பாய்விட்டதாம். அப்பொழுதே அந்த ஊசியை எடுக்க வைத்தியர்கள் முயன்றும் அது அவர்களுக்கு அகப்படவில்லை. ஒரு வருஷம் கழிந்தபின் அவளுக்கு வலது சுண்டு விரலில் ஏதோ ஒரு குறு குறுப்புத் தட்ட அவள் சதையைக்கீறி அங்கிருந்து ஊசியின் ஒடிந்த பாகத்தை எளிதில் எடுத்து விட்டாள். 20-வயதுள்ள வேறொரு ஸ்திரீக்கு வாயில் குண்டூசியை வைத்திருக்கும் கெட்டவழக்கம் இருந்ததாம். அவள் வாயில் ஊசியோடு சிற்சில ஸமயங்களில் மெய்ம்மறந்து தூங்கிவிடுவாள். ஒரு ஸமயத்தில் அவளுக்குத் தான் 5 ஊசிகளை விழுங்கிவிட்டதாகத் தோற்ற வைத்தியசாலை சென்று வாந்திக்கு மருந்து வாங்கிக்கொண்டு அவள் 5 ஊசிகளையும் வெளியில் கக்கி விட்டாள். வீடுவந்ததும் அவளுக்கு வாந்திக்கு அடிக்கடி வருவது போலத்தோன்ற சிற்சில ஸமயங்களில் அவள் இதற்கு முன் அறியாது விழுங்கிய ஊசிகளை வாந்தி செய்தாள். அடுத்த ஒரு மாதத்திற்குள் அவள் ஸுமார் 23 ஊசிகளையும், அடுத்த பக்ஷத்தில் 13 ஊசிகளையும், மூக்கு, இடது காதின் பின்பாகம், வலது கையின் முன்புறம், ஆகிய இவ்விடங்களில் இருந்து வெளியாக்கினாள். மேலும் 75 ஊசிகள் வெளிவரும்படி வாந்தியையும் செய்தாள். அதில் இரண்டில், மூன்று அங்குலம் நீளம் நூல்களும் கோர்க்கப்பட்டிருந்தனவாம்.

## ஸ்ரீ ராம பட்டாபிஷேக மஹோத்ஸவம்

மயிலாப்பூர் பீ. எஸ். ஹைஸ்கூல் முதல் உதவிப் போதகரான ஸ்ரீமத் ஏ. எஸ். கஸ்தூரிரங்கய்யர், பி. ஏ., எல்.டி., அவர்களால் ஒழுங்குபடுத்தி எளிய நடையில் இயற்றப்பட்ட ஸ்ரீ ராமாயண வினாவிடையை இவ்வருஷம் முதல் வகுப்பில் வரிசையாய்ப் படித்துவந்த பிள்ளைகள் முடிவில் ஸ்ரீராம பட்டாபிஷேகத்தைக் கோலாகலமாய் கொண்டாடக் கருதி இம்மாதம் 15உ 3-மணிக்கு மேற்படி ஸ்கூலில் இந்த உத்ஸவத்தை யாரம்பித்து வெகு சிறப்பாய் நடத்தினார்கள். அப்போது மேற்படி ஸ்கூல் ஹெட் மாஸ்டராகிய ஸ்ரீமான் வ. பஞ்சாபகேசய்யர் எம். ஏ., எல். டி. அவர்கள் அக்ராஸனம் வகித்தார்கள். இன்னும் அநேக உபாத்தியாயர்களும் பிரபுக்களும் விஜயஞ் செய்திருந்தார்கள். ஆரம்பத்தில் பள்ளிக்கூடத்தில் வழக்கமான ஸ்தோத்திரங்கள் பாடப்பட்டபிறகு ஒரு பையன் வால்மீகி, ஹநுமார், ராமாயணம், ஸ்ரீ ராமர் இவர்களின் ஸ்தோத்திரங்களை வெகு நன்றாய்ச் சொல்லியவுடன் அக்ராஸனாதிபதியவர்கள் அந்த சுலோகங்களின் உட்பொருள்களைச் சிறுவர் முதலிய எல்லாரும் வெகு இலகுவாய்த் தெரிந்துகொள்ளும்படி சர்க்கரைப்பந்தலில் தேன்மழை பொழிந்தாற்போல் பிரசங்கஞ் செய்தார்கள். ஒரு பையன் மேற்படி புஸ்தகத்திலுள்ள இராமாயணக்காண்டக் கதையின் சுருக்கத்தைப் படித்தான். பின்பு உதவி ஸம்ஸ்கிருதபண்டிதரான ஸ்ரீ ராமநாத சாஸ்திரிகளவர்கள் வால்மீகி ராமாயணப்படி ஸ்ரீ ராமபட்டாபிஷேக ஸர்க்கத்தை வாசித்துத் தமிழில் பிரசங்கஞ்செய்தார்கள்.

பிறகு ஒரு பையன் ராமாயணத்திலிருந்து வெளியாகும் நீதிகளை வினாவிடையில் உள்ளவாறு வாசித்தான். இதன்பின்பு அக்ராசனாதிபதியவர்கள் அந்தச்சமயத்தில் வரவழைக்கப்பட்டிருந்த இராமாயண சம்பந்தமான படங்களின் அர்த்தத்தை விவரித்துச் சிறுவர்களுக்கெடுத்துரைத்தார்கள். அப்பொழுது வரவழைத்திருந்த படங்களாவன:—

1. மஹாவிஷ்ணு திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருத்தல்.
2. இராமலக்ஷ்மணர் விசுவாமித்திரரிடம் அஸ்திராப்யாஸஞ் செய்தல்.
3. பகீரதன் கங்கையைக் கொண்டுவருதல்.
4. அஹல்ய உத்தாரம்.
5. இராமர் தனுஸை ஒடித்தல்.
6. பரசுராமர்.
7. குஹன் இராமருக்கு ஓடம் விடுதல்.
8. இராமர் வனவாஸம்.
9. ஸீதா ஸ்வர்ண மிருகம்.
10. இராவண ஸந்யாஸி.
11. தர்ப்ப சயனம்.
12. இராமர் ஸமுத்ரராஜனைக் கோபித்தல்.
13. ஹனுமார் ஸஞ்ஜீவிபர்வதம் கொண்டுவருதல்
14. இராம பட்டாபிஷேகம்.
15. இராம பஞ்சாயதனம்.
16. இந்திரஜித் விஜயம். ஆகிய இவைகளே.

இவ்வாறு நடந்ததும் ஒரு பையன் எழுந்திருந்த இவ்விதம் இராமாயணம் முழுமையும் தாங்கள் கற்றுக்கொண்டதால் தமக்குத் தோன்றிய நன்றியறிதலின் அறிகுறியாக ஸ்ரீ சீதா ஸ்வயம்வரம், ஸ்ரீராமபஞ்சாயதனம் ஆகிய இரண்டு படங்களைப் பள்ளிக்கூடத்திற்குத் தானஞ்செய்திருப்பதாகக் கூறினான். பிறகு அக்ராசனாதிபதியவர்கள் இவ்விதம் சிறுபையன்களாகச் சேர்ந்து ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை வெகு விமரிசையாய் நடத்தியதுடன் தாங்கள் நன்றியறிதலோடு படதானஞ்செய்ததை வெகு அன்போடு அங்கீகரித்துத் தமது ஸந்தோஷத்தை வெளியிட்டார். பின்பு தீபாராதனம் முதலிய ஆராதனங்களோடும், ஜயகோஷத்தோடும், பிரஸாதம் முதலியவைகளின் விநியோகத்தோடும், வெகுநன்றாய் ஸ்ரீராம பட்டாபிஷேகம் நடந்தேறியது. எல்லாரும் வெகு சந்தோஷமடைந்தார்கள்.

இவ்விதம் ஆங்காங்கு பள்ளிக்கூடங்களில் நமது மத உண்மைகளை யுணர்த்தக்கூடிய ஸ்ரீராமாயண வினாவிடை, ஸ்ரீ மகாபாரத வினாவிடை முதலிய ஸத்கிரந்தங்களைப் பாடமாய் நடத்திப் பிறகு வருஷக் கடைசியில் ஸ்ரீ ராமபட்டாபிஷேகம் முதலிய உத்ஸவங்களைப் பிள்ளைகளைக்கொண்டு படிக்கச்சொல்லி நடத்தினால் நமது சிறுவர்களுக்கும் நாட்டிற்கும் க்ஷேம முண்டாகுமென்பதற்குச் சந்தேகமேயில்லை.

---

## "விவேக போதினி"

### ஓர் முக்கிய அபிப்பிராயம்.

சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-௱-௱-ஸ்ரீ வே. சாமிநாதய்யரவர்கள்:—

"சிலமாதங்களாக வெளிவரும் விவேகபோதினி என்னும் பத்திரிகையிற் சில பகுதிகளைப் படித்துப்பார்த்தேன். மதஸம்பந்தமான விஷயங்களும், நீதிகளைக் கற்பிக்கும் சிறு கதைகளும், புதிய நாடகங்களும் சில மொழிபெயர்ப்புக்களும், தற்காலத்திற்கேற்ற நாகரீக விஷயங்களும் இப்பத்திரிகையில் மிக எளியநடையில் எழுதப்பெற்றிருக்கின்றன; சிறுவர்களும் பெண்பாலாரும் இதனால், பல விஷயங்களையும் வருத்தமின்றித் தெரிந்துகொள்ளலாம்.

தமிழ்ப் பாஷாபிமானிகளாகிய பிரபுக்கள் இதனை ஆதரித்து, இதைப் பிரசுரஞ்செய்துவரும் ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனியாருக்கு ஊக்கம் அளிப்பார்களென்று நம்புகிறேன்."

மஹாபாரதம்

## சாந்திபர்வம்.

கும்பகோணம்

பிரும்ம ஸ்ரீ பாரத சாமாசாரியாரவர்களால்
எளிய தமிழ்நடையில் மொழி பெயர்க்கப்பட்டு,
பிழையறப் பரிசோதித்து

நல்ல காகிதத்தில் பெரிய எழுத்தில் அச்சிட்டு காலிகோவில் நன்றாய்ப் பயிண்ட் செய்திருக்கிறது. இப்பொழுது தயாராயிருக்கும்

| | |
|---|---|
| 1-ம் பாகம் ... ... ரூ. | 2 0 0 |
| அச்சிலிருக்கிற 2-ம் பாகம் ... | 2 0 0 |
| இப்பொழுதே இரண்டாம் பாகத்துக்கும் சேர்த்து முன்பணம் அனுப்புகிறவர்களுக்கு ... ... ... | 3 0 0 |

"அதிப்பிரஸித்தர்களாகிய ஸ்ரீமத் பாகவதம் சாமண்ணாசார்யரவர்கள் தமிழில் மொழி பெயர்த்து வைத்திருக்கும் ஸ்ரீ மஹாபாரதம் சாந்திபர்வத்தின் வசன நடையிற் சில பாகங்களை படித்துப் பார்த்தேன். அவை பொருட் சிறப்புற்று மிக்க இன்பத்தை விளைவிக்கின்றன. இதுபோன்ற ஸரியான மொழிபெயர்ப்பைத் தமிழ் நாடு இதுவரையிற் பெற்றிலதென்று சொல்லலாம்.

பாரதத்தில் இப்பர்வமானது பலவகைப்பட்ட தருமங்களையும் உபாக்கியானங்களையும் தெரிவித்தும் ஸாரமான பகுதியென்பதும் அவற்றைத் தெரிந்து கொள்ளுதல் இரு பாலார்க்கும் பெரும் பயனை விளைவிக்குமென்பதும் யாவரும் அறிந்த விஷயங்கள். வடமொழிப் பயிர்ச்சியில்லாதவர்கள் மேற்கூறியவற்றைத் தெரிந்துகொள்ளுதற்கு இம்மொழி பெயர்ப்பைப் போன்ற சிறந்த கருவி வேறேயில்லையென்பது திண்ணம். * * * "

இங்ஙனம்,

19-10-1907. வே. சாமிநாதையன்,
*Pundit Presidency College, Madras.*

| | |
|---|---|
| நாலாயிர திவ்யப்பிரபந்தம்.---640 பக்கம் ... ... ... | 3 0 0 |

இப்பதிப்பு (1) ஆழ்வார்களின் காலவைபவக் குறிப்பும், (2) ஆழ்வார்கள் அருளிசெய்த பிரபந்தங்களின் அட்டவணையும், (3) ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்விய தேசங்களின் அட்டவணையும், (4) அந்த தேசங்களின் வைபவக்குறிப்பும், (5) பாசுரங்களின் முதலடி அகராதியும் (6) பாடபேதக் குறிப்புகளும் சேர்த்துபலபிரதிகளுடன் ஒத்திட்டுப்பார்த்து, நன்றாய் அச்சிடப்பெற்றுள்ளது.

| | |
|---|---|
| மனுதர்மசாஸ்திரம் 2647 கிரந்த சுலோகங்களும் அவைகளின் தமிழ் மொழி பெயர்ப்பும்—560 பக்கம் ... | 2 4 0 |
| ஸ்திரீ புருஷசாமுத்ரிகாலட்சணம்... | 1 0 0 |

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயண வசனம்

பண்டித-நடேச சாஸ்திரியாரால்
தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு,
தகுந்த தமிழ் வித்வான்களால் பார்வையிடப்பட்டு, பிழையறப் பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டது.

ஸ்திரீகளும் சிறுவர்களுங்கூட எளிதில் தெரிந்துகொள்ளும்படியாகத் தெளிவான எளிய நடையில் வசனரூபமாய் இவ்வால்மீகி ராமாயணம் எழுதப்பட்டிருக்கிறது. இப்பதிப்பு இதன் ஆதிகிரந்தத்தின் கௌரவத்திற்கும் மகிமைக்கும் தக்கவாறு கனமான உயர்ந்த காகிதத்தில் பெரிய எழுத்தில் பிழையறப் பரிசோதித்து, செவ்வையாய் அச்சிட்டு சேர்த்தியான காலிகோவில் அழகாய்ப் பயிண்டு செய்திருக்கிறது.

தயாராயிருக்கும் காண்டங்கள்

| | | |
|---|---|---|
| பாலகாண்டம் ... ... | ரூபா. | 1 12 0 |
| அயோத்தியாகாண்டம் ... | ,, | 3 0 0 |
| ஆரணியகாண்டம் ... | ,, | 1 12 0 |
| கிஷ்கிந்தாகாண்டம் ... | ,, | 1 12 0 |
| 4 காண்டமும் சேர்த்துவாங்கினால் | ,, | 7 4 0 |

மற்றய காண்டங்கள் இப்பொழுது விரைவாய் அச்சிடப்பட்டு வருகின்றன. சீக்கிரம் வெளிவரும்.

---

இதரத் தமிழ்ப் புத்தகங்கள்
நன்றாய்ப் பார்வையிட்டு நல்ல காகிதத்தில் தெளிவாய் அச்சிட்ட சிறந்த பதிப்பு.

| | |
|---|---|
| மூவர் தேவாரம்-பண் முறை---1044 பக்கம் ... ... ... | 3 0 0 |

இப்பதிப்பில் (1) சம்மந்தர், அப்பர், சுந்தரர் இம்மூவர்களின் சரித்திரக் குறிப்பும், (2) தேவாரவரலாறும், (3) தேவாரப்பண் அட்டவணையும், (4) தேவாரப்பாடல்பெற்ற ஸ்தல அகராதியும், (5) தேவார ஸ்தலங்களுள்ள நாடுகளின் விபரமும், (6) அட்டவீரட்டானங்களைக்குறிப்பிக்கும் செய்யுளும், (7) தேவாரப்பொய்து பாடல்களின் பக்க அட்டவணையும், (8) தேவார வைப்பு ஸ்தல அட்டவணையும், (9) காரைக்காலம்மையார் அருளிச்செய்த மூத்த திருப்பதிகமும் நூதனமாய்ச் சேர்க்கப்பட்டுள்ளன.

வேதாந்த விஷயமான புஸ்தகங்கள்

| | |
|---|---|
| வாசுதேவ மனனம் ... ... | 1 0 0 |
| சிவபோகசாரம் & சிவஞானவிளக்கம் | 0 2 0 |
| சுகர் கைவல்லியம் ... ... | 0 2 0 |
| வைராக்கிய சதகம் ... ... | 0 2 0 |
| ஜன்மாந்திரம் (அல்லது இராமதாசர் உபவள்ளலார் சாஸ்திரம் ... ... | 1 8 0 |
| மகாராஜா துறவு ... ... | 0 6 0 |
| தாயுமானவர்பாடல் ... ... | 0 12 0 |
| வேதாந்தபோதினி ... ... | 0 8 0 |

# விவேக போதினி.

"எப்பொருள்த்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி 1 } 1908-ஆ டிசம்பர் மீ { பகுதி 6


## ஸநாதனதர்மத்தின் சிறப்பு

## SANATANA DHARMA: ITS GREATNESS

நமது மதம் இவ்வளவு விரிவுடையது என்பது முன்னர் நாம் கூறியவைகளால் வாசிப்போருக்கு நன்றாகத் தெரியவந்திருக்கும். இப்பொழுது ஸநாதனதர்மத்தின் சிறப்பின் காரணங்களைப்பற்றிச் சற்று விசாரிப்போம்.

விரிவாக இருத்தலே நமது மதத்திற்கு ஓர் முக்கியமான சிறப்பு. இவ்வாறு இருத்தலால் தான் ஸநாதனதர்மம் பின்னருசியை உடைய பலராலும் அங்கீகரிக்கப்படுகின்றது. விரிவால் நமது மதத்திற்கு உள்ள சிறப்பை உற்று நோக்குவோம். மதம் என்பது மனதைப்பற்றிய விஷயம், பொதுவிஷயமல்ல. கணிதம், பிரகிருதி சாஸ்திரம் முதலியன பொதுவிஷயங்கள். இவைகளின் உண்மைகள் எல்லோருக்கும் ஒரேமாதிரிதான், மாறுபாடாக விருப்பனவல்ல. ஆனால் ஸுகம் என்பது மனதைப்பற்றிய விஷயம். இது மனிதர்களது மனோதர்மத்திற்கேற்ப வெவ்வேறு விஷயங்கள் மூலமாக உண்டாவதாகத்தோற்றும். பலருக்குமுறையே சர்க்கரை, மாம்பழம், பட்டுத்துணி, நல்லபாட்டு, ரதோத்ஸவம், தர்மம்செய்தல் முதலியன ஸுகமாகக் காணப்படலாம். தன துஸுக வஸ்து ஒன்றைத்தவிர மற்றவைகள் ஒருவனுக்கு துக்ககாரணமாகவும் தோன்றலாம். இதைப்போலவே மதவிஷயமும் மனோதர்மத்திற்கேற்ப மாறுதலுடையதாகஇருத்தல்வேண்டும். ஆகையால் 'கொக்குக்கு மூக்குக்கு நேரேவழி' என்பதுபோல விருத்தி அடையும்படிசெய்ய ஒரேமார்க்கத்தை உடைய மதம் ஒன்று எவ்வளவு சிறந்ததாக விருப்பினும், பொதுவாகப் பலருக்கு உபயோகப்படமாட்டாது. அப்படி ஒருமதம் பிரயோசனப்படவேண்டுமாகில் அது ஜனங்கள் மனோதர்மத்திற்கேற்ப அநேக பாகங்களை உடைத்தாயிருத்தல் வேண்டும். இவ்வாறு இல்லாமல் அது மேலான பாகம் மாத்திரம் உடைத்தாயிருக்குமாகில் ஸாதாரண ஜனங்களின் கதி என்ன? அவர்கள் மேலான நிலைக்குப் போக வழி இல்லாமல் கதியற்று கஷ்டப்படுவார்கள்; அல்லது உண்மையில் மேலான நிலையை அடையாமலிருக்கும் பொழுதே தம் அறியாமையால் தாம் அந்த நிலையை அடைந்துவிட்டதாய் வீணாகப் பெருமைபாராட்டி அதோகதியை அடைவார்கள். ஆகவே மிக விரிந்ததாகவும் அநேக பாகங்களை உடையதாகவும் ஓர் மதம் இருந்தால்தான் அதை அநேகர் பின்பற்றி ஸுகிப்பர். இம்

மாதிரி பலர் பின்பற்றி மேல்நிலையை அடைந்து உய்வதற்கு ஸனாதன தர்மம் தனது விரிவால் இடங்கொடுப்பதுவே அதன் சிறப்பிற்கு முதலாவது காரணம்.

இவ்வாறு பலவாக இருக்கும் ஸனாதனதர்மத்தை சின்னபின்னமாகப் போகவிடாமல் ஓர் தனி மதமாகச் செய்திருப்பது எது என்ற சங்கை நமக்குப் பிறக்கலாம். பலவாக இருக்கும் பாகங்களுக்குப் பொதுவான விஷயங்கள் இன்னவை என்றும், இப்பாகங்களின் உண்மை நோக்கம் இன்னது என்றும், இவைகள் ஒருவன் அபிவிருத்திக்கு அவசியம் என்றும், சிறந்த நிலையின் ஸ்வரூபம் இன்னதென்றும் வெளிப்படுத்தும் ஓர் ரகஸிய சாஸ்திரம் ஸனாதனதர்மத்துள் இருக்கின்றது. இதற்கே வேதாந்த சாஸ்திரம் என்று பெயர். இந்த சாஸ்திரத்தின் வலிமையால்தான் ஸனாதனதர்மத்தின் பாகங்கள் தத்தமக்குத் தக்க விடங்களில் நிலைபெற்று மாறாது நம் மதத்தைப் பின்பற்றுபவரை படிப்படியாக மேலான நிலைக்குக்கொண்டுவருகின்றன. இதனால்தான் ஸனாதனதர்மத்தின் பாகங்களுக்குள் ஓர்விதப் பொருத்தம் உண்டாக அவைகள் ஒற்றுமையாக தொழிற்பட்டு ஸனாதனதர்மத்தை ஒரு தனி மதமாகச் செய்கின்றன. (இவ்வேதாந்த சாஸ்திரத்தின் மேன்மையை பின்னர் தகுந்தவிடத்தில் நன்கு விவரிப்போம்). இம்மாதிரியான ஒரு சிறந்த சாஸ்திரத்தால் ஒற்றுமைபட்டு ஓங்கி நிற்றல் இம்மதத்தின் சிறப்பிற்கு இரண்டாவது காரணம்.

அநேக பாகங்களையும், அவைகளின் ஸ்வரூபம் நோக்கம் இவைகளைக் காட்டும் சாஸ்திரத்தையும் உடைத்தாயிருத்தலால் நமது மதத்தில், தன்னைப் பின்பற்றுவோரை எளிதில் மேலான நிலைக்குக்கொண்டுவரும் புதியவழி ஒன்று காணப்படுகின்றது. இது வேதாந்த சாஸ்திரத்தின் வலிமையாலே நிலைப்பெற்றது என்று சொல்லவேண்டும். இந்த வழி எக்காலத்திலும் எல்லோராலும் மிகுந்த ஆராய்ச்சியின் பேரில் நன்குமதிக்கத் தக்கதாக உள்ளது. இந்த வழியின் சிறப்பால் ஒருவன் அதிகக் கஷ்டப்படாமலே தன்னை அறியாது நாளடைவில் படிப்படியாகத் தேர்ச்சி அடைந்து வருகின்றான். இந்தவழி ஸனாதனதர்மம் ஒன்றிற்கே சிறப்பானது. உலகில் உள்ள மற்றைய மதங்களிலோ எல்லாப் பாகங்களும் தெளிவாகக் காணப்படவில்லை. அவைகளை நிலைநிறுத்தினோரது அக்கரைக்குறைவினாலோ, அவைகளைப் பின்பற்றுவோரது அக்கரைக் குறைவினாலோ சிலபாகங்கள் அவைகளில் காணாமற்போய் விட்டன. ஆகையால் நாம் முன் குறிப்பித்த வழி மற்றைய மதங்களில் இருக்க இடமில்லை. இம்மாதிரியான ஸ்திரமாயிருக்கும் சிறந்த வழியை உடைத்தாயிருத்தலே நமது மதத்தின் சிறப்பிற்கு மூன்றாவதாயும் முக்கியமாயும் இருக்கும் காரணம்.

ஸனாதனதர்மத்திற்கு சிறப்பு அளிக்கும் முக்கிய காரணமாகிய புதியவழியைப்பற்றிச் சற்று விசாரிப்போம். இவ்வழியின் சிறப்பால் ஸனாதனதர்மத்தின் சிறப்பும் வேதாந்த சாஸ்திரத்தின் மேன்மையும் வெளியாகும். ஆதலால் இதைப்பற்றி இங்கு நன்றாக ஆராயவேண்டியது அவசியம்.

எந்நிலையில் இருப்பவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்த கொள்கைகளை நம் மதம் உடையதாய் இருத்தலால் எவ்வளவு தாழ்ந்தவர்களாய் இருந்தாலும் அவர்களையும் கதியற்றவர்களாக விட்டுவிடவில்லை. எவ்வளவு மேலான நிலையில் இருப்பவர்களாய் இருந்தாலும் அவர்களும் கண்டு பிரமிக்கும்படியான உண்மைகளை எல்லாம் உடைத்தாய் இருக்கிறது. மற்றைய மதங்களைப்போல் ஒரு நிலையிலிருந்து திடீரென்று வேறோர் நிலைக்கு மாறவேண்டும் என்று நமது மதம் சொல்லவில்லை. ஒருவன் எந்நிலையில் இருக்கிறானோ அங்கேயே அவனைப் பிடித்துக்கொண்டு அவனுக்குப் பிரியமானவைகளை முன்பு காட்டி அவன் அறியாதபடி மெதுவாய் அதன்மூலமாக மேலான

எண்ணங்களை புகட்டி விடுகிறது. இதற்கேற்ப வே பாகவதத்தில் 11-ம் ஸ்கந்தத்தில் காணப் படும் நவயோகி ஸம்வாதத்தில் ஆவிர்ஹோத் ரர் என்ற யோகி ஒருவர் 'அநேகவித ஆசை காட்டி குழந்தைகளை நாம் மருந்து உண்ணும்படி செய்வதுபோல, மோக்ஷம் மனிதருக்கு வரும்படி செய்ய வேதங்கள் அவர்களுக்கு கர்மங்களைச் செய்யும்படி விதிக்கின்றன' என்று நிமி சக்கிரவர்த்தியை நோக்கிச் சொல்லுகிறார். இதே கருத்தை கைவல்லிய நவநீதத்தில்

> " தினமுமண்ணுகர் பிள்ளைநோய்க்கிரங்கியே,
> தீம்பண்டமெதிர் காட்டிக்
> கனமருந் துக ளொளித்துவைத் தழைக்கின்ற
> கருணையாந் தாய்போல
> மனையறங்கள்செய் மகங்கள்செய்நன்றென்று
> மலர்ந்தவாசகம் சொல்லும்
> நினைவுவேறுகாண் ஸ்வர்க்கதிகளந்த
> நிண்ணயந் தெரியாரே."

என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸமய கோடிகள் எல்லாம் தன் தெய்வம் என் தெய்வம் என்று எங்கும் தொடர்ந் தெதிர்வழக்கிடவும்' நிற்கும் பரம்பொருளை ஸனாதன தர்மம் பின்பற்றுவோன் மனோதர்மத்திற் கேற்ப வருணித்து, வரவர அவன்மனத்தில் அப்பரம்பொருளைப்பற்றிய எண்ணம் வரம்பின்றி வளரும்படி செய்து, முடிவில் மோக்ஷநிலையை உள்ளது உள்ளபடி அவனுக்குக் காட்டி அவனைக் கரை ஏற்றுகின்றது. இதுவே ஸனாதனதர்மத்தில் அடங்கி இருக்கும் புதிய வழியின் ஸ்வரூபம்.

இந்த மதம் மேல்நிலைக்குக் கொண்டுவரும் வழி இன்னதென்பது விளங்குவதற்காக சில உதாரணங்கள் எடுத்துக்கொள்வோம். ஒரு குடிகாரன் இருக்கிறான். அவனிடத்தில் நமது மதம், கள் இல்லாவிட்டால் நாடோறும் கஷ்டப்பட்டு வேலை செய்பவர்களுக்கு அன்றன்று சிரமம் அன்றன்று தீர்க்க முடியாமல்போக, அவர்கள் உயிர் தரித்தல் அஸாத்தியமாகும் என்று சொல்லி, அவனை முதலில் பிடித்துக் கொள்கிறது. கொஞ்ச காலம் கழிந்த பின்பு மிகக் கொடுமையான மயக்கம் உண்டாக்கும் கள்ளுகளை 'நீ குடிக்கக்கூடாது' என்று முற் கூறிய முகாந்திரங்களைக் கொண்டே நயமாகப் போதித்து அவனிடத்திலிருந்து அவைகளை விலக்குகிறது. பின்பு புதிதான ஒரு எண்ணம் அவன் மனதில் உண்டாகும்படி செய்கிறது. அவன் பயப்படும்படி ஒருவிதமான சக்தியோடும் உருவோடும் கடவுளை அவனுக்குக் காட்டி, அவனை எளிதில் நம்பிப் பூஜை செய்யும்படி செய்கிறது. பின்பு அவனைப்பார்த்து "அப்பா நீ குடிப்பவைகளை எல்லாம் இந்தக் கடவுளுக்கு நிவேதனம் செய்து பின்பு குடி" என்று அநுமதி கொடுக்கின்றது. அவனது கடவுள் ஒரு விக்கிரகரூபமாய் வீட்டு அலமாரியில் இருப்பதாக அவன் எண்ணுவதால், வீட்டிற்குக் கள்ளை கொண்டுவந்து நிவேதனம் செய்து பின்பு குடிக்கவேண்டியதாய் வருகிறது. ஆதலால் வரவர அநேக தரம், கள்ளுக்கடைகண்ட விடமெல்லாம் குடிப்பது எளிதில் நின்றுவிடுகிறது. மேலும் நமது மதம் சும்மா இராமல் 'கடவுளை நினைத்து இரண்டு அல்லது மூன்று தரம் சுத்தமாய்ப் பூஜை செய்ய வேண்டு' மென்று விதிப்பதினால், இவன் நாளுக்கு இரண்டு அல்லது மூன்றுதரம் மாத்திரம்தான் குடிக்க இடம் கொடுக்கிறது. இக்காலத்தவரில் சிலர் சொல்லுவதுபோல் நமது மதம் குடிகாரனுக்குத் தாழ்ந்த நிலையைக்காட்டாது உள்ளதை உள்ளபடி காட்டுமாகில் அவன் கதி என்னமாகும்! நமது மதத்தின் கருணையால் வரவர கடவுளைப்பற்றிய எண்ணம் விருத்தியடைய, மேல் ஜாதியார் குடி முதலியவைகள் இல்லாமலே ஸுகமாய் ஜீவிப்பதைப் பார்த்த மாத்திரத்தில், தானும் அவர்களைப்போல் இருக்கவேண்டும் என்ற எண்ணம் தானாகவே இந்த குடிகாரனுக்கு வருகிறது. உடனே கூடிய சீக்கிரத்தில் இந்தக் கெட்டபழக்கமும் விட்டுப்போய், தானே கண்டு ஆச்சரியப்படும்படியான நிலையை அவன் அடைந்து, கடவுளை ஆராதிக்கவேண்டுமென்ற எண்ணம் உடையவனாகிறான். பின்பு மேலான கொள்கைகளைக்காட்டி நமது மதம் அவனை மோக்ஷநிலையை அடையும்படி செய்கிறது.

இதுபோல திருடனுக்கும் அவனுக்குத் தகுந்த கடவுள் ஆராதனத்தை விதித்து அவனையும் வரவரத் தனது தொழில் கொடியதுஎன்று தானே முடிவில் அறியும்படி செய்து அவனே அதை விட்டுவிடும்படி நமது மதம் செய்கின்றது. இந்த விஷயத்தில் நம்மூர் திருடர்களுக்கும் மற்றைய வெளிநாட்டுப் புறமதத்திருடர்களுக்கும் வித்யாஸம் உண்டு. இவ்வழியின் சிறப்பினாலேயேதான், பூர்வாசிரமத்தில் திருடராயிருந்த திருமங்கையாழ்வாரும் தாம் செய்த கடவுள் ஆராதனை விசேஷத்தால் ரங்கனாதர் சொத்தைத் திருடவந்திருந்த ஓர் இரவில் தமது தொழிலின் கொடுமையை அறிந்து நல்ல வழியில் திரும்பி மேலானநிலையை அடைந்தார். அவர் அப்பொழுது கட்டின கோயிலே இப்பொழுதிருக்கும் ஸ்ரீரங்கம் ரங்கனாதஸ்வாமி கோயில். மாம்ஸபக்ஷணத்தில் ஆசையோடு மனம் தடித்திருக்கும் மனிதர்களை நமது மதம் யாகாதிகள் மூலமாகச் சீர்திருத்தி உய்யும்படி செய்கின்றது. இக்கருத்தையே கைவல்யம் 'கள்ளும் ஊனும் விரும்பினல் மகங்கள் செய்' என்றும், யாகத்தில் 'மது இரைச்சிகள் உண் என்ற சுருதி பின் மணந்துபார் எனல் பாராய்' என்றும் கூறி ஒழுங்கான அபிவிருத்திக்குத் தக்க வழியை ஆதாரத்துடன் காட்டுகின்றது. ஸனாதனதர்மத்தின் ரூபமாகிய வேதங்களின் உட்கருத்தை அறியாதவர்கள் தத்தமக்குத் தக்கதாகக் காணப்படும் பாகத்தையே மிகச் சிறந்ததெனக் கொண்டாடுகிறார்கள். இதனால் யாதொரு கெடுதலு மில்லை. இதற்குமேல் வேறு சிலர் தமக்கு ஏற்ற பாகத்தைத் தவிர மற்றைய பாகங்களைத் தூஷிக்கிறார்கள். இது தான் நமது மதத்திற்கு விரோதமான நிலை. இதற்கேற்ப கைவல்யம், வேதம் 'மலர்ந்த வாசகம் சொல்லும் நினைவு வேறுகாண் ஸ்வர்க்க காமிகள் இந்த நிர்ணயம் தெரியாரோ' என்று சொல்லுகிறது. நாம் எப்படி வேலிகட்டி, எரு விட்டு, நீர்வார்த்து, செடிமெதுவாய் முளைத்து வருவதை ஸாவதானமாய் எதிர்பார்த்து, அது பெரியமரம் ஆகும்படி செய்கிறோமோ, அது போல் உலகப்பற்றுகளில் உழலும் கெட்ட பழக்கங்களில் கதியற்று மூழ்கிக் கிடக்கும் மனிதர்களையும் அவ்வாறே விட்டுவிடாமல் நமது மதம், முன் குடிகாரன் முதலியோர் விஷயத்தில் காட்டின வழியாய் மெதுவாக மோக்ஷத்தை யடையும்படி செய்கிறது. நமது ஸனாதன தர்மம் இவ்வாறு சிறந்த வழியால் மனிதர்களை விருத்திஅடையும்படி செய்வதே இதன் சிறப்பிற்கு மூன்றாவது காரணம்.

நமது மதத்திற்கு விசேஷமான ஒரு சக்தி உண்டு. இது இருப்பதற்குக் காரணம் முற்கூறி இருக்கும் சிறப்புக் குரியதாக உள்ள மூன்று விஷயங்களே. இராமாயணத்தில் வாலிக்கு தன் எதிரில் வந்த பகைவனது பாதி பலத்தை இழுத்துக்கொண்டு அவனை எளிதில் தோல்வி யடையும்படி செய்யத்தக்க சக்தி இருந்ததாகச் சொல்வது உண்டு. அது போன்றது தான் ஸனாதன தர்மத்தின் இவ் விசேஷ சக்தியும். அதனோடு வேறு எந்த மதம் வந்து எதிர்ப்பட்டாலும் ஸரி, முதலில் அம்மதத்தை தன்னிடம் இருக்கும் சிலபாகங்களுள் அடங்கி விடும்படி செய்து, அதை எளிதில் விழுங்கிவிடுகின்றது. உடனே அப்புதிய மதம் தான் இருந்தவிடம் தெரியாது ஒளிமழுங்கிப் போய்விடுகின்றது. இதே மாதிரியான சக்திக்கு இரையாகித்தான் பரதகண்டத்தில் புத்தமதம் இருந்த விடம் தெரியாமல் போனது. வெளியூர்களில் ஜயபேரி அடித்துக்கொண்டு ஊர் ஊராக மொத்தமாக மாற்றி வந்த கிறிஸ்துவ மதமும் பரத கண்டம் வந்ததும் ஸனாதன தர்மத்தின் விழுங்கும் சக்தியால் தொழில் செய்ய முடியாது தயங்கி நின்றுவிட்டது. வரவர கிறஸ்தவ மதம் ஒரு தனிமதம் என்று நம்மவரால் மதிக்கப்படாமலே போய்விட்டது. அதுவும் நமது மதத்தின் சிற்சில பாகங்களில் எளிதில் அடங்கி விடவேண்டியதுதான். இந்த சக்தியால் தான் நமது மதம் இவ்வளவுநாள் அழியாமல் நீடித்து நிற்கின்றது. இப்படிப்பட்ட விழுங்கும் சக்தி நமது மதத்தின் சிறப்பிற்கு நான்காவது காரணம்.

ஆகவே நமது மதத்தின் சிறப்பிற்கு, அநேக பாகங்களை உடைத்தாயிருத்தல், அவைகளை ஒழுங்குபடுத்திப் பொருத்தும் வேதாந்த சாஸ்திரத்தை உடைத்தாயிருத்தல், அச்சாஸ்திரத்தின் பலத்தால் ஜன அபிவிருத்திக்கு உதவியாகும் புதியஸோபானவழியை உடைத்தாயிருத்தல், மற்றைய மதங்களை எளிதில் விழுங்கும் சக்தியை உடைத்தாயிருத்தல் ஆகிய இந்நான்குமே தக்ககாரணங்கள் என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டியது. இப்படிப் பட்ட ஸநாதன தர்மத்தைப் பின்பற்றுவோர் எளிதில் மேலான நிலையை அடைவார்கள் என்பதற்கு என்ன ஸந்தேகம்.

நாம் இப்பொழுது சொன்னமாதிரியே இதர தேசத்தவர்களில் மானியர்வில்லியம்ஸ் என்பவர்நமது மதத்தினுடைய பலவிதமான பாகத்தையும், பின் பற்றுவோருக்கு அவைகளால் உண்டாகும் பொதுவான பிரயோஜனத்தையும், இன்னும் வேறு விதமான மனோதர்மத்தோடு புதிதாய் யார்வந்தாலும் அவர்களுக்கு ஏற்ற பாகங்களை தயாராய் நமது மதம் வைத்துக்கொண்டிருப்பதையும், இவைக ளிருப்பதால் ஸநாதன தர்மத்திற்கு உண்டாகும் மேன்மையையும் ஸ்திரத்தையும் பற்றி விவரித்துச் சொல்லி இருக்கிறார். ஆனால் அவர்சொல்லும் வார்த்தையில் ஒன்றுமாத்திரம் நமது மதத்தின் சிறப்பைச் சற்றுக்குறைக்கும் தன்மை உடையதாக விருப்பதால் அந்த விஷயத்தை அடுத்த ஸஞ்சிகையில் எடுத்து விவரிப்போம்.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன். B. A., L. T.

---

வேதாந்தத்தின் அதிகாரம் உலகம் முழுவதிலும் செல்லும். ஆகவே நம் நாட்டின் வர்ணாசிரமக் கிரமமானது சகல மானிடவர்க்கத்தையும் ஆதரவுடன் படிப்படியாய் மேலான மார்க்கத்தில் நடத்தி நிர்வைரம், சாந்தி, ஸ்திரத்தன்மை, பரிசுத்தம், தெய்வபக்தி தியானம் முதலிய சீலங்கள் வாய்ந்த உத்தம வாழ்க்கையில நிலையுறச் செய்வதற்கு ஏற்பட்ட சிறந்த ஸாதனமாம். இப்படிப்பட்ட ஸாதனமன்றோ தெய்வாம்சம் பொருந்தினது.

ஸ்ரீ விவேகாநந்த விஜயம், பக்கம் 266.

## ஸ்ரீமான் பி. ஆர். ராஜம் அய்யர் அவர்கள்
## B. R. RAJAM IYER AVERGAL. B. A.



### I. மனம் மாறிய சருக்கம்
### THE MENTAL CHANGE

ஸாதனமின்றி யொன்றை ஸாதிப்பா ருலகிலில்லை
ஆதலாலிந்தநான்கும் பெற்றவர்க் கறிவுண்டாகும்
ஆதன விவேகி உள்ளில் அழையாது அழையுமாகில்
பூதஜன்மங்கள்கோடிப் புனிதனும் புநிதனுமே

என்றார் கைவல்ய நவநீத நூலாசிரியர். இதன்படி மோக்ஷஸாதனம் இல்லாதவர்களுக்கு ஞானம்வந்து மோக்ஷம் ஸித்திக்காது. ஆனால் பட்டணத்துப்பிள்ளையாரைப் போன்ற சில மஹான்களுக்கு 'காதருந்த ஊசியும் வாராது காண் கடைவழிக்கே' என்பதுபோன்ற சிறு உபதேசங்கள் மூலமாக திடீரென்றுஞானம்வர, அவர்கள் ஸம்ஸாரக் கலப்பையையும், தாம் சிறந்ததெனக் கொண்டிருந்த விஷயங்களையும், முன்பின் யோசியாது விட்டு மோக்ஷ மார்க்கத்தில் அதுமுதல் விடாது பாடுபட்டுக் கறையேறி யிருக்கிறார்கள். இவர்களுக்கு மேலான வாழ்வு ஸாதனங்கள் ஸஹாயம் ஒன்று

மின்றி எவ்வாறு ஸித்திக்கலாமென்ற சங்கை வரலாம். அதற்குக் கைவல்ய நூலாசிரியர் முன் எடுத்தெழுதியுள்ள பாட்டின் பின் இரண்டு அடிகள் மூலமாகப் பதில் கூறுகிறார். அதாவது ஸாதனமில்லாதவன் திடீரென்று ஞானியாதல் அஸாத்யம். அப்படிச் சிலர் ஆயிருப்பதாகக் காணப்பட்டால், அவர்கள் பூர்வம் அநேக ஜன்மங்களில் சுத்தராகி ஸாதனங்களில் பழகிக் கஷ்டப்பட்டு இந்த ஜன்மத்தை முடிவான ஜன்மமாக உடையவராய் இருத்தல்வேண்டும். இப்படிப்பட்ட மஹான்கள் அநேகரை நமது புராணாதிகளில் ஏராளமாகக் காணலாம். இவைகளைப் புராணகதைகள், கட்டுக்கதைகள், என்று தள்ளிவிடும் தன்மை வாய்ந்தவர்களுக்கு இக்காலத்தில் சிலரையும் எடுத்து திருஷ்டாந்தமாகக் காட்டலாம். அவர்களுள், பட்டணத்திலிருப்பவர் சிலருக்கு நேரிடத் தெரிந்தவராயும், அமெரிக்காமுதலிய தூரதேசங்களில் தமது நூல் மூலமாகப் பிரஸித்தி பெற்றவராயும் உள்ள ஸ்ரீமான் ராஜம் அய்யர் அவர்களே இதற்குத் தகுந்த திருஷ்டாந்தம். இவர் கொஞ்சநாளைக்கு முன்புதான் இருந்தவர். மேலும் இவரோடு நேரிடப் பழகியவர்கள் இன்னும் இவரைப் பற்றிப் புகழ்ந்துபேசி ஆனந்தித்துக்கொண்டிருக்கின்றனர். ஆதலால் இவரது சரித்திரம் இன்னும் மாறுபடாது சுத்தமாகவே இருக்கின்றது. அதை எடுத்து இங்கு விவரிப்போமாக.

ஸ்ரீமான் ராஜம் அய்யர் அவர்கள் மதுரை ஜில்லாவிலிருக்கும் வத்தலகுண்டு (பத்துலகுண்ட)என்ற கிராமத்தில் 1872-ம் வருஷத்தில் ஜனனமானார். இவர் பிறந்த கிராமம் இருக்கிறவிடத்தில் முற்காலத்தில் ஒரு பரிசுத்தமாயும், பகவத் பக்தர்களது ஸ்நாந அநுஷ்டாநாதிகளுக்குத் தக்கதாயும் இருந்த ஓர் நிர்மலமான ஏரி இருந்தது என்பதை இதன்பெயரே குறிப்பிக்கின்றது. இப்பரிசுத்தமான இடத்தில் பிறந்து இளமையில் இவர் மதுரை பாண்டித்ய பாடசாலையில் எப். ஏ. பரீக்ஷைவரையில் கல்வி கற்றுவந்தார். இவர் இளமையில் மற்றையப் பிள்ளைகளைப்போல விளையாட்டில் மனதாரக் கலந்தவர் அல்லர்; எதிலிருந்தும் வெட்கப்பட்டு பின்னடையும் ஸ்வபாவம் இவருக்கிருந்தது. இதைத்தவிர நமக்கு இவரது இளமையைப்பற்றி வேறொன்றும் தெரியாது. எப். ஏ. பரீக்ஷை தேரியதும் இவர் பட்டணம் வந்து கிறஸ்தவர் பாண்டித்யசாலையில் சேர்ந்து சரித்திரபாகத்தை நன்கு கற்றுணர்ந்து அதிலேயே 1889-ம் வருஷத்தில் பீ. ஏ. பரீக்ஷைகொடுத்து, உடனே பட்டணம் இவருக்கு சட்ட பாண்டித்ய சாலையில் சேர்ந்து படித்தார். இக்காலத்தில் இங்கிலீஷ் படிக்கும் ஸாதாரணப்பிள்ளைகளுக்கு இருந்த சித்தவிருத்தியே இருந்தது. இவர் நடை உடை பாவனைகள் யாவும் மிக ஒழுங்காயும் பகட்டாயும் இருந்தன. நமது ஜாதிவர்ணாசிரமாதிகள் ஸ்வயநயங் கருதும் பிராம்மணர்களால் ஏற்படுத்தப்பட்டன என்றும், அந்த ஏற்பாட்டால்தான் நமது தேசம் சீரழிந்ததென்றும், அதை எப்படியாவது வேறறுத்தால்தான் நமது தேசத்திற்கு க்ஷேமம் பிறக்கும் என்றும், பரஹிம்ஸை கூடியவரையிலும் இல்லாது நன்னடக்கைக் கோட்பாடுகளின்படி நடந்துவந்தால் கடவுளைப்பற்றிய நம்பிக்கைகளும் மதவிஷய நம்பிக்கைகளும் இல்லாது உலகில் ஸுகமாக வாழலாம் என்றும், இவர் இக்காலத்தில் அபிப்பிராயப்பட்டார்.

இவ்வாறு ராஜம் அய்யர் நாஸ்திக அபிப்பிராயங்களை உடையவராக இருந்தபோதிலும் இவரிடத்து ஓர் விசேஷகுணம் மாத்திரம் இருந்தது. ஷெல்லி, வேர்டஸ்வர்த், டெனிஸன் முதலிய ஆங்கில கவிசிகாமணிகளின் சுத்த கற்பனை நிறைந்த காவ்ய விஷயங்களிலும், கம்பர் முதலிய தமிழ் கவிகளின் கவிதைகளிலும் மூழ்கி ஆனந்தம் அநுபவிக்கும் தன்மை இவரிடத்தில் வாய்ந்திருந்தது. இதுதான் இவரது லோகாயதிக அபிப்பிராயத்தை மாற்றி இவரை நல்ல வழிக்குத் திரும்பும்படி செய்தது. சட்டபரீக்ஷைக்கு வாசிக்குங்காலத்தில், சரித்திரவிஷயமாக உலகமே கண்டு பிரமிக்கும்படியான ஓர் நூல் எழுதவேண்டும் என்றும், அமெரிக்கா

முதலிய விடங்களில் யாத்திரை செய்து வெளி நாட்டாரது மேன்மையின் ரகஸியத்தை அறிந்து, நமது பரதகண்டமும் அவ்வாறு சிறப்படையும்படி தக்கமாறுதல்களை ஏற்படுத்தவேண்டும் என்றும் இவர் பேர்-ஆவல் கொண்டிருந்தார்.

இவ்வாறு மனோராஜ்யம் செய்துகொண்டிருந்த ராஜம் அய்யர் அவர்களுக்கு பி. எல். பரீக்ஷை முதல்தரம் தவறியது. இதுதான், 'காதருந்த ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே' என்ற உபதேசமொழி பட்டிணத்தடிகளை மாற்றியதுபோல இவரது மனோநிலையைச்சற்று மாற்றியது. இது முதல் இவர் மனம் மதவிஷயங்களில் திரும்பியது. துன்பம் வருங்கால் எல்லோருக்கும் வாழ்க்கையின் நிலையாமையும் அதற்கப்பாலிருக்கும் பரம்பொருளது அழியாநிலையும் சற்று வெளியாகும். அது மாறியதும் வாழ்க்கையின் இன்பங்கள் வந்து தாக்க முன்தோன்றி உண்மைகள் மறைந்து போகும். அப்பொழுது ஸாதாரண ஜனங்கள் வாழ்க்கையின் உண்மை, நோக்கம் இவைகளைக் கவனியாது மனம்போனபோக்கெல்லாம் வீணாகப்போவது வழக்கம். இதுபற்றியே கார்லைல் என்ற மஹான் 'துன்பத்தை ஒருவாறு கஷ்டப்பட்டு ஸஹித்தாலும் ஸஹிக்கலாம், இன்பத்தை சாந்த மனத்துடன் ஸஹிப்பது அரிது' என வியந்து கூறியுள்ளார். ராஜம் அய்யரைப்போன்ற 'பூத ஜன்மங்கள் கோடிப் புனிதராம் புருஷருக்கு' கஷ்டகாலத்தில் வரும் ஞானம் பின்பு எந்த ஸமயத்திலும் மாறாதிருக்க, அது அவர்களை அந்த ஜன்மத்திலேயே கறை ஏற்றிவிடும். இதற்கேற்ப ராஜம் அய்யருக்கு பி. எல். பரீக்ஷை தவறியதால் உண்டான ஞானமார்க்கமாறுதல் பின்பு மாறவேயில்லை. கவிதை விஷயங்களில் ஈடுபட்டு ஆனந்திக்கும் குணம் இவருக்கு இந்த ஸமயத்தில் ஸஹாயமாகவர மஹான்கள் 'மனவாக்கெட்டாத' தமது நிஷ்டாநுபூதி விசேஷங்களை வெளியிட்டிருக்கும் சுத்தகற்பனை நிறைந்த அருட்பாடல்களின் நயத்தை நன்கு உணரும் திறம் இவருக்கு இப்பொழுது உண்டாயிற்று. இக்காலத்தில் இவர் கைவல்ய நவநீதம், தத்வராய ஸ்வாமிகள் பாடல் முதலிய அநுபூதி நூல்களை மிகுந்த ஆவலுடன் படித்துவந்தார். இவர் முன்னர் நமது ஜாதி ஆசாரம், மதவிஷயம் முதலியவைகளைப்பற்றிக் கொண்டிருந்த அபிப்பிராயங்கள் எல்லாம் மாறுதல் அடைந்தன. அமெரிக்கா முதலிய விடங்களுக்குப் போகவேண்டும் என்பது போன்ற இவருக்கு இருந்த பேர் ஆவல்கள் யாவும் இருந்தவிடந் தெரியாமல் பறந்தோடிப்போயின.

இப்படி இருக்கையில் இவர் கிறஸ்தவர் பாண்டித்யசாலைப் பத்திரிகையில் கணித வித்வான் ரங்கநாத முதலியார் அவர்களால் இயற்றப்பட்ட கச்சிக்கலம்பகத்தின் குணதுண விமர்சை ஒன்றை எழுதி வெளியிட, இவர் பெயரும், இவர் தமிழ்ப் பாண்டித்யமும், அறிவின் நுட்பமும் பலர் அறிய வெளியாயிற்று. இதே ஸமயத்தில் 1892-ம் வருஷத்தில் இவரது மனோதர்மம், தமிழ், ஆங்கிலம் முதலிய பாஷைகளில் கவிஹ்ருதயம் உணரும் திறம், மதவிஷய அபிப்பிராயம் யாவும் இவர் விவேகசிந்தாமணி என்ற மாதாந்த தமிழ்ப் பத்திரிகையில் தொடர்ச்சியாக எழுதிவந்த ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்என்ற தமிழ் கற்பனைக் கதைமூலமாக தெரியவந்தது. இந்த அற்புதக்கதையில் புத்திரசோகம் என்ற அத்தியாயத்தில் சோகரஸத்தையும், பலீன்சடுகுடு, கடற்கரை விளையாட்டு என்ற அத்தியாயங்களில் கற்பனசக்தி நிறைந்த காவ்ய விஷயங்களையும், நரபலி என்ற அத்தியாயத்தில் ஆருத்திரா தர்சன வைபவத்தையும், 'கேளாரி யாதவன் கோவிந்தன் என்பானோர் காளை புகுதக் கனாக்கண்டேன் தோழி நான்' என்ற அத்தியாயத்தில் பக்தியின் சிறப்பையும், விசுவரூப தர்சனம், கருதும் அன்பர் மிடிதீரப் பருகவந்த செழுந்தேனுகி என்ற அத்தியாயங்களில் அநுபூதி விசேஷங்களையும், இம்மஹான் வெகு அழகாக அமைத்துள்ளார். 'இக்கதை உண்மையை உணர

உள்ளபடி விடாது பாடுபட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்து, முடிவில் மோக்ஷதாகம் தீரப் பருகும்படியான தடாகத்தைக் கண்டு நீர்பருகிக் களைப்புத்தீர்ந்த ஓர் சுத்த ஆத்மாவின் அநுபூதிபேதங்களை அடக்கியுள்ளது, என்பது ராஜம் அய்யரே இக்கமலாம்பாள் சரித்திரத்தைப்பற்றி வெளியிட்டுள்ள அபிப்பிராயம்.

இவ்வாறு உலக விஷயங்களிலிருந்து திரும்பியதும் ராஜம் அய்யர் மற்றைய வேலைகளைக் கவனியாது விட்டார். எவரது பார்வைக்கும்அகப்படாது தனிமையாக தமது காரியத்திலேயே கண்ணுகயிருந்து வித்திபெறத் தக்கஇடம் ஜனம்நிறைந்த பட்டணமே என்று அவர் அபிப்பிராயப்பட்டதால் இங்கேயே எப்பொழுதும்இருக்க இவர்விரும்பினார். அந்தஸமயத்தில் திருவல்லிக்கேணியில்இவர்இருந்த வீட்டிற்கு அருகாமையில் ஓர் அவதூதஸந்யாஸினி அரிய விஷயங்களைப்பற்றி உபந்நியாஸம் செய்துகொண்டிருந்தாள். அவ்விடம் இவர் சென்று தன் மனதைத் திருப்திசெய்துகொள்ள எண்ணி, நாடோறும் அந்த அம்மாள் செய்துவந்த உபந்நியாஸத்தைத் தவராது ஓர்புறமாக இருந்து மௌனமாகவும் சாந்தமாகவும் கேட்டுவந்தார். அந்த அம்மாள் இவரது மௌனம், பிரஸந்நவதனம், அடக்கம் முதலியவைகளைக் கண்டு வியந்து இவருடன் பேசவேண்டும் என்ற ஆவல் கொண்டாள். ஒருநாள் நடந்த பிரசங்கம் மிக உருக்கமாக இருக்க ராஜம் அய்யர் அவ்விடத்திலேயே எல்லோரும் போய்விட்ட பின்புகூட அசைவற்று யோசனையில் ஆழ்ந்து இருந்து விட்டார். இதுதான் ஸமயம் என்று அந்த ஸந்யாஸினி இவரைக் கிட்டே அழைத்தாள். இவரும் முன்பின்யோசியாது ஓர் கூச்சமும் இன்றி அவள் அருகில் சென்றார்.

அருகில் வந்ததும் அந்த அம்மாள் மிகுந்த அன்புடன் இவரது மனோநிலையைப்பற்றி விசாரித்தாள். இவரும் தயங்காது மனதைவிட்டு அந்த அம்மாளிடம் தமது மதவிஷய எண்ணங்கள், படிப்புக்கள் முதலியவைகளை எடுத்துரைத்து 'பெரியோர் பெற்ற அநுபூதி எனக்கு எவ்வாறு வரும்' என்று மிகுந்த உருக்கத்துடன் கேட்டார். இதைக்கேட்டதும் இளமை மாறாத இவருக்கு இவ்வளவு ஆழ்ந்த மோக்ஷ அபேக்ஷை எவ்வாறு வந்தது என்று வியப்பு உண்டாக, அந்த அம்மாளுக்கு இவரிடம் கருணை உண்டாயிற்று. உடனே அவள் இவர் தலையின்மேல் மிகுந்த அன்புடன் கையை வைத்தாள்! அப்பொழுது அளவில் அடங்காது எங்கும் வியாபித்த பரம்ஜ்யோதி ஒன்று இவரைச் சூழ்ந்துகொண்டது! தேகப்பிரஞ்ஞை உலக பிரஞ்ஞை எல்லாம் இவரை விட்டு அகன்றது! ஓர்வித ஆனந்தம் இவருக்கு உண்டாயிற்று! இதைத் தான் இவர் கமலாம்பாள் சரித்திரத்தில் விசுவரூப தர்சன அத்யாயத்தில் மனப்பூர்வகமாக விவரித்தார் போலும். * இந்த நிரதிசய ஆனந்த நிலையில் கொஞ்ச நாழிகை இருந்து விட்டுப் பின்பு வெளிவர இவருக்கு மஹான்களது நிஷ்டாநுபூதிவிஷயத்தில் இருந்த ஸந்தேகங்கள் நீங்கி ஓர்வித ஸுகப்பிரஞ்ஞையே இவர் மனதில் குடிகொண்டது. அந்த அம்மாளிடம் சில உபதேச விசேஷங்களைப் பெற்று அன்று வீடுவந்தார். கொஞ்சநாளைக்கு எல்லாம் அந்த அம்மாள் பட்டணம்விட்டுப் போய்விட்டாள். இன்னவிடம் போனாள் என்பது ஒருவருக்கும் தெரியவில்லை. (* இறுதியிலுள்ள குறிப்பைப்பார்க்க)

இதுமுதல் மதவிஷயங்களில்இவருக்கு விசேஷப்பற்றுண்டாக உலகவிஷயங்களில் துச்சபுத்திவந்தது. அவதூதஸந்யாஸினி அம்மாள் கருணையால்கண்ட கண்கொள்ளாக் காட்சியை மறுபடியும் கண்டுஆனந்திக்கவேண்டும் என்ற பேர் ஆவல் பிறந்தது. அந்த அம்மாள் போனவிடந் தெரியாமல் மறைந்தது இவருக்கு முதலில் துக்கத்தை உண்டாக்கியது. இவர் ஏக்கம்பிடித்தவர் போல் ஆனார். தேகவிஷயங்களைக்கூடக் கவனியாது இவர் அக்காட்சியைக்காண பிரயத்தனங்கள் செய்தார். சாஸ்திரங்களில் நிஷ்டாகாலங்களில் நாதாதிகள் கேட்கும் என்ற கோட்

பாட்டைப்பற்றி காதண்டையில் மணி அடித்தல், கையைத்தட்டல் முதலியவைகள்மூலமாக நிஷ்டாநாதத்தை தியானஞ்செய்து முன்கண்டகாட்சியைக்கொண்டுவர எவ்வளவோ பாடுபட்டார். ஒன்றும் பயன்படாமல்போக சில ஸமயங்களில் கண்ணீர்விட்டு அழத்தொடங்கினர். இவர் பக்திமார்க்கத்தில் சொல்லும்படியான பிரிவு என்ற விரஹ நிலையில் இருந்தார்போலக் காணப்படுகிறது. இவர் மனோநிலையை அறியாத வீட்டிலுள்ளோர் எல்லோரும் இவருக்கு பைத்தியம் பிடித்ததென்று எண்ணி விட்டனர். அவர்களுக்கு இவர் தகுந்த விடை அளிக்காமலே இருந்துவிட்டார். அவர்கள் எண்ணம் வரவர திடப்பட்டது. இவ்வாறு கொஞ்சகாலம் தமது உத்தியோகவேலை தவிர மற்றைய வேலைகளில் எல்லாம் இவர் பரிதவித்துக்கொண்டு பார்வைக்கு சித்தப்பிரமை பிடித்தவர் போலக் காலத்தைக் கழித்துவந்தார்.

இந்த ஸமயத்தில் விவேகானந்தஸ்வாமிகள் திக்விஜயம் செய்து ஸநாதனதர்மத்தை உலகில் நிலைநிறுத்தப் பேராவல்கொண்டு பட்டணம் வந்தார். அமெரிக்கா போவதற்குமுன் உலகில் உள்ளோர் நமது மதவிஷயங்களை நன்கு உணரும்பொருட்டு பிரம்மவாதினி என்ற ஒரு மாதாந்த இங்கிலீஷ்ப் பத்திரிகையைத் தொடங்கி நடத்தி வர ஏற்பாடுகள் செய்தார். அதன்படியே திருவல்லிக்கேணியில் அப்பத்திரிகை அப்பொழுது நடத்தப்பெற்று இப்பொழுதும் பட்டணத்தில் நடந்துவருகிறது. இது தொடங்கியகாலத்தில் விஷயதானம்செய்வோர் அதிகமாக இல்லாததால், அப்பத்திரிகையில் முனைந்து வேலைசெய்தவர் ஒருவர், ராஜம் அய்யர் ஸ்நேகிதராயும், இவரது தேர்ச்சி முதலிய அரிய குணங்களை அறிந்தவராயும் இருந்ததால் உடனே இவரிடம் வந்தார். இவர் ஒன்றும் செய்யாது பித்துப் பிடித்தவர்போல வீட்டில் ஓர்புறம் சும்மா உட்கார்ந்திருப்பதைக் கண்டு, 'இவ்வாறு உமது கல்வித் தேர்ச்சி யாவும் வீணாகவேண்டுமோ? ஏன் வீண்காலம் கழிக்கின்றீர்? நமது பத்திரிகைக்கு விஷயதானம் ஏதாவது செய்யுமேன்' என்று மிகுந்த பரிவுடன் கேட்டார். ராஜம் அய்யர் இதை இரண்டொருதரம் லக்ஷ்யஞ் செய்யாது இருந்துவிட்டதைக் கண்டு பத்திரிகை அதிகாரி அடிக்கடி வந்து விஷயதானஞ் செய்யும்படி இவரைவிடாது கேட்கத்தொடங்கினர். ஒருதரம் ராஜம் அய்யர் முன்பின் யோசிக்காது மறுதரங்கூட வாசித்துப்பாராமல் தம் நண்பர் வேண்டுகோளின்படி ஓர் வியாஸம் எழுதிக்கொடுத்தார். அது 'மனிதன், அவனது ஏற்றத்தாழ்வு' என்ற விஷயத்தைப்பற்றி எழுதப்பட்டிருந்தது. அதில் :—

> இந்திரியங்கள் மேலனவாம் என்றுரைப்ப இந்திரியத்திற்
> சிந்தைமிக மேலதனிற் சிறுடைத்தப்—புத்திதான்
> மன்னியவப் புத்தியினும் மாண்புடையான் அன்றோ
> கன்னவிலுந் தோளா யிதே காண்.

என்ற கீதாவாக்கியத்தின் (கீதை அத்தியாயம் 3 - சுலோகம் 42) விருத்தியுரையை எழுதி கற்பனாசக்தியின் விசேஷம், அதைவிட வேதாந்த முடிவான பரமபதத்தின் மேன்மை, இவைகளை வற்புறுத்தி, இந்த நிலையை அடையும்படியான சக்தி மனிதனுக்கு மாத்திரம் இருப்பதால் அவனுக்கு ஏற்றம் என்றும், அவன் கற்பனாசக்தி, புத்தியின் விரிவு ஆகிய இவைகளால் அவனுக்கு மற்றைய ஜீவராசிகளை விடச்சற்று உயர்வு ஏற்பட்டபோதிலும் இவைகளால் அவனுக்கு உண்மையான ஏற்றமில்லையென்றும், தேகம் இந்திரியம் மனது இவைகளால் மனிதனுக்குத்தாழ்வே ஒழிய ஏற்றம் உண்டாவதில்லை என்றும் தமது அநுபவத்தை ஒட்டி மிகுந்த உருக்கத்துடன் இந்த வியாஸத்தை அமைத்திருந்தார்.

இது பத்திரிகை அதிகாரிகளாய் இருந்தவர்களுக்குப் பிடிக்காமல்போக இதை இரண்டொருமாதம் வெளியிடாமல் வைத்துவிட்டனர். இரண்டுமாதங் கழித்து விஷயங்கள் பத்திரிகைக்கு அகப்படாமற்போக பத்திரிகை அதிகாரிகளுக்கு ராஜம் அய்யர் வியாஸத்தைப் போடும்படியான அவஸரம் வந்துவிட்டது. அப்பொழுது இந்த வியாஸம் மாறுதலின்றி பிரம்மவாதினியில் வெளிவந்தது. ஸாதாரண புஸ்தக ஞானத்தால் எழுதும் பெரியோரது வியாஸத்திற்கும் ராஜம் அய்யர் வியாஸத்திற்கும் மடுவிற்கும் மலைக்கும் உள்ள பேதம் இருந்தது. மனிதன், அவன் ஏற்றத்தாழ்வு என்ற வியாஸம் அநேகரது மனத்தைக் கவர்ந்து அவர்களுக்கு அடங்கா ஆனந்தத்தை அளித்தது.

இது மைலாப்பூரிலிருந்த சில பிரபுக்களுக்கு ஆனந்த மணிக்க ராஜம் அய்யரைத் தக்க உபதேசம் பெற்று இந்த ஜன்மத்திலேயே ஸித்தி அடையும்படி செய்ய அவர்கள் இவ்வாறு உதவினர் என்ற விஷயத்தை அடுத்த ஸஞ்சிகையில் எடுத்து நன்கு விவரிப்போம்.

---

விசுவரூபதர்சன வைபவம்.—பக்திமானான முத்துஸ்வாமி அய்யர் திடீரென்று தம்முன் தோன்றிய ஸ்ரீ ஸச்சிதானந்த ஸ்வாமிகளால் தேற்றப்பட்டு தற்கொலை செய்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் நீங்கி அந்த நள்ளிரவில் நிச்சப்தமான ஸமயத்தில் சிதம்பரம் சிவகங்கையில் ஸந்தியா வந்தனம் செய்ய இறங்கினர். அப்பொழுது ஸ்ரீ நடராஜப்பெருமான் அர்த்தஜாம கண்டாமணி அவர் காதில்பட அவர் உடம்பு சிலிர்த்தது. மிகுந்த மன உருக்கத்துடன் அவர் ஸந்தியாவந்தனம் செய்து ஜபத்திற்கு ஆரம்பித்து வேதாந்த ரகஸியமாகிய ஓம் என்ற மூலப்பிரணவத்தை உச்சரித்தார். 'அப்பொழுது அவருடைய பிராந்தியோ அல்லது குருதர்சன விசேஷமோ அறியேன்—திடீரென்று பூமிமுதல் ஆகாயம் மட்டும் நிலவினும் இனியதாய வெயிலினும் காந்தியாய தென்றலே உருவு கொண்டு வந்தாற்போல ஜில் ஜில் ஜில் என்று குளிர்ந்து மந்தமாய் அசைந்தாடும் ஒருதிவ்விய ஜ்யோதியானது இடைவெளியற்று எங்கும் பரந்ததுபோல அவருக்குத் தோன்றிற்று அவ்வாறு தோன்றிய அந்த ஜ்யோதி மஹிமையில்' உலகவஸ்துக்கள் யாவும் மிகுந்த கம்பீரத்தையும் கௌரவத்தையும் அடைந்து விளங்கின. ஆகாயத்தில் வெகுதூரம் மட்டும் ஸகல அண்டங்களும் பலவித வர்ண ஜ்யோதிகளாகப் 'பிரகாசித்துப் பகவானை நோக்கி அமிர்தமயமான கானத்தைச் செய்து ஓர் பயங்கரமான அழகுடன் வெகு கம்பீரமாக உருள, இவை எல்லாவற்றிற்கும் மேல் ஸகலலோகத்திற்கும் காரணனாய, நாயகனாய, சரண்யனாய, பெருமையினும் பெருமையாய இனிமையினும் இனிமையாய அநேககோடி ஸூர்யர்கள் ஏககாலத்து உதித்தாற்போல பார்க்கபதினாயிரம் கண்களும் போதாத அபரிமிதமான ஜ்யோதிஸ் ஒன்று தோன்றுவதை முத்துஸ்வாமி ஐயர் கண்டார். தமது கண்களால் கண்டு பாதாதிகேசம்வரையில் மயிர்க்கூச்செறிந்து ஆ என்று திறந்த வாயும் இமையாது விழித்தகண்ணுமாய ஆனந்த ஸாகரத்தில் மூழ்கி மதிமயங்கி மெய்மறந்து பரவசமாய் பிரமித்து ஸ்தம்பித்துநிற்க, காட்டி யொளிக்கும் மின்னல் போல் ஒரு கணத்துள் மறைந்தது அக்கரையில்லாக்காட்சி. மறைந்ததும் நெடு நேரமாக முத்துஸ்வாமி அய்யருக்கு உணர்ச்சியே வரவில்லை' உணர்ச்சி வந்ததும் அவர் ஓட்டோடியும் வந்து மிகுந்த பரபரப்புடன் ஸ்வாமிகளிடம் தாம் கண்ட அற்புதக்காட்சியைத் தெரிவித்து மிகுந்த பக்தியுடன் அடிபணிய, ஸ்வாமிகள் 'முத்துஸ்வாமி! பயப்படாதே நல்ல நல்ல பூஜையைப் பண்ணியிருக்கிறாய் பகவான் உன்னிடம் விசேஷக்கிருபை வைத்திருக்கிறார். நீ அதிக பக்தியோடுகூட மட்டும் இருப்பாயானால் 'இப்பொழுது பஹிரங்க பூதமாய்ப்பார்த்த ஆனந்தக்காட்சியை உனக்கு உள்ளேயே இடைவிடாது தரிசித்து அநுபவிக்கலாம்' என்று மிகுந்த அன்புடன் தேற்றினர்.

# இயற்கை அற்புதங்கள்

## WONDERS IN NATURE



### II - எரிமலைகளின் காரண காரியங்கள்

### VOLCANOES—ITS CAUSES AND EFFECTS.

---

எரிமலைகள் உண்டாவதற்கு என்ன காரணம் என்ற விஷயத்தை ஆராய்ச்சி செய்வோம். பூமியுள் சுரங்கங்கள் வைத்துக்கொண்டு கீழே சென்றால் போகப்போக சூடு அதிகமாகிறது என்பது எல்லோரும் அறிந்து கொள்ளக் கூடிய விஷயம். பரிசோதனைகளின் பேரில் 60-அடி பூமிக்குள் சென்றால் 1-டிகிரி உஷ்ணம் ஏறுகிறது என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இம்மாதிரியே உஷ்ணம் ஏறிக்கொண்டு போகுமாகில் பூமியின் மத்தியில் உஷ்ணம் மிக அதிகமாக இருக்கும். பூமியின் குறுக்களவு 8000-மைல், ஆகையால் அதன்மத்தியபாகம் 4000-மைலில் தூரத்தில் இருக்கவேண்டும். அந்தப் பிரதேசத்தில் உஷ்ணம் ஏறக்குறைய $(4000 \times 1760 \times 3) \div 60 = 4000 \times 88$ டிகிரி

இருக்கவேண்டும். நமது தேகத்து உஷ்ணம் $98\frac{1}{2}$-டிகிரி, தண்ணீர் கொதிப்பது 212 டிகிரியில், இரும்பு 2192-டிகிரியில் உருகுகின்றது. எளிதில் உருகாத பிளாடினம் என்ற உலோகம் 3227 டிகிரியில் உருகும். கற்பாறை முதலியன அக்னிக்குழம்பாக இன்னும் அதிகம் உஷ்ணம்வேண்டும். இதற்கு வேண்டுமான உஷ்ணம் பூமியின் மத்தியபாகத்தில் இருக்கின்றது, என்பது முன்பார்த்துள்ள கணக்கிலிருந்து வெளியாகின்றது. ஆகையால் பூமியின் மத்திய பாகம் உருகினகுழம்பாக இருந்தாலும் இருக்கலாம் என்பது இதனால் விளங்கும்

இவ்வளவு உஷ்ணமான பூமி வெளியிலிருந்து குளிர்ந்துகொண்டே வருகின்றது. ஆகையால் உட்சூடு நமக்கு வெளியில் தெரியவில்லை. பூமியின் வெளி பாகத்தினது கனத்தின் விசேஷத்தால் உட்பாகம் குழம்பாக இல்லாமல் இருந்தாலும் இருக்கலாம். ஆனால் அதிக உஷ்ணத்தால் அது குழம்பாகும் தருணமாக இருக்கலாம். மேலே இருக்கும் கனம் எந்தக் காரணத்தாலாவது குறைவுபட்டால் உடனே அது குழம்பாகிவிடலாம்.

இது நன்கு விளங்குமாறு ஒரு சோதனை செய்து பார்க்கலாம். கண்ணாடி சோதனைக் குழாய் ஒன்றை எடுத்து அதனுள் கொஞ்சம் ஜலத்தைவிடுவோம். பின்பு அதை ஒரு கைபிடி மூலமாகப் பிடித்துக்கொண்டு அது கொதிக்கும் வரையில் விளக்கில் காய்ச்சுவோம். அது கொதித்தவுடன் விளக்கிலிருந்து வெளியில் எடுப்போம். கொதிப்பு அடங்கிவிடும். இரண்டு மாத்திராகாலம் வைத்திருந்து அதைப் பழையபடியும் விளக்கில் பிடிப்போம். உடனே தண்ணீர் கொதிக்கும். ஆகவே தண்ணீர் கொதிக்கும் உஷ்ணத்தில் இருக்கின்றது. அதை வெளியில் எடுத்து இரண்டு மாத்திரா நேரத்துக்குள் ஒரு தகுந்த தக்கையால் அக்குழாயின் வாயை மூடி விளக்கில் கொஞ்சநாழிகை பிடிப்போம். உடனே தண்ணீர் கொதிப்பதில்லை. சீக்கிரம் அதை வெளியில் எடுத்து,* தக்கையை எடுப்போம். விளக்கின்மேல் இல்லாதிருந்தபோதிலும் தண்ணீர் உடனே கொதிக்கின்றது. கொதிக்கும் தருணமாக இருந்த தண்ணீர் தக்கையால் அடைபட்டிருக்கும்பொழுது விளக்கின்மேல் இருந்த போதிலும் கொதிக்காது இருப்பானேன்? விளக்கின்மேல் இல்லாதபோதும் தக்கையை எடுத்துவிட்டபொழுது உடனேகொதிப்பானேன்? தக்கையை அடைத்திருக்கும் பொழுது தண்ணீரில் இருந்து வரும் நீராவி வெளியே போக இடமில்லை. உள்ளேயே அடைபட்டு தண்ணீரை அமுக்கிக்கொண்டிருப்பதால் அதைக்கொதிக்கவிடவில்லை. பின்னர் தக்கையை எடுக்கும்போது, விளக்கின் மேல் வைத்தக்கால் கொதிக்கும் தருணத்திலிருந்தும் ஆவியின் அமுக்கலால் கொதிக்காத நீர் இப்பொழுது ஆவி வெளியில் போகத் தடை நீங்கி உடனே கொஞ்சம் கொதிக்கின்றது. ஆதலால் இந்தச் சோதனையில் இருந்து ஸாதாரணமாக கொதிக்கும் உஷ்ணத்திலிருக்கும் திரவபதார்த்தங்கள் பிறவஸ்துக்களால் அமுக்கப்பட்டால் அப்பொழுது கொதிக்காது அந்த அமுக்கலிலிருந்து விடுபட்டதும் கொதிக்கும் என்பது விளங்கும்.

இதுபோல உருகும் பதார்த்தங்களும் தாம் உருகவேண்டிய உஷ்ணத்தில் இருந்தபோதிலும் உருகாது பிறவஸ்துக்களால் அமுக்கப்பட்டு கடின பதார்த்தமாக இருக்கலாம் என்றும் அந்த அமுக்கல் நீங்கியதும் அவை உருகிவிடலாம் என்றும் இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளலாம். ஆகவே பூமியின் உட்பாகம் உருகுந் தருணமான உஷ்ணத்திலயில் கடினபதார்த்தமாக இருக்கலாம், என்பது யுக்திக்குப் பொருந்தினதாகத் தோற்றுகின்றது

இவ்வுருகும் தருணத்திலிருக்கும் வஸ்துக்கள் எவ்வாறு அக்னிக் குழம்பாகின்றன என்ற

* சீக்கிரம் எடுக்காவிட்டால் குழாய், உள்ளிருக்கு ஆவியின் வேகத்தால் தூள் தூளாகச் சிதறி நம்மை காயப்படுத்தும்,

சங்கைகள் உண்டாகலாம். இவ்வஸ்துக்கள் உருக, மேலிருக்கும் கனம் குறையவேண்டும். உடனே இவை உருகிவிடும், இந்த கனம் இரு ..கமாகக் குறையலாம். பூமி வெளியிலிருந்து குளிர்ந்து கொண்டே வருகின்றது. அவ்வாறு வருங்கால் அதன் மேல்பாகம் சுருங்கும். அப்பொழுது அதில் மடிப்புக்கள் ...ப்படும். அதாவது பூமியின் மேல்பாகத்தில் மேடுபள்ளங்கள் உண்டாகும். இம்மாதிரி சுருங்கல் உண்டாவது உலகில் மலைகள் உண்டாவதற்கு உதவிசெய்யும் காரணங்களுள் ஒன்று. இம்மாதிரி பூமியில் மேடுபள்ளம் உண்டாக பள்ளபாகங்களில் அமுக்கல் ...திகமாகும், உயர்ந்தவிடங்களில் இது குறைபடும். உடனே உயர்ந்த பாகத்தடியில் பூமியின் ...பாகத்தில் உள்ள உருகும் தருணமாக இருக்கும் வஸ்துக்கள் உருகி அக்னிக்குழம்பாய் ...டலாம். இக்காரணத்தால் உலகத்தில் இருக்கும் உன்னதமான பர்வதங்கள் சிலவற்றின் அடியில் அக்னிக்குழம்பு உருகின ஸ்திதியில் இருக்கலாம். அது மலைச்சாரலின் பலத்தாலாவது அதைப்பிடித்துத் தள்ள ஒன்றும் இல்லாததினாலாவது வெளிவாராது அடைபட்டுக் கிடக்கலாம். இவ்வாறிருப்பதற்கு மலைகளின்மேலிருக்கும் எரிமலைகளும், தீவுகளிலிருக்கும் எரிமலைகளும் தக்க சாக்ஷி. வேறுவிதத்திலும் அக்னிக்குழம்பு உண்டாகலாம். உருகும் தருணமாக வஸ்துக்கள் இருப்பதால் இவை பூமியின் வெளிப்பாகத்தை மிகுந்த வேகமாக அமுக்கும். இது தாக்கும் இடம் பலக்குறைவான ...டமாயிருப்பின் அதை உடைத்துக்கொண்டு இவ்வஸ்து வெளியே அக்னிக்குழம்பாக வந்துவிடும். இவ்விரு காரணங்களால் பூமியுள் உருகும் தருணமாக இருக்கும் வஸ்துக்கள் அக்னிக்குழம்பாகலாம்.

இப்படி அக்கினிக்குழம்பு உண்டாவதாயின், ...து எவ்வாறு எரிமலை வாயின் வழியாக ஏறி ...ழியத்தொடங்குகின்றது? சிற்சில ஸமயங்களில் இந்த வஸ்துக்கள் ஏன் மிகுந்த உயரம் ஆகாயத்தில் கிளம்பவேண்டும்? இவ்வாறு பயங்கரமான உற்பேதம் உண்டாகும்படி அக்கினிக்குழம்பை வெளியில் தள்ளி விடுவதுயாது? என்ற கேள்விகள் பிறக்கும். உற்பேத ஆரம்பத்தில் உண்டாகும் சிற்சில குறிகளை நோக்கில் இதன் உண்மை வெளிவரும். உற்பேதத்தொடக்கத்தில் ஸாதாரணமாக நீராவியின் அணுக்கள் மிகுந்த வேகத்தோடு வெளிவருவதை நாம் முன்னமேயே குறிப்பித்திருக்கிறோம். இதிலிருந்து அக்கினிக்குழம்போடு தண்ணீர் ஸம்பந்தப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிய வரும். இந்தத் தண்ணீர் உருகும் தருணமான அதிக உஷ்ணத்திலிருக்கும் வஸ்துக்களோடு ஸம்பந்தப் பட்டதும் உடனே நீராவியாக மாறுகிறது. நீராவியின் சக்தி எவ்வளவென்று அறியவேண்டுமாகில் புகைவண்டி புகைக்கப்பல் முதலிய நீராவியால் தொழிற்படும் யந்திரங்களைப் பார்க்கலாம். இவ்வளவு சக்தியை உடைய நீராவிதான் அக்கினிக்குழம்பை தன் வேகத்தால் மேலே கிளப்புவது. பலக்குறைவான விடங்களை சிதற அடித்துக் கொண்டு நீராவி தன் சக்தியால் முதலில் வெளிவருகின்றது. அதன் பின்னே அக்னிக் குழம்பு கிளப்பப்பட்டு மலையின் வாய் வழியாக வழிகின்றது. இந்த நீராவியின் சக்தியால் தான் உற்பேத ஆரம்பத்தில் தூசி, சாம்பல்கள், கற்பாறைகள், முதலிய மேலே கிளம்புவதும், பீரங்கி சப்தம் கேட்பதும், மழையுண்டாவதும் ஆகிய அமளி குமளியாவது. இதன் சக்தியால் முதலில் வரும் அக்னிக் குழம்பு சின்னபின்னமாகச் சிதறி விழும். உற்பேத ஸமயங்களில் இந்த நீராவி அதிகமாக வந்து இத்தொழில்களைச் செய்கின்றது.

முன் கூறியதற்கு ஸஹாயமாகத் தண்ணீர் எவ்வாறு பூமி உள்ளிருக்கும் உருகும் தருணமான பதார்த்தங்களோடு ஸம்பந்தப் படுகின்றது என்ற ஸந்தேகம் உண்டாகலாம். இதற்கு நாம் எரிமலைகளின் அமைப்பை கவனிக்க வேண்டும். அவைகள் எல்லாம் ஸமுத்திரக்

கரை ஓரமாகவும் தீவுகளிலும் காணப்படுகின்றன. இதனாலேயே கடல் நீர் பூமியின் இடுக்குகள் வழியாக இறங்கி ஒரோர் இடத்தில் அக்னிக் குழம்பில் ஸம்பந்தப்படலாம். மேல்விழும் மழைநீரும் அவ்வாறு ஸம்பந்தப்படலாம். இதுவும் அல்லாமல் பூமியின் உட்பாகத்திலே தண்ணீர் நீராவியாகி இருக்கலாம். இம்மூன்று விதத்தாலும் தண்ணீர் அக்னிக்குழம்போடு ஸம்பந்தப்பட உற்பேதங்கள் உண்டாகின்றன.

பூமி குளிர்ந்து வருதலால் உண்டாகும் சுருக்கமும் உற்பேதங்களில் அக்னிக்குழம்பு மேலே கிளம்ப காரணமாகவிருந்து உதவி செய்யலாம். இவ்வுற்பேதங்களில் உண்டாகும் பூகம்பங்களை பின்னர் நன்கு விவரிப்போம்.

முற்காலத்தில் எரிமலைகளுக்கு அநேகர் அனேகவித காரணங்கள் கூறியுள்ளார். கிரேக்கர் வல்கன் என்பவன் பாதாளலோகத்தில் தொழில்செய்கின்றான், அவன் உலைக்கூடத்திலிருந்து வரும் புகை முதலியனவே எரிமலையின் உற்பேதாதிகள் என்றும், ரோம் தேசத்தார் தமது அருகாமையிலுள்ள எட்னா என்ற எரிமலை அதன் அருகாமையிலிருக்கும் ஷாரிப்டீஸ் என்ற சுழல் நீரை உள்ளிழுத்துக்கொண்டு தன் வாயால் கக்குகின்றது என்றும் சொல்லியிருக்கின்றார்கள். ரோம்தேசத்தவர்கள் கதைக்கும் நாம் முற்கூறியிருக்கும் காரணத்திற்கும் கொஞ்சம் ஸம்பந்தம் இருப்பதை எல்லோரும் எளிதில் அறியலாம். ஒரு திபத்தார் எரிமலை அடியிலுள்ள நிலக்கரி முதலிய எரியும் பதார்த்தங்களில் தீப்பற்றி விடுவதால் உற்பேதங்கள் உண்டாகின்றன என்றார். லீமரி என்ற ரஸாயன சாஸ்திரி நன்றாகப் பொடிபண்ணப்பட்ட கந்தகம் இரும்புத்தூள் இரண்டையும் சேர்த்து கொஞ்சம் தண்ணீரை விட அதில் உண்டான உஷ்ணத்தால் எரிமலையில் நடப்பது போன்ற தீப்பிடித்து எரிதல் முதலியன காணப்பட்டன. ஆகையால் சில வஸ்துக்களின் சேர்க்கையே எரிமலை உற்பேதங்களுக்குக் காரணம் என்று அவர் நிச்சயித்தார். டேவி என்ற பிரகிருதி சாஸ்திரி இரண்டு உலோகங்கள் தண்ணீரோடு சேர்ந்தவுடன் தீப்பற்றி எரியும் குணமுடையனவென்றும் அவைகள் பூமியில் மலையடிகளில் இருந்து ஸமுத்திரம்வந்து தாக்குவதால் தீப்பற்றிக்கொள்ள கொடிய உற்பேதங்களை உண்டாக்குகின்றன என்றார். இவைகள் யாவும் உண்மையல்லவென்று தள்ளப்பட்டு நாம் முன்னர் விஸ்தாரமாக எடுத்துக்காட்டியுள்ள முகாந்திரங்களே எரிமலைகளுக்குத் தகுந்த காரணங்கள் என்றும், அவைகளால் வெந்நீர் ஊற்றுக்கள், பூகம்பங்கள் முதலியவைகளையும் எளிதில் தெளிவாக அறியலாம் என்றும் இக்காலத்து பிரகிருதி சாஸ்திரிகள் எல்லோரும் அங்கீகரிக்கிறார்கள்.

இதுவரையில் எரிமலையின் காரணங்களை எடுத்துக் காட்டியாய்விட்டது. இப்பொழுது அவைகளால் உண்டாகும் காரியங்களை நன்கு விவரிப்போம். முன் ஸஞ்சிகையில் இதைப் பற்றி வாசித்தவருக்கு எரிமலைகளால் மிகுந்த அழிவு உண்டாகின்றது என்பது விளங்கும். அவைகளிலிருந்து நல்ல கந்தகம் விளைகின்றது. அவைகளிலிருக்கும் பிரதேசங்களில் ஸாதகமான வெந்நீர் ஊற்றுக்கள் உண்டாகின்றன. மேலும் உற்பேதம் கொடூரமாக நடக்குங்கால் அக்கினிக்குழம்பு ஆரவாரம் முதலியனவின்றி ஸாவதானமாக வழிகின்றது. ஆகையால் எரிமலைகளே இல்லாமல்போனால் பூமியின் உட்பாகத்தில் உருகும் தருணத்தில் தண்ணீரோடு ஸம்பந்தப்பட்டிருக்கும் வஸ்துக்களி

ஓவகத்தால் பூமியே சிதரிப்போய்விடும். எரிமலை உற்பேதத்தால் இந்த ஆபத்துவராது நீங்குகின்றது. ஸமபூமியில் உண்டாகும் உற்பேதங்களால் மண் முதலியவைகள் குவிந்து மலைகள் உண்டாகின்றன. ஸமுத்திர மத்தியில் இதனல் தீவுகள் உண்டாகும். பழைய தீவுகள் திடீரென்று அமிழ்ந்துவிடலாம். உற்பேதங்களால் பழைய மலைச் சிகரம் சிதறுண்டு புதிய சிகரம் உண்டாகும். ஆகவே எரிமலைகளின் காரியங்கள் பெரும்பாலும் நாசஹேதுவே ஒழிய வேறில்லை.

எரிமலையைப்பற்றிய விஷயங்களை முடிக்கும் முன் அவைகளுள் முக்கியமானதான விஸூவியஸ் எரிமலையில் நடந்த ஓர் உற்பேதத்தை நிர்ப்பயமாகக் கூடியவரையில் அருகாமையிற் சென்று உள்ளது உள்ளபடி வருணித்த மூத்த பிளினி என்பவரைப்பற்றி அவசியம் நாம் நினைக்கவேண்டியது. இவரால் எரிமலை உற்பேதம் இப்படியிருக்கும் என்பது உலகத்தவருக்குத் தெரியவந்தது. இப்பெருதவி புரிந்த இவர் நிர்பயமாக விஸூவியஸ் உற்பேதத்தைப் பார்த்துக்கொண்டிருக்க அதன் கொடுமை அதிகமாவதைக் கண்டு பலரது வேண்டுகோளின்பேரில் இவர் ஸமுத்திரக்கரையை அடைந்தார். எரிமலையிலிருந்து அடித்த கந்தகக் காற்றின்கொடுமையோடு இவரது இறைப்பையின் பலஹீனம் கூடச்சேர இவர் அங்கேயே வெகு பரிதாபமாக இறந்தார். இவர் விஸூவியஸ்ஸைப்பற்றி வருணித்தது, இவருக்காக இவர் உறவினர் பட்டபாடு முதலியவைகளை பின்னர் வேறோர் ஸந்தர்ப்பத்தில் நன்கு விவரிப்போம். இந்த வியாஸத்தின் முடிவில் இப்படிப்பட்ட தீரமான காரியத்தை நமக்காகச் செய்தவரை நாம் அன்போடு நினைக்கவேண்டியது அவசியம்.

அ. சீ, ஷ.

# மக்பெத் பட்ட பாடுகள்

## MACBETH'S TROUBLES

மாயினிகள் வாக்கின்படி மக்பெத்திற்கு இராஜ்யம் கிடைத்தது. அவனுக்கு இரண்டொருநாளுக்குள் முடிசூட்ட, அவன் ஸ்காத்லெண்டுக்கு அரசனானன். இவைகளின் ரகஸியம் பாங்கோவுக்கு மாத்திரந்தான் தெரியும். மக்பெத்திற்கு இராஜ்யம் கிடைத்த விஷயத்தில் அவனுக்கு ஒருவிதமான ஸந்தோஷமும் ஒருவிதமான துக்கமும் உண்டு. மக்பெத்தின் விஷயத்தில் உண்மையான மாயினிகள் வாக்குத் தன் விஷயத்திலும் உண்மையாகும் என்ற நிச்சயத்தால் அப்பொழுது ஸந்தோஷம்உண்டாயிற்று. அவன் நல்ல மனமுடையவனுதலால் ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்ற பேராசையால் தன் நண்பன் சித்த ஸமாதனத்தைக் கொள்ளைகொள்ளும் கொடுங்கொலையைச் செய்து அரசுபெற்றுனே! என்று அவன் அப்பொழுது தூக்கித்தான். மக்பெத்திற்கு முடிசூட்டிய தினத்தின் இரவில் அவன் தன் கீழ் இருக்கும் பிரபுக்களுக்கு ஓர் பெரிய விருந்துசெய்யத் தீர்மானித்தான். அதற்கு பாங்கோவை அவன் மிகுந்த அன்புடன் அழைத்திருந்தான்.

மக்பெத்திற்கு இராஜ்யம் வந்ததே ஒழிய அவனுக்கு சித்தஸமாதானம் உண்டாகவில்லை. இந்த கஷ்டம் அவன் பயத்தால் உண்டாகவில்லை; அது டங்கனைக் கொன்றதுமே அவனைவிட்டு அகன்றது. இப்பொழுது அவனுக்கு 'நாம் இவ்வளவு கொடுந்தொழில் செய்தும் என்ன பிரயோஜனம். நமது வைபவம் ஒன்றும் நமது பிள்ளைக்குத் தக்குவதாகக் காணுமே! பாங்கோவும் அவன் பிள்ளையும் உயிரோடிருக்கும் வரையில் என் நிலை என்னஸ்திரம்?' என்ற எண்ணம் உண்டாக, அவன் மனம் குழம்பியது. ஒரு கொலை செய்தவன் ஆகையால் அவனுக்கு பாங்கோவையும் அவன் பிள்ளையையும் அன்றைக்குள் கொன்றுவிட்டால் தனக்கு சித்த ஸமாதானம் எளிதில் உண்டாகிவிடும் என்று பட்டது. அவன் கெட்டுப்போய்விட்டபடியால், கொலை செய்வதால் சித்தம் ஏவவக் கலங்க வருத்தம் அதிகரிக்கும் என்ற ஸாதாரண உண்மை அவனுக்கு உண்மையாகத் தோற்றவில்லை. இந்தத் தீர்மானம் வந்ததும், பாங்கோ அன்று நடுப்பகலில் தன் பிள்ளையோடு ஸவாரி போய்விட்டு ஸூர்யாஸ்தமனத்தின் பிற்பாடு மூன்று

நாழிகை கழித்து இருளில், தான் செய்யும் விருந்துக்கு வரப்போகிற விஷயத்தை மக்பெத் அறிந்து தன் மனைவிக்குத் தெரியாமலே தைரியமாகத் தன் மனவலியாலேயே இரண்டு கொலையாளிகளை அழைத்துவந்து அவர்களுக்கு பாங்கோவையும் அவன் பிள்ளையையும் அன்றிரவே கொன்றுவிடும்படி கட்டளையிட்டான். அவர்கள் நிற்கவேண்டிய இடம் முதலியவைகளையும் அவர்களுக்கு நன்றாகத் தெரிவித்தான். அவர்களும் அவ்வாறே செய்துவிடுவதாக ஒப்புக்கொண்டு போயினர். மக்பெத் மனைவியிடம் தன் மனக்குறைகளை அன்று பிற்பகல் எடுத்துரைக்க அவள் எவ்வளவோ அவனை ஸமாதானம் செய்து தேற்றப்பார்த்தாள். பாங்கோவும் அவன் பிள்ளையும் உயிரோடிருக்கும்வரையில் தனக்கு ஸுகம் கிடையாதென்று அவன் ஒரே வார்த்தையாகச் சொன்னானேஒழிய, தான் அவர்களைக் கொல்லச்செய்திருக்கும் ஏற்பாட்டை ஒன்றையாவது அவளுக்குச் சொல்லவில்லை. கொலைத்தொழிலுக்குப் பயந்து நடுங்கிக்கொண்டிருந்த மக்பெத் இப்பொழுது அத்தொழிலில் துணிவாக இறங்கத் தொடங்கிவிட்டான்.

ஸாயங்காலம் ஸூர்யாஸ்தமனம் ஆனதும் மக்பெத்தால் தூண்டப்பட்ட கொலையாளிகள் இருவரும் அரண்மனைத் தோட்டத்தின் வாயிலில் பாங்கோவையும் அவன் பிள்ளையையும் கொலை செய்யத் தயாராய் வந்து நின்றுவிட்டனர். அப்பொழுது மக்பெத் ஒரு கொலையாளி வேஷத்தோடு அரசன் தன்னை அனுப்பியதாகச் சொல்லிக்கொண்டு அவர்களோடு வந்து சேர்ந்துகொண்டான். இதற்குள், பாங்கோ தன் பிள்ளை பிடித்துவந்த தீவட்டி வெளிச்சத்தால் வழியை நன்றாகப்பார்த்துக்கொண்டு இருட்டுஸமயத்தில் அங்குவந்தான். இருகொலையாளிகளும் பாங்கோவை முதலில் அடித்தனர். அவன் கீழே விழும்பொழுது தன் பிள்ளையை ஓடிவிடும்படி கூக்குக்குரல் இட்டுக்கொண்டு விழுந்தான். விழும்பொழுது தீவட்டி வெளிச்சத்தில் மூன்றாம்கொலையாளியாகிய மக்பெத் இருக்கும்பக்கம் திரும்பினான். அப்பொழுது பாங்கோ தன்னைப் பார்த்துவிடக் கூடாது என்று பரபரப்போடு அவன் தீவட்டிஅணைப்பதற்குள் பாங்கோ அவனைப்பார்த்துத் தன் ரத்தம் வழிந்துகொண்டிருக்கும் தலையை அசைத்துக்கொண்டு'அடேபாபி!' என்று கூக்குரல் இட்டான். இதற்குள் தீவட்டி அணைய பாங்கோபிள்ளை கொலையாளிகள் கையில் அகப்பட்டுக்கொள்ளாது தப்பிப் பிழைத்து ஓடி விட்டான். இவன் பிள்ளைகள் பேரப்பிள்ளைகள் முதலியோர்மக்பெத்திற்குப்பின் ஸ்காத்லெண்டிற்கு அரசர்களாகி பெருமைபெற்று வாழ்ந்தனர். நடந்த சங்கதியால் திருப்தி அடையாதவனும், பாங்கோ இறக்குங்கால் 'பாபீ!' என்று கதிறியதால் மனங்கலங்கி, மிகுந்த நடுக்கத்தோடு மக்பெத் விரவில் அரண்மனைவந்து வேஷம் மாறி விருந்துக் கூடத்தில் தயாராகவந்து நின்றான். விருந்துக்கு எல்லோரும் அங்குவந்து கூடினர். எல்லோரையும் மக்பெத்விருந்திற்கு உட்காரவைத்து விட்டான். தனக்கு ஒரு இடத்தைக் காலியாக விட்டுவிட்டு, அதில் முதலில் உட்காராது தன் பிரபுக்கள் சாப்பிடத் தொடங்கும் வரையில் தான் அலைய வந்துகொண்டிருந்தான்.

விருந்து ஆரம்பித்தது. எல்லோரும் சாப்பிடத் தொடங்கி விட்டனர். கொலையாளிகளும் இதற்குள் வளையவந்து கொண்டிருக்கும் மக்பெத்திற்கு நடந்த ஸங்கதியை உள்ளபடி சொல்லிவிட்டனர் அவன் மனம் குழம்பத்தொடங்கியது. இதற்குள் மக்பெத்தை உட்காரும்படி பிரபுக்கள் வேண்டினர். மக்பெத் தன் இடத்தைப் பார்க்காமலே 'எல்லோரும் நமத் விருந்திற்கு வந்திருக்கிறார்கள். இதனால் எனக்கு மிகுந்த ஸந்தோஷம். ஆனால் பாங்கோ மாத்திரம் வராததை நினைத்தால் எனக்கு மிகுந்த துக்கம் வருகிறதே என் செய்வேன்!' என்று பாசாங்குசெய்தான். அப்பொழுது ஒரு பிரபு 'அவன் வாராத குற்றம் அவன்பேரில். நீங்கள் துயரப்படுவானேன்? உட்காருங்கள்' என்றான். மக்பெத் உட்காரத் திரும்பினான்! காலியாயிருந்த தன் இடத்தைக்காணோம்! 'என் இடம் எங்கே?' என்றான்; பிரபுக்கள் அவன் இடத்தைக் காட்டினர். அங்கு அவன் கண்ணுக்குப் பாங்கோ காயப்பட்ட தலையும் தானுமாக வந்து உட்கார்ந்துகொண்டு தன்னை நோக்கித்தலை அசைக்கிறதுபோலத்தோற்றியது! மக்பெத்திற்கு மார் படபடவென்றடிக்கத் தொடங்கிவிட்டது, கண் இமைக்கொட்டாது நின்றுவிட்டது. முகம் வெளுத்துவிட்டது. வாயில் வந்தபடி எல்லாம் ஸம்பந்தமின்றி கொலை விஷயத்தைப்பற்றி அவன் அவ்வுரு வெளித்தோற்றத்தைப் பார்த்து உளரத் தொடங்கிவிட்டான்! மக்பெத் மனைவிக்கு அவன் மொழிகளின் பொருள் விளங்க, அவள் மிகுந்த பயத்தோடு தன் கணவனுக்கு இந்த மாதிரி வலி அடிக்கடி வருவது வழக்கம் என்று சாக்குச்சொல்லிவிட்டு, அவன் காதோடு 'நீ முன்பு

டங்கன் கொலைநடந்தகாலத்தில் ஆகாயத்தில் பார்த்த கத்தியின் தோற்றம் போன்றது இது. இதைக் கண்டு பயப்படாதே' என்று சொல்லித்தேற்றினாள். இதற்குள் பாங்கோவின் தோற்றம் மறைய மக்பெத்திற்கு சித்தஸ்வாதீனம் வந்தது. அப்பொழுது தனக்கு இது ஓர் வியாதி என்ற சாக்கைச்சொல்லிவிட்டு, ஒரு கோப்பை சாராயத்தைக் கையில் எடுத்துகொண்டு 'நமது பிரபுக்களும்இங்குதயவுசெய்யாத பாங்கோவும் திருப்தியடையட்டும்' என்று குடித்துத் தன் இடத்தில் உட்காரவந்தான். அப்பொழுதும் பாங்கோவின் தோற்றம் வந்து அவன் இடத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்டு முன்னிலும் அவனுக்கு பயம் அதிகரித்து, அவன் அதிகமாக உளறினான். இனி விருந்தை நடத்துவது நியாயமல்லவென்று மக்பெத் மனைவி எல்லோரையும் போய் வரும்படி விடையளித்து அவஸரமாக அனுப்பிவிட்டு பள்ளியறைக்குத் தன் கணவனைக் கூட்டிக்கொண்டு போய்ப் படுக்கவைத்துத் தேற்றினாள். அப்பொழுது அவன் மக்டப் விருந்திற்கு வராததைப்பற்றிக்கொஞ்சம் வருத்தத்தையும் கோபத்தையும் அடைந்தான். பின்பு மிகுந்த துர்ஸ்வப்னங்களைக் கண்டு கொண்டு அன்று தூங்கினான். பாங்கோவின் பிள்ளை உயிரோடிருப்பது அவனுக்கு மிகுந்த கஷ்டத்தை உண்டாக்க, ஒவ்வொரு இரவையும் ஒரு யுகம்போலக் கழித்தான். இந்த கஷ்டம் பொருக்கமுடியாமல் மறுபடியும் மாயினிகளைத் தேடித் தன்விஷயத்தில் உண்மையை அறிய எண்ணங்கொண்டான்.

'குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்கும்' என்றபடி மக்பெத் ஒவ்வொரு பிரபுவின் வீட்டிலும் தன் வேலைக்காரன் ஒருவனை சம்பளம் கொடுத்து வைத்திருந்தான். அவர்கள் ரகஸியமாக பேசிக்கொள்ளும் ராஜாங்கவிஷயங்கள் எல்லாவற்றையும் மக்பெத்தினிடம் தெரிவிக்கவேண்டியது அவன் கடமை. இதிலிருந்து எல்லோரும் 'டங்கனைக் கொலை செய்தது மக்பெத்' என்று சொல்லிக் கொள்ளும் ரகஸியம் மக்பெத் காதில் விழுந்தது. அவனுக்கு குழப்பம் அதிகரிக்க அவன் சம்பம்புல் வெளிக்கருகில் இருக்கும் குகையொன்றில் மாயினிகளைத் தேடிக் காணப் புறப்பட்டான்.

மக்பெத் வருவதற்குள் மாயினிகள் அவர்களது எஜமானியின் உத்தரவால் மக்பெத்தை நரகத்தில் வீழ்த்தும்படி குறிசொல்ல குரூர வஸ்துக்கள் மூலமாக ஒரு ரக்த கஷாயத்தை தயார்செய்து அதில் தமது துர்தேவதைகளை ஆவாஹனம் செய்து, வைத்துக் கொண்டு அவன் வரவை எதிர் பார்த்திருந்தன. மக்பெத் வந்து குறி கேட்டதும் தமது துர்தேவதைகளை மாயினிகள் மந்திரம் சொல்லி அழைத்தன. உடனே ஓர் தேவதை மகுடம் தரித்த தலையின் ரூபமாக ரக்தகஷாயத்திலிருந்து வெளிக்கிளம்பி 'பாரை நம்பினாலும் நம்பலாம் மக்டப்பை நம்பாதே' என்று சொல்லி விட்டு இறங்கியது. முன்னமேயே மக்டப்பேரில் ஸந்தேகம் இருந்த மக்பெத்திற்கு அவனை ஊர்போனதும் அவசியம் கொன்றுவிடவேண்டும் என்றுதோன்றியது. இதற்குள் ரக்தத்தால் பூசப்பட்ட ஓர் குழந்தைவடிவாக இரண்டாம் தேவதை கிளம்பி, மக்பெத்தை நோக்கி 'ஸ்திரீ வயற்றில் பிறந்தவன் எவனும் உன்னைக் காயப்படுத்தக்கூட முடியாது. ஆகையால் தைரியமாக உன் மனம் போன போக்கே இரு' என்று சொல்லி மறைந்துவிட்டது. அப்பொழுது மக்பெத்திற்கு மக்டப்பைக் கொல்லுவது அனாவசியம் என்று தோன்றியபோதிலும், மக்டப்பை கொன்றால்தான் தனக்கு உள்ளபடி ஸுகமுண்டாகும் என்று அவன் கொடியசித்தம் அவனுக்குத் தோற்றுவித்தது. இதற்குள் மூன்றாம் தேவதை ஒரு சிறு ராஜ குமாரனாய் கையில் ஒரு மரத்தைப் பிடித்துக்கொண்டு கிளம்பி 'உன் பட்டணத்திற்கு அருகாமையிலுள்ள பர்னம் காடு உன்னை நோக்கிப் போர்செய்ய வருமளவும் நீ பயப்படவேண்டியதில்லை. நிர்பயமாக ஸுகித்திரு' என்று சொல்லி மறைந்தது. இதனால் மக்பெத் தனக்கு சாவில்லை என்றெண்ணி, இவைகளின் உட்பொருளை அறியாது ஸந்தோஷத்தை அடைந்தான். பின்பு மக்பெத் பாங்கோவிஷயமாகத் தனக்கு உள்ள ஸந்தேகத்தை நிவர்த்தி செய்யும்படி கேட்க, மாயினிகளின் மந்திர பலத்தால் எட்டு அரசரைப்போன்ற நிழல்கள் மக்பெத்முன்னே தோன்றின. அவைகளின்பின் பாங்கோ கையில் ஒரு கண்ணாடியைப் பிடித்துக்கொண்டு ரத்தமும் தலையுமாக மக்பெத்தை நோக்கி தலையை அசைத்துக்கொண்டு வந்தான். கண்ணாடியுள் மக்பெத் கண்ணுக்கு அநேக அரசரைப்போன்ற பிரதி பிம்பங்கள் தென்பட்டன. பாங்கோவின் சாயை சிரித்துக்கொண்டு தன் ராஜவம்சம் முழுவதையும் மக்பெத்திற்கு வயிற்று எரிச்சல் உண்டாகும்படிகாட்டிக்கொண்டுபோகக் கொஞ்ச நாழிகையில் எல்லாம் மறைந்துபோயின. மாயினிகளும் பாடிக்கொண்டு மறைந்தன.

மக்பெத் மனங் கலங்கி துக்கத்துடனும் மக்டப்பைக் கொல்லவேண்டும் என்ற எண்ணத்துடனும் வெளிவந்ததும், அவன் பிரபுக்களில் ஒருவன் வந்து மக்ட்ப் மால்காம்மைச் சேர்ந்துகொள்ள இங்கிலாந்திற்கு ஓடிப்போய் விட்டதாகச் செய்தி சொன்னான். இதுவரை தன் நயங்கருதியே கொலைத் தொழிலைச் செய்துவந்த மக்பெத்திற்கு இப்பொழுது அத்தொழிற் பழக்கத்தால் தனக்கு ஸுகமில்லாத விடங்களிலும் கொலைசெய்து பிறரை வருத்தவேண்டும் என்ற எண்ணம் உண்டாக மக்டப்பின் மனைவி மக்கள் எல்லோரையும் தனது கொலையாளிகள் மூலமாக வெட்டி எறிந்துவிட்டான். பின்பு மாயினிகள் கூற்த்தையில் பூர்ண நம்பிக்கையோடு தன் அரண்மனை சென்று தன்னை சாவு அணுகுதல் அஸாத்தியம் என்றுஎண்ணி ஸுகமாக ராஜ்யத்தின் பொது ஸுகத்தைக்கூடக் கவனியாது இருமாந்திருந்தான். இப்படி இருக்கையில் தனது ஸந்தேகசித்தத்தால் ஒற்றர் மூலமாக ஜனங்களது எண்ணங்களைஅறிந்து தன்னை கொலைகாரன் என்று எண்ணியுள்ளவர்களை கொலை செய்து ஜனக்களுக்கு பயத்தை உண்டாக்கிவந்தான். நல்லவர்கள் ஸுகமாக இருக்க அவன் ராஜ்யம் தகாததாகப்போய்விட்டது. எல்லோரும் மால்கம் படையெடுத்துவருதலை எதிர்பார்த்திருந்தனர். இந்த ஸங்கதியும் மக்பெத்திற்குத் தெரிய கொஞ்சம் துக்கத்தைஉண்டாக்கியது. அப்படி இருந்தும் மாயினிகள் வாக்கில் உறுதியான நம்பிக்கை இருந்தபடியால் அவன் அதைப் பாராட்டாது அலக்ஷியமாக இருந்துவிட்டான்.

இப்படி இருக்க அவன் உயிர்த்தோழியாகிய மனைவிக்கு இராத்திரி உண்டாகும் துர்ஸ்வப்நங்களால் மிகுந்த வருத்தம் உண்டாய்க்கொண் டிருந்தது. இதைத் தீர்க்க அவன் வைத்தியர்களை நியமித்தான். அவர்கள், அவன் மனைவி தூக்கத்தில் விழித்த கண் விழித்தபடி எழுந்து விளக்குங்கையுமாக உலாவிக்கொண்டு தன் கோரத்தொழில் ஸம்பந்தமான வார்த்தைகளைச் சொல்லிவந்ததைக் கண்டார்கள். இம்மாதிரியாய் நடந்தபடியால் மக்பெத் செய்த கொலைகளின் ரகஸியம் மெதுவாக பலர் அறிய அம்பலம் ஏறியது. மக்பெத்தின் கொடுமைக்கு அஞ்சி ஒருவரும் வெளிப்படையாய் அதைப்பற்றி பேசமாத்திரம் செய்யவில்லை. வைத்தியர்கள் 'அவள் வியாதிக்கு வைத்தியரது ஸஹாயம் பயனற்றது. கடவுள் ஸஹாயமே அவசியம்' என்றுசொல்லியும் போயினர் மக்பெத் மனைவி தன் கணவனை ஸுகப்படுத்த முதலில் வேண்டிய உதவி செய்தபோதிலும் அவள் கெட்டவழியே தொடங்கி தன் கணவனை மீளாத் துயருக்கு ஆளாக்கிவிட்ட பாபத்தால் மனம் கலங்க பைத்யம்பிடித்துப் புலம்பி, பெண்ணுதலால், தேகம் தளர்ந்து முடிவில் இறந்தாள். தனக்கு உயிர்த்தோழியான மனைவி இறந்ததும் தன்ரஹஸியங்களைச் சொல்லிக்கொள்ளத்தக்க ஸ்நேகிதர் இல்லாததால் மக்பெத் மிக வருந்தினான். வாழ்க்கை அவனுக்குக் கசந்து போய்விட்டது. கொடுமை அதிகரித்தது. ஆதலால் ஊர் ஜனங்களில் சிலர் மால்கம் இடம் ஓடிப்போய்விட்டனர். இதை எல்லாம் அறிந்தபோதிலும் தன் நிலைமையைக் காப்பாற்றிக்கொள்ள மக்பெத் ஓர்விதமுயற்சியும் செய்யாதுமாயினிகள் வாக்கில் நம்பி அசிரத்தையாக இருந்துவிட்டான்.

மால்கம்மோடு இங்கிலாந்திலிருந்த மாக்டப்பிற்கு தன் பெண்டு பிள்ளைகள் கொடுங்கொலைக் கிறையானது தெரியவந்தது. மக்பெத்தை விட்டு ஓடிவந்த போர் வீரர்களிடமிருந்து ஸ்காத்லெண்டின் ஸ்திதியை இங்கிலாந்து அரசன் அறிந்து மால்கம்மிற்கு ஸஹாயமாக ஒருபடையை அனுப்ப அவன் மக்பெத்தை எதிர்த்துக் சண்டையிடப் புறப்பட்டான். மக்பெத்தின் பட்டணத்தருகில் பர்னம் காட்டிற்கு மால்கம் வந்து தண்டிறங்கினன். மக்பெத்தைச் சேர்ந்தவர்கள் அநேகர் அங்கு அவன் ஸேனையோடு வந்து சேர்ந்தனர். தன் ஸேனையின் அளவு எதிரிக்குத் தெரியாதிருப்பதற்காக மால்கம் ஒவ்வொரு போர்வீரனையும் தன் முன்பாக ஒவ்வொரு மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு நடக்கும்படி கட்டளையிட எல்லோரும் அவ்வாறே செய்தனர். இதனால் மக்பெத்தின் கொத்தளங்களின்மேல் இருந்த காவலாளிக்கு பர்னம்காடே நகருவதுபோலத்தோன்ற, அவன் பரபரப்போடு மக்பெத்திற்குச் செய்தி தெரிவித்தான். அவன் உறுதியான நம்பிக்கைக்கு விரோதமான விஷயமாகிய இதை நம்பாது மிகுந்த கோபத்துடன் தானே வந்து பார்த்தான். பர்னம் காடு நகர்ந்து வருவதைக் கண்டான்! மனம் கலங்கியது! ஆவேசத்தோடு கவசத்தை அணிந்து கத்தி கேடயாதிகளை எடுத்துக்கொண்டு தனிமையாக வாழ்க்கையில் வெறுப்பு

டன் சண்டையில் மூழ்கி வாழ்வை மறப்பதற்குப் புறப்பட்டான்.

இதற்குள் மால்கம் ஸேனை மக்பெத் இருக்குமிடம் வந்துவிட்டது. உடனே ஒவ்வொரு போர்வீரனும் தனது மரக்கிளையை எறிந்துவிட கொடிய போர் விளைந்தது. இருபக்கத்திலும் அநேகர் மாண்டு விழுந்தனர். மக்பெத் மிகுந்த ஆவேசத்தோடு போர்செய்து எதிரிகளில் அநேகரை மடித்தான். இப்படி அவன் போர்செய்து கொண்டிருக்கையில் மக்டப் அவனை ஸந்தித்தான். மாயினிகள் வாக்கு மக்பெத்திற்கு ஞாபகம்வர அவனைத் தாண்டி அப்புறம் போய் விடப் பார்த்தான். அப்பொழுது மக்டப் தன் மனைவி மக்கள் கொலையுண்டார்களே என்ற துக்க ஆவேசத்தால் மக்பெத்தை வாயில் வந்தபடி வைய, சுத்தவீரனை மக்பெத் திரும்பி 'அடா பதரே! என்னைக் கொல்ல எந்தப் பெண் வயற்றிலிருந்து பிறந்த மனிதனாலும் முடியாது. இது நான் அடைந்திருக்கும் திர் வரம். வீண் சிரமம் ஏன் படுகிறாய்?' என்று மாயினிகள் வாக்கில் பூர்ண நம்பிக்கையோடு மிகுந்த கர்வமாகச் சொன்னான். உடனே மக்டப் மிகுந்த வீர்யத்தோடு "அடே பாபி! யார் உனக்கு அந்தவரம் கொடுத்தார்களோ அவர்களே, 'மக்டப் எல்லோரும் பிறந்ததுபோலத் தாய்வயிற்றிலிருந்து பிறக்கவில்லை. அவன் தாய் வயிற்றிலிருந்து 10-மாதம் முடிவதற்கு முன் அறுத்து எடுக்கப் பட்டான், அவனிடம் அஜாக்கிரதையாக இராதே' என்று உன்னை எச்சரிக்கை செய்யவில்லையா?' என்று சொன்னான். உடனே மாயினிகள் வாக்கு மூன்றிலும் இருந்த நம்பிக்கை மக்பெத் மனத்தைவிட்டு அகன்றது. உடனே மிகுந்த துக்கமும் பயமும் உண்டாக அவன் 'மாயினிகள் போல விடுகதை ரூபமாகக் குறிசொல்லி ஏமாற்றும் ஜனங்களது வாக்கை நம்பி ஒருவரும் காரியங்களைச் செய்யாதேயுங்கள். யான் அதனால்தான் கெட்டேன்' என்று கதறிக் கொண்டு மகட்ப்போடு வீராவேசத்துடன் போர் செய்து இறந்தான்.

மக்டப் மக்பெத் தலையை வயிற்றெரிச்சல் தீர வெட்டி ஒரு கோலின் நுனியில் வைத்துக் கொண்டு மால்கமிடம் வந்து மக்பெத் தலையைக் காட்டி நடந்தவைகளைச் சொன்ன உடன், எல்லோரும் மால்கம்மை அங்கேயே அரசனாக அங்கீகரித்து ஜயகோஷம் செய்தனர். மால்கம் சீக்கிரத்தில் முடி சூட்டப்பெற்று தன் தகப்பன் ஆண்டுவந்தது போல நெறிவழுவாது வெகுநாள் ஸுகமாக அரசாட்சி செய்து வந்தான்.

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

பண்டித நடேச சாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு

48. பெரும்வியாதி வந்திருக்கும் பொழுது என்னதான் பலமான மருந்து கொடுத்தபோதிலும் பிரயோஜனப்படாமற் போவதுபோல அக்கொடிய அசுரனை அடக்க நாங்கள்செய்த எல்லாவித உபாயங்களும் பயனற்றவைகளாக முடிந்தன.

49. எந்த ஒரு இடத்தில் வெற்றி நமக்குக் கிடைக்குமென்று நாங்கள் ஆசைவைத்திருந்தோமோ அந்த விஷ்ணுசக்கிரமும் அவன் மார்பில் மோதி "பளிச்" என்று ஒரு ஒளியைமட்டும் உண்டாக்கிவிட்டு அவன் கழுத்தில் ஒரு மாலைபோல் விழுந்தது.

50. ஐராவதம் முதலிய யானைகளை வென்றுவிட்ட அவ்வசுரனுடைய யானைகள் புஷ்கராவர்த்தகம் என்ற மேகங்களுடன் கொம்புமுட்டி விளையாடி வருகின்றன.

51. தெய்வமே! மோட்சத்தையடைய விரும்புகின்றவர்கள் சம்சாரபந்தத்தை விட்டு ஒழிய கர்மத்தை வேருடன் அறுக்கும் தர்மத்தைத் தேடுவதுபோல அவ்வசுரனை அடக்க ஒரு படைத்தலைவனை எங்களுக்கு சிருஷ்டித்துக்கொடுக்க வேண்டுமாய் நாங்கள் உங்களை வேண்டிக் கொள்ளுகின்றோம்.

52. தேவர்கள் சேனையைப் போருக்கு இட்டுக் கொண்டுபோகும் பராக்கிரமுள்ள சேனாபதியை இந்திரபகவான் தனது சத்துருவாகிய தாரகாசுரனிடமிருந்து அவன் சிறைபிடித்து வைத்திருக்கும் ஜயலக்ஷ்மியை மீட்டுக்கொண்டு வரும்படியாக நீங்கள் எங்களுக்கு அளிக்கவேண்டும்.

53. வாசஸ்பதி இவ்வாறு பேசி ஓய்ந்ததும் பிரமதேவர் மறுமொழி சொல்லலானார்; அவருடைய பேச்சும் இடி இடித்து ஓய்ந்தவுடன் மழை பொழிந்தால் எவ்வளவு அழகாயிருக்குமோ அதற்குமேலழகாயிருந்தது.

54. உங்களுடைய மனோரதம் நிறைவேறப்போகின்றது; இன்னும் கொஞ்சகாலம் காத்திருங்கள், ஆனால் உங்கள் மனோரதத்தை நிறைவேற்றிவைக்க ஒரு சேனாபதியை உண்டுபண்ண நானே முயல மாட்டேன்?

55. அவ்வசுரன் என்னிடமிருந்தே பாக்கியம் பெற்றவன். ஆகையால் என்னாலேயே அவனுக்கு நாசமுண்டாவது நியாயமல்ல. நச்சுமரமானாலும் நட்டவனே அதை வெட்டுவதென்றால் அது அவனால் ஆகாத காரியமன்றோ.

56. முன்னாளில் அவ்வசுரன் தவம்புரிந்த பொழுது தேவர்களினால் தனக்குச் சாவு உண்டாகக் கூடாதென்று வரம் வேண்டினான். அதே வரத்தைத்தான் நானு மவனுக்குக் கொடுத்தேன். அப்படிச் செய்யலாமா என்றாலோ இவ்வுலகத்தையே எரிக்கும் மகிமை அடைந்த அவ்வசுரன் தவத்தை நான் அவ்வித வரங் கொடுத்து ஒருவாறு அவித்தேன்.

57. போரில் வெகு பயிற்சிபெற்ற அத்தாரகாசுரனை வெல்ல சிவபெருமானிடமிருந்து உதிக்கும் வித்தாலல்லது மற்றெவராலும் முடியாது.

58. அச்சிவபெருமானே தமோ குணத்தைத் தாண்டி பரமாத்ம ஸ்வரூபியாய் என்னாலும் விஷ்ணு பகவானாலும் அறிந்துகொள்ளக் கூடாத அதிசய மகிமைபொருந்தியவராய் விளங்குகின்றார்.

59. அயக்காந்தத்தால் இரும்பை இழுப்பதுபோல் தவத்தால் கட்டுண்டிருக்கும் சிவபெருமான் மனத்தை உமை என்ற உருவால் நீங்கள் இழுக்க முயலுங்கள்.

60. உமை என்ற மாதுசிரோமணி ஈசனுடைய தேஜஸை சகிக்க சாமர்த்தியமுடையவள். எனது தேஜஸை வகிக்க எனது உருவமான ஜலமும் ஈசனின் தேஜஸை வகிக்கப் பார்வதியும் என்று இவ்விரு சிருஷ்டிகளும் உண்டாக்கப்பட்டன.

61. சிவபெருமானுடைய ஆத்துமாவாய் விளங்கும் அவருடைய மகன்தான் உங்களுக்கு சேனைத் தலைவனாக வந்து தனது பராக்கிரமத்தால் உதவி செய்து தாரகாசுரனால் இப்பொழுது சிறையில் வைக்கப்பட்டிருக்கும் தேவஸ்திரீகளை விடுவிக்கப்போகின்றான்.

62. இவ்வண்ணம் தேவர்களுக்கு வாக்களித்து விட்டு இவ்வுலகத்தை யடைந்த பிரமதேவன் மறைந்துவிட்டார். தேவர்களும் தங்கள் மனத்துக்குள் இன்னகாரியம் செய்யவேண்டும் என்பதைத் தீர்மானித்துக்கொண்டு சுவர்க்கலோகம் சேர்ந்தார்கள்.

63. இந்திரபகவானும் ஈசுவரனை வசப்படுத்துவதற்காக மன்மதனை மனத்தில் நிச்சயித்துக்கொண்டு வேகமாகக் காரியத்தை முடிக்க இரட்டிப்பு வேகமாக நடந்து சுவர்க்கலோகம் சேர்ந்தான்.

64. அம்மன்மதன் தேவேந்திரனால் நினைக்கப்பட்டமாத்திரத்தில் கட்டழகிகளுடைய புருவத்துக்கொப்பான அழகான முனைகளை உடையதும் ரதிதேவியின் வளையல்கள் போன்ற அடையாளம் வெட்டப்பட்டதுமானத் தனது வில்லை தோளில் மாட்டிக்கொண்டு தனது இணைபிரியா நண்பனை வசந்தன் கையில் மாந்தளிராகின்ற தனது பாணங்களை ஒப்பித்து, அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு இந்திரன்முன்பாக வந்துநின்றான்.

---

## மதன தகனம் என்ற மூன்றாவது சருக்கம்

---

1. அம்மன்மதன் வந்ததும் இந்திரன் தேவர்களைப் பார்ப்பதை விட்டு தனது ஆயிரங்கண்களாலும் மன்மதனைப் பார்க்கலானான்; தங்களை அடுத்தவர்களிடம் பிரபுக்கள் வைக்கும் ஆதரவு தாங்கள் எதிர்பார்க்கும் பிரயோஜனத்துக்குத் தகுந்தபடி சஞ்சலித்துக்கொண் டிருக்குமன்றோ?

2. இந்திரன் "இங்கு உட்காருங்கள்" என்று தனது ஆஸனத்துக்கு அருகாமையில் மன்மதனுக்கு ஆஸனங் கொடுக்கவே, அவ்வாறு தனக்குத் தனது யஜமானனிடமிருந்து கிடைத்த மரியாதையை அக்காமன் தலையால் வகித்து ரகசியமாய் அவரிடம் பின்வருமாறு பேசலானான்.

3. ஐயா, மனிதர்களுடைய பலத்தை நன்றாய் அறிந்த இந்திரபகவானே! இவ்வுலகத்தில் என்னால் தங்களுக்கு என்ன உதவி நடக்க வேண்டுமென்பதைப்பற்றிக் கட்டளையிட வேண்டுகின்றேன். என்னை நினைத்ததால் தாங்கள் என்னிடம் காட்டிய அனுக்கிரகத்தைத் தங்களுடைய ஏவுதலை முடித்துவைத்தலாம். நான் அதிகமாகச்செய்துவைத்த விரும்புகிறேன்.

4. எந்த மனிதன் தங்கள் பதவியை அடைய விரும்பி அதிகமாகத் தவம் புரிந்துகொண்டு தங்களுடைய மனத்திற்கு அசூயையை உண்டுபண்ணியிருக்கின்றான். இந்தக்ஷணமே நான் அவனைப்பாணம் பூட்டிய எனது வில்லின் கட்டளைக்கு உள்ளாக்கி வைக்கின்றேன்.

5. மறுபிறப்பு என்ற துக்கத்தினின்று பயந்து தன்னை விடுவித்துக்கொள்ள மோட்சமார்க்கத்தை எவன் உமக்கிஷ்டமில்லாமல்நாடித்தவம்புரிகின்றான், சொல்லும். புருவங்களை மேல்தூக்கி பிறகு தாழ்த்தி விசாலக் கண்களால் அழைக்கும் கட்டழகிகளின் கண்களால் அவனை நான் கட்டி உருட்டுகின்றேன்.

6. சுக்கிராசாரியாரிட மிருந்து உமது சத்துரு நீதி சாஸ்திரங்களைக் கற்றுக்கொண்டவனாக விருந்தபோதிலும் அவனிடம் இன்பம் என்ற தூதனை நான் அனுப்பி, பெரும்வெள்ளம் நதியின் இருகரைகளையும் பிளப்பதுபோல் அவனுடைய அறம் பொருள் என்ற இருபயன்களையும் பிளந்துவிடுகின்றேன்.

7. எந்தப் பதிவிரதை உம்மால் ஒருபொழுதும் அணுகமுடியாத ஏக பர்த்தா விரதத்தைக் கைப்பற்றியவளாய் அழகால் மட்டும் சஞ்சலமான உமது மனத்துக்குள் புகுந்து உம்மை வருத்துகின்றாள். அக்கட்டழகி தனது வெட்கத்தைவிட்டு உமது கழுத்தில்தானே தனது கைகளைப் போட்டுக் கட்டிக்கொள்ள நான் செய்து வைக்கின்றேன்.

8. ஐயா, காமுகரே! எந்த மடந்தை உம்மிடம் பிரணயகலகஞ் செய்து நீங்கள் காலில் விழுந்து கேட்டுக்கொண்டபோதிலும் கோபத்தைவிடாமல் உம்மை அலட்சியம் பண்ணுகின்றாள். அவளுக்கு அதிகத்தீயை நானிப்பொழுதே மூட்டி அவளைத் தளிர்ப்படுக்கையில் படுத்துத் தவிக்கும்படி நானிதோ செய்கின்றேன்.

9. ஐயா வீரரே! உங்களுடைய வச்சிராயுதம் சற்று சுகமாயிருக்கட்டும்; என்மேல் மனமிரங்குங்கள்; தேவ சத்துருவாயிருக்கும் எவனை நான் அடக்கவேண்டும் வெளியிடுங்கள். எனது பாணத்தால் அவனுடைய புஜபலத்தை நான் வீணாகச்செய்து கோபத்தால் உதடுகளை அசைத்துக்கொண்டு நிற்கும் மடந்தைகளையும் கண்டு அவன் நடுநடுங்கும்படி செய்து வைக்கின்றேன்.

# இலுப்பைமரம்
## THE LONG-LEAVED BASSIA

முன்னுரை.—நமது இந்தியாவின்கண் பலன் தரும் மரங்களுள் இலுப்பைமர மொன்று. இது பாலுள்ள வகையைச் சேர்ந்தது. இது நீண்டகாலமாயுள்ளது. இம்மரம் தக்க பலனைக் கொடுக்கக்கூடியது. இது நமது சென்னை இராஜதானியிலும் இதன் சுற்றுப் பக்கங்களிலும் விசேஷமாயுள்ளது. தமிழ்ப் புத்தகங்களில் இம்மரம் இருப்பையென்று வழங்கப் பட்டிருக்கிறது. இதுவே இதின் இயற்பெயரென்று கொள்ளவேண்டும். இருப்பை யென்பது இலுப்பையெனத் திரிந்து இக்காலத்தில் வழங்குகிறதென்றும் கூறலாம். இருப்பை மதுகம், குலிகம் ஒருபொருட்கிளவி.

பூமி.—வெண்மணற்பாங்கான பூமியும் சற்றுக்களிப்புள்ள விருமண் பூமியும் இது பயிர்செய்வதற்கு மிக வுரித்தானவை. புஞ்சை பெருத்தவிடங்களே இதற்குச் சிறந்தது. அல்லாமலும் கடற்கரையோரங்களில் இம்மரங்கள் செவ்வையாக வளர்ந்து நல்ல பலனைத் தருகின்றன.

பயிர்செய்தல்.—முப்பத்திரண்டடிக்கு ஐந்தடியாழம் குழிதோண்டி, இதில் தழை முதலிய எருப்போட்டு குழி யொன்றுக்கு ஒரு கொட்டைவீதம் ஊடி அல்லது தை, மாதத்தில் போட்டுத் தண்ணீர் விட்டுக்கொண்டு வரல்வேண்டும். ஆடு மாடு முதலியவை இக்குழியை மிதித்துக் கெடுதி செய்யாவண்ணம் 6-அடி உயரம் வேலியினால் கூண்டுகட்டவேண்டியது. விதைபோட்ட ஒரு வாரம் வரையில் தினமும், பின் ஒரு மாதம்வரையில் மூன்றுநாளைக்கு ஒரு தினமும் பின் வாரத்திற்கு ஒருமுறையும் தண்ணீர் விடவேண்டும். இவ்வாறு பரையின்றி மழைபெய்த காலத்தில் நிறுத்தியும் வெயில் காய்ந்த காலத்தில் அடிக்கடியும் தண்ணீர்விட்டுக் கொண்டு வரவேண்டும். மூன்று வருஷம் வரையில் செவ்வையாய்க் கவனித்துவந்தால் மரம் சற்றுயர்ந்து ஆறு ஏழடி வளர்ந்து கிளைகளும் நாலா பக்கத்திலும் பரவும். மரம் கூண்டுக்குமேல் கிளம்பிவிட்டால் பின்பு இதற்கு அவ்வளவு கண்பார்வை தேவையில்லை. தண்ணீரும் கோடைகாலத்தில் மாத்திரம் ஊற்றிக்கொண்டுவந்தால் போதுமானது. இவ்வாறு இப்பயிரை நன்கு கவனித்துவந்தால் அதிக செழிமையாக வளர்ந்து பலனைச் சீக்கிரத்தில்

கொடுக்கும். காடுகளிலும் மலைச்சார்ந்த விடங்களி லும் இம்மரங்கள் பெருங்கூட்டங்களாக வளர்கின்றன. அம்மரங்கள் நூறுவருடத்திற்குமேல் அழியாமல் நிற்கும். இருபது அல்லது இருபத்தைந்து அடி உயரம் ஒரே யொழுங்காய் வளர்ந்து பின்னர் அதனின்னும் பெரிய கிளைகளாக நாலா பக்கங்களிலும் பரவும். இம்மரங்களின் சுற்றளவு பத்தடி முதல் இருபதடி வரையி லிருக்கும். நீண்டகாலத்து மரங்கள் இதைப்பார்க்கிலும் சுற்றளவுள்ளதாக விருக்கும். இது சித்திரை வைகாசி மாதங்களில் பூத்து ஐப்பசி. கார்த்திகை மாதங்களில் பழுக்கும். இவ்விரண்டு மாதங்களிலும் பழம் விழுந்துகொண்டே யிருக்கும்.

பயிரிடும் நிலத்தின் எல்லை.—உதாரணமாக 100 குழி நிலம் எடுத்துக்கொள்ளுவோம். இதில் இருபத்தைந்து மரத்திற்குக் குறையாமலும் முப்பது மரத்திற்கு அதிகப்படாமலும் பயிர் செய்யவேண்டியது.

சிலவு:—நிலத்தின் சொந்தக்காரர் கொஞ்சம் கண்காணித்துவந்தால் சிலவு மிகக் கொஞ்சமாகவே யடங்கும். தாராளமாய்ச் செலவுசெய்து பயிர் செய்தாலும்,இது பலன்தரும் வரையில்,ரூ. 150-க்கு மேலாகாது.

மராமத்து.—வருஷா வருஷம் ஆடி, தை இந்த இரண்டு மாதங்களிலும் மரத்தைச்சுற்றி 5 அல்லது 6-அடி யாழம் கொத்தித் தழை, மாட்டெரு, உமி, பதர் முதலியவைகளை எருப்போட்டு பாத்திகட்டி வைக்க வேண்டும். இவ்வித மராமத்து பெரியமரங்களுக்குச் செய்யவேண்டியது. இவ்வாறு செய்வதினால் மழைகாலத்தில் தண்ணீர் நின்று இந்த எருக்களின் ஸாரம் அடிவேர்களில் உரைப்பதினால் மரத்திற்கு பலமும் நல்ல பலனும் கொடுக்க ஏதுவுண்டு.

இலை.—இவ்விலைகளை வதக்கிக் கால் வீக்கத்திற்கும் வாய்விற்கும் வைத்துக்கட்டினால் அவ்வியாதிகள் குணமாகும். ஆட்டுக்கு நல்லதீனி. கழனிகளுக்கு நல்ல எரு.

பால்.—வீக்கத்திற்கும் வாய்விற்கும் போட்டால் குணமாகும். அல்லாமலும் கண்வலிக்கு இப்பாலை கண்ணைச் சுற்றிலும் புருவம் முதலான விடங்களில் தடவினால் குணமுண்டு. உழவர் முதலிய கீழ்ச்சாதி மக்கள் இதைக் கையாடி வருகின்றனர்.

பூ.—கீழ்ச்சாதிமக்கள் இப்பூவை அதிகமாகப் பொறுக்கிக்கொண்டுபோய் வெயிலில் காயவைத்து வெல்லப்பாகு செய்து இதில் அதைக் கொட்டிக் கிண்டி 'இலிங்க டி' எனப் பெயர்பெறும் ஓர்விதமான உருண்டைப் பக்ஷணஞ் செய்துண்டு வருகின்றார்கள். இப்பூவை தேள்கடிக்கும் அரைத்து கடிவாயி லுபயோகப் படுத்துகின்றனர்.

பழம்.—இவ்வாறு வைத்த மரங்கள் ஏழாண்டில் காய்ப்புக்கு வரும். காய்ப்புக்கு வருவது அதன் செய் நேர்த்திக்குத் தக்கவாறுண்டு. இப்பழத்தின் தோலை ஏழை ஜனங்கள் உண்டுவருகிறார்கள். பெரிய வௌவால் கூட்டங் கூட்டமாக வந்து இரவில் வீழ்ந்து பழங்களைத்தின்று கொட்டைகளை நானுபக்கங்களிலும் போடுகின்றன. இதனால் இம்மகசூல் கெடுதி யுறுகின்றது. இதைத் தடுக்கும்வண்ணம்பெரிய வலைகட்டி வௌவாலை பிடிக்கிற வழக்கமுண்டு. காக்கைகளும் இப்பழத்தையுண்டு கொட்டைகளை வெவ்வேறிடங்களில் போடுகின்றன. இம்மகசூல் காலத்தில் ஒரு மைல் அல்லது இரண்டு மைலுக் கப்பாலுங் கொட்டைகளிருப்பதை நாம் பார்க்கிறோம்.

கொட்டை.—தோலைநீக்கிக் கொட்டைகளைப்பொறுக்கி வெயிலில் காயவைத்து அடித்து அதன் ஓட்டைப் போக்கிப் பருப்பு எடுத்து நன்றாய் எண்ணெய் கசிவுண்டாகும் வரையில் காயவைத்து பின்னர் செக்கிலிட்டு ஆட்டி எண்ணெய் எடுக்கிறது வழக்கம்.

எண்ணெய்.—இவ்வெண்ணெய் விளக்கு எரிவதற்கும் பலகாரபக்ஷணங்கள் செய்வதற்கும் உபயோகப்படுகிறது. இது செய்மாதிரி யுரையுந் தன்மையுடையது. தேகத்திற்கு யாதொருவிதமான கெடுதியுஞ் செய்யாது. தேகத்திற்குச் சௌக்கியமே.

வருமானம்.—இவ்வாறு கண்காணித்துவந்த மரம் ஒன்றுக்குக் குறைந்தது இரண்டு ஆடப்பருப்பு காணும். ஆடம் ஒன்றுக்கு ரூ. 5 முதல் 8 ரூ. வரைக்கும் விற்கிறது. உத்தேசமாய்க் கணக்குப்பார்க்கின் மரம் ஒன்றுக்கு பொறுக்குக்கூலி முதலிய செலவுபோக 10 ரூ. தடையின்றிக் கிடைக்கும். 25 மரங்களுள்ள 100 குழி புஞ்செய் நிலத்திற்கு வருஷாவருஷம் 250 ரூ கிடைக்கும்.

பிண்ணாக்கு.-இதன் பிண்ணாக்குக்கு அரப்புக்கட்டியென்று பெயர். இதற்கு எண்ணெயைப் போக்குங் குணமுள்ளது. இக்காரணம்பற்றியே நந்நாட்டு ஜனங்கள் எண்ணெய் தேய்த்துக்கொண்டு அதைப் போக்குமாறு அரப்புத்தேய்த்து ஸ்நானஞ் செய்கிறது. அல்லாமலும் வாழை முதலிய மரங்களுக்கு எருவாகவும் உபயோகப்படுகிறது.

மரம்.—மிக வழுத்தமுள்ளது. உத்தரம் தூண் முதலியவைகளுக் குபயோகமாகிறது. தேக்கமரத்திற்கு இரசற்குணமுண்டு. இம்மரத்திற்கு அக்குணமில்லை.மரம்வேறுமரங்களைப்பார்க்கிலும்சீக்கிரத்தில் மடித்துப்போகிற தன்மையும் இதற்குக் கிடையா. இம்மரத்தை உத்திரம் முதலியவைகளுக்குபயோகித்து வீடு கட்டினால் அவ்வீடு வலிமையுடைத்தாய் நீண்டகால மிருக்கிறது. அல்லாமலும் செக்குக்கு உலக்கையாகவும் உபயோகப்படுகிறது.

கற்பனை.—இவ்வியாசத்தை யெழுதுவதின் நோக்கம் இதைப்படிப்பவர்கள் யாராவது நமக்கு அதிக பிரயோஜனத்தைக் கொடுக்கக்கூடிய இம்மரத்தைப் பயிர்செய்து இதனால் தக்க பலனை யடைவார்களென்பதே யொழிய வேறில்லை.

பு. து. இரத்தினம்பிள்ளை.

# சுகாதாரவிளக்கம்
## HYGIENE

(பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது.)

### ஆருவது அத்தியாயம்
#### உணவு

66. உணவு.—"உணவு" என்பதில் நமது தேகத்திலுண்டாகும் கழிவை அப்போதைக்கப்போது ஈடுசெய்து நமது தேகத்தை வளரச்செய்து நமக்கு வலுவையும் சக்தியையுங் கொடுக்கின்ற வஸ்துக்கள் யாவையும் அடங்கியிருக்கின்றன. இவ்வாறு நாம் சொல்லுவதால் உணவு என்பதில் நாம் உட்கொள்ளும் தின்பண்டங்களும் நாம் அருந்தும் நீரும் மாத்திரமேயன்றி நாம் சுவாசிக்கும் காற்றுங்கூடச் சேர்ந்திருக்கின்றது. தண்ணீரில்லாமற் பிராணன் வெகுநாள் உணவால்மட்டும் நிற்காது. நாம் சுவாசிக்கும் காற்றால் நமது தேகத்துக்குட்புகும் பிராணவாயுதான் நமது உணவுடன் கலந்து நமக்கு வலிமையையும் சக்தியையு மளிக்கின்றது. இவ்வண்ணம் நமது ஜீவனுக்கு நீரும் காற்றும் முக்கிய ஸாதனங்களான உணவாக விருந்தபோதிலும் உணவு என்பதால் நாம் சாமானியமாய்க் குறிப்பது நாம் புசிக்கும் பதார்த்தங்களேயன்றி மற்றவைகளல்ல.

67. சரீரம் எப்பொழுதும் அழிந்துகொண்டேயிருக்கின்றது.—இன்றைக்கு நமது கைகளிலும் கால்களிலும் நாம் காணும் தசை நேற்று நாம் கண்ட தசையல்ல. நேற்றிருந்த தசையி லொருபாகம் எப்படியோ உபயோகப்படுத்தப்பட்டு அழிந்தோ அல்லது மாறியோ போயிருக்கின்றது. அல்லது நமது தசையின் ஒருபாகத்தை நாம் நமது மலப்பை வழியாகவோ அல்லது ஜலப்பை வழியாகவோ கரைத்து வெளியே விட்டிருக்கலாம். அவ்வாறு நேற்றுத் தசையழிந்த விடத்தில் இன்று வேறு தசை உண்டாயிருக்கின்றது. இவ்வண்ணம் வேறு தசையுண்டானதற்குக் காரணம் நமது உணவே.

68. குன்றும் சக்தியை ஈடுசெய்வது உணவு.—நமது உணவால் நமது தேகத்தில் சரியான இரத்தம் நாம் உண்டாக்கிக்கொள்ளாவிடில் நமது தசையழிந்து மெலிந்து நாம் மாண்டுபோவோம். நாம் எந்தத்தொழில் செய்தபோதிலும் அதனால் நமது தேகம் ஒருவித சக்தியை எப்பொழுதும் இழந்துகொண்டேயிருக்கின்றது. நாம் பேசுவது, படிப்பது எழுதுவது, ஓடுவது,நடப்பது,பார்ப்பது, முகருவது, இவையெல்லாம் நமது தேகத்திலிருக்கும் சக்தியினாலேயே யன்றி வேறல்ல. இவ்வகைக் கருமங்கள் எது செய்தபோதிலும் அவ்வற்றிற்குத் தக்கபடி ஒருவிதமாக நமது சக்தி குறைந்துகொண்டேயிருக்கிறது; இக்குறைவை ஈடுசெய்ய உணவு கடவுளால் ஏற்படுத்தப்பட்டது.

69. உணவின் வகைகள்.—உணவு இருவகை (1) யவக்ஷாரமயம் (nitrogenous.) (2) அயவக்ஷாரமயம் (non-nitrogenous.)

யவக்ஷாரமயம் என்றால் துவரம்பருப்பு, உளுந்து இவைகளைப்போன்ற பருப்பு இனங்களிலும், மாமிசம், முட்டை இவைகளைப்போன்ற ஆகாரங்களிலுமிருக்கும் ஓர்வகை புஷ்டி.

அயவக்ஷாரமயம் என்ற உணவில் நெய்,உப்பு, ஜலம் இவைகளைச் சேர்க்கவேண்டும். மாமிசம் முதலியவைகள் தேகத்துக்கு புஷ்டியை உண்டுபண்ணுவதுபோல இவைகளால் ஒருவித புஷ்டியையும் உண்டுபண்ண முடியாது. ஆனாலிவைகள் ஓர்வித உஷ்ணத்தை நமது தேகத்தில் உண்டுபண்ணி நாம் உட்கொள்ளும் ஆகாரத்தைச் சீரணம் செய்து அதை நமக்கு நல்லுணவாக்கிக் கொடுக்கின்றது. அயவக்ஷாரமயமான இவ்வாகாரத்தை இக்காரணத்தைக் கொண்டு அநுனிதம் என்று சொல்லுகிறார்கள்.

70. யவக்ஷாரமயமான உணவு.—இவ்வுணவையும் நமது இரத்தத்தின் கலவையையும் சாஸ்திரப்பிரகாரம் பிரித்து ஒப்பிட்டுப் பார்த்தவர்கள் இவ்விரண்டுக்கும் எவ்வளவோ ஒற்றுமையிருக்கின்றதென்றும் இவ்வுணவை நாம் உட்கொண்டு ஜீர்ணம்செய்து கொள்ளுவதால் நாம் நமது தேகத்தைவிட்டு தினந்தோறும் இழக்கும் வல்லமையைத் திரும்ப அடைகின்றோம் என்றும் கண்டுபிடித்திருக்கின்றார்கள். இவ்வுணவின் அம்சங்கள் நாம் சுவாசிக்கும் காற்றிற் கலந்து நமது தேகத்திற்குட்புகும் பிராணவாயுவு சம்பந்தத்தால் இரத்தமாகமாறி நமது அவயவங்களுக்குப் புஷ்டியையும் வளர்ச்சியையும் கொடுக்கின்றன. எந்த எந்த அவயவங்களால் நமது சக்தியைக் காட்டுகின்றோமோ அந்த அந்த அவயவங்கள் யாவற்றையும் நாம் பரிசோதித்துப் பார்க்கும்பொழுது அவைகளிலெல்லாம் யவக்ஷாரமயமான பதார்த்தமே அதிகமாகவிருக்க நாம் காண்போம். அன்றியும் யவக்ஷாரமயமான ஆகாரம் புசிப்பதை நாம் நிறுத்துவோமானால் எல்லாவித சக்திகளும் நமது தேகத்தில் உடனே குன்றும்

இவ்வித பரீக்ஷைகளால் யவக்ஷாரமயமான ஆகாரமும்அவ்வாகாரத்தைப் பிராணவாயுபற்றி இரத்தமாகப்பண்ணுதலும் இல்லாமற்போனால் நாம் பிழைத்திருக்க முடியாது.

71. அயவக்ஷாரமயமான உணவு.—நீர், உப்புகள், கொழுப்புகள் இவைகளெல்லாம் அயவக்ஷாரமயமான ஆகாரங்கள். இவைகள் தேகத்தை வளர்ப்பவைகளல்ல என்றாலும் தேகத்திலிருக்கும் எலும்பு முதலிய சில பாகங்களி லிவைகளின் அம்சங்கள் காணப்படுகின்றபடியால் வெகு அவசியமான உணவுகளே.

72. உணவிலிருந்தவேண்டிய சேர்க்கை.—ஒவ்வொருவனுடைய போசனத்திலும் நான்குவித வஸ்துக்களின் சேர்க்கை யிருக்கவேண்டும். அவைகள் யாவையெனில்: (1) யவசாரம் கலந்த தானியம் அல்லது மாமிசம்கலந்த உண்டி(Nitrogenous food Albuminoids) (2) கொழுப்பு (fats) (3) கஞ்சியோ அல்லது சர்க்கரையோ கலந்திருத்தல் (Carbo Hydrates) (4) உப்பு (salt). இந்நான்குவித வஸ்துக்களுள் ஏதாவது ஒன்று குறைந்தாலும் அல்லது இச்சேர்க்கைக ளிருக்கவேண்டிய முறைக்கு வித்தியாசமாகச் சேர்ந்திருப்பினும் நமது சரீர சுகம் குறைவதுடன் வியாதிகள் விளையும். இந்நான்குவித பதார்த்தங்களும் சேர்ந்திருக்கவேண்டிய முறையாதெனில்:—யவசாரம் (Albuminoid) 12 அவுன்ஸ், கொழுப்பு (fat) 4 அவுன்ஸ், கஞ்சி அல்லது சர்க்கரை கலந்த உண்டி(carbo-hydrates) 30 அவுன்ஸ், உப்பு 2 அல்லது 3 அவுன்சு ஆக 48 அவுன்சு ஒவ்வொரு சாதாரண மனிதனுக்கும் ஒவ்வொரு தினமும் அவன் புசிக்கவேண்டிய ஆகாரத்தில் மேற்கூறிய பரிமாண மிருக்கவேண்டும்.

73. தண்ணீர், உணவு.—நாம் மேற்கூறிய பரிமாணமானது தண்ணீரை நீக்கிக் கூறிய பரிமாணம். இத்துடன் ஒவ்வொரு மனிதனும்அவனுடைய தேகநிறை எவ்வளவு பவுண்டுகளோ அதற்குத் தக்கபடி ஒரு பவுண்டுக்கு அரை அவுன்ஸ் வீதமாவது தண்ணீர் குடிப்பான். அல்லது தண்ணீர் கலந்த சிற்றுண்டிகளான காப்பி, தேயிலைப்பானம் முதலியன செய்வான்.

74. சேர்க்கையின் முறைப்படி கணக்கிட்டுப் புசிப்பது சாத்தியமா?--இவ்வளவு தூரம் நாம் கணக்காக இவ்வளவு அவுன்ஸ் இன்னின்ன பதார்த்தங்கள் நமக்கு உணவில் அவசியமாக வேண்டும் என்பதை ஏற்படுத்தினோம். ஒவ்வொரு வேளையும் நாம் போஜனம்செய்ய உட்காரும்பொழுது ஒரு திராசைக்கூட வைத்துக்கொண்டு இவ்வாறு நிறுக்கமுடியுமா, அல்லது அவ்வாறே செய்வதாக விருந்தபோதிலும் இப்பதார்த்தங்களை அவ்வண்ணம் நாம் பிரித்தெடுக்க முடியுமா என்ற ஸந்தேகம் தோன்றலாம். இக்காலத்தில் நாம் புசிக்கும் ஆகாரபதார்த்தங்களின் குணங்களை எடுத்துச்சொல்லும் கிரந்தங்கள் எவ்வளவோ ஏற்பட்டிருக்கின்றன. நாம் முற்கூறிய குணங்களில் எவ்வெவைகள் எம்முறையிற் கலந்திருக்கின்றன என்பது கண்டெடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றது. அக்கணக்கை ஒருவாறு அறிந்துகொண்டு ஒவ்வொருவனும் தனது புத்தியாலும் யுக்தியாலும் தான் உட்கொள்ளவேண்டிய ஆகாரத்தின் பதார்த்தங்களையும் அவைகளின் பரிமாணத்தையும் தனக்குத் தானாகவே ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

75. எந்நேரம் எவ்வளவு ஆகாரம் புசிக்கவேண்டும்?—நமக்கு ஒவ்வொரு தினமும் 48 அவுன்ஸ் ஆகாரம் வேண்டும் என்று சொன்னோம். இதைச் சுலபமாய்ச் ஜீர்ணம்செய்துகொள்ள காலை எழுந்ததும் 10 அவுன்ஸ் காலைபோஜனத்தில்; 20 அவுன்ஸ் பகலில்; மூன்றாம் யாமத்தில் 7 அவுன்ஸ்; இரவில் 11 அவுன்ஸ் இவ்வாறு உட்கொள்ளவேண்டும்.

76. நமது ஆகாரத்தை ஜீர்ணம்செய்து கொள்ளுவதெப்படி?—நாம் நமது ஆகாரத்தைச் சுகமாக ஜீர்ணித்துக்கொள்ள இரண்டு நியமங்கள் அவசியமாயிருக்கவேண்டும். முதலாவது நாம் உட்கொள்ளும் ஆகாரம் நியாயமாக ஜீர்ணிக்கப்படும் நிலைமையி லிருக்கவேண்டும். இரண்டாவது நமது தேகத்துக்குட் சில நிலைமைகள் அவ்வாகாரத்தைச் சீராகப் பற்றிக் கொண்டு அதை ஜீர்ணம் செய்யவேண்டும்.

77. ஆகாரத்தின் நிலைமையாவது யாது?—சில உணவுகள் கடினமாகவும், சில மிருதுவாகவும், சில எளிதில் கரையக்கூடியவையாயும் சில கரைவது கஷ்டமாகவும் இருக்கும். உதாரணமாக நெல்லரிசி அன்னம், செவ்வரிசி, வாற்கோதுமை,உருளைக் கிழங்கு இவைகளெல்லாம் வெகு எளிதில் 1½ மணிக்குள் நமது தேகத்தில் ஜீர்ணிக்கப்பட்டு உருமாறிவிடும். வெண்ணெய், நெய், ரொட்டி இவைகளைச் ஜீர்ணித்துக்கொள்ள 3அல்லது 4மணிநேரம் வேண்டும். ஆனால் எளிதிற் கரையும் ஆகாரங்களையும் அவ்வாறு கரையாத மற்றவித ஆகாரங்களையும் கலந்து புசிப்பதால் பொதுவாக ஜீர்ணகுணம் நமது தேகத்தில் விருத்தியாகின்றதென்பது பிரஸித்த வைத்தியர்களின் கொள்கை. இதற்காகவே நாம் புசிக்கும் அன்னத்தை அன்னமாகவே புசிக்காமல் நெய்,பருப்புமுதலியவைகளைக் கலந்து புசிக்கின்றோம். மாமிசங்கலந்த ஆகாரங்கள் பக்குவமாகவும் மிருதுவாகவு மிருக்கும் பட்சத்தில் மற்ற ஆகாரங்களைவிட எளிதிற் செறிக்கின்றன.

## உழவுநூல்
## AGRICULTURE

(113-ம் பக்கத்தொடர்ச்சி)

5. மனிதர்களின் மலஜலம்.—இதுதான் ஜப்பான், சீனு முதலிய தேசங்களில் வெகு விசேஷமாய் எருவாக உபயோகிக்கப்பட்டு வருகிறது. இது கொஞ்சமும் அத்தேசங்களில் வீணாக்கப்படுகிறதில்லை. இவ்விராஜதானியின் குடிகளின் பெரும்பான்மையோருக்கு இதை எருவாய் உபயோகப்படுத்தலாம் என்பதே ஏற்படாத விஷயம். இதை எலும்புத்தூள், உலர்ந்த களிமண் பொடி, கரிப்பொடி, வாள்தூள் முதலியவைகளால் அதன் சத்துகள் ஆவியாய்ப் போகாமல் நன்றாய் மூடிவைத்து, வெய்யிலுக்கும் மழைக்கும் காப்பாற்றும்பொருட்டு கக்கூசுகளையும் இந்த எருசேர்க்கும் இடத்தையும் கூரை அல்லது ஒடுபோட்டு மூடிய இடங்களில் இந்த எருவைச் சேகரித்து நன்றாய் மட்கிய பின், பயிருருக்கு உபயோகித்தால் அங்கங்கு நமது கண்களுக்கு மலஜலம் அசுத்தமாய்ப் புலப்படாமலும், தேகசௌக்கியத்திற்குக் கெடுதியை விளைவிக்காமலும் பூமிக்கு நல்ல உரமுங்கொடுத்து நன்றாய் விளையும் பயிர்களை உற்பத்திசெய்யக்கூடிய எருவாகவும் உபயோகமாகும். இந்த எருவின்பயன் முனிசிபல் டவுன்களுக்கு சமீபத்திலிருக்கும் குடியானவர்களில் சிலருக்குமட்டில் தெரியும். சென்னையில் மலஜலாதிகள் கழுவிய சாக்கடைத் தண்ணீர் பாயும் பூமிகளில், புல் முதலியவை வெகு செழிப்பாய் வளர்வதைக் காணலாம். மனிதரின் மலம் ஆடு மாடு மலத்தைவிட எருவுக்கு விசேஷம். ஏனெனில் ஆடுமாடுகள் வைக்கோல், புல் முதலிய அதிக சத்தற்ற ஆகாரங்களைத் தின்பதனுல் அவைகளின் மலத்தில் ஜீரணிக்காத வைக்கோலும் புல்லும் சேர்ந்திருக்கிறது. இது தண்ணீரில் மனிதருடைய மலத்தைப்போல் அவ்வளவு சீக்கிரத்தில் கரையமாட்டாது. ஆகையால் பயிருக்கு உடனுக்குடன் சீக்கிரமாய் உதவாது.

நன்றாய் மட்கின எருவை பூமிக்கு ஒரு மகசூலுக்கு ஒரே தடவையாக முதலிலேயே போடுவதைக் காட்டிலும் அதே அளவு எருவைப் பல தடவையாக உழுவதற்குமுன் ஒரு தரமும், ஒவ்வொரு தரங்களை யெடுத்தவுடன் கொஞ்சம் கொஞ்சமாகவும், நன்றாய்ப் புஷ்பித்தவுடன் புஷ்டியாக ஒரு தரமும் இம்மாதிரி பலதடவைகளில் எருப்போட்டால் விசேஷ மகசூல் கிடைக்கும். ஒரு நிலத்தில் சாதாரணமான மகசூல் உற்பத்தி செய்யும்படி பயிரிடுவதை பூமியை ஜாஸ்தியாய்ப் பயிரிடுவதென்றும் (Extensive farming) அதே நிலத்தில் அப்படி கிடைப்பதைவிட அதிகமாய் மகசூல் உற்பத்தி செய்யும் சாதனங்களைக்கொண்டு பயிரிடுவதை அதிக மகசூல் உண்டாகும்படி செய்யும் தொழில் (Intensive farming) என்றும் சொல்லப்படுகிறது. அன்னிய தேசங்களாகிய ஆப்ரிக்கா, அமெரிக்கா, ஆஸ்டிரேலியா, ஜப்பான், சீனு முதலிய தேசங்களில் ஒரேநிலத்தில் அதிக மகசூல் உற்பத்தியாகக்கூடிய சாதனங்களைத் தங்களால் கூடியானவரையில் பரிசோதித்து அம்மாதிரி நடந்து அதிகலாபம் அடைகிறார்கள். ஜனங்கள் நாளுக்குநாள் விருத்தியாவதாலும் அதேமாதிரி சாகுபடிக்கு லாயக்குள்ள நிலங்கள் விருத்தியாகாததாலும் அதிக மகசூல் உற்பத்தியாகக்கூடிய வழிகளை நாம் அவசியம் தெரிந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம். இந் நாட்டிலுள்ளவர்களாகிய நாமும் கேள்வி மூலமாயும், அந்நிய தேசங்களுக்குச் சென்று ஆங்காங்கு நடக்கும் புதிதாயும் விசேஷமுமான மாதிரிகளைக் கண்ணால் ஊக்கமாய்ப் பார்த்தும் காரணங்களை விசாரித்தும் அம்மாதிரி நாம் நடந்தால் நம்முடைய நாட்டுப் பயிர்த் தொழிலும் அதற்கு அநுகுணமான இதர கைத்தொழிலும் விருத்தியடையும் என்பதற்குச் சந்தேகமில்லை. இப்பொழுது நம்முடைய நாட்டிற்கு பயிர்த்தொழிலுக்குத் தேவையான கருவிகளைச்செய்யப் போதுமான தச்சர்களும் கருமான்களும் கிடையாது. இந்தத் தொழில்களைச் செய்யப் பயின்றவர்கள் கம்மாள ஜாதியார் ஒருவரே. அதேமாதிரியாய்த்தான் தண்ணீர் இறைக்கும் பரியைத் செய்பவர்களும் தோலில் வேலைசெய்பவர்களும் சக்கிலி ஜாதியர் ஒருவரே. இந்துதேசத்தில் இவ்வாறிருக்க அயல் நாட்டுகளில் மேற்படி தொழில்களை ஒவ்வொருவரும் செய்து வருகிறார்கள் என்று ஊகிக்கலாம். அந்நிய தேசங்களில் இவ்வாறு ஜாதிவித்தியாசமும் ஜாதிவித்தியாசத்திற்குத் தகுந்ததொழிலும் இராது என்றும் ஊகிக்கலாம். பூமியை ஆழமாய் உழுதும் கொத்தியும்பயிரிடுவது அவசியம். இதற்குத் தேவையான கருவிகளைக் குடியானவன் தானே செய்யும்படியான பயிற்சியிருந்தால் மேற்படி கருவிகளும் நல்ல மாதிரியானதாய்ச் செய்துகொள்ள இடமுண்டு. ஆழமாய்க்

கொத்திப் பயிரிடுவதனால் அடிமண் நன்றாய்க் கிளரப்பட்டுக் கீழ்மேலாகி பூமியிலிருக்கும் பயிருக்கு விரோதமான களை புல் பூண்டுகள் மட்கிப்போ உலர்ந்தோ தொலைந்து பூமிக்குள் நன்றாய்க் காற்று சென்று பயிருக்குவேண்டிய உணவைப் பக்குவப்படுத்திவைக்கும். இம்மாதிரி எரு இடாமல் பயிரிட்டால் பூமியிலுள்ள சத்து முழுவதும் நாளுக்குநாள் குறைந்து போய் நல்லபலன் தரமாட்டாது. மனிதர்கள் உண்ணும் உணவு தானியப் பயிர்கள் எல்லாம் பயிரின் சத்துக்கள். பயிர்கள் வேர்மூலமாய் ஜலரூபமாய் பூமியிலுள்ள சத்துக்களை உட்கொள்ளும். ஆகையால் பூமியின்மூலமாய் பயிர்கள் உட்கொள்ளும் சத்துக்கள் ஜலத்தில் கரையக்கூடிய நிலைமையில் நிறைந்திருக்கவேண்டும். இது போதுமான அளவு பூமியிலேயே கிடைக்கமாட்டாது. மட்கின எரு அல்லது ஆடு மாடு மனிதர்களின் மல ஜலாதிகளும் செடி விருக்ஷம் இவைகளின் மட்கின இலைதழைகளும், பயிர்களுக்கு நல்ல உணவாகும். ஆகையால் இவைகளை நன்றாய்ச் சேர்த்து காப்பாற்றி தகுந்தகாலத்தில் பூமிக்கு உறமாக இடவேண்டும். ஜீவராசிகள் அனைத்தும் பயிரினால் போஷிக்கப்படுவதால் ஜீவராசிகளின் மல ஜலம், எலும்பு, மாமிசம், ரத்தம், முதலிய யாவும் பயிருக்கு நல்ல உணவாகும். பூமியில் உற்பத்தியான உணவுகளைப் புசிக்க நாம் கருதுவதுபோல் பூமியிலிருந்து எடுத்த பயிருணவைத் திருப்பிக்கொடுக்க நாம் ஒவ்வொருவரும் கடமைப்பட்டவர்களாயிருக்கிறோம். ஆகையால் மனிதர்களுடைய மலத்தைப் பயிரிடும் பூமிகளுக்குத் திருப்பாமல் வீணில்போகும்படி விடுவது மெத்த பிசகு. இது வெகு அநியாயம். பயிரிடும் குடியானவன் ஒவ்வொருவனும் இதை நன்றாய்க் கவனிக்கவேண்டும். அநேக கிராமங்களில் மனிதர்களின் மலத்தைப் பன்றிகள் தின்று ஊரைச் சுத்திசெய்கின்றன. இந்த ஊர் தோட்டிகளான பன்றிகளின் மலத்தை இதை வளர்க்கும் ஒட்டஜாதியார் சேகரஞ் செய்து தங்கள் நிலத்திற்கு எருவிட்டு விசேஷபலன் அடைகிறார்கள். ஆகையால் பன்றியின் மலமும் நல்ல எருவாகும். ஆடு, மாடு, மனிதன், நாய், நரி, பக்ஷிகளின் முதலிய மலஜலாதிகளும் எலும்புகளும் மீன்களும் நல்ல எருவாகும். மணிலாக்கொட்டையென்று சொல்லும் நிலக்கடலை, கொட்டை முத்து, வேப்பங்கொட்டை, புங்கு, புன்னை, இலுப்பை, இவைகளின் பிண்ணாக்குகளும் நல்ல எருவாக உபயோகிக்கப்படும். காப்பி தேயிலைத்தோட்டம் வைத்திருக்கும் அயல்நாட்டார்கள் ஏஜண்டுகள் மூலமாய் இலைகளை எருவிற்காக நாட்டுப்புறங்களிலிருந்து வாங்கி உபயோகித்து விசேஷ லாபமடைவதை நம் தேயத்துக்குடிகள் கண்ணாரக்கண்டும் தாங்கள் மேற்கண்டவைகளை எருவாக உபயோகப்படுத்தி லாபமடையாம லிருப்பதற்குக் காரணம் இவர்களுடைய புத்திக்கும் யோசனைக்கும் எட்டாமையையொழிய வேறல்ல. மேற்கண்ட எருவெல்லாம் எல்லாவித நிலத்திற்கும் எல்லாப்பயிர்களுக்கும் உதவும். மாட்டுச்சாணத்தின் மட்கின எருவுடன் எலும்புத்தூளைக்கலந்து உபயோகித்தால் விசேஷபலனைத்தரும். சில நிலங்களுக்கும் சில பயிர்களுக்கும் விசேஷ எருவும் அவசியமாகும். இது ரசாயனவித்தையால் பரிசீலனை செய்துத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயமாதலால் இங்கு விவரிக்கவில்லை. ஆனால் கடலை, துவரை, உளுந்து, பச்சைப்பயிறு, தட்டைப்பயிறு அல்லது காராமணி, அவரை அல்லது மொச்சை, மணிலா முதலிய பயிர்கள் சுண்ணாம்பு அல்லது சுக்கான்கலந்த பூமியிலும் கீரை, தென்னை, கேழ்வரகு, புகையிலை, மிளகாய், கத்திரி, முதலிய பயிர்கள், மரச்சாம்பல் அல்லது மரஉப்பு கலந்த பூமியிலும், வெடியுப்பு எருப்போட்ட பூமியிலும் சில கடலோரங்களிலும் நன்றாய்ப் பயிராகின்றன. நிலவளத்திற்குத் தகுந்தபடி எருவிட்டுப் பயிர் செய்வது அவசியம். எலும்புத்தூளை மாட்டுச்சாணம் குப்பைகளுடன் மட்கவைத்து வெடியுப்புடன் கலந்தால் நல்ல எருவாகும். மணலைக் களிமண் பூமிக்கும், வண்டலைக் கல்லாம்பரிசு பூமிகளுக்கும் மணல் பூமிக்கும், எருவாகத் தகுந்தபடி உபயோகிக்கலாம். புற்றமண் சப்பாத்துவேர் மண்ணும் நல்ல எருவாகும்.

ஒரேநிலத்தில் பலவிதமான பயிர்களை மாறி மாறி சாகுபடிசெய்வதால் நிலத்தின் சத்து குறையாது. விளைவும் சரியாகக் காணும். ஒரேபயிரை சாகுபடிசெய்வதால் வரவர அதன் விளைச்சல் குறைவுபட்டு பிறகு அந்தப்பயிர் கொஞ்சமும் பலன் தராமல் போய்விடுகிறது. இம்மாதிரி மாறிமாறிப் பயிரிடுவதற்கு முதற்பயிர் பூமிக்குமேலேயே வேர் படக்கூடிய நெல், கம்பு, சோளமானால், இரண்டாவது பயிர், பூமியில் வேர் இறங்கக்கூடிய அவுரி, வன்னி, மரவன்னி, கொட்டைமுத்து, சணல், புளிச்சை முதலிய நார்ப்பயிர்களாகவும், மூன்றாவது பயிர் மொச்சை, துவரை, தட்டைப்பயிறு, உளுந்து, பச்சைப்பயிறு, கொள், நிலக்கடலை, முதலிய காய் தானியப்பயிர்களாகவும், நான்காவது, புகையிலை, கத்திரி, மிளகாய், மஞ்சள், கருணை, கரும்பு, எள் முதலிய பயிர்களாகவும், நிலவளம், நீர்வசம், எருபலம் இவைகளுக்குத் தக்கபடி பயிரிடலாம். இம்மாதிரி பலவிதமான பயிரை மாறிமாறிச் செய்தால் பூமியிலுள்ள பலவிதமான பயிருணவுகள் பயிருக்கு உபயோகமாகி பூர்த்தியான பலனைக் கொடுக்கும். ஒரே ஜாதியான பயிரை அடுத்தடுத்துச் செய்வதால் அதேவிதமான பயிரின் ஆகாரம் பூமியில் குன்றி சரியான பலன் சுயமாய்த் தராது. சிலவேளை அந்தப்பயிரே நன்றாய்ப் பிடிக்காமற்போகும். ஆனால் அந்த நிலத்திற்கு நல்ல பசுந்தாண எருவிட்டு, வண்டலடித்தால் அதே பயிரை இடலாம். ஆனாலும் மேற்படி பயிரின் விளைச்சல் நாளுக்கு நாள், நாளடைவில் குறைந்துவரும். (இன்னும் வரும்.)

# நீலி வசீகரம்

## TAMING OF THE SHREW

### அங்கம் II.

களம் 1. மதுரை ரதநாததேவரின் வீட்டிலோர் அறை.

(கௌதமிதேவி வருதல்.)

கோது, வா, அதுதானே உன் பெயர்?

கௌ.—கோது! பெற்றப் பெயரிட்டாயோ, கோது என்று கூப்பிடுகிறதற்கு? என்னை எல்லாரும் கௌதமியென்று கூப்பிடுவார்கள். கோதாம், கோது! குப்பை!

ந.—நீ பொய் சொல்லுகிறாய்; உன் பெயர் கோதுதான்; நல்ல கோது; நீலிக்கோதுகூட; அழகிய கோது; என்னின் உயிர்க்கோது;—நான் சொல்லுகிறேன், கேள்; சென்ற சென்ற விடமெல்லாம் உனது சாந்தகுணத்தைப் புகழக்கேட்டேன்; உனது நற்குணங்களையும் அழகையும் பற்றி அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனால் உன் அழகுமாத்திரம் சொல்லுக்கடங்காது; அதுமுதல் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று மிகுந்த ஆவலுள்ளவனாகி ஓடிவந்தேன்.

கௌ.—ஓடியா வந்தாய்? நல்லவேளைதான், ஓட்டத்தில் நீ கைதேர்ந்தவன்தானா? ஆனால் இவ்விடத்தைவிட்டு ஒரே ஓட்டமாய் ஓடிப்போய்விடு. முதலிலேயே, நீ ஓடும்பொருள் என்று அறிந்துகொண்டுவிட்டேன்.

ந.—என்ன, ஓடும்பொருள் என்ன?

கௌ.—ரதம்; ரதம் தான் ஓடும்.

ந.—அதுதான் விடாதே; நான் ரதமானால் நீ என்மீது உட்காரு; நான் தூக்கிக்கொண்டு ஓடுகிறேன்.

கௌ.—அப்படியானால் நீ சுமைதூக்கும் கழுதையா? கழுதையல்லவா பாரம் தாங்கும்!

ந.—ஸ்திரீகள் எல்லோரும் கர்ப்பமாகவிருக்கையில் பாரம் தூக்குகிறார்கள். ஆதலால் நீயும் பாரந்தூக்கக்கூடிய கழுதைதான்.

கௌ.—அப்படியானால் நீ கழுதை மகனா?

ந.—நல்லகோது நீ. என் தேள்போலக் கொட்டுகிறாய்?

கௌ.—நான் தேளானால் என் கொடுக்குக்குப் பயப்படு.

ந.—நான் ஏன் பயப்படுவேன்? கொடுக்கைப் பிடுக்கும் வழிதான் எனக்குத் தெரியுமே.

கௌ.—கொடுக்கு இருக்குமிடம் தெரிந்தாலல்லவா பிடுங்குவாய்?

ந.—தேளுக்குக் கொடுக்கு வாலில் இருக்கிறதென்று யாருக்குத் தெரியாது.

கௌ.—நீ என் கொடுக்கைப் பிடுங்கினால், நான் உன்வாலையே ஒட்ட அறுத்துவிடுவேன். தெரியுமா? நல்லவேளையில் போய்விடு; நீ இருக்குமிடத்தில் வேண்டுமானால் ஒருஆளை வைக்கிறேன். கடுவன் குரங்குமாதிரி வந்தாயோ, இங்கே?

ந.—நான் கடுவன் குரங்கானால், நீ எனது மந்திக் குரங்கு. ஏன் என்னைக் கண்டு இப்படிக் குரைக்கிறாய்?

கௌ.—திருடனைக் கண்டால் நாய் குரைக்காதா?

ந.—நானா திருடன் என்கின்றாய்?

கௌ.—சீக்கிரத்தில் கண்டுபிடித்துவிட்டாய்; நீ கெட்டிக்காரன்தான்.

ந.—உன்னவ்வளவு கெட்டிக்காரத்தனம் இருக்கும் என்பதில் ஆக்ஷேபனையில்லை.

கௌ.—இருந்தாலும் முகத்தில் அசடு தட்டுகிறதே!

ந.—எல்லாம் தொல்லையினால்தான்.

கௌ.—அந்தத் தொல்லை எனக்கு வேண்டாம்.

ந.—கோபித்துக்கொண்டு போகாதே; சற்றிருந்து நான் சொல்வதைக் கேள்.

கௌ.—எல்லாம் இருந்தது போதும்; இருந்தால் உனக்கு வருத்தம் உண்டாகும்.

ந.—எனக்கா, எனக்கா வருத்தம் உண்டாகும்? ஒருபோதுமில்லை; நீ சாந்த சிரோமணியாயிற்றே. உன்னால் வருத்தம் எப்படிவரும்? நீ முரடு என்றும் துஷ்டையென்றும் வெடுவெடுப்புக்காரி யென்றும் சொல்லக் கேட்டேன்; சொன்னவரெல்லோரும் பெரும் பொய்யர் என்று இப்போதுதான் தெரிகின்றது; உன்னைப்போன்ற குணவதியை நான் கண்டதேயில்லை; நீ மரியாதையின் உருவமாகவிருக்கிறாய்; உன் முகத்தில் கோபம் என்பதே கிடையாது; பேசும்போது எதிர்த்துப்பேசும் வழக்கம் உன்னிடத்தில் இல்லவே இல்லை; உனது ஸௌஜன்யமும் அன்பும் இரக்கமும் வேறு ஒரு ஸ்திரீயிடமும் காணப்படவேமாட்டா; அப்படியிருக்கையில், நீ நீலியென்றும், துஷ்டையென்றும், வாயாடியென்றும், ஜனங்கள் அநியாயமாய்ப் பழி கூறுகிறார்களே! பாழும் பூமியல்லவா, இது? பூங்கொடிபோன்ற உன் அழகும் ரூபலாவண்யமும் கண்ணைப் பறித்துக்கொண்டு போகின்றனவே! கொஞ்சம் நட; உனது நடையழகைப் பார்ப்போம்.

கௌ.—ஏது; கெட்டுப்போனால் போலிருக்கிறதே! யாரிடம் அதிகாரத்தைச் செலுத்துகிறாய்?

நா.—அடடா! ரதிபோலவிருக்கிருயே! நீதான் ரதி; ரதி யென்று சொல்லப்பட்டவளை கண்டவர் யார்?

கௌ.—இந்தக் கதையெல்லாம் எங்கிருந்து கற்றுக் கொண்டாய்?

நா.—எனக்கு ஒருவர் கற்றுக்கொடுக்கவேண்டுமோ? அதெல்லாம் சுயார்ஜிதம்; இந்த வார்த்தைபை யெல்லாம் விட்டுவிட்டு, வந்த காரியத்தை நேரா கச் சொல்லிவிடுகிறேன்:— உன்னை எனக்குக் கல்யாணம் செய்துகொடுப்பதாக உன் தகப்பனர் சம்மதித்துவிட்டார்; சீதனமும் நிச்சயமாய்விட் டது; உனக்கு இஷ்டம் இருக்குமோ, இராதோ. நான் உன்னைக்கல்யாணம் பண்ணிக்கொள்ளத்தா ன் போகிறேன்; என்னைத்தவிர நீ வேறு ஒருவரை யும் கல்யாணம் செய்துகொள்ளப் பிரியப்படக் கூடாது; உன்னை வசப்படுத்தப் பிறந்தவன் நான் தான்; நீலிக்கௌதமியினின்றும் உன்னைச்சாந்தக் கௌதமியாக்குவது என் பொறுப்பு. இதோ உன் தகப்பனர் வருகிருர்; தடுத்துச் சொல்லாதே; நான் உன்னைத்தான் மனைவியாக அடையப்போ கிறேன்.

(ரகுநாததேவர், பொன்னம்பலத்தேவர், சுப்பராயன் வருதல்.)

ரகு.—என்ன, நாராயணதேவரே! என்ன சங்கதி? வழிக்கு வருவாளா?

நா.—வழிக்கு வராமல்போவது எப்படி? நான் பிடித்தால், முடியாத காரியமுமுண்டோ?

ரகு.—குழந்தாய்! என்ன சமாசாரம்?

கௌ.—நான் உம்முடைய குழந்தையா? இந்தப் பைத்தியம்பிடித்த மடையனுக்கு என்னைக் கல் யாணம் செய்துகொடுப்பதாய் நீர் நிச்சயத்திரு க்கையில் என்மீதில் உமக்குள்ள புத்திரவாத் ஸல்யம் வெளியாகின்றதே! இவனை உடையார் பாளையம் காடுகளில் பிடித்துவந்தீர்களோ?

நா.—ஐயா! சமாசாரம் இதுதான்:— அவளைப்பற் றிச் சொல்லிய நீரும் மற்றையோரும் பொய்யே தான் சொன்னீர்கள்; அவள் மூர்க்கத்தனத்தோடி ருந்தால், அது ஒரு காரியத்துக்காகத்தான் அவ ளை வாயாடியென்று சொன்னீர்களோ! அடக்கம் என்பது அவளிடத்தில்தான் பிறந்திருக்கிறது; கோபம் என்பதே அவளிடம் கிடையாது. எப் போதும் சாந்தமூர்த்தியாகவே இருக்கிறாள்; பொ றுமையில் இவளுக்குச் சமானமாக பூமாதேவி யைத்தான் சொல்லவேண்டும்; கற்பிலோ, அரு ந்ததிக்குச் சமானமென்னலாம்; நெடுகவார்த்து வானேன்?—நாங்கள் இருவரும் திருப்திபடை ந்துவிட்டோம்; நாளை ஞாயிற்றுக்கிழமை முகூர் த்தம் வைத்துவிடலாம்.

கௌ.—ஞாயிற்றுக்கிழமையில் முதன்முதலில் உன க்குப் பாடைகட்டிவிட்டு அப்புறம் மறுவேலை செ ய்கிறேன்.

பொ.—கேட்டாயா! முதலில் உனக்கு பாடைகட்டு வாளாம்.

சுப்.—பேஷ்! இதுதானு உன் சாமர்த்தியம்; ரொம்ப வும் நன்ருகவிருக்கிறது!

நா.—நீங்கள் பேசாமலிருங்கள்; எனக்கு அவள் தான் வேண்டும்; நானும் அவளும் ஒத்துப்போய் விட்டால் உங்களுக்காகவேண்டியதென்ன? தனி யாகவிருக்கையில் என்னிடம் அவள் சொன்ன தைக் கேட்டால் தெரியும் இதுவரையில் வாயா டியாக விருந்தது யாரேனும் இரண்டாம்பேர் இரு ந்தால்தான் தனியாக விருக்கையில் வெகு சாந் தமாகவிருப்பாள்; என்னுடன் தனியாகவிருக் கையில் என்னைக் கட்டிக்கொண்டாள்; ஆயிரம் தரமிருக்கலாம், ஓயாமல் திணறிப்போகும்படி முத்தமிட்டுக் கொண்டாள்; ஒரு நிமிஷத்துக்குள் என்னை மயக்கிவிட்டாள்; உங்களுக்கு ஒன்றும் தெரியாது. நீங்கள் பிராசீன சம்பிரதாயிகள்.— கௌதமி! நான் போய் வருகிறேன். கல்யாணத் துக்கு வேண்டிய துணிமணிகள் வாங்கிக் கொண்டு உடனே வந்து விடுகிறேன்— ஐயா, நீங்கள் எல்லாரும் தயாராக விருங்கள். இப்போ தே கல்யாணக் காரியங்களைத் துவக்கவேண்டும்.

ரகு.—எனக்கு என்ன சொல்வதென்று தெரிய வில்லை; நீர் போய்வாரும்; முகூர்த்தத்துக்கு முன்னடியே வந்துவிடும்.

சுப்பராயன் } பொன்னம்ப } பேஷ்! நாங்கள் சாக்ஷி.

நா.—நான் உறையூருக்குப் போய் வருகிறேன். ஞாயிற்றுக்கிழமை நெருங்குகிறது; தாமதிக்க நேரமில்லை; நகைகள் வாங்குவதற்குக் கொஞ்சம் சாவகாசம் வேண்டுமல்லவா? கோது! விசாரப் படாதே! ஞாயிற்றுக்கிழமை காலையில் கட்டா யம் வந்து விடுகிறேன். (நாராயண தேவரும் கௌதமியும் வேறுவேறு வழியாகப்போதல்)

பொ.—என்ன ஒரு நிமிஷத்தில் நிச்சயமாய் விட் டதே. என்ன ஆச்சரியம்!

ரகு.— உபயோக மில்லாத பொருளை வைத்துக் கொண்டிருக்கும் கடைக்காரன் குறைந்தவிலைக் காவது அப்பொருளைக் கொடுத்துவிடப் பிரியப்ப டுவானல்லவா? அவர்கள்இருவரும்சந்தோஷமாய் வாழவேண்டியது தான் எனது பிரார்த்தனை.

பொ.—அவர்கள் பாடு ஒழிந்தது; இனிமேல் உமது இளைய பெண்ணைப்பற்றி யோசிக்கவேண்டியது தான்; நான் தான்முதன் முதலிலே கேட்டுக் கொ ண்டிருக்கிறேன். எனக்குத்தான் கொடுக்க வேண் டும்.

சுப்.—நான் அவள்மேல் கொண்டிருக்கும் காதலை வெளியிட்டுச் சொல்லமுடியாது; அது அளவிலும் அடங்காது. ஆதலால் எனக்குத்தான் அவளைக் கொடுக்கவேண்டும். (தொடரும்.

# இந்துலேகை

## இரண்டாவது அத்தியாயம்

(ஒரு மலையாள நாவல்)

(முன் தொடர்ச்சி)

"மனதிலுண்டாகும் இச்சைகளெல்லாம் நிறைவேறி வரும்போது மனது நிமித்தமாய் உபத்திரவம் உண்டாக இடமேயில்லை. இந்துலேகை, நீ அபேட்சிப்பதெல்லாம் நிறைவேறி வருகிறபடியினாலேதான் உன் மனோதிடத்தைப் பரீட்சித்தறிய பிரமேயம் ஏற்படாதிருக்கிறது" என்றான் மாதவன்.

"ஆனால் கிட்டாப்பொருளின்மேல் நான் ஒருபோதும் மனதைச் செலுத்துவதில்லையே. இதுவே என்மனதின் சுபாவமான குணமென்றறிந்து நான் சந்தோஷிக்கிறேன். ஆகவே, மாதவா, நீ சொல்வது முற்றிலும் நிஜமே; என் மனது வியாபரிப்பதில் எதிலும் எனக்கு விசனிக்கும்படி இடமுண்டாவதில்லை" என்றாள் இந்துலேகை.

"எப்போதும் அப்படியே இருக்குமா? அப்படியிருக்கும்பட்சத்தில் மனதை அடக்கும்படியான சக்தி உனக்கிருப்பதே அதற்குக் காரணமல்லவா?" என்றான் மாதவன்.

"இல்லை. மனதை ஸ்வாதீனப்படுத்தவேண்டுமானால், அதற்கு வேறே சில சாதனங்களைக் கைக்கொள்ளவேண்டும். தைரியம், பொறுமை முதலிய குணங்களே அந்த சாதனங்களாகும். அப்படிப்பட்ட சாதனங்களின் சகாயமில்லாமலே என்மனது நிம்மதியாயிருக்கிறது. சாந்தமும் சுவாதந்திரியமும் என் இயற்கையிலேயே ஏற்பட்டுள்ள குணங்களென்று நினைக்கிறேன்." என்றாள் இந்துலேகை.

"ஆனால், இந்துலேகை, தற்சமயத்துக்கு அசாத்தியமாயிருந்த காரியம் யாதொன்றிலும் உன்மனது ஒருபோதும் வியாபரித்ததில்லையா?" என்றான் மாதவன்.

"இல்லையென்றே எனக்குத் தோற்றுகிறது. ஆனால், 'தற்சமயத்துக்கு அசாத்தியம்' என்று நீ சொன்னதன் அர்த்தந்தான் இன்னதென்று எனக்குத் தெரியவில்லை. சாதாரணமாக சாத்தியமாயிருக்கும் காரியங்களைப்பற்றித்தான் நான் சொன்னது" என்றாள் இந்துலேகை,

"நான் ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன் கேள்" என்றாரம்பித்துச் சொல்லலுற்றான் மாதவன். "அதிமனோஹரமும் விசேஷ பரிமளத்தோடு கூடியதுமான ஒரு புஷ்பத்தை நீ பார்க்கிறாயென்று வைத்துக்கொள்வோம். அதைப் பார்க்கும்போது அது சுலபமாய்க் கிட்டாதென்று உனக்குத் தெரிந்தபோதிலும், அதைப்பறித்து உன்கையில் வைத்துக்கொள்ளவும் அதன் சுகந்தத்தை அனுபவிக்கவும் உன் மனதில் அபிலாஷை உண்டாகாதா? உன் அபிலாஷை அந்தக்ஷணமே பரிபூர்த்தியாவதாயிருந்தால் எவ்வளவு ஆவலாயிருப்பையோ அவ்வளவு ஆவல் அது பரிபூர்த்தியாகாமலிருக்கும்போதுகூட கொள்ளமாட்டாயா? அல்லது, உன் அபிலாஷை சாத்தியமோ அசாத்தியமோ தக்ஷணமே சாத்தியமோ ஆலசியத்தில் சாத்தியமோ என்னும் இந்த ஆலோசனைகளை அநுஸரித்துத்தான் நீ புஷ்பத்தின்மேல் ஆசைகொள்வையோ?"

"அந்தப் புஷ்பத்தைக் காணும்போதே அது மனோஹரமாயும் பரிமளத்தோடு கூடியதாயுமிருக்குமென்று எனக்கு நிச்சயமுண்டாகும் பட்சத்தில்," என்று தொடங்கி விடைபகரலாயினள் இந்துலேகை, "அதைப்பார்த்துப்பார்த்து நான் ஆநந்தக்களிப்படையக்கூடும். ஆனால் அதைப்பறித்துக்கையில்வைத்துக்கொள்ளவேண்டுமென்று நான் ஆசைகொள்ளுமுன் அதைப் பறிப்பது நியாயமும் சாத்தியமுமாகுமென்று எனக்கு நிச்சயமாயேற்படவேண்டும். இல்லாவிட்டால் நான் அதன்மேல் ஆசைப்படவேமாட்டேன். இதுதான் என்மனதின் சகஜமான குணமென்று எனக்குத் தோற்றுகிறது."

"இந்துலேகை" என்று விளித்துத் தர்க்கிக்கலாயினான் மாதவன், "இப்போது நீ சொன்னதும் முன் நான் சொன்னதும் ஒன்றுதானே. 'ஆநந்தக் களிப்படையக்கூடும்' என்று நீ சொன்னதன் அர்த்தம் அந்தப் புஷ்பத்தைப்பற்றி மனதில் சூக்ஷ்மமாய் ஆநந்திப்பதென்பது மாத்திரமல்ல; அதை அடையவேண்டுமென்று நீ ஆசைகொள்வாயென்றும் ஏற்படுகிறது. ஆனால் உன் அபிலாஷையை நிறைவேற்றிக்கொள்ள நீ செய்யும் பிரயத்தனங்கள் அதை அடைவது சுலபசாத்தியமோ கஷ்ட சாத்தியமோ என்பதை அநுசரித்திருக்கக்கூடும். இதுதான் நீ இப்போது சொன்ன வார்த்தையின் அர்த்தமாயிருக்கலாமென்று எனக்குத் தோற்றுகிறது. அப்படியானால் நீ உன் சித்தவிர்த்திகளை தைரியத்தாலும் பொறுமையினாலும் அடக்கிவருகிறாயென்று ஸ்பஷ்டமாய் ஏற்படுகிறது."

"அப்படி இல்லை," என்று விடையுரைக்கலாயினள் இந்துலேகை, "நான் சொன்னதை நீ தெரிந்துகொள்ளவில்லை. மேலும் நீ சொன்ன புஷ்பதிருஷ்டாந்தம் சரியென்று எனக்குத் தோற்றவில்லை. அதைவிட பேஷான ஒரு திருஷ்டாந்தத்தை எடுத்துச்சொல்லி என் கருத்து இன்னதென்று உனக்கு விளக்கிக் காட்ட முயல்வேன். நான் விவாகப்பருவமுள்ள வனிதையென்றும் சுந்தரவடிவமுள்ள ஒரு யௌவன புருஷனைக் கண்டேனென்றும் வைத்துக்கொள்வோம். அப்படி நான் கண்ட புருஷன் எனக்குத் தக்க நாயகனாவானென்று எனக்குத் திருப்திகரமாய் நிச்சய முண்டாகிறவரையில் அவனது வடிவத்தின்மேல் என் சிந்தையைச் செல்லவிட மாட்டேன். ஆகவே என் சித்தவிர்த்தியானது ஆரம்பத்திலேயே அவ்விஷயத்தில் வியாபரியாதாகையால், அப்படிப்பட்ட சித்தவிர்த்தியால் எனக்குக் கெடுதியொன்று முண்டாகாதபடி தைரியத்தின் துணையை அபேக்ஷிக்கும்படியான பிரமேயமே உண்டாகாது. முதலிலேயே என் சித்தவிர்த்தி அந்த விஷயத்திற் செல்லாது. அதுபோலவே, நியாயமாக எந்த தனத்தை சம்பாதிக்க என்னாலாகாதோ அந்த தனத்தையடைய நான் கனவிலுங் கருதேன். சிலபேருக்குப் பிறவி முதற்கொண்டே இப்படிப்பட்ட மனோதர்மம் அமைகிறது; மற்றவர்களின் விஷயத்திலோ அப்படியில்லை. அதனால் அவர்கள் கிட்டும்பொருளிலும் கிட்டாப்பொருளிலும் வேண்டும்பொருளிலும் வேண்டாப்பொருளிலும் ஒரேவிதமாக மனதைச் செலுத்திக் கஷ்டப்படுகின்றனர். ஆனால் அவர்களுக்குத் திறமையும் தைரியமும் புத்தியும் இருக்கும்பக்ஷத்தில், அவர்கள் மனதை யடக்கி அமைதியடைவர். அதுபோல, மாதவா, நான் பின்சொன்ன வகுப்பில் நீ சேர்ந்தவனாயிருந்து, கஷ்டசாத்தியமாகவோ அசாத்தியமாகவோ உள்ள காரியமெதிலாவது தலைகீழாய் மாட்டிக்கொண்டிருக்கும்பக்ஷத்தில், உன் புத்தி சாமர்த்தியத்தால் உன்மனதை அடக்கிவைக்க முடியாதா? அவ்வாறு அடக்கிவைக்க உன்னால் முடியுமானால், உனக்கு உன்மனம் ஸ்வாதீனமாய் விட்டதாகும்."

"நீ சொல்வதை நான் ஒப்புக்கொள்ளமுடியாது," என்று சொல்லலுற்றான் மாதவன், "ஆனால்இதைப் பற்றி இனி நான் உன்னுடன் வாதாடப்போகிறதில்லை. முன்போல் உன்னுடன் தர்க்கம் பண்ணிக்கொண்டிருப்பதில் எனக்கு மனமில்லை."

"சதுரங்கமாடுவதிலல்லவோ உனக்கு இஷ்டமில்லையென்று இதுவரையில் எண்ணியிருந்தேன்," என்று கூறலாயினாள் இந்துலேகை, "இப்போது என்னோடு பேசுவதில்கூட உனக்கு விருப்பில்லையென்பதை யறிய எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது."

"இந்துலேகை, நீ ஏன் என்னுடன் இப்படி பேசுகின்றாய்? இவ்வுலகத்தில் நானே மகா நிர்ப்பாக்கியவானென்று எனக்குத் தோற்றுகிறது. ஒருவனுடைய மனதில் வேதனையானது புகுந்து துளைக்கும்போது அவன் நிர்ப்பாக்கியனாய்த் துயரப்படாமல் என் செய்வன்?"

"அந்த வேதனையை நீக்கிக்கொள்ள வகைதெரியாமலிருப்பதுதான் நிர்ப்பாக்கியம்" என்றாள் இந்துலேகை.

"இந்துலேகை, என் வேதனையை எப்படி போக்கிக் கொள்வேன்? அதைத் தெரிந்து சொல்வையானால் பெரிய உபகாரமாயிருக்கும்" எனக் கெஞ்சிக்கேட்டுக்கொண்டான் மாதவன்.

"அந்த வேதனை இன்னதென்று எனக்குத் தெரிந்தால் அதைப்போக்க வழிதேடுவேன்" என்ற மந்தஹாஸத்துடனே மொழிந்தாள் இந்துலேகை.

"அப்படியானால் சொல்லுகிறேன்" என்றான் மாதவன்.

"இனி உன் ஆட்டத்தை ஆடு. இதோ பார் மாதவா, உன் குதிரையை நான் வெட்டப்போகிறேன். நீயோ ஒரு காயை கையில் பிடித்துக்கொண்டும் துக்கத்தைப் பற்றிப்பேசி மனோவிசாரப் பட்டுக்கொண்டும் எங்கேயோ பார்த்துக் கொண்டிருக்கிறாய். அதை எல்லாம் விட்டுவிட்டு, விளையாடுவோம். உன் குதிரையைத் தப்பவைக்க உன்னாலாகுமோ? பார்ப்போம் உன் சாமர்த்தியத்தை" என்றாள் இந்துலேகை.

"அது போகட்டும்" என்றான் மாதவன். "இப்போது ஆட என்னாலாகாது. ஆட்டத்தில் என் மனம் செல்லவில்லை. கொஞ்சநேரம் இந்த ஸோபாவிலே சாய்ந்து கொண்டிருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே அதில் அமர்ந்தான்.

அப்போது இந்துலேகை எழுந்து சிரித்துக்கொண்டே சாகுந்தல நாடகத்தை யெடுத்து வந்து மறுபடியும் உட்கார்ந்து வாசிக்கத் தொடங்கினாள்.

"அது என்ன புஸ்தகம்?" என்றான் மாதவன்.

"சாகுந்தலம்"

"எந்த பாகம் படிக்கிறாய்?"

"உனக்கு உரக்க வாசித்துக் காட்டட்டுமா?"

"தயவு செய்து அப்படியே வாசிப்பாய்"

(இன்னும்வரும்)

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

உண்மையும் போலியும்!—ஒரு மனிதனுக்கு பன்றிகள் போல உறுமும் திறம் நன்றாக இருந்தது. பன்றிகள் மேய்ந்து கொண்டிருக்கும் இடம்போய் அவன் உறுமினால் தமது கூட்டத்தில் ஏதாவது ஒருபுதிய பன்றிதான் வந்துவிட்டதோ என்று அவைகள் நாற்புறமும் சுற்றி வெருண்டு நோக்குமாம். அவன் கீர்த்தி உலகெங்கும் பரவினதும் தன் திறமையால் அவன் பணம் ஸம்பாதிக்க தேச ஸஞ்சாரம் செய்யத் தொடங்கினான். ஓர் ஊரில் இவன் உறுமிப் பணம் ஸம்பாதித்துக் கொண்டிருக்கையில் அவ்வூர்வழியாக ஒருமஹான் தமது சிஷ்யர்களுடன் போய்க்கொண்டிருந்தார். அவன் பணம் ஸம்பாதிக்கும் வழியைக்கண்டதும், அதன் மூலமாகத் தமது சிஷ்யர்களுக்கு நல்ல விஷயம் ஒன்றை போதிக்கலாமென்று அவருக்குப்பட, உடனே அங்கே ஒரு பந்தல் ஒன்றைத் தயார் செய்து 'இந்த வேறிடங்களில் கேட்கக் கூடிய உறுமலைவிடச் சிறந்த உறுமலை கேட்கலாம். இதற்கோ காசு ஒன்றும் கொடுக்கவேண்டியதில்லை இஷ்டமானவர்கள் வரலாம்' என்று தமது சிஷ்யர்களால் தண்டோராப்போடுவித்தார். ருசிகண்ட அவ்வூர் ஜனங்கள் மிகுந்த ஆவலோடு மஹானது பந்தலில் வந்து கூடினார்கள். அவரோ நிஜமான பன்றி ஒன்றை வாங்கிவந்து அதன்காதைத் திருகிக் கத்தும்படி செய்தார். உண்மையில் இது மற்றையவன் உறுமலைவிட மிக நேர்த்தியாகத்தான் இருந்திருக்கவேண்டும். ஆனால் ஜனங்கள் எல்லோரும் சீ! இதுதானா! இதை நாம் தினம் கேட்கவில்லையா, இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது' என்று இகழ்ந்து பேசிவிட்டுப் போய்விட்டனர். மஹான் எவ்வளவோ தண்டோராப்போட்டுப் பாடுபட்டுப் பார்த்தார், அவர் பந்தலுள் ஒருமனிதன்கூட வரவில்லை. ஆனால் போலிப்பன்றியின் பந்தலில் கூட்டம் எப்பொழுதும் விடாது கூடிக்கொண்டே இருந்தது. பந்தல் காலியானதும் மஹான் தமது சிஷ்யர்களைச் சூழ இருக்கும்படி சொல்லி, 'பார்த்தீர்களா! இப்பொழுது செய்த சோதனையில் ஓர் அற்புதம் வெளியாகின்றது. மனிதர்களுக்கு உண்மை வஸ்துக்களில் இஷ்டமில்லை, போலித்தோற்றங்களில் அதிகப் பிரீதி. இதனால்தான் போலி இன்பங்களாகிய உலக இன்பங்களைக் கட்டிக்கொண்டு அவைகளை விட்டு நீங்க மனம்வராது அவர்கள் அவைகளில் கிடந்து உழன்று வருந்துகிறார்கள். மேன்மைஅடைவது கஷ்டமல்ல. அதற்கு எந்த வெளிவஸ்துவின் ஸஹாயமும் கொஞ்சமேனும் வேண்டியதில்லை. அதை அடைய வேண்டுமென்ற மனப்பூர்வ அபேக்ஷைதான் வேண்டும். நாம் எவ்வளவுதான் பேரின்பத்தின் சிறப்பை எடுத்துரைத்தபோதிலும் அதில் ருசி உள்ளவர்கள் தவிர வேறொருவரும் நம்மை அணுகார். இதைப்பற்றிச் சிந்தியுங்கள்' என்றார்.

திதிக்ஷை அல்லது ஸஹிந்நல்.—இராவணன் முதல்தரம் இராமரை எதிர்த்துப் போர்செய்தபொழுது மாலைக்காலத்தில் நிராயுத பாணியாகத்தோல்வியடைந்து இராமர் முன்பு வெட்கிநின்றான். அவனைக் கொல்லும் திறம் இராமருக்கு இருந்தபோதிலும் அவர் அவனைநோக்கி 'இராவணா! நீ சிறந்த வீரனைப்போலச் சண்டைசெய்தாய். உண்மைதான். அது என்னிடத்தில் பலிக்காது அப்பா! இப்பொழுதே உன்னை நான் கொன்றாலும் கொல்லலாம்; ஆனால் நான் உன்னைக்கொல்வதில்லை. இது வரையில் நான் உன்னை எவ்வளவோ தரம் ஸீதையைக் கொண்டுவந்து விட்டுவிடு அப்படியாகில்சண்டையை நிறுத்தி விடுவேன் என்று கேட்டிருக்கிறேன். இப்பவும் நீ நல்லவழிக்குவர இனி ஒருமுறை அவ்வாறே செய்யும்படி உன்னை நான் கேட்கிறேன். இதைப் பற்றி நன்றாய் யோசித்துவிட்டு நாளைக்குவா. என் சொல்படி நடப்பாயாகில் உனக்கு ஒரு குறைவும் வாராது. இல்லாவிடில் நான் உன்னைக் கொன்றே தீரவேண்டும். பின்பு என்னால் வேறொன்றும் செய்யமுடியாது' என்று நயமாகச் சொன்னார். இந்த மொழியில் காணப்படும் சித்த ஸமாதானம் ஜன்மவைரியிடத்து ஓர்வித அன்பு ஆகிய இவைகளே உண்மையான திதிக்ஷையின் ஸ்வரூபம். தன் பிராண நாயகியாகிய ஸீதை விஷயத்தில்கூட கேவலம் ஸ்வய நயம் கருதி கோபதாபாதிகளால் விரோதிகள் மேல் ஆக்கிரகத்தோடு இராமர் பாய்ந்தவரல்ல. ஆனால் அந்தத் தருணத்தில் தாம் செய்ய வேண்டிய கடமையை ஸரிவர நடத்தி முடிப்பதற்கே இராவணனை அவர் கொன்றவர். இராவணன் கொடியவன், அவனைக் கொன்று தமது மனமாறவேண்டும் என்ற ஆதங்கத்தால் அவர் அவனைக் கொன்றவர் அல்லர். அந்த ஸந்தர்ப்பத்தில் தாம் செய்யவேண்டியதை மனப் பரபரப்பின்றி அவர் செய்து முடித்தவரே ஒழிய வேறல்ல. செய்ய வேண்டியதைமனக் குழப்பமின்றிச் செய்வது திதிக்ஷையின் ஸ்வரூபம்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்
## LADIES' PAGES

"மலரோடு சேர்ந்த நாரும் பெருமை அடைகிறது. செந்தாமரை மலர்போன்ற என் கணவன் பதம் சேர்ந்த எனக்கும் பெருமை வரும் அவரை அடைவதினால்தான் எனக்குப் பெருமை. அவரை ஸ்துதிப்பதால் தான் எனக்கு மஹிமை. ஆனதினால் நான் எவருடைய குணவிசேஷத்தால் பெருமை அடைகிறேனோ, எவருடைய மஹிமையினால் மஹிமை அடைகிறேனோ, எவருடைய கடாக்ஷத்தால் ஆனந்தமடைகிறேனோ, எவருடைய ஆனந்தத்தால் இன்பமேவீடு அடைகிறேனோ, எவருடைய முகதர்சனத்தால் ஆத்மவாஞ்சை அதிகரிக்கிறதோ, எவரைக்கண்டதும் ஒன்றும் தோன்றாது ஆநந்த பரவசமாகி விடுகின்றேனோ, அப்பேர்ப்பட்ட என் பிராணநாதனுக்கு என் மனம்பூர்ணமாகவணங்குகிறேன் இனி எனக்கேது குறை" என்றானந்தமடைவது தான் குலப்பெண்டிரது குணம்

* * *

"இராம நாமமே கற்கண்டு; அதன்ரஸம் அறியாதவன் கல்குண்டு" என்று பாகவதர் நேற்றுப்பாடினார் இராமபக்தியில் வாழ்பவனுக்கது நிஸ்சயமாகத்தான் இருக்கும்" என்றாள்ஒருவள். "ஏனடி அப்படிசொல்கிறாய்" என்றாள் மற்றொருவள். "ஏனென்று கேட்கிறாய். எனக்கென் கணவனைத் துதிக்கும் விஷயத்தைக் காட்டிலும் இனிமையாகிய வஸ்து ஒன்றும் ஏற்படவில்லை. கற்கண்டு, சர்க்கரை இவற்றின் இனிமை நாக்கோடு நின்றுவிடுகிறது. அதுவோ என் உள்ளம்பூரிக்க என் உடம்பெலாம் இனிக்கச் செய்கிறது. இது உனக்குத் தெரியவில்லையே" என்றாள். "ஆனால் நானுமந்த இனிமையை அடையப்பெறுவேன்" என்று மற்றவளும் உறுதிசெய்துகொண்டு நடக்கலானாள். அப்படியே ஒவ்வொரு பெண்ணும் நடப்பாளாக.

* * *

"கெடுவான் கேடுநினைப்போன்" என்பது ஒருபழமொழி. கெட்ட எண்ணங்கள் மனதைக்கெடுத்துவிடும் மனது கெட வாழ்வு கெடும். வாழ்வு கெட்டு வாழப் பிறந்தவரொருவருமில்லை. இது பெண்களுக்கொருபுத்தி. பெண்களுக்கு வாழ்வு தமது கணவரோடு மனமொத்து வாழ்வது தான். அவ்வாழ்வு கெட்ட எண்ணங்களினால் நாசமடையும். கெட்ட எண்ணங்களை ஒழித்து வாழ்வது தான் வாழ்க்கைக்கழகு பெண்களிதை சற்று கவனிப்பாராக.

* * *

"பன்றியோடு சேர்ந்தால் கன்றும் மலம் தின்னும்" என்பதொருமுதுமொழி. கெட்டவர்களோடு சேர்ந்தால் கெட்டகுணம் படியுமே ஒழிய நற்குணமொருநாளும் வரமுடியாது. கெட்டவர்களோடு சேர்வதைக் காட்டிலும் இழிவான செயல் ஒன்றுமில்லை. தன்னுடைய நன்மையைக் கெடுத்துக் கொள்ள இதைக்காட்டிலும் சுலபமான வழியில்லை. கெட்டவர் சேர்க்கையை விட்டு நற்குணங்களடைவதுதான் பெண்டிர்க்கு அழகு.

* * *

பொறுமை உலகை ஆளும் பொறுமையாலேதான் செய்யமுடியாத காரியமுஞ் செய்யமுடியும். ஆலோசனையும் யுக்தியும் பொறுமையினாலேதான் உண்டாகிறது. மனைவிக்கும் தனது தர்மத்தை நடத்த வேண்டுமென்றால் பொறுமையால் தான் உண்டாகும். பொறுமைவரும் பெருமைவர புகழுண்டாகும். புகழடைவதும், பெண்டிர்களுக்கு தம்கணவன் பெருமை அடைவதில்தான் உண்டாகும். ஆகையால் பொறுமையை ஆபரணமாகக்கொண்டு தமது கணவரது பெருமையை வளரச்செய்வது தான் பெண்டிர் தர்மமென்க

*

"ஆ! என்றால் அஸத்ய மொழியு" மென்றார் ஒருவர். "யார்?" என்றார் மற்றொருவர். "குலமுங் குணமுங் கலந்து, கற்பெனும், ஆயுதம் கைக்கொண்ட பெண்கள்" என்றார் முதல்வர். "நான் நம்பவில்லை" என்றார் இரண்டாவதவர். "தெரியாவிடில் திருவள்ளுவர் மனைவியைப் போய்ப்பாரும்" என்றார் முதல்வர். அப்படியே அவர் திருவள்ளுவர்வீடு சென்றார். போனபோது திருவள்ளுவர் பழைய சாதம் சாப்பிட்டுக்கொண்டிருந்தார். இரண்டாவதவர் வந்ததையும் திருவள்ளுவர் கண்டார். வந்தவரெண்ணமுழுதும் தம் ஞானதிருஷ்டியாலறிந்து, "அன்னம் மிகச்சுடுகிற" தென்று கூச்சலிட்டார். அவர்மனைவி உடனே ஒருவிசிறி எடுத்து அன்னத்தைவிசிறினாள். அன்னத்திலிருந்து நீராவி குளிர்ச்சியடைந்து புகைவடிவாகி கண்ணிற்கு தெரிந்தது. முதல்வர்கண்டு அதிசயித்து பழஞ்சோற்றில் ஆவியென்றார். வள்ளுவர் இது புதிய சோறு என்றார். ஒன்றும் தெரியாமல் மதிமயங்கி அவர்க்கும் அவர் மனைவிக்கும் தெண்டனிட்டு இரண்டாவதவர் சென்றதாக கர்ணபரம்பரை. எண்ண ஒருமித்திருப்பதில் திருவள்ளுவரும் அவர் மனைவியும் போல் எவரும் இருப்பாராக!

* * *

"ஸந்நியாஸிதான் உலகத்திற்கு மிகவும் உபயோகமாய் இருப்பவன் என்று சிலர் சொல்லுவார். அது எம்மட்டோ, எனக்குதெரியா" தென்றான் ஒருவன். "ஏன்?" என்றான் மற்றவன். "ஸந்நியாஸிகளும் கிரஹஸ்தர்களுடைய உதவியால் தான் வாழமுடியும். அவ்வுதவி இன்றி ஸந்நியாஸாஸ்ரமம் பெருமை அடைய முடியாது. பலபேர்க்கு பலவிதத்திலும் உதவி ஆகிறவர் கிரஹஸ்தாசிரமத்தில் இருப்பவர்கள்தான்" என்றான் முதல்வன். "ஆமாம்! ஆமாம்! அதுவும் ஸரியான பத்நிகளிருந்தால்தான் முடியும்" என்றான் மற்றான். இவ்விருவர் பேசியதும் பெண்களுடைய நன்மைக்காகத்தான். அதை அவர் சற்று கவனிப்பாராக!

வா. சேஷகிரி சாஸ்திரி.

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

பாட்டின் நலம்.—பாட்டிற்கு காதை ஸந்தோஷப்படுத்தும் சக்தி உண்டென்பது எல்லோரும் அறிந்த விஷயமே. காதின் மூலமாக அதற்கு மனதை ஏகாக்கிரப்படுத்தும் சக்தியும் உண்டு. நல்ல பாட்டைக்கேட்டால் நாம் மெய்மறந்து பரவசமாகிறோம். பாட்டை சாஸ்திரமாகக் கருதினோ அதற்கு நமது புத்தியைக் கூர்மையாக்கும் சக்தியும் உண்டு. இவ்வளவு சிறப்பு வாய்ந்த பாட்டிற்கு வேறொரு விசேஷ சக்தி இருக்கின்றதென்று இக்காலத்து பிரகிருதி சாஸ்திரிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். சிற்சில ராகங்களுக்கு சிற்சில வியாதிகளை குணப்படுத்தும் சக்தி இருக்கிறதாம். இரண்டொரு வைத்யர்கள் தங்கள் பாட்டையே மருந்தாகக்கொண்டு சிற்சில வியாதிகளை ஸ்வஸ்தம் செய்திருக்கின்றனராம்.

***

ஓர் புத்திமதி.—அதிகமாக படிப்பு, எழுத்து, தையல் முதலிய நுட்பவேலை செய்பவர் பத்துநிமிஷத்திற்கு ஒருதரம் தமது தலையைத் தூக்கி தூரவஸ்துக்களைச் சற்றுப் பார்க்கவேண்டும். இதனால் முற்கூறிய வேலைகளால் அதிகமாகத் தாக்கப்பட்டிருக்கும் கண்ணுக்கு ஓர்வித சிரம பரிஹாரம் உண்டாகும். கண்வியாதிகள் முதலியன அதிகமாக உண்டாகி வருத்தம் தரமாட்டா. இவ்வாறு செய்யாது ஸதா உற்றுப்பார்ப்பவர்களுக்கு சீக்கிரம் கண்வியாதி வரும்.

***

ஜீர்ண விஷயத்தைப்பற்றிய ரகஸ்யங்கள்.—ஆகாரம் எளிதில் ஜீர்ணமாவது ஸாதாரண ஸமயங்களில் அவனவன் மனோநிலையைப் பொருத்திருக்கிறது. இப்பொழுது வந்திருக்கும் மாம்ஸபேதன வெளிச்சத்தால் (x-rays) ஒரு ஜந்துவின் வயிற்றில் ஜீர்ணத்தொழில் நடப்பதை பிரத்யக்ஷமாகக் காணலாம். அவ்வாறு பரிசோதனை செய்ததியில் ஜந்துவுக்குபயம் அல்லது அதிக வேலை சாப்பிட்டபின்பு ஏற்பட்டால் ஜீர்ணத்தொழில்நின்றுவிடுவதைக் கண்ணாரக் காணலாம். இவ்வாறேதான் மனிதன் நிலையும்.

***

வர்ணவெளிச்சங்களின் விசேஷங்கள்—சில வர்ணவெளிச்சங்களுக்குச் செடிகளின் மேல்தாக்கி அவைகளை செழிக்கச் செய்யும் சக்தி இருக்கின்றனவாம். சிவப்பு வெளிச்சத்தில் செடிகள் அதிவேகமாகவும் செழிப்பாகவும் வளருகின்றனவாம். நீல வெளிச்சத்தில் அவ்வளவு வேகமாக வளராவிட்டாலும் அதில் செடிகள் சீக்கிரத்தில் கெட்டுப்போவதில்லை. நீலவெளிச்சத்தில் பழங்கள் வெகுநாள் கெடாது வைத்திருக்க முடியும்போலத் தோன்றுகின்றது.

நோக்கமும் நடத்தையும்.—இந்த விஷயத்தைப் பற்றி அடையார் தியஸாபிகல் ஸங்கத்தில் பெஸண்ட் அம்மாள் நவம்பர் மாதம் 22-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை பிரஸங்கம் செய்தாள். அந்த அம்மாள் கூறிய விஷயங்கள் பின்வருவன:—மனிதர்களின் நோக்கம் மோக்ஷம். அது உலகத்தைத் துறத்தலால் உண்டாவது என்பது ஸாதாரண ஹிந்துக்களின் நம்பிக்கை. இந்த எண்ணம் ஸ்வயநயம் கருதும் எண்ணம். இதனால் பரதகண்டத்திற்கு கெடுதிகள் உண்டாயிருக்கின்றன. பறையர்களை படித்தவர்களாகிய ஹிந்துக்கள் கவனியாது விட்டதால் கிறஸ்தவ பாதிரிகள் அவர்களை நாகரீகப்படுத்தி இந்த ஜாதிக்கு விரோதமாக நிற்கும்படி செய்கிறார்கள். ஆதலால் உலகைத் துறந்து ஓடி மோக்ஷம் அடைய எண்ணுபவர்களால் நமது தேசத்திறகு நன்மையே இல்லை. இம்மாதிரியான மோக்ஷமானது நமது சிறுவர்களுக்கு மதவிஷயத்தில் நம்பிக்கை உண்டாகாமலிருக்கும்படி செய்து அவர்களை எளிதில் நாஸ்திகர்களாக்கி விடுகின்றது. ஆதலால் இந்த மோக்ஷம் உண்மையானது அல்ல. மேன்மையை அடைந்து உலகத்தவரை மேன்மை அடைய ஸஹாயம் செய்துகொண்டிருப்பதே உண்மையான மோக்ஷம். இதைத்தான் ஜனகர் கிருஷ்ணபகவான் முதலியோர் மோக்ஷமாகக் கொண்டிருக்கின்றனர். இம்மாதிரி உலகத்தவர் நன்மைக்குப் பாடுபடாது மோக்ஷம் அடைய எண்ணக்கூடாது. இப்படிப் பலத்தி லிச்சைவிட்டு பரோபகாரத்தில் புகுவது மனிதன் நோக்கமாகிய மோக்ஷம்.

***

வைராக்கியமும் மோக்ஷமும்.—மோக்ஷம், பரோபகாரம் முதலிய விஷயத்தைப்பற்றி பெஸன்ட் அம்மாள் கூறிய விஷயத்தைப்பற்றி கும்பகோணம் ஸ்ரீமான் ஸுந்தரராமய்யர் அவர்கள் பின்வருமாறு விமர்சை செய்திருக்கிறார்:—மோக்ஷத்தைப்பற்றிய கொள்கை எவ்வாறு நமது சிறுவர்களை நாஸ்திகர்களாக்கும்? அதை அடைவதற்கே பரோபகாரரூபமான நிஷ்காம்யகருமம் அவசியம் என்று சாஸ்திரங்கள் கூறி யிருக்கின்றனவே! ஆனால் இது மோக்ஷமார்க்கத்தில் முதல்படி. இது தான் மனிதன் நோக்கம் என்று பெஸன்ட் அம்மாள் அப்பிராயப்படுவது அவ்வளவு ஸரியாகத் தோற்றவில்லை. இப்பொழுது நமது பரதகண்டத்தில் ஏற்பட்டிருக்கும் ஜாதீய ஒற்றுமை ஸம்பந்த

மாக உண்டாயிருக்கும் புதிய ஊக்கமுடைய சிறுவர்கள் அனேகர்களுக்கு அம்மாள் கூறியதே முடிவான நோக்கமாகத் தோற்றலாம். இந்தப் பரோபகாரத்தைச் சிறப்பித்துக் கூறியுள்ளதால் கீதைக்கு இக்காலத்தில் மிகுந்த பிரபல்யம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் அந்த கீதைப்படியே இந்தப் பரோபகாரம், மோக்ஷமார்க்கத்தின் முதல்படியே ஒழிய வேறில்லை. பெஸண்ட் அம்மாள் நமது சிறுவர்களுக்கு பரோபகாரத்தில் உண்டாகும் விருப்பையும் மோக்ஷவிஷயத்தில் உண்டாகும் வெறுப்பையும் ஒருங்குசேர அனுமோதிப்பது, ஒருவனை நோக்கி "ரயிலேறப்பா! ஆனால் நீ போகவேண்டிய ஊர்போய்ச் சேரவிரும்பாதே"என்று கூறுவதுபோல இருக்கிறது. மேலும் பெஸண்ட் அம்மாளுக்கு மோக்ஷத்திற்கும் வைராக்கியத்திற்கும் உள்ள பேதம் நன்றாய் விளங்கி இருப்பதாகக் காணப்படவில்லை. ஆபாஸ வைராக்கியங்கள் அகங்காரத்தின் மாறுபாடு என்பது சாஸ்திரக்கோட்பாடு. இது மோக்ஷ காரணமாகாது. உண்மை வைராக்கியம் மோக்ஷ காரணம், அம்மாள் சொல்வதுபோல அது குற்றங்கூறத்தக்கது அல்ல. இது வந்து விட்டவன் காஷாயதாரியாக இருந்தாலும் இருக்கலாம், கிரஹஸ்த வேஷத்தோடு இருந்தாலும் இருக்கலாம். உலகத்தவரை மேன்மைப்படுத்தாது மோக்ஷம் அடையக் கருதல் ஸ்வயநயம் கருதல் என்று அம்மாள் சொல்லுகிறாள். கர்மசேஷம் உடைய ஞானியாலே மாத்திரம் தான் இந்தத்தொழிலில் பிரவிருத்திக்க முடியும். கர்மசேஷம் அற்று பந்தத்தை உடைத்துக் கொண்டு வெளியேறும் ஞானிகளை முற்கூறியபடி கட்டுப்படுத்த யார் வல்லவர்? அவர்கள் அபூர்வமாகக் காணப்படுவர். இப்பரதகண்டத்தில் மாத்திரந்தான் இம்மாதிரி பரம முக்தர்கள் உண்டு. இவரது நிலையை ஸதாசிவ பிர்ம்மயதீந்திரர் தமது ஆத்மவித்யா விலாஸத்தில் வெகு விரிவாக விவரித்துள்ளார். நமது புண்யபூமியிலிருக்கும் அதிகாரிகளைத் தவிர மற்றையவர்களால் இது அனுமோதிக்கப்படவில்லை, என்று நாம் வீணாக வருத்தப்படக்காரணம் இல்லை. இதன்மேன்மை அவர்களுக்கு விளங்குவது மிகக்கஷ்டம்.

* *

தூஷணங்கூறல்:—இவ்வாறு எழுதிய விஷயங்களை திருவனந்தபுரத்திலிருந்து கிருஷ்ணதாஸ் என்ற பெயருடையவர் ஒருவர் பலவிதமாகப்பின் வருமாறு குற்றங் கூறியுள்ளார்.

1. பத்திரிகையில் எழுதப்பட்டிருக்கும் உபந்நியாஸத்தின் சுருக்கத்தை வைத்துக்கொண்டு உபந்யாஸம் செய்தவர்களைக் குற்றங்கூறல் அழகன்று. ஸ்ரீமான் ஸுந்தரராமய்யர் அவர்கள் சொல்லுவது போல நமது சாஸ்திரவிஷயத்தில் பெஸண்ட் அம்மாள் அவ்வளவு கேவலமான அஞ்ஞானம் உடையவள் அல்லள்.

2. எல்லா ஞானிகளுக்கும் மேலான ஞானியாகிய கிருஷ்ணபகவானே கர்மபந்தாதிகளில் உட்படாது லோகோபகாரார்த்தம் பாடுபடுவதால், கர்மசேஷம் அற்ற ஞானியால் அவ்வாறு செய்வது அஸாத்தியம் என்று எவ்வாறு சொல்லலாம்? மேலும் உலகத்திற்கு ஞானியின் ஸஹாயம் அவசியம் வேண்டியதாக இருக்கிறது. அப்படி இருக்கையில் அவன் எவ்வாறு லோகோபகார நிலையிலிருந்து தப்புவித்துக் கொண்டுபோய் விடலாம்?

3. இந்தியாவைவிட்டு வெளியில் உள்ளவர்களுக்கு மோக்ஷ நிலை விளங்காதா? அதிகாரிகள் (பிராம்மணர்கள் அல்லது இக்காலத்திய ஆபாஸ பிராம்மணர்கள்) தவிர மற்றவர்களுக்கு இந்த நிலை தெரிவாகாதா? கடவுளுக்கும் இவ்வளவு பக்ஷபாதமா? அவர் அவ்வளவு பக்ஷபாதியல்ல வெளிதேசத்தைசேர்ந்தவர்களாகிய பெஸண்ட் அம்மாள், டியூஸன், இமர்ஸன் மஹமத், கிறஸ்து இவர்களுக்கும் இன்னும் நம்முள் தாழ்ந்தஜாதியார் அநேகருக்கும் இந்த நிலை தெளிவாக விளங்கி இருக்கிறது என்பதற்குத் தக்க ஆதாரங்கள் இருக்கின்றன. ஆதலால் அய்யர் அவர்கள்இவ்வளவு ஆக்குரோஷத்தோடு சூத்திரர் போன்ற பிறஜாதியார்களை நிந்திக்க வேண்டியதில்லை.

4. யூதர்கள் தம்மை கடவுளால் தேடி எடுக்கப்பட்ட அதிகாரிகள் என்ற அகங்காரத்தால் இருந்த இடம் தெரியாமல் இக்காலத்தில் சிதறிப்போய் துக்கத்தை அநுபவிக்கிறார்கள். நமது புண்யபூமியில் பிராம்மணர்களுக்கும் ஜாதி அகங்காரம் வெகு நாளாக இருக்கின்றது. இதனால் பிராம்மணர்கள் கதியும் என்ன ஆகுமோ? அவர்களுக்கு ஈசுவர கிருபையால் அந்த அகங்காரம் நீங்கி அவர்கள் மேன்மையை அடையட்டும்.

* *

மறுமொழி.—கிருஷ்ணதாஸர் கூறியுள்ள குற்றங்களுக்கு ஸ்ரீமான் ஸுந்தரராமய்யர் அவர்கள் பின்வருமாறு மறுமொழி கூறியிருக்கிறார்.

1. பத்திரிகைகளில் வெளிவரும் விஷயங்களை வைத்துக்கொண்டு தான் வெளியூர்களில் நடந்த உபந்யாஸாதிகளைப்பற்றி விமரிசை எழுதவேண்டும். வேறு இந்த உபந்யாஸாதிகளை அறியத் தக்க ஆதாரம் கிடையாது.

2. கிருஷ்ணர் கீதையில் தம்மை ஈசுவரனுகச் சொல்லிக் கொள்ளுகிறார். உலகம் இருக்கிறவரையில் அவருக்கு ஜகத்வ்யாபாரம் உண்டு. அவர் லோகோபகாரார்த்தமாக அவதாராதிகள் எடுத்துத் தீரவேண்டும் ஸாதாரண ஜனங்களுக்கு கர்ம சேஷமிருப்பதால் அவர்களும் மாறி மாறி ஜன்மம் எடுத்துத் தீரவேண்டும். பரம முக்தர்களுக்கோ கர்மசேஷமே கிடையாது. ஆதலால் அவர்களுக்கு ஜகத்வ்யாபாரமே கிடையாது. மறுஜன்மமும் கிடையாது.

3. சங்கராசாரிய ஸ்வாமிகள் சூத்திரர்களுக்கு ஆத்மஞானம் இதிஹாஸாதிகள் மூலமாக வரலாம் சுருதிமூலமாக அவர்களுக்கு அது வருவது அஸாத்தியம் என்று சொல்லி இருக்கிறார்.

4. ஜீவன் முக்த நிலை நமது புண்ய பூமியில் அதிகாரிகளைத்தவிர வெளியில் உள்ளவர்களுக்கு மேலானதெனத்தோற்றுவது அரிது. இப்படிப்பட்ட நிலையை வெளியில் உள்ளவர் சிறந்ததென அங்கீகரிப்பாராயின் நமக்கு மிகுந்த ஸந்தோஷம் தான். ஆதலால் ஜாதி அகங்காரம் முதலிய கிருஷ்ணதாஸரால் கூறப்பட்டுள்ள அவதூறுகள் என்னைத்தாக்க இடமே இல்லை

***

ஓர் எச்சரிக்கை.—முன் எடுத்துக்கூறியவைகளிலிருந்து பெரும்பாலும் இக்காலத்தவர்களுக்கு மோக்ஷம் அதற்கு முக்கிய ஸாதனமான வைராக்யம் ஆகிய இவைகளின் ஸ்வரூபம் இன்னது என்பது நன்கு விளங்கவில்லை என்று வெளியாகின்றது. ஆபாஸ வைராக்யத்தால் அநேகர் இக்காலத்து ஸந்யாஸிகளாகித் தத்தளிப்பதை நோக்கி இக்காலத்தில் படித்தவர்கள் வைராக்யம் ஸந்யாஸாசிரமம் இவைகளைப் பழிக்கத் தொடங்குகின்றனர் போலக் காணப்படுகிறது. ஒருவன்மேலிருந்த கொசுவை அடிக்கப்போய் ஆளைக்கொன்ற கதைபாக ஆபாஸ வைராக்யத்தின்மேலிருக்கும் கோபத்தை சில உபந்யாஸகர்கள் ஸந்யாஸம் மோக்ஷம் இவைகளின்மேல் வீணைக்காட்டி பாபத்திற்கு ஆளாகின்றனர். இக்காலத்தில் எல்லா ஆசிரமும் சீர்குலைந்து கிடக்க என் கிரஹஸ்தர்களும் ஸந்யாஸிகளும் ஒருவரை ஒருவர் குற்றங்கூறிச் சண்டையிடவேண்டும். சாஸ்திரப்படி ஸந்யாஸம் கார்ஹஸ்தியத்தைவிட மேலான நிலை என்பதற்கு ஸந்தேகமில்லை. காலபலத்தால் நம்மால் உள்ளபடி அந்த ஆசிரமத்தை அனுஷ்டிக்கத் திறமில்லாவிட்டால் என் வீணுக அதன் ஆபாஸங்களை நோக்கி அந்தப் பரம ஆசிரமத்தைக் குற்றங்கூறி பரோபகாரத்தை அதற்கு மேற்பட்டதாகக் காட்டவேண்டும்? இவ்வாறு செய்வதால் நமக்கு எந்நாளும் அந்த ஆசிரமம் ஸித்திக்காமல் போக மோக்ஷம் கிடைப்பதே துர்லபமாகிவிடலாம் உண்மையான ஸந்யாஸமே மோக்ஷஸாதனம், பரோபகாரம் முதலிய மற்றைய எல்லா நிலைகளும் இந்த ஸந்யாஸத்திற்கு ஸாதனம். இந்த ஸந்யாஸத்தை நிலைநிறுத்தத்தான் ஸ்ரீமத் சங்கரபகவத் பதாசாரியார் அவதாரம் செய்தது உபந்யாஸம் செய்பவர்களும் கிரஹஸ்தர்களும் ஸந்யாஸத்தை வீணே குற்றங்கூறுது அதன் மேன்மையை உள்ளபடி அறிந்து அந்நிலையில் இருக்கத் தமக்கு சக்தி இல்லாததால் தான் தாழ்ந்த நிலைநளாகிய பரோபகாரம் புரிதல் முதலியவற்றைப் பின் பற்றி இருப்பதாகத் தெரிந்துகொண்டு அடக்கத்துடன் இருப்பாராகில் நமது மதமும் நாடும் விருத்தி அடையும் என்பதற்கு ஸந்தேகம் இல்லை. இதுவே நாம் உபந்யாஸர்களுக்கும் கிரஹஸ்தர்களுக்கும் இந்த ஸந்தர்ப்பத்தில் கொடுக்கும் எச்சரிக்கை.

---

## "விவேக போதினி"

### ஓர் முக்கிய அபிப்பிராயம்.

சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-௱-௱-ஸ்ரீ வே. சாமிநாதய்யரவர்கள்:—"சிலமாதங்களாக வெளிவரும் விவேகபோதினி என்னும் பத்திரிகையிற் சில பகுதிகளைப் படித்துப்பார்த்தேன். மதஸம்பந்தமான விஷயங்களும், நீதிகளைக் கற்பிக்கும் சிறு கதைகளும், புதிய நாடகங்களும் சில மொழிபெயர்ப்புக்களும், தற்காலத்திற்கேற்ற நாகரீக விஷயங்களும் இப்பத்திரிகையில் மிக எளியநடையில் எழுதப்பெற்றிருக்கின்றன; சிறுவர்களும் பெண்பாலாரும் இதனால், பல விஷயங்களையும் வருத்தமின்றித் தெரிந்துகொள்ளலாம்.

தமிழ்ப் பாஷாபிமானிகளாகிய பிரபுக்கள் இதனை ஆதரித்து, இதைப் பிரசுரஞ்செய்துவரும் ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனியாருக்கு ஊக்கம் அளிப்பார்களென்று நம்புகிறேன்."

# விவேக போதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி 1 } 1909-ஆ ஜனவரி மீ { பகுதி 7

## ஸநாதனதர்மத்தைப்பற்றிய
## லௌகீக வைதீக அபிப்பிராயங்கள்
## HISTORICAL AND ORTHODOX VIEWS ABOUT SANATHANA DHARMA

முன்சொன்ன மானியர் வில்லியம்ஸ் என்பவர் நமது மதத்தைப்பற்றி எழுதும்பொழுது, "எல்லா மதங்களிலிருக்கும் ஒவ்வொரு முக்கியமான விஷயங்களையும் ஸநாதனதர்ம மானது தன்னுட் சேர்த்துக்கொண்டது" என்று சொல்லி இருக்கிறார். இதைப்பார்த்தால் நமது மதம் தன்னிடத்தில் இல்லாமல் ஸகல மதங்களிலிருந்தும் புதிதாக விஷயங்களைக் கடன் வாங்கிக்கொண்டது என்பதாகத் தோற்றும். வேதாகம புராணங்களை நன்றாக வாசித்தும், இப்பொழுது நமது மதம் எங்கும் பரவி விருத்திக்கு வருவதை நோக்கியும் உள்ள, ஒருவனுக்கு, வேறு எவ்விதமான கலைஞானங்களின் விஷயம் எப்படி இருந்தபோதிலும், மத விஷயத்தில் காணப்படும் பேதங்கள் எல்லாம் நமது மதத்தில் தாமாகவே அப்போதைக்கப்போது முன் காலங்களிலேயே வெளிவந்தவை என்பது நன்றாக விளங்கும். இங்கு சொல்ல வேண்டிய விஷயம் என்னவென்றால், நமது மதத்தைப்பற்றி இரண்டுவித அபிப்பிராயங்கள் இருக்கின்றன. அவையாவன (1) இப்பொழுது நாகரீகமடைந்த துரைத்தனத்தார் வைத்துக்கொண்டிருக்கும் அபிப்பிராயமாகிய லௌகீக அபிப்பிராயம்; (2) நமது மதத்தைப் பின்பற்றும் மஹா பண்டிதர்கள் அபிப்பிராயமாகிய வைதீக அபிப்பிராயம், ஆகிய இவைகளே. இவைகளை முறையே நன்றாக விவரிப்போம்.

லௌகீக அபிப்பிராயத்தின் கொள்கையாவது முதலில் எல்லாம் தாழ்ந்தநிலையில் (அறியாமையில்) இருந்தே வரவர விருத்தியடைந்து உயர்ந்தநிலைக்கு வந்திருக்கவேண்டும் என்பதே. உலகத்தில் காணப்படுகிற விசித்திர நிலைகளிலிருந்து இந்த மாதிரியாய் துரைத்தனத்தார் ஊகித்து, இந்தக்கொள்கையை ஸநாதனதர்ம விஷயங்களுடன் பொருத்திப் பார்த்தார்கள். உடனே அவர்கள் நமதுமதவிஷயங்களைப்பற்றி பின்வருமாறு ஸித்தாந்தம் செய்தார்கள். "பிரபஞ்சத்திலிருக்கும் சில தோற்றம் பயங்கரமாக வாவது, உபயோககரமாகவாவது இருப்பதால், அவைகளையே கடவுளென ஹிந்துக்கள் முதலில் ஆராதித்தார்கள் என்றும், அவர்களில் சிற்சிலர் தமக்கு போஷணை முதலியவைகள் செய்து தமக்கு உபகாரமாக இருந்து இறந்து

போன மூதாதைகளைத் தெய்வமெனக் கொண்டாடி வந்தார்கள் என்றும், பின்பு தாங்கள் சுகமடைய யாகம் முதலியகர்மங்களை இந்தக் கடவுள் உத்தேசமாகச் செய்தார்கள் என்றும், பின் இந்நிலேயே பதிந்து புத்திகெட்டிருக்கும் பொழுது, புத்தர் வந்து ஜீவகாருண்யம் முக்கியமானதென்று உபதேசித்தார் என்றும், பின் ஸநாதனதர்மம் இதைத் தன்னுள் அடக்கிக் கொண்டு புத்தமதத்தை நிர்மூலமாக்கி விட்டதென்றும், அதன்பின்பு விக்கிரஹ ஆராதனையில் ஹிந்துக்கள் அழுந்தி கெட்டுப்போகும் தருணத்தில் மகம்மதிய மதத்தின் சிறப்பாலும் கிறிஸ்தவமதத்தின் சிறப்பாலும் அதன் உபயோகமற்ற நிலையை அறிந்து தெளிந்து மேலான மதபாகங்களை விருத்திசெய்து இம்மதங்களையும் உள்ளடக்கிக் கொண்டார்கள் என்றும், இதுபோல வரவர இதரமதங்களுடைய கொள்கைகளை உள்ளடக்கி மனிதர்களாலேயே ஸநாதனதர்மம் சிறந்ததாயிற்று" என்றும் இவர்கள் சொல்லுகிறார்கள்.

இவ்வாறு வெளிஜாதியார் நமது மதத்தை தணிக்க எண்ணுவதற்கு, நமது மதத்தில் காணப்படும் விழுங்கும் சக்தியே காரணம். சிலர் இந்த சக்தியின் உண்மையான நிலையை அறியாது முற்கூறியவாறு சொல்லியிருக்கலாம். வேறு சிலர், நமது மதத்தின் மேன்மையைக் காணப்பொறுக்காது இவ்வாறு கூறியிருக்கலாம். நமதுமதம் இவ்வாறு மற்றையமதங்களை விழுங்கிவிடுகின்றது என்பது நாம் முன் ஸஞ்சிகையில் எழுதியிருக்கும் ஸநாதன தர்மத்தின் சிறப்பு என்ற நியாஸத்தை வாசித்தவர்களுக்குத் தெரிந்திருக்கும். இந்த உண்மை உணராது நமது மதத்தினுடைய கௌரவத்தைக் குறைக்க வேண்டுமென்றே இதர தேசத்தார் அநேகர்முயல்கிறார்கள். அவர்கள் எழுதும் புஸ்தகங்களி லிருப்பவைகளை நாம், நிரவிசாரியாமல், வேதவாக்கியமாக உடனே நம்பி விடக்கூடாது. அவர்கள் தமது புத்தகங்களில், வேதம், உபநிஷத்து, இராமாயணம் மஹாபாரதம் முதலிய சிறந்த கிரந்தங்கள் கொஞ்ச நாள்களுக்கு முன் கி. பி. இல்தான் எழுதி இருக்கவேண்டும் என்றும் அவைகளில் மிகத் தந்திரமுள்ள பிராமணர்கள் கிறிஸ்து மதம் முதலிய இதர மதக்கொள்களை அடக்கி, அவைகள் தமது மதத்தில் வெகு காலமாய் இருப்பனவாகத் தோன்றும்படி செய்து விட்டார்கள் என்றும் வாய்கூசாது சொல்லுகிறார்கள். இதுவே லௌகிகக்கொள்கை.

வைதீகக்கொள்கையிலோ லௌகிகர் சொல்லுகிற முதல் என்பதேயில்லை. எவ்வளவுகாலத்திற்கு முன்பு பார்த்தாலும், நல்லவர்களும் கெட்டவர்களும், புல்லறிவாளரும் பேறறிவாளரும் இருந்தே இருக்கிறார்கள். இராமர், பீஷ்மர், தருமபுத்திரர் முதலிய மஹான்கள் இருந்தகாலத்தும் இராவணன், துரியோதனன் கர்ணன் முதலான துர்புத்திகளும் இருந்தே இருக்கிறார்கள். ஆதலால் லௌகிகர் போல் மதவிஷயங்களில் தாழ்ந்த பாகங்கள் முன்னுலேயும் வரவர மேலான பாகங்கள் பின்னுலேயும் வெளிவந்தனவென்று நமது பண்டிதர்கள் அங்கீகரிக்க இடமே இல்லை. ஆதலால் அவர்கள், இக்கல்பத்தின் சிருஷ்டி ஆரம்பத்தில், கடவுளிடத்து, விதையுள் மரம்போல், அடங்கியிருந்த வேதம் தனது விசித்திர பாகங்களோடு வெளிவந்ததென்றும், வேதத்திலடங்கிய அநேக மதங்கள் வெளிவருவதற்குக்காரணம், தாம் விருத்தியடையவேண்டும் என்று பலரும் தம் மனோதர்மத்திற்கு ஏற்பப் பாடுபட்டதே என்றும், ஆதலால் ஸநாதனதர்மத்தின் பாகங்களில் தாழ்ந்ததுதான் முதலில் வெளிவந்தது, பின்பு தான் மேலானபாகம் வெளிவந்தது என்று சொல்ல இடமில்லை என்றும், சிறந்தபாகங்களை ஜனங்கள் மறந்த காலத்தில் ஞாபகப்படுத்துவதற்காகக் கடவுளே அவதாரம் செய்கிறார் என்றும், அவர்கள் ஸித்தாந்தம் செய்கிறார்கள். ஆகையால் புதிதாய் புத்தர் போன்ற யார் வந்தாலும் சரி, வேதத்திலடங்கிய விஷயங்களைவிடப் புதிய மதவிஷயங்களைச் சொல்லவே முடியாதென்பது அவரது கொள்கை. ஆதலால் ஸநாதன தர்மம் அநாதியாக இப்பொழுதிருக்கிறது போல் இருந்ததென்றும், அதில் அநேக ரிஷிகள் அநேகபாகங்களை வற்புறுத்தினார்களே ஒழிய ஒன்றை

யும் சிருஷ்டித்துவிடவில்லை என்றும், இனிமேல் மதவிஷயத்தில் நமது மதத்தில் இல்லாத புதிய நிலையை ஒருவராலும் சிருஷ்டிக்க முடியாதென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள்.

இந்த மாதிரி சொல்வதில், லௌகீகர்கள் நமதுவேதம் முதலியவைகள் சுமார் 3000 வருஷங்களுக்கு முன்னால்தான் எழுதப்பட்டிருக்கவேண்டுமென்று மூடத்தனமாய் வற்புறுத்துவது போல், இக்காலத்தில் காணப்படுகின்ற பௌதிக விஷயங்களான தந்தி, ரயில், டிராம் வண்டி ஆகிய இவைகளும் இவைபோன்றவையும் முன்பே இருந்தனவாக வேதத்தில் சொல்லி இருக்கிறதென்றும் அதைப்பார்த்து இக்காலத்தவர்கள் அவைகளை உண்டாக்கினார்கள் என்றும் சில பண்டிதர்கள் மனம்போன போக்கே சொல்லிவிடுகிறார்கள்.

இப்பொழுது காட்டிய குற்றங்களுக்கு உட்படாமல் நமது மதத்தை நாம் தெளிவாய் அறியவேண்டும். எப்படியெனில் வேதம் வெளியானபின்பு அவரவர் தத்தமக்குத்தகுந்த பாகங்களை எடுத்துக்கொண்டு அநுஷ்டிக்க ஆரம்பித்தார்கள். அவ்வேதமும் அநுஷ்டானமும் சேர்ந்து ஸநாதன தர்மமாய் விட்டன. இந்த மதம் லௌகீகர் சொல்லுவதுபோல் கொஞ்ச காலத்திற்கு முன் உண்டானதல்ல. அப்படி ஆயினும், துரைத்தனத்தார் சரித்திரங்கள் சொல்ல ஆரம்பிக்கும் காலத்திற்கு, அநேக காலம் முன்புதான் இந்த மதம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் சில பண்டிதர்கள் பிரகிருதி விஷயங்கள் உட்பட வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன, என்பது அவ்வளவு பொருந்தாது. மதவிஷயங்கள் யாவும்முன்னமே வேதத்தில் இருந்தன என்பது பொருந்தும். ஆதலால் நாம் ஸநாதன தர்மத்தை அல்லது இதர மதத்தை நோக்குங் கால், அநாவசியமாய் வேதம் முதலிய மத புஸ்தகங்கள் எப்பொழுது எழுதப்பட்டன வென்றும், எதைப்பார்த்து உண்டாக்கப்பட்டன வென்றும் வீண் விசாரணை செய்யாமல் அவைகளிலடங்கிய பாகங்களுள் எது நமக்கு ஒத்ததோ அதைப் பின்பற்றி மற்றைப்பாகங்களைப் பின் பற்றுவோரை நிந்தியாது, நமது கர்மமே கண்ணாக இருந்து மேலான மோக்ஷ பதவியை அடைய முயலவேண்டும்.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன், B. A., L. T.

## ஸ்ரீமான் பி. ஆர். ராஜம் அய்யர் அவர்கள்

## B. R. RAJAM AIYAR AVARGAL. B. A.



ஸ்ரீமத்ஸத்குரு

சாந்தானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள்

இராஜம் அய்யர் குரு

சுருதிக் கர்த்தம் பொருளென்னும்
அவையும் சொல்லாய் முடிந்திடுமேல்
சுருதிக் கர்த்தம் பொருளாகில்
தூயகுருவும் வேண்டுவதில்
சுருதிக் கர்த்தம் பொருளல்ல
என்று துணிந்து மானுநீ
சுருதி சொல்லும் பொருளதனைச்
சுட்டிக் காட்ட வறிவாயே.
—சிதம்பரஸ்வாமிகள்

## II. உபதேசம் பெற்ற சருக்கம்

### THE INITIATION

மனிதன், அவன் ஏற்றத்தாழ்வு என்ற வியாயம் பிரம்ம வாதினியில் வெளியானதும் அதை அநேகர் வாசித்து ஆனந்தித்தனர். அக்காலத்தில் மைலாப்பூரில் மதவிஷயங்களில் மிகுந்த பிரீதி இருந்த பிரபுக்கள் சிலர் இருந்தனர்.

நதுவான பிராம்மணப் பெண்களின் விவாகம் சாஸ்திரீயமானது —இப்புத்தகம் நல்ல காகிதத்தில்அழகாக மெஸர்ஸ் ஜி. எ. நடேசன் அண்டு கம்பெனியாரால் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றது. இதைத்தவிர நம்மால் இப் புத்தகத்தைச் சிறப்பித்துக் கூறமுடியாது. இதில் அடங்கியிருக்கும் விஷயம் எல்லாராலும் அங்கீகரிக்கக்கூடிய விஷயம் அல்ல. இப்புத்தகம் நதுவான பிராம்மணப் பெண்களின் விவாஹம் அசாஸ்திரீயமானது என்ற இக்காலத்தில் ஸ்தாபிக்கவேண்டிய முக்கிய விஷயத்தை ஐயம்திரிபர ஸ்தாபிக்க தூண்டுகோலாதலால் இது நோகநன்மைபுரியாவிடினும் மாருக நாளடைவில் நன்மை புரியும் என்று நாம் நம்புகிறோம். ஆதலால் தர்மசாஸ்திரஞானம் உடைய ஒவ்வொருபண்டிதரும் இப்புத்தகத்தை அவசியம் வாங்கி வாசிக்கவேண்டியது. அவர்களைத்தவிர மற்றைய எத்திறத்தாருக்கும் இவ்விஷயம் ஆனந்தத்தை விளைவிக்கும் என்று எமக்குத்தோற்றவில்லை.

---

# விவேக போதினி.

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி 1 } 1909-ளு பிப்ரவரி மீ { பகுதி 8

## ஸநாதனதர்மத்தின் கொள்கைகள்

THE TENETS OF SANATHANA DHARMA

இதுவரையில் நமது மதத்தின் பிரிவுகள், சிறப்பு, நீடித்து நிற்கும் தன்மை முதலிய பொது விஷயங்களைப்பற்றிப் பேசியாய்விட்டது. இவைகளிலிருந்து நமது மதம் ஒரு சிறு மதம் அல்ல, அது உலகத்தில் காணப்படும் ஸகலமதங்களின் ஸாரபாகங்களை தன்னுள் அடக்கி உள்ளது என்பதும், நமது மதத்தை உள்ளவா றறிந்தால் உலகில் உள்ள ஸகல மதங்களையும் உள்ளபடி அறிந்ததாகும் என்பதும் நன்கு வெளியாகும். இப்படி இருப்பினும் இந்த மதக்களஞ்சியத்தை ஸநாதனதர்மம் என்று தனிப்பெயரிட்டு உலகத்திலிருக்கும் மற்றை மதங்களிலிருந்து வேறுபடுத்திக் கூற காரணம் யாது என்ற சங்கை பிறக்கலாம். இதற்கு ஸநாதனதர்மத்தின் சிறப்பு என்ற வியாஸத்தில் வேதாந்தத்தின் ஒழுங்குபடுத்தும் சக்தியைப்பற்றிக் கூறுங்கால் ஒருவாறு விடையளிக்கப்பட்டிருக்கிறது. நமது மதத்தை தனி மதம் என்று சொல்லுவதற்கு ஆதாரமாகியும், பிறமதங்களில் விசதமாகக் காணப்படாதனவாகியும், உள்ள சிறப்புக் கொள்கைகளை இங்கு எடுத்துச்சுருக்கமாக எழுதிப்பின்னர் வேதாந்த சாஸ்திரத்தில் ஸகல மதங்களுக்கும் பொதுவான கொள்கைகள் என்று தேடி எடுக்கப்பட்டனவான விஷயங்களைத் தொகுத்து எழுதுவோம்.

ஸநாதனதர்மத்திற்கே சிறப்பாகக் காணப்படும் கொள்கைகள் பின்வருவன:—

1. ஸநாதனதர்மத்தைப் பின்பற்றுவோர் யாவரும் வேதம் ஈசுவரனிடத்திலிருந்து வந்ததென்றும், மனிதனால் உண்டாக்கப்பட்டதல்லவென்றும், நம்புகிறார்கள். மனிதனுடைய நடவடிக்கைகளைப்பற்றியாவது, அவனுக்கும் ஈசுவரனுக்கும் உள்ள ஸம்பந்தத்தைப்பற்றியாவது ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றியாவது, நன்றாக அறியவேண்டுமானால் வேதத்தின் மூலமாகத்தான் அறியவேண்டும் வேதத்திற்கு அடுத்தபடியில் ஸ்மிருதி இருக்கிறது, கடைசியாய்த்தான் யுக்தி மூலமாய் அறியவேண்டும். வேதங்கள் ஈசுவரனிடமிருந்து வந்தன வென்றும், அவைகளைவிட உத்தமமானவை வேறென்றும் இல்லை என்றும், நம்பாதவன் இம் மதத்தைப் பின்பற்றுபவனல்ல,

2. இதர மதங்கள், சிருஷ்டி கடவுளால் சூனியத்திலிருந்து திடீரென்று உண்டாக்கப்பட்ட செய்கை என்று சொல்லுகின்றன. நமது மதம், அவ்வாறன்றி கடவுள் தம்மிடத்து விதையுள் மரம்போல் ஸூக்ஷ்மமாய் அடங்கி மறைந்துகிடக்கும் பிரபஞ்சத்தைப் பலவித மான ஸ்தூல ரூபமாய்த் தோன்றும்படி செய்வதே சிருஷ்டி, என்று சொல்லுகிறது.

3. நமது மதம் சாதுர் வர்ணங்களும் ஈசுவரனிடத்திருந்து வந்தனவே ஒழிய, மனிதனால் உண்டாக்கப்பட்டனவல்ல என்று சொல்லுகிறது.

4. கர்மவிதி என்றஒழுங்கை ஒப்புக்கொண்டு அதனால் முக்கியமாய் மனிதருள் தோன்றும்படியான, உயர்வு, தாழ்வு, ஸுக துக்கம்ஆகிய இவைபோன்ற துவந்துவங்களுள் காணப்படும் அனந்தபேதங்களுக்கு, யுக்திக்குப் பொருந்தும்படி நமது மதம் காரணமுரைக்கின்றது. நாம் செய்யும் கர்மம் ஒவ்வொன்றும், எண்ணும் எண்ணம் ஒவ்வொன்றும், இந்தப்பிறப்பிலாவது வேறு பிறப்பிலாவது அதற்குத் தகுந்த பலனைக் கொடுக்காமல் போகவேமாட்டாது என்பது தான் கர்மவிதியின் ஸ்வரூபம்.

5. கர்மங்கள் பந்தப்படுத்தும் ஸ்வபாவத்தை உடையன என்று ஒப்புக்கொண்டால் மறுபிறப்பு உண்டென்று ஒப்புக்கொள்ளவேண்டிவருகிறது. நமது ஆத்மா சுத்தமாய் மேலான நிலையை அடைவதற்குமுன் அநேக தேகம் தாங்கி அநேகம் தரம் பிறந்து இறந்து உலகில் அடிபடவேண்டுமென்பது மறுபிறப்பு உண்டு என்ற இந்த விதியின் ஸாரம். இந்த விதி கொஞ்சம் மாறுபட்ட ரூபத்தோடு புத்தமதத்திலும் சமணமதத்திலும் காணப்படுகிறது. ஆயினும் முன்சொன்ன மதங்கள் நமது மதத்தினிடத்திலிருந்து உண்டானவைகளாகையினாலேதான் ஸநாதனதர்மத்திற்கே இது சிறப்பாயுள்ளதென்று சொல்லப்பட்டது.

6. நமது மதம் பாஹ்ய சுத்தியானது மனதின் சுத்திக்குக்கொஞ்சம் ஸஹாயம் என்றுபோதித்து, ஒருவன் உயிரோ டிருக்கும்வரையில் அவன் பாஹ்யமாய் அந்த சுத்திக்காகச் செய்ய வேண்டிய காரியங்களையும், அவன் இறந்த பின்பு அவன் ஆத்மா தடையில்லாது மேன்மை யடைவதற்காக அவன் உறவினர் செய்ய வேண்டிய பாஹ்யக்கிரியைகளையும், ஏற்படுத்தியிருக்கிறது. இக்கிரியைகளால் நமது மதம் தேகத்தை நிர்ப்பந்தப்படுத்தி ஒழுங்காக்கி மனது தடையில்லாமல் விருத்தியடைவதற்கு இடமுண்டாக்குகிறது. சிலமதங்களில் இதற்கு விரோதமான வழியே காணப்படுகின்றது.

7. திரிசரீரம்:—மனிதனுடைய ஸ்தூலதேகத்துள் வரவர அதிக நுட்பமான பஞ்சபூதஅணுக்களாலாகிய ஸூக்ஷ்ம சரீரமும் அதிஸூக்ஷ்ம சரீரமும் இருக்கின்றன வென்றும், அவைகள் எல்லாவற்றிலும் ஜீவாத்மா பரிணமித்து அவைகளை அடக்கியாளுகிறது என்றும், 'பிண்டத்திருப்பதுபோல் அண்டத்து' என்றபடி தோற்றும் ஸ்தூலப் பிரபஞ்சத்திலும் முன் சொன்னதுபோல் ஸூக்ஷ்மபாகங்கள் இருக்கின்றன வென்றும், இவைகள் யாவும் பிரளயகாலத்தில் (உலகம் தூங்குகிறது என்று சொல்லும்படியான நிலையில்) அதிஸூக்ஷ்மமாகக் கடவுளிடத்து லயித்து இருக்கின்றனவென்றும், நமது மதம் எடுத்துரைக்கிறது.

8. தேவாஸுரர்:—இப்பொழுது இருக்கும் மனிதனே ஈசுவர சிருஷ்டியில் மேலான சிருஷ்டி என்று இம்மதம் சொல்லாமல், மனிதனை விட வரிசைக் கிரமமாய் நல்ல குணத்திலோ கெட்ட குணத்திலோ மேற்பட்டவர்கள் இருக்கிறார்கள் அவர் முறையே, ஸுரர், தேவர் அல்லது பிரகாசிப்பவர் என்றும், அஸுரர், ராக்ஷஸர் அல்லது இருளடைந்தவர் என்றும், பெயர் உடையவர்கள் என்று சொல்லுகிறது.

9. தேவர்களுக்குள் மேலானவர்கள் திரிமூர்த்திகளே. அவர்கள் ரஜோகுணப்பிரதானரான

பிரம்மா, ஸத்வகுணப்பிரதானரான விஷ்ணு, தமோகுணப்பிரதானரான ருத்திரர், ஆகிய இவர்களே. இவர்களுக்கு முறையே உள்ள தொழில் ஆக்கலும், அளித்தலும், அழித்தலு மாம்.

10. கீழ்நிலையி லிருப்பவர்கள் மேல்நிலைக்கு எளிதில் வருவதற்கு நமது மதம் விக்கிரஹ ஆராதனையை விதிக்கிறது. ஆனால் இதை எல்லாரும் அவசியம் பின்பற்றவேண்டுமென்பது நமது மதத்தின் கருத்தன்று.

11. ஆத்மாவின் நிலயம்:—புல், பூண்டு, மிருகம், மனிதர் முதலிய ஸ்தாவர ஜங்கமங்கள் எல்லாவற்றினும் ஆத்மா இருக்கிறது, அது அவைகளின் வழியாய் வரிசையாய் மேல்மேல் விருத்தியடைந்து மோக்ஷநிலையை அடைகிறது என்பது நமது மதத்தின் கொள்கை. ஆகையால் ஜீவகாருண்யம், கொன்றுதின்காமை ஆகிய நல்லொழுக்கங்கள் நமது மதத்தவரிடத்து பெரும்பாலும் காணப்படுகின்றன.

12. நமது மதத்தின்படி ஒருவன் எவ்வளவு கெட்டவனாய் இருந்தபோதிலும் அவனுக்கும் நித்ய நரகமென்பது கிடையாது. எல்லோருக்கும் காலக்கிரமத்தில் மோக்ஷம் உண்டென்பதே நமது மதத்தின் கொள்கை. புண்ய பாபங்களின் நிலைமைப்படி, ஒருவனுக்கு சீக்கிரமாயாவது தாமதமாயாவது மோக்ஷம் கிடைக்கும் என்பது நிச்சயம்.

13. அவதாரங்கள்:—எப்பொழுது தர்மமெல்லாம் குறைந்து அதர்மம் மேலிட்டுவிடுகிறதோ அப்பொழுது துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்தின் பொருட்டும், தர்மத்தை நிலைநிறுத்துதற் பொருட்டும் கடவுள் ஸ்வய இச்சையினாலே அவதரிக்கிறார் என்று நமது மதம் உரைக்கின்றது.

14. ஒரு மதஸ்தர் தவிர மற்றைய ஹிந்துக்கள் எல்லோரும் ஜகத், ஜீவன், ஈசன் ஆகிய இவைகள் அநாதியாய் எக்காலத்திலும் இருப்பவைகள் என்று நம்புகிறார்கள். ஒரு மதஸ்தர் மாத்திரம் வியவஹார நிசையில் இவைகளை எல்லாம் ஒப்புக்கொண்டு உண்மைநிலையில் கடவுளைத்தவிர வேறொன்றுமில்லை கடவுள் ஒருவரே உண்மையில் இருப்பவர், ஜீவன் என்றும், ஜகத் என்றும் தோன்றுவனவெல்லாம் பிரமமே ஒழிய உண்மையிலிருப்பவைகளல்ல என்றும் ஸித்தாந்தப்படுத்துகிறார்கள்.

15. தனது கொள்கைகளை நம்பினால் மாத்திரந்தான் மோக்ஷமென்று ஸனாதனதர்மம் வற்புறுத்தவில்லை. வேதங்களும் சாஸ்திரங்களும் அனந்தம், ஆகையால் அவற்றுள் தனக்குத்தகுந்த எந்த வழியின் மூலமாயும் மனிதன் மோக்ஷத்தையடையலாம் என்று நமதுமதம் எடுத்துரைக்கிறது. இதனால் நமது மதத்தில் மதத்துவேஷம் என்பது இருக்க இடமே இல்லை. இந்த உண்மையைக் கவனியாமல் மறந்தகாலத்தில் தான் மதத்துவேஷம் என்பது நம்மை வந்தடையும். மேலும் இதனால், ஒருவன் தனது மதத்தின் விஷயங்கள் ஒன்றும் தெரியாதிருக்குங்கால் திடீரென்று வேறு மதத்துக்குப் போவது, அநாவசியமென்பதும் பாபம் என்பதும் எளிதில் விளங்கும்.

சிறப்புக்கொள்கைகள் இவ்வாறாக, வேதாந்தத்தில் ஸர்வதஸம்மதமான கொள்கைகளாக ஆங்காங்கு காணப்படுபவைகளை இப்பொழுது எடுத்துத் தொகுத்துக் கூறுவோம். இவைகள் முன்கூறியுள்ள சிறப்புக்கொள்கைகளின் ஸாரங்கள் என்பது நன்றாக விளங்கும். பொதுக் கொள்கைகள் பின்வருவன:—

1. தேகத்துக்கு அப்பாற் பட்டதாயும், நித்தியமாயுமுள்ள ஆத்மா ஒன்று உண்டு.

2. ஸம்ஸார துக்கத்தினின்று நீக்கி, உயர்ந்தஞானத்தையும் பேரின்பத்தையு மளிக்கும் கிருபாநிதியாகிய கடவுள் ஒருவர் உண்டு.

3. பாப கர்மங்களைவிலக்கி, அரிய புண்ணியங்களைச் செய்தலே மேன்மை அடைவதற்குத் தகுந்தவழி.

4. இவ்வுலகத்திலுள்ள துக்கத்துக் கெல்லாம் ஆதிகாரணம் தேகாபிமானமும் ஸ்வயநயம் பாராட்டலும் ஆகிய இவைகளே யாதலால் இவைகளை வேரறுத்து ஸுகமடைவதே சிறந்த புருஷார்த்தம்.

5. அநித்தியமான தேகத்தின் அபிமானத்தை வெறுத்து அரியபதவியை அடைந்த மஹான்களை அறிந்தோ அறியாமலோ எல்லோரும் வணங்கி வழிபடவேண்டும்.

6. உத்தமமான பதவியொன்றுண்டு, அதை அடைந்தபின்னர் அடையவேண்டியதொன்று மில்லை.

இக்கொள்கைகளை எல்லோரும் தடையின்றி அங்கீகரிப்பார்கள்.

இவைகளே நமது மதத்தினுள் காணப்படும் சில கொள்கைகள். இம்மாதிரியான சிறப்பையும், விரிவையும், பொதுத்தன்மையையும், உடைய நமது மதத்தை வினயத்தோடும், அன்போடும் நோக்கவேண்டும் என்பதை உணராதவராய், நம் மதத்து உட்பட்டவர்களும் புறப்பட்டவர்களுமாகிய அறைகுறையாய் அறிந்தசிலர் ஏன் அஸந்தர்ப்பமாகவும், கலஹஹேதுவாகவும் குற்றங்கூறவேண்டும்? நண்பர்களே! இவ்வாறு விசித்திரமாயும், பலவித்மான பிரிவுகளால், உலகத்துள்ள மதங்களை எல்லாம் தன்னுள்ளடக்கும் திறனுடையதாயும், அவ்வுட் பிரிவுகள் நிலைபெற்றுப் பின்பற்றுவோர் பலருக்கும் உபயோகமாய் இருப்பதற்காக, வேண்டிய நுட்பமான யுக்திகளையும் வாதரூபமான சாஸ்திரங்களையும் உடையதாயும், உள்ள ஸனாதனதர்மமென்ற மதம், உம்மிடத்திருக்க, ஏன் புத்திஹீனமாய், வீணாய் வெளியில் அலைந்து புதியமதங்களைத் தேடுகிறீர்கள்? உங்களைப் பார்த்தால் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைபவர்போ லிருக்கிறதே! இவ்வளவு அநுகூலமான மதத்தைவிட்டு வேறுமதத்துட்சென்றால், உங்களுக்குத் தகுந்த பாகம் அங்கு அகப்படாமல், அநியாயமாய்க் கஷ்டப் படுவீர்கள். ஆகையால் நமது மதத்தை நன்றாய் அறிந்து தெளிந்து உமக்குத் தகுந்த பாகத்தைப் பின்பற்றி, மற்றைய பாகங்களைப் பின்பற்றுபவரைக் கண்டு இகழாது உமது கருமத்திலே கண்ணாயிருந்து, காலக்கிரமத்தில் பரமபதமாகிய முத்திப்பேற்றை எளிதில் அடைவீர்களாக.

## ஸ்ரீமான் பி. ஆர். ராஜம் அய்யர் அவர்கள்

## B. R. RAJAM IYER AVERGAL B. A.




* ஆன்றோ ரிருப்பது ப்ரஸித்தமுற லரிதவர்
அபூர்வமாக் கண்டோமெனும்
அகமுறார் குருவினருள் தெரிவிப்பதாநம்பி
அறைவரவர் புகல் நூலெல்லாம்
வான்றோயு மெய்ப்பொருள வாமவற் றுக்கியோன்
வணைபெய ரிராதவர்க்கு
வரைகர்மம் நோக்கன்று கடவுளிட மீடுபடல்
மற்றதாக் கினுமாக்குவர்
ஏன்றே யதைச் செயினும் ஈசன்வழி பாடென்னும்
எண்ணமொடு செயவருலகுக்
கிவ்வுதவி செயகுது மெனுஞ் செருக் கொடு
செயார் இதனி னிவை போலுமுதவி
சான்றேய தொன்றுமிலை உதவி செய
பேராவல் சார்ந்தவர்க ளாலுமிங்ஙன்
தட்டற்ற வுதவிசெய வொண்ணு திவாறு
மறை தகையர்மெய யுதவியாரே.

இ. வை. அனந்தராம அய்யர்

* இரதிலைப்பார்க்க.

## III. பிரபுத்தபாரதச் சருக்கம்
### THE PRABUDDHA BHARATA

உபதேசம் பெற்றதுமுதல் கொஞ்சகாலமாக ராஜம்அய்யர் ஸ்வாமிகளிடம்சென்றுஅரிய உண்மைகளை சிரவணம் செய்து பின்பு மனன நிதித்யாஸனுதிகள் மூலமாக நிஷ்டையில்தேர்ச்சிஅடைந்துகொண்டு வந்தார். மயிலாப்பூர் பிரபுக்களும் ராஜம் அய்யரும் சேர்ந்து மத விஷயங்களில் இவ்வாறு பாடுபட்டு வரும்நாளில் பிரபுக்களுக்கு ஓர்வித மனக்கிளர்ச்சி உண்டாயிற்று. ஸ்வாமிகள் வாரம் இரண்டுமுறை செய்யும் அரிய உபந்நியாஸ விஷயங்கள் கேட்டது கேட்டபடி இருந்தனவே ஒழியவேறில்லை. அவைகள் நீடித்து நிற்கும்படி எழுதப்பட்டால் உபந்யாஸம் கேட்டவர்களுக்கு ஞாபகக்குறியாகவும் மற்றவர்களுக்கு மிகுந்த உபகாரமாகவும் இருக்கும் என்று முன்னமேயே அவர்களுக்குத் தோன்றிக்கொண்டிருந்தது. மேலும்தமிழ் ஆங்கலம்முதலிய பாஷைகளில் விசேஷத் தேர்ச்சியும்,அழகிய வியாஸங்கள் எழுதுவதில் விசேஷசக்தியும், மதவிஷயங்களில் விசேஷப்பற்றும் வாய்ந்த ராஜம் அய்யர்அவர்கள் ஸ்வாமிகளுக்கு சிஷ்யராக ஏற்பட்டதும் முற்கூறிய எண்ணம் பிரபுக்களுக்கு ஓர் மனக்கிளர்ச்சியாக எழ, அவர்களுக்கு ராஜம் அய்யரை பத்திராதிபராக வைத்துக்கொண்டு. ஓர் மாதாந்த பத்திரிகை ஏற்படுத்தி, அதில் எளிய ஆங்கிலநடையில் நமது பாண்டித்யசாலையில் படிக்கும் சிறுவர்கள் எளிதில் உணரும்வண்ணம் ஸ்ரீமத் சாந்தானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் அழகாக வெளியிட்டுவரும் மத உண்மைகளை எழுதி பிரசுரம் செய்யவேண்டும் என்ற பரபரப்பு உண்டாயிற்று. அந்த ஸமயத்தில் அமெரிக்காவிலிருந்து திக்விஜயம் செய்து நம் மதமாம் ஸனுதனதர்மத்தை அங்கு நிலைநிறுத்தி அரிய விஷயங்களைச் செய்த விவேகானந்த ஸ்வாமிகள்வெகு கோலஹலமாக மரியாதைகள் செய்யப்பட்டுபட்டணம் வந்துசேர்ந்தார்.அமெரிக்காவிற்கு போகும்முன்னரே விவேகானந்த ஸ்வாமிகளுக்கும் பிரபுக்களுக்கும் நெருங்கிய பழக்கம் இருந்தது. ஆதலால் பிரபுக்கள் விவேகானந்தஸ்வாமிகளை அணுகி தாம் ஏற்படுத்தி நடத்தப்போகும்பத்திரிகையின் நோக்கம் முதலியவைகளைப் பற்றி விஸ்தாரமாகப்பேசி, அதற்கு அதிபராக இருந்து அதை நடத்தப்போகிற ராஜம் அய்யரையும் ஸ்வாமிகளின்முன் கொண்டு விட்டார்கள்.

விவேகானந்த ஸ்வாமிகளுக்கும் ராஜம் அய்யருக்கும் கொஞ்சநாழிகை நடந்த ஸம்பாஷணையில் ஸ்வாமிகளுக்கு இவருடைய ஆழ்ந்த அறிவு, நிலைபெற்ற மனஉருக்கம், அநுபூதி முதலிய யோக்யதாபாகங்கள் தெரியவந்தன. மதவிஷய பத்திரிகைகள் அநேகம் பரதகண்டத்தில் ஏற்பட்டு ஸனுதனதர்ம விஷயஞானத்தை அமெரிக்கா முதலிய வெளிதேசங்களில் பரவச்செய்து அதனுல் தாம் செய்த திக்விஜயம் நிலைபெறவேண்டும் என்பது ஸ்வாமிகள் மனதில் ஸதா இருந்த எண்ணம். இதனுலேயே அமெரிக்காபோவதன் முன்னர் பிரம்ம வாதினி என்ற ஓர் பத்திரிகையை திருவல்லிக்கேணியில்அவர் ஏற்படுத்திவிட்டுப் போயிருந்தார். இப்பொழுது ஸகல குணங்களும் நிறைந்த ராஜம் அய்யர் ஆதிபத்யத்தின்கீழ் ஓர் பத்திரிகை ஏற்படப்போகிறது என்று கேட்டதும் ஸ்வாமிகளுக்கு அடங்கா ஆனந்தம் உண்டாய்விட்டது. உடனே கூடியசீக்கிரத்தில் தீர்க்காலோசனை செய்து, விழித்திக்கொண்ட இந்தியாஎன்ற பொருளையும், ஸனுதனதர்மத்திற்கும் புத்தமதத்திற்கும் உள்ள அந்நியோந்ய ஸம்பந்தத்தையும் குறிப்பிக்கும் பிரபுத்தபாரதம் என்ற பெயரையிட்டு ஓர் மாதாந்த பத்திரிகை ஏற்படுத்தலாம் என்று சொல்லி ஸ்வாமிகள் பிரபுக்களது எண்ணத்தை அங்கீகரித்தனர். இதுவும் அல்லாமல் பத்திரிகை நடத்தும் விஷயத்தில் பின்வரும் புத்திமதியையும் விவேகானந்த ஸ்வாமிகள் கூறியுள்ளார். "இப்பத்திரிகை நடத்துவதில் அதிக கல்வித்திறனைக் காட்டி பாஷை நடையை கடினமாகப் போக

விடாதிருக்கவேண்டும். இப்படிச் செய்தால் இது உலகெங்கும் எளிதில் பரவும் என்பதற்கு ஐயம் இல்லை. எளிய நடையில் எழுதினால் தான் உங்களுக்கு சீக்கிரத்தில் எடுத்த காரியம் கைகூடும். இதில் ஸனாதனதர்ம விஷயங்களை எளிய கதைகள்மூலமாக வெளியிடுவதே உங்கள் முக்கிய நோக்கமாக இருத்தல்வேண்டும். இம்மாதிரி கதைகள் ஸம்ஸ்கிருதபாஷையில் ஏராளமாகக் குவிந்து கிடக்கின்றன. அவைகளின் சிறப்பு அழகு முதலியவைகள் மிகுந்த அற்புதமாக இருக்கின்றன. அவைகளை நீங்கள் பலர் அறியச் செய்யவேண்டும். உங்கள் பத்திரிகையில் பொருள் எளிதில் விளங்காத நுட்பமான சாஸ்திர அல்லது வேதாந்த விஷயங்கள் அதிகமாக இருக்கக்கூடாது. தைரியமாகக்காரியத்தைநடத்துங்கள். சீக்கிரத்தில்உங்களுக்கு சிறப்பு வந்துவிடும் என்ற வீண்ஆசைக்குமாத்திரம் இடங்கொடாதேயுங்கள். நீங்கள் மனப்பூர்வமாகப் பாடுபட்டால்உலகம் நாளடைவில்உங்களை மதிக்கும்.'' இம்மாதிரி விவேகானந்தஸ்வாமிகள் தமது எண்ணத்தை அனுமோதித்தும் பிரபுக்களுக்கு எப்படியாவது கூடியசீக்கிரத்தில் பிரபுத்தபாரதத்தைத் தொடங்கிவிட வேண்டும் என்ற ஆவல் பிறந்தது.

முற்கூறிய ஆவலை மனத்தில் உடையவராய் பிரபுக்கள் சாந்தானந்த ஸ்வாமிகளை சுத்தமனதோடு அணுகி தமது அந்தரங்க நோக்கத்தை வெளிப்படுத்தினர். இது இவ்வாறுவதற்கு முன்னரே ராஜம் அய்யருக்கு வரவர நிஷ்டை பழகுவதில் ஓர்வித விருப்பும் உத்தியோகம் முதலிய லௌகிக விஷயங்களில் ஓர்வித வெறுப்பும் உண்டாகி விருத்தி அடைந்துகொண்டே வந்தன. சிற்சில ஸமயங்களில்உத்தியோகத்தை விட்டுத் தமது காலம் முழுவதையும் நிஷ்டை பழகிக் கழித்தால் நலமாக இருக்கும் என்று பட, ராஜம் அய்யர் இந்த எண்ணத்தை வெளியிட்டிருந்தார். இது ஸ்வாமிகளுக்குத் தெரியவர, அவஸரப்பட்டு வேலையைவிடவேண்டியது அனாவசியம் என்று சொல்லி ஸ்வாமிகள் ராஜம் அய்யரை அவர் மனம்போனபடி போக விடாமல் அடக்கி வந்தார். இப்படி இருக்கையில் பத்திரிகை விஷயத்தை ஸ்வாமிகள் பிரபுக்களால் அறிந்து, அதுவே ராஜம் அய்யருக்குத் தகுந்தவேலை என்று ஸந்தோஷித்து, பத்திரிகை ஏற்பட்டு பலப்பட்டால் வேலையை விட்டுவிடலாம் என்றும் ராஜம் அய்யருக்கு அனுமதிகொடுத்தார்.

இந்தத் தருணத்தில் தமது மனதின் நிலைமையை ராஜம் அய்யர் பிரபுத்தபாரதம் முதல் ஸஞ்சிகை முடிவில் எழுதியுள்ள பின்னோக்கில் ஆங்கிலத்தில் தாமேவெளியிட்டிருக்கிறார். பின் வருவது அவர் எழுதியதின் மொழிபெயர்ப்பு. 'இப்பத்திரிகை ஆரம்பிக்குங்கால் உலகம் கறை ஏறும்படியான பேருதவி புரியவேண்டும் என்ற வீண் மனோராஜ்யம் எங்களிடம் குடிகொண்டிருக்கவில்லை. நாங்கள் கேட்டு ஆனந்திக்கும் விஷயங்கள் உலகில் சிறு பாலருக்காவது ஆனந்தம் விளைவிக்கலாம் என்பதும், இவ் விஷயங்களை உள்ளவாறு எழுதிவெளியிடுவதால் நாங்கள் கேட்ட விஷயங்கள்எங்களுள் வேரூன்ற நாம் மேன்மை அடைவோம் என்பதுமே எங்கள் முக்கிய எண்ணங்களாக விருந்தன. இப் பத்திரிகையைத் தொடங்கவேண்டும் என்ற எண்ணம் எங்களுக்குத் தற்செயலாக உண்டானது. இப்பத்திரிகை பின்னால் எந் நிலைக்கு வந்தாலும் ஸரி இந்த வேலையில் இறங்குங்கால் சுத்தமான மனதோடு தொடங்கக் கிருபைகூர்ந்த கடவுளுக்கு எக்காலத்தும் நாங்கள் நன்றி அறிதலுடையவர்களாய் இருப்போம். இது தொடங்கியகாலத்தில் எங்கள் மனதில் ரஜோகுண ஸம்பந்தமான ஸ்வசக்தியைப் பற்றிய கர்வமும் தமோகுண ஸம்பந்தமான உலகம் உய்யச் செய்யவேண்டும் என்ற பேராவலும் எங்களுக்கு உண்டாகவேயில்லை. இம்மாதிரியான ஸாத்வீக ஸமயத்தில் மிகுந்த குதூஹலத்துடன் எத்தகையவரிடமிருந்து அனுமதி பெறவேண்டுமோ அவரிடம் (சாந்தானந்த ஸ்வாமிகளிடம்) இருந்து அனுமதி

பெற்று அவர் அனுக்கிரஹத்தின்பேரில் வேலை தொடங்கினோம்.'

முற்கூறியபடி நல்ல தருணத்தில் தொடங்கிய பத்திரிகைக்கு ராஜம் அய்யரே முக்கிய பத்திராதிபதராகவும் வேறிருவர் ஸஹாய பத்திராதிபர்களாகவும் ஏற்படுத்தப்பட்டனர். உடனே இப்பத்திரிகைக்கு ஓர் முன் நோக்கு ஒன்று எழுதி இவர்கள் வெளியிட்டனர். ஆதியில் பரதகண்ட ரிஷிகளுக்கே தெளிவாகதோன்றிய அரிய விஷயங்கள் திரைகடலோடித் தூர தேசங்களில் பரவவேண்டும் என்றிருந்த கடவுள் கருத்தையும் அது ஸரிவர நடந்தேருவதற்கு ஸஹாயமாக இருந்து உதவிய அநேக அதிசய ஸம்பவங்களையும், அவைகளால் தூர தேசங்களில் அநேகம் பேருக்கு ஸனாதன தர்ம ரகஸியங்களில் நம்பிக்கை ஏற்பட்டதையும் விவரித்துக் கூறப்பட்டிருந்தது. அதன் பின்பு இவ்வாறு தூரதேசத்தார் எல்லோரும் நமது மதத்தை ஆராய்ந்து ஆனந்திக்கையில் நம் தேசத்தில் அக்காலத்தில் படிக்கும் பிள்ளைகள் மத்தியில் நாஸ்திகமும் லோகாயதிக மதமும் குடிகொண்டு இருந்ததையும் அதை நீக்க பிரபுத்தபாரதம் என்ற ஓர் மாதாந்த பத்திரிகை தொடங்குவதாகவும் அது பிரம்மவாதினிக்கு ஸஹாயமாக இருந்து, வயது சென்றவர்களுக்கு பிரம்மவாதினி உபயோகப்படுவதுபோல பாண்டித்தியசாலைப் பிள்ளைக்குஇது உபயோகமாகும் என்பதாகவும், அதில் எழுதியிருந்தது. இதுவும் அல்லாமல் ஸனாதனதர்ம ரகஸியங்கள், அவைகளைவிளக்கும்புராணஇதிஹாஸகதைகள் தத்துவசாஸ்திரகதைகள் நூதன அற்புதகதைகள் பக்தர்கள் சரித்திரம் அவர்கள் பின்பற்றிய கொள்கைகள் ஆகிய இவைகள் அப்பத்திரிகையில் எளியநடையில் எழுதி வெளியிடப்படும் என்றும் அந்த முன்நோக்கில் பிரசுரம் செய்யபபட்டது. இந்தமுன் நோக்கு பரவி முதல் ஸஞ்சிகை வெளியாகும் முன்னர் பகவத்கிருபையால் அப்பத்திரிகைக்கு 1500 சந்தாதார்கள் ஏற்பட்டனர்,

முதல் ஸஞ்சிகையில் வெளிவந்த ஸ்வகீயமே வாசிப்போர் மனதைக் கவரத்தக்கதாக விருந்தது. 'தூரதேசத்தில் உண்டான ஸனாதன தர்மவிஷய மனக்கிளர்ச்சியால் நமது பரத கண்டம் எழுப்பப்படுங்காலத்தில் அதை தெளியும்படிசெய்ப ஸஹாயமாக இப்பத்திரிகை இருக்கப்போகிறபடியாலும் முன் எழுதி வெளியிட்டு உள்ள முன்நோக்கின் மூலமாக பத்திரிகைக்கு வந்து குவிந்த சந்தாதார் கணக்கினாலும், இந்தப் பத்திரிகை நடைபெறவேண்டியது அவசியம்' என்பதை இதில் முதலில்காட்டியிருந்தது. மேலும் ஸனாதனதர்ம உண்மைகள் பரதகண்டம்விட்டு வெளியேரிய வழியைக் காட்டும் முகபடம் ஒன்றை இயற்றி அதை ஒவ்வொருஸஞ்சிகையின் அட்டை காகிதத்தில் அச்சிடப்பட்டுவந்தது. அதில் ரமணீயமான காட்டின் மத்தியில் ரிஷி ஒருவர் தமதுசிஷ்யர் இருவர்களுக்கும் அரிய உண்மைகளை உபதேசிப்பதை தற்செயலாகதூரத்திலிருந்து ஒரு துரையும் அவர் ஸ்திரீயும் கண்டு வியந்துகொண்டு அசையாது நிற்பதுபோலக் காட்டப்பட்டிருந்தது. அவ்வாறு கண்ட அவர்கள் மூலமாக ஸனாதன தர்மஅற்புதங்கள் வெளியூரில் பரவ அநேகர் பரதகண்டம் வந்து ஸனாதன தர்ம உண்மைகளை ஆராயத்தொடங்கினராம். சிலர் குற்றங்கூறப் புகுந்துசெய்த வேலைகளால் தமது எண்ணத்திற்கு விரோதமாக நமது மதரகஸியங்களைப் புகழவேண்டிவந்ததாம். இப்படி இருக்கையில் நமது மதத்தை ஓர் ஸந்யாஸி அமெரிக்கா சென்று ஸ்தாபிக்க இந்த அற்புத சங்கதியைக் கேட்டு நமது நாடு நமது மதத்தின் சிறப்பை ஒருவாறு உணர்ந்து விழித்துகொண்டதாம். அக்காலத்தில் நமதுநாட்டில் பாடசாலைகளில் படிப்போர் மனம் தெளிவதற்காக அந்த பத்திரிகை வெளிவந்ததாக ஸ்வகீயத்தில் கண்டிருந்தது. மேலும் முன்நோக்கில் கூறியபடி விஷயங்கள் பத்திரிகையில் அமைக்கப்பட்டுவரும் என்றும் ஒரு மதத்தையும் அதில் தூஷிக்காது எல்லாமதங்களை ஸமரஸப் படுத்தப்படும் என்

றும், வேதாந்த முடிவை எவ்வளவு எளிய நடையில் எடுத்துக்காட்ட முடியுமோ அவ்வளவு ஸரஸமாகக் காட்டப்படும் என்றும் அந்த ஸ்வகீயத்தில்வாக்களிக்கப்பட்டு இருந்தது. அதன் முடிவில் 'இந்தத்தொழில் உண்மையான பெரியோரது மனப்பூர்வஸஹாயம் இல்லாவிடில் தொடங்கியே இருக்கமாட்டாது. கடவுள் எங்கும் பரவிஇருக்கும் இவ்வுலகில் தொழில் செய்யவேண்டியது நமது பொறுப்பு. அதன் லாப நஷ்டங்களைப்பற்றி எண்ணமிடுவது நமது கடன் அல்ல. அவை அனுதராகி ஸர்வத்துக்கும் நாதரான ஜகன்னிவாஸராம் பரம்பொருளது பாரம்' என்று எழுதப்பட்டிருந்தது.

முற்கூறப்பட்டுள்ள வாக்குத் தத்தங்கள் யாவும்இப்பத்திரிகையில் பூர்த்திசெய்யப்பட்டன. பத்திராதிபர் நியாஸம் இருக்கவேண்டிய ஸ்தானத்தில் ஸனுதனதர்மத்தைப் பற்றியும்வேதாந்தவிஷயங்களைப் பற்றியும் உள்ளபொது நியாயஸங்களும், பத்திராதிபர் குறிப்பு இருக்கவேண்டிய இடத்தில் சிறு கதைகளும், மௌனியின் மனனம் என்ற சிறுவேதாந்த வாக்கியங்களும், பின்னர் வெளியிலிருந்து தானம் செய்யப்பட்ட இரண்டொரு விஷயங்களும், விஸ்தாரமாய் எழுதப் பட்டுள்ள இரண்டொரு புராணகதைகளும், பரம்பொருளைத் தேடிச் சென்றோர் என்ற பெயரின்கீழ் முறையாக பக்தர் சரித்திரங்களும், கீதா சாஸ்திர ஆராய்ச்சியும், ஆராதனை செய்யப்படும் விக்கிரஹங்களின் உட்பொருள்களும், வேதாந்த ஸாரபாகங்களும், வேதாந்த விஷம பாகங்களும் கமலாம்பாள் சரித்திரத்தைப்போன்றஉண்மை உயர்வு அல்லது வாஸுதேவ சாஸ்திரி என்ற அற்புதகதையையும், மேலும் வேதாந்த உட்பொருள் அமைந்து கிடக்கும் ஸாதாரணகதைகளும் வெகு அழகாகப் பத்திரிகை ஸஞ்சிகைகளில் அமைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு ஸஞ்சிகையில் இரண்டொரு நியாஸங்களை தவிர மற்றைய எல்லாம் மறுபெயர் புனைந்து ராஜம் அய்யராலேயே நேரே எழுதி வெளியாக்கப்பட்டன. தாம் உபந்யஸித்துவந்த அரிய விஷயங்கள் எல்லாம் இந்த பத்திரிகையில் விடாது அழகாக அமைக்கப்பட்டிருந்ததைக் கண்டு இப்பத்திரிபையை அருள்வாக்கு என்று புகழ்ந்து மெச்சிக்கொண்டு சாந்தானந்தஸ்வாமிகளே வெகு ஆனந்தத்தோடு இதை மாதந்தோறும் விடாது தமது உபந்யாஸங்களுக்கு முன் வாசித்துவந்தனர்.கடவுள் அருளால் முதல் வருஷம் முடிவிலேயே இப்பத்திரிகைக்கு 4500 சந்தாதார்கள் ஏற்பட்டனர். அதில் அநேகர் தாம் இதை ஒவ்வொருமாதமும் மிகுந்த ஆவலோடு எதிர்பார்ப்பதாகவும் கடிதம் எழுதி வந்தனர். இப்பத்திரிகையால் என்னைப்போன்ற அநேக பாடசாலைப் பிள்ளைகளுக்கு ஆதியில் ஸனுதன தர்மரகஸியங்கள் தெளிவாக விளங்கின. இப்பத்திரிகையால் ஞானம் உண்டாகி ஆனந்தம் அடைந்தவர் அநேகர் இருந்திருக்கவேண்டும்.

இவ்வளவு சிறப்போடுகூடிய பத்திரிகை எவ்வாறு நடத்தப்பட்டு வந்தது என்பதைப் பற்றிச் சற்றுக் கூறுவோம். ராஜம் அய்யர் தமது உத்தியோகத்தைவிட்டு நிஷ்டை பழகுவதும் ஸ்வாமிகள் உபந்யாஸங்களை மனம் ஊன்றிக் கேட்பதும், கேட்டவைகளை உள்ளபடி பத்திரிகையில் வெளியிடுவதும் ஆக ஸத்காலக்ஷேபம் செய்துவந்தார். பிரபுக்களைச் சேர்ந்தவர்கள் இரண்டொருவர் பத்திரிகையின் பணவிவரங்களையும், பொதுவேலைகளையும் ஸரிவரப்பார்த்து ராஜம் அய்யரைப் போஷித்து வந்தனர். பிரபுக்களின் பேராவலால் பத்திரிகை தவறாது ஒவ்வொரு மாதத்திலும் முதல் தேதியிலேயே வெளிவந்துகொண்டிருந்தது. பிரபுக்கள் வீட்டுக்குழந்தைகள்கூட மிகுந்த உத்ஸாகத்தோடு அன்றைக்குள்ளேயே 4000 பத்திரிகைகளையும் ஒட்டித் தபாலுக்குத்தயாராக்கினர். வழியில் போய் கொண்டிருந்த படித்த ஒவ்வொருவரும்இப்பத்தரிகை வேலைகளைதாமாகவே மேலே போட்டுக்கொண்டு தம்மாலியன்ற மட்டும் செய்துவந்தனர். இப்பதிரிகை நடந்து

வந்த இரண்டு வருஷமும் பிரபுக்கள் வீட்டில் உத்ஸவம் பட்டபாடுபட்டது. பெரியவர்கள் சிறியவர்களெல்லோரும் ஒரேவிதமாக இப்பத்திரிகைவிஷயத்தில் ஆனந்தித்துத் தொழில்செய்து வந்தனர். இப்பத்திரிகை நடந்தகாலத்தில் அருகேயிருந்து ஆனந்திக்கக் கொடுத்துவைத்திருந்தவர்கள் எல்லோரும் தாம் அடைந்த ஆனந்தத்தை இன்னும் சொல்லி ஸந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கின்றனர்.

இவ்வளவு கோலாஹலமாய் நடைபெற்று வந்த பத்திரிகை திடீரென்று இரண்டு வருஷத்திற்குப்பின் ராஜம் அய்யருக்குவந்த அகால மரணத்தால் தடைபட்டது. கடைசி ஸஞ்சிகையில் வெளிவந்த முடிவுறையில் 'இப்பத்திரிகை இதுகாறும் வேதாந்த ரகஸியங்களை எளிய நடையில் சிக்கர வெளியிட்டுக்கொண்டுவந்தது. உண்மையை உள்ளபடிவெளியிடவேண்டும் என்ற முக்கிய கருத்தோடு இப்பத்திரிகையைத் தொடங்கினோமே ஒழிய யாம் பணம் ஸம்பாதிக்கவேண்டும் என்று தொடங்கவில்லை. ஆதலால் இப்பொழுது பகவத்கிருபையால் எமக்கு பணவிஷயத்தில் யாதொரு குறைவும் இல்லாமல் இருந்தபோதிலும், எமக்கு முக்கியமாயிருந்தபத்திராதிபராகியராஜம்அய்யர்அவர்கள் இறந்துவிட்டபடியாலும், அவரைப்போல எம்முள் ஒருவராலும் வேதாந்தரகஸியங்களை உள்ளபடி வெளியிட்டு இந்தப் பத்திரிகையை நிலைபெறச் செய்யமுடியாதாகையாலும், உண்மையை வெளியிடும் நோக்கத்தை உத்தேசித்து நாம் இப்பத்திரிகையை நிறுத்திவிட எமது அன்புடைய சந்தாதாரிடம் அனுமதிகேட்டுக்கொள்ளுகிறோம்.' என்று வெளியிட்டிருந்தது. இந்த ஸஞ்சிகையில்தான் ராஜம் அய்யர் ஆதியில் பிரம்மவாதினியில் எழுதிவெளியிட்ட மனிதன் அவன் ஏற்றத்தாழ்வு என்ற நியாஸம் பத்திராதிபநியாஸஸ்தானத்தில் வெளிவந்தது.

ராஜம் அய்யர் இறந்தபின்பு, அவர், இப்பத்திரிகை, கமலாம்பாள் சரித்திரம் ஆகிய இவைகள் மூலமாக உலகிற்குச் செய்துவந்த உபகாரத்தை அனுபவித்தறிந்த ஒருவர் இவர் மரணத்தைப் பற்றி பரிதவித்து ஒருகவிதை ஆங்கிலத்தில் எழுதிவெளியிட்டனர். இக்கவிதை பின்னர் ஹிமாலயத்தில் பிரசுரம் செய்யப்பட்டு வெளிவந்துகொண்டிருந்த பிரபுத்தபாரதத் தொடர்ச்சியில்வெளிவந்தது. இன்னும் அந்தத் தொடர்ச்சி நடைபெற்றுவருகின்றது. இவர் இறந்து ஏழு எட்டு வருஷங்களுக்குப் பின் முற்கூறிய மைலாப்பூர் பிரபுக்களின் பிரயத்தனத்தின்பேரில் பிரபுத்தபாரதத்தில் இம்மஹான் பகவத்கிருபையால் அருள்வாக்குக்களாக வெளியிட்டவைகள் எல்லாம் ஒழுங்காகத் தொகுப்பட்டு வேதாந்த உல்லாஸம் என்ற பெயரோடு கூடிய ஓர் பெரியபுத்தகமாகவெளிவந்தது. இப்புத்தகவேலையில் யானும் சேர்ந்துஎன்னால் இயன்ற உதவியைப் புரிய பாக்கியம்பெற்றிருந்தேன். இப்புத்தகம் இப்பொழுதும் அநேகரால் மதிக்கப்பட்டு உயர்ந்த ஸ்திதியில் இருந்துகொண்டு அவர்களுக்கு ஆனந்தத்தை அளித்து வருகின்றது.

இவ்வாறு இரண்டு வருஷத்திற்குள் உலகில் எல்லோரும் வியக்கும்படி பரோபகாரம் புரிந்து பரமதம் அடைந்த ராஜம் அய்யரது இல்லற வாழ்க்கை முதலியவைகளைப் பற்றி அடுத்த ஸஞ்சிகையில் விவரிப்போம்.

---

* பொழிப்புரை:—

பெரியோர்கள் இருப்பது உலகப்பிரசித்தமாவது அபூர்வம். தாம் புதிதாகக்கூறுகிறோம் என்ற கர்வத்தோடு ஒரு உண்மையையும் இவர்கள் கூறுர்கள், தமது குரு அனுக்கிரஹத்தாலேயே தாம் கூறுவதாக நம்பி இவர்கள் வெளியிடுவார்கள். ஆதலால் இவர்கள் செய்யும் நூல்கள் யாவும் மாறு உண்மைகளை உடையனவாக இருக்கும். அவைகளில் ஆக்கியோன் பெயர் காணப்படாது. கர்மங்கள் செய்யவேண்டும் என்பது இவர்கள் நோக்கம் அல்ல. கடவுளிடம் ஈடுபட்டு நிற்றலே இவர்களது வாழ்க்கைத்தொழில். ஸாதாரண ஸமயங்களில் இவர்கள் கர்மங்கள் செய்தாலும் செயவார்கள். இவர்கள் தாம் செய்யும் கர்மங்கள் எல்லாவற்றையும் பகவத் ஆராதனையாகவே எண்ணிச்செய்வார்கள், லோகோபகாரம் என்ற செறுக்குடன் செய்யார்கள். இவ்வாறு செய்யப்படுதலால் இவர்களது கர்மங்களைப்போல லோகோபகாரம் புரியக்கூடியவைகள் உலகில் ஒன்றும் இல்லை. உபகாரம் செய்யவேண்டும் என்ற பேராவலோடு மனப்பூர்வமாகக் கர்மங்களை செய்பவராலும்கூட பெரியோர்களைப் போன்ற மாறு உபகாரம் செய்யமுடியாது. இப்படி மறைந்தொழுகும் பெரியோர்களே உண்மையான பரோபகாரிகள்.

# கும்பகோணம்

## மஹா மக தீர்த்த விசேடம்

## KUMBAKONAM: MAHAMAKAM FESTIVAL

சர்வ ஆன்ம கோடிகளையும் படைத்தும், அளித்தும் அழித்தும் திருவிளையாடல் இயற்றும் பரம்பொருளைப் 'பரமசிவம்' எனத் தமிழ் வேத நூல்க ளெல்லாம் முழங்கா நிற்கும். இதனைப் 'பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்' என்னுந் தேவாரத்தினின்றும் 'தேவ தேவன் திருப்பெயராகவும்' என்னுந் திருவாசகத்தினின்றும் தெளிந்துஉணரலாகும். பரமசிவம் மக்களாகிய நாம் நமது புலன்களைப் புன்னெறியிற் போகவிடாது நன்னெறியிற் புகுவித்து எளிதில் உய்யுமாறு லிங்கரூபமாகத் திருக்கோயில் கொண்டுள்ளார். அங்ஙனந் திருக்கோயில் கொண்டுள்ள தலங்கள் இத் தென்னாட்டிற் பலவுள. அவைகளிலே இப்போதுள்ள தேவாரப் பதிகங்களை உடையனவாயிருக்கும் ஸ்தலங்கள் இருநூற்றெழுபத்து நான்கு. இவ்விருநூற்றெழுபத்து நான்கு ஸ்தலங்களில் சோழநாட்டில் மாத்திரம் நூற்றுத்தொண்ணூறு தலங்கள் இருக்கின்றன. இந்த நூற்றுத்தொண்ணூறு தலங்களுள் காவிரிக்குத் தென்கரையில் 127 தலங்களுள. இந்த 127 தலங்களுள் மிகப்பிரசித்திபெற்ற தலங்களுள் ஒன்று கும்பகோணம். கும்பகோணம் என்னும் புண்ணியபூமி மூர்த்தி விசேடம், தலவிசேடம், தீர்த்த விசேடம் என்னும் 3 விசேஷங்களையும் கொண்டுள்ள தலம். தேவாரம் பெற்ற மூன்று தலங்களைத் தன்னகத்தே கொண்டது. அவையாவன:—(1)குடமூக்கு (2) குடந்தைக் கீழ்க்கோட்டம் (3) குடந்தைக் காரோணம். இத்திருக்கோயில்களின் விசேஷங்க ளெல்லாம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்கள் பாடிய திருக் குடந்தைப் புராணத்தில் விரிவாகக் காணலாகும்.

1 குடமூக்கு:—ஏமருஷி முதலியோர் பூசித்த ஸ்தலம். ஸ்வாமியின் திருநாமம் கும்பேசுரர். தேவியார் திருநாமம் மங்களநாயகி. ஞானசம்பந்த ஸ்வாமிகளாலும் அப்பர் ஸ்வாமிகளாலும் தேவாரம் பெற்றது. இத்தலத்தின் விசேடம் "குடமூக்கே குடமூக்கே என்பீராகிற் கொடுவினைக டீர்ந்தானைக் குறுகலாமே." என்னுந் தேவாரத்தால் இனிது பெறப்படும்.

2. குடந்தைக் கீழ்க் கோட்டம்:—இது நாகேசுர ஸ்வாமி கோயில் எனவழங்கும். அப்பர் ஸ்வாமிகளது தேவாரம்பெற்றுள்ளது. ஸ்வாமி பெயர் நாகேசுர ஸ்வாமி. தேவியார் பெரிய நாயகி அம்மை. சூரியன் பூசித்த ஸ்தலம். இங்கே வருஷந்தோறும் சித்திரைமாதம் 11, 12, 13, இந்த தேதிகளிற் காலையிற் சூரிய கிரணம் சுவாமி மேற்படுகின்றது.

3. குடந்தைக் காரோணம். இது காசிவிசுவநாதர் கோயில் எனவழங்கும் ஞானசம்பந்த ஸ்வாமிகளது தேவாரம் பெற்றுள்ளது. இவ்வாலயம் மாமகக்குளத்தின் வடகரையி லிருக்கிறது. காயாரோகண ஸ்தலங்கள் மூன்றனுள் ஒன்று. உமையவள், மாந்தாதா முதலியோர் பூசித்தஸ்தலம். ஸ்வாமிபெயர் (1) காசி விசுவநாதர் (2) சோமநாதர். தேவியார் பெயர்:—காசி விசாலாட்சி (2) தேனார் மொழியம்மை. குடந்தைக் காரோணம் என்னும் பெயர் வந்ததின் காரணம் பின்வருமாறு:—ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியைக் கவர்ந்து சென்ற இராவணனைச் சம்ஹாரஞ் செய்ய ருத்திரகூறு தன்பால் இருத்தல் மிக அவசிய மெனத் தேர்ந்து இத்தலத்து வாசஞ்செய்திருந்த அகத்திய முனிவரை வேண்ட முனிவரர் மாமகதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து விசுவேசரைத் தரிசித்தால் ருத்திரகூறு கிடைக்கும் என்றார். இதனை

"எல்லாத் தலங்களினும் ஏற்றம் விசுவேசம்
எல்லாத்தீர்த் தங்களினும் ஏற்றம் மகதீர்த்தம்
எல்லாமூர்த்திக்குமிகவேற்றமுள திம்மூர்த்தி
எல்லாக் கலையு மினிதுணர்ந்த மன்னவனே.
ஆதலி னித்தா னத்திவ்
வகிலநாயகரைச் சென்னாட்
காதலின் மக நீராடிக்

கனிதரப் பூசிப்பாயேல்
ஓதலி னளவா வன்மை
யுருத்திரன் கூறு பெற்று
மோதலின் வலிய னுகி
முன்னிய தடைவா யென்றான்'' என

வரும் குடந்தைப் புராணச் செய்யுள்களால் உணரலாகும்.

ஸ்ரீராமபிரானும் அவ்வாறே பூஜை செய்தார். விசுவேசர் எதிர் தோன்றினர். '(வேண்டுவதென்'? என வினவினர். 'அரக்கர் ஆவியை அழிப்பான் கருதினேன். உருத்திர கூறு என்னுடலத்துப் பொருந்துமாறு அருள் புரிதல் வேண்டும். எனச்சொற்றார் ஸ்ரீராமபிரான். சிவபிரானும் 'நீ நமது சத்தியாகும். உன்னுள் நான் கலந்திருத்தல் பொருத்தமே' என்று சொல்லி ஸ்ரீராமரது காயத்துட் கலந்திருந்தார்.

"இராகவன் வதன நோக்கி
எம்பிரான் அருளிச்செய்வான்
பராவுநஞ் சத்தி நீகாண்;
பண்புசால் நின் காயத்தில்
விராவுதல் நமக்கு மிக்க
உரிமைகாண் எனவிளம்பிக்
கராசலங் காத்த அண்ணல்
மேனியுட் கலந்திவர்ந்தான்."

காய + ஆரோகணம். "காயாரோ கணமெனும் பேர் காரோண மென்றாயிற்று."

இந்தக் காரோண ஸ்தலத்துக்குத் தென்பாலுள்ள மாமக தீர்த்தத்தின் விசேடம் அளவு படுந்தன்மைத்து அல்ல. அப்பர் ஸ்வாமிகளது தேவாரத்தில்

ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின்றேனை
யெப்பிரவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவிமல ருலகனைத்து முருவிப்போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார்போலும்
தாவி முதற் காவிரிநல் யமுனை கங்கை
சரச்சுதிபொற்றாமரைபுட் கரணிதெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே,

என்னுந் திருத்தாண்டகத்தில் காவிரி, கங்கை முதலிய தீர்த்தங்களெல்லாம் ஒன்று சேரும் பெருமை வாய்ந்த தீர்த்த மகிமையை உடைய திவ்யஸ்தலம் குடந்தை என்று சொல்லப்பட்டிருக்கிறது. திருக்குறுந் தொகையிலும் "கங்கையாள்வள் கன்னி யெனப்படும், கொங்கையாளுறையுங் குடமூக்கிலே' என்றும், 'கோதாவிரியுறையுங் குடமூக்கிலே' என்றும், 'சாமியோடு சரச்சுவதியவள், கோமியும் முறையுங் குடமூக்கிலே' என்றுங் கூறப்பட்டுள. பன்னிரண்டு வருஷத்துக் கொருவிசை மாசி மகத்தின்போது காசிகங்கை தன்னிடத்து வரும் ஐதிஹ்பத்தால் இம் மாமகதீர்த்தத்துக்கும் அதிக சிறப்பு வாய்ந்தது.

அத்தகைய மகாமகம் நிகழும் கிலகஷூ மாசி மகத்தன்று கொண்டாடப்படும். அன்றைய தினத்திற் கும்பகோணத்திலுள்ள ஜனக் கூட்டம் கணக்கிடமுடியாது. கும்பகோணத்துக்குப் போக முடியாவிட்டால் இருந்த இடத்திருந்து தியானஞ் செய்தாலும் பெரும்பலன் கிடைக்கும். மாமகதீர்த்தத்தின் மகிமையைக் குடந்தைப் புராணத்து 'மாமகதீர்த்த மகிமைப் படலம்'' என்னும் பாகத்தில் விரிவாகக் காணலாகும். அப்படலத்தினின்று 2 செய்யுள்களை மாத்திரம் இங்கு எழுதி இச்சிறிய வியாசத்தை முடிக்கின்றேன்:—

1. உமையொரு பாகங் கொண்ட
உத்தமன் சொரூப மேயா
யமைதர நெடுநீர்த் தேத்தே
யமர்ந்துளத் தெண்ணி னுலும்
இமைநொடி யளவிற் பாவம்
எனைத்தையும் இருப்பதாயொண்
கமைதரு மகநீர்த் தம்போற்
புவனத்துக் காண்ப தின்றே.

2. சந்ததி விழைந்தோன் ஐந்து
தரமக நாளின் மூழ்கி
னந்தலி லப்பே றெய்தி
நாடெலாம் புகழ வாழ்வான்
முந்தமா மகத்து மூழ்கின்
முழுச்சுடர் வருவேற் செங்கைக்
கந்தவே ளனைய மைந்தற்
பெற்றுளங் களித்து வாழ்வான்.

வா. சு. செங்கல்வராயன், எம். ஏ.

## கல்விச்சிறப்பு.

### THE VALUE OF KNOWLEDGE

"கல்வியினுங்கில்லை சிற்றுயிர்க்குற்றதுணை."

இக்கல்விமாத்திரம் ஒருவனிட மிருக்குமெனின் "எக்குடிபிறப்பினும் யாவரேயாயினும் அக்குடியிற் கற்றோரை வருகவென்பார்." இவ்வித்தியாதன மிருப்பானொருவன் அரசனினும் பதின்மடங்கு மதிகப்படுகிறான்.

"மன்னனுமாசறக் கற்றோனும் சீர்தூக்கில் [குத்
மன்னனிற்கற்றோன் சிறப்புடையன்—மன்னனுக்
தன்றேயமல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்றவிடமெல்லாஞ் சிறப்பு."

இங்ஙனம் கல்வி பலமுடையானொருவனை அவன் குலமுதலியன நோக்காது மானிக்கவும் கூடுமோ? அவ்வாறு யாரேனும் கண்ணிய புருஷர்கள் செய்துளரோ என ஐயுறல் வேண்டா; கணக்கற்ற திருஷ்டாந்திரங்களுள. அவைகளிற் சிலவற்றை அடியில் கவனிப்போம்.

க்ஷத்திரிய குலத்திற்பிறந்து, ஜனனமரணங்களில் உழலு மான்மகோடிகளின் துயரை நீப்பேனென்று, இராஜபதந்துறந்து; பெண்டு பிள்ளை, பண்டபதார்த்தங்களில்பற்றற்று, உண்ணல் உறங்கல் முதலியனவும் கைவிட்டு, பல பெருப்பெருத்த பிராமண தபோதனர்களிடஞ் சென்று அவர்களால் உபதேசிக்கப்பெற்று, அவர்களாசரணைகளை யெல்லாஞ் செய்தும் பயன்படாது போனதும், தம்முடைய சுவபுத்தியின் பலத்தினால் நிர்வாண மார்க்கத்தைக் கண்டுபிடித்த போதிசத்துவர்க்கு முதன் முதல் கிடைத்த சிஷ்யர்கள், இம்மகானுக்குபதேசித்த பிராமணோத்தமர்களே. இரண்டாம் வருணத்தாரேனும், புத்தருடைய பரிபக்குவநிலையைக் கண்டானந்தித்த இப்பூசுர்கள் எங்ஙனே தம் பிறப்பின் பெருமையை முன்னிட்டு இறுமாப்படைய வியலும்? பௌத்த மதந் தழுவினவர்களுக்கு வர்ணாசிரமம் பாராட்ட இடமில்லை. கல்விகேள்விகளே மதிப்புக்குக் காரணமா யிருந்தனவேயொழிய, பிறப்பு ஒன்றற்கும் பயன்படாது போயிற்று.

ஆளவந்தார் சிஷ்யர்களில் முக்கியமானவர்கள் ஐவர். அவர்களில்நால்வர் விப்பிரசிகாமணிகள், ஒருவர் சாதுர்வர்ணிக சூடாமணி. இவ்வைந்தாவர் பெயர் கஜேந்திரதாஸ ரென்பதாயினும், இவர் சாதாரணமாய் திருக்கச்சி நம்பியென்றே எல்லாராலும் பெயர் கூவப்படுவர். இவர் பூவிருந்தவல்லி க்ஷேத்திரத்தில் ஜனித்தவர். சிலர் இவரை வாணியசெட்டிகள் ஜாதியென்பார்கள். இதற்கேற்ப, பூவிருந்தவல்லியில் சில செட்டிமார்கள் குடிகள், தாம் திருக்கச்சிநம்பியின் வமிசத்தார் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். இச்சாதிவிஷய மெங்ஙனேயாயினும், பிரதமவர்ணத்தாரல்லரென்பது எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இவர், கச்சிப்பேரருளாளரிடத்து அந்தரங்க பக்தியுடையவர். வரதராஜஸ்தவம் என்னும் ஸ்தோத்திரம் செய்தவரும் இவரே. திருக்கச்சிநம்பிகளுக்கும், ஆளவந்தாரிடம் வேதாந்தம் கேட்டுவருங்காலத்தில் காஞ்சிமாநகரில் வதிந்து, யாதவப்பிரகாசரிடம் வேதாந்த காலக்ஷேபஞ் செய்து, இவர் மார்க்கம் தம் மனத்திற்குபிடியாது இவரைவிட்டுப்பிரிந்து, தாமே வேதாந்த சாஸ்திரத்தை ஆராய்ந்து கொண்டிருந்த ஸ்ரீராமானுஜர்க்கும் நண்புண்டாயிற்று. நாளடைவிலேயே இராமானுஜர் திருக்கச்சிநம்பிகளுடைய வித்யாபாராவாரத்தைக்கண்டு வியந்து ஒருநாள் தம்பிறப்பு முதலியன ஓராது, அச்சத் சூத்திரர்காலில் விழுந்து சேவித்தார். இதிலும், வித்யாதேவிக்குச் செய்யும் வழிபாடுகள் வேறுயாதென்று நினைக்கவும் முடியாது.

சகலாகமபண்டிதர் என்னும் உயர்ந்த பட்டப்பெயர்பெற்று இராஜபதவியி லுள்ளார்க்கு பாடஞ்சொல்லிவந்த ஒரு பெரியவர், தம் சிஷ்யராகிய களப்பாள ராஜர்க்குப்பிறந்து சைவாகமத்தில் அற்புதஞானம் படைத்த மெய்கண்டதேவர் என்னும் சிறுவரிடம் மெய்கண்ட சாஸ்திரம் கற்றுணர்ந்து தம் பழம்பெயரை நீத்து, அருணந்தி சிவாசாரியர் என்று பெயர்பூண்டு மெய்கண்டதேவர் சிஷ்யரென்று மகிழ்ந்திருக்க

வில்லையோ? சகலாகமபண்டிதர் பிரதமவரு ணத்தார் வயோவிருத்தர், பெயருக்குத் தக்க பாண்டித்திய முடையவரெனினும், சாதுர்வர் ணத்தில், தம் முன்னர் ஜனித்த சிறு வயதினரா கிய மெய்கண்டதேவரிடம் சாஸ்திராப்பியாசம் செய்தாரெனின், யார்தாம், "எக்குடி பிறப்பி னும் யாவரேயாயினும் அக்குடியிற் கற்றோரை வருகவென்பார்" என்னும் ஆன்றோர்வாக்கை பெரிது மதியாதொழிவர்? இவையெல்லாம் கிடக்க

வைணவ சமயத்தில் பற்றுடயராய், சப்த காதை என்னும் சிறு நூலை யியற்றிய விளாஞ் சோலைப் பிள்ளையின் சாத்திரமுணர்ந்தோர் மேற்கூறிய கூற்றின் பெருமை என்றென்றும் மறவார். விளாஞ்சோலை பிள்ளை சாதியில் புலை யர்; மதத்தில் ஸ்ரீவைஷ்ணவர். பிள்ளை லோகா சார்யர் என்னும் பிரமசாரியருடைய சிஷ்யர். ஸ்ரீசைலேசர் அல்லது திருமலையாழ்வார் என் பவர்க்கு பரம அந்தரங்கஸ்தர். இம்மஹான் எங்ஙனம், அன்னதோர் பெருங்கல்வியைக் கற் றனரோ, எவ்வாறு வைணவத்தில் ஊக்க மடைந்தனரோ, இப்பொழுது நினைக்கவும் கூட வில்லை. இக்காலத்திலேயே புலையர், பிரமா ணப் பிள்ளைகள் செல்லும் பள்ளிக்கூடங்களில், சேர்க்கப்படுவதில்லை எனின், அக்காலத்து, விளாஞ்சோலைப் பிள்ளை கல்விகேள்விகளிற் தேர்ச்சியடைந்து, விசிஷ்டாத்துவைததர்சனத் தின் சித்தாந்தங்களில் பயிர்ச்சிபெற எப் படி யியன்றதோ, யாமறிய வகையில்லை. இவர்பிள்ளை லோகாசாரியாருக்கு அந்தரங் கஸ்தர் என்பதினாலேயே, கல்விச்செல்வத்தை எங்குற்றாலும் கவலாதாரும் மதியாதாரும் ஒரு வருமில்லை யென்பது பெறப்படுகிறது.

து. அ. கோபிநாதராவ், எம்.ஏ.

# இயற்கை அற்புதங்கள்

## WONDERS IN NATURE



IV. வெந்நீர் ஊற்றுக்கள்

BOILING SPRINGS

உலகில் சற்றேரக்குறைய எல்லாத் தேசங் களிலும் வெந்நீர் ஊற்றுக்கள் காணப்படுகின் றன. எரியும் எரிமலைகளைச் சுற்றி வெகுதூரம் வரையில் இவ்வூற்றுக்கள் ஏராளமாகக் காணப் படும். இங்கிலாந்து தேசத்தில் பாத் என்னும் இடம் ஹெக்ளா, விஸூவியஸ் ஆகிய எரிமலை களிலிருந்து சற்றேரக்குறைய 1000 மைல் தூரத்தில் உள்ளபட்டணமான போதிலும் அதிலும் 120 டிகிரி உஷ்ணமுடைய வெந்நீர் ஊற்றுக்கள் காணப்படுகின்றன. இதுபோலவே ஜர்மனி,பிரான்ஸ்,ஸ்பெயின் முதலிய தேசங்களி லும் இவ்வூற்றுக்கள் காணப்படுகின்றன. நமது பரதகண்டத்திலும் ஓர் அக்கினிக்குளம் இருக் கின்றதாம். காசியாத்திரைபோகிறவர்கள் அதன்

அருகில் போய் சேர்ந்தால் அரிசி, காய்கறி, முதலியவைகளை துணியில் ஒரு சிறு மூட்டையாகக் கட்டி கொதிக்கும் அக்குளத்து நீருள் தோய்த்து சீக்கிரத்தில் சமயல் செய்துகொள்கிறார்களாம். இக்குளமும் ஓர் வெந்நீர் ஊற்றே ஒழிய வேறல்ல.

உலகில் காணப்படும் சிற்சில வெந்நீர் ஊற்றுக்களில் உற்பேதங்கள் அடிக்கடி உண்டாகின்றன. உற்பேதம் ஸம்பவிக்கும் வெந்நீர் ஊற்றுக்களுக்கு கக்கும் ஊற்றுக்கள் என்று பெயர். உலகில் மூன்றுவிடங்களில் இம்மாதிரியான கக்கும் ஊற்றுக்கள் காணப்படுகின்றன. அவையாவன—ஐரோப்பாவின் வடமேற்கில் உள்ள ஐஸ்லண்ட்தீவு, அமெரிக்காவில் கற்பாரை மலைகளிலிருக்கும் மஞ்சள்கல் மாகாணம், பஸிபிக் மஹா ஸமுத்திரத்திலிருக்கும் புதிய ஸீலண்ட் தீவு ஆகிய இவைகளே. இவைகளை முறையே பின்னர் வர்ணிப்போம்.

ஐஸ்லெண்டில் காணப்படும் கக்கும் ஊற்றுக்கள் பூமியின் உஷ்ணத்தின் அளவை ஒருவாறு காட்டுகின்றன. அங்குள்ள ஹெக்ளாவின் சுற்றுப்பிரதேசத்திலுள்ள இரண்டு சதுரமைலில் பரப்பிலேயே இக்கக்கும் ஊற்றுக்கள்காணப்படுகின்றன. இந்தச் சிறு பரப்புள் சற்றேறக்குறைய நூறு இடுக்குள் இருக்கின்றன. அவைகள்மூலமாக வெந்நீர் பீரிட்டு வெளிவந்து கொண்டிருக்கும். இப்பிளவுகள் சிறு இடுக்கு முதல் 15 அடி உயரம் 56 அடி குறுக்களவுள்ள பெரியகக்கும் ஊற்றின் தடாகம்போன்ற வாய்வரை அநேக அளவுகளை உடையன. இவ்விடுக்களிலிருந்து எரிமலைக்குழாய்களைப் போன்ற குழாய்கள் பூமியின் உட்பாகத்தை நோக்கிச் செல்கின்றன. உற்பேதமில்லாத ஸமயங்களில் இக்குழாய்கள் மூலமாக வெந்நீர் பிளவுகள் வாயிலிருக்கும் தடாகங்களில் வந்து அவைகளின் விளிம்புவழியாக சுற்றிலும் உள்ள ஸமபூமியில் வழிந்தோடும். உற்பேதம் உண்டாவதற்குச் சற்றுமுன் ஊற்றின் குழாயுள் இடிமுழக்கம் அல்லது பீரங்கி முழக்கம்போன்ற ஒலி ஒன்று கேட்கும். பிளவுகளில் இருக்கும் தடாகங்களில் உள்ளவெந்நீர் கொதிக்கத் தொடங்குகின்றது. கொஞ்ச நாழிகைக்கு எல்லாம் குழாயின் வழியாக நீராவியோடுகலந்த வெந்நீர்சில அடிகள்உயரக் கிளம்புகின்றது. இவ்வாறு விட்டுவிட்டு சிறுகுழப்பங்கள் இரண்டொருநாள் நடந்ததன்பேரில் பெரிய முழக்கம் தொடங்குகின்றது. இந்த முழக்கம் அதிகரிக்க சுற்றுப் பிரதேசங்கள் நடுங்கத்தொடங்கும். இந்தக் குழப்பத்தின் முடிவில் நீர்ஆவியோடுகலந்த வெந்நீர் 150 அல்லது 200 அடி உயரம் கிளம்பி விழுகின்றது. இதன்பின்பு குழப்பம் குறைந்து மறுபடியும் படிப்படியாக அதிகரித்து மறுநாளும் இவ்வாறு ஒருதரம் நடக்கின்றது. இவ்வாறு இக்கக்கும் ஊற்றுகள் தொழிற்பட்டு வருகின்றன.

இப்பொழுது ஐஸ்லண்ட் ஊற்றுக்களைவிடச் சிறந்ததாகிய மஞ்சள்கல்மாஹாணத்தில் உள்ள கக்கும்ஊற்றுக்களைப்பற்றி விசாரிப்போம். இம்மாஹாணத்தில் காணப்படும் வெந்நீர் ஊற்றுக்களின் விசேஷத்தை உத்தேசித்து 65 மைல் நீளம், 55 மைல் அகலம் உள்ள பிரதேசத்தை பலர் சென்று ஸுகப்படக்கூடிய பொதுஸ்தலமாக ராஜாங்கத்தார் விட்டிருக்கிறார்கள். இந்தப் பரப்பில்சற்றேறக்குறைய 1500 ஊற்றுக்களிருக்கின்றன. உற்பேதம் உண்டாகும் காலம், வேகம், படியும் கனிகள், தண்ணீரின் வர்ணம் ஆகிய இவைகள் விஷயமாக அவைகளில் அநேக வைசித்திரியங்கள் காணப்படுகின்றன. படத்தில் காட்டப்பட்டிருக்கும் சிறந்த கக்கும் ஊற்று இங்குள்ள ஊற்றுகளில் மிகப் பெரிதாயும், விசித்திரமாயும் உள்ளது. இதன் வாயிலிருக்கும் தடாகம் 20 அடி வெளி உயரம், 25 அடி குறுக்களவு, உள் ஆழம் 100 அடி வரையிலும் உள்ளது. உற்பேத ஆரம்பத்தில் இந்த தடாகம் வெந்நீரால் நிறைகின்றது. உடனே அதிலிருந்து 500 அடி உயரம் நீராவி கிளம்பி ஓர் முழக்கம் கேட்கின்றது. இதோடு தொடர்ச்

சியாக வெந்நீர் 90 அடி உயரம் ஒரே அடியாக கிளம்ப அதன் உச்சியிலிருந்து தண்ணீர் ஐந்து சிறு பாகமாக மேலே பீரிட்டுக்கொண்டு கிளம்பி பூமியிலிருந்து 250 அடி உயருகின்றது. இத்தண்ணீர் கீழே விழும்பொழுது பூமி அதிருகின்றது, ஆகாயத்தில் அநேகம் ஆயிரம் சிறல் ஒலிகள் கேட்கின்றன, சிதரிவிழும் சிறு தண்ணீர்பாகங்களைச் சுற்றி வானவிற்கள் தவழ்ந்து அவ்வைகளை சிறப்பிக்கின்றன. இவ்வாறு இக்கக்கும் ஊற்று 20 நிமிஷகாலம் உயர்ந்து ஆடிவிட்டு மெதுவாக தடாகத்தில் மூழ்கி மறைகின்றது. இவ்விடத்திலேயே விசிறி ஊற்று என்றொன்றுஇருக்கிறது. அதிலிருந்து தண்ணீர் ஐந்து பாகங்களாகப் பீரிட்டு கிளம்பி வெவ்வேறு பாகங்களில் 60 அடி வரையில் போய் சிறுதளிகளாகசிதறிவிழுந்து பெரியவிசிரியைப்போன்ற தோற்றத்தை உண்டாக்குகின்றது. நம்பிக்கை ஊற்று என்று வேறொரு ஊற்று அங்கு இருக்கின்றதாம்; அதிலிருந்து தவறாது வெந்நீர் ஒரு மணிக்கு ஒருதரம் வெகு உயரம் கிளம்பி விழுகின்றதாம். அதிலிருந்து அருகாமையிலுள்ளோர் நாழிகைக்கணக்கை கடிகாரம் இன்றி எளிதில் தெரிந்துகொள்கின்றனராம். இம் மஞ்சள்கல் மாஹாணத்தில் சிற்சில இடங்களில் வெந்நீர் ஊற்றுக்கள் அவிந்துபோக காடுகள் விருத்தியாகி வருகின்றனவாம்.

இனி புதிய ஸீலண்டில் உள்ள ஊற்றுக்களை நோக்குவோம். ஐஸ்லண்டு தேசத்திய கக்கும் ஊற்றுக்களைப்போன்ற இரண்டொரு ஊற்றுக்கள் இங்கு காணப்படுகின்றனவாம். இங்குள்ளவைகளில் ஓராகி கோராகோ என்ற ஊற்று ஓர் பள்ளத்தாக்கில் உள்ள ஆற்றுள் இருபக்கங்களிலிருந்தும் வந்து விழுகின்றதாம். டேட்டராடா என்ற மற்றொரு ஊற்றில் மணல்ஸம்பந்தமான வஸ்துக்கள் அநேகம் வெளிவருகின்றனவாம். அவ்வைகளால் தடாகத்தின் வெளிப்புறத்தில் சிறுதடாகங்களும் படிகளும் ஏற்பட்டிருக்கின்றன.

இம்மாதிரி விசித்திரமாகக் காணப்படும் வெந்நீர் ஊற்றுகளின் காரணம் யாது என்ற கேள்விபிறக்கும். இதில் தண்ணீர் சுடுவதற்குத் தக்க காரணங்கள் நாம் கூறவேண்டும். முதலில் இவ்வூற்றுக்களின் பொது அமைப்பு நமக்கு ஒருவாறு உதவியாக இருக்கலாம். எரிமலைப் பிரதேசங்களிலாவது, எரிமலை இல்லாதவிடங்களில் மலைப்பிராஞ்சியத்தில் உயர்ந்தவிடங்களிலாவது, மத்திய பிரான்ஸைப்போன்ற அவிந்த எரிமலைப் பிராஞ்சியங்களில் உயர்ந்தவிடங்களிலாவது தான் இவ்வெந்நீர் ஊற்றுக்கள் காணப்படுகின்றன. இதனால் எரிமலைகளில் வெப்பம் உண்டாகும் காரணத்தாலாவது, மலைகள் உண்டாக ஏற்படும் நெருப்பால் உண்டாகும் உஷ்ணத்தாலாவது, அவிந்த எரிமலைகளுள் இருக்கும் அதிக உஷ்ணத்தாலாவது பூமியில் உள்ள தண்ணீரின் உஷ்ணம் அதிகமாக அது ஊற்றாக வெளிவருங்கால் வெந்நீராக வருகின்றது என்பது எளிதில் ஊகிக்கக் கூடிய விஷயம். அப்படி ஆயின் வெந்நீர் ஊற்றுக்களில் உற்பேதம் உண்டாகக்காரணம் யாது என்ற சங்கை பிறக்கலாம். இதற்கு ஐஸ்லண்டில் காணப்படும் கக்கும் ஊற்றுநீர் வெப்பத்தை உற்றுநோக்கில் எளிதில் பதில் கூறலாம். இந்தக் கக்கும் ஊற்றுக்களில் வெளிவரும் தண்ணீரின் அடிப்பாகத்தில் 261 டிகிரி உஷ்ணம் காணப்படுகின்றது. ஆனால் தண்ணீர் 212 டிகிரியில் ஆவியாக மாறிவிடும். பூமியுள்ளிருக்கும் அமுக்கலால் 261 டிகிரிவரையில் உஷ்ணம் ஏறியும் தண்ணீர் ஆவியாக மாறாதிருக்கிறது. ஆகவே பூமியுள்ளிருக்கும் தண்ணீர் இவ்வூற்றுக்களில் ஆவியாக மாறத்தருணம் பார்த்துக்கொண்டிருப்பதால் அதிக வேகத்தோடு கிளம்பும் சக்தியைதன்னுள் உடையதாக இருக்கின்றது. இப்படி இருக்கையில் ஊற்றின் வழியாக வெளியேபோக இடங்கிடைத்ததும் அதிகவேகத்தோடு தண்ணீர் கிளப்பப்பட்டு வெளிவருகின்றது. வெளிவந்து அமுக்கலிலிருந்து விடுபட்டதும் தண்ணீரின் சிலபாகம்

திடீரென்று ஆவியாகி வெந்நீரோடு வேகமாகக் கிளம்புகின்றது. இம்மாதிரி தண்ணீர் திடீரென்று ஆவியாக மாறுதலால்தான், பீரங்கி முழக்கம் அல்லது இடிமுழக்கம்போன்ற சப்தங்கள் வெந்நீர்ஊற்று உற்பேதங்களில் உண்டாகின்றன. ஆகவே வெந்நீர் ஊற்றுக்களும், கக்கும் ஊற்றுக்களும், உண்டாக இவைகளே காரணங்கள்.

இவைகளால்உண்டாகும்பிரயோசனம் யாது? எரிமலைகள் உண்டாகும் காரணத்தோடு இவைகளின் காரணம் ஸம்பந்தம் உடையதாக விருந்தபோதிலும் எரிமலைகளைவிட இவைகள் எவ்வளவோ ஸுகத்தை உண்டாக்குவன. இங்கிலாந்து முதலிய குளிர்ந்த தேசங்களில் இவைகள் ஸுகோஷ்ணமாக விருந்து மிகுந்த உபயோகமாகின்றன. மேலும் இவைகளில் அநேகம் நிலக்கனி வர்க்கங்கள் சேர்ந்து வருவதால் இவைகளில் ஸ்நானம் செய்வோருக்கு நல்ல தேக ஸௌக்கியம் உண்டாகின்றது. இதற்காகவே அநேகர் இத்தகைய விடங்களுக்குப் போய் ஸ்நானாதிகள் செய்து கொஞ்சகாலம் அங்கேயே வாஸம் செய்வதும் உண்டு. இவைகளால் எரிமலைகள் முதலியவைகளைப்போன்ற நாசம் ஒரு நாளும் உண்டாகமாட்டா.

---

நீ செய்தொழிலை ஆசையுடன் செய்:— ஏதோ விதிவசத்தால் உனக்குப் பிடிக்காத வேலையை நீசெய்யும்படி நேரிடினும், அப்பொழுது அவ்வேலையாற்றான் ஈசுவரன் உனக்கு ஆகாரம் அமைத்திருக்கிறபடியால் உன் மனதை முற்றிலும் வேலையிற்செலுத்தி அதைவெகு உற்சாகத்துடன் செய்யவேண்டும். அவ்வாறு நீ கொஞ்சநாள் பழகிவருவாயானால் உனக்குப்பிடிக்காத வேலையும் உன் மனதிற்கு ஒத்துவிடும். பழகப்பழக வேம்பும் கரும்பாம்.

இவ்வாறில்லாமல் அது பிடிக்கவில்லை இது பிடிக்கவில்லை என்று நீ ஒவ்வொன்றையும் தள்ளிவிடுவாயேயானால் நீ உலகத்தில் செய்தொழிலைச் சரியாகச்செய்து சித்திபெறும் உயர்ந்த குணம் உன்னிடம் மற்றுப்போகும். ஏனெனில் உனக்கு ஒன்றும் பிடிக்காதன்றோ?

## நல்லியற்கையும் மனவுறுதியும்

## ON GOOD NATURE AND FIRMNESS

கட்டியும் பாகுமாய்க் கசிந்துருகாதே; பச்சிலையைக் கீடம் மணம்பற்றி யரிப்பதுபோல் உலகமும் ஈரமுள்ளவரை யுன்னை யுறிந்து விடும். காடியாய்க் கடுத்தும் வழியாதே, உலகம் உன்னைத் துப்பித் தொலைக்கும். எதிலும் நடுத்தரம் உண்டு. மதியீனரே மட்டுமீறிச்செல்வர். இருந்தால் பாறையைப்போல் இல்லாவிட்டால் மணலைப்போல் என்றிருக்க அவசியமில்லை. இரும்பைப்போல் உருக்குலையாமலிருக்கவும் மெழுகைப்போல் பிடிப்புக்கிசைய உருக்குலையவும் வேண்டுவதில்லை. வேடிக்கைக்கு வளர்க்கும் விளையாட்டு நாய்களைப்போல வந்துபோவோர்களிடமெல்லாம் கொஞ்சிக் குலாவித் திரியவும் வேண்டாம், வேட்டை நாய்களைப்போல் வெளியே போகிறவர்கள்மேலெல்லாம் எரிந்துவிழவும் வேண்டாம். உலகத்தில் கருமையும் வெண்மையும் கலந்தே நிலைபெறுதல்போல, மனப்போக்கிலும் வெவ்வேறுவகைகள் வெவ்வேறு மனிதரிடம்அமையப்பெறல் காண்கிறோம். சிலர் பழஞ் செருப்புப்போல் எவர்க்கும் மனதுக் கிசைந்தபடியெல்லாம் படிந்து செல்வர்; அப்படிச் செல்பவர்கள் பழஞ்செருப்பின் மதிப்பும் பெறுவர்கள். மற்றுச் சிலரோ, தொடும் முன் தீப்பறக்கும் தீக்குச்சிபோல் சிறுபிழையும் பொறுக்கவில்லராய் எரிந்துவிழுவர். வெறிகொண்டு தேளுக்கொட்டித் தீக்குவிளைக்கும் குரங்கைப்போல் எப்பொழுதும் கடுத்தமுகமும் கொதித்தமனமும் துடித்த சொல்லுமுள்ள வன்கணன் வேண்டாவிருந்தே யென்றாலும் அவன்பால் சிற்சில மானுஷிக குணங்க ளிருக்கச்செய்யலாம். ஆனால் எடுப்பார் கைப்பிள்ளையாய், தனக்கென்று தனிமனமின்றி பிறர்மனமே தன்மனமாய்த் தடுமாறும் ஏழையோ, ஏனென்பார் யாருமற்று வசைக்கோர் வஸதியாவன். முதுகில் தண்டிருக்கவேண்டியது அதியவசியம்; இன்றேல் நிமிர்ந்து நிற்க வாய்க்காது. ஆயினும் அத்தண்டு வளைந்துகொடுக்கவும் வேண்டும், இல்லையேல் தலை தாக்குண்டு உடைபடுவது திண்ணம்.

பிறர் மனப்படி செய்யவேண்டிய தருணமும் உண்டு, செய்யவேண்டாக் காலங்களும் உண்டு. எப்பொழுதும் பிறர் இஷ்டப்பட்டபடி யெல்லாம் நாம் செய்தீத திருவதென் றேற்பட்டால் யார்யாரும் நம்மேற் குதிரையேறுவார்க ளென்பதற்கு ஐயமுு

முண்டோ? நம் மரியாதையை நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் நம்மை நாமேயடக்கியாள வேண்டுமேயொழிய பிறர் நம்மை யடக்கியாள இடங்கொடுத்தல் ஏற்காது. உலகத்தில் எவ்வெவரையும் களிப்பிக்கத் தலைப்பட்டால் நமக்கு மனோநிம்மதி யென்றைக்குமிராது. நல்லோர் பொல்லோரென்றுபாராமல் அண்டையிலுள்ளோர் யாவர்க்கும் தொண்டுசெய்வதே மணியமானால் நமது மதிப்புக் கெடுவதுமன்றி நமக்கே தீங்கும் விளைவித்துக்கொள்வதூஉ திண்ணம். பசுவைக் காணும்தோறும் புலி பதுங்கிப் பாய்வதூஉ இயற்கை. தரையிற் படுத்துக் கிடந்தால் மிதிபடுவது சகஜந்தானே. உரலில் தலையிட்டுக்கொண்டபின் உலக்கை விழாமல் நிற்குமா? ஊரார் உன்தோளில் சிறகன்றைச் சுமத்தச் சும்மாவிருந்தால் பின் பெரும்பசுவையும் சுமத்தத் துணிவார்களென்று சொல்லவும் வேண்டுமோ? நம்மை யடுத்திருப்போரை மனோவிருத்தியும் புத்தி விசாலமும் பெற்று நற்குண நற்செய்கைகள் வாய்ந்தவராய் வாழச்செய்து இன்புறுத்துவது நமது கடமையே. ஆனால் நாம் இங்கே சொல்லவந்தது அதுவல்ல.

ஏமாந்த ஆள் எங்கே யகப்படமாட்டான் என்று எப்பொழுதும் தேடித்திரியும் சதிகாரர்கள் சகத்திலுண்டு. அவர்களது நாகரிகச்சொல்லின் வயப்பட்டு அவர்கள் எண்ணியவாறெல்லாம் பண்ணி முடிப்போமாகில்தாம் பெறத்தக்க பயனெல்லாம்அனுபவித்துப் பின்ஏறிச்சென்ற ஏணியைஉதறித் தள்ளுவதுபோல் நம்மையும் உதறித்தள்ளுதல் உறுதி. காக்கையின் மூக்கிலிருந்த கறியைப்பறிக்கவேண்டி அதனைக்குயிலின் குரல்கொண்ட கோமளமே என்று இச்சகம்பாடியநரியைப்போல நம்மையும் அவர்கள் நளனென்றும்சிபியென்றும் முகமன் பேசித் தங்கள் காரியம்முடிந்தபின் "கழுதையே! எங்கள் குங்குமம் சுமந்துவந்து வீடு சேர்ந்தது; போய்வரலாம்" என்பது ஒருதலை. "இன்னார்கனியும் மொழியுங்கடுவே" என்ற குமரகுருபரசுவாமிகள் நீதிநெறிவாக்கியம் மறக்கற்பாலதன்று என்றும். நம்மை மிகவும் அதிகமாகப்பிறர் தட்டிக் கொடுத்துத் தூக்கிவைத்தால் அவர்கள் நம்மை வஞ்சிக்கவோ அல்லது நம்மால் பயன்பெறவோ உத்தேசித்தே செய்கிறார்கள் என்று துணியலாம். அவர்கள் கரும்பின் சாறெல்லாம் உறிஞ்சியபின் சக்கையை வீசியெறிந்து விடுபவர்களே. ஆகையால் வருமுன்காப்போனாய் தீர்க்கதரிசியாய்க் கருமம் இயற்றல் இன்றியமையாதவழி. சிலதருணங்களில் அன்பர் கனிந்துபேசும் இன்னுரையினும் பகைவர்பேசும் அஃதுறே ஆபத்தினின்றும் நம்மை யகற்றலாம். மூடன் காதில் கேட்டதெல்லாம் நம்புவான். அறிவனோ ஆய்ந்தோய்ந்தே அங்கீகரிப்பன். மனச்சாக்ஷியனுமதி கொடுக்குந்தூரம் பிறன் போகும்வழியிற் கலந்து செல்லலாம். நம் நெஞ்சுக்கு ஒவ்வாதவிடத்தில் "அண்ணே! போய்வா" என்று விட்டு அகல்வது அவசியம். சிநேகம் செய்யத்தலைப்படும்பொழுது இஷ்டன் மனமொப்பிச் செல்லும்வரை ஒத்து நடந்து, பின் கூடியசிக்கிரத்தில் நாம் மெழுகாற்செய்த பிரதிமை யல்லவென்றும்நமக்கும்தனிமனம்உண்டென்றும்அம்மனத்தின் நல்லறிவுக்கேற்ப நடக்கும் தீரம் உண்டென்றும் அவனுக்கறிவித்தல் வேண்டும். வழிவிலகிக் குறுக்கு வழியில் செல்லுவதாய்க் கண்டதும் பின்னிடைந்து போனவழியே திரும்புதல் நலம். பெருங்குற்றங்கள்செய்யாமல் தற்காத்து கொள்ளற்கு உபாயம் சிறுந்தவறுகளைக் கண்டுழி அங்கங்குலைவதே. ஆகையால் படுகுழியில் வீழ்த்துமுன் வண்டிக்காளையின் மூக்கணாங்கயிற்றை இழுத்துப் பிடித்தல் ஏற்றது. நட்டான் மனத்தைப் புண்ணாக்குவது பேரிழவல்ல, நம் நடுவு நிலைமையையும் குணத்தையும் நடத்தையையும் இழத்தலினும். திரும்புகால் சந்தில் நடக்க நாணப்படக் கரையில்லை. பயங்கொள்ளி, புறந்தருவோன் என்று இகழப்படுதலைக் கண்டு ஏங்கவேண்டா, தீவழியிலிருந்து நல்வழியிற்றிரும்புங்கால். "வழியே ஏகுக, வழியே மீளுக" ஆதலின். என்றென்றைக்கும் எரிவாய் நரகத்தில் வீழ்ந்து படுதலினும் வளம்பார்த்து விழித்துத்திரும்புதல் எவ்வளவோ மேல். நா இன்புறநக்கிக்கொல்லும் கவையமாபோல் நயத்தகு நாகரிக வார்த்தைகள் பேசுவோரைக் கேட்டு செயத்தகாதன செய்துசாவற்க. பொன்கத்தி யென்றுகழுத்தையறுத்து கொள்ளலும் ஒன்று. நல்ல நிலையில் ஊன்றிநிற்கவும், மலைசலிப்பினும் மனஞ்சலியாது அந்நிலையைப் பற்றி நிற்கவும் கற்றல் கோடி பெறும். "மாட்டேன்" என்று சொல்லத்தெரிந்தால், அநேகம் வேதபுராணங்கள் படித்தறியவேண்டியநீதிகள் தெரியவேண்டாவாம். பல்லோர்க்கும் தோழனாயிருப்பவன் ஒருவனுக்கும்சிநேகிதன் ஆகமாட்டான். இல்லையேல் ஊராரை ஊட்டி வளர்ப்பதில் தன் பெண்டுபிள்ளைகள் உண்ணுஞ் சோற்றில் உப்புமண்ணைத் தெள்ளியடிக்கும் திருடனாவான். மற்றெல்லாக் காரியங்களிலும் போ

லவே ஔதாரியத்திலும் பகுத்தறிவு வேண்டும். பாத்திரமறிந்தே பிச்சையிடவேண்டும். மிகவும் கோழை மனதுள்ளோன் தன் மக்களுக்குக்குரூரமுள்ளவனுக லாம்; அவர்கள் தின்னுஞ் சோற்றைப்பிடுங்கி, வயிறு நிறையும்வரை வாழ்த்திப் பின் வசைபேசும் வீணர்க் கிட்டுவப்பின். சிநேகிதன் என்று கடன்கொடுத்து தவுவோன் இறுதியில் பணத்தையும் சிநேகிதனையும் இழத்தல் இயல்பு. பிணைப்பட்டுத்துணைபோவோன் சந்தியில் திண்டாடிநிற்பான். போனல் போகட்டு மென்றுஒருவன் தன்கையிலிருந்து இழக்கத்துணியும் தொகைக்குமேல் எப்போதும் பிணைப்படல் நியாய மற்றது. "பிணைப்பட்டுத் துணைபோய் நீ நிற்கவேண்டாம்" என்ற உலகநாதன் நீதிமொழி நிலைத்த மொழியே.

நமக்குப் பிறர் தீங்கிழைத்தகண்ணே, இழைத்தோர்மாட்டுக் காய்தலகற்றிப் பொறுத்துநிற்பதே பெருந்தன்மை. ஆனல் அத்தீங்கின் கொடுமையை நாம் அறியாததுபோல் நடிப்பது அறிவின்மையாம் அப்படிச் செய்வது நம்பகைவரை மற்றுந் தீங்கிழைக்கக் கையால் விளிப்பது போலாகும். அவர்கள் மனந்துணிந்து மறுபடியும் உதைக்கத் தலைப்படுதல் உறுதியே. "சிறியபகையெனினும் ஓம்புதல் தேற்ருர் பெரிதும் பிழைபாடுடையர்." ஒருவனிடத்தில் இரண்டுதரம் ஏமாந்த ஏழை மோசஞ்செய்வதனினும் மோசமானவனே. நம்முடைய சுதந்தரங்களையும் நியாயத்தையும் அப்போதைக்கப்போது அற்றுத் தீர்த்துக் கைப்பற்ரு விட்டால் பின்னர் ஏதிலரை நோவதெவன்? அமரருள் உய்க்கும் அடக்கமும் அமரிக்கையும் அமைந்தவனேனும் அவனும் மனிதனேயன்ருே? உப்பும் சோறும் உணர்ச்சியோடு தின்னும்பொழுது ரோஷம் எங்கே போகும்? அநேகருக்கு இந்தப் பாடம் சொல்லித் தரவேண்டியதேயில்லை. தங்களை யாரேனும் அவமதிப்பதாய் மனதுக்குப் பட்டால்போதும். உடனே பாம்பு படமெடுத்துச் சீறுதல்போல இவர்களும் சீற்றத்தை ஏற்கிருர்கள். கதவண்டை சத்தஞ்செய்தது திருடனு நாயா என்றறியத் தாமதிக்காமல் கல்லெடுத் தெறிவதிலேயே கண்ணுயிருப்பார்கள். அத்தகையோர் அண்டையிலிருப்பதும் அடுக்காது. முன்கோபக்காரரோ டிணங்கவேண்டாம் என்பது உலகநீதி. அடக்காக் கோபங்கொள்வாரோடு உரையாடவும் ஒண்ணுது. உள்ளத்தைக் கவர்ந்து எழுந்து ஓங்கும் சினத்தைக் காத்துக்கொள்ளக்கூடியவர்களே குணசாலிகள். ஆத்திரக்காரன் என்மேறன்றைக்கும் முழுமூடனே. நாவடக்கமின்றித் துடித்துப் பேசுவோனை நல்வழிக்குத் திருப்புவதினும் நாயின்வாலைக் குணக்கெடுத்தல் கூடுமான காரியம். கொண்டது விடாமையில் முதலையும் மூர்க்கனுமொன்றே. தலையைத் துணித்தாலுமவாயிற் கௌவியதை முதலைவிடாதது போல தான்கொண்ட கொள்கையால் எத்தனை கேடுவிளைந்தாலும் மூர்க்கனும் தான் பிடித்த பிடிவாதத்தைவிடான். கருப்புநாயை வெள்ளை நாயாக்கினுலும் ஆக்கலாம். செங்கல்லைத் தேய்த்தலம்மி சலவைக்கல்லும் செய்யலாம். மூர்க்கனை மாத்திரம் நல்வழியில் திருப்பலாகாது. சரியோதவருே அவன் பிடித்ததே அவனுக்கு வேதப்பிரமாணம்.

> "கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறுஉம்
> குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்தும்
> தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
> ஏதிலரை நோவ தெவன்."

> "வைகலு நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
> மெல்லென்றல் சால வரிதாகுமஃதேபோல்
> வைகலு நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக்
> கல்லினும் வல்லென்னு நெஞ்சு."

ஆனல் பிடிவாதத்தில் பேதவகையுமுண்டு. கொண்ட கொள்கை நல்வழிப்பட்டதேல் பிடிவாதமே பீடுபெறச்செய்வதாம். அப்போதைக்கு உலகத்துக்கு ஒவ்வாத வேனும் தம்மதம் நிறுவியதோடு புகழுடம்பையும் நிறுவியமேலோர் பிடிவாதத்தையே அடிப்படையாக்கொண்டவர்கள். தன்மார்க்கத்தில் பிடிவாதங் கொள்வோர்களோ அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தங்களைத் தாங்கி நிற்போருக்கே நல்ல பெயர் பெறுவிப்பார்கள். பிடிவாதங்கொண்ட முழுமகன் ஆச்சாமரத்தில் ஆணியறைய கைமுஷ்டியால் தாக்கினல் ஆணிதான் கையிற் றைக்கும் என்பதையறியான். தான் கேட்கும் விலைவரும் வரையில் விற்பதில்லையென்று தவசத்தை (தானியத்தை)க் குதிரில் கூட்டிவைத்தால் எலி தின்றுதீர்க்காமல் விட்டுவிடுமா? ஆத்திரத்தில் செய்துகொண்ட பிரதிக்ஞைகளை அடுத்த க்ஷணத்தில் மறப்பதேமேல் எவனொருவன் மாறுபாடிலனே அவன் என்றும் பேம்படுதலும் இல்லையாம். வணங்கத்தெரியாதவன் வெற்றியடைதலுமில்லை.

சிறுவர்கள்விஷயத்தில் நாம் எப்பொழுதும் சுமுகமாயிருத்தல் அவசியமேனும் மனவுறுதியுள்ளவர்களா

யுமிருக்கவேண்டும். அவர்கள் மனம் போனபோக்கெல்லாம் விட்டுவிடவுங் கூடாது. போகும்வழியில் எல்லாம் எப்பொழுதும் குறுக்கே நிற்கவும் கூடாது சிறுவர்கள் அழும்பொழுதெல்லாம் அவர்கள் கேட்பதையெல்லாம் கொடுத்துச் சீராட்டினால் பிறகு அவர்கள் தறிதலைகள் ஆவதற்கு சந்தேகமும் உண்டோ? தத்தாரி கொண்டுசெருகிசேர்த்துப்பாடக்கற்போனும்செல்வமாய்வளர்ந்தகுழந்தையும்ஈட்ட இருந்தாலும் வேண்டாவிருந்தே.பருவத்திலேயேஅவர்களைநல்வழிப்படுத்தி கோணலைநிமிர்த்தாவிட்டால் பின்னுக்கு அச்சிறுவர்கள் ஊரார்க்கு உதவாக்கழுதைகள் ஆவதுமன்றிபெற்றோர்மனத்தையும் புண்ணுக்குவார்கள்."பழியின்மை மக்களாற்காண்க" என்றதுநான்மணி. அடியாதபிள்ளை படியாது.

"வருத்தவளைவேயரசர் மாமுடியின்மேலாம்."சிறுவர்களைக் கண்டித்துக் கூப்பாடுபோட்டுப் போட்டுத் தலைவலிக்கின்றதென்று தயங்குவோர்பின் அவர்கள் வயதுவந்து செய்யும் தீக்கருமங்களைக் கண்டு மனம் முறியவேண்டி வருமென்பதைக் குறிக்கொள்வாராக. நாம்சிறுவர்களோடு பேசும்பொழுதெல்லாம்உண்மையேபேசல் வேண்டும். விளையாட்டாகக்கூட வெள்ளுரைகள் பேசலாகாது. உண்டென்றால் உண்டாகவே இருக்கவேண்டும். இல்லையென்றால் இல்லையாகவேயிருக்கவேண்டும். ஒருதரம் இப்படியும் ஒருதரம் அப்படியும் மாறிப்பேசலாகாது. குழந்தைகளுக்கு ஒன்று கொடுப்பதாய்ச் சொல்லிப் பின் கொடுக்கமறக்கலாகாது. தின்னத்திண்டியானாலும்சரி,கன்னத்தில் அடியானாலும் சரி,சொன்னதற்குப்பிறகு கொடுத்தேதீரவேண்டும். என்ன செய்யவேண்டிவந்தாலும்சரி கட்டளைக்குக்கீழ்ப்படிந்து நடக்கக் கற்பிக்கவேண்டும். கட்டளை மீறிச்செல்ல அணுவளவும் இடங்கொடுக்கலாகாது. "ஏவாமக்கண்மூவாமருந்து".நம்மைஏவும் மக்களைப்பெற்றால் இளமையிலேயே மூப்படைவோம். அவர்கள் நன்மையை நாடியே நாம் சொல்வதைக் கேட்கச் செய்யவேண்டும். ஒருதரம் நம் கைப்பிடியிலிருந்து அவர்கள் நழுவினால் பின்பு அவர்கள் பிடிக்கு அடங்க மாட்டார்கள். ஆனால் நாமும் சிறுவர்கள் கோபம் மூளும்வரை அவர்களைத் துரத்தலாகாது. பிறகு மனம் முறிந்து எதிர்த்துப் பேசுவார்கள். ஆகையால் எப்பொழுதும் ஸர்வேசுவரனுடைய ஆணையை யனுசரித்தே நம் மனைவாழ்க்கையை மாட்சிமைப் படுத்துவோமாக. அவரும் நம்மையும் நம் வழிவந்தோரையும் வாழ்த்திப் பேரருள் புரிவார்.

ஜ. வே. சுப்பிரமணியம்.

# நாம் குடிக்கும் தண்ணீர்

## THE WATER WE DRINK

நாம் உட்கொள்ளும் உணவில் முக்கியமான பாகம் ஜலமென்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். நம் சரீரத்தின் மூன்றில் ஒரு பாகம் எடை ஜலம். சாப்பிடுகிற கட்டி ஆகாரங்களுடைய சாரம் இரைப்பையினின்று ரக்தத்தில் சேர, ஜலத்தில் கரைந்தே சேரவேண்டும். தேகத்தின் கழிவு பதார்த்தங்கள் தேகத்தைவிட்டு வெளிவருவது ஜலத்தில் கரைந்தே வியர்வையாகவும், மூத்திரமாகவும் வெளிவரவேண்டும். தேகத்தில் நடக்கும் சகலவிதமான மாறுதல்களுக்கும் ஜலம் முக்கியமானது. ஆகையினாலே நாம் ஜலத்தைப் பலவிதமாக உட்கொள்ளுகிறோம். நாம் கெட்டியாகாரமென்று சாப்பிடுவதெல்லாம் முக்கால்பங்கு ஜலமாக இருக்கும் அது தவிர சுத்தஜலமாகவும், வேறு திரவ பதார்த்தங்களாகவும் தண்ணீரை உட்கொள்ளுகிறோம்.

நாம் சாப்பிடும் ஜலம் சுத்தமாக விருந்தால் உடம்பிற்கு ஆரோக்கியமென்பதற்கு சந்தேகமில்லை. எப்படிச் சுத்தமாக விருக்கவேண்டுமென்பதை கொஞ்சம் கவனிப்போம்.

ஜலம் ஆகாயத்தில் நீராவியாகவோ, சிறு துளிகளால் நிறைந்த மேகமாகவோ, இருக்கும்பொழுது சுத்தமாகவே இருக்கிறது. மேகத்தினின்றும் மழைத்துளிகளாகவிறங்கும்பொழுது, வாயுமண்டலத்திலிருக்கிறபலவித வாயுக்கள் அதில் கலக்கின்றன. தரையில் விழுந்ததும்தரையிலிருக்கும் பலவித உப்புகளும் பிராணிகள்புற்பூண்டுகள் முதலியனவின் கழிவுபதார்த்தங்களும் அதினுடன் கலக்கின்றன. இந்த ஜலத்தில்சிலபாகம் தரைக்குள் இறங்கி ஊற்றுகளாகவும், கிணறுகளாகவும், வெளியே வருகின்றது. சிலபாகம் ஓடைகளாகவும், சிற்றாறுகளாகவும், ஓடி பெரிய ஆறுகளிலோ, ஏரிகளிலோ, குளங்களிலோ சேர்ந்து ஜனங்களால் உபயோகப் படுத்தப் படுகிறது. இவ்விரண்டு விதமான ஜலத்திலும் அழுக்குகள், அதாவது அன்னிய பதார்த்தங்கள் கரைந்தோ மிதந்துகொண்டோ இருக்கின்றன. ஆனால் இந்த அன்னிய. பதார்த்தங்களில் சில குற்றமில்லாதனவாயும், சில தூர்க்குணமுள்ளனவாயும் இருக்கின்றன. இந்த தூர்க்குணமுள்ள பதார்த்தங்கள் இல்லாததாய் இருந்தால் அந்த ஜலம் சாஸ்திரப்படி சுத்த

மாய் இல்லாவிட்டாலும், நமதுபழக்கத்துக்கு வேண்டிய சுத்தத்தையுடையதாக நாம் எடுத்துக்கொள்ளலாம்.

ஜலத்திலுள்ள அன்னிய பதார்த்தங்களை இரண்டு விதமாகப் பிரிக்கலாம்: ஜலத்தில் மிதப்பவையென்றும், அதில் கரைந்திருப்பவையென்றும். ஜலத்தில் கரைந்திருப்பவை மண்ணிலிருக்கும் உப்புக்களும், ஜீவிய பதார்த்தங்களால் கழிக்கப்பட்ட உப்புக்களும். ஜலத்தில் மிதக்கும் பதார்த்தங்கள் மண்முதலியவைகளும், புல்பூண்டு மிருகாதிகளால் கழிக்கப்பட்டவைகளும், உயிருள்ள அணுக்களும். இவைகளில் மண்ணிலிருந்து கரைந்திருக்கும் உப்புக்களும் மிதக்கும் பதார்த்தங்களும், அதிக தீங்கில்லாதவை. உயிருள்ளவையிலிருந்து கழிவுபடப்பட்ட பதார்த்தங்களும் அணுஜீவன்களுமே அதிக தீங்கு செய்யக்கூடியவை; இவைகளிலும் உயிருள்ளவையிலிருந்து கழிவுபடும் பதார்த்தங்கள் ஜீவிய அணுக்களின் இருப்பையும் அளவையும் குறிப்பிடுவதனாலேயே கெடுதலானவையாயிருக்கின்றன. அதாவது, மனிதமிருகாதிகளின் கழிவுபதார்த்தங்களில் ஜீவஅணுக்கள் அபரிமிதமாக இருப்பதினாலேயும், அவை ஜீவ அணுக்கள் வளருவதற்கு நல்ல ஆஸ்பதமாயிருப்பதினாலேயுமே அதிக கெடுதலுள்ளனவாயிருக்கின்றன. ஏனெனில் ஜலத்தினால் பரவக்கூடிய கொடிய வியாதிகள் எல்லாம் இந்த ஜீவிய அணுக்களாலேயே உண்டாகின்றன.

ஆனால் இந்த அணுஜீவன்களிலும் தீங்கில்லாததும் தீங்கு செய்பவையு மிருக்கின்றன. புற்பூண்டுகள் வளருவதற் குபகாரமாக எவ்வளவோ அணுஜீவன்கள் தரையில்விர்த்தியாய் மண்ணில்அநேகவிதமான உபயோகமுள்ள மாறுதல்களையுண்டுபண்ணிக்கொண்டுவருகின்றன. இவைகள் சாதாரணமாக தீங்கற்றவை. வாந்திபேதி, சீதபேதி, சன்னிபாத ஜுரம் முதலிய வியாதிகளுக்குக் காரணமான அணுஜீவன்களே கெடுதியுள்ளவை இவைகள் எந்த ஜலத்தில் இருக்கக்கூடுமோ, அந்த ஜலம் கெட்டது.

வியாதிக்குக் காரணமான அணுஜீவன்கள், முன் வியாதியாயிருந்த தேகத்திலிருந்துதான் ஜலத்திற்கு வந்திருக்கவேண்டும். ஆகவே மனிதர்கள், மிருகங்கள் இவைகளினுடைய கழிவுபதார்த்தங்கள் எந்த ஜலத்தில் அதிகமாயிருக்கிறதோ, அல்லது அதிகமாயிருக்கக்கூடுமோ, அந்த ஜலம் அபாயமானது. இவ்வித பதார்த்தங்கள் பின்வரும் ஜலாதாரங்களில் அதிகமாக இருக்கக்கூடும்:—

1. மனிதர்கள் வசிக்கும் இடங்களுக்குப் பக்கமாக ஓடி குட்டையில் அல்லது குளத்தில் தங்கும் ஜலம்.

2. வீடுகளுக்குப் பக்கத்தில் (சாக்கடைகளுக்குப் பக்கத்தில்) இருக்கும் ஆழமில்லாத கிணறுகள்.

3. அதிகமாக வஸ்திரந்தோய்த்தல், கைகால் கழுவுதல் முதலிய காரியங்கள் நடந்துவரும் சிற்றூறு அல்லது ஓடைகள்.

அவ்விதமே, மனுஷ்ய மிருகாதிகளின் கழிவுபதார்த்தங்கள் சேராத, அல்லது சேரக்கூடாத ஜலம், தீங்கற்றது. அவையாவன மேல்நிலங்களில் (அதாவது மலை முதலிய ஜனங்களுக்கு சுலபத்தில் எட்டாத இடங்களில்) இருந்துவரும் ஆற்றுஜலம், ஆழமுள்ள கிணற்றுஜலம். இந்த ஜலத்தை அந்நியபதார்த்தங்கள் சேர்ந்து கெடுக்காதபடி வீடுகளுக்குச் சேர்த்துக்கொண்டுவந்து கொடுக்கமுடியுமானால் அது உத்தமமானதென்றே சொல்லலாம். ஆனால் அது சாத்தியமானதா? மலையிலிருந்துவரும் ஜலம் ஆறுகளின் வழியாக சமநிலங்களை யடைந்ததும், நகரங்களினருகாமையிலும், கிராமங்களினருகாமையிலும் ஓடி அங்குள்ள அழுக்குகளையெல்லாம் அடித்துக்கொண்டு போகின்றது. ஜனங்கள் சௌசம் ஸ்நானம் முதலானவை செய்வதினாலும், மாடுகள் முதலியவை கழுவுவதினாலும், ஆற்றுஜலமும் கெட்டுப்போகின்றது. ஆழமுள்ள கிணறுகளின் ஜலமும், ஜனங்கள் கிணற்றோரத்திலிருந்து ஜலமெடுப்பதனால் ஜலம் காலில்பட்டு கிணற்றுக்குள் விழுவதினாலும், கயிறு கையில்பட்டுத் தேய்வதனால் அதில் உள்ள அழுக்கும்நம்உடம்பிலுள்ள அழுக்கும் கிணற்றில் விழுந்து சுத்த ஜலத்தைச் சேர்ந்து கெடுக்கின்றன. ஆதலால் சுத்தமானதும் தீங்கற்றதுமான ஜலம் கிடைப்பது துர்லபமாகிறது.

ஆனால் ஆற்றுஜலம் சுத்தியாவதற்கு சுபாவத்திலேயே ஏற்பாடுகள் இருக்கின்றன. ஆற்றுஜலமானது ஓடும்போது, ஒவ்வொருசமயமும் ஒருபுதிய பாகமானது மேல்வந்து,ஆகாயத்திலுள்ள காற்றில்மோதி அதை உட்கொள்ளுகிறது. அப்படிக் கறைந்தகாற்று ஜலத்தில் கரைந்திருக்கும் அழுக்குகளுடன் சேர்ந்து, அவற்றைக் குற்றமற்ற பதார்த்தங்களாகச் செய்துவிடுகின்றது. ஆனால் இவ்விதமாறுதல், ஆற்றுஜலத்தில் சேர்ந்திருக்கும் அழுக்கு கொஞ்சமாயும், இன்னும் அழுக்குகள் அடிக்கடி வந்து சேராமலும் இருந்தால் மாத்திரமே, பிரயோசன முள்ளதாய் இருக்கும்.

கிணற்று ஜலம் கெட்டுப்போகாமல் இருக்கச் செய்யவேண்டிய உபாயங்களும் கெட்டுப்போன ஜலத்தை சுத்திசெய்யும் விதமும் பற்றி இன்னொரு சஞ்சிகையில் விவரிப்போம்:

K, நாராயண அய்யர், M. B. & C.M.

# புன்னைமரம்

## THE ALEXANDRIAN LAUREL

முன்னுரை:—இம்மரம் நெடுங்காலமாய் நமது இந்தியாவின்கண் உள்ளது. இது பாலுள்ள மர வகையைச் சேர்ந்ததல்ல. நந்தவனத்தில் வைக்கும் மரவகையைச் சேர்ந்தது. தஞ்சை ஜில்லாவிலுள்ள திருமுல்லைவாயிலில் விசேஷமாயுள்ளது. இது பலன்தரும் மரங்களில் ஒன்று.

நிலத்தின் தன்மை:—வெண் மணற்பாங்கானவும் கடற்கரை யோரமாயுள்ளவுமான தரையே விசேஷமானது. செவ்வல், கரும்பாரை, நெய்ஸ் என்னும் பாரை முதலியவைகள் மடித்துப் பொடியானதினால் உண்டாகுந் தரையு முசித்தானது.

பயிர்செய்தல்:—இது பதினறடிக்குஒருமரம்வீதம் பயிர்செய்தல் வேண்டும். நான்கடி அகலம் ஐந்தடியாழம் குழிவெட்டி, அக்குழியாருமாறு இரண்டுநாள் காற்றோட்டமாய் வைத்தல்வேண்டும். அஃதாவது குழியில் எரு முதலியது போடாமல் வைத்தலே. பிறகு மாட்டெரு, ஆட்டெரு, செடிதழை இவை மடித்த எரு, குளத்துவண்டல், நெற்பதர் முதலியவைகளில் கிடைக்கக்கூடிய எருவை அந்தக்குழியில் நாலடி உயரம் போடவேண்டும். பிறகு அதன் மேல் கொஞ்சம் மணற்போட்டு நன்றாய்க் கொத்தி வாங்கி நல்ல விதையாகப் பொறுக்கி அதில் போடவேண்டும். உடனே தண்ணீர் விடவேண்டும். ஒரு வாரம் காலை மாலையும், பிறகு இரண்டுநாளைக்கு ஒருமுறை வீதம் ஒரு மாதமும், பிறகு நாலுநாளைக்கு ஒருமுறை ஆறுமாதகாலமும் தண்ணீர் விடவேண்டும். இவ்வரையறையைக்கடந்து மழைபெய்த காலத்தில்நிறுத்தியும், வெயிற்காலத்தில் தாராளமாய்த் தண்ணீர் விட்டுக்கொண்டும் வரவேண்டும். ஒரு வாரத்தில் முளைக்கிளம்பும். பின்னர் சிறுகச்சிறுக வளர ஆரம்பிக்கும். மூன்று வருஷம் வரையில் தண்ணீர் உளற்றிக்கொண்டுவரவேண்டும்.

சாதுபடிசெய்கிற நிலம்:—இது பயிர்செய்கிறதற்காக 100 குழி நிலம் எடுத்துக்கொள்ளுவோம். குழி ஒன்றுக்கு ஒருமரம் வீதம் 100 கன்றுகள் பயிர்செய்யலாம். இந்த நிலத்தைக் குழி போடுகிறதற்குமுன்னமே நாலுதரம் நன்றாய் உழுது அதிலுள்ள புற்பூண்டு வகையறுக்களை நீக்குவது நலம்.

வேலியடைத்தல்:—இந்த நிலமுழுவதையும் நாலு பக்கத்திலும் 6 அடியுயரம் வேலியடைக்கவேண்டும். இது எதற்காகவென்றால் குழிகளையும் முளைகளையும் ஆடுமாடு முதலியவைகள் மிதித்து கெடுதிசெய்யா வண்ணமே. சற்று வளர்ந்தபோதிலும் வேலி யவசியம். இல்லாவிடில் எருமைமாடுகள் தன் தேகத்திலுண்டான அரிப்பை அந்த செடிகளில் உறைந்து போக்கிக் கொள்ளுகிற வழக்கமுண்டு. இதனால் செடிகளின் கிளைகள் முரிந்து கெடுதியுறுகின்றன. ஆடுமாடு முதலியவைகள் இந்தச் செடிகளை கெடுதி செய்யாமல் பாதுகாத்து வரல்வேண்டும்.

மராமத்து:—ஆடிமாதத்திலும், தைமாதத்திலும் ஒவ்வொரு குழியையும் செவ்வையாக மூன்றடியாழம் கொத்தி பாத்திகட்டவேண்டும். அந்தந்த செடியின் உதிர்ந்த இலைகள் அந்தந்த செடிக்கே எருவாக உபயோகப்படுமாறு செய்தலே நலம். மழைத்தண்ணீர் இந்த பாத்திகளில் நின்று அந்த எருவின் சாரம் வேர்களில் உறைக்குமாறு செய்கிறது. இதனால் செடி நன்றாய் வளர ஏது வுண்டாகிறது.

வளர்ச்சி:— இது ஒழுங்காய் வளருந்தன்மை யுடையதல்ல. கோணலாகவே வளர்கிறது. வேரிலிருந்தே கிளைகள் கிளம்பி தாய் மரத்தோடு வளர்கின்றன. நாலாபக்கங்களிலும் பெரிய கிளைகள் உண்டாகிற குணமுடையது அல்ல. இதன் மேல் பட்டை முண்டும் முடிச்சுமாகவே இருக்கிறது. பெரிய மரமாக வளர்ந்து சுமார் 100 வருஷகாலம் வரையில் இருக்கிறது.

நிறம்:—எப்பொழுதும் பச்சையாக விருக்கிறது. மரமும் கருப்புநிறமே.

பலன் தரும் காலம்:—ஐந்துவருஷத்திற்குமேல் ஏழுவருஷத்துக்குள் காய்ப்புக்கு வந்துவிடும்.

இலை:—பசு நிறமுள்ளது. இம்மரம் ஏகதேசம் இலையுதிர்க்குந் தன்மையுடையதல்ல. இதுகள் சாப்பிடும்கலன்களாக உபயோகப்படுகின்றன. அன்றியும் கழனிக்கு எருவாக உபயோகப்படுகின்றன. ஆடு தின்னும் பாலையைத் தவிர எல்லாச்செடிகளையுந்தின்னும் குணமுள்ள ஆடும் இந்த இலைகளில் சிறுகசப்பு இருப்பதினால் இதை ஆகாரமாக தின்னுகிறதில்லை. இலையில் ஓர்விதமான பாலிருக்கிறது; காம்புகளிலுமுண்டு. இதுகள் மெருகுத்தாள்களாக உபயோகப்படுவதாகத் தெரிகிறது.

பூ:—மணமுள்ளது. பூஜைக் குபயோகமானது. வருஷத்திற்கு இரண்டுமுறை பூத்து இரண்டுமுறை பலன் கொடுக்கக்கூடியது. சித்திரை, வைகாசி மாதங்

களிலும், கார்த்திகை, மார்கழி மாதங்களிலும் பூக்கிறது. புன்னைமரம் பூத்திருக்கும்போது பார்த்தால் செவ்வையாய் அலங்கரிக்கப்பட்ட தேருக்குச் சமமாக விருக்கும். மணமும் நெடுந்தூரம் வீசும்.

காய்:—சித்திரை வைகாசியில் பூத்துக் காய்த்து கார்த்திகை மாதம் பலன் கொடுக்கிறது. கார்த்திகை, மார்கழியில் பூத்து காய்த்து ஆனி மாதத்தில் பலன் கொடுக்கிறது. மரத்தில் பழமும் பூவும் கலந்திருக்கின்றன.

பழம்:—கொஞ்சந் தித்திப்புள்ளது. ஏழைகள் இதை உண்கிறார்கள். பழம் அதிக சதைப்பத்துள்ளதாக விருக்கிறது.

பருப்பு:—கொட்டையை யுடைத்து ஓடு முதலிய வற்றை நீக்கினால் அதனுள் இருப்பது பருப்பு என பெயர் பெறும். இவ்வாறு பருப்பு எடுத்து நன்றாக வெயிலில் எண்ணெய்க் கசிவுண்டாகும் வரையில் காயவைத்துப் பிறகு செக்கிலிட்டு ஆட்டவேண்டும்.

எண்ணெய்:—நெய்போல் உறையுந்தன்மையுடையதல்ல. சிறு கசப்பாக விருக்கும். பலகாரம் முதலிய சிற்றுண்டிகள் செய்யப் பிரயோஜனப்படா. விளக்கு எறிவிடுகிறதற்கு மிகுதியாக உபயோகப்படும். யந்திர முதலியவைகளுக்கு உபயோகப்படுத்தலாம். கல்யாண முதலிய சுபசடங்குகளுக்கு உளர்வலஞ் செய்கிறதற்குத் தீவத்தி எண்ணெயாயும் உபயோகப்படுகிறது. சிலர் தேவாலயங்களுக்கும் உபயோகிக்கிறார்கள். ஆனால் இது கூடாது.

பிண்ணாக்கு:—அடுப்புக்கு விறகாக உபயோகிக்கிறார்கள். நிலத்திற்கு எருவாக மிகுதியாய்ப் பிரயோசனப்படுத்தப்படுகிறது.

மரம்:—ஒழுங்காய் மரம் கிடைக்குமானால் வீடுகளுக்கு உபயோகப்படுத்தலாம். ஆனால் கிடைப்பதரிது. மிதியடிக்கட்டைக்குப் பிரயோஜனப்படுகிறது. ஆனால் விறகாகத்தான் அதிகமாய் உபயோகப்படுத்தப்படுகிறது.

வேர்:—இம்மரங்களுக்கு வேர் அதிகமாய் நாலாபக்கங்களில் பெரிதா இறங்கும் குணமுள்ளது. மரத்தைப்பார்க்கிலும் வேர் ஒழுங்காய் இறங்கும். நல்ல பருமனுள்ளதாகவு மிருக்கும். ஆலயங்களுக்கு வாகனங்கள் செய்யவும் மிதியடிக்கட்டைக்கும் மிகுதியாய் உபயோகப்படுகிறது. மேஜை, நாற்காலி, பெஞ்சிகள்முதலியவைகளுக்குச் சட்டமாகவும்காலாகவு முபயோகப்படுத்தலாம்: மரம் வேர் சிறுபெட்டிகள் செய்யவும் பிரயோஜனமே.

செலவு.—இதைப் பயிரிட ஆரம்பித்ததுமுதல் காய்ப்புக்கு வரும்வரையில் நிலத்தின் சொந்தக்காரர் மேற்பார்வை செலுத்திவரின் ரூ 150-க்கு மேலாகாது. இதைவிட குறைவாகவே யடங்கவேண்டும். இந்தப் பயிருக்கு மூன்று வருஷத்திற்கு பிறகு தண்ணீர் அதிகம் தேவையில்லை. அதிக கவனிப்புந் தேவையில்லை.

மகசூல்விலை:—மரமொன்றுக்கு இரண்டு மகசூல்களுஞ் சேர்ந்து குறைந்தது ஒரு ஆடம் காய்க்கும். ஆடம் 4 ரூபாய் விற்கிறது. எண்ணெய் 6 ரூபாய் விற்கிறது. சிலமரம் இரண்டு மூன்று ஆடமும் சில மரம் கால் ஆடம் அரையாடமும் காய்க்கும். சராசரி வருஷத்திற்கு மரம் ஒன்றுக்கு ஒரு ஆடவீதம் 100 மரத்திற்கும் 100 ஆடம் காய்க்கும். ஆகையால் மொத்த மகசூலின் விலை ரூபா 400. பயிரிட நேர்ந்த செலவுபோக பாக்கி காய்ப்புக்குவந்த முதல் வருஷத்திலேயே ரூபாய் 250 லாபங்கிடைக்கிறது. பிறகு வருஷத்திற்கு ரூபாய் 20 செலவு செய்தால் போதுமானது. பாக்கி லாபமே.

புராணஜதீகம்:—சிவனுக்கும் மகாவிஷ்ணுக்கும் உற்சவாதிகளுக்குப் புன்னைமரம் வாகனமாக உதவுகிறது. ஸ்ரீகிருஷ்ணன் கோபிகாஸ்திரிகளின் ஆடையைக் களைந்துகொண்டுபுன்னைமரத்தில் ஏறிக்கொண்டார்.

கற்பனை:—இவ்வளவு லாபங்கொடுக்கக்கூடிய இந்தப் புன்னைத்தோட்டம் பயிர் செய்யாது நமது காட்டுச்சனங்கள் வீண்காலம் போக்கிக்கொண்டும், வீண்பேச்சுப் பேசிக்கொண்டும் வாழ்நாளை வீணாக்கிப் பஞ்சத்தால் மோதுண்டு வருந்தி யுழலுகின்றனர். காலத்தின் அருமையும், உழைப்பின் பெருமையும் நன்குணர்ந்து இந்தமாதிரி பலன் கொடுக்கக்கூடிய தோட்டங்களைப் பயிர்செய்து தக்கலாபத்தை யடைந்துசெல்வாழ்க்கையோடு வாழவேண்டு மென்பதே நங்கொள்கை. இதை வாசிக்கும் கனவான்களில் ஒருவருக்காவது இப்பயிர் செய்து லாபம் அடையலாமென்கிற எண்ணம் உண்டாகாதா என்பதை யோர்ந்து இவ்வியாசம் எழுதப்பட்டது.

பு. து. இரத்தினம் பிள்ளை.

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

---

பண்டித நடேச சாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு

மூன்றாவது சருக்கம்

34. சிவபெருமானுடைய தபோவனத்திலிருந்த முனிவர்கள், இவ்வாறு காலமல்லாத காலத்தில் வஸந்தன் தோன்றியதைக் கண்டு, வெகு சிரமத்துடன் தங்களுடைய மனோவிகாரங்களை அடக்கிக்கொண்டு தங்கள் மனதைச் சட்ட வெகு சிரமப்பட்டார்கள்.

35. அன்றியும் அவ்விடத்தில் மன்மதன் தன் தோளில் வில்லைத் தாங்கிக்கொண்டு ரதியுடன்கூட வரவே ஸ்தாவர ஜங்கமங்கள் எல்லாம் அதிக அன்பின்ரஸத்தோடுகூடிய சிருங்கார சேஷ்டையை செய்கையால் வெளியிடலான.

சிருங்காரசேஷ்டை.

36. வண்டுகள் மலர்களாகின்ற ஒரே பாத்திரத்தினின்று தேனை தங்கள் நாயகிகளுடன் அவர்கள் குடித்தபின் குடிக்கலாயின. கிருஷ்ணஸார மான் தங்கள் பேடுகளை அவைகள் ஸ்பர்சசுகத்தால் கண்களை ஆனந்தமாக மூடிக்கொண்டு ஸந்தோஷிக்கும்படி தங்கள் கொம்புகளால் சொறிந்துகொடுக்கலாயின.

37. தாமரைத்தாதின் மணம்வீசும் உமிழ்ஜலத்தை பெண்யானையானது அதிக அன்புடன் ஆண்யானைக்குத் தன் துதிக்கையால் கொடுக்கலாயிற்று, சக்கிரவாகப்புள் தான் பாதி புசித்துமிருந்துநின்ற தாமரைத்தண்டை புசிக்கும்படி தனது நாயகியிடம் கொடுக்கலாயிற்று.

38. சிரமத்தால் தோன்றிய வியர்வைத் திவலைகளால் கொஞ்சம்தங்கள் பச்சையிலைப்பொட்டுகள் கலைய மலர் மது உண்டு கண்கள் சுழலவிளங்கும் தன் காதலியின் முகத்தை கிம்புருஷன் அவள் பாடி ஓய்ந்ததும் முத்தமிட்டுக்கொள்ளலானான்.

39. நன்றாக மலர் நிரம்பிய பூங்கொத்துக்களை ஸ்தனங்களாகவும், பிரகாசிக்கும் இளந்தளிர்களை மனோகரமான உதடுகளாகவும் பெற்று அழகான மடந்தைகள் போல் விளங்கும் கொடிகளை வளைந்த தங்கள் கிளைகளாகின்ற கைகளால் மரங்களும் தழுவிக்கொள்ளலாயின.

40. அவ்வண்ணம் வசந்தன் விளங்கிய காலத்தில் அப்சரகானம் இடைவிடாமல் காதில் விழுந்து கொண்டே யிருந்தபோதிலும் ஈசன் தனது தவத்திலேயே முற்றிலும் ஆழ்ந்தியவராகவே யிருந்தார். ஐம்புலன்களையும் அடக்கி ஆளும் துறவிகளுக்கு இவ்விதமான இடையூறுகள் தவத்தைக் கெடுக்கும் வலிமையுள்ளவைகளாகாவன்றோ!

41. அச்சமயத்தில் நந்திகேசுரரும் தனது இடது கையில் பொற்பிரம்பு பிடித்து ஒருவிரலை தனது மூக்கின் நுனியில் வைத்து சிவபெருமான் கொடிவீட்டு வாயிலில் நின்றுகொண்டு பிரமதகணங்களை நோக்கி "சபலம் வேண்டாம்" என்று கட்டளையிடலானார்.

42. அவ்வாறு அவர் கட்டளையிட்டதும் மரங்கள் அசைவற்றும் வண்டுகள் ஒலியற்றும் பறவைகள் கூச்சலற்றும் மிருகங்கள் சஞ்சாரமற்றும் அக்காடு முழுவதும் சித்திரத்தில் எழுதப்பட்ட காடுபோல் சலனமே யில்லாமல் விளங்கலாயிற்று.

43. ஒர் ஊருக்கு பிரயாணம் புறப்படுகின்றவன் தான் போகும்திசையில் சுக்கிரனிருக்கக்கண்டால் அத்திசையை எவ்வண்ணம் துறப்பானோ அதுபோல மன்மதனும் ஈசனுக்கு எதிராகப் போவதைவிட்டு அச்சிவபெருமானுடைய பக்கங்களில் தேவதாருப் புதரடர்ந்து விளங்கும் இடத்தை நாடி அவருடைய தபோவனத்தில் நுழைந்தான்.

44. தனது சரீரத்தை ஒழிக்கவெகு ஸமீபகாலத்தை அடைந்துநின்ற அந்தமன்மதன் தேவதாருமரங்களின்கீழ் ஓர் திட்டாணியின்மேல் புலித்தோல் விரித்து தவத்தில் ஆழ்ந்தி அம்முக்கண்ணன் உட்கார்ந்திருக்கக் கண்டான்.

தவந்திலிருந்த சிவபெருமானுடைய வருணனை.

45. வீராஸனம் போட்டுக்கொண்டு நிஷ்டையிலுட்கார்ந்த காரணத்தால் தமது முன்தேகம் அசைவற்று, நேராக நிமிர்ந்து கொஞ்சம் வளைந்து விளங்கிய இருதோள்கள் எடுத்துக்காட்ட தமது இரு உள்ளங்கைகளையும் மேல்காட்டி ஒன்றின்மேல் மற்றொன்றை தனது மடியில் தாமரைமலர் பூத்ததுபோல் விளங்க வைத்துக்கொண்டு சிவபெருமான் தவம்புரிந்தார்.

46. தமது ஜடாஸமூகத்துமேல் தூக்கி புஜங்களால் கட்டி தமது காதுகளில் இருமடிப்பாகருத்தி

ராக்ஷமாலை தரித்து தமது கழுத்தண்டைமுடிபோடப்பட்டகாரணத்தால்அதிகக்கருப்பாக விளங்கும் கருப்பு மான்தோலை மேல் போர்த்தியவராய் சிவபெருமான் தவம்புரிந்தார்.

47. கொஞ்சம் பிரகாசித்துக்கொண்டு அசைவற்றவைகளாயும் வெகு உக்கிரமுள்ளவைகளாயும் காணப்பட்ட கருவிழிகளை உடைய கண்களினால் புருவங்களின் அசைவு என்பது முற்றிலுமின்றி ஒளிமுழுமையும் கீழ்நோக்கிப் பாயத் தமது மூக்கின் முனையைக் குறியாகப் பார்த்துக்கொண்டு சிவபெருமான் தவம்புரிந்தார்.

48. தமது தேகத்துக்குள் புகுந்து சஞ்சரிக்கும் பிராணுபான முதலியவாயுக்களை அடக்கிய காரணத்தால் மழையின் குழப்பத்துக்கு முந்தி சஞ்சலமற்று விளங்கும் மேகம்போலும் அலைகள் ஓய்ந்து நிற்கும் குளம்போலும் காற்றற்றவிடத்தில் அசைவற்று எரியும் விளக்குபோலும் ஈசனர் விளங்கினர்.

49. பிரமகபாலக் கண்ணினின்று மேற்கிளம்பிய சோதியால், தாமரைத்தண்டு நூலினும் மிருதுவாய் விளங்கும் இளம் சந்திர கலையின் அழகை வாடும்படி செய்துகொண்டு சிவபெருமான் தவம்புரிந்தார்.

50. ஒன்பது வழிகளையும்கட்டி மனதின் சஞ்சாரத்தை அடக்கி சமாதியினுல் வசமாக்கிக்கொண்ட அழிவற்றஆத்மாவென்று பெரியோர்கள் முறையிடும் தமது ஆத்துமாவை தம்மிடத்திலேயேகண்ணுற்றுக்கொண்டு சிவபெருமான் தவம்புரியலானர்.

51. அவ்வாறு தவம்புரிந்துகொண்டு மனத்தால் கூட அணுகமுடியாதவராய் விளங்கிய அச் சிவபெருமானை மன்மதன் சமீபத்தில் கண்டதும் பயத்தால் மெய் பதறி தனது கையைவிட்டு நழுவிவிழுந்த பாணத்தையும் வில்லையுங்கூடக் கவனியாதவனுய் கலங்கலானுன்.

52. அவ்வாறு அழிந்த அவன் பலத்தை தனது மேனியின் அழகால் மறுபடி மூட்டிவைப்பவள் போல் அச்சமயத்தில் பார்வதி வனதேவதைகளால் தொடரப்பட்டு அவ்விடம் வந்து தோன்றினள்.

53. பதுமராகமணியின் அழகை தனது அழகால் விலக்கிய அசோகமலர்களையும் பொன்னின் ஒளியைத்தனதுஒளியால் வென்றகர்ணிகாரமலர்களையும் முத்துகளின் மாலைபோல் விளங்கிய ஸிந்துவார மலர்மாலையையும் வஸந்த காலத்தில் மலர்ந்தமலர்களையே தனது ஆபரணங்களாய் அணிந்து அவ்வம்மணி வந்தாள்.

54. தனது ஸ்தனபாரத்தால் கொஞ்சம் வளைந்தவளாய் இளஞ்சூரியன் காந்திக்கொப்பான காந்தியுடன் சோபித்த வஸ்திரமுடுத்தி அவ்வுத்தமி நன்ருக மலர்நிரம்பிய பூங்கொத்தால் வளைந்து இளந்தளிர் எடுத்து நடமாடும் கொடிபோலும் காணலானுள்.

55. வைக்கவேண்டிய இடமறிந்து மன்மதனுல் தனது வில்லுக்கு இரண்டாவது நாண்கயிறுபோல் வைக்கப்பட்டு சோபித்துக்கொண்டிருந்த மகிழமலர் மாலையாகின்ற ஒட்டியாணத்தை அது தனதுஇடையைவிட்டு நழுவும் பொழுதெல்லாம் தனதுகையால் பற்றிக்கொண்டு அப்பார்வதி வந்துகொண்டிருந்தாள்.

56. மணம்வீசும் தனது முகக்காற்றைக் குடிக்க ஆசையுடன் பறந்துவந்து தனது உதட்டினருகாமையில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் வண்டுகளை வெருண்ட கண்களுடன் அடிக்கடி அவ்வுத்தமி விளையாட்டாகத்தான் தனது கையில் பிடித்துக்கொண்டுவந்த தாமரைமலரால் ஓட்டிக் கொண்டே வந்தாள்.

57. ஓர் அவயவத்திலாவது கொஞ்சமேனும் ஊனமின்றி விளங்கிக்கொண்டும் இரதிதேவிக்கும் வெட்கத்தை உண்டுபண்ணிக்கொண்டும் நின்ற அம்மாதரசியை மன்மதன் பார்த்ததும், சிவபெருமான் ஐம்புலன்களையும் என்னதான் அடக்கினவர் என்றிருந்த போதிலும் தனது காரியம் முடிவுபெற்றது என்று மறுபடியும் எண்ணலானுன்.

58. உமையும் தனக்கு இனிமேல் கணவராகப் போகும் சம்புவின் இருப்பிடத்தின் வாயில் வந்து நின்றுள். அக்கணத்தில் சிவபெருமானும் தமக்குள் பரமாத்மாவை யோகக்கண்ணுல் கண்டுவிட்டு தமது நிஷ்டையை முடித்தார்.

59. அதுவரையில் பாதாளஉலகத்தில் வெகுசிரமப்பட்டு மூச்சுபிடித்து தனது படத்தின்மேல் பூமியைத்தூக்கிக்கொண்டு நின்ற ஆதிசேஷன் கொஞ்சமிளைப்பாற ஈசன் மெதுவாக தமது மூச்சைவெளிவிட்டு வீராஸனத்தை உடைத்து உட்காரலானர்.

60. அப்பொழுது நந்திகேசுவரன் அவரிடம் வந்து வணங்கி பணிவிடைசெய்ய பார்வதி வந்திருப்பதாகத் தெரிவித்தான். அவர் புருவத்தை அசக்கியதால் யஜமானுடைய உத்தரவாயிற்றென்பதை அறிந்துகொண்டு அப்பார்வதியை உள்ளே போகவிட்டான்.

61. பார்வதி தான் நமஸ்காரம் பண்ணுவதற்கு முந்தி தனது தோழிகள் தங்கள் கைகளால் செய்துகொண்டுவந்திருந்த வஸந்தகாலத்திய மலர்களை இடையே தளிர்களும் கலந்துநிற்க தனது கைகளால் எடுத்து ஈசனுடைய திருவடிகளில் இறைத்தாள்.

# நீலி வசீகரம்

## TAMING OF THE SHREW

(217-ம் பக்கத்தொடர்ச்சி)

(ஒரு சேவகன் வருதல்.)

சே.—அம்மா! படித்தது போதுமென்றும், புத்தகங்களைக் கட்டிப்போட்டுவிட்டு வரச்சொல்லுகிறார், பெரிய எஜமானர்; நாளைக்கு உங்கள் அக்காளுக்குக் கல்யாணமல்லவா?

வசி.—உபாத்தியாயர்களே! நான் போய்வருகிறேன் (வசிதேசுவரியும் சேவகனும் போதல்.)

விஜ.—ஆனால் நானும் போகவேண்டியதுதான் எனக்குமாத்திரம்இங்கு என்னவேலை. (போதல்).

பிர.—இந்தப்பையல் எதோ மையல் கொண்டிருக்கிறான்போல் காணப்படுகிறான்.—வசிதேசுவரி! இந்த அற்ப எண்ணம் உனக்குத்தகாது, தகாது (போதல்.)

களம் 2. மதுரை: ரகுநாததேவன்வீட்டு முன் மண்டபம்.

(ரகுநாததேவர், பென்னம்பலதேவர், சுப்பராயன், கௌதமி, வசிதேசுவரி, விஜயராகவ உடையார், பரிவாரங்கள், வருதல்.

ரகு.—(சுப்பராயனை நோக்கி) விஜயராகவ உடையாரே! இன்றையதினம் முகூர்த்த நாளென்பதை மறந்துபோயிருப்பாரா? நாராயணத்தேவர் கல்யாணத்தை மறந்துபோய் வராமலிருக்கக்கூடிய காரணம் என்னவாகவிருக்கும்? வராமற்போனால் ஜனங்கள் என்ன சொல்வார்கள்! பரிகாசம் ஒரு பக்கம்; சேகரம்செய்தசாமான்கள் வீணாவது ஒரு பக்கம்; கல்யாணத்துக்கு வந்திருக்கும் உறவினர்கள் கைகொட்டிச் சிரிப்பார்களே! உமக்கு என்ன தோன்றுகின்றது? பெரும் அவமானம் வந்துவிட்டதே.

கௌ.—எனக்கல்லவா அதிக அவமானம்; யாரோ ஒரு பைத்தியக்காரனுக்கு என்னைக் கொண்டுபோய்த் தள்ளிவிடவேண்டுமாக்கும்! அவன் ஒரு சர்வ மூடனென்று முன்னமேயே சொன்னேன்; அதை ரூபித்துவிட்டானல்லவா? கல்யாணம் நிச்சயம் பண்ணினான்; முகூர்த்தம் வைத்தான்; கல்யாணத்துக்கு வராமலிருந்துவிட்டானே! இது என்ன போக்கிரித்தனம்? வந்து ஒருவேளை கல்யாணத்தையும் முடித்துவிட்டால், ஜனங்கள் என்னைப்பார்த்து "பைத்தியக்காரன் பெண்டாட்டி" என்று சொல்லார்களா?

சுப்:—கௌதமி! பொறுத்திரு; தேவரே! நீங்களும் பொறுங்கள்; நாராயணத்தேவர் வார்த்தைக்குக் கட்டுப்பட்டவர்; ஏதோஅகசமான காரியத்தால் வருவதினின்றும் தடுக்கப்பட்டிருப்பார்; இன்னும் அரைநாழிகைக்கெல்லாம் வந்துவிடுவார் பாருங்களேன்!

கௌ:—என் கதி யிப்படியா இருந்தது? (கௌதமி அழுதுகொண்டுபோதல்; வசிதேசுவரியும் மற்றவரும் உடன்செல்லல்.)

ரகு:—யாருக்குத்தான்இந்தத் துக்கம் சகிக்கும்? அதுவும் கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போனால் அதிக துக்கம் இருக்காதா? அவன் துஷ்டையானாலும் கஷ்டத்தை யநுபவிக்க நான் சம்மதப்படமாட்டேன்.

(கேசவன் வருதல்.)

கேச:—ஐயா! ஐயா! ஒரு வேடிக்கையான சங்கதி!

ரகு.—என்னடா, வேடிக்கை? ஏதாவது பழைய கதையைச் சொல்லுகிறாயோ?

கே.—ஆமாம்; நாராயணத்தேவர் வருவது பழைய கதைதானா?

ரகு.—அப்படியானால் அவர் வந்துவிட்டாரா?

கே.—வரவுமில்லை, ஒன்றுமில்லை.

ரகு.—இப்பொழுது என்னமோ நீட்டி முழக்கினையே, வந்துவிட்டாரென்று?

கே.—வந்துகொண்டிருக்கிறார், வேண்டுமானால் போய்ப் பாருங்கள்.

சுப்.—என்னடா! வேடிக்கை யென்றாயே? என்ன வேடிக்கை?

கே.—என்; நாராயணத்தேவர் வருகிறார்; தலையில் ஒரு அழுக்குத் தலைப்பாகை; அதில் அநேக வர்ணமான ஒட்டுப்போடப்பட்டிருக்கின்றன; உடம்பின்மேல் போட்டிருக்கும் சட்டை எங்கே வாங்கப்பட்டதென்று தெரியாது; ஒருவேளை ஒரு குடுகுடுப்பாண்டியிடம் வாங்கியிருப்பார்; மேலோ குறைந்தது ஆயிரம் துவாரங்களுடன் ஒரு பழைய ஜரிகை வேஷ்டி போட்டுக்கொண்டிருக்கிறார்; துருப்பிடித்த கத்தியொன்று கையில் துலங்குகின்றது; அவர் ஏறிவரும் குதிரையோ, கேட்க

வேண்டியதில்லை; அதற்கு ஒரு கால் ஊனம்; ஒரு கண் குருடு, முழுக்கிழம்; மாதம் காதவழி கூடப் போகுமோ, என்னவோ? குதிரைக்கடிவாளமோ, கப்பாணிக்கயிற்றினால் ஆனது; குதிரையின் சரீரமெல்லாம் புண்; அதோடு முட்டிக்கால் தட்டி; தேவர் காலில் ஒரு காதறுந்த செருப்பும் இருக்கிறது. கூத்தில் கோமாளி வருவதைப்போல சகல ஆடம்பரங்களுடன் வருகிறார்.

ரகு.—அவருடன் இன்னும் யார் வருகிறார்?

கே.—அவருடைய சேவகன் போலவிருக்கிறது. அவனும் அவரைப்போலவேதான் வருகிறான். அவனைப் பார்த்துவிட்டால் பைத்தியக்காரனைப் பார்க்கவேண்டாம்.

சுப்.—என்னத்திற்காக இவ்வாறு வருகிறாரோ? காரணமில்லாமல் அப்படி வரமாட்டார்.

ரகு.—எப்படியாவது வந்துவிட்டுப்போகட்டும், வந்துவிட்டதே போதும்

கே.—எங்கே வந்துவிட்டார்? வரவேயில்லை.

ரகு.—வருகிறார் என்று சற்று முன்பு சொன்னாயே!

கே.—அவருடைய குதிரை வருகிறது; அதன் மீது அவர் ஏறியிருக்கிறார்.

ரகு.—ஏதடா, மடையனாகவிருக்கிறாய்; அப்படியானால் குதிரைவந்தால் அவர் வந்ததாக ஆகாதா?

கே.—ஆகுமா? ஏயப்பா! மனிதனும் குதிரையும் ஒன்றாமே, பெரிய அய்யாவுக்கு!

(நாராயணதேவரும் பொன்னனும் வருதல்.)

நா.—எங்கே, எனக்கு முன்வந்தவர்கள் எல்லோரும் இன்னும் வந்து சேரவில்லையா?

ரகு.—வாரும்; உம் வரவு நல்வரவாகுக.

நா.—ஏதோ அவசரத்தில் வந்துவிட்டேன்; நல்ல வேஷ்டியுடுத்திக் கொள்ளக்கூட சாவகாசம் இல்லை.

சுப்.—ஏன் இவ்வளவு நேரம் தாமதித்து வந்தீர்? நல்ல உடை உடுத்து வரவில்லையே, ஏன்?

நா.—எல்லாம் இது போதும்; இப்படியே போனால் நன்றாகவிராதோ? நான் உங்களுடன் வம்பு பேசிக்கொண்டிருக்கிறேனே! கௌதமி எங்கே?—நீங்கள் என்னைப்பார்த்து வியப்படைந்து நிற்கிறீர்களே! நான் என்ன பேயா? பிசாசா? இதுவரையில் காணப்படாத அதிசய மிருகமா?

ரகு.—என், ஐயா! இன்றையதினம் உமது கல்யாண தினமல்லவா? இதுவரையில் நீர் வாராமலிருந்ததைப்பற்றி விசாரப்பட்டோம்; இப்போது நீர் இவ்வளவு கேவலமான உடையுடன் வந்திருப்பதைப்பற்றி விசாரப்படுகிறோம். இதையெல்லாம் எறிந்துவிட்டு, நல்ல உடைகளைத் தரித்துக்கொள்ளும்; இந்தக்கோலத்தைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லையே!

சுப்.—இவ்வளவு தாமதமேன்? இப்படி அவலக்ஷணத்துடன் வருவானேன்?

நா.—அதைச்சொல்லி என்ன காரியம் முடியப்போகிறது? சொன்னாலும் தாமதமாகும்; உங்களுக்கும் வருத்தமாக விருக்கும்; நான் சமயத்துக்கு வந்துவிட்டேனே! இதுவே பெரிய காரியமல்லவா? கௌதமி எங்கே? முகூர்த்தம் எத்தனை நாழிகைக்கு? இந்நேரம் போய்விடவேண்டாமோ? வாருங்கள் போவோம்.

சுப்:—இந்த அசங்கிய உடையுடன் உன் காதலியைப்பார்க்கக்கூடாது. எனது அறைக்குப்போய், நல் வஸ்திரங்களை உடுத்துக்கொண்டு வாரும்;

நா:—நான் மாட்டவே மாட்டேன்; இப்படியே தான் போவேன்.

ரகு:—இப்படிப்போனால், மணப்பந்தலுக்குள் நுழையக்கூடாது.

நா:—என்ன? எப்படி? அவள் என்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப்போகிறாளா, என்வேஷ்டிகளைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப்போகிறாளோ? நான் உடையை மாற்றவேண்டுமானால், அவளும் தன் குணத்தை மாற்றவேண்டும். உங்களோடுநான் பேசிக்கொண்டு நிற்கிறேனே! இப்போதே போகவேண்டும். (நாராயணதேவரும் பொன்னனும் போதல்.)

சுப்:—ஏதோ காரணத்தோடுதான் இப்படி அவலக்ஷண உடை தரித்து வந்திருக்கிறார்: இருந்தாலும், மணப்பந்தலில் நுழைவதற்கு முன் நல் உடையைத் தரித்துக்கொள்ளும்படி சொல்லிப்பார்ப்போம்.

ரகு:—நான் கூடப்போய் ஏற்பாடு செய்கிறேன். (ரகுநாததேவர், பொன்னம்பலதேவர் கேசவன் போதல்.)

சுப்:—ஐயா! இனி நாம் நமது காரியத்தைக் கவனிப்போம்.—முன் சொன்னதுபோலவே யாரேனும் ஒருவனைப்பிடித்துத் தஞ்சை நல்ல நாயகஉடையாரென்று வேஷம் போட்டுக்கொள்ளச் சொல்லவேண்டும். அவன் அதிக சாமர்த்தியசாலியாக இருக்கவேண்டுமென்றுகூடவேண்டாம்; பேருக்குமாத்திரம் ஒரு பேர் வழிவேண்டும்.

(இன்னும் வரும்.)

ஆங்கிலக் கருத்துகளுக்கு அமைந்த

# தமிழ்ப்பாத்தொகை

## SUITABLE TAMIL VERSES FOR ENGLISH FAMILIAR QUOTATIONS

### மானிடர் எழுபருவம்.

நானிலம் யாவுமோர் நாடக சாலையே.
ஆண்பெண் அனைவரும் அதில் நடிப்பவர்தாம்
மறைவுந் தோற்றமும் மற்றவர்க் குள்ளன.
ஆயுள் நாளில் ஏயபல் வேடம்
எடுத்தவர் புவியில் நடிப்பவ ராவர்.
ஒவ்வொருவருக்கும் ஒரெழு பருவம் ஆம்.
கக்கிக் கதறக்கைப்புறத் தேந்தி
செவிலித் தாய்வளர் சவலைப் பருவமே
பருவங்களில் முதற் பருவமதாகும்
தூண்டாநிற்ப வேண்டா வெறுப் பொடு
புத்தகப் பையொடு நத்தைபோல் ஊர்ந்து
மினுங்கிய வதனம் சிணுங்கிச் சிணுங்கிக்
காலைப் பொழுதில் கல்விக் கழகம்
மெள்ளச்செல்லும் பள்ளிப்பிள்ளை—பின்,
காதலித்திருக்கும் காரிகை தன்னுடைப்
புருவ மாதிய புழுங்கிய மனத்தொடு
தண்பா மாலைசாற்றித் துதித்து
மட்டிலா உலைபோல் நெட்டுயிர்ப் பெய்தும்
காதல ஞரும் காளை.—அதன்பின்,
அதிசயச் சபதமும் அடர்புலித் தாடியும்
பேர் அழியா வகைப்பேணும் நல் ஊக்கமும்
எதற்கும் சண்டைக் கிழுக்கும் படியாச்
சடுதியிற் கோபம் சனிப்பதுங்கொண்டு
நீர்மேற்குமிழிபோல் நிலையிலாப் புகழ்பெற
பீரங்கி வாயில் சிரங்கம் போக்கவும்
சித்தமா இருக்கும் யுத்தவீரன். பின்,
செழிப்புறு சேவற் கொழுப்பினாலாகிய
பேரெழில் வாய்ந்த பேழைபோல் வயிறும்
கூர்த்தாட் சணிய நேத்திரம் இரண்டும்
வழங்கும் காலத் தொழுங்கின் படியே
நறுக்கிய தாடியும் முறுக்கிய மீசையும்
நல்லுப தேசமும் நாடறி வழக்கும்
இன்ன யாவும் இனிதுறக் கொண்ட
பண்பார் நீதிபதி. அதன் பின்னர்
தச்சற் றேகமும் கால்களிற் சோடும்
மூக்கிற் றரித்து நோக்கு கண்ணாடியும்
இருகவுள் தோலாம் இரும்பை வீழ்ச்சியும்
பாலியத் தினிது பத்திரப் படுத்திய
மேற்சோ டிரண்டும் மிகப்பெரிதாம்படி
ஒடுங்கிச் சுருங்கிய ஒரிருபாதமும்
ஆணவப் பெருங்குரல் அனைத்தையும் இழந்து
குழவியின் குறுகிய குரலினைப்போன்று
கீச்சென ஒலிக்கும் பேச்சையே கொண்டு
தேசெலாம் குன்றிய மாசுலாம் குருபியே
ஆறும் பருவம் ஆம். அதன் பின்னர்
பல்லும் பார்வையும் சொல்லும் சுவையும்
யாவையும் இழந்து யாவையும் மறந்து
மறுவலும் சேய் என மதித்தளர் வெய்துவோன்
அடிக்கடி மாறும் இவ் அற்புத சரிதை
முடியும் இக்காட்சி யொடு முடிந்திடுமே.

### SEVEN AGES OF MAN

All the world is a stage
And all the men and women merely players :
They have their exits and their entrances ;
And one man in his time plays many parts,—
His acts being seven ages. At first the infant,
Mewling and puking in the nurses arms.
Then the whining school-boy, with his satchel
And shining morning face, creeping like a snail
Unwillingly to school. And then the Lover,
Sighing like furnace, with a woful ballad
Made to his mistress' eye-brow. Then a Soldier
Full of strange oaths and bearded like a pard ;
Jealous in honour, sudden and quick in quarrel,
Seeking the bubble reputation
Even in the cannon's mouth. And then the Justice,
In fair round belly with good capon lined
With eyes severe and beard of formal cut
Full of wise saws and modern instances,—
And so he plays his part. The Sixth age shifts
Into the lean and slippered Pantaloon,
With spectacle on nose and pouch on side;
His youthful hose well saved, a world too wide
For his shrunk shank ; and his big manly voice
Turning again toward childish treble, pipes
And whistles in his sound. Last scene of all,
That ends this strange eventful history

Is second childishness and mere oblivion ;
Sans teeth, sans eyes, sans taste, sans-every-thing,

SHAKESPEAR'S AS YOU LIKE IT : ACT II Sc. 7.

---

### இரக்கம்

பிறர் வற்புறுத்தப் பிறந்திடல் என்றல்
இரக்க மென்பதன் இயல்பாகாது.
விண்ணின் நின்றும் மண் மீதிழியும்
இனிய மழை என இழிவதில் இரக்கம்
இரண்டு விதத்தினும் ஈயும் இது நலம்
இரங்கப் படுவோன் இரங்குவோன் என்னும்
இருதிறத் தார்க்கும் ஈதருள் புரிந்திடும்
வலிமிக் காரிடம் வலிமை மிக் குள்ளது.
அரி அணைமீதமர் அரசனுக் கன்னவன்
புனைமுடி யினும் மிகப் பொருத்தம் உடையது.
அரசன் செங்கோல் அவனியில் அவனுடை
அதிகாரத்தின் ஆற்றலுக் கறிகுறி.
பயமும் மாட்சியும் பயப்பதன் பண்பாம்.
அரசர்பால் திகிலும் அச்சமும் அதில் உறும்.
இரக்கம் இக்கோலினும் ஏற்றம் மிக்குடையதே.
அரசர் மனச்சிங் காதனத் தமர்வதது.
ஈசர்க்கே அமைந்தியைந்த ஓர் குணம்.
நீதியோ டிரக்கமும் நிகழ்வுறுங் காலையில்
மன்னவன் ஆணையும் விண் இறை ஆணையாம்
ஆதலின் யூத! நீதியைப் பெறவே
நின் வழக்காயினும் நீ நினை இதனை:
கேவலம் நியாயமே தேவன் கைக்கொளின்
நம்மவர் எவருமே நற்கதி காண்கிலம்.
இரங்கி மன்னிக்க நாம் ஈசனை வேண்டுவோம்
அதேவேண் டுகோள் நாம் அனைவரும் மற்றவர்க
கிரக்கச் செயல்செய இனிதுகற் பிக்குமே.

### *MERCY*

The quality of mercy is not strained ;
It droppeth as the gentle rain from heaven
Upon the place beneath : It is twice blessed ;
It blesseth him that gives and him that takes :
It is mightiest in the mightiest : it becomes
The throned monarch better than his crown :
His sceptre shows the force of temporal power,
The attribute to awe and magesty,
Wherein doth sit the dread and fear of kings
But mercy is above the sceptred sway
It is enthroned in the hearts of Kings
It is an attribute to God himself,
And earthly power doth then show likest God's
When mercy seasons justice. Therefore Jew
Though justice be thy plea, consider this—
That in the course of justice none of us
Should see salvation : We do pray for mercy
And that same prayer doth teach us all
To render deeds of mercy.

---

### உயர்ந்தோரை உலகறியாது.

அளவிடவும் முடியாத ஆழ்கரும் கடலினுக்
கடியினுட் குகையினுள்ளே
அதிசுத்த மானபிர காச ஒளி உமிழ்கின்ற
அரியமணி பல உறுதல்போல்,
ஒளிய புக ழோங்கித் தந்தமது பெருமையும்
உறைவிடமும் ஒருவராலும்
உணரமுடி யாதபடி மறைநிலையில் உத்தமர்கள்
உறைவர் பலர். அல்லாமலும்,
அளிமுரலும் மலர்கள்பல அனுபவிப்பார் இன்றி
அறியாத பாழ்வெளியினில்
அழகுவளம் மணம் ஆதி யாவுமே வீண்
அலர்ந்து பின் வாடும் அதுபோல்,
எளிய நிலை ஜன நிரையில் எய்தியத னற்றம
திருப்பிடம் தகைமை ஆதி
எவரும் அறிந்து பயன் எய்தமுடி யாதநிலை
இருப்பர் பல பெரியோர்களே.

Full many a gem of purest ray serene
The dark unfathomed caves of ocean bear
Full many a flower is born to blush unseen
And waste its sweetness in the desert air.

——Gray's Elegy in a Country Church-yard

---

### ஆராய்ச்சிமுறை

பொங்கு திரைக் கடல்மேல் புன்துரும்பே தோன்றுவபோல்
இங்கெவர்க்கும் தோன்றும் இழிகுணமே—அங்குயர்ந்த
முத்தெடுக்க வேண்டுபவர் மூழ்குவது போல் முயலின்
உத்தமகுணம் வெளியாகும்.

Errors like straws upon the surface flow
He who would search for pearls must dive below.

—*Dryden*.

ம. கோபால கிருஷ்ணய்யர்.

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

பூனையும் நரியும்:—

பெருவன நடுவில் ஒருமரத் தடியில்
நரியும் பூனையும் நட்புற் றிருந்துழி,
மாநரி அந்தப் பூனையை நோக்கி,
'அன்பா! உனக்கோர் ஆபத் துற்றுழி
எவ்வழி யாலே அவ்விடர் நீக்குவாய்?
மனதுவந் துரை' யென வினவ, அப்பூனை
'மறுவழி யறியேன், மரமிசைத் தாவும்
ஒருவழி யாலே உய்குவன், தவறின்
இயம னுலகே எனக்கிடம்,' என்றது.
புன்னரி பின் அப் பூனையை நோக்கி
என்து திறமை வேறெவருக் குள்ளது.
எவ்வள விடர்கள் எனக்கு வந்தாலும்
அவ்வள வுக்கு மஞ்சேன், பற்பல
உபாயத்த கற்றுளேன் அபாயத்தை' என்றது
இப்படி இவைகள் செப்பிடும் பொழுதில்
ஒப்புயர் வில்லா ஒருமுதற் கடவுள்
பரிசோ திக்கும் படியே போலச்
சிலைபிடி வேடன் பலநா யொடுவர,
மரமிசைத் தாவி மறைந்தது பூனை.
பலபல வழியும் படர்ந்து பார்த்தும்,
ஒருவழி யேனு முதவா தொழிய
கருநரி உள்ளங் கலங்கி யிறந்தது

ஒருவழி பிடித்தோ ருய்துறல்,
பருவுவ ரென்பது மறைபொரு ளாமே.

இராமாயண ஸாரம்.—இராமர்இலங்கையிலிருந்து அயோத்திக்குத் திரும்பிவந்ததும் கைகேயியை நோக்கி.

* பெற்றகோ னன்பும் நீதரு பரதன்
பெருமையும் மாருதி திறமும்
† எற்றரு வான ராதிப னட்பும்
இலக்குவன் மிக்கபத் திமையும்
உற்றஜா னகியின் மெய்மையு மென்வலியும்
‡ ஒன்னலார் பகைமயி னியல்பும்
மற்றவு மறிந்தே னுன்றனால் தாயே
வந்தனம் நின்திரு வடிக்கே

என்றார்.

* * *

கோபம் சண்டாளம்.—பிராமண ஸந்யாஸி ஒருவர் தமது ஆசிரமத்திற்கு ஏற்பட்ட ஒழுங்கின்படி தவறாது நடந்துகொண்டுவந்தார். இப்படி கொஞ்சகாலம்நடந்து வந்தபடியால் அவருக்கு தம்மைப் போன்ற மேன்மை உடையவர் ஒருவரும் இல்லை என்ற கர்வம் மெதுவாக அதிகரித்துக்கொண்டு வந்தது. நாளடைவில் அவருக்குத் தாம் மோக்ஷம் அடையும் தருணமாக இருப்பதாகத் தோன்றிக்கொண்டேயிருந்தது. ஆதலால் ஆசாரவிஷயத்தில் இவர் சிறப்பு உடையவராக இருந்தபோதிலும் உண்மையாக இவர் சிறப்பு அடையவேயில்லை. இவரது காயக்லேசாதிகள் முதலான கஷ்டங்கள்யாவும் சாம்பலில்பெய்த ஆகுதிபோல வீணாயின. வெளி ஆசாரத்திற்கு விரோதமாக யாராவது நடந்துகொண்டால் கோபம் அதிகமாக வருவதேஇவருக்கு வழக்கமாக விருந்தது.

ஒருநாள் காலையில் இந்த ஸந்யாஸி மிகுந்த பக்தியுடன் ஒருதடாகத்தில் மூழ்கி அருகாமையிலிருந்த செடிமறைவில் கண்ணைமூடிக்கொண்டு கடவுளைத்யானம் செய்துகொண்டிருந்தார். அவ்வூருக்குப் புதிதாக வந்த வெண்ணான் ஒருவன் இந்த ஸந்யாஸியின் மனோநிலை முதலியவைகளை அறியாதவனாய் அன்றுகாலை அந்த தடாகத்திற்குத் தனது துணிகளைத் தோய்க்கவந்தான். அப்பொழுது அருகாமையில் ஸந்யாஸி இருப்பதுகூட அவனுக்குத் தெரியவில்லை. ஆகையால் அவன் ஸாதாரணமாக தனது துணிகளைத்தோய்க்கத்தொடங்கினான். துணியிலிருந்து வெளியேறிய தண்ணீர் திவலைகள் செடிமறைவிலிருந்த ஸந்யாஸியின்மேல் விழுந்தன. அவர் நிஷ்டைகலைந்து தம்மை அசுத்தப்படுத்திய வெண்ணானைக் கண்டு அதிக கோபங்கொண்டு 'அடே! சண்டாளா! என்னை ஏன் இவ்வாறு அசுத்தப்படுத்தினாய்?' என்று சீறி அவனை நன்றாக அடித்துவிட்டு,தடாகத்தில் ஸ்நானஞ்செய்யத்தயாரானார். அப்பொழுது மிகுந்த வணக்கத்துடன் பதில் ஒன்றும் சொல்லாது வெண்ணானும் ஸ்நானத்திற்கு ஆயத்தமானான். இதைக்கண்ட ஸ்ந்யாஸி 'என்னை அசுத்தப்படுத்திவிட்டு என்னோடு நீயும் ஏன்ஸ்நானத்திற்கு ஏற்பாடு செய்கிறாய்?' என்று கோபம்தணிந்து தம் வெண்ணானைக் கேட்டார். அதற்கு அவன், 'நான் அசுத்தமாகிவிட்டேன் என்னை சுத்தப்படுத்திக் கொள்ள ஸ்நானம் செய்யப்போகிறேன்' என்றான். 'நான் உன்னைத் தொட்டதால் உனக்கு அசுத்தி ஏது?' என்று ஸந்யாஸி கேட்க அதற்கு வெண்ணான் 'நீங்கள் ஸாதாரணமாகத் தொட்டால் எனக்கு யாதொரு பாதகமும் இல்லை. நீங்கள் கோபாவேசத்தோடு என்னைத் தொட்டபடியால் எனக்கு சண்டாளனைத்தொட்ட தீட்டு வந்துவிட்டது நான் ஸ்நானம் செய்து என்னை சுத்திசெய்து கொள்ளப்போகிறேன்,' என்று சொல்லி அவன் ஸ்நானம் செய்யத் தொடங்கினான் ஸந்யாஸி படித்தவராகையால் வெண்ணான் 'கோபம்சண்டாளம்' என்று குறிப்பாகக் கூறியதன் உண்மையை உணர்ந்து 'கோபத்தோடு அடித்த நானே சண்டாளன்! நான் என்ன அடித்தபோதிலும்பொறுத்துக்கொண்டிருந்த வெண்ணான் மேன்மையே மேன்மை!' என்று தம்முள் துக்கித்துக்கொண்டு அன்றுமுதல் ஸந்யாஸி தமது மனதை உள்ளபடி அடக்கமுயன்றார்.

* பெற்ற அரசன் † [illegible] பெற்ற ‡ பகைவர்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

"நெய்யுறுவிளக்கனூப்" என்றார் ஹநுமார் ஸீதையை அசோகவனத்திற் கண்டபொழுது. அதாவது நெய்யானது விளக்கிற்கு ஜீவாதாரம். நெய்யுள்ளவரையும் விளக்கெரியும். பின்பது அவிந்துவிடும். அதுபோல் மனைவிக்கு உயிராக இருப்பது அவள் கணவன்தான். அவன் இருக்கும்வரை இவளுக் கழிவில்லை. அவனால் நிலைத்தவள். அவன் நிலைமையில் வாழ்வதுதான் அவள் இயற்கை. நெய்யின்றி விளக்கு, எரியமுடியாது. கணவனன்றி மனைவிக்கென்று மிருக்கமுடியாது. அவன் தான் அவளுக்கு முதல்வன். அவனை வழிபடல்தான் அவளுக்கு வாழ்க்கை.

***

நமது வாழ்க்கை வீண் வாழ்க்கை அல்ல. நமது கல்யாணமும் வெறும் உலக இன்பத்திற்கல்ல. மனைவியுங் கணவனும் கருத்தொருமித்து தங்களிடத்தில் கடவுளைக் காணத்தான் நாம் மணம் செய்துகொள்வது. இதுதான் நமது தர்மம். அதனால்தான் மனைவிக்கும் ஸதர்மபத்நி என்று பெயர். ஆத்மைக்கியமாகி சாவிலும் வாழ்விலும் பேரின்பசுக மனுபவிப்பதுதான் நமது தர்மம்.

***

மணம் செய்துகொள்வது தனது கணவனுடன் கலந்து தர்மஸ்தாபனம் செய்வதற்குத்தான். ஒருவனையே தனது கணவனாகபவித்து அவனுந்தானுமொன்றாக வாழ்தலே உத்தமப்பெண்ணின் குணமாகின்றது. தான் ஒருவன்மீது அன்புகொண்டு அவனை அடையமுடியாவிடினும், அன்றி தனது கணவன் இறந்துவிடினும், கணவனென்ற லக்ஷியத்தையே நோக்கமாகக்கொண்டு மாற்றானைக்கூடாது இருத்தல்தான் மடைமைகுணத்தின் பெருமையை விளக்கும். இக்காரியங்களில் எவ்வித கஷ்டம் வந்தாலும் தன் நெறியினுடைய நிலையை நிறுத்த தன் உயிரையும் அளிக்க தயாராகவிருப்பவள் தான் பெண்களிற் பெரியவளாகின்றாள்.

***

ராஜபுதன நாட்டில் உதயபுரத்தை யாண்ட ராஜாதிராஜன் ஆகிய சித்தூர்ராணவென்பவனுக்கு குழந்தை ஒன்றிருந்தது. அழகிற் சிறந்தது. வயதிற் குறைந்தது. புத்தியில் நிறைந்தது. அதற்கு கிருஷ்ண குமாரி என்று பெயர். இக்குழந்தை தினே தினே வளர்ந்து வஸந்தகாலபுஷ்பம்போல் கண்டார் கண்ணையும்மனத்தையும் பரிக்கத்தக்க அழகொடு விளங்கியது. வயது பதினாறாகி மங்கைப்பருவமடைந்து மாந்துளிர்போல் மெலிந்த அழகோடு திகழ்ந்தனள்.

***

ராஷ்ட்ரத் தலைவனாகிய ஜோதிபுரநாட்டுத்தலைவனுக்கிவளை பாணிக்கிரஹணம் செய்யநிச்சயித்தார். அதற்குள் அவனு மிறந்தான். ஆனால் கிருஷ்ண குமாரி மனம் முழுதும் அவன் ஒருவன்மேல்தான் நிலைத்திருந்தது. இவளை மணக்கப் பலபேர் மோஹங்கொண்டார் கொண்டாலென்னபிரயோஜனம்? தான்கொண்ட நிலையினின்று கிருஷ்ணகுமாரியின் மனம் கீழ் இரங்கவில்லை. தான் எவன்மேல் அன்புகொண்டாளோ அவன் உடலைத் தான் காணாவிடினும் அவனுடைய ஆத்மாவிடத்தில் ஐக்கியமாக மனங்கொண்டுவிட்டாள். இதிலுமுயர்ந்த செயலுமுண்டோ?

***

யார்தான் பெண்பால்வைத்த மோஹத்தால் கஷ்டப்படாதவர்? ராஷ்ட்ரத்தலைவன் இறந்ததும் கிருஷ்ண குமாரியை ஜயபுரத்தரசன் மணம் புரிய விரும்பினான். அதுவும் பிரயோஜனமில்லை. ஜோதிபுர (Jodhpur) த்திற்கு மன்னனாகிவந்த மானஸிம்ஹன் பெண்ணெனக்குத்தான்சேரவேண்டியதென்றனன். "ஜோதிபுரநாட்டின் அரசிற்கு அவள் உரிமையுடையவளேயன்றி வேறெதற்கு அவளிடத்து ஸம்பந்தமில்லை. அவ்வரசுரிமையைப்பூண்ட என்னை தான் மணக்கவேண்டு" மென்றனன்.

***

உறவினரையும், உற்றவரையும் ஒன்றாக்காது நிற்கவருவது காமம் என்று எல்லார்க்கும் தெரிந்த விஷயம். முன்பு ஓர் பெண்ணை அடைய வாலியும் ஸுக்ரீவனும் சண்டையிட்டனர். ஸுந்தோபஸுந்தரும் பிரிந்து சண்டைசெய்யலானார். இதெல்லாம்புராணகதை. இப்பொழுதுகிருஷ்ணகுமாரியை அடைய ஜயபுரத்தரசனும் ஜோதிப்புரத்தரசனும் வாதத்தைவிட்டு சண்டையிட ஆரம்பித்துவிட்டார்கள்.

***

சண்டையிடுபவரைக் கண்டால் பார்ப்பவருக்குக் கொண்டாட்டம். அவரைத் தூண்டித்தூண்டிவேடிக்கைசெய்வதுதான் காண்பவர் ஸ்வபாவம். காண்பவருக் கென்னகஷ்டம் படுபவருக்குத்தானே அது தெரியும். இதனால் ஒருவித லாபமும் அடையலாமென்னும் எண்ணம் வந்துவிட்டால் சும்மாவும் இருப்பார்களா?

விந்துநாட்டரச னிவர் சண்டையைக் கவனித்தான். மஹா சந்தோஷம் கொண்டான். இவர்களை சண்டையில்விட்டு நாட்டைத் தான் அடைய வேண்டும் என்ற கெட்டஎண்ணம் அவன் மனதிற் குடிகொண்டது. கெட்டவனுக் கநேக உபகரணங் களகப்படுவது உலகத்தில் ஸகஜம். இவனோடு துருக்கி அரசனாகிய அமீர்கானும் சேர்ந்தான். இவரிருவர்கள் ஒருசமயத்தில் ஜயபுரமன்னன் பக்கம், மற்றொருவேளை ஜோதிபுரமன்னன் பக்கமும்சேர்ந்து இவர்களைத் தூண்டிக்கொண்டு தரித்திரதிசைக்கு வரும்படியாகச்செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.

***

உலகத்தில் தன்னுடைய வலிமையைக்காட்டிலும் எதிரிவலிமையாயிருக்கும்பக்ஷத்தில்எதிரியைவிட்டுவிட்டு தன் வலிமையை எங்கு காட்டமுடியுமோஅங்குகாட்டுவது வழக்கம். அல்லது தாங்களிருவரும் ஒன்றகூடி வேறோர் எளியனைக் கெடுக்க நினைப்பது ஸ்வபாவம்.

***

தமக்குக் கேடுவருவதாக ஏற்பட்டுவிட்டால் தாங்கள் எதற்காகப் பிரயாசைப்படுகிறாரோ அதற்கு அழிவுவந்தாலும்வரட்டுமென்றகொண்டு கடைசியாகத் தாம் பிழைக்க வழி பார்ப்பதும் மனுஷ ஸ்வபாவமே அன்றி வேறொன்றுமன்று. எவ்வாறேனும் தாம் பிழைக்க வேண்டுமென்பதுதான் அவர்கவலை. மற்றொன்றுமவர் மனதிலேறாது.

***

விந்து நாட்டரசனும் அமீர்கானும் தம்மை கெடுக்க முயல்வதை இருவரும் கண்டுவிட்டார். "நமது நாடும் நம்மை விட்டகன்றிடும்படியாக இவ்வஞ்சகர் நம்மை எவி வேடிக்கைப்பார்த்து கொள்ளையாட நினைத்திருக்கிறார். நாம் நமது பகைமையை இவ்விஷயத்தில் விட்டுவிடவேண்டியது. மேல் நடத்தவேண்டியதைப் பார்க்கவேண்டு" மென்றான் ராஷ்ட்ரத்தலைவன். "ஆம்" என்றான் ஜயபுரத்தரசனும்.

***

தமக்கு அழிவை யுண்டாக்க நின்ற நிமித்த மிது தான் என்று ஒருவன் கண்டுவிட்டால் அந்நிமித்தத்தை ஒழிக்கப்பார்ப்பது ஸ்வபாவம். இதில் அவன் கொண்ட எண்ணம் ஸரியோ, அதுவில்லையோ என்றவன் எண்ணுகிறதில்லை. கோபம் ஒன்றுதான் அவன் மனதில் குடிகொண்டிருக்கும். அதிலிருந்து குரோதம் கொழுந்துவிட்டு ஓடி கடைசியாக தனது மனதில் எதை நிமித்தமாக எண்ணி இருக்கிறானோ அதை எரித்துவிடும்

ராஷ்ட்ரத்தலைவன் கடைசியாக யோசனைசெய்தான் "ஸரிதான். நாம்இவ்வாறேன் தொல்லைப்படவேண்டும்? எனக்கும் வேண்டாம். உனக்கும் வேண்டாம். அவளும் உயிரோடிருக்கவேண்டாம். அவளைக் கொன்றுவிடுவது தான் நமது வேலை." என்று கூசாது சொன்னான். இருவருமாய்ச்சென்று அவள்தகப்பனிடம்அவளைக்கொல்லுவதாகச்சொன்னார்கள். அல்லது அவனையே கொன்றுவிடுவதாகச் சொன்னார்கள். ஒன்றும் தோன்றாமல் திகைத் தாகட்டுமென்று விட்டான் தகப்பனும்.

***

லக்ஷிய மொன்றுக்காக உழைத்து வாழ்தல் பெருமை என்பது யார்க்குத்தான் தெரியாது. ஓர் பெண் தன்கணவனாக ஒருவனை பவித்து அவனையேலக்ஷியமாகவாழ்தல்தான் பாதிவிரத்தியம் என்றுசொல்லப்படும். ஒருவனை மணஞ் செயதுக்கொள்வதாக விருந்து அது முடிவதற்குள் அவனுமிறந்திட, அப்பொழுதும் அந்த லக்ஷியம்விடாது வாழ்தலினும் பெருமையுண்டோ? அவனொருவனையே எண்ணமாகக்கொண்டு அவனைத் தன்னிதயத்துள் கலக்க வேண்டுமென்பவளுக்கு அவனை அடைவது தவிர வேறேதேனும் தோன்றுமா? அவளுக்கு ஒரேவழிதான் தெரியும்; அது பாதிவிரத்யம். அவ்வழியிற் போக ஒரே வெளிச்சம்தான் சொல்ல முடியாப் பிரகாசத்தோடு விளங்குவது. அதுதான் தன் நாயகன். அவ்வெளியுள் தானுங் கலப்பதுதான் அவளுக்குத் தர்மம்.

***

தகப்பன் தனக்கு விஷங்கொடுப்பதாக அறிந்த கிருஷ்ணகுமாரி தகப்ப னருகேவந்தாள் "என்னப்பா! நானிருப்பதால் உமக்கு பலவிதத்திலும் கஷ்டம். எனக்கும் கஷ்டம். இவ்வுலகு எனக்கிருக்க இடமல்ல. எனக்கு என் மனோநாயகனை இந்த சரீரத்தைவிட்டுக் காண ஆவலிருக்கிறது. நீங்களிப்பொழுது கொண்டவழி எனக்கு நன்மையே பயக்கும். எல்லார்க்கும் நன்மை பயக்கும். சொல்லுவதற்கேன் அஞ்சுகிறீர். உமது கையிலிருக்கும் விஷத்தைக் கொடும்" என்று தகப்பன் மறைத்து வைத்திருந்தவிஷத்தைப்பிடுங்கி அருந்தினாள். யோக நித்திரையில் தன் நாயகனோடு உள்ளங்கலக்க நிலைத்ததுபோல் கீழ்வீழ்ந்து மயங்கிவிட்டாள்.

***

ஹா! கிருஷ்ணகுமாரி! நீயே ராஜபுத்ரி, நீயே தீரமுடையவள்! உன்னுடைய மனோபவம் இக்காலத்து கன்னியர் மனத்தில் பவித்து அதை மேன்மைபடுத்துவது என்றோ?

வா. சேஷகிரிசாஸ்திரி.

## விசேஷ வர்த்தமானங்கள்

### GENERAL NEWS

பாதரஸக் குமிழிகள்.—தண்ணீரில் குமிழிகள் நாம் எளிதில் உண்டாக்கலாம் அவ்வளவு எளிதில் ரஸத்தில் குமிழிகள் உண்டாக்க முடியாது. இவ்வாறு செய்வதற்கு சற்றேறக்குறைய 6-அங்குலம் உயரமுள்ள ஓர்கண்ணாடிப்பாத்திரத்தில் ½-அங்குலம் ஆழம் பாதரஸத்தை விடவேண்டும். அந்தப்பாத்திரத்தை அதிவேகமாக தண்ணீர் வெளிவரும் குழாயின்கீழ்க் கொண்டுபோய் வைத்து அதைத்திறந்து விடவேண்டும். முதலில் பாத்திரம் நிறையும். பின்பு தண்ணீர் பாத்திரத்திலிருந்து பீரிட்டு அடித்துவெளியே விழுந்துவிடும். இப்படியாவதற்கு முன்னமேயே தண்ணீர்விழும் வேகம் தகுந்தபடி யிருக்குமாயின் சிறு ரஸக்குமிழிகள் பாத்திரத்துள் இருக்கும் தண்ணீரில் சவுக்காரக்குமிழிகள் மிதப்பதுபோல மிதக்கத் தொடங்கும். தண்ணீரில் முழுகிப்போகும் தன்மையை உடைய ரஸம் இவ்வாறு மிதந்து ஓடுவது பார்வைக்கு மிகுந்தவேடிக்கையாக விருக்கும். தண்ணீர்விழும்அதிகவேகத்தால் வாயுவும் ரஸத்தின் உள்பாகம்வரையில் கொண்டு போகப்பட்டு ரஸக்குமிழிகளை உண்டாக்குகின்றது. ரஸப்பையுள் இவ்வாறு காற்றுபுகுந்து கொண்டதும் அது இலேசாகத் தண்ணீரில் மிதந்து ஓடுகின்றது.

* *

தண்ணீர் தூரதிருஷ்டிக் கண்ணாடி:—உலகில் நீர்பாகம் நிலபாகத்தைவிட இரண்டு மடங்கு அதிகமாக இருக்கிறது. இந்தபாகத்தில் இயற்கையாக அமைந்துள்ளஅநேக அற்புதங்கள் மறைந்துகிடக்கின்றன. இவ்வற்புதங்கள் எவ்வளவு ஆழத்தில் இருந்தபோதிலும் அவைகளையும் எளிதில் நன்றாய்க் காண ஸஹாயமாக இருக்கும்படியான ஓர் தண்ணீர் தூரதிருஷ்டிக்கண்ணாடி ஒன்று கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. இதன் ஒரு நுனியை தண்ணீருள் தோய்த்துவிட்டு மற்றைய நுனியுள் நோக்கினால் ஸமுத்திரத்தில் அதிக ஆழத்திலிருக்கும் வஸ்துக்கள் யாவும், தெளிவாக நமது கண்ணுக்குப் புலப்படும். மீன்பிடித்து விற்பதையே வியாபாரமாகக்கொண்டிருக்கும் நார்வேமுதலியதேசங்களில்செம்படவர்கள்இந்தக்கண்ணாடியின்மூலமாக மீன் கூட்டங்கள் இருக்கும் இடத்தையும், புதிய மீன்களையும் கண்டுபிடித்துத் தமது வியாபாரத்தை விருத்திபண்ணிக் கொள்கின்றனராம். அதிகப்பணம் செலவழிக்காமலே இந்தக் கண்ணாடியை உண்டாக்கிவிடலாம். முதலில் பெய்குழலைப்போன்ற அகன்றவாயும் குறுகல்வாயும்உடைய ஓர் தகரக்குழாய் செய்யவேண்டும். இதன் நீளம் 4 அல்லது 5 அடி இருக்கவேண்டும் தண்ணீருள் தோய்க்கும் வாயின் குறுக்களவு 8 அல்லது 10 அங்குலம் இருக்கவேண்டும். கண்ணருகில் இருக்கும்பாகம் 6 அங்குலம் குறுக்களவு உடையதாக இருக்கவேண்டும். அடிவாயின் அருகில் 4 அல்லது 6 ஈயகுண்டுகள் ஒட்டவைத்திருக்கவேண்டும். இவைகளால் இந்த யந்திரம் தண்ணீரில் கொஞ்சம் ஆழ்ந்து நேராக மிதக்கும். தகரப் பெய்குழலுள் கருப்புசூர்ணம் போட்டிருக்கவேண்டும். அகன்றபாகத்தில் ஸாதாரண கண்ணாடி ஒன்றைப் பதிக்கவேண்டும். இது முடிந்ததும் இதை உபயோகப்படுத்தலாம். இதேமாதிரியாக ஓர் படகடியில் கண்ணாடிவைத்தால் படகோட்டும் சுகத்தோடுகூட தண்ணீருள் இருக்கும் அற்புதங்களையும் கண்டு ஆனந்திக்க நமக்குத் தருணம் வாய்க்கும்.

* *

அற்புதத் தோற்றங்கள்.—(1) ஓர் காகிதத்தில் ஓர் பட்சிக்கூண்டைப்போன்ற ஒரு படத்தை எழுதுங்கள். அதன் அருகில் வெளியில் ஓர் சிறுபட்சியையும் எழுதுங்கள். இரண்டிற்கும் இடையில் ஓர் ஒழுங்கான சிறு அட்டையை நிறுத்தி அதன் மேல் பாகத்தில் உமது மூக்கைவைத்து கவனித்துப் பாருங்கள். கூட்டினுள் பட்சி புகுந்துவிட்டதாகத் தோன்றும்.

* *

(2) கண்ணாடிக்கு எதிரேநின்றுகொண்டு உமது இடதுகண்ணை மூடிக்கொள்ளும். இடதுகண்ணின் பிரதிபிம்பத்தின்மேலே விழும்படியாக கண்ணாடியின்மேல் உமது வலதுகைச் சண்டுவிரலை வையும். அசையாது இடதுகண்ணைத் திறந்து வலது கண்ணை மூடிக்கொள்ளும். உடனே உமது விரலை நீர் அசைக்காதிருந்தபோதிலும் அது உமது வலது கண்ணின் பிரதிபிம்பத்தை மறைப்பதாகத் தோன்றும்.

* *

இங்கிலாந்திய பெண்களின் நிலை.—இங்கிலாந்து தேசத்தில் சற்றேறக்குறைய 5,000,000 பெண்டுகள் தாமே தொழில்செய்து உழைக்கின்றனராம்.

மாட்டாது. சவிரிபாகம், வால் ஆகிய இவை கள் மிகஅடர்த்தியை உடையவையல்ல,இவைகளின் வழியாக மிக சிறிய நக்ஷத்திரங்கள்தவிர மற்றைய வைகளை எளிதாகக் காணலாம்.முற்கூறிய பாகங்கள் 1882-வருஷம் தோன்றிய பெரிய வால்நக்ஷத்தி ரத்தில் மிக விசேஷமாக வெளிப்பட்டன. இது நடுமத்தியான்னத்திலேயே நன்றாகத் தெரிந்துகொ ண்டிருந்ததாம். இதன் சவிரிபாகம் ஸூர்யனைப் போன்ற அளவை உடையதாகவும், இதன் பொட்டு சுக்கிரனைப்போன்ற அளவையுடையதாகவும், வால் உச்சிமுதல் அடிவானம் வரையில் நீண்டதாகவும் இருந்ததாம். கணக்கிட்டுப்பார்த்ததில் இதன் வால் சற்றேரக் குறைய பூமியிலிருந்து ஸூர்யன் வரையில் எட்டும்படியான (92,000,000 மைல்) நீளம் உள்ள தாக இருந்தது என்று வெளிப்பட்டது.

இனி வால் உண்டாகும் விதத்தையும் அதன் பே தங்களையும் விவரிப்போம். முதலில் வால்நக்ஷத்திர மானது ஸூர்யனுக்கு வெகு தூரத்திலிருக்கும் பொழுது லேசான பிரகாசத்தோடு கூடியதாயும் உருண்டதாயும் உள்ள புகையால் சூழப்பட்ட சிறு மங்கலான நக்ஷத்திரம் போலக் காணப்படும். இது ஸூர்யன் அருகாமையில் வரவர பொட்டின் பிரகா சம் அதிகரிக்கும். அப்பொழுது அது பிரகாச மான நக்ஷத்திரம்போலாகும். இது வரவர தன் னைச்சுற்றி பிரகாசமான வட்டமாகிய அலைகளை வீசும். இவை அகல அகல பிரகாசத்தில் குறை யும். இவ்வாறு அலைகளில் அகன்றுவரும் பிரகாச வஸ்துக்கள் ஸூர்யனது சக்தியால் ஒதுக்கப்பட்டு வாலாகப் பரிணமிக்கின்றன. இதனாலேதான் ஸூர்யனை அணுக அணுக நக்ஷத்திரத்திற்கு வால் நீளுகின்றது; கிட்டே வரும்பொழுது அதன் வால் பின்னாலேயும், தூரேவிலகும்பொழுது அதன் வால் முன்னாலேயும் காணப்படுகின்றது. ஓர் வால் நக்ஷ த்திரத்திற்கு எத்தனை வால்கள் இருந்தபோதிலும் அவை எல்லாம் பின்வரும் மூன்று பாகு பாட்டினுள் அடங்கும். நேரானவால் ஒன்று, அது ஸூர் யன் இருக்கும் இடத்திற்கு மறுபுறத்திலுள்ளது, ஜலவாயுவாலாகியது. வளைந்தவால் ஒன்று; அது கற்பூரமுதலிய வஸ்துக்களைப் போன்றவஸ்துக்களா லாகியதாயும், நக்ஷத்திரம்வரும் வழியைநோக்கி உட் புறமாக வளைந்ததாயும், உள்ளது. நோங்கும் வால் ஒன்று; அது முன்னதைவிட அதிகமாக உட்புறம் வளைந்ததாயும், இரும்பு, பச்சைவாயு முதலியவை களாலாகியதாயும் இருக்கும். இவைகளே முற்கூறிய மூன்றுவித வால்கள்.

இவ்வித விசித்திரமான வால்நக்ஷத்திரங்களில் அடங்கியிருக்கும் வஸ்துக்களின் ஸ்வபாவம் என்ன என்ற கேள்விபிறக்கும். தோற்றமாத்திரத்தில் வால் நக்ஷத்திரங்கள் ஸூர்யனைவிட ஆயிரம்மடங்கு பெரி தாகக் காணப்படுமே ஒழிய அவைகளில் இருக்கும் வஸ்துக்களுக்கு அதிக அடர்த்தியே கிடையாது. இரவில் காணப்படும் எரிநக்ஷத்திரங்கள்கூட இப் பெரிய வால்நக்ஷத்திரங்களைவிட அடர்த்தியில் அதி கமாக இருந்தாலும் இருக்கலாம். இவைகளில் பொட்டின் அருகாமையில்தான் வாயுபதார்த்தங்கள் சில காணப்படுகின்றன. மற்றையவிடங்களில் வாயு பதார்த்தங்களைவிட மிக அடர்த்தி குறைந்தவஸ்துக் களே காணப்படுகின்றன.

வால்நக்ஷத்திரங்கள் ஸூர்யன் அருகாமையில் வரும் மார்க்கத்தின் உருவத்தை விசாரிப்போம். இவைகள் ஸாதாரணமாகஏகமத்ய விரிவுரேகையை யே மார்க்கமாக உடையதாகி அதன் மத்தியத்தில் ஸூர்யனை உடையதாக இருக்கின்றன. இவ்வாறே இவைகளின் மார்க்கங்கள் இருப்பின் இவைகள் ஒரு தரந்தான் ஸூர்யன் அருகாமையில் வரும். பின்பு ஒருபொழுதும் இவை ஸூர்யன் அருகாமையில் வர மாட்டா. ஆனால் இவைகளின் வேகம் மற்றைய கிரக ங்களின் சக்தியால் வரவர அதிகரிக்கும்படியாகவா வது குறையும்படியாகவாவது நேரிடுகின்றது.உடனே இவைகளின் மார்க்கங்கள் முறையே த்விமத்யவிரிவு ரேகையாகவாவது த்விமத்ய சக்கிரமாகவாவது மாறிவிடும். முன்கூறிய மாறுதலிலும் வால்நக்ஷத் திரம் ஸூர்யனை ஒருதரந்தான் அணுகும். பின்னர் அதைவிட்டு ஒரேபோக்காய் போய்விடும். பின்கூறிய மாறுதலால்தான் வால்நக்ஷத்திரங்கள் ஸூர்யன் அரு காமையில் குறிப்பிடக்கூடிய காலத்திற்கு ஒருதரம் மறுபடியும் மறுபடியும் வந்துகொண்டேயிருக்கும். இம்மாதிரியான வால்நக்ஷத்திரங்களின் மார்க்கத் தைத்தான் ஒருவாறுகண்டுபிடிக்கமுடியும். இவைகள் தமது மார்க்கங்களில் கொஞ்சகாலந்தான் நமக்குத் தோன்றுகின்றன. ஆகையால் இவைகளது மார்க்கத் தை நன்றாக கணிப்பது மிகக்கடினம். இந்த கணனத் தால் இவைகள் ஸூர்யன் அருகாமையில் வரும்கால ங்களைக் குறிப்பிடலாம். இப்படி இருப்பினும், ஏறக் குறைய 270-வால் நக்ஷத்திரங்களின் மார்க்கங்கள் நன்றாக கணனம் பண்ணப்பட்டிருக்கின்றன. இவற் றுள் 200-ன்மார்க்கம் ஏகமத்ய ரேகை என்றும் 6-ன்

மார்க்கம் த்விமத்ய விரிவுரேகை என்றும் வெளியாகின்றது. மற்றவைகளின் மார்க்கங்கள் எல்லாம் த்விமத்ய சக்கிரங்களே. இத்தகைய மார்க்கத்தைச் சேர்ந்தவைகள் சிலவற்றிற்கு கால அளவு அதிகமாக இருப்பதால் அவைகளின் மார்க்கம் இத்தகையது என்று குறிப்பிக்க முடியாமல் இருக்கிறது. த்விமத்ய சக்ரமார்க்கம் உடைய வால் நக்ஷத்ரங்களுக்கே சுற்றிவரும் வால்நக்ஷந்திரங்கள் என்று பெயர். ஆகாயத்தில் ஒரேமார்க்கத்தில் அநேக வால்நக்ஷத்ரக்கூட்டங்களும் போவதுண்டு. ஆகையால் முற்கூறிய கணனத்தின் பிறகுகூட இவைகளை அடையாளம் கண்டுபிடிப்பது கஷ்டம். இத்தகைய கூட்டம் 6 வரையில் இப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. இவைகளின் மார்க்கம் ஆகாயத்தில் எல்லாவிடங்களிலும் குறுக்கும் நெடுக்கும் தங்குதடையின்றி பரவிக்கடக்கின்றன.

வால்நக்ஷத்திரங்கள் உண்டாகக் காரணம் என்ன? இந்த விஷயத்தில் இரண்டுவிதக் காரணங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. ஆகாயத்திலுள்ள கிரஹங்கள் நக்ஷத்ராதிகள் முதலியவைகளிலிருந்துவெளிக்கக்கப்பட்டேவால்நக்ஷத்ரங்கள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன என்பது முதலாவது காரணம். இதை வைத்துகொண்டு வியாழன் மார்க்கத்திற்குஉட்பட்டு சுற்றிவரும்வால்நக்ஷத்ரங்கள் வியாழனால் கக்கப்பட்டன வென்று சிலர் ஸ்தாபிக்கமுயல்கின்றனர். இம்மாதரி கக்குவதற்கு வேண்டிய சக்திவியாழ கிரஹத்தில் இருப்பதாகத் தெரியவரவில்லை. ஆகையால் சுற்றிவரும் நக்ஷத்ரவிஷயங்களில் முற்கூறிய முகாந்திரம் உண்மையாக விருக்கலாம் என்றுதோற்றவில்லை. ஆனால் ஏகமத்யரேகையில் வந்து ஸூர்யனை ஓர்தரம் அணுகி ஒருக்காலும் திரும்பிவர இடமில்லாது போய்விடும். வால்நக்ஷத்திரங்கள் வேண்டுமானால் மின்மினிபோல் ஆடும் சோதியை உடைய நக்ஷத்திரங்களிலிருந்து கக்கப்பட்டிருக்கலாம். இதுவரையிலும் தோன்றியிருக்கும் வால்நக்ஷத்திரங்களில் யாதொன்றும் நமது ஸூர்யனிலிருந்து கக்கப்படவில்லை என்று தீர்மானமாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. சுற்றிவரும் வால்நக்ஷத்திரங்கள் விஷயத்தில் இரண்டாவது காரணம் தகுந்ததாகத் தோற்றும். அந்தக் காரணம் பின்வருவது. ஏகமத்தியவிரிவின் மார்க்கத்தில்வரும் ஓர்வால்நக்ஷத்திரம் நமது ஸூர்யனது கிரஹ பரிவாரங்கள் மார்க்கங்களுள் நுழையுங்கால் வியாழன் முதலிய கிரஹங்களின் அருகாமையில் வர அதன் வேகம் வரவர ஒழுங்காகக்குறைக்கப்படலாம். உடனே அதன் மார்க்கம் முற்கூறியபடி த்விமத்ய சக்கரமாக மாறிவிட அது ஸூர்யனைச் சுற்றிவரும் வால்நக்ஷத்ரம் ஆகிவிடலாம். வரவர அதன்மார்க்கம் வேகக்குறைவால் வியாழனது மார்க்கத்திற்கு உள்ளடங்கிவிட அது வியாழனைச் சேர்ந்த நக்ஷத்ரமாகலாம். இவ்வாறு கிரஹங்களால் சிறைபடுத்தப்பட்டே சுற்றிவரும் வால்நக்ஷத்திரங்கள் நமது ஸூர்ய குடும்பத்தில் புகுந்திருக்க வேண்டும். இவ்விரு முகாந்திரங்களுக்கும் முறையே கக்கும்வழி என றும் சிறைபிடிக்கும்வழி என்றும் பெயர். இவ்விரு வழிகளால் வால்நக்ஷத்திரத்தின் உத்பத்தியை யுக்திக்குப் பொருந்தும்படி விளக்கலாம்.

இப்படி உற்பத்தியாகும் வால்நக்ஷத்திரங்களால் நமது பூமிக்கு ஏதாவது அபாயம் உண்டாகுமா என்ற பயம் நமக்கு வரலாம்! வால்நக்ஷத்திரங்களின் உருவை நோக்கில் நமக்கு இப்பயம் அதிகரிக்கும். ஆனால் அவைகளில் அடங்கியிருக்கும் வஸ்துக்களை நோக்கில் நாம் பயப்பட வேண்டியதே இல்லை. அந்த வஸ்துக்களின் மூலமாக மிக மங்கலான நக்ஷத்திரங்களைத் தவிர மற்றையவைகளை நாம் நன்றாகக் காணலாம் என்று நாம் முன்னதாகவே சொல்லியிருக்கிறோம். ஆதலால் வஸ்து அடர்த்தி என்பதே வால்நக்ஷத்திரங்களிலேயே கிடையாது. ஆதலால் அதன்மேல் எந்த கோளம் மோதினால் தான் என்ன? வால்நக்ஷத்திரம் சிதறிப்போனாலும் போகுமே ஒழியத் தாக்கும் கோளத்திற்கு யாதொருகெடுதியும் வாராது. 1776-ம் வருஷத்தில் ஓர் வால்நக்ஷத்திரம் வியாழகிரஹத்தின் சந்திரரது கூட்டத்துள் சிக்கிக்கொண்டதாம். அதனால் அந்த சந்திரர்களுக்கு யாதொரு மாறுபாடும் உண்டாகவில்லை. வால்நக்ஷத்திரம்மாத்திரம் 20-வருஷத்துள் சுற்றிவரும் நக்ஷத்திரமாக உடனே மாற்றப்பட்டது. 1861-ம் வருஷம் ஜூன் மாதம் 30-ம் தேதி நமது பூமி ஓர் பெரிய வால்நக்ஷத்திரத்தின் வாலின் இடையே அகப்பட்டுக்கொண்டது. அதனால் நமது பூமிக்கு யாதொரு கெடுதியும் உண்டாகவில்லை. வால்நக்ஷத்திரங்கள் இப்பொழுதிருப்பதுபோல அடர்த்தியற்று இருக்குமாயின் நமது பூமியின்மேல் அது வந்து மோதினால் பூமிக்கு யாதொரு கெடுதியும்வாராது. ஒருவேளை இம்மாதிரி ஸமயங்களில் எரிநக்ஷத்திர மழைமாத்திரம் வந்தாலும்வரலாம். இதை அடுத்த ஸஞ்சிகையில் விஸ்தரிப்போம்.

இந்த வியாஸத்தை முடிக்கும் முன்னர் இதுவரையில் வெளிப்பட்டிருக்கும் வால்நக்ஷத்திரங்களில் முக்கியமானவற்றை எடுத்தெழுதி அவைகளைப்பற்றிய விசேஷங்களையும் தொகுத்துக் கூறுவோம்:—

(1) ஹாலி வால் நக்ஷத்திரம்:—இதுதான் சுற்றிவரும் வால்நக்ஷத்திரங்களுள் முதலில் கணனத்துக்கு அகப்பட்டது. இது சுற்றிவரும் காலம் 76வருஷம் என்று ஹாலி என்பவர் கண்டுபிடித்தார். இது முதலில் 1682-ம் வருஷத்தில் கணனம் செய்யப்பட்டது. பின்பு இது முன்னர் 1531, 1607 ஆகிய வருஷங்களில் தோன்றியதாகத் தெரியவந்தது. ஆகவே இது இனிமேல் 1911-ம் வருஷத்தில் மறுபடியும் தோன்றும்.

(2) என்கி வால் நக்ஷத்திரம்:—இது 3½ வருஷத்திற்கு ஒருதரம் ஸூர்யனைச் சுற்றிவருகிறது. இதன் கால அளவு 1819 வருஷம் என்கி என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. இதை ஸாதாரணமாக தூரதிருஷ்டிக்கண்ணாடி மூலமாகத்தான் பார்க்கவேண்டும். நல்ல ஸமயம் வாய்ப்பின் ஒருவேளை இது ஸாதாரண கண்களுக்குப் புலப்பட்டாலும் படலாம். இதற்கு சிறியவால் ஒன்று உண்டு. இது பிரகாசமாக இராது. இது ஸூர்யன் அருகில் வரவரச் சிறியதாக ஆகின்றது. இதற்கு வாலும் குறைந்துவிடுகின்றது. இதுபோலவேதான் ஹாலிவால் நக்ஷத்திரமும். இரண்டும் ஒழுங்குக்கு விரோதமாகத் தோற்றுவன. இவ்வாறு குறைவதற்குக் காரணம் இவைகள் அடிக்கடி ஸூர்யன் அருகாமையில் வந்து தமது வால்களுக்கு வேண்டிய வஸ்துக்களை இழந்திருப்பதே முக்கியமாக இருக்கலாம். ஆகவே இவைகள் பிடிபட்டு வெகுநாள் ஆயிருக்கவேண்டும் என்பது விளங்கும்.

(3) பயிலா வால் நக்ஷத்திரம்.--இது 6½ வருஷம் கால அளவை உடையது. இது பயிலா என்பவரால் 1826-ம் வருஷத்தில் வெளிப்படுத்தப்பட்டது. இது 1846-ம் வருஷம் தோன்றினபொழுது இரண்டாகப் பிரிந்து காணப்பட்டது ! இவ்விருபிரிவுகளும் ஒன்றன் அருகாமையில் மற்றொன்றாக வெவ்வேறுமார்க்கங்களில் 4-மாதகாலம் ஒரே தூரத்தில் சுற்றிவந்தன. இக்காலங்களில் இவ்விரண்டிலும் இரண்டு பொட்டுகள் விருத்தியாகிவந்தன. இவைகளில் ஒன்றொன்றாக மாறிமாறி பிரகாசித்து வரத் தொடங்கின. 1856 வருஷம் இவை திரும்பின பொழுது இவை இரண்டும் அதிகதூரத்தில் பிரிந்து காணப்பட்டன. அதன்பிறகு இவைகளைக் காணவே காணோம் ! ஆனால் இவை தோன்றி இருக்கவேண்டிய (1872-ம் வருஷம் நவம்பர் 27 தேதி போன்ற) காலங்களில் எரி நக்ஷத்திரமழை நமது பூமியில் விழுந்தனவாம். இம்மழையைப்பற்றி அடுத்த ஸஞ்சிகையில் விவரிப்போம்.



(4) டோனடிவால் நக்ஷத்திரம்.—இது 1858வருஷம் அக்டோபர்மாஸம் 4-ம்தேதி ஆகாயத்தில் அழகாகத் தோன்றிய ஓர் வால்நக்ஷத்திரம். இதைத்தான் இங்குள்ள சித்திரத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இது முதலிலேயே தூரதிருஷ்டிக் கண்ணாடி மூலமாக ஜூன்மாதத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் இதுஆகஸ்ட்மாஸம் ஸாதாரணமாக எல்லோர் கண்ணுக்கும் தென்பட்டது. இதில்தான் வால்நக்ஷத்திரங்களின் லக்ஷணங்கள் பூர்த்தியாகக் காணப்பட்டன. இதன்வாலின் அருகாமையில் இரண்டு மங்கலான கிறுகள் நேராகக் காணப்பட்டன. இவைதான் ஜலவாயு வாலாகிய வால். ஆகவே இதற்கு இரண்டுவால்கள் உண்டு. இதன் காலஅளவு 2000 வருஷம். ஆதலால் இந்த அற்புதக்காட்சி இனிமேல் 3858-ம் வருஷத்தில்தான் மறுபடியும் காணப்படும்.

(5) 1882-ம் வருஷத்துப் பெரிய வால்நக்ஷத்திரம்.—இதைப்பற்றி முன்னரே நாம் கூறியாய்விட்டது. இதன்காலம் ஸுமார் 650 முதல் 840 வருஷங்களுக்கு உட்பட்டது. இதன் சவிரிபாகத்தைச் சுற்றி மாத்திரம் ஒருமங்கலான கூடு ஒன்று காணப்பட்டது. இதுமாத்திரம் இன்னது என்பது விளங்கவில்லை.

(6) 1843-ம் வருஷத்து அற்புத வால்நக்ஷத்திரம்.—இது இனிமேல்திரும்பிவாராதுபோலத் தோற்றுகிறது. இதற்கு பிரகாசம் அதிகம்; வேகம் அதிகம். இது ஸூர்யனுக்கு மிகவும் அருகாமையில் வந்தது. இது மத்தியான்னத்திலேயே கண்ணுக்குப் புலப்பட்டுக்கொண்டிருந்தது.

(7) 1881-ம் வருஷத்து வால்நக்ஷத்திரம்:—இதில் ஸாதாரணகரி ஏராளமாக இருந்ததாகத் தெரியவந்தது.

(8) சீஸோ வால்நக்ஷத்திரம்.—இது 1744-ம் வருஷத்தில் வெளியாயிற்று. இதற்கு அநேக வால்கள் இருந்தன.

இம்மாதிரியான வால்நக்ஷத்திரங்கள் அசுபஸூசகம் என்று முன்னமே கூறினோம். ஆனால் ஹாலிவால் நக்ஷத்திரத்தை ஆங்கிலர் முற்காலத்தில் சுபஸூசகமாக எண்ணியிருந்தனர்; ஏனெனில் இது 1066-ம் வருஷத்தில்தோன்ற முதல் வில்லியத்திற்கு ஜயம் வந்ததாம். எப்படி இருந்தபோதிலும் இவை பார்வைக்கு மிக அழகாயும், அற்புதமாயும் தோற்றுவன என்பதற்கு ஸந்தேகமேயில்லை.

## நீலி வசீகரம்

### TAMING OF THE SHREW

விஜ.—என்னோடுகூட ஒரு பாட்டு வாத்தியார் இருக்கிறான்; அவன் ஜாக்கிரதையாய் கவனித்துக் கொண்டு வருகிறான்; இல்லாதபோனால், இந்நேரம் வஸிதேசுவரியைத் தூக்கிக்கொண்டு ஊருக்கே போயிருக்கலாம்.

சுப்.—முதலில் தந்திரத்தால் காரியத்தைச் சாதிக்கப் பார்ப்போம்; முடியாதபோனால் பிறகு உமது உபாயத்தை யோசிப்போம்; என்னால் பொன்னம்பலதேவர், ரகுநாததேவர், சங்கீத வித்வான் கோவிந்த வாத்தியார் இவர்கள் கண்களில் மண்ணைத் தூவிவிட முடியுமென்று தோன்றுகிறது.

(பொன்னம்பலத்தேவர் திரும்பி வருதல்.)

விஜ.—என்ன, தாலி கட்டியாய்விட்டதா?

பொ.—கட்டிவிட்டதாகப் பேர் பண்ணிவிட்டார்கள்; மாப்பிளை என்ன, ஒரு ராக்ஷதன்போலவிருக்கிறது!

சுப்.—ஏன், அவள்தான் ஒரு ராக்ஷசியாயிற்றே!

பொ.—இரண்டுபேரையும் யோசித்துப் பார்த்தால் அவள் பரமசாதுவென்று ஏற்படும். மந்திரம் சொல்லு என்றால், "எங்களப்பன்மேல் ஆணைப் படிக்கு, நான் சொல்லமாட்டேன்" என்கிறான். பெண் கழுத்தில் தாலியைக் கட்டும்படி, புரோகிதப் பார்ப்பான், தாலிச்சரட்டை யெடுத்துக் கைநீட்டியதும் மாப்பிளை ஒரு அதட்டு அதட்டினான்; அதனால் பார்ப்பான் பயந்து கீழேவிழுந்து விட்டான்; கீழே விழுந்தவன் எழுந்திருக்க முயலுகையில் அவனை ஒரு தள்ளுத் தள்ளினான். பார்ப்பான் எட்டுக் குட்டிக் கரணம் போட்டுக் கொண்டு பந்தலுக்கு வெளியேபோய் விழுந்தான். அப்புறம் எல்லோரும் சேர்ந்து நல்லவார்த்தை சொல்லிச் சமாதானப்படுத்தினார்கள். தாலியும் கட்டி முடிந்தது.

சுப்.—அப்பொழுதெல்லாம் கௌதமி என்ன பண்ணிக்கொண்டிருந்தாள்?

பொன்.—ஐயோ! பாவம்! நடுநடுங்கிப் போய்விட்டாள். முகத்தைப் பார்க்கும்போது பரிதாபமாகவிருந்தது. சடங்குகள் எல்லாம் முடிந்தபிறகு தூக்கம் வருகிறதென்று சொல்லிவிட்டு மாப்பிளை படுத்துக்கொள்ளப் போய்விட்டார்; அவரைத் தடுத்துக் கூப்பிட்டுக்கொண்டு வரப்பட்டபாடு தெய்வமறிந்து போய்விட்டது. பெண்டாட்டியைக்கட்டிக்கொண்டு கொஞ்சமேனும் கூச்சமில்லாமல் முத்தமிட்டுக்கொள்கிறான்; எனக்கு வெட்கமாகவிருந்தது, நான் ஓடிவந்துவிட்டேன்; இதைப் போலப்பைத்தியக்காரக் கல்யாணத்தை நான்கண்டதேயில்லை,—இன்னும் க்ஷணப்போதில் கூட்டம் கலைந்துவிடும். எல்லா சமாசாரங்களும் உமக்குத் தெரியும்

(எல்லோரும் போதல்.)

களம் 3. ரகுநாததேவரின் வீடு.

(நாராயணதேவர், கௌதமி, வஸிதேசுவரி, ரகுநாததேவர், பிரதாபருத்திரதேவர், பொன்னன், சுப்பராயன், பொன்னம்பலதேவர், விஜயராகவ உடையார் பிரவேசித்தல்.)

நா.—நல்லது; கல்யாணம் முடிந்து நான்குநாள் ஆகிவிட்டது; இன்றைய விருந்துக்கு நான் இருக்கமுடியாது; உடனே போகவேண்டும். ஆதலால் நீங்கள் உத்தரவு கொடுங்கள்.

ரகு.—இன்னும் இரண்டுநாள் கழித்தபின்பு போகலாம்.

நா.—கூடவே கூடாது; உடனே போகவேண்டும். என்னுடைய காரியம் எவ்வளவு அவசரம் என்று உங்களுக்குத் தெரிந்தால், நீங்களே என்னை வழி கொண்டுவந்து விட வருவீர்கள். உடனே நானும் என்னருமை நாயகியும் போகவேண்டும்.

சுப்.—விருந்து சாப்பாடு ஆனபிறகு போகும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்; தயவு செய்யுங்கள்.

நா.—விருந்து முடிவதற்கு நாழிகை பதினைந்து ஆகுமே! கூடாது, கூடாது; இந்த க்ஷணமே புறப்படவேண்டும்.

பொ.—நான் கேட்டுக்கொள்ளுகிறேன்; விருந்துக்குப் பிறகு போகலாமே.

நா.—முடியாது.

கௌ.—நான் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்; கொஞ்சம் தாமதித்துப் போகக்கூடாதா?

நா.—எனக்குத் திருப்தியாய்விட்டது.

கௌ.—ஆனால் தங்கியிருப்பீர்களா?

நா.—தங்கியிருக்க வேண்டுமென்று நீ கெஞ்சிக் கேட்டுக் கொண்டதில் மாத்திரம் தான் திருப்தி ; ஆனால் நான்மாத்திரம் உடனே புறப்படவேண்டியவன்தான்.

கௌ.—நாதா ! இப்படிச் சொல்லக்கூடாது ; தயை செய்து தங்கவேண்டும்.

நா.—பொன்னு ! குதிரையைக் கொண்டுவரவில்லையா இன்னும் ?

பொ.—தயாராக விருக்கிறது : வைக்கோல் குதிரையைத் தின்றுவிட்டது.

கௌ.—நீங்கள் வேண்டுமானால் போங்கள் ; நான் இப்போது வரமாட்டேன் ; நாளைக்கும் புறப்படமாட்டேன் ; என் தங்கை கல்யாணம் ஆனபிறகு எனக்கு எப்போது இஷ்டமோ அப்போதுதான் வருவேன் ; அதுதான் வழி ; இப்போதே வேண்டுமானாலும் போகலாம்.

நா.—கௌதமி ! சற்றுப்பொறுத்துக்கொள் ; கோபித்துக்கொள்ளாதே.

கௌ.—நான் கோபித்துக் கொள்ளத்தான் செய்வேன் ; அதனால் உங்களுக்கு ஆகவேண்டியதென்ன ? அப்பா ! நீர் சும்மா இரும், இவர்கள் இருப்பார்கள் இன்றைக்கு.

பொ.—பேஷ் ! இப்போதுதான் மருந்தின் வேகம் உறைக்கிறதுபோல தோன்றுகிறது.

கௌ.—நீங்கள் எல்லோரும் உள்ளேபோய்ச் சாப்பிட உட்காரலாம் ; நான் முட்டாளா ? இதோ தடுத்துவிட்டு வருகிறேன்.

நா.—கௌதமி! நீ உத்தரவிட்டபடியே அவர்கள்போவார்கள் ;—நீங்கள் எல்லோரும் போய் விலாபுடைக்கத்தின்று தூங்குங்கள் ;—எனது அருமைக்கோது மாத்திரம் என்னுடன் வரவேண்டும் ; கோது ! விழித்துப்பார்க்காதே கோபித்துக்கொள்ளாதே. எனக்குச்சொந்தமானவற்றைநான்எப்படிவேண்டுமானாலும் செய்யலாமல்லவா? அவள் என்னைச் சேர்ந்தவள் ; எனதுவீடும் அவள் ; நிலமும் அவள் ; மற்றைய வீட்டுப் பொருள்களும் அவள் ; எனது குதிரை, கழுதை, எல்லாம் அவளே ; அவளை நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன் ; நீங்கள் கேட்பதற்குப் பாத்தியப்பட்டவர்கள் அல்லர். எவனாவது தடுத்தால் தெரியும் சங்கதி.—பொன்னு ! கத்தியை உருவிக்கொண்டு தயாராக நில் ; நாம் திருடர்களுக்கு மத்தியில் அகப்பட்டுக்கொண்டோம் ; உன் எஜமானியை நீ காப்பது முக்கியம்.—கௌதமி ! பயப்படாதே. உன்னை ஒருவரும் தொடமாட்டார்கள். தொட்டால் தலையைத் துணித்துவிடுகிறேன்.

(நாராயணத்தேவர், கௌதமி, பொன்னன் போதல்.)

ரது.—ஒருவருக்கொருவர் ஏற்றவர்தாம், போகட்டும், சும்மாவிடுங்கள்.

பொ.—சிரித்துச் சிரித்துப் பிராணன் போய்விடும் போலிருக்கிறது.

சுப்.—நல்ல பைத்தியக்காரக் கல்யாணம் !

வதி.—அவளுக்கு ஏற்ற புருஷன்தான்.

ரது.—நாம் சாப்பாட்டுக்குப் போவோம்.

(எல்லோரும் போதல்.)

## அங்கம் IV.

### களம் 1. உறையூரில் நாராயணத்தேவரின் வீட்டுத் தோட்டம்.

(பொன்னன் வருதல்.)

பொ.—இந்த ஜன்மத்தோ டிருப்பதைக்காட்டிலும் பிராணனைக்கூட விட்டுவிடலாம் ; இப்படியெல்லாமா அடிபட்டும் வசவு கேட்டும் பிழைக்கிறது ! போதாத குறைக்கு முன்னதாக ஓடிப்போய் வெந்நீர் போட்டுவைக்கவேண்டுமாம் !—ஏலே ! பழனியாண்டி !

(பழனியாண்டி வருதல்.)

பழ.—மரியாதையில்லாமல் கூப்பிடுகிற பையல் யாரடா ?

பொ.—உனக்கு மரியாதை கூடவா ? பிராணன் போகிறது ; இந்த சமயத்தில் மரியாதையைத்தான் பார்க்கிறதாக்கும் !—கிடக்கட்டும் வெந்நீர் போட்டிருக்கிறாயா ?

பழ.—நமது எஜமானரும் எஜமானியும் வருகிறார்களா ?

பொ.—அந்த இழவுக்காகத்தான் வெந்நீர் போடச் சொல்லுகிறேன்.

பழ.—நமது எஜமானி உண்மையிலேயே பலேபேர் வழிதானோ ? வெகு பொல்லாதவள் என்று கேள்விப்பட்டோமே !

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

பண்டித நடேச சாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு

62. உமையும் தனது கருங்கூந்தல் நடுவில் விளங்கிய வகிர் சோபிக்கவும் கொண்டையில் அணிந்திருந்த கர்ணிகார மலர் நழுவவும் காதில்வைத்திருந்த தளிர்கள் சிதறவும் தலையை வணங்கி ஈசுவரன் முன்பாக நமஸ்காரம் பண்ணினுள்.

63. "மற்றுமொரு மடந்தையை நாடாத கணவனை நீ அடைவாயாக" என்று அவள் உண்மையாகவே ஈசுவரனுல் ஆசீர்வசனம் சொல்லப்பெற்ருள். ஈசனுர் சொன்ன சொல் இவ்வுலகத்தில் எங்கேயாவது பொய்யாய்ப் போனதுமுண்டா.

64. மன்மதனும் அதுதான் தனது பாணத்தைப் பிரயோகிப்பதற்கு ஏற்றதருணம்என்று அந்துபோல் நெருப்பைப் பார்த்தவனுய் உமையின் முன்பாக சிவனைக் குறிப்பிட்டு தனது வில்லின் நாணை அடிக்கடி மீட்டலானுன்.

65. பிறகு பார்வதி தாமரைபோல் சிவந்திருந்த தனதுகையில் சூரியபகவானுடைய கிரணங்களால் புலர்த்தப்பட்ட ஆகாசகங்கையின் தாமரை மணிமாலையை தவசியாயிருந்த சிவபெருமானுக்கு கொடுக்கலானுள்.

66. பணிவிடை செய்கிறவர்களிடம் தாம் எப்பொழுதும் பாராட்டிவரும் அன்பினுல் அம்முக்கண்ணனும் அம்மாலையை தமது கையை நீட்டிவாங்கலானுர். மலர்க்கணையோனும் ஒருபொழுதும் வீண்போகாத ஸம்மோகனம் என்ற கணையை தனது வில்லில் பூட்டிவிட்டான்.

67. சந்திரன் உதயமாகும் காலத்தில் சமுத்திரம் கொஞ்சம் கரைகடப்பதுபோல் ஈசுவரனும் கொஞ்சம் மனுேதிடம் இழந்தவராய் கோவைப்பழம்போல சிவந்த உதட்டுடன் விளங்கும் உமையின் முகத்தை தமது மூன்று கண்களாலும் பார்க்கலானுர்.

68. பார்வதியும் மலர் எடுத்த இளம் கதம்பமரம் போல் விளங்கும் தனது மேனியால் காதலைக் காட்டுகின்றவளாய் வெட்கத்தால் பதைத்த கண்கள் அமைந்த அழகான முகத்துடன் நாணி நின்ருள்.

69. அம்முக்கண்ணரோ ஐம்புலன்களையும் ஏற்கனவே அடக்கினவராகையால் அவ்வாறு கலங்கிய ஆறும்புலனுகிய தம்மனத்தையும் வெகுஉறுதியுடன் அடக்கி தம்து மனம் அவ்வாறு விகாரப்பட்டதற்குக் காரணத்தை அறிந்துகொள்ளத் தமது கண்ணைத் திறந்து தம்மைச் சுற்றி நாற்புறங்களிலும் பார்த்தார்.

70. தனது வலக் கடைக்கண்ணில் பிடிபிடித்தவனுய் தோள்வளைத்து இடக்கால் குந்தி உட்கார்ந்து தனது வில்லை ஒரு சக்கரம்போல முற்றிலும் நாணிழுத்து தம்மைக்குறிப்பிட்டு பாணம்போட மன்மதன் உட்கார்ந்திருந்ததை கண்டார்.

71. தமது தவத்தைக் குலைக்கவந்த காரணத்தால் கோபம் பொங்க புருவங்களை நெறித்துக் கொண்டு பார்க்கச்சகிக்காத கடுமையுள்ள முகத்தை அமைத்துக்கொண்டு விளங்கிய ஈசனுர் மூன்ருவது கண்ணினின்று ஒருநொடியில் மின்னிக்கொண்டு ஒருநெருப்பின் பொறி கிளம்பிற்று.

72. ஆகாயத்தில் தேவர்கள் எல்லாரும் "ஸ்வாமி! கோபத்தை அடக்குங்கள். அடக்குங்கள்" என்று கதறிக் கொண்டிருக்கும்பொழுதே சிவனுர் கண்ணினின்று உண்டான அந்நெருப்பு மன்மதன் தேகத்தின் சாம்பலே மிகுந்து நிற்கும்படி செய்தது.

73. தாங்கமுடியாத அவமானம் வந்த காரணத்தால் இந்திரிய வியாபாரங்கள் ஸ்தம்பித்துப்போய் மூர்ச்சையடைந்த ரதிதேவி ஒரு முகூர்த்தகாலம் தனது கணவன் போன துக்கம் அறியாதவளாய் சிவபெருமானுல் அதுவரையில் உதவிசெய்யப்பட்டவள்போ லானுள்.

74. ஒரு இடியானது பெரும் விருக்ஷத்தை முறித்தெறிவதுபோல தமது தவத்துக்கு வந்த இடையூற்றை ஈசனவ்வாறு முறித்து மாதர் ஸமூகத்தைவிட்டு நீங்கவிரும்பி தமது பூதகணங்களுடன் மறைந்தார்.

75. பார்வதியும் தனது தந்தை கொண்டிருந்த மேலான எண்ணமும் தனது மேனியின் அழகும் வீணுனவையென்று எண்ணிக்கொண்டு, தனது தோழிமார்கள் முன்பாக அவ்வித அவமானம் தனக்கு உண்டானமையால் அதிக வெட்கப்பட்டவளாய் உத்ஸாகமற்றவளாய் வெகு மனவருத்தமுற்று தனது தந்தைவீட்டை நோக்கித் திரும்பினுள்.

76. ஈசனுர் செய்த கோலாகலத்தால் பயந்து தன்னைக்கண்டதும் கண்களைமூடித் திகைத்துநின்றுவிட்ட தனதுபெண்ணினிடம் இமவான் மனமிரங்கி அவளைத் தனது கைகளால் தூக்கிக்கொண்டு, தனது இருதந்தங்களின்மேலும் விழுந்திருக்கும் தாமரை

தண்டை ஐராவதம் தூக்கிக்கொண்டு போவதுபோல் விளங்கிக்கொண்டு,வேகமாய்ச்செல்லும் பொருட்டுத் தன் தேகத்தை நீட்டிக் கொண்டவனை இமவான் சாதாரணமாய்ப்போகும் வழியைவிட்டு விலகி வேறு வழியாய் தன் மாளிகையைநோக்கிச் சென்றான்.

## ரதிவிலாபம் என்ற நான்காம் சருக்கம்

சோகமுற்று விழுந்திருந்த ரதிதேவி தாங்கமுடியாத வேதனையை உண்டுபண்ணும் புதுவைதவ்யம் என்பதை அறிவிப்பதற்காக விதியினால் எழுப்பப்பட்டவள்போல் மூர்ச்சை தெளிந்து ஒன்றுந் தெரியாதவளாய் எழுந்துட்கார்ந்தாள்.

2. மூர்ச்சை தெளிந்தவுடன் அவள் தன் கண்களைத் திறந்து தனக்கு எந்தப்பொருள் முக்கியமோ அதைப் பார்க்கலானாள். எப்பொழுதும் ஆவலை அடங்காமல் அவைகள் பார்த்துக்கொண்டிருக்கும் பொருள் இனி ஒருபொழுதும் காணக்கூடாதவண்ணம் அழிந்துபோனதை அவைகள் அறிந்துகொள்ளவில்லை.

3. "என் பிராணநாதா! நீங்கள் உயிருடனிருக்கின்றீர்களா" என்று சொல்லிக்கொண்டே அவள் எழுந்திருந்தபொழுது அவள் தன் முன்பாக சிவபெருமானுடைய கோபத்தீயே ஒரு புருஷ உருவான சாம்பர்ப்பதுமையாய் நிற்கக் கண்டாள்.

4. அவ்வாறிருக்கக்கண்டதும் அவள் மறுபடியும் மனஞ்சோர்ந்து மண்ணில் புரண்டு கூந்தலை அவிழ்த்துக்கொண்டு தன்னுடன்கூட அக்காட்டையேபுலம்பச் செய்கின்றவள்போல் கதறிப் புலம்பலானாள்.

5. "ஐயா, விலாஸ புருஷர்களுக்கு உவமை எடுத்துக்காட்ட அழகால் ஒப்பிடப்படும் உமது உருவம் இவ்வாறான கதியை அடைந்திருக்கின்றதே. அதைக் கண்டும் நானோ பிளக்கப்படாமல் அப்படியேயிருக்கின்றேனே! மடந்தைகள் கடினமானவர்கள் என்று சொல்ல இதைவிட வேறு திருஷ்டாந்திரம் வேண்டுமோ?

6. "உம்மையே நம்பி உயிர்வைத்திருந்த என்னை விட்டு,தண்ணீரையேநம்பி உயிர் வைத்திருக்கும்தாமரையை விட்டு கரை உடைந்ததும் நீர் ஓடுவதுபோல, ஒரு நிமிஷத்தில் என்மேல் நீங்கள் வைத்திருந்த அன்பவ்வளவையும் மறந்து எங்கு ஓடிவிட்டீர்கள்?

7. "தாங்கள் எனக்கு ஒருபொழுதும் மனக்கோணலாய் நடந்துகொள்ளவேயில்லை. நானும் தங்களுக்கு ஒருபொழுதும் இடையூறாக நடக்கவேயில்லை. அப்படியிருக்க எனிப்பொழுது நீங்கள் அழுதுநிற்கும் எனக்கு ஒருகாரணமுமில்லாமல் தரிசனம் கொடுக்கமாட்டேன் என்கின்றீர்கள்?

8. "என் பிராணநாதரே! நீங்கள் வேறு மடந்தைகளை நினைத்து தூக்கத்தில் பிதற்றும்பொழுது நான் எனது ஒட்டியாணக்கயிற்றால் அடித்ததையும் மலர்களை உங்கள்மேல் எறிந்தபொழுது அவைகளில் தாது உங்கள் கண்களில் விழுந்து அவைகளைக் கலக்கினதையும் நான் காதணியாய் அணிந்துகொண்டிருந்த மலர்களால் உம்மை நான் அடித்ததையும் நீங்கள் மனத்தில் எண்ணிக்கொண்டு எனக்கு தரிசனம் கொடுக்காமலிருக்கின்றீர்களா என்ன?

9. "அடி ரதி நீஎன் உள்ளத்தில் வஸிக்கின்றாய்" என்று என்னைப்பார்த்து நீங்கள்அன்பாகச்சொன்ன வார்த்தைகள் அவ்வளவும் பொய்யானவார்த்தைகள் என்பது இப்பொழுதுதான் தெரிந்தது. அவைகள் உபசாரவார்த்தைகளாய் இல்லாவிடில் நீங்களிப்பொழுது தேகமேயில்லாமலாவிக்க எனக்கு ஒரு சிறு காயங்கூட இல்லாமலிருப்பது எப்படி நியாயமாகும்.

10. "மற்றொரு உலகத்துக்கு புதிதாகப் போயிருக்கும் உங்கள் வழியைப் பற்றிக்கொண்டு நானும் இதோவந்து உங்களிடம் அகத்தியம் சேருகின்றேன். எனக்கு ஒன்றும் அதிக நஷ்டம் வரவில்லை. அந்தோ! விதியன்றோ இவ்வுலகத்தையே மோசஞ்செய்துவிட்டது. ஏனெனில் உடம்பைப் படைத்த எல்லாருக்கும் ஸுகம் என்பது உங்களாலல்லவா இதுவரையிலிருந்தது.

11. "பட்டினங்களில் வீதிகள் காரிருள் மண்டிய இரவில் முற்றிலும் மறைக்கப்பட்டு, கார்மேகம் கர்ஜித்து பயத்தை உண்டாக்கும் நிசியிலும் நாயகர்களைத்தங்கள் நாயகிகள் வீட்டிற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும் வல்லமை உங்களுக்கல்லவோ இருந்தது. இனி யாராலவ்வாறு செய்யமுடியும்?

12. "சிவப்பான கண்களைச் சுழற்றிக்கொண்டும் சொல்லுக்குச் சொல் பேச்சைகுளிரப் பண்ணிக்கொண்டும் விளங்கும் மதுவின் மதம் என்பது மடந்தைகளுக்கு இனி நீங்களில்லாத வரையில் வீணாக ஏற்பட்டதாயிற்று அன்றோ?

13. "ஐயா சரீரமற்றவரே! அன்பான உறவாகிய தங்களுடைய தேகம் இருந்தது கதையாக விடிந்ததைசந்திரன் தெரிந்துகொண்டு இனி தனது உதயம் பயனற்றதுஎன்று கருதி கிருஷ்ணபட்சம் போனபோதிலும் தான் மெலிந்துபோன துக்கத்தை வெகு சிரமத்துடன் ஒழியப்போகின்றான்.*

* இனி தான் வளருவதால் பயன் என்ன என்று கருதியபடி.

# ரத்னாவலி

## RATHNAVALI

இக்கதை கதாசரித் சாகரத்திலுளது. அதை ஸ்ரீ ஹர்ஷகவி வடமொழியில் நாடகமாகச் செய்துள்ளார். அதை நாம் தென்மொழியில் நம்நேயர்கள் வாசித்து ஆனந்திக்கும்பொருட்டு வசனநடையில் எழுதலானோம்.

முன்னொரு காலத்தில் வத்ஸன் என்னும் பெயர் கொண்ட ஓரரசன், வாஸவதத்தைஎன்னும்தன் பட்ட மகிஷியுடன் செங்கோல் செலுத்திவந்தனன். அவன் இவ்வாறு செங்கோல் செலுத்திவருங்காலையில் அவன் மந்திரியாகிய யௌகந்திராயணன், "ஸிம்ஹள ராஜன் பெண்ணை மணம்புரிவோன் ஏகசக்ராதிபதி யாவான்" என்று ஓர் சித்தர் சொன்னதின்பேரில் தன் ராஜாவுக்கு அந்தப்பெண்ணைக் கலியாணம் செய்துவைக்க விரும்பி அடிக்கடி தூதர்களை யனுப்பியும் ஸிம்ஹள ராஜன், வாஸவதத்தை கோபிப்பாளென்று பயந்து பலதடவையும் மறுத்துவிட்டான். ஆனாலும் கடைசியாய் யௌகந்தராயணன் எஜமானனிடத்திலிருந்த அதிக பக்தியால் எப்படியாவது ரத்னாவலியை வத்ஸனுக்குக் கலியாணம் செய்துவைக்க வேண்டுமென்று, வாஸவதத்தை லவணபுரத்திலுண்டான அக்கினியால் மாண்டாளென்றும் ஆகையால் ரத்னாவலியை வத்ஸனுக்குக் கொடுப்பதற்குத் தடையில்லையென்றும் பாப்ரவ்யின் என்றதூதனை அரசனறியாவண்ணம் விடுத்தனன் தூதன் கொண்டு வந்த சமாசாரத்தை ஸிம்ஹள ராஜன் அங்கீகரித்து ரத்னாவலியை தூதனான பாப்ரவ்யின், தன்னுடைய மந்திரி வஸுபூதி இவர்களுடன் கப்பலேற்றி யனுப்பினான். கப்பல் வந்துகொண்டிருக்கும்பொழுது ஒரு பெரிய புயலுண்டாய் கப்பலுடைந்து மூழ்கிப் போய்விட்டது. ஜனங்கள் போனவிடமே தெரியவில்லை. ரத்னாவலிக்கு ஒரு தெய்வகிருபையால் ஒரு பலகைத்துண்டு அகப்பட்டு அவள் அதில் ஏறிக் கொண்டாள். (இந்த ஸந்தர்ப்பத்தை காலஞ்சென்ற ரவிவர்மா ராஜா ஓர்படமாக எழுதியிருக்கிறார்.) இவள் ஏறியிருக்கும் பலகையை அலைகளடித்து வத்ஸ ராஜன் நகரத்திற்கு அருகாமையில் கொண்டுவந்து சேர்த்தது. யௌகந்தராயணன் இவள் வரவை யறிந்து அவளையழைத்துப்போய் வாஸவதத்தையின் அந்தப்புறத்தி லமர்த்தி அவள் விருத்தாந்த முழுவதுஞ்சொல்லாமல் அவள் சமுத்திரத்திலிருந்து அகப்பட்டமையால் "ஸாகரிகை" யென்றழைக்கும்படி சொல்லிவிட்டுப்போனான்.

இது இவ்விதமிருக்கையில் மதனமஹோத்ஸவம் ஆரம்பித்தது. இவ்வுத்ஸவம் மதுமாஸ மெனவும் வஸந்த ஸமயமெனவும் வடமொழியில் சொல்லப்படுகிற சித்திரைமாதத்தில் வருகிற வழக்கம். வஸந்தன் மன்மதனுடைய முக்கிய நேசன், எல்லாப்பூக்களும் பூத்து நல்ல தென்றல்வீசும் காலமிது. மன்மதனுடைய பூர்ண அதிகாரத்துக்கும் தகுந்த தருணம். இன்னும் நம்தேசத்தில் இவ்வுத்ஸவம் காமன்பண்டிகையெனக் கொண்டாடப்படுகிறது. நம் கதை நடந்தகாலத்தில் எப்படி நடந்ததென்பதை கவி விஸ்தாரமாக வர்ணித்திருக்கிறார். பட்டணம் முழுவதும்ஒரே கோலாகலமாகவிருக்கும். ஸ்திரீபுருஷர்கள் யாவரும் விளையாட்டையே நோக்கமாகவும் அவரவர்களுடைய மனதிற்கேற்றபடி அநேகவித வேடிக்கைகள் செய்வார்கள். சிலர் ஜனங்கள்மேல் மஞ்சள் பொடியை தூவுவதும் வேறுசிலர் குழாயால் சிவப்பு நீரடிப்பதும் இன்னுஞ்சிலர் ஜாலர், கொம்பு, மிருதங்கம் முதலான வாத்தியங்களோடு ஆடுவதும் பாடுவதும் யுவதிகள் பாடுவதும் பிரபுக்கள்முன் ஆடுவதும் வழக்கம். இந்தப்பிரகாரம் ஆபாலவிருத்தரும் கோபால நிருபாலரும் உத்ஸவம் கொண்டாடுவார்கள்.

அரசனும் விதூஷகனோடுகூட மாளிகையிலிருந்து உத்ஸவத்தைக் கண்டானந்தித்துக் கொண்டிருந்தான். இத்தருணத்தில் வாஸவதத்தை தான் மன்மத பூஜைசெய்வதைஅரசன் பார்க்கவேண்டுமென்று சொல்லியனுப்பி தன்னுடைய ஸகிகளுடன் உத்யானத்திற்கு வந்தாள். பூஜைக்கு வேண்டிய சாமான்களைச் சேகரிக்கும்பொழுது ஸகிக் கூட்டத்தில் ஸாகரிகையிருப்பதை கவனித்து, அவள் அப்பொழுது அங்கேயிருந்தால் அரசன் ஒருவேளை அவளைக்கண்டு மோகிப்பான் என்றெண்ணி "கிளியைப் போய்ப் பார்த்துக்கொள்" என்று சாக்குச் சொல்லி அவளையனுப்பிவிட்டாள். அனுப்பப்பட்டபொழுதிலும் ஸாகரிகை "நாம் கிளியைப் பார்த்துக்கொள்ள வேலைக்காரரை ஏற்பாடுசெய்துவிட்டுவந்தோம். இங்கே மன்மதபூஜை நடப்பது நம் தகப்பனார் வீட்டில் நடப்பதுபோலா என்று பார்ப்போம் நாமும் பூஜை செய்வோம்" என்று எண்ணி மறைவாய் நின்றுகொண்டு புஷ்பங்களைக்கொய்யலானாள். அரசனும்வர பூஜை ஆரம்பித்தது. ஸாகரிகை

திரும்பிப்பார்த்து அரசனுடைய ரூபத்தைக்கண்டு மோஹங்கொண்டு திகைத்து "இதென்ன ஆச்சரியம்! நமது தேசத்தில் மன்மதபிம்பத்தை பூஜை செய்கிறார்கள். இவ்விடத்திலோ மன்மதனே பிரத்யக்ஷமாயிருக்கிறான் போலும்" என்று சொல்லிக்கொண்டே கொட்டாத கண்களோடு அரசனையே பார்த்துக்கொண்டு அவனுக்கே தன் கையிலிருந்த புஷ்பங்களை அர்ப்பணம் செய்தாள். பூஜை முடிந்ததும் எல்லாரும் அவரவர்கள் இடம் போனார்கள். ஸாகரிகைக்கோ எந்தநிமிஷம் அரசனைப்பார்த்தாளோ அந்தநிமிஷமே அவனிடத்தில் அளவில்லாக் காதல்கொண்டு மதனபாதையால் மிகுந்த தொந்திரவுண்டாயிற்று. தொந்திரை பொறுக்கமாட்டாமல் உத்யானத்தில் வாழைத்தோட்டத்தில்போய் பகலை தன்பிரியனுடைய படத்தையாவது எழுதிபார்த் தானந்திப்போமென்று சித்திரப்பலகை, வர்ணம் முதலானவைகளை யெடுத்துக்கொண்டு தான் பார்த்துக்கொள்ளவேண்டியகிளியை ஸுஸங்கதை யென்னும் ஸகியிடத்தில் ஒப்புவித்துவிட்டு வாழைத் தோட்டத்திற்குள் போனாள். இவள் போனவிடம் தெரியாமல் ஸுஸங்கதையும் இவளைத் தேடிக்கொண்டே தோட்டத்திற்குள் சென்றாள்.

அரசனும் ஓர் சித்தரிடத்தில் விருக்ஷங்களை அகாலத்தில் புஷ்பிக்கச்செய்யும் வித்தையைக்கற்றுக்கொண்டு தன் உத்யானத்தில் தான் அன்புடன் வளர்த்துவரும் மல்லிகா கொடியில் பரீட்சை பண்ணவெண்ணி விதூஷகனோடுகூட உத்யானத்திற்கு வந்தான்.

ஸாகரிகை படமெழுதும் சாமான்களுடன் வாழைத்தோட்டத்திற்குட்சென்று மன்மதனால் வருத்தப்படுத்தப்பட்டு பலவாறுபுலம்பி மன்மதனைதன்னை அதிகமாக வருத்தப்படுத்தக் கூடாதென்று வேண்டித்தன் பிரியனுடையபடத்தையெழுத வாரம்பித்தாள். இதற்குள் ஸுஸங்கதையும் வாழைத்தோட்டத்தை யடைந்து மதனாவஸ்தையால் துக்கப்படும் ஸாகரிகையைப்பார்த்து அவள் படம் எழுதிமுடிந்தவுடன் "அடி ஸாகரிகை யார் படம் எழுதினாய்" என்று கேட்டாள். அதற்கு ஸாகரிகை "இந்த உத்யானத்தில் கொண்டாடப்படும் மன்மதனுடைய ரூபத்தை யெழுதினேன்" என்று சொன்னாள். ஸுஸங்கதை "அப்படியானால் அவனது பார்யையான ரதியையும் நான் அவன் பக்கத்தில் எழுதுகிறேன்" என்று சொல்லி சிரித்துக்கொண்டே ஸாகரிகையின் படத்தை எழுதினாள். இதற்கு ஸாகரிகை கோபித்துக்கொண்டு "ஏனடி என் படத்தை யெழுதுகிறாய்" என்று சொல்ல "உன் மன்மதனுக்கேற்ற ரதியை நான் எழுதினேனென்றுசொல்லி ஸுஸங்கதை ஸாகரிகையின் காதல் விருத்தாந்தத்தை யொளிக்காமல் சொல்லச்சொன்னாள். கையிலிருக்கும் கிளியானது அவர்களுடைய சம்பாஷணையை வெளியிடுமென்கிற சந்தேகமிருந்தபோதிலும் அதைக் காக்கிறது அவர்களேயானபடியால் அந்த விஷயத்தைப்பற்றி யோசியாமல் ஸாகரிகை தான் வத்ஸராஜனைக் காதலிக்கும்படி நேர்ந்த வரலாற்றையெல்லாம் சொன்னாள். தனக்குக் கிட்டாதபொருளில் ஆசைவிழுந்ததுபற்றி யோசித்து துக்கமடைந்தாள்.

இத்தருவாயில் அரண்மனைக் குரங்கானது கட்டியிருந்த சங்கிலியை யறுத்துக்கொண்டு உத்யான மார்க்கமாய் ஓடிவந்து இவர்கள் இருந்த இடத்திற்கு நேராக வந்தது. குரங்கு வருவதைக்கண்டு இருவரும் பயந்து ஒருபக்கமாய் நின்றார்கள். அவசரத்தில் பலகையையும்போட்டுவிட்டு கிளிக்கூட்டையும் மறந்துவிட்டார்கள். குரங்கு கிளிக்கூட்டை திறந்துவிட்டோடிப் போய்விட்டது.

ராஜாவும் விதூஷகனும் மல்லிகைக்கொடி புஷ்பித்ததாவென்று பார்க்கவந்தார்கள். வரும்போது ஏதோ மனுஷிய சப்தம்கேட்டு நிதானித்துப் பார்க்கும்போது ஓர்கிளி பேசுவதைக்கேட்டு அது சொல்லும் சமாசாரத்தை கவனித்தார்கள். ஏதோ ஒரு பெண் மன்மதாவஸ்தையினால் வருந்தி தன் ஸகிக்கு தன் அன்பின் விருத்தாந்தத்தை சொல்வதை கிளி சொல்லிற்றென்று தெரிந்துகொண்டார்கள். கொஞ்சதூரம் போகையில் ஸாகரிகையால் எழுதப்பட்ட சித்திரபலகையைக் கண்டார்கள். அதைப்பற்றித்தான் கிளிசொல்லிற்றென்றும் நிச்சயம் பண்ணினார்கள். பலகையை எடுத்துப்பார்க்குமளவில் அதிலெழுதப்பட்டிருக்கும் புருஷன்தானென்றும் கிளி சொன்னபெண் தன்னையே ஆசைப்படுகிறாளென்றும் அரசன் தெரிந்துகொண்டு அந்தப்பெண்ணின் படத்தைப்பார்த்து ஆனந்தமடைந்து அவளை நேசிக்கலானான். அவளுடைய ரூபத்தைப் புகழ்ந்துகொண்டே ஸாகரிகையும் ஸுஸங்கதையும் இருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். ஸுஸங்கதையைக் கண்டு அவள் ராணியின் ஸகியானபடியால் ஒருவேளை ராணியிடத்தில் அவர்கள் பேசிக்கொண்டிருந்த ஸங்கதியைச் சொல்லிவிடுவாளோவென்று பயந்தார்கள். ஸுஸங்கதை ஸாகரிகையின் விருத்

தாந்தம் தனக்கு தெரியுமென்றும் அவளுக்கு இவர் இருவர்களுடைய அன்பையும் விருத்திசெய்வதே தனக்கு மிகுந்த விருப்பமென்றும் சொல்லி, ஸாகரிகையை அரசன்முன் வரவழைத்தாள். அரசனும் ஸாகரிகையும் ஒருவரையொருவர் பார்த்து ஆனந்த பரவசமாய் உல்லாசமாய் பேசிக்கொண்டிருக்கும் பொழுது வாஸவதத்தையும் அவள் சகியுடன் அரசனது மல்லிகைக்கொடி புஷ்பித்ததா என்று கேட்கும்பொருட்டு உத்யானவனத்திற்கு வந்தாள். அவள் வருவதைக்கண்டு ஸாகரிகையும் ஸுஸங்கதையும் போய்விட்டார்கள். விதூஷகனும் பரபரப்போடு பலகையை கக்ஷத்தில் வைத்து ஒளித்துக்கொண்டான்.

வாஸவதத்தை வந்து அரசன் முகத்தின் விகாரத்தைக்கண்டு மல்லிகை புஷ்பித்ததென்று தெரிந்து கொண்டதாகச் சொன்னாள். இதைக்கேட்டவுடன் விதூஷகன் ஸந்தோஷத்தில் கூத்தாடலானான். கூத்தாடவும் பலகை நழுவி கீழே விழுந்தது. விழவும் வாஸவதத்தையின் ஸகிஅதைஎடுத்துப் பார்த்துத்தன் எஜமானியிடம் கொடுத்தாள். வாஸவதத்தை அதில் அரசன் பக்கத்தில் ஸாகரிகை எழுதியிருப்பதைக்கண்டு மிகவும் கோபங்கொண்டு இதுயாரெழுதினதென்று வினவ அதற்கு அரசன், விதூஷகன் தன்னுடைய படத்தையும் தான் ஏதோ ஒரு ஸ்திரீயின் படத்தைத் தன் மனதிலிருந்தெழுதினதாகச் சொன்னான். வாஸவதத்தை இதை நம்பாமல் கோபித்துக் கொண்டுபோய்விட்டாள்.

பிறகு அரசன் ஸாகரிகையினிடத்திலுண்டான காதலினால் மிகுந்த தொந்திரவு செய்யப்பட்டு ஸாகரிகையை யெப்படியாவது பார்க்கும்படி செய்யவேண்டுமென்று விதூஷகனை ஏற்பாடு செய்யச்சொல்லி அந்தப்புரத்திற்கு அனுப்பினான். விதூஷகன் ஸுஸங்கதையினிடத்தில் அரசன்படும் கஷ்டத்தைச் சொல்ல அவள் தான் ஏற்பாடுசெய்வதாகவும், வாஸவதத்தை தனக்கு சந்தோஷப்பட்டு வெகுமதியளித்த ஓர் ஆடை தன்னிடத்திலிருப்பதாகவும் அதை ஸாகரிகையை யணியச்சொல்லி வாஸவதத்தையின் வேஷங்கொண்ட ஸாகரிகையைத்தான் வாஸவதத்தையின் ஸகியாகியகாஞ்சனமாலையின் வேடம் பூண்டு உத்தியானத்திற்கு வருவதாகச் சொன்னாள். இந்த க்ஷேமசமாசாரத்தை விதூஷகன் அரசனிடத்தில் வேகமாய்ப்போய்ச் சொன்னான். அரசன்ஸந்தியாகாலத்தின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு அஸ்தமித்தவுடன் விதூஷகனையந்தப்புரத்திற்குஅனுப்பிவிட்டு உத்யானத்தை யடைந்தான்.

விதூஷகனும் ஸுஸங்கதையும் பேசிக்கொண்டிருந்தசமாசாரத்தைகாஞ்சனமாலை தெரிந்துகொண்டு வாஸவதத்தைக்குத்தெரிவித்தாள். வாஸவதத்தையும் இந்த சமாசாரத்தை விசாரிக்கும்பொருட்டு தானும் உத்யானத்திற்குப் போகத் தீர்மானித்துப் புறப்பட்டாள். விதூஷகன் இவள் தான் ஸாகரிகையென்று நினைத்து அவளையழைத்துக்கொண்டு அரசனிருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தான். அரசன் இவள் தான் ஸாகரிகையென்று நம்பி அவளுடன் வேடிக்கையாய் பேசும்பொழுது வாஸவதத்தை தன்னைத் தெரிவித்துக்கொண்டு அரசன் எவ்வளவுசொல்லியும் சாந்தப்படாமல் போய்விட்டாள்.

அரசன் வாஸவதத்தையின் கோபத்தை தணிப்பதற்கு உபாயங்களை எண்ணிக் கொண்டிருக்கும் பொழுது ஸாகரிகை வாஸவதத்தையின் வேஷத்தை யணிந்தவளாய் உத்யானத்திற்கு வந்து தான் ஒருவராலும் கண்டு பிடிக்கப்படாமல் வந்தபோதிலும் தான் அரசனைப் பார்க்கவந்த சங்கதியை தெரிந்து கொண்டு வாஸவதத்தை ஸுஸங்கதையை அவமானம் பண்ணினதுபோல் தன்னையும் பண்ணலாகா தென்றெண்ணி அசோக விருக்ஷத்தில் தூக்குப் போட்டுக்கொண்டு தற்கொலைசெய்து கொள்ளத் தீர்மானித்தாள். ஒரு நொடியில் சுலுக்குப்போட்டு "ஆ என் தாயே! என் தந்தையே!" என்று கதறினாள். மனுஷ்ய சஞ்சாரமும் சத்தமும் கேட்டவுடன் வாஸவதத்தையை சாந்தம் பண்ணத்தேடிக் கொண்டிருந்த அரசனும் விதூஷகனும் வாஸவதத்தை தான் தற்கொலை செய்ய யத்தனித்தாளோ வென்று சந்தேகித்து ஓடிவந்து பார்த்தார்கள். வாஸவதத்தை வேஷம் பூண்டிருந்தது ஸாகரிகை யென்றறிந்து அரசன் ஆநந்தக்கடலில் மூழ்கினவனாய் அரசனைக் கண்டமாத்திரத்தில் மரணத்தில் விருப்பமற்றவளாய் உயிரில் ஆசைகொண்டவளாயுமிருந்தஸாகரிகையுடன் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்தான்.

கோபித்துப்போன வாஸவதத்தை நாம் அரசனை வருத்தப்படுத்தினோமே என்று பச்சாதாபப்பட்டு அரசனை மன்னிக்கவெண்ணி திரும்பிவந்து ஸாகரிகை அரசனிடத்திலிருக்கிறதைக் கண்டு கோபாக்ராந்தையாய், அரசன், ஸாகரிகை வாஸவதத்தையின் வேஷம் போட்டுக்கொண்டிருந்ததால் ஏமாந்ததாக எவ்வாறு சொல்லியும் நம்பாமல் விதூஷகனையும் ஸாகரிகையையும் அந்தப்புரத்தில் பாராமல் வைப்பதாகச் சொல்லி யழைத்துப்போனாள்.

பிறகு வாஸவதத்தையால் கொண்டுபோகப்பட்ட ஸாகரிகை தன் ரத்னமாலையை ஸுஸங்கதையி னிடம் யாராவது ஒரு பிராமணனுக்குக் கொடுக்கச் சொல்லி ஒப்புவித்தாள். விதூஷகன் வாஸவதத் தையால் பந்தனத்திலிருந்து விடுவிக்கப்பட்டு வெகு மதிகளுடன் வந்தான். அவன் வருவதைக்கண்டு ஸுஸங்கதை அவனிடத்தில் கொடுப்போமென்று, ரத்னவலி உஜ்ஜயினிக்குக்கொண்டு போகப்பட்டா ளென்றும்போகையில் அந்தரத்னமாலையைக்கொடுத் தாளென்றும் சொல்லி அதை அவன் கையில் கொடு க்க அவன் முதலில் வேண்டாமென்று சொல்லி பிறகு அதைஅரசனுக்குக் கொடுத்தால் சந்தோஷப் படுவானென்று எண்ணி அதை வாங்கிக் கொண்டு அரசனிடத்தில் கொண்டுபோய்க்கொடுத் தான். அரசன் ரத்ன மாலையைப்பார்த்து ஸாகரிகை போய்விட்டாளே யென்று வியஸனத்தையும் அவ ளுடைய அடையாளம் கிடைத்ததே என்று சந் தோஷத்தையும் அனுபவித்துக் கொண்டிருக்கும் பொழுது உஜ்ஜயினியிலிருந்து ஓர் இந்திரஜாலக்கா ரன் வந்திருப்பதாகவும் அவன் வேடிக்கைகளைப் பார்க்கவேண்டுமென்று சொல்லியனுப்ப அரசனும் சம்மதித்து வாஸவதத்தையும் இந்திரஜாலக்காரனும் வர உத்திரவளித்தான். இந்திரஜாலக்காரன் வித்தை காட்டிக் கொண்டிருக்கும்பொழுது யௌகந்தராய ணன் ஸிம்ஹல ராஜனும் ரத்னவலியின் தகப்பனு மான விக்ரபாகு தன்னுடைய மந்திரி வஸுபூதியை பாப்ரவ்யனோடு கூட அனுப்பியிருப்பதாகவும் அவர் களை யரசன் பார்க்கவேண்டுமென்று சொல்லியனுப் பினான். அரசன் அவர்களைப் பார்க்கவிரும்பி இந்திர ஜாலத்தை நிறுத்தச் சொன்னான். இந்திர ஜாலக்கா ரனும் அப்படியேயென்று சொல்லி ஆனால் இன்னும் ஒருவித்தை தாங்கள்அவசியம் பார்க்கவேணுமென்று வேண்டிக்கொண்டான் அரசனும் சம்மதித்தான். வஸுபூதியும் பாப்ரவ்யனும் அரசனிடம்வந்து குசல ப்பிரச்னம் பண்ணினார்கள். விதூஷகன் கழுத்தில் ரத் னமாலையிருக்கக்கண்டுவஸுபூதிபாப்ரவ்யனிடத்தில் அது ரத்னவலியின்மாலை போலிருக்கிறதென்று சொ ல்ல வஸுபூதி ராஜாவினிடத்தில் எவ்வளவோ ரத் னங்களிருப்பதால் அதேமாதிரி வேறேரத்னமாலை யிருப்பது ஆச்சரிய மல்லவென்று சொன்னான். பிறகு வஸுபூதி யௌகந்தராயணன் வத்ஸராஜ னுக்கு ரத்னவலியைக் கலியாணம் பண்ணிவைக் கப் பண்ணி கடைசியாய் பாப்ரவ்யன் வஸு பூதி ரத்னவலி மூவரும் கப்பலேறி வந்ததும் கப்ப லுடைந்து ரத்னவலி காணாமல் போனதையும் சொ ல்லவாஸவதத்தைதன் சிறிய தாய் பெண் ரத்னவலி காணாமல் போனதைக்கேட்டு வருத்தப்பட்டு மூர்ச் சிதையாய் கீழே விழுந்தாள். அரசன் அவளுக்குப சாரங்கள் பண்ணி வஸுபூதியும் பாப்ரவ்யனும் தப் பித்துவந்ததே ரத்னவலி பிழைத்திருப்பாள் என் றெண்ணுவதற்கு ஓர் காரணமென்று சொல்லித் தேற்றினான்.

இத்தருணத்தில் அந்தப்புரத்தில் தீப்பிடித்ததெ ன்று பெரிய சத்தம் கேட்டது. வாஸவதத்தை ஐயோ! ஸாகரிகை போகிறாளேயென்று கதறினாள் அரசன் ஆ! ஸாகரிகை போகிறாளாவென்றலரி தன் னுயிரைக் கூடலட்சியம் பண்ணாமல் தீயில் விழுந்து அந்தப்புரத்திற்குள் நுழைந்தான், அரசன் தீயில் புகவும் எல்லாரும் அரசனுடன் உள்சென்றார்கள். உள்ளே நாலு பக்கமும் தீயால் சூழப்பட்டவளாயும் காலில் விலங்கிடப்பட்டவளாயும், உயிரை வெறுத்த வளாயும் நின்ற ஸாகரிகையைப் பார்த்தான். அவளை அழைத்துக்கொண்டு அரசன் வெளியே வரவே தீ யிருந்த குறியே யில்லாமல் அணைந்துபோய் எல்லாம் முன் இருந்ததுபோலவே யாய்விட்டது. அப்புறம் சற்று யோசிக்கும்பொழுது "இன்னும் ஒரு வித்தை பார்க்கவேண்டுமென்று சொன்ன" இந்திர சாலக் காரனுடையசக்தியால் ஏற்பட்ட தீயென்று புல ப்பட்டது. ரத்னவலியைப் பார்த்தவுடன் வஸு பூதிக்குச் சந்தேகம் உண்டாய் இந்தப்பெண் யா ரென்று வினவ வாஸவதத்தை ஸமுத்திரத்தி லிருந்து அகப்பட்டதாக தன்னிடத்தில் ஒப்புவித் ததாகச் சொன்னாள். இப்பொழுது சந்தேகம் திடப்படுத்தப் பட்டது. யௌகந்தராயணன் வர சந்தேகம் தீர்ந்தது. ஸாகரிகை தான் ரத்ன வலி என்று சொல்ல வாஸவதத்தை தன் சிறியதா யார் பெண்ணைதான் இவ்வளவு கஷ்டப்படுத்தினதற் காக மிகவும் துக்கித்தாள். அவளை அதிகமாய் அர சன் நேசித்தபடியாலும், அவள் மூலமாய் அரசனு க்கு ஏகசக்ராதிபத்யம் கிடைப்பதாலும் அவளை விவாகம் பண்ணிக்கொள்ளும்படி அரசனிடத்தில் அவளை ஒப்புவித்தாள். யௌகந்தராயணனும் ஸாக ரிகையை அந்தபுரத்தில் வைத்தகாரணம் அரசன் அவளைப்பார்க்க சந்தர்ப்பம் நேரிடுமென்று இந் திர ஜாலக்காரனை யேற்பாடு செய்தது பருவத்தி லிருக்கும் ஸாகரிகையை அரசன் அடையும் பொரு ட்டு தான் செய்த சூழ்ச்சி தான் என்று சொல்ல அர சன் அவனை மிகவும் மெச்சினான்.

பி. கிருஷ்ணசுவாமி சாஸ்திரி. B.A., B.L.

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

---

### எல்லாம் ஈசன் செயல்

காட்டுறை வேடன் கையில்வில் அம்பொடு
வேட்டையாட விரும்பிச் சென்றான்.
சென்றவன் கண்ணில் அன்றொரு விலங்கும்
அகப்படா மையினுல் மிகப்பட*ருற்றுத்
5 தனதுயிர் வவ்வத் தரணியில் ஒன்றுள

தெனமனத் தெண்ணுன் 'எதனுயிர் எவ்வுவ'
மென்னுமெண் ணத்தொடுதன்னினன் மரத்தடி
அப்பொழு தம்மரக் கொப்பிலாண்பெண்ணும்
இருபுறு இருந்து பெருமகிழ் வுற்றன.
10 அவற்றைப் பார்த்தலும் அகமிக மகிழ்ந்து 'நாம்

இவற்றைஓர் கணையால் எய்துவீழ்த் துவ'மெனக்
கையின் வில்லைக் காதுற வளைத்தங்கு
எய்யக் குறிபார்த் திருந்தனன்; இருக்க,
இப்புறு மரத்தைவிட் டெழுந்த வுடனே
15 தப்புறு தடிக்கத் தன்மனத் தெண்ணி

ஓரிரா சாளிமேல் உலாவுதல் செய்தது.
கிளையுறு புறவோ கீழ்மேல் நோக்கலும்
†கிளைமகிழ் நீத்துச் 'செய்வதென் தெய்வமே'
என்றுள மிரங்கித் துன்றின துயருள்.
20 கொல்லுங் கணைவிடக் குறிவைத் தங்கே

மெல்ல மெல்ல மேலே பார்த்து
வேடனும் வந்து கூடினன் நேரே
அவ்விடத் துள்ள ‡அளையொளித் திருந்த
வெவ்விட அரவம் வெடுக்கெனக் கடித்தது.
25 சட்டென வேடன் தரைமிசை விழக்கணை

பட்டிரா சாளியும் பதைத்துடன் வீழ்ந்தது.
பின்புறுத் துன்பற இன்பினை மேவின
இதுதனை நோக்குமின் மதிநல முடையீர்!
இயலுவ தெல்லாம் ஈசன்
30 செயலே யென்னச் சிறந்தசான் றுமே.

---

*புடர் = துன்பம்; †கிளை = தடையற்ற; ‡அளை = வளை.

தமிழ்ச்சிறப்பு:—இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்' என்பது பிங்கல நிகண்டு. தமிழ் என்னும் பதத்திற்குப் பொருள் இனிமை. அது இனிமையைத்தரும் பாஷையை யுணர்த்துகின்றது. தமி என்பது தனிமை யென்னும் பொருள் தருஞ்சொல். எப்பாஷைகளிலுமில்லாத 'ழகரம்' எனும் எழுத்துத் தனிமைக்குச் சான்றாகவுள்ளது. சிவபெருமானே இப்பாஷைக்கு முதற்கருத்தாகவிருந்து பயன் பெறச் செய்தாரென்றால் அதன் பெருமையை எம் போலியர்களால் எடுத்துரைக்கப்பாலதோ? இப்பாஷை வேறுபாஷையினுதவி வேண்டாது தன்சப்தத்தோடு வழங்கும் பெருமையுடைத்தென்பது ஓர் சிறப்பு. தமிழ் தென்னாட்டில் வழங்கி வருவதால் தமிழுக்குத் தென்மொழி யென்னும் பெயருண்டு. நம் தாய்ப்பாஷையுந்தமிழ்,நம் வீட்டுப் பாஷையுந் தமிழ், நாட்டுப்பாஷையுந்தமிழ், அல்லாமலும் தமிழின் பெருமை பின்வருஞ் செய்யுளால் நன்கு விளங்கும்.

> தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
> யுண்டபாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
> கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
> தண்டமிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.
>
> (திருவிளையாடற் புராணம்)

இத்துணைப் பெருமைவாய்ந்த தமிழ்ப் பாஷையை விட்டுவிட்டு மற்றைய பாஷையே கதியென்று படிக்கிறவர்களை யாமென்னென்று கூறுவோம். சொந்தபாஷையைப் பிழையற வெழுதவும் படிக்கவும் கற்றுக்கொள்ளாமல் அந்நிய பாஷைகளிலேயே காலத்தைச் செலுத்துவது நந்நாட்டு மாணுக்கர்களுக்குத் தகுதியாமா? இங்கிலிஷ், பிரெஞ்சு முதலிய ராஜபாஷைகளைப் படிக்கவேண்டாமென்று கூறவில்லை. இக்காலத்தில் ராஜபாஷையாகிய இங்கிலிஷ் படியாவிட்டால் நமக்கு ஒருகாரியமும் நடவாது. சொந்த பாஷையை முற்றிலுமே பழகாது விட்டுவிட்டு அப்பாஷைகளிலேயே காலத்தைச் செலுத்துவது சிறந்ததன்று. சிலர் தமிழ்ப்பாஷைகளிற் சம்பாஷிப்பது அகௌரவமென்றும், தமிழ்ப்பாஷை பயில்வது அவமானமென்றும் எண்ணுகிறார்கள். திருவள்ளுவநாயினர் செய்த திருக்குறளைப்போலச் சிறந்ததோர் நூல் எப்பாஷைகளிலு மின்மையைக் கருதி இக்காலத்தில் அநேகர் திருக்குறளைத் தங்கள் தங்கள் பாஷையில் மொழிபெயர்த்துக் கற்றுவருகின்றனர். ஆகையால் ஒவ்வொருவரும் சொந்தபாஷையைப் பொன்னேபோற் போற்றித் தமிழ்ப்பாஷையைக் கண்ணுங் கருத்துமாய்க் கற்றுவரல் வேண்டும்.

கடவுள் தியானம்:—கடலாற் சூழப்பட்ட விந்நில வுலகத்தின்கண்ணே மானிடராய்ப் பிறத்தல் மிகவரிது. மானிடராய்ப் பிறந்துங் கூன், குருடு, ஊமை, செவிடு முதலிய குற்றங்கள் நீங்கியிருத்தலதனினுமரிது. அவ்வாறு பிறந்தும்நல்ல வருணத்தில் பிறத்தல் அதனினுமரிது. ஆகையால் மானிடராய்ப் பிறந்த யாவரும் நம்மைச் சிருஷ்டித்த கடவுளை நாடோறும் துதிக்கவேண்டுமென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றதல்லவா? நம்மைப் படைத்தும் நம் சுகானுபவத்திற்குறிய பொருள்களை யேற்படுத்தியும் நமக்கு நன்மை செய்வதிலேயே கண்ணுங்கருத்துமாயிருக்கிற கடவுளை யன்றாடந் தியானஞ் செய்யாவிடில் நாம் அக்கடவுளுக்குச் செய்யவேண்டிய வந்தனை வழிபாடுகளாகிய கடமையைச் செய்யாதவராக ஆவோமல்லவா? சிலர் கடவுள்தியானம் செய்யாது கேவலம் பொருளீட்டல் என்னும் தொழிலையே மேற்கொண்டு அதிலேயே கண்ணுங் கருத்துமாக நின்று தங்கள் வாணாளைக் கழிக்கின்றனர். பள்ளிக்கூடத்திற் கல்விபயிலும் மாணாக்கர்களில் பெரும்பான்மையோர் கடவுள்தியானஞ் செய்யாது தங்கள் ஓய்வு நேரங்களை வீணில் கழிக்கின்றனர். ஒவ்வொரு மாணாக்கனும் தங்களுக்குக்கிடைக்கும் ஓய்வுநேரங்களிற் சிறிது பொழுது கடவுள்தியானஞ்செய்தால் எவ்வளவோ மேன்மையடையலாம். பள்ளிக்கூடம் கலாசாலை முதலியவைகளிற் கல்விபயின்று தங்கள் வாசிப்பை யொருவாறு முடித்துப் பின்னர் உத்தியோகத்தி லமர்ந்தவர்களிலும் பெரும் பான்மையோர் இவ்வொழுக்கத்தை யனுசரிக்கிறார்களில்லை. இவர்கள் காலை மாலைகளிற் செய்யவேண்டிய நித்திய கடமைகளையுஞ் செய்கிறார்களில்லை. இதற்கு எல்லாம் காரணம் பழக்க மென்றே நாம் கூறுவோம், ஆகையால் மாணாக்கர்களாக விருக்கையிலேயே தாய் தந்தையர், ஆசிரியர் முதலியவர்கள் அவர்களைக் காலையிலும் மாலையிலும் கடவுள்தியானஞ் செய்யுமாறு பழக்கத்திற்குக் கொண்டுவரவேண்டும். தொட்டில் பழக்கம் சுடுகாடுமட்டும் என்னும் பழமொழிக்கொத்தவாறு அவர்கள் அப்பழக்கத்தைக் கைப்பற்றித் தங்கள் தங்கள் வாணாளைக்கழிப்பார்கள். கலாசாலையினின்று வெளியேறி பின்னர் உத்தியோகத்திலோ அல்லது வியாபாரத்திலோ அமர்ந்தபின்னர் அப்பழக்கம் அவர்களைப் பின்பற்றி செல்லும். நாமோரிடத்தி லுல்லாசமாக வுட்கார்ந்திருக்கையில் நம்மைவிட உத்தியோகத்திலோ அல்லது வருணத்திலோ உயர்ந்தோர் வரின் நாமிருக்கைவிட்டெழுந்து அவருக்கு மரியாதைசெய்கிறது உலகவியல் பென்பதை யொருவரும் மறுக்கார். இந்தச்செய்வதின் கருத்து யாதென வினவின், அவர் ஏதாவது கெட்டஅபிப்பிராயம் படுவாரென்றும், அதனால் தங்களுக்குக் கெடுதி விளையுமென்றும் எண்ணுவதைத் தவிர வேறொன்றுமில்லை. இவ்வாறு இவர்களிடம் நல்லபிப்பிராயம் சம்பாதிக்க வேண்டுமென்கிற எண்ணமுடைய நாம் இகம், பரம் ஆகிய இரண்டுக்கு முற்ற துணையாயிருக்கிற சாக்ஷாத் கடவுளின் நல்லபிப்பிராயத்தை நாம் பெற்றுவிடின் நமக்குச் சித்திக்காத காரியம் இந்நிலவுலகின்கண் ணில்லையன்றோ? கடவுளின் பாதாரவிந்தங்களைச் சேர்ந்தாலன்றி நம் மனக்கவலை மாற்றுதல் முடியா. எத்துணைக்கல்விமானாயினுங் கடவுள்தியானஞ் செய்யாவிடில் அவன் கல்வி பயனில்லை. ஆகையால் ஒவ்வொருவரும் கடவுளைத்தியானஞ்செய்து அவர் அனுக்கிரகத்தைச் சம்பாதித்தல் வேண்டும்.

* * *

உள்ளதை உள்ளபடி சொல்:—இது மிகவும் சிலாக்கியமான குணம். ஆனால் இதையனேவரிடம் காண்பதரிது. உள்ளதை உள்ளபடி சொல்லாமல் ஏற்றதாழ்வாய் நாம் ஒருதரம் சொல்லப் பழகிவிட்டோமேயானால் எப்பொழுதும் அவ்வழியிலேயே நாம் போய்க்கொண்டிருப்போம் தேசாந்திர ஸஞ்சாரிகளின் பொய்களை நாம் பன்முறைகளிற் கேட்கின்றோமல்லவா? முதல் முதல் சில ஐரோப்பியர்கள் நமது தேசத்தைப்பற்றித் தங்களினத்தார்களுக்கெழுதி யனுப்பும்பொழுது நமக்கு காதுகள் முறம்போல் அகன்றவைகளென்றும், இரவில் படுத்தூங்கும்பொழுது நாம் நமதுகாதுகளால் நமது முகங்களை மூடிக் கொள்கின்றோமென்றும் எழுதி யனுப்பினார்கள். இன்றைக்கும் நாம் காசிக்குப் போய்வந்த ஒருவனைக்கூப்பிட்டு சமாசாரம் கேட்டால் நாம் அத்தேசம் போனதில்லை என்று அவனுக்குத்தெரிந்திருக்குமேயானால் அவன் ஆயிரம் விஷயங்கள் அதிகமாகவே சொல்லுவான். இவ்வேற்றக்குறைச்சலாய் சொல்லும் குணம் ஒருதரம் நம்மைப் பற்றிக்கொண்டால் நம்மை விடுகிறதேயில்லை. இதற்கும் பொய் என்பதற்கும் வித்தியாசமேயில்லை. ஆகையால் இதில் மாட்டிக்கொள்ளாமல் சிறுவயது முதல் நாம் உள்ளதை உள்ளபடி சொல்லுங் குணத்தைப் பற்றிக்கொண்டே வரவேண்டும்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்
## LADIES' PAGES

"பிரிந்தவர் கூடினுப் பேசல் வேண்டுமோ"—
கம்பர்

" கஷ்டம் ஸுகம் இவைகளெல்லாம் என்மனதை ஒரு விதத்திலும் சலிக்கச் செய்யாது. மனோதைரியம் தான் என் நிலைமை. கணவன் ஒருவன்தான் உரிமை. அவரை அடைவதுதான் எனக்குப்பெருமை. அவர் என்னை பரீக்ஷிக்க எண்ணங்கொண்டெது செய்யினும் எனக்கு ஸம்மதம்; அப்பரீட்சையில் என் நெறி தவராது இருக்க அவர் பாதம்புயம்தான் எனக்குத் துணை. அவர் செந்தாமரைபோலும் அடிகள் இரண்டும் என் கவலை முழுதையும் தணித்து என்னை உயர்த்தும். இது ஸத்தியம். எக்கஷ்டம் வரினும் வரட்டும். அதற்கு மருந்தவையே. அப்பாதங்களிரண்டே" என்று மனோதைரியங் குன்றாமல் தன் கணவனுக்காக எக்கஷ்டங்களையும் அடைய ஸர்வவித்தமாயிருக்கும் பெண்ணல்லவா தெய்வ சிருஷ்டியின் பெருமையை விளக்குகிறது.

***

'இப்படியும் ஒரு மண்டபமிருக்குமா' என்று சொல்லும்படியாக ஸூரியன் உதயம் ஆனான். கூட கவலையும் உதயம் ஆய்விட்டது. தமயந்தி "ஆ! உயிர்க் காதலா!" என்றுக்கொண்டே எழுந்தாள். நளனைக் காணவில்லை. அப்படியே ஸ்தம்பித்துவிட்டாள். கற்போல் இருந்தவிட மசையாது நின்றாளே ஒழிய வேறு ஒன்றும் அவள் மனதை அசைத்ததாகத் தெரியவில்லை.

***

குலஸ்திரீ என்பவளுக்குக் கொடுங்குணம் என்ப தின்னதென்று தெரியாது. தன் கணவன் எது செய்யினும் தனக்கு நல்லதிற்குச் செய்வதற்காக வென்றுதான் எண்ணுகிறாள். தன்னைத் தனியாக விட்டுச்சென்ற நளனைக் குறித்துச் சிறிதும் கோபமின்றி தன்னை பரீக்ஷிக்க அவர் ஏதோ திருவிளையாடல் செய்கிறார் என்று நிஸ்சயித்தாள். எதிரிலிருந்த பாதையின் வழியாகவே நடக்கலானாள்—தன் கணவனை நாடி அடையும்பொருட்டாகத்தான்.

***

நமக்கொருவன் கெடுதி செய்யவிரும்பினால், நல்லது செய்ய வருவதுபோல் வந்து, கெடுதி செய்வது அவன் ஸ்வபாவம். தான் செய்ய விரும்பும் கெடுதியை மனதில் வைத்துக்கொண்டு நம்மை மாய அன்பினால் மயக்கி பின்புப் பிரயாசைப்படுத்துவது கெடுதி செய்பவனது இயற்கை ஆகும். இம்மாய அன்பில் விழுந்து மயங்காதவர் எவர்? மயங்கிவிட்டாலும் அவன் நமக்குக்கெடுதி செய்யவந்தான் என்று தெரிந்தாலுடனே நமக்குந் தெரியாமல் ஒரு சக்திதானே கிளம்பித் தனது பகையை ஒழிக்கச் செய்வது இயற்கையே அன்றி அற்புதமன்று. இவ்விதமாகிய பகைவன் ஓர் ஸ்திரீயின் கற்பை அழிக்க நேசன் போல் வந்து புலிப்போற் பாய்வானாகில் அவளதுகற்பென்னும் அக்னி அவள் உடலெல்லாம் பரவி கொழுந்துவிட்டெரிந்து கனல்வீசித் தன்னை எதிர்த்தவனை எரித்துவிடும். இது மறக்கற்பின் பாற்பட்டது.

***

தமயந்தி எதிரில் ஓர் கடுநாகம் சீறிவந்தது. 'நாதா இதுவும் என் தலைவிதியோ' என்றலறினாள் தமயந்தி. இருந்தாற்போல விருந்தங்கோர்வேடன் அந்நாகத்தைத் துண்டித்து 'நான் உன்னை வீணாகக் காப்பாற்றவில்லை. உன்னுருவம் என் மனதைப் பிளந்துன்மேல் ஆசைப்படும்படிச் செய்துவிட்டது. இனி என்னால்பொறுக்கமுடியா—" தென்று அவன் முடிப்பதற்குள்ளாகவே தமயந்தி கடுகடுத்து காடுங் கலங்கும்படி "சீ! நீசா! இழிகுலக்குரங்கே! இன்னமொருமுறை அப்படிச்சொல்ல உன் நாக்கெழும்புமா?" என்று அவன் உள்ளம் பிளக்கும்படி கர்ச்சித்தாற்போல் கூவினாள். செவியிற்படாதவன் போல் அவன் தமயந்தியின் அருகிற் செல்ல, அவள் விழித்தவிழிப்பின் வசீகரசக்தியால் சாம்பராய்க்கீழ் வீழ்ந்துவிட்டான். காமத்தால் ஸுகமடைந்தவனெவன்?

***

மனைவிக்கு தர்மபாகமுடையவள் என்று ஒரு பெயருண்டு. அதாவது கணவனது தர்மத்தை பாகித்துக்கொள்பவளென்பது கருத்து. அவன் கஷ்டத்தையும் ஸுகத்தையும் பாகித்துக்கொள்வதினால் அவளுக்கிப் பெயர் வந்தது. அது மாத்திரமல்ல. அவன் செய்யும் புண்ணியத்திலும் பங்கு கொள்கிறாள். அவனது ஸுக துக்கங்களை பாகித்துக்கொள்ளுபவள். அவன் கஷ்டப்படுங்காலத்தில் தான் கஷ்டப்படுவது ஸகஜம். தனக்கு ஸுகம் வருவதாயிருந்தாலும் அதை வெறுத்து கணவனது கஷ்டத்தில் ஆவேசிப்பதே அவள் குணமாகிறது. அவனை கஷ்ட

த்திலிருந்து நீக்க பிரயத்தினம் செய்வதுதான் அக்குணத்தின் ஸ்வரூபமாகிறது.

***

காட்டின்வழியாக நடந்துவந்த தமயந்தி சேதி நகராந்தரசியின் பாங்கியாகஇருந்து ஊழியஞ்செய்து வந்தாள். தனக்கவள் சிற்றாய் என்றறிந்தும் அவளுக்குத்தெரியாம லிருக்கும்படியாக ஊழியஞ் செய்தாள். கணவன் கஷ்டமடையுங் காலங்களில் தான் சுகமடைய அவளுக்கு விருப்பமில்லை. எவ்வாறு தன் கணவனை அடைவதென்றே கவலையாய் இருந்தாள். இவ்வாறிருக்க அவளை ஓர் பிராமணன் கண்டழுதான். சேதிநகர்க்கரசி "ஏன் அழுகிறாய்" என்று கேட்க "இவள் தமயந்தி, நளன் மனைவி, வீமன் மகள்; வீமன் எனக்குயிர்த் தோழன்." என்றந்த ஸ்வேதனென்னும் பிராமணன்சொன்னான். எனவே அவள் தமயந்தியை கடாலிங்கனஞ் செய்துச் சோர்ந்தாள். பின்பு தமயந்தியை அவள் விருப்பத்தின்படி விதர்ப்பபுரத்திற் கனுப்பினாள்.

***

எவ்விடத்தி லிருப்பினும் தன் கணவன் ஒருவன் மேல்தான் மனைவியின் அன்புமுழுதுஞ் செல்லும். அவரைக்காணவிட்டால் அவள் மனம் பதைக்கும், உயிர்துடிக்கும். அன்னம், ஆஹாரம் ஒன்றும் விரும்பாள். அவனை அடையும் வழியைத்தான் தேடுவாள். வேறொன்றிலு மவள் புத்தி செல்லாது.

***

ருதுபர்ணன் வீட்டில் தன் கணவன் தேர்ப்பாகனாக இருப்பதாகக் கேள்விப் பட்டாள். தமயந்திஅவனைஎவ்வாறு அடைவதென் றாலோசித்தாள். "தமயந்திக்கு இரண்டாம் ஸ்வயம்வர" மென்று நீ சென்று ருதுபர்ணனுக்கும், அவனுடையத் தேர்ப்பாகனுக்குஞ் சொல்லி உடனே வரும்படிச் சொல்லி வா" என்று தமயந்தி ஒரு பிராமணனை அனுப்பினாள். அவனு மப்படியே சென்றான்.

***

மனைவிக்குத் தன் கணவன் ஒருவன்மேலே புத்தி முழுதுஞ்செல்வதால் அவனுடைய நடை நொடி பாவனை முழுதுஞ் நன்றாகத் தெரியும். அதிலும் தனக்குத் தெரியாமல் தன் கணவனைக் காணும்படியாக சில ஸமயங்கள் ஏற்படும். அக்காலங்களில் இவைதான் அவளுக் குபயோகமாவன. யுக்தியும் புத்தியுங்கொண்டு தீர ஆலோசித்துத்தான் அவனை அறிவது அவசியமாகிறது. இல்லாவிட்டால் பாதிவிரத்யம் பங்கமாய்விட்டாலும் விடலாம். இதற்கு தக்கவாறு நடப்பதுதான் குலஸ்திரீயின் குணம்.

***

ருதுபர்ணன் விதர்ப்பபுரம்வரும் ஓசைதெரிந்தது. "அவ்வோசை நளன் தேர் ஓட்டினால்தான் இருக்க முடியும்" என்றாள் தமயந்தி. வீமன் ருதுபர்ணனுக்கு விடுதிவிட்டான். ருதுபர்ணனுக்கு ஸ்வயம்வர மிருப்பதாகப் படவில்லை. தமயந்தி ஓர் தாதியை அனுப்பி அத்தேர்ப்பாகன் எவ்வாறு சமையல் செய்கிறான் என்பதைப் பார்க்கச் சொன்னாள். கட்டையின்றி சமைப்பதா யறிந்தாள். நளன் என்று நிஸ்சயித்தாள். ஆனாலும் ஸந்தேகம் தீரவில்லை. தன் குழந்தைகளை அவனிடம் அனுப்பினாள். அவன் அவர்களைக் கண்டழுததைக் கேட்டு நளன் என்று நிஸ்சயித்து அவனைதன் வீட்டிற்கழைத்து வரும்படிச் செய்து அவன் காலில்வீழ்ந்தாள். அவன் உடல்கறுத்திருந்தைக்கண்டாள். அவன் பதிற்சொல்லவில்லை.

***

தன்மனைவி பதிவிரதை என்று எண்ணினவன், அவள் மறுவிவாகஞ் செய்துக்கொள்வதாக அவன் தெரிந்துகொண்டால் அவன் என்னசெய்வான்? "கற்புள்ளமாதர் கணவன் நீக்கினும் வேறு நாயகனை இச்சிப்பாரோ?" என்று நளன் தமயந்தியைக் கேட்டான். அவள் அவன் பாதம்பணிந்து "தங்களைக்காணும்பொருட் டிவ்விதம் செய்ததன்றி நான்மணஞ்செய்துக் கொள்வதற்கல்ல. இது தந்திரமன்றி என் மனஸ்ஸம்மதமல்ல" என்று சொல்லிக் கொண்டே சோர்ந்து நளன் காலருகு வீழ்ந்தாள். அவளைத் தேற்றினான் நளன். அவளும் விழித்து "நீர்கறுக்கக் காரணமென்ன" என்றாள்.

***

"காட்டின் வழிவர, பெருஞ் ஜ்வாலைகிளம்ப, அதைப் பொறுக்கமுடியாதொரு பாம்பு என்னை காப்பாற்றும்படி வேண்ட, நான் காப்பாற்ற, அது என்னைக்கடித்து வேற்றுருவு அடையச்செய்து, அயோத்திசென்று ருதுபர்ணனிடம் தேர்ப்பாகனாகவிருந்து, அவனுக்கு குதிரைகள் ஹ்ருதயம் அறியும் வித்தையைக் கற்கச்செய்து, அவனிடத் தென்னை சூது வெல்வித்தையைக் கற்கச்சொல்லி, என்சொந்த உருவடைய யான்விரும்பினால் இந்த உடையை தரிக்கவேண்டுமென்று அது சொல்லிவிட்டு போன" தென்று சொல்லி கையில் இருந்த வஸ்திரத்தைக்காட்டி, "நீ இவ்வாறு செய்தது என்னை அடைவதற்கே

என்று எனக்கு முன்னமே தெரியும். உன்னை பரீக்ஷிக்கவேண்டு மென்றே அவ்வாறு சொன்னேன். சனைஸ்சரன் என்னைவிட்டு நீங்கினன். நாம் நாடுசென்று சூதாடி நாட்டையென்று ஸுகமடைவோம் வா'' வென்று சொல்லி வஸ்திரத்தை மேல் தரித்து முன்னுருவோடு நின்றான்.

* * *

ஸந்தோஷஸாகரத்தில்மூழ்கித் தன்னாயகனைக்கண்ட பெருமை பொங்கி அன்பென்னுமலை அவன்பாலடிக்க தனக்கும் தெரியாமல் நளனை, உள்ளங்கரைந்து, நெக்குருகி ஆலிங்கனஞ் செய்தாள். அவளுடைய கோரிக்கை ஈடேறியது. இன்னம் அவளுக்கென்ன வேண்டும். நாட்டை அடைந்து புஷ்கரனை வென்று அரசு கைக்கொண்டான் நளன். அவனன்பை முழுதுங் கொண்டு நளன் ஸேவையைக் கைக்கொண்டாள் தமயந்தி.

* * *

தமயந்தி இருந்த நாடுதானே இந்தியநாடு. அவள் பாததூளிப்பட்டதன்றோ இப்பாரத பூமி. அவள் குணம்படியாது மதஸம்மதமில்லா அநாரிய வழியிற் செல்லும் பெண்கள் தங்களுடைய பொய்வழியை விட்டு இந்தியவழிக்கு வருவ தெந்நாளோ! பாரததேவியின்நோக்க மவர்மேல் விழுந்து அவரை உயர்த்தி பெருமை அடையும்படிச் செய்யுமாக! நமதுபெண்களும் அக்கருணாவிலாஸத்திற்கு தக்கவாறு தம் கணவரிடத் தொழுகக்கடவாராக.

வா. சேஷகிரி சாஸ்திரி.

---

குற்றத்தைக் கௌரவமாய் ஒப்புக்கொள்.—இதைத்தான் எவரும் எளிதில் செய்கின்றதே இல்லை. பல பெரிய மனிதர்களுங்கூட ஏதாயினுமொரு குற்றமுள்ள காரியத்தைச் செய்துவிட்டு அதன் பிறகு அது சரியானதென்று நிரூபிக்க எவ்வளவோ குயுக்திகள் செய்வார்கள். சிலர் தாங்கள் செய்யும் சிறு தொழில்களில் குணமிருக்கின்றதாக வாதிப்பார்கள். ஒரு காரியம் குற்றமென்று நமக்குத் தெரிந்தபிறகு செய்தது குற்றந்தான் என்று நாம் ஒப்புக்கொள்வது எவ்வளவு மேன்மை? அவ்வாறு ஒப்புக்கொள்ளாமல் கோணவழியிற் போவதுநமக்கு ஒருபொழுதும் கௌரவத்தை உண்டாக்கமாட்டாது.

* * *

உண்மை —நாம் எக்காலத்திலும் உண்மையைப் பேசிவரும் குணத்தையே கைப்பற்றி வரவேண்டும். நாம் பொய்யனல்ல என்பது நமது எஜமானர்களுக்குத் தெரிந்ததும் அவர்கள் நம்மிடம் வெகு நம்பிக்கையாக காரியங்களை ஒப்புவிப்பார்கள். அவ்வாறு செய்தலால் நமக்கு அதிகப் பணமும், புகழும், பெருமையும் எப்பொழுதும் கிட்டும். உண்மையைக் கைப்பற்றிக் கீர்த்தி யடைந்தவர்கள் அநேகர் இருக்கிறார்களாகையால், இதைப்பற்றி நாம் அதிகமாய விவரிக்க வேண்டியது அனாவசியம்.

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

பாம்புந்தோல்கள்:—சிறிதுகாலமாய் ஜாவாந்தீவானது ஆச்சரியப்படத்தக்கதாய் அபிவருத்தியாயிருக்கிறது. கிழக்குதேசங்களுடைய வியாபாரத்தின் பெருக்கமானது இத்தீவின் சர்க்கரையுற்பத்தியொன்றினாலேயே காண்பிக்கப்படுகிறது. ஏற்றுமதிகளுடன் சேர்க்கப்படும்படியாய் ஒரு பொருளானது இத்தீவில்கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. இதுதான் பாம்புத்தோல். சிமாட்டிகளின் மேகலைகளுக்கும் பணப்பைகளுக்கும்,பைகளுக்கும் இதன் வேண்டுகோளது அகப்படுவதைவிட ரொம்ப அதிகமாயிருக்கிறது ஒரு கம்பெனியானது இத்தீவின் பிரதான ஸ்தலங்களில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இக்கம்பெனியார் ரொம்பகுறைந்தவிலைக்குப் பாம்புத்தோலைவாங்குகிறார்கள். ஆனால் இவ்வியாபாரத்தில் ஒருவித உறுப்பானது ரொம்ப கெட்டதாயிருக்கிறது. உயிருடனிருக்கும் பாம்பானது விலையதிகம். உயிருடனிருக்கும் மலைப்பாம்பு ரூ. 2 விலை பாம்புத்தோலானது பாம்பு உயிருடனிருக்கும்பொழுதே அதன் சரீரத்திலிருந்து உரிக்கப்படுகிறது. ஏனென்றால் இதன் தோலானது ரொம்ப பதமாயிருக்கும். இந்தியா கவர்ன்மெண்டார் எப்படி ஆடு உயிருடனிருக்கும் பொழுதே தோலுரிக்கப்படக் கூடாதென்று தடுத்திருக்கிறார்களோ அவ்விதமே உலாந்த கவர்ன்மெண்டாரும் பாம்பும் உயிருடனிருக்கும்பொழுதே தோலுரிக்கப் படக்கூடாதென்று தடுத்துவிடவேண்டும். இவ்விந்தியாவிலும் இவ்வகை பாம்புத்தோல் "சுவதேசி'' வஸ்துவாய் வியாபாரத்துக்குக்கொண்டுவரப்படலாம். ஆனால் தீங்கற்ற இப்பாம்புகளை இவ்வகை சித்திரவதைக் குள்ளாக்கக்கூடாது. ஸர்பங்களைப்போன்ற பாம்புகளை இவ்வகை சித்திரவதைக் குள்ளாக்க எவரும் தேடமாட்டார்கள்!

* * *

சர்க்கரை தொத்துவியாதியின் ஸம்பந்தத்தை போக்கு மொருமருந்து.—ஐரோப்பாவில் பலவிடங்களில் நோயாளிகள் அறைகளில் சர்க்கரையைக் கொளுத்துவது ஒரு வழக்கமாயிருக்கிறது. ஆனால் இது வைத்தியர்களால் தீங்கற்றதாயும் நற்குணமில்லாததாயுமுள்ள ஒரு சுத்தமான ஆசாரமென்று நினைக்கப்படுகிறது. பாரிஸ் நகரத்தில் பாஸ்டர் (Pasteur)

இன்ஸ்டிட்யூட்டிலிருக்கும் துரையொருவர் சர்க்கரையை கொளுத்துவதனல் இதுவரையில் கண்டு பிடிக்கப்பட்ட மாமிசமழுகாமல் பரிகரிக்கும் மருந்துகளுள் மேலானதான காற்ருனது உண்டாக்கப்படுகிறதென்று காண்பித்திருக்கிருர். 5 கிரும் (Gram) நிறையுள்ள சர்க்கரையை 10 (quarts) குவாற்ட்ஸ் பிடிக்கும் ஒரு கண்ணுடி பாத்திரத்துக்குள் கொளுத்தப்பட்டது. அக்காற்று கொஞ்சம் சீதளமானவுடன் க்ஷயம், காலரா, அம்மை, அத்திசுரம் இவைகளின் பூச்சிகள் ஒவ்வொரு திறந்த கண்ணுடிச் சிமிழில்போட்டு அப்பாத்திரத்திற்குள் வைக்கப்பட்டன. அரைமணிக்குள் இப்பூச்சிகளெல்லாம் செத்துப்போயின. நாரிப்போன மாமிசத்துடன் பாத்திரத்தைக் கவிழ்த்து வைத்து சர்க்கரையைக் கொளுத்தினல் அக்கெட்ட வாசனையெல்லாம் உடனேபோய்விடுகிறது. ஜனப் பொதுவான ஆசாரமாயிருக்கும் சர்க்கரை கொளுத்துவதும் ஒரு நல்ல உபயோகத்திற் காகத்தான் செய்யப்படுகிறதாய்த் தெரியவருகிறது.

* *
*

மினுங்கச் செய்யப்பட்ட அரிசி:—அரிசியைப் போல பல விதங்களில் உபயோகப்படும்படியான உணவு பொருள் வேறு ஒன்றுமில்லையென்று ஒரு பண்டிதர் எழுதுகிருர். அரிசி ஒரு மணி நேரத்துக்குள் ஜீரணத்துக்கு வந்துவிடுகிறது, ஆனல் மற்ற உணவு பொருள்களோ ஜீரணஸ்திக்கு வருவதற்கு இரண்டரைமுதல் நாலரை மணி வரையில் செல்லுகிறது. அரிசியை வேறு சில ஸாமான்களோடு கலந்து நூற்றுக் கணக்கான தினுஸுகளில் பக்குவம் செய்யலாம். ஆகையால் அதை எந்த தினிஸிலும் செய்யலாம்; தினத்தில் எக்காலமான உணவுக்கும் உபயோகப்படும். ஒருநாள் அரிசியை சமையல் செய்துவிட்டு மறுநாள் அதை எவ்விதமான சாப்பாட்டுக்கும் விதம் விதமாய் பக்குவப்படுத்தலாம்.

ஆனல் வியாபாரத்துக்கு உண்டாக்கப்பட்ட அரிசியிலிருந்து முக்கியமான புஷ்டிகொடுக்கும் தன்மையானது எடுக்கப்பட்டு அவ்வரிசிக்கு மினுமினுக்கும்படியாய் ஒருவித ஸாமான் தடவப்படுகிறது. இவ்வழக்கம் அரிசியை அலங்காரத்துக்கு மாத்திரம் வைத்திருக்கும் பக்ஷத்தில், நல்ல ஏற்பாடுதான். ஆனல் அரிசி தேகபுஷ்டிக்கு உபயோகமானதால் இவ்வழக்கம் மிக கெட்டதென்று சொல்லவேண்டும்.

ஜெப்பானிய சிப்பாய்கள், ருஷிய சிப்பாய்களைக் காட்டிலும் பசி தாங்கும் தன்மையையுடையதற்கு காரணம் அரிசியே. ஜெப்பானிய சிப்பாய்களின் உணவு முக்கியமாய் அரிசிதான். மினுமினுக்கச் செய்யும்பொழுது இவ்வரிசியிலிருந்து புஷ்டி கொடுக்கும் தன்மையில் பத்தில் ஒரு பாகந்தான் தங்குகிறது என்று எர்ணஸ்டு எ. பெஸ்ஸி எழுதுகிருர். அரிசியின் இயற்கையான மினுமினுப்பை எடுத்துவிடுகிறதினல் இத்தீங்கு நேரிடுகிறது, ஆசியாகண்டத்தில் காசிக்கு கிருத்ரிம மினுமினுப்புக் கொடுக்கிறதில்லை. அதனல்தான் இவ்வரிசிக்கு புஷ்டிகொடுக்குந்தன்மை ஜாஸ்தியாயிருக்கிறது. ஜெப்பானிய தேசத்து அரிசியைப்பற்றி பண்டிதர் னப் (Knapp) பின்வருமாறு எழுதுகிருர். அவ்வரிசியில் கொழுப்பு (மிருகக்கொழுப்பல்ல) ஜாஸ்தியாயிருக்கிறபடியால் ஒருவித நல்ல வாசனையோடு கூடியிருக்கிறது. இவ்வாஸனை மற்ற அரிசியிலிருப்பதைக் காட்டிலும் ரொம்ப ஜாஸ்தியாயிருக்கிறது. இங்கிலாந்து தேசத்தில் அரிசி கொடுக்கும் யந்திரங்களில் அரிசியின்மேல் ஒட்டிக்கொண்டிருக்கும் பூச்சு அதை விட்டு எடுக்கப்படுகிறது. அதன் வழி பின் வருமாறு: முதலாவது மேல்மூடி (அதாவது உமி) எடுக்கப்படுகிறது. இரண்டாவது இவ்வுமியோடு ஒட்டிக்கொண்டிருக்கும்(அதாவது அரிசிக்கும் உமிக்கும் மத்தியிலிருக்கும்) தவிடு எடுக்கப்படுகிறது. இதற்கு பிறகு மூன்ருவது இவ்விதமாய் கிடைக்கப்பட்ட அரிசியானது நன்ருய் தேய்க்கப்பட்டு இவ்வரிசியோடு சேர்ந்து இருக்கும் மேல் பூச்சானது எடுக்கப்படுகிறது. இப்படி நன்ருய் தேய்க்கப்படும்பொழுது அரிசிக்கு ஒருவித பளபளப்புக்கொடுக்கப்படுகிறது. இதற்குத்தான் மினுமினுப்புக் கொடுக்கிறதென்று சொல்லுவார்கள். இதனல் வெகு புஷ்டிகரமான பொருள் இவ்வரிசியிலிருந்து எடுக்கப்படுகிறது. இதனல், அரிசியின் வாஸனையில் முக்கால் பங்கும், கால்பங்கு நாற்பதார்த்தமும் எடுக்கப்படுகிறது. ஜெப்பானிலும் சீனவிலும் இந்தியாவிலும் அரிசிக்கு பளபளப்புக் கொடுக்கப்படுகிறதில்லை.

## நம்மிடம்

### கிடைக்கக்கூடிய சில அருமையான தமிழ்ப் புத்தகங்கள்

நம்முடைய சந்தாதார்களுக்கு மாத்திரம் குறைந்தவிலைக்குக் கொடுக்கப்படும்.

### இராமாயண வினு விடை

இரண்டாம் பதிப்பு

ஸப்த காண்டங்களும், இராமாயணத்தின் உட் பொருளும் அடங்கியது. விஸ்தரித்தும் ஒழுங்கு படுத்தியும் எழுதப்பட்டிருக்கிறது. யாவராலும் மிகவும் அருமையான புத்தகமென சிலாக்கிக்கப்பட்டிருக்கிறது. அநேக பள்ளிக்கூடங்களில் மத சம்பந்தப்பட்ட பாட புத்தகமாகவும் வைக்கப்பட்டிருக்கிறது. அணு 12

'விவேகபோதினி' சந்தா தாரர்களுந்து மாத்திரம் } அணு 8

### ஸ்ரீ மஹாபாரத வினு விடை

முதல் பாகம்—இதில் ஆதி, ஸபா, ஆரண்ய விராட, உத்தியோக பர்வங்கள் அடங்கியது. விஷயங்கள் ஒன்றும் குறையாதபடி மிகவும் இனிய செந்தமிழ் நடையில் சிறுவர், சிறுமிகள்கூட படித்துத் தெரிந்து கொள்ளக்கூடிய வண்ணம் எழுதப்பட்டுள்ளது. அணு 12

'விவேகபோதினி' சந்தா தாரர்களுந்து மாத்திரம் } அணு 8

### ஆரியமத உபாக்கியானம்.

இதில் இதிஹாஸம் புராணம் முதலியவைகளிலிருந்து எடுத்தெழுதிய 50 இனிய கதைகள் கொண்டது. ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு நீதியை நன்கு விளக்குகிறது. இப்புத்தகமும் அநேகம் பாடசாலைகளில் பாடப் புத்தகமாக வைக்கப்பட்டிருக்கிறது. அணு 2

'விவேகபோதினி' சந்தா தாரர்களுந்து மாத்திரம் } அணு 1

### 'கிரிஸெல்டா'

அல்லது

### 'பொருமையுள்ள மனைவி.'

இப்புத்தகம் பெண்பாலர் அவசியம் வாசிக்க வேண்டிய புத்தகங்களில் ஒன்று. இப்புத்தகத்தில் ஒரு பெண் தன் கணவனிடம் நடந்துகொண்ட மிகவும் சிலாக்கிக்கத்தக்க மாதிரியை நன்கு விளக்கிக் காட்டி யிருக்கிறது. அணு 3

விவேகபோதினி' சந்தா தாரர்களுக்கு மாத்திரம் } அணு 2

## "விவேக போதினி"

மிகவும் இனிய நடையில் சிறுவர்கள் சிறுமிகள் கூட படிக்கக்கூடிய வண்ணம், தமிழில் விசேஷ பாண்டித்யமுள்ளவர்களால் எழுதப்பட்டு ஒழுங்காய் பிரதி மாதம் 25ல பிரசுரமாகும்.

யாவரும் வாசித்து ஆனந்திக்கும் பொருட்டு, வருஷ சந்தா தபால்கூலியுள்பட இந்தியா, பர்மா, ஸிலோன் ஆ இடஙகளுக்கு ரூ 3 - ஆகவும், வெளிநாட்டுக்கு ரூ 4—8—0 வும் வைக்கப்பட்டிருக்கிறது.

யாவராலும் மிகவும் அருமையான பத்திரிகையென சிலாகிக்கப்பட்டு வருகிறது.

இப்பத்திரிகையில் அடங்கும் விஷயங்களாவன:—

1. ஜாதி மதாசார ஸம்பந்தமான விஷயங்கள்;
2. மிகவும் கியாதி பெற்ற மஹான்களின் ஜீவிய சரிதைகள்;
3. உலக ஒழுக்கங்கள்;
4. இயற்கை யற்புதங்கள்;
5. கல்வியபி விருத்திக்குரிய பாஷா விஷயங்கள்
6. வியவஸாயம், கைத்தொழில், வியாபாரம்,
7. சிறுவர்க்குபயோகமான நற்போதங்கள்.
8. ஸ்திரீகளுக்கேற்ற நற்போதனைகள்;
9. நாவல்களும், நாடகங்களும்,
10. மற்றுமுள்ள யாவர்க்கும் உபயோகமான பொதுவிசேஷவர்த்தமானங்கள்.

### சில முக்கிய அபிப்பிராயங்கள்

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீமஹாமஹோபாத்யாயர் வே. சாமிநாதய்யரவர்கள்:— * * மதஸம்பந்தமான விஷயங்களும், நீதிகளை கற்பிக்கும் சிறுகதைகளும் புதிய நாடகங்களும் சில மொழிபெயர்ப்புகளும், தற்காலத்திற் கேற்ற நாகரீக விஷயங்களும் இப்பத்திரிகையில் மிக எளிய நடையில் எழுதப் பெற்றிருக்கின்றன; சிறுவர்களும் பெண்பாலரும் இதனால் பல விஷயங்களையும் வருத்தமின்றித் தெரிந்துகொள்ளலாம்.

தமிழ் பாஷாபிமானிகளாகிய பிரபுக்கள் இதனை ஆதரித்து, இதைப்பிரசுரஞ் செய்துவரும் ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி யாருக்கு ஊக்கம் அளிப்பார்களென்று நம்புகிறேன்."

### The Hon'ble Mr. P. S. Sivaswamy Aiyar

B.A., B.L., C. I. E., SAYS:—

* * * * The articles are written in an easy, readable style and deal with a variety of interesting subjects. Its usefulness and cheapness, will I hope commend it to the Tamil public and secure popularity.

மானேஜர், "விவேகபோதினி"

மைலாப்பூர், மதராஸ்,

# விவேக போதினி.

" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "——திருவள்ளுவர்

தொகுதி 1 } 1909-ஞு மேமீ { பகுதி 11


## வேதங்கள் அனந்தம் அபௌருஷேயம்

## THE VEDAS—INFINITE AND IMPERSONAL

வேதங்கள் அளவிட முடியாதன. அப்படியாயினும், அவைகளால்கூட கடவுளைப்பூர்ணமாக நமக்குத் தெரிவிக்கமுடியாது என்பதையும், இத்தகைய வேதங்கள் அபௌருஷேயம், புருஷ ஸம்பந்தமுடையவைகள் அல்ல, என்பதையும் இங்குஒருவாறு எடுத்துக்காட்டுவோம்.

வேத ரஹஸியங்களைக் கண்டு தெளிந்தவர்கள் வெளியிட்டிருக்கும் மந்திரங்கள் உண்மை ஞானம் என்பதற்கு ஐயமில்லை. ஆனால் இந்த ஞானத்திற்குமேல் ஞானம் இல்லை என்று ஒருவரும் தைரியமாகச் சொல்லவில்லை. ஸர்வ வல்லமையுடைய கடவுள் ஒருவரே ஸகல ஞானத்திற்கும் ஈசன், ஏனெனில் கடவுளினிடத்தே ஸகலப்பிரபஞ்சமும் அடங்கி இருக்கிறது. அவரைவிட்டு வேறாயிருக்கும்வஸ்து ஒன்றும் இல்லை, அவரே ஸகல வஸ்துவிலும் அந்தர்யாமியாயும் ஸகலத்துக்கும் முடிவாகிய பரமபதமாயும் இருப்பதால், அவரே உண்மை ஞானத்திற்கு நிலயம் என்று சொல்லுவதற்கு என்ன தடை? மற்றையவர்கள் யாவரும் கடவுளது பாகமாதலால் பூர்ணஞானத்தை உடையவர்களாகமாட்டார்கள். கடவுளிடம் இருந்து உண்டாகி அவருக்கு அடுத்தபடியிலிருக்கும் ஸ்ருஷ்டிகர்த்தரான பிரம்மாவுக்குக் கூட வேதங்கள் முழுவதும் தோற்றி இருக்கமாட்டா. அப்படி இருக்க ரிஷிகளது நிலையைப்பற்றிச் சொல்லுவானேன். பிர்ம்மதேவர் முதலில் உண்டாகிச் சிறந்த சக்தி வாய்ந்தவராதலால் அவரைச் சிறந்த ஞானி என்றும் மேலான மந்திரதிரஷ்டா என்றும் சாஸ்திரங்கள் கூறும். இவ்வளவு மேன்மை வாய்ந்த பிரம்மாவும் தாம் பேசும்பொழுது தமக்குக்கூட கடவுளை உள்ளபடி பூர்ணமாய் அறிவது அஸாத்தியம் என்று சொல்லியிருப்பதாக நமது வேதங்கள் கூறுகின்றன. இம்மாதிரியாகவே சிறந்த மந்திர திரஷ்டாக்களான ரிஷிகளும் தம்மைப்பற்றி அடிக்கடிச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இப்பொழுது நமக்குத் தெரியும்படியான வேதங்களில் பூர்ண ஞானம் அடங்கி இருக்கின்றது என்று சொல்ல எப்படி முடியும். நமது வேதங்கள் எவ்வளவுதான் நமக்கு முடிவற்றவைகளாய்த் தோற்றியபோ

திலும் அவைகள் உண்மையில் அனந்தமல்ல. இப்படி வரம்புள் அடங்கியுள்ள வேதங்களில் எவ்வாறு வரம்பற்ற பரம்பொருள் அடங்கி இருக்கும்? ஆகையால் கடவுளிடமிருக்கும் உண்மை ஞானம் பதங்களாலாகிய வேதங்களில் பூர்ணமாய் அடங்கி இருக்க இடமில்லை. ஆகையால்தான் பரம்பொருளை வேதங்கள் 'மனவாக்கினிற் றட்டாமல் நின்றதெது' என்று வர்ணிக்கின்றன. பரம்பொருளை ஒருவாறு வர்ணிக்கப் புகுமிடங்களில் தம்மால் நேரிட வர்ணிக்கமுடியாது வேதங்கள் தத்தளித்துப் பின் நேதிநெறியாமல் பரம்பொருளைக் குறிப்பாகக் காட்டுகின்றன. நேதிநெறியாவது பிரபஞ்சத்தில் காணப்படும் குணங்கள் வஸ்துக்கள் சப்த ஸ்பர்சாதி விஷயங்கள் பரம்பொருள் அல்ல அல்ல என்று தள்ளிக் கடைசியில் இவைகளுக்கு அப்பாற்பட்ட வஸ்துவே பரம்பொருளென மௌனத்தாற் குறிப்பித்தல். இந்த நெறியைக் கைவல்லிய நூலாசிரியர் பின்வருமாறு உதாரண மூலமாய் விளக்கி யிருக்கின்றனர்.

'தன்பதியல்லாப்பேர்கள் தமையல்லனல்ல னென்றுள்
அன்பனைக் கேட்ட நேரம் அவள் வெட்கி மௌனமானுள்
என்பது போலநீக்கி இதன்றிதன்றெனச் சேஷித்த
பின்பரப்பிரமம்தன்னைப் பேசாமற் பேசும் வேதம்.'

இப்பொழுது நமக்கு வந்து எட்டி இருக்கும் வேதங்களின் ஸ்வரூபம் இது. ரிஷிகள் அதிக சுத்தராயும், அவர்கள் காலம் மிகச் சிறந்ததாயும் இருக்க இருக்க ரிஷிகளுக்கு மந்திரங்களின் உண்மை மிகத் தெளிவாய் விளங்கும். இப்பொழுது இருக்குங் காலவிசேஷத்தை நோக்குங்கால் இதற்குமுன் ஏற்பட்ட சிறந்த காலங்களிலும் இனிமேல் ஏற்படும் சிறந்த காலங்களிலும் வேத உண்மைகள் அதிகமாய் மஹான்களுக்கு எளிதில் விளங்க இடமுண்டு என்பதற்கு ஸந்தேகமில்லை.

இப்பொழுது நமக்குத் தெரிந்திருக்கும் வேதங்களால் கடவுளைப் பூர்ணமாய் அறியமுடியாது என்பதனுல் அவைகளுக்கு ஏதோ கௌரவக்குறைவுவந்துவிட்டது என்று எண்ணிவிடக்கூடாது. அவைகள் எவ்வளவுதூரம் கடவுளைப்பற்றி கூறுகின்றனவோ அதுவரையில் நன்றாகவும் பூர்ணமாகவுந்தான் கூறுகின்றன. கடவுளைப்பற்றிக் கூறும் நூல்களாகையால் வேதங்களில் ஒருவிதக் குற்றங்களும் உண்டாக இடமில்லை. இப்பொழுதிருக்கும் மாதிரியிலேயே வேதங்கள் அனந்தமாய் விரிந்து கிடக்கின்றன. அவைகளை ஒருவாறு உணர்ந்து அதன்படி நடக்கத் தொடங்குவதற்கு ஒரு புருஷ ஆயுள்கூடப் போதாது. அவைகளில் அடங்கிய உண்மைகளோ அநேகம், விருத்தியடைந்து மேலான நிலையையடைய அவைகள் காட்டும் வழிகளும் அநேகம். இவைகளை நோக்கில் ஒருவனுக்கு மனம் குழைந்து வேதங்களில் ஒருவாறு பக்தி ஏற்படுமே ஒழிய அவைகளைக் குற்றங்கூற மனம் வராது. வேதவாக்கியங்களை அநேகப் பக்கங்களை உடைய கண்ணுடிகளுக்கு ஒப்பிடலாம். ஒவ்வொன்றின் வழியாகவும் ஸர்வ வல்லமையுடைய கடவுளே பிரகாசித்து அந்த வாக்கியத்தின் மூலமாகக் கரையேற எண்ணும் பக்தர்களைக் கரையேற்றுகிறுர். ஒருவன் ஏதாவது ஒரு உண்மையை நன்றுய் ஐயந்திரிபு அற அறிந்து அதன்படி நடந்துவந்தால் அவனுக்கு மோக்ஷம் கிடைப்பது திண்ணம். வேதங்கள் கடவுளது மூச்சு காற்றுகளே, எப்பொழுதும் அவைகள் கடவுளிடமே இருக்கின்றன. சிலகாலங்களில் அவைகள் கடவுளிடம் அடங்கியும் வேறு சில காலங்களில் அவைகள் கடவுளைவிட்டு வெளிப்பட்டும் இருக்கின்றன. இப்பொழுது நமக்குத் தெரிந்திருக்கும் வேதங்கள் இந்த நெடுங்கால ஆரம்பத்தில் கடவுளிடம் இருந்து வெளிப்பட்ட மூச்சுக் காற்றுகளே. ஆகையால்தான் அவைகள் மிகப் பரிசுத்த மானவைகளாயும், மிகச் சிறந்தவைகளாயும் இருக்கின்றன. இவ்வாறு கடவுளிடமிருந்து அவைகள் நேரே வந்தலமையால் நாம் அவைகளை மிகுந்த கௌரவத்தோடும் பக்தியோடும் பாராட்டி வரவேண்டியதும், அவைகளை அத்தியானம் செய்

யவும் அர்த்தவிசாரம் செய்யவும் தொடங்குங்கால் மிக்க விநயத்தோடும் எந்த பரம்பொருளிடத்திருந்து அவைகள் வந்தனவோ அப்பொருளிடம் மிகுந்த நன்றியறிதலோடும் இருந்து வரவேண்டியதும் அவசியமானவைகளே.

வேத விரோதிகளான வேதபாக்யர்கள் வேதங்களும் காளிதாஸன், வால்மீகர் இவர்களால் செய்யப்பட்ட நூல்கள்போல மனிதர்களால் செய்யப்பட்ட நூல்கள் என்று அபிப்பிராயப்படுகிருர்கள். திருஷ்டாந்தப்பிரமாணம் இவ்வாறிருக்கிறதே இதற்கு விரோதமாக வேதங்கள் அபௌருஷேயம் என்று சொல்லலாமா என்ருல், சாஸ்திரவாதிகள் கேவலம் திருஷ்டாந்தப் பிரமாணமூலமாய் மாத்திரம் ஒரு பொருளை ஸ்தாபிக்கக்கூடாது என்ற நியாயத்தை மேற்கொண்டவர்கள். இரண்டு வஸ்துக்கள் ஒன்ருேடொன்று சில அம்சங்களில் ஒத்திருந்தால் மற்றைய அம்சங்களிலும் ஒத்திருக்கும் என்று அனுமானிக்க இடமில்லை. சில அம்சங்கள் ஒத்திருந்தபோதிலும் அவ்விரு வஸ்துக்களுக்கும் விரோதாம்சங்கள் பல இருக்கலாம். ஒத்திருப்பதுபோல் தோன்றும் சில அம்சங்களும் உற்று நோக்குங்கால் விரோதாம்சங்களாவே முடியலாம். உதாரணமாக மனிதனுக்கும் கடவுளுக்கும் ஒத்த அம்சங்கள் சில உண்டு. இருவர்களும் அழிவற்ற ஆத்மாக்கள் சுறுசுறுப்பாய்தொழில் செய்யும் திறன் உடையவர்கள். இவ்வாறு இவ்விருவருக்கும் ஒப்புமை காணப்படுவதால் இப்பொழுதிருக்கும் நிலையில் மனிதனும் கடவுளும் ஒன்று என்று சொல்லிவிடக்கூடாது. அழிவற்றதுஎன்ற ஒரு அம்சத்தைத்தவிர கடவுளுக்கும் மனிதனுக்கும் விரோதாம்சங்கள் அநேகம். இவைகளை விசாரிக்குங்கால் கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவிற்கும் போலுள்ளது என நன்ருய் விளங்கும். இவ்விரோதாம்சங்களை கைவல்லிய நவநீத நூலாசிரியர்

"பேதமானதுவும் கேளாய் பேராலும் இடங்களாலும்
ஓதரு முபாதியாலுமுடலாலு முணர்விஞலும்:
பாதலம் விசும்பும் போலப்பலதரமகன்று நிற்பார்
ஆதலால் இவர்க்கெந்நாளுமைக்கியமென்பது கூடாது"

இதுபோலவே வேத வாக்கியங்களுக்கும், வால்மீகர், காளிதாஸன் இவர்களது நூல்களுக்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு. இரண்டும் பதங்களாலாயவைகள் என்ற ஒப்புமை அம்சம் தவிர மற்றைய அம்சங்கள் எல்லாவற்றிலும் இரண்டிற்கும் அஜகஜாந்தரபேதம் காணப்படும். மனிதரால் செய்யப்பட்டன எவ்வளவு மேன்மையான நூலாய் இருந்தபோதிலும் வேதங்களில் அடங்கியிருக்கும் விஷயங்கள் அவைகளில் அடங்கியிருப்பதும் அரிது. அதன் கௌரவத்தை அவைகள் உடையனவாயிருத்தலும் அரிது. இது வேதார்த்தத்தைக் கற்றுணர்ந்த எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. ஆகையால் இதை நாம் ஸ்தாபிக்கவேண்டிய அவசியமில்லை. மேலும் வேதமந்திரங்களில் காணப்படும் அக்ஷர அமைப்புக்கள் மனிதராற் செய்யப்பட்ட நூல்கள் ஒன்றிலும் காணப்படவில்லை. இந்த விஷயத்தை வேதஸ்வரங்களைப் பற்றிச் சொல்லும் இடத்தில் விஸ்தரிப்போம்.

வேதவிரோதவாதிகளது இரண்டாவது ஆக்ஷேபம் என்னவென்ருல் "வேதங்களில் சில மனிதரது சரித்திரங்கள் காணப்படுகின்றன. அப்பாகங்கள் அம்மனிதர்கள் பிறந்ததற்கு முன் இருந்திருக்க இடமில்லை. ஆகையால் வேதங்கள் இல்லாத காலம் ஒன்று இருக்கவேண்டும். இதனல் வேதங்கள் அனதி என்று சொல்ல இடமில்லை" என்பதுதான். இவ்வாறு மனுஷ்ய விஷயங்களைப் பற்றிச்சொல்லும் பாகங்கள்போல சிலபாகங்கள் வேதங்களில் காணப்பட்ட போதிலும் உண்மையில் அவைகள் அத்தன்மை யுடையனவல்ல. இம்மாதிரித் தோன்றும் வாக்கிங்கள் எல்லாவற்றிற்கும் வெளிப்படையாய்த் தோன்றும் அர்த்தங்கள் தவிர உண்மையான உட்பொருள்கள் வேறு உண்டு. இவைகளே அவ்வாக்கியங்களில் அடங்கிய உண்மைப் பொருளைக் காட்டும். ஆகையால் இவ்வாக்கியங்கள் மேலெழுந்த வாரியாய் நோக்குபவருக்கு மனுஷ்ய காரியங்களைப்பற்றிச் சொல்லுவனபோலத் தோன்றுவனவே ஒழிய வேறில்லை. உதாரணமாக வேதங்களில் பப்ரன் என்ற ஒருவனைக் குறித்துச் சொல்லப்பட்

டிருக்கிறது. அவன் பிரவாஹனன் பிள்ளையாகியஒருமனிதன்என்று யாவரும்எண்ணுவார்கள். உண்மைப்பொருள் இதுஅன்று. இந்தப் பப்ரன் என்ற பெயர் ஒலிக்குறிப்பால் காற்றுக்கு அதிபதியாகியவாயுவை உணர்த்துகிறது. இதேமாதிரியாக வெளிப்படையாய் நமக்கு விரோதமாகக் காணப்படும் வாக்கியங்களை குறிப்பாய் நோக்கி உள்ளபடி அறியலாம். ஆகையால் வேதவிரோதிகளது இரண்டாவது ஆக்ஷேபமும் ஆதாரமற்றதாயும், யுக்திக்குப் பொருந்தாததாயும் இருக்கின்றது என்பதற்குச் ஸந்தேகமில்லை.

இவ்வாறு வேதங்கள் ஆதியில் மனிதனல் உண்டாக்கப்பட்டவையல்ல. மனித சம்பந்தம் உடையவையல்ல என்று தெளிந்தால் இவைகள் கடவுளாலேயே உண்டாக்கப்பட்டன என்று சொல்லுவதற்கு என்ன தடை? வேதாந்த சாஸ்திரவாதிகள் இப்படிச் சொல்லுவதற்குத் தகுந்த யுக்தி பூர்வகமான ஆக்ஷேபம் ஒன்று செய்கிறார்கள். வேதங்கள் கடவுளால் முதலில் உண்டாக்கப்பட்டனவென்றால் அவைகள் அநாதி என்று சொல்லமுடியாது. ஆகையால் கடவுளே வேதமாக வெளிவந்திருக்கவேண்டும் என்று அவர்களில் சிலர் ஸித்தாந்தப்படுத்துகின்றனர். எப்படியாகிலும் ஸரி, வேதம் புருஷ ஸம்பந்தம் உடையதல்ல என்பதுயாவரும் அங்கீகரிக்கக்கூடிய விஷயமே.

முன் சொல்லிய விஷயங்களிலிருந்து வேதார்த்தங்களாவது, வேதாக்ஷர அமைப்புகளாவது அல்லது இரண்டுமாவது அநாதி என்ற சாஸ்திரக்கொள்கை புதிய சரித்திரமெழுதும் மேனாட்டு நூலாசிரியரது கொள்கைக்கு முரணன்று என்பது எளிதில் விளங்கும். வேதங்கள் அநாதியென்பது, வேத ரகஸியங்கள் மனுஷ்ய சிரேஷ்டர்களால் வெளிப்பட்டிருக்க வேண்டும், என்ற கொள்கைக்கு எப்படி விரோதமாகும்? அநேகமாயும் ஒவ்வொன்றும் அநாதியாயும் வெகுவாய் விரிந்துமுள்ள வேதரகஸியங்களில் முன்னமே கண்டுபிடிக்கப்பட்ட சில பாகங்கள் நடுவில் நஷ்டமாய்ப் போய் இருக்கலாமென்று நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். புதிய யுக ஆரம்பங்களில் முன்னமே மறைந்திருந்த ரகஸியங்களாவது, அல்லது அதுவரையில் இருந்தும் கண்டுபிடிக்கப்படாத ரகஸியங்களாவது மஹான்களின்மூலமாய் வெளிவந்து இருக்கலாம் என்பதை மறந்து மேனாட்டார் வீண்வாதஞ்செய்கிறார்கள். இதை நன்றாய் விளக்கப் பூகோள சாஸ்திரத்திலிருந்து ஒரு உதாரணம் எடுத்துக் கொள்வோம். கொலம்பஸ் அமெரிக்காவைப் புதிதாய்க் கண்டுபிடித்ததற்கு வெகுகாலத்திற்கு முன் அந்தக்கண்டம் ரோமானியருக்கு அத்லாந்திகா என்ற பெயர் வாய்ந்தகண்டமென்று தெரிந்திருந்தது. அமெரிக்காவில் காணப்படும் சிற்சில அடையாள விசேஷங்களால் வெகு காலங்களுக்குமுன் நமது ஆரியர்களாகிய ஹிந்துக்கள் அக்கண்டத்தில் குடியேறியிருந்தார்களென்பது தெரியவருகிறது. இதற்குப்பின் அநேக காலம் இவர்களுக்கும் மற்றையவர்களுக்கும் உள்ள ஸம்பந்தம் முதலியவைகள் அற்றுப்போயிருந்தமையால், அநேகந் தலைமுறையாகப் பூகோளத்தின் மறுபுறத்தில் இம்மாதிரியான கண்டம் ஒன்று இருக்கிறது என்ற விஷயமே நமக்குத் தெரியாமற் போய்விட்டது. இப்படி இருக்கையில் கொலம்பஸ் அமெரிக்காவைக கண்டுபிடித்தான். உடனே அவன் எதையோ புதிதாய்க் கண்டுவிட்டதாக யாவரும் ஆச்சரியப்பட்டார்கள். இக்கண்டம் முன்னமேயே யிருந்தது. இது இருந்தது என்பது சிலருக்கு முன்னமேயே தெரியும், இப்படியிருந்தும் கொலம்பஸ் செய்தது மிகுந்த ஆச்சர்யகரமாய் எல்லோருக்கும் தோன்றியது. இம்மாதிரியே வேதங்கள் விஷயத்திலும் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது. வேதங்கள் உண்டான காலத்தைப்பற்றி மேனாட்டவர் வெகு எளிதாய்ச் சொல்லுவது அவர்கள் உண்மை உணராது உரைக்கும் உரை என்று தெரிந்துகொள்ள வேண்டியது. அவர் குறிப்பிடும் காலமானது முன் தெரிந்திருந்து பின் மறைந்துபோன வேத ரகஸியங்களையாவது அநாதியாயிருந்து கண்டுபிடிக்கப்படாத வேத ரகஸியங்களையாவது மந்திர திரஷ்டர்களான ரிஷிகள் கண்டுபிடித்த காலங்களென்று அறிந்து கொள்ள வேண்டியது. இக்கால அளவுகள் விஷயங்களில் கூட மேனாட்டவர்கள் வேதங்களது காலங்களை கி. பி. என்று ஸ்தாபிக்க முயலுகிறார்களென்றும், நம்மவர்கள் வேதங்களின் அநாதித்வம் முதலியவைகளுக்குத் தக்கபடி கால அளவை மிக முற்பட்டது என்று ஸித்தாந்தஞ் செய்கிறார்களென்றும் நாம் அறிந்து கொள்ளவேண்டியது.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன், B.A., L.T.

# நமது நோன்புகள்

## OUR OBSERVANCES

### I வருஷப் பிறப்பு

### THE NEW YEAR'S DAY

இந்த மாதம் முதல், விவேக போதினியில், நம்மவருள் தொன்றுதொட்டு வழங்கி வரும் நோன்புகளில் முக்கியமான சிலவற்றைக் குறித்து ஒவ்வொரு ஸஞ்சிகையிலும் எழுதுவதாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது காலபேதத்தால் மாறியிருக்கும் நமது தேசஸ்திதிக்குத் தக்கபடி நல்லவைகள் என்று எண்ணத்தகாத அநேக வழிகளில் நம்மவர்களில் பலர்மனம் போகின்றதால், நமது தேசத்துக்கு ஸம்பந்தப்பட்ட வேறு பல விஷயங்களி லெப்படியோ அப்படியே நமது தர்மமார்க்கத்தின் முக்கியமான ஒரு பகுதியாகிய நமது ஆசாரவிஷயங்களிலும், ஸ்வரூப மறியாமையும் அனுஷ்டானத்தில் சிரத்தையின்மையும் வரவர மேலிட்டுக்கொண்டே வருகின்றன. ஸாவித்திரி விருத்தத்தில், யமனைக் கணவனிடம் அணுகவொட்டாத நோன்பு என்று பொருள்படும் காரடையா நோன்பு என்ற பெயரின் அர்த்தத்தை முற்றிலும் மறந்து ஓர்விதமான சிற்றுண்டி மாத்திரமும், ஸங்கராந்தியில் கரும்புமாத்திரமும், மஹாசிவராத்திரி ஸ்ரீஜயந்திகளில் சில தின்பண்டங்கள்,விழித்திருத்தல்முதலான விஷயங்கள் மாத்திரமும், தீபாவளியில் சீனவெடிகள் புதிய ஆடைகள் மாத்திரமும், உபாகர்மத்தில் புதிய பூணூல் மாத்திரமுமே பல ஜனங்களுடைய புத்தியில் முன்னிற்பதையும், இன்னும் பலர் இத்தன்மையான விஷயங்களை முற்றிலும் மறந்திருப்பதையும் ஆலோசித்தால்,இம்மாதிரியான விஷயங்களில் ஏற்பட்டிருக்கும் குறைவு தெளிவாக விளங்கும்.ஆகையால் இக்காலத்தில் நமதுஆசாரங்களின் ஸ்வரூபத்தைவிளக்குவது, பொதுவாய் நம்மவர்களிடம்தொன்றுதொட்டு இருக்கும் நாகரீகத்தைப் பரீக்ஷித்து உணருவதற்கு ஒரு முக்கிய ஸாதனமாயிருப்பதுடன், இவைகளின் உண்மைகளை தக்கபடி வெளிப்படுத்தி நம்மவர்கள் உள்ளத்தில் நிலை நாட்டுவதற்கும் ஓரரிய கருவியாகும்.

ஆசாரமென்னும் வடமொழிப் பதத்திற்கு நடத்தை என்று பொருள், தர்ம ஸ்வரூபத்தை நிர்ணயிப்பதாக நமது மதத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் ப்ரமாணங்களுக்குள் ஸாதுகளுடைய ஆசாரங்களையும் ஒன்றாக மனுதர்மசாஸ்திரம்எடுத்திருக்கிறது. சுருதிவசனங்களாலும்ஸ்மிருதிவசனங்களாலும் வெளியிடப்படும் ஆசாரங்கள் சிலவுண்டு. வேறுசிலஆசாரங்கள் அப்படி வசனங்களால் வெளியிடப்படாமல் சிஷ்டாசாரமாக (பெரியோர் நடத்தையாக) மாத்திரம்வழங்கிக்கொண்டுவருகின்றன. இவைகளில்,பின் சொல்லப்பட்ட ஆசாரங்களும் தர்மப்பிரமணங்களுக்குள்ஒன்றுதான். இந்தவிஷயத்தில் தர்மத்தை எடுத்துவிவரித்த ஜைமினி முனிவருடைய ஸம்வாதமும் மற்றும் பல பெரியோர்களது ஸம்வாதமும் பண்டிதர் கூட்டங்களில் பிரஸித்தமாய் விளங்கும். தர்மப்பிரமாணங்களுக்குள், சுருதிக்கும் ஸ்மிருதிக்கும் அடுத்தபடியில் ஸதாசாரங்கள் அங்கிகரிக்கப்படுகின்றன. நமது ஆசார்யர்கள் இம்மாதிரியாக, ஸதாசாரங்களையும் தர்மப் பிரமாணங்களில் சேர்த்து ஒழுங்குபடுத்தி யிருப்பது, தேசாந்திரத்திலுள்ள தர்மசாஸ்திரிகளுக்குள் பலமுகவாதிகளும் ப்ரமாணமுகவாதிகளும் ஒருவர்மேலொருவர் எடுத்து காட்டியிருக்கும் குறைவுகளை முன்னுணர்ந்து நீக்குவதற்காக வென்றே தோன்றுகின்றது. மேலும் நமது ஆசாரங்களை உற்றுநோக்கினால், நமது மதத்திலுள்ள ஏனைய விஷயங்களை போல, இவ்விஷயங்களிலும், கூறியபுத்தி உடையவர்களுக்கும் ஓர்வித் ஸந்தோஷம் உண்டாகும்படி, வெளிப்படையான பாகங்கள் மறைவான பாகங்களால் மூடப்பட்டிருப்பது புலப்படும். மேல்குறித்த விஷயங்களை மறவாது நமது ஆசாரங்களை விசாரிக்கப் புகுமிடத்து முதலில் வருஷப்பிறப்பை எடுத்துக்கொள்வோம்.

எல்லா தேசங்களிலும் ஆங்காங்கு வழங்கி வரும் வருஷத்தை யனுஸரித்து, வருஷப் பிறப்பு என்பது பிரஸித்தமானது. ஒவ்வொரு தேசத்திலும் உள்ள ஜனங்கள் தங்கள் தங்கள் வருஷத்தினுடைய ஆரம்பத்தை ஒவ்வொரு மாதிரியாகக் கொண்டாடிகொண்டு வருகிறார்களென்பது எல்லோருமறிந்த விஷயம். அநேகவிதமானஜாதியார்களுக்குஇருப்பிடமாய் இருந்துகொண்டிருக்கும் நம் பாரதவருஷத்தில் இதன் உண்மையை நேரிடக் கண்டறியலாம். பொதுவாய் மனிதரது கணக்குள் அடங்கும் கால அளவுகளுக்குள், வருஷமென்பது, ஒவ்வொருவனும் தன்னுடைய ஜன்மத்தில் செய்துகொண்டு வரக்கூடிய செய்கைகளுக்கு ஓர் ஆரம்பத்தையும் முடிவையும் அப்போதைக்கு அப்போது ஏற்படுத்திக்கொண்டு, பின்னும் முன்னும் கவனித்து, நிறைவேற்றப்பட்ட பாகங்களையும் நிறைவேற்றப்பட வேண்டிய பாகங்களையும் விட்டுத் தன்னுடைய விருத்திக்கிரமத்தை நிர்ணயிப்பதற்கு ரொம்பவும் அநுகூலமான கால அளவாக மனிதர்களால் பெரும்பாலும் மதிக்கப்படுவது என்று எல்லோரும் அறிந்திருக்கலாம்.

எந்த காரியத்தையும் தொடங்கும் ஸமயத்தில் சுபவஸ்துக்களோடும், ஸந்தோஷத்தோடும், உத்ஸாஹத்தோடும், தமக்கு அநுக்ரஹிக்கத்தக்கவர்களாக தோன்றுபவர்களது அநுக்ரகத்தோடும், தொடங்குதல் நலம் என்ற நம்பிக்கையானது ஒவ்வாரு மனிதனுக்கும் இயற்கையாக உள்ளது என்று மனிதர்கள் நடவடிக்கைகளிலிருந்து ஸுலபமாய் ஊகிக்கலாம். ஸாதாரணமாக எல்லா விஷயங்களிலும் இம்மைக்கும் மறுமைக்குமுள்ள ஸம்பந்தங்களை மறவாமல் வெளிப்படையான வைகளுக்கும் மறைவானவைகளுக்கும் ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஸம்பந்தங்களால் திடப்படுத்திக்கொண்டே ஒவ்வொரு கார்யத்திலும் புகும் ஸ்வபாவமுடைய ஹிந்துக்களுக்கோ வென்றால், மேற்குறித்த நம்பிக்கை வெகுகாலமாய் மனதிலூன்றி இருக்கிறது. எக்கருமமும் இடையூறின்றி முடிவதற்கு. அதன் ஆரம்பத்தில் கடவுள்வாழ்த்து அவசியமானது என்ற சாஸ்திரக்கோட்பாடும் இந்த விஷயத்தையே குறிப்பிக்கின்றது. ஆதலால் எல்லா தேசத்தாரும் வருஷாரம்பதினத்தைக் கொண்டாடுவதற்கு மேற்குறித்த இயற்கையான நம்பிக்கையேகாரணமென்று விளங்குவதுடன் ஹிந்துக்களுடையவருஷாரம்பக் கொண்டாட்டங்கள் விசேஷமாய் அவர்களால்செய்யவேண்டிய கருமங்களுக்கு முதலில் அநுஷ்டிக்கப்படும் கடவுள் வாழ்த்தாக பாவிக்கப்பட்டு வழங்கிவருவது அவர்களுடைய மனநிலைக்கு தகுதியானது என்பதும் வெளியாகும்.

நம்மவருள் ப்ரஸித்தமான, சாந்திரமானம் (சந்திரனை ஒட்டியது) ஸௌரமானம்(ஸூர்யனை ஒட்டியது) என்று இருவகைப்பட்ட கால அளவுகளுக்குத் தக்கபடி வருஷாரம்பமும் இரண்டு நாட்களில் கொண்டாடப்படுகின்றது. ஸௌரமானப்படி வருஷாரம்பமானது பங்குனிமீ முடிவில், எப்ரல்மீ 12 அல்லது 13 ம்தேதி, கொண்டாடப்படுகின்றது. சந்திரமானப்படி சைத்திரசுத்தாரம்பமே (பங்குனி அமாவாஸைக்கு அடுத்த பிரதமையே) வருஷாரம்பமாகப் பாவிக்கப்படுகிறது. தெலுங்கர்களும் கன்னடர்களும் சாந்திரமானத்தையும், தமிழர்கள் ஸௌரமானத்தையும் வருஷாரம்பவிஷயத்தில் பின்பற்றுகிறார்கள். மலையாளிகள், அவர்களுக்குரிய கொல்லமாண்டுஆரம்பிக்குங்காலம்வேறாயினும் வருஷப்பிறப்பு விஷயத்தில் தமிழர்களைப்போலவே நடக்கிறார்கள். வருஷப்பிறப்பிற்கு ஸம்வத்ஸராதியென்றும், சைத்திரவிஷுவென்றும், உள்ளபெயர்களுடன், தெலுங்கர்கள் கன்னடர்களுக்குள் யுகாதிபண்டிகை என்றமற்றொரு பெயரும் வழங்கிவருகின்றது.

எல்லா வ்யவகாரங்களிலும் சுபத்தையும்புண்ணியத்தையும் ஒருங்குசேர்த்தே நோக்கும் குணமுடைய ஹிந்துக்களால் வருஷப்பிறப்பும் சுபதினமாயும் புண்யதினமாயும் பாவிக்

கப்படுகின்றது. வருஷப்பிறப்பென்ற ஹிந்துக்களுடைய சுபதினகொண்டாட்டத்தில் காலேயிலும், நடுப்பகலிலும், மாலேயிலும் வழங்கிவரும் சுபவிஷயங்கள் சில உண்டு. மேற்சொன்ன புண்ணியதினக் கொண்டாட்டத்தில் சிலபுண்ய கருமங்களும் அடங்கியிருக்கின்றன. எல்லா ஹிந்துக்களும் வருஷப்பிறப்பன்றைய தினம் காலேயில் கண் விழிக்கும்பொழுது சுபமான பதார்த்தத்தை முதலில் பார்ப்பது ஆவசியகமென்று நினைக்கின்றார்கள். இதற்கேற்ப ஒவ்வொருகுடும்பத்திலுள்ள மூத்தோர்கள் அதிகாலேயில் 4-மணிக்கே எழுந்து விளக்கேற்றி ஈசுவரனே ஸ்தோத்திரம் செய்துகொண்டு, வீட்டிலிருக்கும் பெரியவளான ஸுமங்கலி மூலமாக இளேஞர்களே எழுப்பி சுபமான பதார்த்தங்களேப் பார்த்து ஈசுவரனே நமஸ்கரிக்கும்படி செய்கிறார்கள். இவ்விஷயத்தில் மலேயாளவழக்கத்தில் ஒரு விசேஷமுண்டு. வருஷப்பிறப்பிற்கு முன்னிரவிலேயே, ஒவ்வொரு மலேயாளியின் கிருகத்திலும், குலதேவதாராதனத்திற்காக ஏற்பட்டிருக்கும் அறையில், வீட்டிலுள்ள எல்லா ஸ்வர்ணநாணயங்களும், ஸ்வர்ண நகைகளும், ரத்தினங்களும், சுபமான பழங்களும் புஷ்பங்களும் சேர்த்து வரிசையாக வைக்கப்பட்டிருக்கும். பிறகு காலேயில் 4-மணிக்கு மேல் 5-மணிக்குள், ஒவ்வொரு காரணவனும் (வீட்டுத்தலேவனும்) கையில் விளக்கையேந்தி பூஜையறையை முதலில் திறந்து அவ்விடத்திலுள்ள பூஜ்ய தேவதைகளேயும், முன்கூறிய சுபமான பதார்த்தங்களேயும் பூஜிக்கிறான். பிறகு குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் எழுந்து கண்ணே மூடிக்கொண்டே பூஜையறைக்குள் சென்று அவ்விடத்தில் சேர்த்து வைக்கப்பட்டிருக்கும் சுபமான பதார்த்தங்களேப் பார்த்துக்கொண்டே கண்ணேத் திறக்கிறார்கள். அவ்விடத்திலிருக்கும் காரணவன் தன் குடும்பத்தார் ஒவ்வொருவருக்கும் நாணயங்களேயும், நகைகளேயும், பழங்களேயும், புஷ்பங்களேயும் வெகுமதியாக அளிக்கின்றான். இம்மாதிரியுான பழக்கம் விசேஷமாய் மலேயாளப்பக்கத்தில் காணப்படுவதேயொழிய வேறு நாடுகளிலதிகமாய் இல்லே.

ஜாதியாசார விஷயங்களில் ஒவ்வொருவனேயும் ஸ்வதந்திரம் உடையவனுகக் கருதாது, ஒரு குடும்பத்தையே ஸ்வதந்திரமுடைய அளவாகக்கருதும், பழக்கம் வெகுகாலமாக உடையவர்கள், நம்மவர்கள், என்பதற்கு இக்காலத்தில் உதாரணமாக விளங்கும் எக்குடும்பவ்யவஹாரம் முதலிய விஷயங்களுக்குள், முன்குறிப்பித்ததாகிய ஆசாரம் ஒன்று என்பதற்கு ஐயமில்லே. இவ்வாசாரணே யற்ற விடங்களில் இல்லாது, இக்காலத்தில், நம்மவருள் பலவித காரணங்களால் மெதுவாக விருத்தி அடைந்து கொண்டுவரும் ஒவ்வொருவனது ஸ்வதந்திரத்திற்குத் தக்க வ்யவஹாரங்களுக்கு ஒத்ததாகவே இருக்கிறது.

மேலும் இம்மாதிரியுள்ள வழக்கத்தை புருஷார்த்தங்களுக்குள் ஒருவாறு மற்ற புருஷார்த்தங்களுக்கெல்லாம் ஸாதனமாக நினைக்கக்கூடிய அர்த்தமென்ற புருஷார்த்தத்தின் அதிஷ்டான தேவதா பூஜையாகவும் நம்மவர்கள் எண்ணக்கூடும்.

இப்படி முதலில் சுபமான பதார்த்தங்களே பார்த்துவிட்டு பிறகு, பெரும்பாலும் எல்லா ஆடவர்களும் மங்கையர்களும் ஆங்காங்கு ஸமீபத்திலுள்ள புண்ய தீர்த்தங்களுக்குப் போய் புண்யகாலத்திற்கு அவசியம் வேண்டிய ஸ்நானத்தை முடிக்கிறார்கள். பிறகு தேவதா பிதிரு தர்ப்பணங்களில் அதிகாரமுள்ள ஆடவர்கள், தேவதைகளுக்கும் பிதிருக்களுக்கும் விதிப்படி திருப்தி செய்விக்கிறார்கள்.

இம்மண்ணுலகில்வாழ்க்கையானது ஒரு ஜன்மத்திற்குள்ளேயே தொடங்கிமுடிவு பெறக்கூடியது என்று ஹிந்துக்கள் எண்ணுபவர்கள் அல்லர். நமது சாஸ்திர நூல்களில் சார்வாகமதம் பிரஸித்தமாயிருப்பினும், ஒருவனுவது, தனது

ஸ்வபாவத்தை மீறியோ மறந்தோ சார்வாக ளுய் சிலஸமயங்களில் நடந்துகொள்ளக் கூடிய தைத் தவிர, ஸ்வபாவத்தை யனுஸரித்து அந்த ரங்கத்தில் சார்வாகனுயிருக்க வல்லவனல்லன். ஒவ்வொரு ஹிந்துவுக்கும் பூலோக வாழ்க்கை யானது லோகாந்தரானுபவத்திற்கும் ஜன்மாந் திரா னுபவத்திற்கும் முறையே கருவியாயும் பயனுயுமுள்ள கரும பல கூட்டங்களின் ஓர் பகுதியாகவே தோன்றுகின்றது. பணத்தைத் துறந்து பிறருக்கு ஈய்தல் என்பது ஹிந்துக்களு டைய எல்லாக்கருமங்களிலும்ஸாரமாக உள்ள பாகம். இப்படி ஒவ்வொரு கருமத்தினுடைய ஒழுங்கும்அமைக்கப்பட்டிருப்பதுத்யாகத்தினு டைய மேலான பாகத்தை அடைய ஏற்பட் டிருக்கும் மார்க்கமாகவே எண்ணத் தகுந்தது. இவ்விஷயங்களுக்குத்தக்கபடி எக்கருமத்தைப் புரியுங்காலத்திலும், ஒவ்வொரு ஹிந்துவும் அக்கருமத்தின் சுபபாகங்களையும் வெளிப்ப டையான பாகங்களையும் வெளியில் அனுபவிக் கும் ஸமயத்தில், புண்யானுகூலமான பகுதிகளை அந்தர்முகனுய் அனுஷ்டிக்கவேண்டிய நியமத் தை விட்டுவிட முடியாதபடி பெரியோர்கள் ஏற் பாடு செய்திருக்கிருர்கள். பணத்தை விதிப்படி க்குத் துறந்து பிறருக்கு ஈய்தலால் தேவதை களுக்கும், பிதிருக்களுக்கும், மற்றவர்களுக்கும் திருப்தி அடைவிப்பதை ஒவ்வொரு கருமத்தி லும் ஓர்பாகமாக எப்படி பாவித்துகொண்டி ருக்கிருனே அப்படியே வருஷப்பிறப்பிலும் பாவித்துகொண்டு ஒவ்வொரு ஹிந்துவும் நட ந்து வருகிருன்.

இம்மாதிரி தேவதா பிதிரு தர்ப்பணங்களை முடித்துக்கொண்டு, உத்ஸவ காலத்திற்குத் தக் கபடி ஆடை யாபாரணங்களை பூணும்படி செய் து குழந்தைகளை அழைத்துக்கொண்டு, பந் துக்களுடனும் பரிஜனங்களுடனும் ஸமீபத் திலுள்ள ஆலயத்துக்குப்போய் ஈசுவரனை ஆராதித்து ஒவ்வொருவனும் வீடு வந்து சேருகிருன். பிறகு குழந்தைகளுக்கும் வேறு சில பந்துக்களுக்கும் சில குடும்பங்களில் புதிய ஆடைகள் கொடுக்கும் வழக்கமுண்டு. பிறகு பகல் மத்தியில் பந்து வர்க்கங்களுடன் பண்டிகைக்குள்ள பலவித பக்ஷ்ய போஜ்யாதி களுடன் போஜனம் நடக்கிறது.

இப்படி வருஷப்பிறப்பில் நடக்கும் போஜ னத்தில் எல்லோருடைய கிருகத்திலும் தவ றுது வேப்பம்பூவும் சர்க்கரையும் ஓர் கறிவர்க் கமாக காணப்படுகின்றது. இந்தமாதிரி மதுரப தார்த்தத்தையும் கைப்புப் பதார்த்தத்தையும் உணவில் ஓர் கறியாக வருஷாரம்ப தினத்தில் சேர்த்துவைத்துக் கொள்ளும் ஸம்பிரதாயத்தி ற்கு அபிப்பிராயம் நம்மவர்களால் பலவிதமாக ஊகிக்கக்கூடியதா யிருக்கின்றது. தர்மபரர்களு க்கு துக்கத்துடன் கலந்த ஸுகத்தைத்தரக் கூடியது தர்மமார்க்கம் என்பதை இது குறிப் பிக்கலாம். அர்த்தபரர்கள் மனதிற்கு இதை ஆலோசிக்குங்கால் சிரமப்பட்டு பொருள் ஸம் பாதித்து இறுதியிலடையும் ஸுகத்தை இது குறிப்பிக்கலாம். காமபரர்களுக்கு விப்ரலம்பத் தினுல் பிரிவு ஆற்றுமையால் உண்டாகும் இன் பரஸத்தின் மகிமை இதனுல் புத்தியில்தோற்ற லாம். மோக்ஷபரர்களுக்கு இவ்விஷயமானது ஸம்ஸாரத்தின் விருத்த ஸ்வபாவத்தை சுட்டிக் காட்டி அதன் ஸ்வரூபத்தை விளக்கி, மெய் பொருளை அனுபவிக்க ஸஹாயமான வைரா க்கியத்தைத் திடப்படுத்தலாம். இவ்வாறுவேப் பம்பூவை சேர்ப்பதற்கு சாஸ்திர ப்ரமாணம்ஸரி யாய் புலப்படவில்லை. சிலஸமயம்சில பெரியோ ர்கள் இதற்கு பிரமாணமாகப் பின்வரும் பொ ருளுடைய சுலோகத்தைச் சொல்வதுண்டு.

"வருஷப்பிறப்பில் ஒவ்வொரு ஹிந்துவும் வேப்பம்பூவைத் தனது குழந்தைகள் பந்துக் கள் முதலியவர்களோடு சாப்பிட்ட பின்பு, மங்களகரமான ஸ்நாநத்தைச் செய்ய வேண்டி யது."

இதை அனுஸரித்து அனுஷ்டான மில்லாவிடினும், நிம்பபுஷ்பங்களை புஜிக்கும் பழக்கத்திற்கு இது ப்ரமாணந்தானென்று கூறுகிறார்கள். இந்த சுலோகம் ப்ரஸித்தமாய் வழங்கிவருகிறதைத் தவிர, இதை யடக்கியிருக்கும் கிரந்தம் இன்னது என்பது புலப்படவில்லை.

இப்படி போஜனம் முடிந்தபின் ஆங்காங்கு, ஸாயங்காலத்தில் பரிசுத்தமான பிராமணரைக் கொண்டு, நவக்கிரகங்களைப் பூஜித்து, புதிய வருஷத்தினுடைய பஞ்சாங்கத்தை வாசித்து, கிரகங்களுடைய கதியை அனுஸரித்து அந்த வருஷத்திலுள்ள பொதுவான பலன்களை விவரிக்கும்படி செய்து, எல்லோரும் ஒன்று சேர்ந்து அதைக் கேட்டுப், பிறகு இந்துக்களுடைய ஸந்தோஷக் கூட்டம் முடிவுபெறும் முறைப்படி, பலவிதமான கனிவர்க்கங்களையும், சிற்றுண்டிகளையும், பானக வர்க்கங்களையும், புஷ்பம், சந்தனம், வெற்றிலை பாக்கு முதலியவைகளையும் கொடுத்து விட்டு, அவரவர்கள் பிரிந்து அவரவர்களுடைய இருப்பிடத்திற்கு ஸந்தோஷத்துடன் ஏகுவார்கள்.

"ஜ்யோதிஷ சாஸ்திரமானது வெகு உயர்ந்ததுதான்: ஆனால் அதனருமையை யறிவதற்கு அது ஜ்யோதிர்மண்டலத்திலேயே தங்கியிராமல் நமது வாழ்க்கைக்கு அனுகுணமான விஷயங்களி லனுபவத்திற்கு வரவேண்டும்" என்ற எமர்ஸன் என்ற ஆசிரியர் வாக்கியார்த்தத்தைபெரும்பாலும்அனுபவத்திற்குக்கொண்டுவந்திருக்கும் நம்மவர்களுக்கு,புதிய பஞ்சாங்கத்தை வாசிக்கச்செய்து கிரஹ கதிகளைகணக்கிட்டு நிர்ணயிக்கப்பட்ட இவ்வுலகின் கண் உள்ள வருஷபலன்களைத் தெரிந்து கொள்வது என்ற ஸம்பிரதாயம் உபயோகமற்றது என்று ஒருகாலமும் தோன்றக் கூடியதல்ல. இவ்வாறு செய்தபிறகு, இரவில் லகுவானபோஜனமருந்தி ஈசுவரத்தியானத்துடன் வருஷப்பிறப்பு கொண்டாட்டத்தை முடிக்கிறார்கள்.

எஸ். குப்புஸாமி சாஸ்திரி, எம்.ஏ.



# பணம்

## WEALTH

பணம் என்னும் பாறையின்மீது ஆயுள் என்ற பல மரக்கலங்கள் மோதி உடைந்திருப்பதை நாம் பார்த்திருக்கின்றோம். ஓடம் வண்டியில் ஏறும்: வண்டி ஓடத்தில் ஏறும் என்ற உலகச் சொல்லுக்கு அத்தாக்ஷியாய்ப் பல வறியோர்கள் பணக்காரர்களாவதையும் பல பணக்காரர்கள் வறியோர்களாவதையும் நாம் கண்டு இருக்கின்றோம். பணத்தை ஈட்டுவதில் எவ்வளவுகஷ்டமோ அதைவிட அதைச்செலவிடுவதில் அதிக கஷ்டம் என்பது சித்தாந்தம். ஈட்டிய பொருளைச் செலவிடும் விஷயத்தில் தான் ஒவ்வொருவனும் அதிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். பணம் என்பதைக் கொண்டுதான் ஒவ்வொருவரும் தங்களுக்கு வேண்டிய சுகத்தையும் பெருமையையும் பெறுகிறார்கள். "வாத்திமச் செட்டு" என்பதை யொட்டி அந்தணர்களிலநேகர் தனிகர்களாயிருப்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். இப்பழமொழி இவ்வினத்தைச் சார்ந்துவந்ததாயினும் வடமர்கள் முதலான பல அந்தணர்களுக்குள்ளும், முதலிமார்கள், கருணீகர்கள் முதலான சூத்திரர்களுக்குள்ளும், நமது நாட்டில் செட்டென்பது பெரும்பாலும் விளங்கிவருகின்றது.

இவ்வுலகத்தில் நமது வாழ்நாட்களில் எவ்வளவோசங்கடங்கள் சம்பவிக்கின்றன. அவைகளுட் சிலவற்றினின்று நீக்கிக்கொள்ள நாம் ஏராளமாகப் பணச் செலவிடுவது சிற்சில ஸமயங்களில் அவசியமாய் இருக்கின்றது. மேலும் நமது அந்தஸ்து அதிகரிக்க அதிகரிக்க அதற்குத் தக்கபடி நமது ஸௌகரியங்களை நாம் சீர்திருத்திக்கொள்ள வேண்டியிருக்கும். அதற்காக நாம் அதிகப்பொருள் செலவிட வேண்டியிருக்கும். சொற்ப வருஷங்களுக்குள் ஒருவன் தனது கஷ்ட தசையிலிருந்து வெகு சீமானாய்த் தன்னிடம் மிகுந்திருக்கும் அதிகப்பொ

ருளைக் கொண்டு தனது சுற்றத்தார்க்கும், மற்றவருக்கும் உபகாரம் செய்வதை நாம் கண்டிருக்கிறோம். இதைக்கொண்டு நாம் இங்குச் சொல்லத் துணிவதென்னவெனில் பணம் என்பது எல்லாரும் அடைய விரும்பும் பொருள்; ஒவ்வொரு இளைஞனும் தனது வாணுட்களில் இப்பணத்தை நியாயமான வழியில் சம்பாதித்து அனைவர்க்கும் உதவிசெய்வதையே தனது மேலான நோக்கமாகக் கொள்ளவேண்டும் என்பதுதான்.

பெரிய தர்மங்களில் ஏராளமான பொருள் செலவாவதைக் கண்டு நாம் திகைப்பதுண்டு. உற்றுப் பார்க்குங்கால் அது வெகு நுட்பமான முதலிலிருந்து குவிந்திருக்கும். நமது நாட்டில் நாட்டுக்கோட்டையார்கள் பல ஆலயங்கள் கட்டுவதையும் சத்திரங்கள் போடுவதையும் நாம் பார்க்கிறோமே. சிதம்பரம் கோவில் ஒன்றுக்கு மட்டும் இதுவரையில் நாட்டுக் கோட்டையார்கள் 50, 60 லட்சம் ரூபா செலவிட்டிருக்கிறார்கள். காசி ராமேஸ்வரம் முதலிய ஸ்தலங்களில் அன்னஸத்திரங்கள் போட்டிருக்கிறார்கள். இவ்வித தர்மங்களுக்கு உதிக்கும் முதல் அவர்களுடைய லாபத்தில் நூற்றில் ஒரு பாகம் அல்லது ஒன்றரை பாகமாயிருப்பதை நாம் காண்போம். ஒருவன் தனக்குக் கிட்டும் லாபம் ரூபா நூறானல் அதில் ஒரு ரூபா தனதில்லையென்று மிகுத்து வைப்பதால் எவ்வளவு பொருள் குவிகின்றது.

ஒரேவிதமான புத்தி, யுக்தி, சக்தி, கல்விப் பயிற்சி இவை முதலான குணங்களமைந்தவாலிபர்கள் ஒரேவித சம்பளமுள்ள உத்தியோகத்திலிறங்குவதாக நாம் கருதுவோம். இருபது வருஷங்களுக்குப் பிந்தி அவர்களை நாம் பார்க்கும்பொழுது ஒருவன் சீமானயிருப்பான் மற்றொருவன் தரித்திரனயிருப்பான். அவர்களைப்பார்த்து ஜனங்கள் ஆகா என்ன ஆச்சரியம்! அவனுக்கு அதிர்ஷ்டமில்லை, ஆகையால் பொருள் சேரவில்லை, என்று தரித்திரனைக் கண்டு மனம் நோவார்கள். அதல்ல, அவன் ஏழையாயிருப்பதற்குக் காரணம், அவனிடம் மிகுத்துவைக்கும் குணமேயில்லை. ஆகையால் ஏழையானன். கை தாராளம், செலவு வெகு அதிகம், என்று உலகத்தார் புகழ்வது வெகு துர்லபம்; யாரை? மிகுத்துவைக்கும் குணமில்லாதவனை. மற்றவனை அவன் வெகு கருமி. உலோபி, எச்சிற்கையால் காக்கை ஓட்டமாட்டான், என்று இகழ்வார்கள். மிகுத்து வைக்கும் குணமுள்ளவன் இவ்வித உலகநிந்தையைச் சகித்துக்கொண்டே சொற்பம் சொற்பமாய் பொருளீட்டுவான். அவ்வாறீட்டப்பட்ட பொருளை இறுவட்டிக்கு விடுவான். சொற்ப வருஷங்களுக்குள் அது பெருமுதலாய் மாறிவிடும். சீமானய் விடுவான். மற்று எவ்வாறு சீமானவது? இவ்வண்ணந்தான் ஆகவேண்டும், முதல்முதல்தாராளமாய் செலவிட்டு, மிகுக்கும் வகையற்று, ஜனங்கள் புகழைப் பெற்றவன் வருஷங்கள் செல்லச் செலல பலவித கஷ்டங்களில் ஆழ்ந்து விடுவான். தரித்திரனுக்குக் கஷ்டம் வந்தால் ஒன்றின்மேல் மற்றொன்று வந்துகொண்டேயிருக்கும். சீமானுக்குப் பணம்குவிந்தால் நிமிஷத்துக்கு நிமிஷம் வட்டி சேர்ந்து கொண்டேயிருக்கும். இதைத்தான் "அவன் பணத்துக்கு இறகு முளைத்தது" என்றுஉலகத்தார் சொல்லுவார்கள். ஆகையால் சிறுபிராயத்திலேயே பொருள் மிகுக்கும் குணம் நம்மிடம் இல்லாமற் போகுமாயின் நாம் பெரியவர்களானபின் அவ்வழக்கம் நமக்கு ஒருபொழுதும் வரமாட்டாது.

ஒரு சிறுவனுக்குப் பணமென்பது இரண்டு விதமாய் வரக்கூடும். யாராவது அவனுக்கு தானம் கொடுக்கவேண்டும் அல்லது அவனேஸ்வயமாகச் சம்பாதிக்கவேண்டும். இவ்விருவகையில் எவ்வகையால் அவனுக்குப்பொருள் கிட்டிய போதிலும் கிட்டிய பொருளைக் கவனமாக அவன் காப்பாற்றுவது தான் அவனுடைய கடமை. அதை அவன் அழிப்பானயின் பெரும் பாவியாவான். ஒரு மாமன், சிறிய தகப்பன், பெரியதகப்பன், வேறு பந்து அல்லது ஒருமித்

திரன் ஒருவனுக்கு ஒருலட்சம் ரூபா அல்லது ஏதோ பொருள் மனப்பூர்வமாய் தானம் செய்து கொடுப்பானேயானால் அதைத்தானம்வாங்கினவன் ரட்சிப்பது கடமையேயன்றிக் கூத்திலும் குடியிலும் மைவிழியார் மனையிலும் அழிப்பது ஒருபொழுதும் தருமமாகமாட்டாது. அதுபோலவே நெற்றிதண்ணீர் நிலத்தில்விழ உழைத்துச்சம்பாதிக்கும் பொருளையும் நாம் ரட்சித்துக்கொள்ளக் கடமைப்பட்டவர்களாக விருக்கின்றோம். இவ்வாறின்றி எவனொருவன் அழிக்கிறானோ அவன் ஒருமரியாதைக்காரனாக கருதப்படமாட்டான். வேண்டிய செலவுக்கு மட்டும் பிரயோஜனப்பட்டு மிகுந்த திரவியத்தால் மற்றவர்களை ரட்சிக்கும் பெரும்பதவி பொருளுள்ளவர்கள் தான் பெறுகிறார்கள். ஒரு பஞ்சாலையால் பதினாயிரம் கூலியாட்கள் பிழைக்கின்றார்கலல்லவா? அதைவிட பணக்காரனுக்குப் புகழ்வேறும் வேண்டுமோ. சிரமப்பட்டப்பொருள் மிகுத்துதலாலல்லவா இப்பெரும் புகழ் ஸ்ரீமான் பெறுகிறான். சிறுபிராயத்தில் ஒருவன் தன்னுடைய சம்பாத்தியத்தைத் தனக்கு வேண்டிய அவசியமான செலவுகளுக்கு செலவிடுவான். அவனுக்கு வயதாக மற்ற சௌக்கியங்களுக்கும் குழந்தைகள் படிப்பு குழந்தைகள் உடம்பு அசௌக்யமாயிருக்கையில் மருந்து முதலிய மற்ற செலவுகள் அடிக்கடி சம்பவிக்கும் அவன் கைப்பணத்தைக் கொண்டுதானே அவ்வளவு மிதமற்ற செலவுகளும் நடக்கவேண்டும். இளம்பிராயத்தில் பணம் மிகுக்காதவன் அப்பொழுது என் செய்வான். பணத்துக்குப்பரிதவிப்பான்; கடன் வாங்குவான்; இரண்டொரு இடங்களில் கடன் கிட்டும்; அதுவும் கிட்டாமற்போனால் சங்கடப்படுவான். ஆயைால் நாம் சம்பாதிக்கும்பொருளில் ஒருபாகம் சிறு வயது முதல் மிகுத்து வைப்பதே தர்மம். எவனொருவன் தனது சம்பாத்தியத்திலிருந்து மூன்றிலொன்று அல்லது பாதியாவது மிகுக்காமலிருப்பானோ அவன் அவசியம் பிற்காலத்தில் வருந்துவான் என்பது திண்ணம் இது சிறு சம்பாத்தியத்துக்கும் சரி; பெரிய சம்பாத்தியத்துக்கும் சரி.

# மக்பெத்

அல்லது

# மனோதௌஸ்தியம்

(ஓர் விமரிசை)

## MACBETH OR MENTAL CHAOS

(A CRITICAL STUDY)

---

முன்னர் 5, 6 ஆகிய நவம்பர் டிசம்பர் மாஸ ஸஞ்சிகைகளில் நாம் எடுத்துக்கூறிய மக்பெத் கதையின் சிறப்பை, கதையின் ஒழுங்கு, நாடகத்தின் நயம், மாயினிகள், மத்பெத், மக்பெத்மனைவி என்றவிஷயங்களைமுக்கியமாக வைத்துக்கொண்டு ஓர் விமர்சை மூலமாக வெளியிடுவோம்.

I கதையின் ஒழுங்கு:--அசிரத்தையாக இருப்பின், ஒரு பாபமும் அறியாதநாம் தீமரென்று பாபத்திற்கு ஆளாகி, வரவரப்பாபம் செய்வதில் பயத்தைவிட்டு, பின்பு அதைச்செய்வதில் ருசிஉடையவராகிசெய்து, வெகுகாலத்திற்குப் பின்னர் கடவுள் தண்டனைக்கு உட்பட்டே, 'பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு' என்ற பழமொழிப்படி பாபத்தால் விளையும் தீங்கை அறிந்து நல்லொழுக்கத்திற்குத் திரும்பவேண்டும் என்றுஎண்ணுவோம், என்றகருத்தை உள்ளடக்கியது இக்கதை. நாம் முற்கூறிய அசிரத்தை என்பது (1) பாபத்தின் ஸ்வரூபம் (2) பாபத்தை நாம் ஏன் செய்யாமலிருக்கவேண்டும் என்றகேள்விக்கு நமது மனதில் இருக்கும் மறுமொழி, அதன் உயர்வு அல்லது தாழ்வு (3) பாபம் எப்படி நம்மை அணுகும் (4) அப்பொழுது அதை எப்படி தடுக்கவேண்டும், ஆகியஇவைகளை ஆராய்ந்து சாஸ்திரத்தில் சொல்லியபடி நமது மனதை சுத்தப்படுத்தி, எந்தஸமயத்தில் எம்மாதிரியான பாபஎண்ணம்வந்தாலும் அதைத்தடுக்க பலம் உண்டாகும்படி செய்யாதிருத்தலே. இவ்வளவும் செய்துகொள்ளாமலே உலகத்தவரில்பெரும்பாலார் மற்றைய விஷயங்களில் வீண்காலம் போக்குகிறார்கள். அவர்களை பாபஎண்ணங்கள் மக்பெத்தை தாக்கியவாறு வந்து தாக்குங்கால் அவர்கள் இவ்வாறு படிப்படியாக இறங்கி அதோ கதி அடைவார்கள் என்பதை இக்கதை நன்றாகக் காட்டுகின்றது.

பாமரர் படுகுழியில் விழும் ஒழுங்கை நன்கு எடுத்துக்காட்டும் இக்கதை ஐந்து பாகங்களை உடையது.

இதை ஒழுங்கான நாடகமாகச் செய்த ஷேக்ஸ்பீயர் மஹா கவி இவ்வைந்து பாகங்களுக்கு ஏற்ப இதை ஐந்து அங்கங்களாகப் பிரித்திருக்கிறார். அவற்றுள்:—

(1) முதல் அங்கமாம் முதற்பாகத்திற்கு மருள் என்று பெயர். அது கதை ஆரம்பம் முதல் மக்பெத் தன்மனைவியின் தூண்டுதலால் டங்கனைக் கொலை செய்வதாகத் தீர்மானிக்கும் வரையில் உள்ளது. இதில் பாமரர் ஸுகானுபவத்தில் மூழ்கித் தலை தெரியாதிருக்கையில், மருள் இன்னபடி அவர்களை மூடிக்கொண்டு கெட்டவைகளைச் செய்யும்படித் தூண்ட ஸந்தர்ப்ப விசேஷங்களால் மக்பெத்தைப் போன்ற அசிரத்தையாக இருக்கும் அவர்கள் இதற்கு ஆளாகி பாபம் செய்வதில் அதிக பயமிருந்தும் அதை முதலில் செய்யத் துணிகிறார்கள் என்பதையும், ஏமாறுத பாங்கோவைப்போன்ற சிலர் அச்சமயங்களில் தமது கெட்ட எண்ணங்களை மூளையிலேயே வேறறுத்து முடிவில் மனோ தௌஸ்தியத்தீர்ந்து (மனக்குழப்பம், சாந்தமின்மை ஆகிய இவைகளுக்கு) ஆளாகாது தப்பிப் பிழைக்கின்றார்கள் என்பதையும் காட்டுகின்றது.

(2) இரண்டாம் அங்கமாம் இரண்டாம்பாகத்திற்கு டங்கன் கொலைஎன்று பெயர். இதுவே ஒருவன் மிகுந்த பயத்தோடு செய்யும் முதற் கொடுந்தொழிலைக்காட்டுகின்றது இந்தப் பாகத்தில்ஒருவன் அவ்வாறு கொடுந்தொழில் செய்த பிறகு இவ்வாறு மனம் பதைத்துச் சீரழிவான் என்பதை வெகு நுட்பமாக உள்ளது உள்ளபடி எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது.

(3) மூன்றும் அங்கமாகிய மூன்றும் பாகத்திற்கு பாங்கோக் கொலை என்று பெயர். தீமை விதைத்தால் தீமைவிளையும் என்ற கருத்தை இதில் கவி அதிசாதுரியமாக வெளியிட்டிருக்கிறார். முதற் கொடுந்தொழிலில் பழகித்தேர்ந்தவன், பின்பு அதற்கு இருந்த ஸஹாயங்களை வேண்டாமல், சிறிதும் அஞ்சானாய் தன்னயங்கருதி முதற் கொடுந்தொழிலால் கிட்டினவைகளை ஸ்திரப்படுத்தமேல் மேலும் கொடுந்தொழில் செய்ய இவ்வாறு முயலுவான் என்றவிஷயத்தை மிகஅழகாக இங்கு எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது.

(4) நான்காம் அங்கமாம் நான்காம் பாகத்திற்கு மக்டப் பெண்டு பிள்ளைகளின் கொலைஎன்று பெயர். இதில் மெய்விதிர்ப்பின்றி கொடுந்தொழில் செய்யப்பழகிய ஒருவன் தனக்கு ஓர்வித லாபம் இல்லாமலிருக்கும் பொழுது கூட கேவலம் தன்பாப ஹிருதயதிருப்தியின் பொருட்டு கெட்டதொழில் செய்யப்பிரவேசிக்கின்றான் என்பதை நன்றாக வெளியிட்டிருக்கின்றது.

(5) ஐந்தாம் அங்கமாகிய ஐந்தாம் பாகத்திற்கு பிரதி பலன் என்றபெயர். இதில் அதோகதியடைந்த கொடியவனும், அவனை ஆதியில் தடுத்து திருப்பாது அதோகதி அடையவிட்டவர்களும் இவ்வாறு கடவுள்தண்டனைக்கு ஆளாகிப்பின் தமது பிழையை அறிந்து நல்வழிக்குத் திரும்ப எண்ணுகின்றார்கள் என்பதைப் புலப்படுத்தி இருகின்றது.

II நாடகத்தின்நயம்:—ஷேக்ஸபீயர் மஹாகவி முன்கூறிய ஒழுங்காய் எழுதியுள்ளகதையில் தமது திறத்தை ஆங்காங்கு நன்றாகக்காட்டியிருக்கிறார். மாயினிகளைக்கொண்டு வந்துவிட்டு மக்பெத்திற்கு அரசனாகவேண்டும் என்ற ஆவலைத் தூண்டிவிட்டதும், இந்தக்கெட்ட எண்ணத்தோடு மக்பெத்துவருங்கால் டங்கன் 'கொடியவரது அகத்தை முகத்திற் காண எப்படிமுடியும்? அவன் (காடார் பிரபு) இப்படிஇருப்பான் என்று யார்தான் எண்ணிஇருப்பார்கள்?' என்றுசொன்னதும், டங்கன் கொலை நடந்த பின்பு மக்பெத்அரண்மனை வாயில் காப்போன் தான் நரகவாயில் காப்போனாக ஸ்வப்பனம் கண்டதும், பாங்கொலை நடந்த காலத்தில் மக்பெத்தை மூன்றும் கொலையாளியாகக் கொண்டுவிட்டு அதன் மூலமாக அவனுக்கு உரு வெளித்தோற்றம் முதலிய குழப்பங்களைக் கொண்டுவந்துவிட்டதும், மாயினிகளின் தந்திரமான மொழிகளை எடுத்துக்காட்டியதும், மக்பெத் மனைவி துர்ஸ்வப்பனங்களால் பட்ட பாடுகளை எடுத்துக்காட்டியதும் இம்மஹா கவியின் சாதுரியத்தை நன்கு வெளிப்படுத்துகின்றன. இதுபோலவே இன்னும் அநேக அரிய விஷயங்களை ஷேக்ஸ்பீயர் இந்த நாடகத்தில் அமைத்துள்ளார். அவற்றுள் முக்கியமானவற்றையே நாம் இங்கு எடுத்துக் கூறியது.

III மாயினிகள்:-இவைகள் மனிதர்களை நல்லவழிகளில் செல்லவொட்டாது தடுக்கும் பாபகர்மங்களை உணர்த்துகின்றன. அவைகளின் ஸ்வபாவம் மனிதன் ஏமாந்து, தன்னைக்கவனித்து நல்லவழிகளில் நடந்து உய்யமுயலாதிருக்கும் ஸமயம்பார்த்து அவனைப்பாபத்திற்கு ஆளாக்குவதே. மேலும் 'தொடங்குங்கால் இன்பமாய்த் துன்பம் பயக்கும்' என்பது

போல அவைகளின் வாய்மொழிகள் முதலில் நன்மைபோல நமக்குத்தோன்றும். இவ்வாறிருக்கின்றனவே என்று அவைகளை மக்பெத்தைப்போல் ஆழ்ந்துயோசிக்காது, நாம் பின்பற்றி தொழில் நடத்துவோமாகில் நம்மைமுதலில் அனேகவித மூடநம்பிக்கைகளுக்கு ஆளாக்கி முடிவில் அவை நம்மை மீளா நரகத்திற்கு ஆளாக்கிவிடும். இதற்கேற்பவே மக்பெத்திற்கு தகுந்த ஸமயத்தில் எச்சரிக்கை செய்யுங் கால் பாங்கோவும் 'எந்நாளும் அவியாஅ எரியும் நரகில் வீழ்த்த இதம் சொல்லும் மாயினிகள்' என்று இவைகளை வருணித்திருக்கிறான். மாயினிகள் வார்த்தையில் ஒருவன் மோசம் போய் நம்பிவிடுவானாகில் மனோநிடம் முதலிய நற்குணங்கள் யாவும் அவனை விட்டு அகலும். வரவர தன்னயங்கருதி அது வலித்திக்குமாறு கெட்டவழிகளில் நடப்பதே அவனுக்குத் தொழிலாகிவிடும். குறி கேட்டல், சகுனம் பார்த்தல் முதலிய அற்பவிஷயங்களில் மூட நம்பிக்கை அவனுக்குத் திடமாக உண்டாகிவிடும். இவ்விஷயங்களில் காணப்படும் இருபொருள் மொழிகள் விடுகதைகள் முதலிய விஷயங்களில் வெளிப்படையாக தன்னயத்திற்குத் தக்கவாறு காணப்படும் அர்த்தங்களே உண்மை என்று கருதும் மனத்தளர்ச்சி உண்டாக, அவைகளின் உட்பொருளை ஆழ்ந்து யோசிக்கும் சக்தி அவனை விட்டு அகலும். இவ்வெளிப்படை அர்த்தங்களையே உண்மை எனக்கருதி மோசம் போய் கெட்ட வழிகளிலேயே நிலைபெற்று, தன் நடத்தையை சீர்திருத்தும் விஷயத்தையே எண்ணாது முடிவில் கடவுள் தண்டனைக்கு அவன் உள்ளாவான்.

முன் கூறியவைகளிலிருந்தும் இம்மாயினிகள் மனிதர்களை வீழ்த்த வெளியிடும் வார்த்தைகளில் வெளிப்படையாக ஓர்வித அர்த்தம் தோன்றக்கூடியதும், உள்ளே வேறொரு அர்த்தத்தை உடையதுமாகிய வார்த்தைசொல்வது வழக்கம் என்பது விளங்கும். நம் தேசத்தில் உடுக்கடித்துக் குறிசொல்லும் பூசாரிகளுக்கும் இதுவே வழக்கம். அவர்களும் நேராகப் பொருள்படும் வார்த்தைகளை உரையாமல், எப்பொழுதும் அலங்கார ரூபமாகவே பேசுகிறார்கள். மாயினிகளும் இப்படியே இரண்டாம் தடவை சம்பம் புல்வெளியில் உள்ள ஓர் குகையில் மக்பெத்தைஸந்தித்தபொழுது, அவனுக்குச் சிலவிஷயங்களை அறிவித்தன. இந்த ஸமயத்தில் அவைகள் தமது வாக்கில் நம்பி மோசம்போன மக்பெத்தின் கண் முன் வெகு தைரியமாகத் தமது உட்கருத்தை நன்றாகக் குறிப்பிக்கும் உருவத்தோற்றங்களை காண்பிவித்தன:—

(1) 'பைப்பிரபுவை(மக்டப்பை)சால்வரையும்போலசம்பத்தக்க இஷ்டன் என்று எண்ணி நீவமாறாதே!' என்று எச்சரித்த உருவெளித் தோற்றமாகிய தலை பின்னர் மக்பெத்தலையை மக்டப் இவ்வாறு வெட்டி நிறுத்துவான் என்ற உட்கருத்தையும்,

(2) 'தாய் வயிற்றினின்று இம்மண்ணுலகில் உதித்தமானிடன் எவனும் உன்னைஊறு செய்யவல்லவன் அல்ல' என்று உரைத்த 'உடலெங்கும் உதிரமானகுழந்தை வடிவைக்காட்டிய' உருவம் தாய் இறந்தபின் அவள் கருப்பையிலிருந்து அருத்தெடுக்கப்பட்டவன் ஒருவன் (மக்டப்) மக்பெத்தைக்கொல்லுவான் என்பதையும்.

(3) 'பர்னம் அரண்யம் நிலை பெயர்ந்து நடைகொண்டு உன்னோடு சமர்செய்யவருமளவும் உனக்கு ஒருபொழுதும் அபஜயமில்லை' என்று கூறிப், 'பெருமரம் ஒன்றைச்சிறு கரத்தாற்பற்றி வெளிப்பட்டசிங்காரக்குழந்தை'யின் தோற்றம், பின்னர் டங்கன்பிள்ளை மால்கம் உத்தரவின் பேரில் ஒவ்வொரு போர் வீரனும் தன்முன்பிடித்துவரப் போகிற மரக்கிளைகளால் வனம் நிலைபெயர்ந்து நடைகொள்ளும் தோற்றம் உண்டாகப்போகிறது என்பதையும் ஒருவாறு குறிப்பிக்கும்.

மக்பெத்தைப் போன்றமனத்தளர்ச்சி உடையவர்களே பாழும்மாயினிகளை வழிபட்டு மீளாநரகிற்கு ஆளாவார்களே ஒழிய பாங்கோவைப் போன்ற நேர்மை உடையவர்கள் தம்நிலை பெயருவார்களா? இவைகளது ஸ்வரூபத்தை உள்ளவாறு அறிந்து தூரவிலகி இவைகளின் வார்த்தைகளை உட்கொள்ளாமலே இருப்பர்.

கதையின்முடிவில் மக்பெத்'ஆப்தம்போலச்சொல்லும் மாயினிகளின் உபயார்த்தவாக்கை இனி ஒருக்காலும் எவரும் நம்பி ஏமாறாதிருக்கக்கடவர்' என்று சொல்லியவார்த்தையே இக்கதையிலிருந்து வெளியாகும் நீதிகளில் ஒன்று. குறிகேட்டல் ஜோஸ்யம் பார்த்தல் முதலியன வீணாகமனதளர்ச்சிக்கு அல்லது அநீதியில் பிரவேசிப்பதற்கு காரணமாகமுடியலாம். ஆகையால் அவைகளை மூடத்தனமாக உண்மைஎன்றுகொண்டு தொழில் செய்யக்கூடாது அவ்வாறு செய்தால் அதோகதி அடைவோம் என்பது இதனால் நன்குவிளங்கும்,

IV மக்பெத்:—கதை முழுவதையும் உற்று நோக்கில் மக்பெத் எவ்வளவு தேக திடமுடையவனே அவ்வளவு மனத்தளர்ச்சி உடையவன்: அதனல்தான் அவன் மாயினிகள் வாய்ப்பட்டுத் தட்டழிந்து முடிவில் மனங்குழம்பி கஷ்ட ஸ்திதிக்கு வந்து இறக்கவேண்டியவனானன் என்பது வெளியாகும். சிலர் கதையை மேலெழுந்தவாரியாகப் படித்துவிட்டு மக்பெத் கொடியவன் என்று பழிக்கிறார்கள். ஆழ்ந்துவிசாரிக்குங்கால் அவனைப்போலவே உலகில் உள்ளவர்களில் பெரும்பாலாரும் கொடியவர்கள் என்பது வெளியாகும். மக்பெத்தின் கெட்ட குணங்கள் வெளியாக ஸமயம் ஏற்பட்டது; மற்றையவர்களுக்கு இம்மாதிரியான ஸமயம் இதுவரையில் வரவில்லை: இதுதான் நிஜமான வித்யாஸம் ஆதலால்தான் உகைத்தவர்கள் நல்லவர்களாகவும் மக்பெத் கொடியவனுகவும் தோற்றுவது. அநேகர் நல்லவராகவே இருக்கலாம். ஆயினும் ஒருவரும் பாராதிருக்கும் ஸமயத்தில் செய்யும் ஒரு கெட்ட காரியத்தால் ஸுகமான நிலையை அடையும் வழி இருந்தால் அவர்களுள் பெரும்பாலும் யார் தான் அதைச் செய்யாது விட்டுவிடுவார்கள்! இவ்வாறிருக்கும் பாபகாரியத்தை செய்து ஒருவன் நல்ல ஸ்திதியிலிருந்து பிறரால் அவன் எவ்வளவு தான் நல்லவன் என்று மதிக்கப்பட்ட போதிலும் அவன் கெட்டவன் என்பதற்கு என்ன ஸந்தேகம்? இம்மாதிரியான கெட்டவன் மக்பெத். அவன் கெட்ட குணங்கள் வெளிவரும் தருணமும், அவை எல்லோரும் அறிய அம்பலம் ஏறும் தருணமும் வாய்த்தபடியால் தான் அவன் கொடியவன்போல காணப்படுகிறான். இவை போன்ற தருணங்கள் உலகத்தவரில் பெரும்பாலாரது வாழ்நாட்களில் எப்பொழுதாவது வாய்த்தால் அவர்கள் கதியும் இவ்வாறே என்பதற்கு என்னதடை? இக்கதையிலிருந்து இந்த ரகஸியத்தை நன்கு உணர்ந்து இவ்வாறு ஆக இடங்கொடாது நமது எண்ணம் நடத்தை முதலியவைகளை நாம் ஜாக்கிரதையாகச் சீர்திருத்திக் கொள்ளவேண்டியது.

மக்பெத்தின் நிலையை இக்கதையில் கண்டவாறு ஆழ்ந்து விசாரிப்போம். மக்பெத் தேகவலியை உடையவன்; ஸேனையைத் தன் அதிகாரத்தின் கீழ் வைத்துக்கொண்டிருந்தான். அவனே ஸ்காத்லன்டில் மிகச்சிறந்தவீரன். டங்கனுக்குக் கிட்டின பந்து. அரசன்பிள்ளைகளோ அப்பொழுது இளம்பிராயமாக இருந்தனர். மக்பெத் இந்தஸந்தர்ப்பங்களின் மத்தியில் இக்கதைத் தொடக்கத்தில் ஜயலக்ஷ்மியோடு கட்குடித்தவன் போல ஸுகவெறிகொண்டு மனதில் ஓர் வித எண்ணமும் இன்றி நாடு நோக்கி வருவதைநாம் காண்கிறோம். மேலும் மக்பெத் இருந்தகாலம் இங்கிலாந்தில் கன்யூட்டு அரசாண்டகாலம். அக்காலத்தில் பிரிடன்தீவில் வஸித்திருந்தஜாதியார்களுக்கு நல்லொழுக்கம் நன்றாகப்பரவி அவர்களை மேன்மைப்படுத்தவில்லை. மேலும் அக்காலங்களில் முன் எடுத்துக் காட்டியுள்ள ஸந்தர்ப்பங்களில், பலவான் இராஜ்யத்தைப்பிடித்துக்கொண்டு அரசன் பிள்ளைகளை ஒதுக்கிவிடுவது வழக்கம்.

மக்பெத்தோ பாங்கோவைப்போல மனத்திடமுடையவனல்லன். அவன் கீர்த்தியையே முதன்மையாக விரும்பியவன். பாபத்தொழில்களைச் செய்தால் கீர்த்தி குறைவதற்கு இடமாகுமே என்று பயந்து அத்தொழில்களைச் செய்யாது விட்டவன். புண்யம்செய்தால் மனஸ்ஸமாதானமுண்டாகி ஸுகம் வரும் என்று எண்ணி அவன் அதைச் செய்யாது தனக்கு கீர்த்திமுதலிய உலக இன்பங்கள் விருத்தியாகும் என்ற காம்யநம்பிக்கையோடு அதைச்செய்துவந்தான். பாபத்தொழில்கள் மனோதௌஸ்தியம் (மனக்குழப்பம் சாந்தமின்மை) விளைவிக்கும், ஆதலால் கெட்டவைகள், அவைகளை எப்பொழுதும் எந்தஸந்தர்ப்பத்திலும் செய்யக்கூடாது என்று அவைகளை அவன் செய்யாது விட்டவனல்லன். இந்த மனத்தளர்ச்சியே இவன் சீர் அழிந்ததற்குக்காரணம். இதுதான் மக்பெத்தினுடைய மனோநிலை என்பது டங்கனைக்கொல்லுவது தகாதகாரியம் என்று குழப்பத்துடன் அவன் ஆலோசிக்கையில்வெளியாகின்றது. 'டங்கன் நமக்கு அதிதி, அவனை நாம் கொன்றால் உலகில் உள்ளவர்கள்நம்மைப்பழிப்பார்களே! அவன் ஸாத்மீகி, அவனைநாம்கொன்றால்எல்லோரும் அவனுக்காகநம்மை எதிர்த்து நாசம்பண்ணிவிடமாட்டார்களா?' என்று அப்போது எண்ணினன் மேலும் 'இந்தக்கொலையோடு எல்லா விஷயங்களும் முடிந்து மேல்ஒன்றும் வளராது ராஜ்யம்மாத்திரம் வஸிக்குமாகில் கொலை செய்வதே நலம்' என்றும் அவன் எண்ணமிட்டுக்கொண்டிருந்தான். இம்மாதிரி மனத்தளர்ச்சி மக்பெத்திற்கு இருந்ததினல்தான் அவன் பெண்சாதி, பழியை டங்கன் வேலைக்காரர்கள்மேல் சுமத்திவிட்டு தாம் ஸுகமாக இருக்கலாம் என்று கொலைப்பழிக்கு இடமில்லாது இராஜ்யம் கிடைக்கும் வழியைக் காட்டியதும் அவன்

கொலைசெய்ய ஒப்புக்கொண்டான். ஆகவே மக்பெத் கொலைக்கு பயந்தது அது பாபச்செயல் என்பதனுல் அல்ல, அது வெளி வந்தால் தன் பெயர் முதலிய வற்றைக் கெடுத்துவிடுமே என்பதனுல்தான். இதுவே அவன் கெட்டலைந்ததற்குக் காரணம்.

இது போன்றதே உலகில் உள்ள பெரும்பாலாரது குணமும். ஆகவே இவர்களும் தக்க ஸமயம் வாய்க்கின் பாபத்தின் வாய்ப்படுவார்கள். இவர்கள் கொடியவர்கள் என்பது அல்ல. இவர்களுக்கு நல்ல வழிகளில் பூர்ண நம்பிக்கையும் ஒழுங்கான பிடிப்பும் இல்லை என்பதே.

இக்குணக்குறைவை உடைய மக்பெத் போர்களத்திலிருந்து தன்மனத்திலிருக்கும் பலக்குறைவை அறியாமல் ஸாகத்தில் மூழ்கி வந்தான். பாமரர்களுக்கு ஸாகம்துக்கத்தைவிட மிகக்கொடியது. ஸாகத்தில் ஆழ்ந்திருப்பவன் மனது மிகுந்த சஞ்சலம் உடையதாகஇருக்கும். அந்தஸமயத்தில் அதனைக் கெட்டவழியில் திருப்பிவிட்டால் உடனே கண் தலைதெரியாது அவன் இறங்கிவிடுவான். மக்பெத் இந்நிலையில் வந்து கொண்டிருக்கையில், அவன் முன் எதிர்ப்பட்ட மாயினிகள் அவன் விஷயத்தில் பின் நடக்கப்போகின்றவைகளுள் சிலவற்றைச் சொல்லவும் உடனே ஒன்று பலிக்கவும் தனக்கு அவைகள் கூறியபடி முடிவில் ராஜ்யம் வந்தாலும் வரலாம் என்று எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. இவ்வெண்ணம் மக்பெத்தின் மனதில் பதிந்து விட்டது என்பது அவன் பாங்கோவைநோக்கி, 'மாயினிகள் மங்களவாக்குஅதிசயமாக எவ்வளவு சீக்கிரம் வித்தித்தது. உமது மைந்தர் வேந்தராவார் என்பதற்கு என்ன ஸந்தேகம்,' என்று சொன்ன வாக்கிலிருந்து நன்ருகவெளியாகும். அப்பொழுது பாங்கோ 'எந்நாளும் அவியாதெரியும் நரகில் வீழ்த்த இதஞ்சொல்லும் இடற்கையுள்ள மாயினிகளை நம்பித் தொழில் செய்யாதேயும்' என்று கூறிய ஆப்தமொழியைக் கவனியாது தன் கெட்ட எண்ணத்தை வளரவிட்டதாலும், பின் டங்கன் ஸபையில் அவன்முன்பு நடந்தவைகளாலும், கொலைசெய்து தான் ராஜ்யத்தை அடையவேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு திடப்பட்டது. அவ்வாறு உண்டானுலும் கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை என்பதுபோல ராஜ்யத்துக்காக கொலையும் செய்யவேண்டும், அவ்வாறு செய்வதால் தன் கீர்த்தியும் குறையக் கூடாது என்ற துர்ஆக்கிரம் அவன் மனதில் குடிகொண்டிருந்தது.

மக்பெத்தின் குணத்தை உள்ளபடி அறிந்தவள் அவன் மனைவி. அவளுக்கு அவன் தான் முதலில் மாயினிகளைக் கண்டதையும், அவைகள் வருவன கூறியதையும், அவைகள் சொன்னவற்றுள் ஒன்று உடனே பலித்ததையும் பற்றி கடிதம் முன்னமேயே எழுதி இருந்தான். உடனே அவள் தன் கணவன் மனதில் இருந்த எண்ணங்களை ஊகித்து அறிந்து தன்னுல் இயன்றமட்டும் சொல்லி அவனைக்கொலைக்கு இசையும்படி தயார் செய்தாள்.

முதல்தரம் மிகுந்தபயத்தோடும் தன்மனைவியின் ஸஹாயத்தோடும் கொலைசெய்ததும், மேல் கொலைகள் செய்ய அவன் மனம் துணிந்து விட்டது. தன்பெண்சாதி ஸஹாயமின்றியே பாங்கோவை அவன் கொலைசெய்தான். தன் ஸ்வப்பிரயோஜனத்திற்காக எவ்விதக் கொடிய செயலையும் செய்யும் வன்மை மக்பெத்திற்கு வந்து விட்டது. முதலில் கொடிய செயல்களைச் செய்ய அஞ்சும்குணமுடைய உலகத்தவர் பழகப்பழக அதில் பயப்படாது இறங்கிவிடுவார்கள். மேலும் ஒரு கொடிய தொழிலைச்செய்து ஸம்பாதித்தவைகளை காக்கமேல்மேலும் கொடிய தொழில்களையே செய்யும்படியாக நேரிடும். இவ்விரு காரணங்களாலும் பாங்கோவைக்கொல்லுங்கால் மக்பெத் பயம் நீங்கிய கொடியவனுனன்

வேறு எண்ணங்களில்லாமலும் தம் நடத்தையின் சீர் அழிவைக்கவனியாமலும் கொடிய தொழில்களை செய்பவர்களுக்கு வரவரக் கொடிய தொழில்களிலேயே ஓர் விதருசி உண்டாகஅவர்கள்அவைகளால் தமக்கு பிரயோசனம் உண்டானுலும்ஸரி இல்லாவிட்டாலும் சரி அவைகளையே செய்து வருவார்கள். இதற்கேற்பவே ஓடிப்போன மக்டப்பினிடம்இருந்த விரோதத்தை ஒருகுற்றமும் அறியாத அவன் பெண்சாதிபிள்ளைகளிடம் அவன் காட்டி, அவர்களைக்கொல்வதால்தனக்கு ஒரு பிரயோசனமும் இல்லாதிருந்தபோதிலும் தன் கொடிய மனதை திருப்தி செய்ய அவர்களை இறக்கமின்றி வதைசெய்தான். இவ்வாறு கொடிய தொழில்களை ராவணுதிகளைப்போல தனக்குஒரும் பிரயோசனம் கருதாது ஆவலோடு செய்வதே கொடியவர்கள் அடையும் முடிவான நிலையாம். மக்பெத்திற்கு இக்கடைசி நிலையும் வந்துவிட்டது.

இதற்குமேல், பூமியில் படுத்திருக்கும் மனிதன் எவ்வாறு கீழேவிழ முடியாதோ, அவ்வாறு மனிதன் அதிகக் கொடியவனுக முடியாது. கடவுள் தன்

டனே வந்து அவனைத் திருத்தும் ஸமயம் இதுதான். மக்பெத்தின் பெண்சாதி தன்கணவனை இந்நிலைக்கு கொண்டுவந்த தனது முதற்செயலின் கொடுமையைப் பொருக்கமாட்டாது ஸ்வப்னநிதிகள் கண்டுபெரிதவித்து மக்பெத்தைத்தனிமையாக விட்டு இறந்தாள். அவன் மாயினிகள் வார்த்தையில் நம்பிச் செய்துவரும் கொடுமையின் கஷ்டத்தால், அவன் பிரஜைகள் உறவினர்கள், எல்லோரும் அவனைவிட்டு அவன் எதிரியாகிய டங்கன் பிள்ளை மால்கம்பக்கம் சேர்ந்து, அவனைத் தனிமையாகக் கஷ்டப்படும்படி செய்தனர். அவன் இவ்வாறு தனது பாப பலனை அனுபவித்து யுத்தகளத்தில் இறக்குங்கால் தன் பாபத்தொழில்களுக்கு மனம் நொந்து பாங்கோ தனக்கு முன்னர் உறைத்த புத்திமதியையே உள்ளபடி அறிந்து பலரறியச் சொல்லிக்கொண்டு சுத்தனுனன்.

இப்படியே பல ஜனங்களும் கெட்ட எண்ணங்களை ஆரம்பத்தில் தடுக்காமல் தக்க ஸமயங்களில் வளரவிட்டு, முதலில் கொடிய காரிங்களுக்குப் பயந்த நிலைமாறி அவைகளில் வரவர பயமின்றி இறங்கி முடிவில் கொடிய தொழில்களையே மிகுந்த ருசியுடன் செய்து அதோகதியை அடைகிறார்கள் என்பதும், அந்த ஸமயத்தில்கடவுள் தண்டனையால் அவர்கள் தமது ஆதிக்குற்றத்தை அறிந்து பின் நல்லவழிக்கு வருகிறார்கள் என்பதும் நாம் இக்கதையில் இருந்து அறிந்துகொள்ள வேண்டியது. மேலும் இவ்வாறு பாடுபட்டு நல்ல நிலைக்கு வருவது கொக்கின்தலையில் வெண்ணெய்வைத்துப் பிடிப்பதற்கு ஸமானமாகையால், நமக்குக் கெட்ட எண்ணங்கள் உண்டாகுங்கால் மூளையிலேயே அவைகளைத்தடுத்து நல்லொழுக்கத்தால் பாங்கோவைப்போல் மேல்நிலையை அடைய முயலவேண்டும் என்பதும் இக்கதையிலிருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டியது.

V மக்பெத்மனைவி:—இவளையே மக்பெத் கெட்டதற்கு முக்கிய காரணமாக எண்ணி எல்லோரும் பழிப்பது வழக்கம். இவள் எல்லாப் பெண்டிரையும் போன்ற குணமுடையவளே ஒழிய விசேஷ கொடுமை உடையவள் அல்லள். ஆதலால் இவளை இப்படி அநியாயமாகப் பழிப்பது அழகல்ல. மக்பெத் கெட்டதற்கு அவன் மனத்தளர்ச்சியே காரணம். அதனுல் தான் அவனுக்கு முதலில் தருணத்திற் கேற்ப கொலை செய்தல் நலம் என்ற எண்ணம் உண்டாயிற்று. அதை அவன் தன் பெண்சாதியிடம் குறிப்பாக முதலில் தெரிவித்தான். பின்பு அவளுக்கு கொலைசெய்வது நலமாகத் தோன்ற பெண்களுக்கு ஸாதாரணமாக உள்ள பிடிவாதகுணத்தை முன்னிட்டுக்கொண்டு அவனை அவ்வாறு செய்யும்படி தூண்டினுளே ஒழிய வேறில்லை.

மக்பெத் மனைவியினிடத்தில் ஸ்திரீகளின் குணங்கள் விசேஷமாக இருந்தன. தன் கணவன் எவ்விதத்திலாகிலும் மேன்மை அடைந்து வாழவேண்டும் என்பதே அவளுடைய எண்ணம். இந்த விஷயத்தில் அவள் தன் ஸுகத்தையும் கருதாது பாடுபடும் தன்மையள். எல்லா ஸ்திரீகளுக்கும் உள்ளது போல் அவளுக்கும் பிடிவாதம் உண்டு. தன்கணவன் மனதில் கொலைத்தொழில் செய்ய எண்ணமிருக்கின்றது என்று அவள் குறிப்பாக அறிந்ததும், அவளுக்குத்தன் கணவன் ஸுகப்பட அதுவே நல்லவழி எனத்தோன்றிவிட்டது. மேலும் அவள் எடுத்தகாரியத்தை முடிக்கும் தீரை. இவ்வாறு முதலில் உண்டான எண்ணம் கெட்டதாகப்போய் விட்டபடியால் அவளது குணங்கள் யாவும் கெட்டவைகளாகவே தோன்றுகின்றன. இம்மாதிரியான குணமுடைய மக்பெத்மனைவி தன் கணவனுக்குக் 'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை' என்பதுபோல கொலை செய்து ராஜ்யம் ஸம்பாதிக்கவும் ஆசை, கொலை செய்தால் பேர்கெட்டுப்போகுமே என்ற பயம் என்பதை நன்ருக அறிந்துகொண்டு, அவன் கொலைத் தொழிலை செய்ய இசைவதற்கு வேண்டிய தந்திரங்கள் செய்து அவனுக்கு ஸுகம் உண்டாக்க முயன்ருள். பாங்கோவைப்போல மக்பெத் திடமனத்தனுக இருந்திருந்தால் எப்படிப்பட்ட பெண்சாதியையும் இந்த ஸமயத்தில் அடக்கி ஆண்டிருப்பான். அவன் அவ்வாறு இல்லாமலிருந்ததால் தான் அவள் வார்த்தைக்கு இசைந்து அதோகதி அடைந்தான்.

பாங்கோவைப்போல மக்பெத் நல்ல சித்தமுடையவனுய் இருந்திருந்தால் அவனை நல்ல வழியில் செல்ல அந்த மனைவியே தூண்டி இருப்பாள். அவள் அவ்வளவு குணவிசேஷம் உடையவள். முதல் கோணல் முற்றும் கோணல் என்றபடி, அவள் மனதில் தன் கணவன் கொலைசெய்ய எண்ணுகிறுன் ஆகையால் நாம் அவனுக்கு வேண்டிய ஸஹாயம் செய்யவேண்டும் என்ற எண்ணம் உண்டாக எல்

லாம் கெடுதலாக முடிந்தது. தன் கணவனை ஸுக படுத்துவதாக எண்ணிக்கொண்டே ஐயோ பாவம்! அறியாமையால் அவனை அவள் அதோகதிக்குக் கொண்டுவந்து விட்டாள்.

இவளுக்கு ஸ்திரீகளுக்கு உரியமேன்மைக்குணம் உண்டு என்பது, தன் கணவன் பயந்து கொலைசெய்யாது எங்கே இராஜ்யத்தை இழந்து துக்கிக்கப் போகிறானோ என்ற கவலையால் அவள் டங்கனைக் கொல்லப்போன காலத்தில் அவன் முகம் தன் தகப்பன் முகம்போல இருப்பதைக் கண்டு திரும்பி வந்ததால் வெளியாகின்றது. இவளை நீலி கொலை பாதகி என்பது தகாது. தன் கணவனை ஸுகப் படுத்தவேண்டும் என்ற ஆவலால் அவள் இவ்வாறு கொடியவள் போலத் தோன்றும் படியாயிற்று என்பது இதுவரையிலும் எடுத்துக்காட்டிய முகாந்திரங்களால் எளிதில் விளங்கும். மேலும் முடிவில் அவள் ஸ்வப்பனுதிகள் கண்டு தத்தளித்து இறந்ததாலும், அவள் உள்ளபடிபாதகி அல்ல ஒரு நல்ல எண்ணத்தைப் பூர்த்திசெய்ய வேறொரு கொடிய தொழிலை அறியாமையால் செய்த துர்அதிர்ஷ்டக்காரி என்றும், சிலர் எளிதில் சொல்லிவிடுவதுபோல அவள் பெண்தன்மையே இல்லாத ராக்ஷஸி அல்லள் என்றும் தெரியவருகிறது. அவள் எவ்வளவுதான் நல்ல எண்ணத்தோடு இருந்தபோதிலும் கொடிய வழியில் பிரவேசித்து முதலில் தன் கணவனது அதோகதிக்குக் காரணமாக இருந்ததால் அவளும் முடிவில் கடவுள் தண்டனைக்கு ஆளாகிக் கஷ்டப்படவேண்டிவந்தது.

மக்பெத் மனைவி கெட்டுபோன மாதிரியிலிருந்து, நல்லதாக எண்ணி நாம் செய்யத்தொடங்கும் விஷயங்கள் ஸந்தர்ப்ப விசேஷங்களாலும் மார்க்கபேதங்களாலும் நாம் அறியாமலே நமது எண்ணத்திற்கு விரோதமாக முடிந்து நம்மை மீளாத்துயரத்திற்கு ஆளாக்கும் என்பதுபுலப்படும். ஆதலால் நமது நோக்கம் மாத்திரம் நல்லதாகஇருந்தால் போதாது மார்க்கமும் அவசியம் நல்லதாக இருக்கவேண்டும். அவ்வாறின்றி, நன்மையே எல்லாம் நன்மையாய் முடியும் என்பதைப் பின்பற்றி நாம் நடக்கும் நெறியைக் கவனியாது முடிவே சிறந்ததாக இருக்கவேண்டும் என்றுமாத்திரம் எண்ணிக்கொண்டு தொழில் நடத்துவோமாகில் மக்பெத்மனைவி கதிதான் நமக்கு என்பதை நன்றாக நாம் அறிந்துகொள்ளவேண்டும்.

# இயற்கை அற்புதங்கள்

## WONDERS IN NATURE



### VII. எரிநக்ஷத்திரங்களும் பொறிநக்ஷத்திரங்களும்

### METEORS AND SHOOTING STARS

சென்ற வருஷம் நவம்பர் மாதம் 15-ம் தேதி 9½-மணி ஸுமாருக்கு, அதிகப் பிரகாசத்துடன் ஓர் மின்னலைப்போன்ற வெளிச்சம் ஒன்று உண்டாயிற்று. அப்பொழுது நிலாக்காலமாக இருந்ததால் அநேகருக்கு அது தெரியவந்திராது. அதன் காரணத்தைச்சிலர் நேராகவே பார்த்திருக்கலாம். ஆகாயத்தில் மிகுந்த பிரகாசத்தோடு கூடிய ஓர் எரிநக்ஷத்திரமே இந்த வெளிச்சத்தை உண்டாக்கியது. இதுபோன்ற தோற்றங்கள் அடிக்கடி உண்டாவதில்லை. இது போன்ற அதிகப் பிரகாசமாயில்லாது ஸாதாரண பிரகாசத்தோடு ஆகாயபாணம்போன்ற வெளிச்சம் அடிக்கடி இருட்டான இரவில் நிர்மலமான ஆகாயத்தை நோக்கில் நமக்குப்புலப்படும்,

இதற்குப் பொறி நக்ஷத்திரம் என்று பெயர். அதிக தூரத்தில் இருப்பனவாயும் மின்மினிபோல ஆடும் ஜ்யோதியை உடையனவாயும் உள்ள நக்ஷத்திரங்களே இவ்வாறு எரிந்து பூமியைநோக்கி விழுகின்றன என்று நம்மவரும் மற்றை தேசங்களிலிருக்கும் ஸாதாரணஜனங்கள் எல்லோரும் எண்ணுகிறார்கள். நம்மவரில் இந்தஎண்ணம் புராணகதை முதலியன மூலமாக பலப்படுத்தப்படுகின்றது. நக்ஷத்திரங்கள் முதலிய எல்லாம் பிதிர்க்கள் பதவி என்றும், அவர்கள் புண்யாதிகள் க்ஷீணித்ததும் எறிந்து கீழே விழுகின்றனர் என்றும், அவர்கள் விழும்பொழுது பார்ப்பது பாபம் என்றும், அப்படிப் பார்த்துவிட்டால் அருகிலுள்ள ஓர் பச்சை மரத்தைப் பார்த்து கிருஷ்ண கிருஷ்ணாஎன்று சொல்லி அதைத்தீர்த்துக்கொள்ளவேண்டும் என்றும், அவைகள் விழுந்த நீர் நிலைகளிலிருந்து ஸ்திரீபுருஷர்கள் தண்ணீர் குடிப்பார்களாகில் அவர்களுக்கு, விழுந்த ஆத்மாவே பிள்ளையாகக் கூடிய சீக்கிரத்தில் பிறக்கும் என்றும், நம்மவர்கள் இன்னும் நம்புகிறார்கள். பின் வரும் பாகங்களில் எரிநக்ஷத்திரம் முதலியவைகளின் ஸ்வரூபாதிகள் இன்னவை என்பதை விசாரித்துப் பின்னர் இந்த நம்பிக்கையில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்பதை விளக்குவோம்.

சிற்சில ஸமயங்களில் அநேக பொறி நக்ஷத்திரங்கள் சேர்ந்தால் எவ்வளவு பிரகாசம் இருக்குமோ அவ்வளவு பிரகாச முடையதாக சென்ற நவம்பர் மாதம் உண்டானதுபோன்ற ஓர் அற்புதத் தோற்றம் காணப்படும் இம்மிகப் பெரிதானபொறி நக்ஷத்திரத்திற்கே எரிநக்ஷத்திரம் என்றும் இந்த எரி நக்ஷத்திரம் இரவில் பார்வைக்கு பெரிய நெருப்புப் பந்தம்போலக் காணப்படும். இது அதிவேகமாக ஓடும் திறமையுடையது. ஆகாயபாணத்தின் பின் காணப்படுவதுபோல பொறிகளாலாகி வால் இப்பந்தத்தின் பின் காணப்படும். எரிநக்ஷத்திரம் அணைந்தபின்பும் கூட இந்தப்பொறிகள் அணையாது சிற்சில ஸமயங்களில் கொஞ்சநாழிகை நேரம் நின்றுவிடும். இது நேராக ஓடுவதில்லை ; கோணலாகவே போகின்றது. இது போகும்பொழுதே வெடித்து தனது பாகங்களில் சிலவற்றை வழியில் சிதறிக் கொண்டேபோகின்றது. ஒவ்வொருதரம் சிதறும் பொழுதும் இது தனது மார்க்கத்திலிருந்து மாறிக் கொண்டே இருக்கும். இந்த எரி நக்ஷத்திரம் விழும் மார்க்கத்திற்கு அருகாமையில் ஒருவன் இருப்பானாயின் அவன் காதில் பெரிய உருமல் சப்தமும் அதன் இடை இடையே பட் பட் என்று வெடிக்கும் சப்தமும் படும். இது அணைந்து,பூமியில் கற்கள் இரும்புக் கட்டிகள் ஆகிய இவைகளாலாகிய பெரிய குண்டாகக் கீழேவிழும். இது ஆட்கள் தலையில் விழுமாயின் அவாகள் மூளைகலங்கி இருக்கவேண்டியது தான். இந்தத்தோற்றம் மத்தியான ஸமயத்தில் உண்டாகுமாயின் வெளிச்ச சம்பந்தமான தோற்றங்கள் ஒன்றும் காணப்படா சப்தம் முதலியனவும் புகையும் மாத்திரம்தான் இது உண்டானதற்குக் குறிகளாக ஏற்படும். சிற்சில ஸமயங்களில் பெரிய எரிநக்ஷத்திரங்கள் விழுங்கால்அவைகளின் சப்தம் 40அல்லது 50 மைல் வரையில் கேட்கலாம். ஓர் பெரிய எரிநக்ஷத்திரம் ஒன்று 1869-ம் வருஷம் நவம்பர் மாதம் 6-ம் தேதி இங்கிலாந்தில் தென்பட்டதாம், இது5 விநாடியில் 170மைல்தூரம் ஓடிற்றும். இதன்பின்னே தோன்றியபொறிகள் 50 மைல் நீளம்வரையில் பரவிஇருந்தனவாம், 4 மைல் அகலத்தையும் உடைத்தாயிருந்தனவாம். இவைஸுமார் 50 நிமிஷம் வரையில் தெரிந்து கொண்டிருந்தனவாம். இவ்வெரிநக்ஷத்திரங்களில் இருந்து கீழேவிழும் கட்டிகளில் சிலவற்றை பட்டணம் காட்சிச்சாலையில் நாம் இப்பொழுதும் காணலாம் அவைகளில் காந்தசக்தி காணப்படுகின்றது. இதனால் உலகத்தில் காந்தம் இருப்பதற்கு இவ்வெரிநக்ஷத்திரங்களும் காரணம் என்று சிலர் அபிப்பிராயப் படுகின்றனர்.

முற்கூறிய பொறிநக்ஷத்திரங்களுக்கும் எரிநக்ஷத்திரங்களுக்கும் உள்ள வித்யாஸத்தை எடுத்துக்காட்டுவோம். இரண்டும் எரிந்து ஆவியாகி மறைகின்றபோதிலும், பொறிநக்ஷத்திரங்கள் மிகச்சிறியவஸ்துக்கள், எரிநக்ஷத்திரங்களோ பெரியவஸ்துக்கள். முன்னவைகள் ஆகாயத்திலேயே புகையாகி பூமிவந்து சேருவதில்லை, பின்னவைகளோ பெரியகாந்தக்கட்டிகளாக பூமியில்வந்து விழுகின்றன. பின்னவைகளில் உண்டாகும் சப்தம் முதலியன முன்னவைகளில் இல்லை. முன்னவைகள் அடிக்கடி தோன்றுவன, பின்னவைகளோ அபூர்வத் தோற்றங்கள். ஆகவே இவைகளுள் உள்ளபேதம் வஸ்து பரிமாணத்தால் முக்கியமாக ஏற்பட்டனவே ஒழிய இவைதம்முள் அத்தியந்த பேதமே இல்லை. ஆதலால் தான் இவை இரண்டையும் சேர்த்து இங்கு எடுத்துக்கொண்டது.

இவைகளின் ஸ்வரூபம் என்ன, என்பதைச் சற்று விசாரிப்போம். இவைகள் ஓடும் வேகத்தைப் பார்த்தால் நம்கண்ணுக்குப் புலப்படும் முன்நமது பூமிமுத

லிய கிரஹங்கள் ஸூர்யனைச்சுற்றிப் போவதுபோல இவைகளும் ஸூர்யனை சுற்றிவந்து கொண்டிருந்த வஸ்துக்களாகத்தான் இருக்கவேண்டும் என்பதுநன்ருகத் தெரியவரும். இவைகள் அடிக்கடி விழுகின்றன. இவைகளை எண்ணிப் பார்த்ததில் நாள் ஒன்றுக்கு ஸுமார் 10,000,000 முதல் 20,000,000 வரையில் நமது பூமியின்மேல்விழுகின்றனஎன்று தெரியவருகிறது. இதை ஆலோசித்துப் பார்த்தால்இவ்வளவு வஸ்துக்கள் ஆகாயத்தில் மிதந்துகொண்டு ஸூர்யனைச் சுற்றக்காரணம்என்னஎன்றசங்கை பிறக்கும். இதை விளக்குவதற்கு ஓர் வண்டி ஓடுவதாக வைத்துக்கொள்ளுவோம். அதன் சக்கிரங்களில் உள்ள மண் முதலியன ஆகாயத்தில் சற்றுக் கிளம்பி கீழே விழுகின்றன. சக்கிரம் சுற்றும் வேகத்தால் அவை ஆகாயத்தில் கிளப்பப்படுகின்றன, பின்பு அவைகளின் வேகம் பூமியின் ஆகர்ஷணசக்தியால் குறைக்கப்பட அவைகள்முடிவில் கீழே விழுகின்றன. பூமியும்இச்சக்கரம் போலச் சுற்றுகின்றது. அதன்மேல் இருக்கும் நாம் எல்லோரும்தூக்கப்படாது ஏன் இருக்கிறோம்? பூமி சுற்றும் வேகம் அதிகமாக இல்லை ஆதலால் தான் நாம் அசையாதிருக்கிறோம். கணக்கிட்டதில் இப்பொழுது பூமி சுற்றுவதைப்போல 18 மடங்கு வேகமாக அதுசுற்றுமாயின் நாம் எல்லோரும் சக்கிரத்து புழுதிபோல வெளியில் எரியபட்டுத் தத்தளிக்க வேண்டியதுதான் என்று வெளியாகின்றது. இதே மாதிரியாக நாம் பூமியிலிருந்து உயரே எரியும் வஸ்துகள் பூமிக்குத் திரும்பி வாராது மேலேயே போய் கிரஹம்போல தொங்கவேண்டுமாயின் நாம் வஸ்துகளை விநாடிக்கு $7\frac{1}{3}$ மைலுக்குமேல் ஓடும்படியாக எரியவேண்டும். அப்பொழுதாதான் பூமியின் ஆகர்ஷண சக்தியிலிருந்து அந்த வஸ்து விடுபடும். ஆனால் மனிதரால் உண்டாக்கப்படும் பீரங்கிபோன்ற சக்தி வாயந்தயந்திரங்களால் விநாடிக்கு $\frac{1}{2}$ மைல் வேகத்திற்குமேல் உண்டாக்கமுடியாது. இப்படியிருப்பினும் பூமி உண்டான ஆதிகாலங்களில் பூமியில் உஷ்ணம் அதிகமாக விருந்ததென்றும் அதிலிருந்துஅநேகத்துண்டுகள்சிதறி ஓடினவென்றும், உஷ்ணாதிகத்தால் பூமியில்எரிமலைகள் அநேகம் தொழிற்பட்டன என்றும், அவைகளின் சக்தியால் விநாடிக்கு அநேகம் மைல் வேகத்தோடு பூமியிலிருந்து அநேகம் வஸ்துக்கள் சிதறி ஓடி ஸூர்யனைச் சுற்றப் புறப்பட்டன என்றும், அவைகளையே நமது பூமி இப்பொழுது காலக்கிரமத்தில் தன்னோடு பொறி நக்ஷத்திர எரிநக்ஷத்திர ரூபமாகச் சேர்த்துக்கொள்கின்றது என்றும் வான சாஸ்திரிகள் கூறுகின்றனர். இதுபோல சில வஸ்துக்கள் சந்திரன், சூரியன், செவ்வாய் முதலிய கிரஹங்கள் ஆகிய இவைகளிலிருந்து வெளியேறி முற் கூறிய தோற்றத்தை உண்டாக்கலாம் என்பது அவர்களுடைய கொள்கை. முக்கியமாக காந்த இரும்பு ஸம்பந்தமான எரிநக்ஷத்திரம் ஸூர்யன் நக்ஷத்திரங்கள் முதலியவைகளிலிருந்து வெளியேறிய வஸ்துக்களாதல் வேண்டும் என்பது அவர்கள் துணிபு. ஆதலால் தூரத்தில் உள்ள நக்ஷத்திரங்கள் இவ்வாறு எப்பொழுதும் விழுவனவல்ல. ஸூர்யன் அதன் கிரஹங்கள் முதலியவைகளிலிருந்த வஸ்துக்களே இவ்வாறு அடிக்கடி விழுகின்றன என்பது வெளியாகின்றது.

இவைகள் பூமியின் அருகில் வருங்கால் ஜ்யோதிர்மயமாக வருவானேன் என்ற கேள்வியை எடுத்துக் கொள்ளுவோம். கையோடு கை தேய்த்தால் உஷ்ணம் பிறக்கின்றது. ஓர் ஆணியை சுத்தியால் கொஞ்சநாழிகை அடித்துக்கொண்டேஇருந்தால் அதில் சூடு உண்டாகின்றது. சிக்கிமுக்கி கற்கள்இரண்டை ஒன்ருேடொன்று அடித்தால் அதில்ருந்து நெருப்பு பொறிகள் உண்டாகின்றன. காட்டில் மூங்கில்கள் ஒன்ருேடு ஒன்று உரைந்து காட்டுத்தீக்களை உண்டாக்குகின்றன. இதுபோல நம்மைச் சுற்றியிருக்கும் வாயுவிலும் வஸ்துக்கள் உரைந்தால் உஷ்ணம் உண்டாகின்றது. ஆனல் வாயு மிகுந்த அடர்த்தி குறைந்தவஸ்து வாகையால் ஸாதாரணமாகவஸ்துக்கள் உரைந்தால் அதில் உஷ்ணம் உண்டாவதில்லை அதிகவேகமாக வாயுவின் உள்ளாகவஸ்துக்கள் ஊடுருவிச்செல்லுமாகில் உஷ்ணமும் நெருப்பும் உண்டாக இடமுண்டு. ஆகாயத்தில் காணப்படும் எரிநக்ஷத்திரங்களோ பொறிநக்ஷத்திரங்களோ விநாடிக்கு 7 அல்லது 8 மைல் முதல் 34 மைல்வரை அதிகவேகமாக ஓடுவதால் வாயுவில் அவைகள் அதிகமாக உரைய மூங்கில்காட்டில் நெருப்புப்ப பற்றிக்கொள்வதுபோல நெருப்புப் பற்றி ஜ்யோதிர்மயமாக அவைகள் பிரகாசித்து சீக்கிரத்தில் உருவிழந்து அணைகின்றன. ஆகவே இவைகள் வாயுவுள் புகும் வேகமே இவைகளது பிரகாசத்திற்குக் காரணம். இவைகள் இவ்வளவு வேகமாக ஓடாவிடில் ஜ்யோதியாகி எளிதில் நஷ்டமாகிப் போக மாட்டா. எரிநக்ஷத்திரங்களில் நஷ்டமானது போகப் பெரிய குண்டுகள் கீழே வந்துவிழவேண்டுமானல் அவைகள் ஆதியில் நமது வாயுகோளத்தில்

புகுங்கால் எவ்வளவு பெரிய வஸ்துக்களாக இருந்திருக்கவேண்டும்? அவ்வளவு பெரிய வஸ்துவானது ஆகாயத்திலிருந்து வாயுவால் தடுக்கப்படாது பூமியில் விழுமாயின் எவ்வளவு சேதத்திற்கும் காரணமாகும்? ஆகவே நமது வாயுஎவ்வளவு அடர்த்தியற்ற வஸ்துவாயிருந்தபோதிலும் எரிநக்ஷத்திரம் முதலியனபோல நமக்கு ஆபத்து விளைக்கும்படியான அதிவேகமாக வரும் பெரியகுண்டுகளைத் தடுத்து வேகத்தைக் குறைத்து நமக்குபெரிய உதவியைப் புரிகின்றது.

எரிநக்ஷத்திரங்கள் தனித்தனியாய் அபூர்வமாக சிற்சில ஸமயங்களில் மிகுந்த பிரகாசத்தோடு தோற்றுவது போல, பொறிநக்ஷத்திரங்களும் ஸாதாரண ஸமயங்களில் தனித்தனியாகத் தோன்றுவதுபோல் தோன்றாது கூட்டங் கூட்டமாகத்தோற்றும். இதற்கே நக்ஷத்ரமழை என்று பெயர். இதில் எரிநக்ஷத்திரங்களும் பொறி நக்ஷத்திரங்களும் கலந்து வரலாம். இம்மழைத்தோற்றத்தை நன்கு விவரிப்போம். நிர்மலமான ஆகாயத்தோடு கூடிய இரவில் இவைகள் திடீரென்று ஆயிரம் பதினாயிரக்கணக்காக இரண்டொருமணி நேரம் வருஷித்துவிடும். இவைகளை நோக்கில் ஆகாயமத்தியிலிருந்து பொதை பாணம் கிளம்புவதுபோல இருக்கும். இவைகள் கிளம்பி வரும்படியானஇடமாகியஉற்பத்திஸ்தானம் நக்ஷத்திரங்களைப்போல அந்த நாழிகை முழுவதும் நகர்ந்துகொண்டே இருக்கும். அதாவது நக்ஷத்திரங்கள் மத்தியில் இவைகளின் உற்பத்திஸ்தானம் ஸ்திரமாக இருக்கும். ஆகவே இவைகளின்உற்பத்திஸ்தானத்தை நக்ஷத்திராதிகளை குறிப்பிடுவது போலக் குறிப்பிடலாம். இவ்வாறு இவைகள் ஓர்ஸ்தானத்திலிருந்து கிளம்புவதாகத்தோற்றுவானேன்? இவைகள் ஒரே திக்கை நோக்கிப்போய்க்கொண்டிருப்பனவாயினும், ஒரே ஒழுங்காக இருக்கும் இருப்புப்பாதை கம்பிகள் இரண்டும் தூரத்தில் சேர்வது போன்றத் தோற்றத்தை உடைத்தாயிருப்பதுபோல் இவைகளும் ஆகாயத்தில் ஓர்ஸ்தானத்திலிருந்து கிளம்புவதாகத்தோற்றுகின்றன. ஆகவே உற்பத்திஸ்தானம் கானல்நீர் முதலியன போன்ற தோற்றமே ஒழிய உண்மையில் இருப்பதல்ல. இவ்வாறு கிளம்பும் மழை ஒன்றை சித்திரத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இம்மாதிரியான நக்ஷத்திர மழையில் அதிகஎரி நக்ஷத்திரங்கள் இல்லையாயின் இவைகளால் யாதொரு அபாயமும் இல்லை.

நக்ஷத்திர மழைகளின் உற்பத்தி ஸ்தானத்திற்குத் தக்கபடி அவைகளுக்குபெயர்கள்இடப்பட்டிருக்கின்றன. அவையாவன ஸிம்ராசிமழை, ஆண்டிரோமீடாமழை, பேர்ஸியூஸ் மழை என்பவைகளே, இவைகளில் ஸிம்மராசி மழை 33 வருஷத்திற்கு ஒருதரம் ஸிம்மராசியிலிருந்து நவம்பர்மாதம் 13 முதல் 15-ம் தேதிக்குள் வெளிவரும். இரண்டாவது, ஆண்டிரோமீடா நக்ஷத்திரத்திலிருந்து 13 வருஷத்திற்கு ஒருதரம் நவம்பர் மாதம் 27 அல்லது 28-ம் தேதிகளில் வெளிவரும். மூன்றாவது மழை வருஷம்தோறும் ஜூன்மாதம் 23-ம் தேதி முதல் ஆகஸ்ட் 7-ம் தேதிக்குள் எப்பொழுதாவது வெளிவரும். இவைகளே முக்கியமாக உள்ள ஒழுங்கான நக்ஷத்திர மழைகள்.

இம்மாதிரி மழைகள் உண்டாகக்காரணம் என்ன என்ற கேள்வி உண்டாகும். எரிநக்ஷத்திராதிகளாகிவிடும் வஸ்துக்கள் கூட்டங் கூட்டமாக ஸூர்யனைச்சுற்றி த்விமத்ய சக்கிரத்தில் ஓடுகின்றன என்று வானசாஸ்திரிகள்கண்டுபிடித்திருக்கின்றனர். அவைகளின் மார்க்கங்கள் பூமியின் மார்க்கத்தை ஸந்திக்கின்றன என்பதும் தெரியவருகிறது. இவைகளும் தமது மார்க்கத்தில் ஒழுங்காக சுற்றிவந்து கொண்டிருக்கின்றமையால் இவைகளது கதிகளின் வேகத்திற்குத் தக்கபடி சீக்கிரத்திலோ அல்லது மெதுவாகவோ பூமியை ஸந்திக்கவேண்டியதுதான். இம்மாதிரி ஸந்திக்கும் காலங்கள் சிலகாலங்களுக்கு ஒவ்வொருதரம் ஒழுங்காக வரவேண்டியது நியாயம் தானே. ஆகையால் அவ்வாறு பூமியை இவ்வஸ்துக்களும் ஸந்திக்குங்கால் அவைகள் பூமியை விடமிகச் சிறியவையாக இருப்பவையாகையால் பூமியால் இழுக்கப்பட்டு நமது வாயுவுள் வேகமாகவும் அநேகக் கணக்காவும் புக நக்ஷத்திர மழை உண்டாகின்

றது. இதில் ஆண்டிரோமீடா மழைக்கு ஓர் விசேஷம் உண்டு. இந்தமழைக்குறிய வஸ்துக்கள் ஓடும் கதியும் நஷ்டமான பயிலாவால் நக்ஷத்திரத்தின் கதியும் ஒன்று என வானசாஸ்திரிகள் கண்டறிந்திருக்கின்றனர். ஆகவே இரண்டாகப்பிரிந்து தோன்றிய அந்த வால் நக்ஷத்திரம் சிதறிப்போய் இருக்க வேண்டும் என்றும், அதன் பாகங்கள் இந்த நக்ஷத்திரமழைகாலத்தில் பூமியில் உதிரவேண்டும் என்றும் அவர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். ஆதலால் இந்த மழைக்கு பயிலாநக்ஷத்திரமழை என்ற வேறொரு பெயரும் உண்டு.

இம்மாதிரி ஆண்டிரொமீடாமழைக்கும் பயிலா வால்நக்ஷத்திரத்திற்கும் உள்ள ஸம்பந்தம் வெளிவந்ததும், மற்றைய மழைகளுக்கும் வால்நக்ஷத்திரங்களுக்கும் கொஞ்சம் ஸம்பந்தம் இருப்பதாகத் தெரியவந்தது. இதனாலே சிலர் எறிநக்ஷத்திர வஸ்துக்கள் கூட்டத்தில் அடர்த்தியான இடத்திற்கு வால் நக்ஷத்திரம் என்று பெயர் என்பதாக அபிப்பிராயப்பட்டனர். முன்னர் வால்நக்ஷத்திர விஷயமாகக் கூறியுள்ள விஷயங்களிலிருந்து அவைகளைப் போன்ற வஸ்துக்கள் ஸூர்யனது சக்தியால் வர வர சிதரிப் போகவேண்டியதுதான் என்பது ஒருவாறு தெரிந்திருக்கலாம். வால் இல்லாது இருக்கும் சில வால் நக்ஷத்திரங்களே இதற்குத் தகுந்த ஆதாரம். ஆகையால் வால் நக்ஷத்திரத்தின் சிதைந்த பாகங்களே பூமி அருகாமையில் வருங்கால் நக்ஷத்திர மழைகளாக மாறுகின்றன என்று சொல்லலாம். பிடிபட்ட வால் நக்ஷத்திரம் நாளாக நாளாக அதிகமாகச் சிதறிப்போகவேண்டியதுதான். ஆதலால் எல்லா நக்ஷத்திர மழைகளும் வால் நக்ஷத்திரங்களாலே மாத்திரம் தான் உண்டாகினறன என்று உறுதியாக நம்மால் சொல்ல முடியாதபோதிலும் நக்ஷத்திர மழைகளுக்கும் வால் நக்ஷத்திரங்களுக்கும் நெருங்கின ஸம்பந்தம் உண்டு என்பதற்கு ஸந்தேகமில்லை. முற்கூறிய மூன்று மழைகளுள் பெர்ஸியூஸ் மழைக்குறிய வஸ்துக்களே வெகுநாளாக நமது கிரஹக் கூட்டங்களுள் இருப்பன என்றும், மற்றைய இரண்டின் வஸ்துக்களும் பின்னிட்டு வந்தவைகள் என்றும் தெரிய வருகிறது.

இப்பொழுது கூறியவைகளிலிருந்து எறிநக்ஷத்திரங்களும்பொறிநக்ஷத்திரங்களும் பெரும்பாலும் பூமிக்கு வெகுதூரத்தில் மின்மினிபோல் விளங்கும்நக்ஷத்திரங்கள் அல்லவென்றும், பூமியின் அருகாமையிலுள்ள வஸ்துக்களின் கூட்டங்களால் இவைகள் உண்டாகின்றன என்றும் விளங்கும். இவைகளுக்கு வால் நக்ஷத்திரங்களுக்கும் நெருங்கின ஸம்பந்தம் இருப்பதால் இவைகளை அவைகளின் பின் வைக்கப்பட்டது. இவைகளைப்பார்த்தகண்களால் உடனே பச்சைமரங்களைப் பார்க்கவேண்டும் என்பது 'சாஸ்திராயச ஸ்ஹாயச' என்ற வாக்கியத்திற் கேற்ப இந்த பிரகாசத்தைக்கண்ட கண் ஸரியான நிலைக்கு வருவதற்கு இவ்வுஷ்ணத்திற்கு விரோதமாகிய பசுமைநிறமுடைய மரங்களைப்பார்க்கவேண்டுவது அவசியம் என்று தோற்றுகின்றது. இவைகள் விழுந்த ஜலத்தைக்குடிப்போர்களுக்கு ஸந்ததி உண்டாகும் என்பது நகைக்கத்தக்க நம்பிக்கையாக இருந்தபோதிலும், இவைகளில் காந்தம், இரும்புமுதலியவஸ்துக்கள் இருக்கின்றன என்பதையும், இவைகள் உஷ்ணமாக விழுகின்றன என்பதையும் நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளுவோமாயின், இவைகள் விழுந்த ஜலத்தை குடிப்பவருக்கும் அந்த ஜலத்தில் ஸ்நானம் செய்பவருக்கும் தேஹ ஆரோக்யம் உண்டாக, அதன் மூலமாக ஒருவேளை அவர்களுக்கு ஸந்ததி உண்டானாலும் உண்டாகலாம் என்பதை நாம் ஏன் மறுக்கவேண்டும். ஆதலால் நாம் இந்த விஷயத்தைத்தொடங்குங்கால் ஆதியில் எடுத்துக்காட்டிய விஷயங்கள் முற்றிலும் மூடநம்பிக்கையல்ல, இவ்வற்புதத் தோற்றத்திற்கு அங்கு கூறியுள்ள அற்புத சக்தியும் இருக்கலாம் என்பது ஒருவாறு வெளியாகும்.

---

செய்தொழிலெல்லாம் கடமை:—இது ஒன்றேதான் நாம் இறங்கும் ஒவ்வொரு காரியத்திலும் நமக்குச் சித்தாந்தமாயிருக்கவேண்டும். ஏதோ ஆசையிருக்கிறது செய்கின்றேன், எல்லாரும் என்னைப்புகழ்வார்கள் என்று செய்கின்றேன், செய்யாவிடில் தண்டனைக்குள்ளாவேன் ஆகையால் செய்கிறேன், என்று சொல்லிக் கொண்டு ஒரு காரியத்தைச் செய்வதை விட, இது ஈசுரிட்ட கட்டளை, இத்தொழில் செய்ய நான் கடமைப்பட்டிருக்கின்றேன், என்று சொல்லிச்செய்வது மிகவும் கௌரவ மல்லவா? அதேதான் ஈசுவர சம்மதமும். எவ்வழியினும் நம்மை மேன்மைப் படுத்தி எக்கருமத்திற்கும் ஒருவித தருமத்தை உண்டுபண்ணிவைக்க நாம் செய்யவேண்டிய தொழில்களை யெல்லாம் கடமை என்று செய்வது பெருங்காரணமாகும்.

# உழவு நூல்
## AGRICULTURE
(முன் தொடர்ச்சி)

வடகிழக்குப்பருவக்காற்று மழை யென்பது நவம்பர் மாதத்திலேதான் ஒருவாறு நின்று பெய்ய ஆரம்பிக்கிறது. ஜனவரி, பிப்பிரவரி மாதங்களோடு நின்றுவிடுகின்றது. சிற்சிலகாலங்களில் இராஜதானியின் பல பாகங்களில் மிகுந்தமழை சொரிகின்றது. வருஷ ஆரம்பமுதல் மூன்றுமாதவரையிலும்இப்பருவக்காற்றுகளினால் சமயாசமயங்களில் மழை தூறுகின்றது. இராஜதானியின் பெரும்பாகத்துக்கும் தென்மேற்குப் பருவக்காற்றுகளின் ஏராளமான மழை கிடைக்கிறது. வடக்கிழக்குப் பருவக்காற்றால் கீழ்க்கரை ஜில்லாக்களில் மாத்திரமே வேண்டியமழை பெய்கிறது. மேற்குக்கரை நாடுகளில் தென்மேற்குப் பருவக்காற்றானது, இராஜதானியின் மற்றெந்த பாகங்களில் பெய்கிற அளவில் இரண்டு மடங்கு அதிகமாய், பின்வரும் இரண்டு ஜில்லாக்களின் பெரும்பாகங்களில் பெய்கிறது. தென்கன்னடத்திலும் வியனாட் வடபாகத்திலும் வருஷத்தில் 125-சுழிக்கு மேலேயும் பெய்கிறது. மலைத்தொடர்ச்சிக்குச் சமீபத்திலிருக்கும் இடங்களில்ஏறக்குறைய 180-சுழி அளவு மழை கொட்டுகிறது. மலையாளம் ஜில்லாவின் மத்தியபாகங்களில் 117-சுழி மழையும், அதற்குச் சற்று தெற்கேயுள்ள இடங்களில் 108-சுழியுமாகப் பெய்கிறது. பாலக்காட்டில் 75-சுழி மழைதான் பெய்கிறது.

இராஜதானியைச் சேர்ந்த மேற்குறித்த பாகங்களில் தென்மேற்குப்பருவக்காற்றுகள் வீசி மழையைக் கொட்டுகின்றன. குறித்த பருவகாலத்திலேயே ஏறக்குறைய மழை முழுவதையும் சொரிந்துவிடுகின்றன. மற்றும் சில இடங்களில் வருடமழையின் அளவு 50-சுழிக்குமேலே யாகும். உதாரணமாக, விசாகப்பட்டணத்திலுள்ள ஜேப்பூரில் வருடத்தில் 67-சுழி மழைபெய்கிறது. அதே அளவு மழை விசாகப்பட்டணம் ஜில்லாவின் பெரும்பாகத்துக்கு நேரேயிருக்கும் மலைத்தொடர்ச்சி இடங்களிலும் பெய்கிறது. பழனிமலை நாடுகளில் 69-சுழியும் சேர்வராய் மலைப் பிரதேசங்களில் 63-சுழியும் பெய்கிறது. நீலகிரி மலையின் கீழ்ச்சாரலிலுள்ள இடங்களில் முக்கியமாக வடகிழக்குப்பருவக்காற்றால்50-முதல் 55-சுழிமழைகிடைக்கிறது.மேற்குறித்த நாடுகள் தவிர சென்னைக்கு 30-மைலிலிருந்து செங்கல்பட்டு, தென்னார்க்காடு, தஞ்சாவூர் ஜில்லாக்கள் தொடர்ச்சியாகச்செல்லும்ஜில்லாக்களில் வருடமழை 50 சுழியாகும். தென்மேற்குப் பருவக்காற்று மழையையே மிகுதியும் பெறுகிற விசாகப்பட்டணம் ஏஜென்ஸிநாடுகளைத்தவிர, (Agency Tracts) மேலேகாட்டிய ஜில்லாக்களில் பெய்கிற மழையில் $\frac{1}{3}$ முதல் $\frac{2}{3}$ பாகம்வரை வடகிழக்குக் காற்றுகளிலிருந்தேகிடைக்கிறது.கீழ்க்கரையோர நாடுகளில் வருடமழையின் அளவில் $\frac{2}{3}$பாகம் மழை வடகிழக்குக்காற்று (N. E. Monsoon.) களே கொணர்கின்றன. இந்தக் கரையோர நாடுகளுக்குமேற்கேயுள்ளநாட்டில்அதே நீளத்துக்கு எட்டியிருக்கும் நாடுகளில் சுமார் 45-சுழிமழை பெய்கிறது. இம்மழையில் பாதிக்குமேலே வடகிழக்குப் பருவக்காற்றாலேயே கிடைக்கிறது.

மேலேகுறித்த நாடுகள் தவிர, வருடம் 40-சுழி மழை பெறுகிற நாடுகள் இராஜதானியில் இரண்டு மாத்திரமேயுள. அவையாவன:—கோதாவரிக் கழிவிகத்திற்கு (Delta) வடபாகமும், விசாகபட்டணத்துக்குத் தெற்கேயுள்ள மலைநாடுகளும், கஞ்சம் ஜில்லா முழுதுமேயாம். அவ்விடங்களில் வருஷத்தில் 5 -சுழிமுதல் 49-சுழிவரை பெய்கிறது.

பிற [illegible] றித்த இடங்களில் பெய்கிற மழையில் பாதிக்கு மேலேயும் தென்மேற்குப் பருவக்காற்றினால் (S. W. Monsoons)கிடைப்பது இவ்விதமாகக்குறித்த சில இடங்களில் 40-சுழி மழையும் பொதுவாய் 30-சுழி மழையும் பெய்கிறது. மலையாளம், தென்கன்னடம்போன்ற ஜில்லாக்களில் 120-சுழி மழை கொட்டுகிறது. மற்றும் அநேக பாகங்களில் 60-சுழி மழை பெய்கிறது. கோயம்புத்தூர் ஜில்லாவைச்சேர்ந்த பொள்ளாச்சி தாலுகாவில் வருடமழை அளவு 30 சுழியே. அதில் $\frac{1}{3}$ பாகம் அக்டோபர், நவம்பர் மாதங்களிலும் மீதம் ஏப்பிரல் செப்டம்பர் மாதங்களிலும் பெய்கிறது. பாலக்காட்டு மலைப் பிளப்பை யொட்டியுள்ள கிழக்கு நாடுகளில் சொற்ப மழைதான் பெய்கிறது. அவ்விடங்களாவன:—கோயம்பத்தூர் ஜில்லாவில் பெரும்பாகமும், பல்லாடம், தாராபுரம், உடுமலைப்பேட்டை, பழனி, திண்டுக்கல்லில் சில பாகங்கள், கரூர்த்தாலூகாவுமே. இவ்விடங்களில் வருடமழையளவு 20-சுழியே. இதில் பாதிக்குமேலே வடகிழக்குப் பருவக்காற்றினால் கிடைப்பது.

பெல்லாரி, அனந்தப்பூர் ஜில்லாக்களிற்றான் இராஜதானி முழுவதிலும் அதிக வறண்ட பாகமிருக்

கிறது. அந்த ஜில்லாக்களில் 21-சுழிக்கு மேலேபோகிறதில்லை.

பெல்லாரிப்பட்டணத்தில் 18.6-சுழி மழைதான் பெய்கிறது. மழை அதிகமில்லாமல் வறண்டஇடங்களாவன:—ஹாஸ்பேட் முழுவதும், பெல்லாரி, அள்ளூர், ராஜதுருக்கம், குத்தி, அனந்தப்பூர், தர்மவரம் முதலியன—இவற்றையொட்டி பட்டிகொண்டாவும், குடிவேண்டிலாவும், ஜம்மல் மடகுவும், கோயில்குண்ட்லா தாலுகாவும் இருக்கின்றன. கோயில்குண்ட்லாவில் 23-அல்லது 24-சுழி மழை பெய்கிறது. மிகவும்வறண்டஇந்தஇடங்களில் வடகிழக்குப் பருவக்காற்றினின்றும் 6-அல்லது 7-சுழிமாத்திரம் பெய்கிறது. மற்றக் கோடைக்காலத்தில் சுமார் 2-சுழி மழைபெய்யும். விடுபட்ட நாடாகிய கடப்பை, கர்நூல், பெல்லாரி, அநந்தப்பூர் ஜில்லாக்கள் பெரும்பாலும் தென்மேற்குக் காற்றினுற்றான் மழை பெறுகின்றன. கர்நூல், கடப்பை, கிருஷ்ணு ஜில்லாவின் தென்பாகம் முதலிய இடங்களில் 25-முதல் 32-சுழிவரை மழை பெய்கின்றது. பெரும்பாலும் தென்மேற்குப் பருவக்காற்றினின்றே இவைகள் மழையைப் பெறுகின்றன.

இராயதுருக்கம், தர்மபுரங்களைச் சுற்றியுள்ள பெல்லாரி தாலுக்காவில் 20-சுழிக்கும் குறைவு, மிகவும் சொற்பமழை.

பெல்லாரியின் பெரும்பாகத்திலும், தாடபத்திரி, கர்நூல், கடப்பை, அனந்தப்பூர், திருநெல்வேலியின் ஒருபாகத்திலும் 25-சுழிக்கும் குறைவு. சாந்தூரில் 40-சுழி மழை. திருநெல்வேலி, மதுரை, கடப்பை, கர்நூல், நெல்லூர் ஜில்லாக்களின் சிலபாகங்களில் 30-சுழி மழைக்கும் குறைவு; கோடைக்காலத்தில், குத்தாலம், கொடைக்கானல், சேர்வராயமலை, நீலகிரியில் சில பாகங்களிலும் 5-சுழிக்குமேல் பெய்கிறது. பல்லாரி கடப்பை கர்நூல் ஜில்லாக்களில் 5-சுழிக்கும் குறைவு.

தென்மேற்குப் பருவக்காற்றுமழை:—தென்கன்னடம், வியனுடு, மலையாளம், ஜெயப்பூர் இந்த இடங்களில்100-சுழிமழைக்குஅதிகமாகவும்; கஞ்சம், விசாகப்பட்டணத்தில் சில பாகங்களிலும், பல்லாரி, சேர்வராய்மலை, நீலகிரி, கொடைக்கானல் இவ்விடங்களில் 50-சுழி 60-சுழி மழைக்கு மேலேயும், நெல்லூர், கர்நூல், கடப்பை, தஞ்சாவூர், சேலம், தென்னுர்க்காடு இச்சில்லாக்களில் 50-சுழி மழைக்குக் குறைச்சலாகவும், திருநெல்வேலி, தஞ்சாவூர், கோயம்புத்தூர், மதுரை—ஜில்லாக்களின் சில பாகங்களில் மேற்குறித்தவாறு 50-சுழிக்குக் குறைச்சலாகவுமே பெய்கிறது.

வடகிழக்குப் பருவக் காற்றுமழை:—சென்னையிலிருந்து கோடிக்கரைமுனை வரையிலுள்ள 70-மைல் தூரத்துக்கு 25-சுழி மழைக்கு அதிகம்பெய்கிறது. விசாகப்பட்டணம், கோதாவரி, கிருஷ்ணு, நெல்லூர், செங்கல்பட்டு, தென்னுர்க்காடு, மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களின் சிலபாகங்களில் 20, சுழிக்குக் குறைச்சலாகப் பெய்கிறது. கஞ்சம், விசாகப்பட்டணம், கோதாவரி, கிருஷ்ணு, சேலம்-கோயம்புத்தூர் இவ்விடங்களில் 15-சுழிக்குக் குறைச்சலாகவேபெய்கிறது.

கோடைக்காலத்தில் பெல்லாரி, நெல்லூர்ஜில்லாக்களின் பெரும்பாகத்திலும், கிருஷ்ணு, கடப்பையின் ஒருபாகத்திலும் ஏறக்குறைய மழையே கிடையாது என்றுசொல்லலாம்.

இடங்களுக்குத் தக்கபடியும் சீதோஷ்ண நிலையை உத்தேசித்தும் பிரித்திருக்கும் இராஜதானியின் பகுப்புகள்:—

வடசர்க்கார். கஞ்சம், விசாகப்பட்டணம், கோதாவரி, கிருஷ்ணு, குண்டூர்.

விடுபட்டநாடுகள். கர்நூல், பல்லாரி, அனந்தப்பூர் கடப்பை.

கர்னுடகம். நெல்லூர் செங்கல்பட்டு, தென்னுர்க்காடு.

தென்கிழக்கு ஜில்லாக்கள்:—தஞ்சாவூர், மதுரை. திருநெல்வேலி.

மத்திய ஜில்லாக்கள். வடஆர்க்காடு,. சேலம், கோயம்புத்தூர், திருச்சினுப்பள்ளி.

மேற்குக்கரைநாடு மலையாளம் தென்கன்னடம்.

நீலகிரி தனியான பகுப்பாகும்

### நிலவகை

நிலத்தின் தன்மையை நன்ருய் அறிவதற்கு சாஸ்திரத்தின் உதவிஇன்றியமையாதது. செடி விருக்ஷங்கள் வேரூன்றி வளர்வதற்கு இடமாயிருப்பதே நிலம். பூமிமட்டற்குச் சற்று கீழே மங்கலாய்த் தோற்றும் நிலமே மிகுந்த செழிப்பைத் தரத்தக்கது. இந்நில மட்டத்துக்கும் கீழேயிருக்கும் நிலத்தை கீழ்மண் அல்லது உள்மண் என்று சொல்லுகிருர்கள்.

*By a Specialist.*

## சுகாதாரவிளக்கம்

### HYGIENE

(பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது)

ஏழாவது அத்தியாயம்

தேகவியாயாமம்

PHYSICAL EXERCISE

(முன் தொடர்ச்சி)

89. வியாயாமம். — பொது —வியாயாமம் என்ற பதத்திற்கு நமது தேகத்தின் ஒவ்வொரு அவயவமும் அதன் தொழிலைச் செய்வது என்று அருத்தம். நமது குடலின் வியாயாமம் என்னவெனில் நாம் உட்கொள்ளும் ஆகாரத்தைச் சீரணம்செய்து கொள்ளுவது. அவ்வாறே நாம் ஒவ்வொரு உறுப்பையும் பற்றிக்கவனித்தால் அது தன்தொழிலைச் செய்வது அதன்தன் வியாயாமம்.

90. மாமிசபேசிகள். Muscles. நமது தேகத்துக்குள் மாமிச பேசிகள் என்று சொல்லப்படுகின்ற சில அம்சங்களிருக்கின்றன. நமது தேகத்தின் நிறை 100 பவுன்கள் என்றால் அதில் 40 பவுன்கள் மாமிசபேசிகள். இம்மாமிச பேசிகளாற்றான் நாம் நடப்பது முதலான சகலமும் பிரதானமான எல்லா விதமான காரியங்களும் செய்கின்றோம். இவ்வாறு தேகத்தின் 100-ல் 40 பங்காய் அமைக்கப்பட்டிருக்கும் மாமிச பேசிகள் இருவகைப்படும்:—(I) இச்சா பூர்வ மாமிசபேசிகள் (2) ஸ்வேச்சா மாமிசபேசிகள்

91 இச்சாபூர்வ மாமிசபேசிகள்.—Voluntary muscles. நாம் செய்யவேண்டும் என்று நினைக்கின்ற ஒவ்வொரு காரியத்தையும் (அதாவது பேசுதல், நடத்தல், கையசைத்தல் முதலியன) எண்ணின பிரகாரம் நாம் எண்ணினவுடன் அதற்கென்று அமைத்திருக்கும் மாமிச பேசிகள் அத்தொழிலைச்செய்து நமது நினைவைப் பூர்த்தி செய்துவைக்கும். இக்காரணத்தால் இவைகளை இச்சாபூர்வ மாமிசபேசிகள் அதாவது நமது கருத்துக்கிசைந்தபடி நாம் செய்ய வேண்டியதை முடித்துக்கொடுக்கும் மாமிச பேசிகள் என்கின்றார்கள்.

92. ஸ்வேச்சாமாமிச பேசிகள்.—நாம் கண்ணால் காணும் தொழில்களின்றி வேறு சிலதொழில்கள் நமது சரீரத்துக்குள் நடந்துகொண்டிருக்கின்றன. நாம் நாள்தோறும் புசிக்கின்றோம் அப்போசனம் நமது, தொண்டைக்குக் கீழேயிறங்கிய பிறகு அது எவ்விதமாகின்ற தென்பதை நாம் சாஸ்திர மூலமாய் அறிந்துகொண்டிருக்கின்றோமே யல்லாமல்வேறு மூலமாய் தெரிந்து கொள்ளக் கூடுவதில்லை. இவ்வாறு நம்முடைய குடலிலும் இருதயத்திலும் சுவாசாசயத்திலும் இன்னும் மற்ற விடங்களிலும் பலவிதகருவிகள் விநாடிதோறும் அதன்தன்தொழில்களை செய்கின்றன. இத்தொழில்களை நாம் நிறுத்த முயன்றால் நம்மால் நிறுத்த முடியாது. இவ்வித மாமிச பேசிகளைத்தான் ஸ்வேச்சா மாமிச பேசிகள் (involuntary muscles) என்பார்கள். அவைகள் நம்முடைய உயிருக்கு ஆதாரமான பல காரியங்களை வெகு ஜாக்கிரதையாக இடைவிடாது செய்துவருவதால் அவைகளை நமது மனதின் அதிகாரத்துக் குள்ளாக்காமல் ஈசுவரன் அவைகளுக்கு சுயாதிகாரம் கொடுத்திருக்கின்றார். வியாயாமம் என்பதை அறிய மாமிச பேசிகளைப்பற்றிய ஞானம் நமக்கு அவசியம் வேண்டுமாகையால் அவைகளைப்பற்றி நாமிங்கு விவரித்துச் சொன்னோம்.

93 மாமிச பேசிகளின் அமைப்பு.—நாம் ஒவ்வொரு மாமிச பேசியையும் பரிசோதித்து பார்ப்போமேயானால் அது அநேகம் கட்டுகளால் அமைக்கப்பட்டு ஒவ்வொரு கட்டிலும் நூற்றுக் கணக்காக சிறுதசை நார்கள் போன்ற நரம்புகள் பொருந்தியதாய்க் காணப்படும். அத்தசை பொருந்திய நார்க்கற்றைகளை கொஞ்சமாகஒரு மாமிசப்பை மூடியிருப்பதுபோல மூடியிருக்கும். அப்பை சில அவயவங்களின் மேல் அமைக்கப்பட்டதாகக் காணப்படும். அவ்வவயவம் வேலை செய்வதெல்லாம் அப்பையிலேயே தான். அப்பையைத்தான் மாமிசபேசிகள் என்பார்கள். அது தன் தொழிலை எவ்வாறு செய்கின்றதென்றால் அப்பேசிகள் தங்களிடமிருக்கும் நரம்பின் சக்தியால் தங்கள் உருவத்தை சில சமயம் குறுக்கிக்கொண்டும் சில சமயம் நீட்டிக்கொண்டும் தங்கள் தொழிலைச் சரிவரச் செய்கின்றன. இப்பேசிகள் ஒவ்வொன்றுக்கும் இரத்த ஓட்டம் முதலிய முறைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

94 வியாயாமம்.—தேகவியாயாமத்தால் அதிக பிரயோஜனமடைவது இரத்தாசயம். வியாயாமத்திற்காக நாம் வெகு வேகமாக நடக்கவேண்டும். நாம் வெகு வேகமாக நடக்க ஆரம்பித்ததும் நமது இருதயம் அதிகமாகத்துடிக்க ஆரம்பித்துஇரத்தஓட்

டத்தை அதிகரிக்கின்றது. இரத்தஓட்டம் அதிகரிக்கும்பொழுது நல்லஇரத்தம் தேகமெங்கும்வேகமாய்ப்பரவி கெட்டஇரத்தத்தைஅகற்றுவதுடன் நற்காற்றோடு சுவாசாசயத்திற் சம்பந்தப்பட்டு பரிசுத்தமாகுமிடத்தில் வந்தடைகிறது. ஒருமனிதன் 1-மணிக்கு 5-மைல் வீதம் வேகமாக நடந்தால் அந்நேரத்துக்குள் அவன் தேகத்திலுள்ள எல்லா இரத்தத்தையும் ஒருதிவலை கூடவிடாமல் நல்ல காற்றுடன் சம்பந்தப்படச் செய்து அவனுடைய சுவாசாசயத்தால்பரிசுத்தம் பண்ணிக்கொள்ளுகின்றான். அவ்வண்ணம் ஒருமணிக்கு 5-மைல் வீதம் ஒருவன் நடக்கும்பொழுது 130-காலன் இரத்தம் அவனுடைய சுவாசாசயத்தை சம்பந்தித்துச் செல்லுகின்றதென்றும்அவ்விரத்தத்தைப் பரிசுத்தம் பண்ணுவிக்க 170காலன் காற்று அவன் உட்கொள்ளுகிறான் என்றும் அவ்வாறு உட்கொள்ளுவதால் அவன் இரத்தம் பரிசுத்தமாக்கப்பட்டு உயர்ந்த தாதுக்களின் அம்சங்களைப் பெற்று பிராணனையும் சக்தியையும் வலுவுள்ளவைகளாக அவன் பண்ணிக்கொள்ளுகின்றான் என்றும் சொல்லப்படுகின்றது.

தேகவியாயாமம் என்பது நடப்பதால் மட்டுமல்ல பலவகையால் செய்துகொள்ளலாம். இவ்வியாயாமம் செய்யும்பொழுது நாம் நமது சுவாசாசயத்தின் உதவியால் நமது இரத்தத்தைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளுகின்றோம். அவ்வாறு பரிசுத்தம் பண்ணிக்கொள்ளும்பொழுது அதற்கேற்றபடி அவ்வளவு கரிமலவாயுவை (carbon dioxide) இருதயத்தினின்றும் அகற்றிக்கொள்ளுகின்றோம். அவ்வாறு அக்கரிமலவாயு அகலும் காரணத்தால் நம்முடைய வலிமை குறைவுபடாமலிருக்கும்படி நாம் யவக்ஷாரமயமான உண்டியை உட்கொள்ளவேண்டும்.

95. வியாயாமமும் இருதயமும்.—வியாயாமத்தால் இருதயம் அடித்துக்கொள்ளுவது அதிகரித்து சரீரத்தில் இரத்தம் நன்றாக ஓடிப் பரவிப் பொதுவாக சரீரம் முழுமைக்கும் சுவாசாசயத்திற்கும் சௌக்கியத்தை விளைவிப்பதுடன் இருதயத்திற்கு முதல்முதல் முக்கிய சௌக்கியத்தைக் கொடுக்கின்றது.

96. வியாயாமம் மிதமாயிருக்கவேண்டும்.—வியாயாமம் எவ்வளவுமிதமோ அவ்வளவுதான் செய்யவேண்டும். அதிகமாயாவது அல்லது ஸாவதானமின்றி-படபடவென்றாவது வியாயாமம் செய்தால் பலவிதத் தீங்குகள் விளையும். ஒருசமயம் இருதயம் உடைந்துபோகக்கூடும். குறைவாக வியாயாமம் செய்தால் அதனாலும் கெடுதல் சம்பவிக்கும். இருதயத்தைச்சுற்றி தசை அதிகரித்து இருதயத்தின் வலுவைக்குறைக்கும்.

97. வியாயாமமும் சருமமும்.—வியாயாமம் செய்யும்பொழுது நம்முடைய சரீரத்தை மூடியிருக்கும் தோல் எங்கும் இரத்தம் நன்றாகப்பாய்ந்து வியர்வை வெகு ஏராளமாக வழிந்தோடச்செய்து, மேதஸ்—அதாவது தேகத்தில் அதிகமாக வளர்ந்திருக்கும் கொழுப்பு தசையைக் கரையப்பண்ணும். சருமத்தின் மயிர்க்கால்கள் வழியாய்த் தேகத்தினின்று அதிகத் தண்ணீரும் சிலவித உப்புக்காரமும் நாம் வியாயாமம் செய்யும்பொழுது வெளியே அகலுகின்றன. வியாயாமம் செய்யும்பொழுது சரும விஷயமாய்க் கவனிக்கவேண்டிய முறைகள்.—(1) வியாயாமம் செய்யும்பொழுது சருமத்தை வெகு பரிசுத்தமாக வைத்துக்கொள்ளவேண்டும். (2) வியாயாமம் முடிந்ததும் தேகத்தை நன்றாகப் போர்த்துக் கொள்ளவேண்டும். அதற்கு மெல்லிய கம்பளித்துணியாலாகிய உடுப்புகள்தாம் நல்லவை. அப்படி நாம் மூடிக்கொள்ளாவிடில் உஷ்ண மதிகரித்த தேகம் வெளிக்காற்றுப் பட்ட உடன் சரேலென்று சீதமடைந்து சீதோஷ்ண வாதங்களால் வியாதியை யடையும்.

98. வியாயாமமும் இச்சாபூர்வக மாமிசபேசிகளும்.—வியாயாமம் என்பது இச்சாபூர்வக மாமிச பேசிகளைச் சேர்ந்தது. வியாயாமம் செய்யச்செய்ய மாமிச பேசிகள் கெட்டிப்பட்டு வலுவடைந்து எவினகாரியத்தை உடனே செய்யும் திறத்தைப்பெற்றவைகளாகின்றன. ஆகையால் நாம்வியாயாமம் செய்யும்பொழுதெல்லாம் தேகத்துக்குள்ளிருக்கும் நானாவித இச்சாபூர்வக மாமிசபேசிகள் எல்லாவற்றிற்கும் அவ்வியாயாமத்தின் நன்மை கிடைக்கும்படியாக முயலவேண்டும் இல்லாவிடில் அவைகளில் சில அதிக வலுவடைந்து மற்றவைகள் அவ்வாறு அடையாமல் பலமற்றுக் குன்றி நிற்கும். வியாயாமத்தால் தேகத்திலுள்ள நரம்புகளும் கெட்டிப்படுகின்றன. தேகம் சுறுசுறுப்பாகவிருக்க வியாயாமம் ஒரு காரணம். தேகம் சுறுசுறுப்பாகும்பொழுது புத்தியும் கூர்மையாகும்.

99. வியாயாமமும் பசியும்.—வியாயாமத்தால் நமக்குப் பசி அதிகமாவதுடன் பால், நெய் இவைகளைப்போன்ற உண்டிகளை அதிகமாகப் புசிக்கும் ஆசையும் அதிகப்படுகின்றது. ஜீர்ணசக்தி அதிகமாகின்றது. நாம் உட்கொள்ளும் உணவுகள் வெகு சடுதியில் நமது சரீரத்தில் கலக்கின்றன. நாம் வியாயாமம் அதிகமாக செய்யச்செய்ய யவக்ஷாரம் அதிகமாகப்பெற்ற பதார்த்தங்களை நாம் உட்கொ

ள்ளவேண்டும். அஜீர்ணம் (dyspepsia) முதலிய நோய்களுக்கு வியாயமமே ஓர் ஔஷதம்.

100. வியாயாமமும் விருக்காவும். (Kidneys) நமது அடிக்குடலுக்குச் சமீபத்தில் "கிட்னீஸ்"என்றொரு கருவியிருக்கின்றது. அதற்கு வடமொழியில் விருக்கா என்று பெயர் தென்மொழியில் "மாங்காயீரல்" என்று சொல்லுகிறார்கள். தேகத்தில் இக்கருவியின் வழியாக இரத்தம் பாய்ந்து போகும்பொழுது இரத்தத்திலிருந்து சிலஜலபாகம், இன்னும் வேறு சிலபாகங்கள் பிரிந்து மூத்திரரூபமாக மாறுகின்றன. இவ்விருக்காவின் வழியாக சில உப்பு வாயு பிரிந்துமூத்திரத்தில் சம்பந்தப்படுகிறது.வியாயாமம் செய்கிறவர்கள் இவ்வுப்பு வாயுவை மூத்திரத்தில் சுலபமாய்ப் போக்கிக் கொள்ளுவார்கள். இவ்வாறு உப்புவாயுவை அதிகமாகப் போக்குவதால் தேகத்திற்கு ஒருவித அசௌக்கியமு முண்டாகாமலிருக்க யவசாரமான ஆகாரத்தை நாம் அதிகமாகப் புசிக்கவேண்டும்.

101. வியாயாமத்தின் பயன்.—தேகத்தி லுண்டாகும் சிலவித கரிமலவாயு, உப்புவாயு, ஜலவாயு இவைகளை யெல்லாம் வியாயாமத்தில் பிரித்து அகற்றி நற்காற்று அதாவது பிராணவாயுவை இரத்தத்தில் கலந்து அதைப் பரிசுத்தம் செய்யும்படி ஏற்படுத்துகிறோம். இரத்தத்தின் ஜலபாகத்தை ஜலரூபமாய் அகற்றுகின்றோம். இரத்த ஓட்டத்தை அதிகரித்துக்கொள்ளுகின்றோம், நமது தேகமெங்கும் சுத்தரத்தம் பரவி தேகத்தின் ஒவ்வொரு பாகத்திற்கும் அதிக வலுவைக் கொடுக்கின்றது. வியாயாமம் செய்யும்பொழுதெல்லாம் இரத்தாசயமாகின் இருதயத்திற்கும் அவ்வாசயத்திலிருந்து புறப்பட்டு தேகமெங்கும் வலைபோல் பரவி விளங்கும் இரத்தவாகினிகளாகின்ற தமனிகளுக்கும் (blood-vessels) ஓர் அழகான ஸம்பந்தம் ஏற்பட்டு தமனிகளில் பழைய இரத்தம் நிற்காமல் ஓட்டப்பட்டு சுவாசாசயத்தின் உதவியால் பிராணவாயு பெற்று சுத்தமாகி தேகத்துக்கு எப்பொழுதும் சௌக்கியத்தை விளைவிக்கின்றது. ஒரு மனிதன் ஒரு நாளைக்கு எவ்வளவு வியாயாமம் செய்யவேண்டும் என்றால், சாதாரண மனிதன் 8அல்லது 9மைமில் தூரம் ஒருநாளைக்கு நடக்கவேண்டும் அல்லது அவ்வாறு நடப்பதால் தேகத்திற்கு எவ்வளவுசிரமம் உண்டாகுமோ அவ்வளவு சிரமம் உண்டாகும்படியான வேறுவித வியாயாமம் செய்யவேண்டும் ஒவ்வொருவனும் வியாயாமம் என்று அறியாமலே ஒருநாளைக்குச் சராசரி 2 அல்லது 2½ மைமில் சுற்றிவிடுகின்றான். அதுபோக மிகுந்து நிற்கும் 6 மைமில் தூரத்தை உலாவியே தீரவேண்டும்.

# நீலி வசீகரம்

## THE TAMING OF THE SHREW

போ.—அப்படித்தான் இருந்தாள்; ஆனால் புது வெள்ளம் வந்து பழைய வெள்ளத்தை அடித்துக் கொண்டு போய்விட்டது; நமது எஜமானரின் பொல்லாத்தனத்துக்கு முன் அவளுடைய பொல்லாத்தனம் அடங்கிவிட்டது.

பழ.—ஆனால், உனக்கு நல்ல "திண்டி"தான்போலவிருக்கிறது.

போ.—அதையேன் கேட்கிறாய்? நான் பட்ட உதையையும் அடியையும் நீ பட்டிருந்தால் திரும்பி இவ்விடத்துக்கு வரவேமாட்டாய்.—அதிருக்கட்டும். சமையல் ஆய்விட்டதா? வீட்டை நன்றாய் அலங்கரித்துவைத்திருக்கவேண்டுமாம்; சேவகர்கள் எல்லோரும் வெகு "ஜோராக" இருக்கவேண்டுமாம்; எஜமானர் உத்தரவு அப்படி.

பழ.—எல்லாம் ஏற்கனவே தயாராகிவிட்டது; சங்கதியொன்றும் சொல்லமாட்டேனென்கிறாயே?

போ.—வழியிலே எஜமானரும் எஜமானியும் வந்தவண்டியின் சக்கரத்தின் பட்டை விட்டுப் போய்விட்டது; இருவரும் கீழே விழுந்துவிட்டனர்; காயம் பலமாகப் படவில்லைபோலவிருக்கிறது; அதற்காக எஜமானர் என்னைக் கொன்றுவிட்டார்; எஜமானி எழுந்திருக்க முடியாமல் கஷ்டப்பட்டார்; எஜமானர் கிட்டப் போகவேயில்லை; அப்புறம் வெகுவாய்க் கெஞ்சிக் கேட்டதின்பேரில், போய்த் தூக்கி வேறு வண்டியில் வைத்துக்கொண்டு வந்தார்; அந்த அம்மாளின் கொட்டம் இப்போது பாதி அடங்கிப்போயிருக்கும்;—இதைப் பேசிக்கொண் டிருக்கிறேனே கோவிந்தன், மாதவன், கணபதி, தொந்தி, தொப்பை, எல்லோருமெங்கே?

பழ.—எல்லோரும் இருக்கிறார்கள்.

போ.—கூப்பிடு; முன்னால் சரியாக விருக்கிறார்களாவென்று நான் ஒருதரம் பார்த்துவிடுகிறேன்.

(சேவகர்கள் பலர் வருதல்.)

தோ.—எலே! பொன்னு! எப்போது வந்தாய்!

தொந்—பொன்னு! உன் வரும்படியில் பாதி கொடுக்கிறதாகச் சொன்னாயே! ஞாபகமிருக்கட்டும்.

கண.—பொன்னு! இந்தப் புதுவேஷ்டி ஏது? எஜமானர் வேட்டகத்தில் கிடைத்ததோ?

மாத.—பொன்னு! நான் ஒரு விசேஷம் சொல்லியிருந்தேனே அதைக் கவனித்தாயா, மதுரையில்?

போ.—உங்களுக்கெல்லாம் தகுந்தபடி பதில் பிறகு சொல்லுகிறேன்; இப்பொழுது எல்லாம் தயாராகவிருக்கிறதா?

மாத.—எஜமானர் எங்கே வருவார், இந்நேரம்?

போ.—இந்நேரம் வாசலுக்கு வந்திருப்பார்.—இரு, இரு, பார்த்தாயா! அவர் குரல் கேட்கிறது.

(நாராயணத்தேவரும் கௌதமியும் வருதல்.)

நாரா.—அந்தக் காமாட்டிப்பயல்கள் எல்லோரும் எங்கே? வண்டியிலிருந்து சாமான்களை இறக்கிவைப்பதற்கு ஒருவனைக்கூடக் காணோமே! தொந்தி, தொப்பை, கணபதி எல்லோரும் எங்கேதொலைந்துவிட்டார்கள்? எல்லா சேவகர்களும்.—இதோ இருக்கிறோம்; இதோ இருக்கிறோம்.

நாரா.—அங்கே என்ன செய்கிறீர்கள்? நாங்கள் வருகிறோமென்று தெரியாதா? தடியாபிள்ளைகள் மாதிரி சும்மா விருக்கிறீர்களே! மரியாதையில்லையா?—நான் முன்னடியெ அனுப்பினேனே அந்த மடையன் எங்கே?

போ.—இதோ இருக்கிறேன்.

நாரா.—புத்தியில்லாத மடையா! குட்டிச்சுவரே! இந்தப் பையல்களை யெல்லாம் அழைத்துக்கொண்டு எதிர்கொண்டு வரும்படி சொல்லியிருந்தேனே; ஏன் அவ்வாறு செய்யவில்லை?

போ.—ஐயா, தொந்தியின் சட்டை இன்னும் முழுவதும் தைத்தாகவில்லை; தொப்பைக்கு நல்ல வேஷ்டி வண்ணானிடமிருந்து வரவில்லை; கணபதியின் கத்தி அதன் உறையினின்றும் வெளிவர மாட்டேன் என்கின்றது; மற்றையோரெல்லோரும் அசங்கியம் பிடித்தவர்களாக விருந்தனர்; இருந்தாலும் இருக்கட்டும் என்று அழைத்துக்கொண்டு வந்திருக்கிறேன்.

நாரா.—மூட்டாள்களா! போய் எனக்கு சாப்பாடு கொண்டுவாருங்கள்.

(சில சேவகர்கள் போதல்.)

கௌதமி! இங்கே உட்காரு; சாப்பிட்டுவிட்டுப் போகலாம்; எனக்குப்பசி அதிகமாகவிருக்கிறது. (சேவகர்கள் சாப்பாட்டுத் தட்டுக்களைக் கொண்டுவருதல்.)

நாரா.—எலே! என் தலைப்பாகையைக் கழற்று, (ஒரு சேவகன் கழற்றல்) தடிப்பயலே! அப்படித்தானு மயிரைப் பிடித்து இழுக்கிறது; வலி உயிர்போகிறதே (அவனை அடித்தல்). கைகழுவ கொஞ்சம் ஜலம் கொண்டு வா.

(ஒருசேவகன் ஒரு செம்பில் ஜலம்கொண்டுவருதல்.) கௌதமி! இப்படிவா; நீயும் கையைக்கழுவிக்கொள். (பாத்திரத்தைச் சேவகன் கீழேபோட்டுவிடுகிறான். காமாட்டி, படவா! இப்படித்தான் செம்பைப்போட்டு உடைக்கிறதா? (அவனை அடித்தல்.)

கௌ.—நாதா! சற்று பொறுங்கள்; அவன்வேண்டுமென்று போடவில்லையே.

நாரா.—இரு, தடியா! கைகால் அயர்ந்துபோய் விட்டனவோ? நாள் ஒன்றுக்கு மூன்று வேளை தின்னுகிறதில்லையா?—கோது! இப்படிவா; சாப்பிடுவோம்—இதென்னடா? கறியா?

மூத.—ஆமாம், ஐயா.

நாரா.—நீ நாசமாய்ப்போக! இப்படியா புகைநாற்றம் நாறும்படி சமைக்கிறது? நன்றாகவே இருக்கவில்லையே! வாந்திசெய்துவிடும்போல விருக்கிறதே! நீயே எடுத்துக்கொண்டுபோ; எனக்கு ஒன்றும்வேண்டாம் (பாத்திரத்தோடு சேவகர்கள் மீது எறிதல்.) என்ன உறுமுகிறீர்கள்? வந்தேனானல் தெரியுமா?

கௌ.—இல்லையே, நாதா! கறி வெகு நன்றாகவே சமைக்கப்பட்டிருந்ததே! நல்ல வாசனைகூட வீசிற்று; கொண்டுவரச் சொல்லுங்கள் சாப்பிடுவோம்.

நாரா.—கண்மணி! அது வேண்டவே வேண்டாம்; முழுவதும் புகையேறிப்போயிருக்கிறது; சாப்பிட்டால் உடம்புக்குத் தீங்கு உண்டாகும்; நாம் இருவரும் இன்றைய இரவு உபவாசமாகவே இருந்துவிடுவோம்; நாளைக் காலையில் நல்ல சாப்பாடு சாப்பிடலாம்; இப்போது படுக்கை யறைக்குப் போவோம், வா.

(நாராயணத்தேவர், கௌதமி, பழனியாண்டி, மூவரும் போதல்.)

மாத.—தொந்தி! இந்தமாதிரி வேடிக்கையை நீ இதற்கு முன் கண்டதுண்டா?

தொ.—அவனைக்கொன்று விடுவார்போலிருக்கிறது. (பழனியாண்டி திரும்பிவருதல்.)

போ.—எங்கே யிருக்கிறார் இப்போது?

பழ.—படுக்கையறையில் இருக்கிறார்; கற்பைப்பற்றி அம்மாளுக்கு தர்மோபதேசம் செய்கிறார்; அவர்

பேசுகிற பேச்சையும், போடுகிற கூச்சலையும் கேட்டு, அந்த அம்மாள் நடுநடுங்கிப் போயிருக்கிறாள்; பதில் பேசவேயில்லை; நிமிர்ந்து பார்க்கிறது கூட கிடையாது; பரிதாபமாகவிருக்கிறது. எலே! வந்துவிடு; அவர் குரல் கேட்கின்றது.

(எல்லோரும் போதல்.)

(நாராயணத் தேவர் திரும்பிவருதல்.)

நாரா.—ஆரம்பிக்கும்போது ஜாக்கிரதையாகவே ஆரம்பித்திருக்கிறேன்; ஆகவே ஜயமடையலாம். அவளை நன்றாக அடக்கியபிறகுதான் நான் சாவகாசமாக விருப்பேன். இன்றைக்குப் பட்டினி போட்டுவிட்டேன்; நேற்றுராத்திரி அவள் தூங்கவில்லை; இன்றைய இரவும் தூங்கவிடுவதில்லை; தூங்கினாலும்இரைந்து பேசிக்கிளப்பிவிடுகிறேன்; சாப்பாட்டில் போலவே, படுக்கையிலும் ஏதாவது ஒரு குற்றத்தைச் சொல்லித் தள்ளிவிடுகிறேன்; தலையணைகளை வீசியெறிந்து விடுகிறேன்; போர்வைகளை நனைத்துவிடுகிறேன்; இதெல்லாம் அவளுடைய நன்மைக்காகவே செய்கிறேன் என்று சொல்லுகிறேன்; தரையில் வீழ்ந்து கிடக்கட்டும்; இப்படிச் செய்தால்தான் அவளுடைய கொட்டம் அடங்கும் (போதல்.)

களம். 2—மதுரை ரதுநாததேவர் வீடு

(சுப்பராயனும் பிரதாபருத்திரதேவரும் வருதல்.)

சுப்.—எப்படி? என்னைத் தவிர வெறொருவனை அவள் காதலிக்கிறாள் என்று சொல்லுகிறீர்? இருக்கவே இருக்காது.

பிர.—நான் சொல்வதில் சந்தேகமிருந்தால், நீர் மறைந்திருந்து அந்த வாத்தியார் பாடஞ்சொல்லிக் கொடுப்பதைக் கேளும்; அப்போது நான் சொல்வதின் உண்மை வெளியாகும். (இருவரும் மறைந்திருத்தல்.)

(விஜயராகவ உடையாரும் வநிதேசுவரியும்வருதல்.)

விஜ.—ராமாயணத்தில் எவ்வளவுதூரம் வாசித்திருக்கிறாய்?

வநி.—பாலகாண்டத்தில் "கார்முகப்படலம்" படித்துக்கொண்டு வருகிறேன்.

விஜ.—நைடதத்தில்?

வநி.—அதில் "கைக்கிளைப் படல"த்தில்தானிருக்கிறேன்.

விஜ.—முன்பு ஒருநாள் கேட்டபோதும் இப்படித்தானே சொன்னாய்? மேலே படிக்கவில்லையோ?

வநி.—அப்படலங்களைவிட்டு மேலேபோக முடியவில்லை. இராமனைப்போலவும் நளனைப்போலவும் உள்ள நீர் வந்து தேற்றவில்லையல்லவா? அதனால் தான் மேல் செல்லவில்லை. (இருவரும் மறைகின்றனர்.)

பிர.—பார்த்தீரா! நான் சொன்ன சங்கதி வெளிப்பட்டுப் போய்விட்டதல்லவா? இன்னும் ஏதாவது சந்தேகமிருக்கிறதோ? அவள் உம்மையேதான் கொண்டாடுகிறாள் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தீரே! நேராக ரூபித்துவிட்டேனல்லவா?

சுப்.—நாசமாய்ப்போக!இவ்வளவு அற்பமானவளா? ஸ்திரீகளின் உள்ளக்கருத்தை அறியமுடியாது என்பது உண்மைதான்போலும். இதனால்தான்

> தூமகேது புவிக்கெனத் தோன்றிய
> வாம மேகலை மங்கையரால் வரும்
> காம மில்லையெனிற் கடுங்கேடெனும்
> நாமமில்லை நரகமு மில்லையே.

என்று கம்பரும் அனுபவித்துத்தான் கூறியிருக்கிறார். கோவிந்த வாத்தியாரே! இதைப்போன்ற கேடுகெட்ட சங்கதியை இதற்குமுன் நான் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை.

பிர.—இதைக்கேளும் நான் கோவிந்தவாத்தியாரும் அல்ல; சங்கீத வித்வானுமல்ல; நான்தான் பிரதாபருத்திரதேவர்.

சுப்.—எப்படி! தாங்களா பிரதாபருத்திரதேவர்?நீங்கள்வநிதேசுவரியிடம் உயிர்முழுவதையும்வைத்திருந்தீர்களே! உங்களையே மோசம் செய்துவிட்டாளே—சீ! அவள் முகத்தில்கூட இனிமேல் விழிக்கக்கூடாது; விழித்தாலும் மகா பாபம்.

பிர.—அதோ பாரும்; அவர்கள் எப்படி கட்டிக்கொண்டு முத்தமிட்டுக்கொள்ளுகிறார்கள்! நான் சத்தியமாகச் சொல்லுகிறேன்: இனிமேல் அவளைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை, இதோடு அவளுக்கும் எனக்கும் விட்டுப்போய்விட்டது; வெகு வஞ்சகக்காரி.

சுப்.—உம்மை மோசஞ்செய்தால் அது என்னையும் மோசம் செய்ததாகாதா? நானும் இனிமேல் அவளைக் கண்ணெடுத்துப்பார்ப்பதில்லை; வலுவில் வந்து கெஞ்சிக்கேட்டுக்கொண்டாலும் நான் அவளைக்கல்யாணம் செய்துகொள்ளமாட்டேன்.வெகு அற்பத்தனமாய், யாரோ முன்பின் அறியாதவன் மேல் தலைதெரியாமல் மயங்கிவிட்டாளே.

பிர.—இவள் இல்லாதபோனால், உலகத்தில் வேறு பெண்களே கிடையாதா? என் அத்தை பெண் சுசீலையென்று ஒருத்தி இருக்கிறாள்; வெகு அழகுள்ளவள்; ஆஸ்தியும் விசேஷமாகவுண்டு; இன்னும் ஒரு வாரத்துக்குள் கலியாணம் செய்து கொண்டுவிடுகிறேன்.—விஜயராகவஉடையாரே! நான்போய்வருகிறேன்.(பிரதாபருத்திரர் போதல்.

# குமார ஸம்பவம்
## BIRTH OF KUMARA

பண்டித நடேச சாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு

14. கொஞ்சம் பசுமையாயும் கொஞ்சம் சிவப்பாயு மிருக்கும் காம்பை உடையதும் மதுரமாய்க் கூவும் ஆண்கோகிலத்தின் சத்தத்தால் தனது வரவை வெளிப்படுத்துகின்றதுமான புதிதாய்த் தோன்றிய மாமலர் இனி யாருடைய பாணமாய் விளங்கப் போகின்றது சொல்லுங்கள்?

15. வண்டுகளின் வரிசைகளை நீங்கள் அநேகந் தடவைகளில் உங்களுடைய வில்லின் நாணாக உபயோகித்திருக்கின்றீர்கள். தாங்க முடியாத துக்கத்தால் நான் புலம்பும்பொழுது அவ்வண்டு வரிசைகளும் என்னுடன்கூட தங்களுடைய பரிதாபகரமான குரலால்புலம்புகின்றனபோலவிளங்குகின்றன.

16. மறுபடி தாங்கள் தங்களுடைய மனோகரமான தேகத்தை அடைந்து எழுந்துட்கார்ந்துகொண்டு மதுரமாய்ப் பேசுவதில் இயற்கையாகவே வெகு சாமர்த்தியமுள்ளவைகளான கோகிலங்களை காதல் விஷயத்தில் தூதர்களாக அனுப்புங்கள்.

17. தலையால் வணங்கித் தாங்கள் மெய்பதற ஆலிங்கனத்தை வேண்டிக்கொண்டதையும் இன்னும் ரகசியத்தில் நம்மிருவருக்குள்ளும் நடந்த அனேக லீலைகளையும் நினைக்க நினைக்க எனக்கு துக்கம் அடங்கவேயில்லை.

18. ரதியில் வல்லவரே, நீங்களே உங்கள் கைகளால் என் மேனியில் பூட்டிய வசந்தகாலத்து மலர்கள் அப்படியே யிருக்கின்றன. உங்களுடைய அழகான தேகமட்டும் கண்ணுக்குக்காணாமல் போய்விட்டது.

19. நீங்கள் என்காலுக்கு நலங்கு இட்டுக்கொண்டிருந்தபொழுது அந்நலங்கு முடியும் முன் உங்களை தேவர்கள் நினைத்துக் கொண்டார்கள். நீங்கள் புறப்பட்டுப்போய் விட்டீர்கள். ஆகையால் தாங்கள் சீக்கிரம் புறப்பட்டு மறுபடிவந்து எனது இடக்கால் நலங்கையும் முடியுங்கள்.

20. தேவலோகத்து அழகான மடந்தைகள் உம்மை மயக்கி தங்கள் வசமாக்கிக் கொள்ளும் முன்னம் நான் அக்கினியின் வழியாய் அவ்வுலகம் சேர்ந்து மறுபடியும் உங்கள் மடியிலேறி உட்காருவேன்.

21. என்னதான் நான்உடன்கட்டைஏறி உம்மை பின் தொடரப்போகின்றேன் என்றாலும்மன்மதனை விட்டுப் பிரிந்து ஒரு க்ஷணப்பொழுதாவது இரதி தனிமையில் இவ்வுலகத்தில் பிழைத்திருந்தாள் என்ற அபவாதம் எனக்கு வந்தேவிட்டது.

22. தெய்வலோகம் சேர்ந்துவிட்ட உமக்கு கடைசியாகச் செய்யவேண்டிய சிங்காரம் நான் என்னமாய்ச்செய்வேன். உயிராலும் உடலாலும் இது வரையில் ஒருவருக்கும் வராத நாசமல்லவோ ஒரே வேளையில் உமக்கு வந்தது.

23. நீங்கள் உமது மடியில்வில்லை வைத்து அதைச் சீர்திருத்திக்கொண்டும் புன்சிரிப்புடன் வஸந்தனுடன் பேசிக்கொண்டும் கடைக்கண்ணால் என்னை பார்த்துக்கொண்டு மிருப்பீர்களே அவைகளை எல்லாம் நான் நினைத்து நினைத்து துக்கிக்கின்றேன்.

24. உமது வில்லை மலரால் சிங்காரிக்கும் உமது பிராணசிநேகிதனான வசந்தன் எங்கு போய்விட்டான்? கடுஞ்சின மடைந்த சிவபெருமானால் அவனும் தனது நண்பன் போய்விட்ட நாசத்தில் போக்கப்பட்டானா என்ன?

25. அவ்வளவு பரிதாபமாய் அவ்வம்மணி சொன்னஅச்சொல்லால் விஷத்தில் தோய்த்த அம்பு மனத்தைக் குத்துவதுபோல குத்துண்டவசந்தன் சோகத்தில் மூழ்கிக்கிடந்த இரதியை ஆறுதல் செய்ய அவள் முன்பாக வந்து நின்றான்.

26. அவனைக் கண்டதும் அவள் அதிகமாகக் கதறி தனது மார்பின்மேல் அதிகமாக அடித்துக் கொள்ளலானாள். உறவினர்களுக்கு முன்பாக துக்கமானது வாயிற்கதவுதிறக்கப்பட்டதும் காற்றுஅதிகமாக வீசுவதுபோல் அதிகப்படுகிறதன்றோ!

27. வெகு துக்கப்பட்டுக்கொண்டிருந்த இதி அவனைப்பார்த்து உன் நண்பனுடைய தேகத்தில் என்ன மிருந்திருக்கின்றது பார். மாடப்புறாபோல் வெகுவித அழகான காந்திகளுடன் விளங்கிய அத்தேகம் இப்பொழுது காற்றடிக்க சாம்பலாய் பறக்கின்றது பார்.

28. ஐயா, என் பிராணநாதரே.இப்பொழுதாவது நீங்கள் எங்கள் முன்பாகத்தோன்றி உங்கள் தேகத்தைக் காட்டக்கூடாதா. உங்களை பார்க்கவேண்டுமென்று வசந்தன் வெகு ஆசைகொண்டிருக்கின்றான்.ஆடவர்கள் அன்பு சிலவேளையில் மடந்தைகளிடம் குறைந்துபோகலாம் நண்பர்களிடம் ஒருபொழுதும் குறைவுபடமாட்டாதென்றல்லவோ சொல்லுகின்றார்கள்.

29. இவ்வஸந்தன் ஒருவனை தங்கள் பக்கத்தில் வைத்துக்கொண்டல்லவாநீங்கள்தேவர்கள் அஸுரர்கள் இவர்கள் நிரம்பிய இவ்வுலகம் முழுமையையும் தாமரைத்தண்டின் நூற்போன்ற நாணை உடையதும் மலர்க்கணையை ஏற்றப்பெற்றதுமான உமது வில்லால் ஆட்டி வைத்தீர்கள்.

30. இனியேது போனவர் போனவரே. அடா வஸந்தா உனது நண்பர் காற்றால் அவிக்கப்பட்ட தீபம்போல் மறுபடி திரும்பி வரப்போகிறதில்லை. நான் அந்தநண்பருடையபதிரி என்றும்தாளமுடியாத துக்கத்தால் இப்பொழுது நான் புகைந்து கொண்டிருக்கின்றேன் என்றும் என்னை நீ கருதுவாயாக.

31. மன்மதனை மட்டும் எடுத்துக்கொண்டு என்னை விட்டு விட்டுப்போன விதி எனக்கு பாதிக்கைமையை ஏற்செனவே கொடுத்துவிட்டது. ஒருபொழுதும் அழியாத ஆதாரமான மரத்தையானை முறித்தெறிந்தால் அதில் ஏறிப் படர்ந்திருக்கும் கொடி கீழே விழத்தான்வேண்டுமென்றோ?

32. ஆகையால் உறவின்முறையார்கள் இறந்ததங்கள்பந்துக்களுக்குபிரயோஜனமாக கடைசி கிரியை என்ற சடங்குசெய்தலை நீ ஒன்றுசெய்ய முடியாமல் தவிக்கும் என்னைத் தீயில் ஏற்றிவைத்து என் கணவனுடைய அருகாமைக்கு அனுப்புவாயாக.

33. சந்திரனுடன் கூடவே அவன் மனைவியாகிய சந்திரகாந்தியும் (கௌமுதி) மறைந்துவிடுகின்றது, மேகத்துடன் * மின்னலும் போய்விடுகின்றது; பெண்கள் தங்கள் கணவனைப் பின் தொடரவேண்டுமென்ற சித்தாந்தம் உயிரில்லாத பிராணிகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றது.

34. வெகு அழகாய் விளங்கும் என் கணவனுடைய சாம்பலை யென் மேனியின்மேல் பூசிக்கொண்டு நான் இளந்தளிராலாகிய மெத்தையில் எவ்வளவு சுகமாகப் படுப்பேனோ அவ்வளவு சந்தோஷமாய்த் தீயில் படுத்துக்கொள்ளுவேன்.

35. வஸந்தா! நீஎவ்வளவோ தடவைகளில் எங்களுக்கு தளிர் மெத்தை பரப்பிக் கொடுத்து உதவி செய்திருக்கின்றாயல்லவா. நான் உன்னை அஞ்சலி பந்தம் பண்ணி யாசிக்கின்றேன். நமஸ்காரம் பண்ணிவேண்டிக்கொள்ளுகின்றேன். சடுதியில் நீ எனக்கு இதை அடுக்கிக் கொடுப்பாயாக.

* மின்னலை மேகத்தின் மனைவியாக ஒப்புக்கொள்ளும் ஒரு கொள்கை.

36. அவ்வாறு செய்து என்மேல் கொள்ளிவைத்து தென்றல் காற்றைக் கிளப்பி அத்தீ சடுதியில் மண்டும்படி செய்வாயாக. நானின்றி ஒரு நிமிஷம் கூட தனிமையில் உனது நண்பர் இருக்கமாட்டார் என்பது உனக்குத் தெரியுமே.

37. இவ்வண்ணம் செய்து முடித்தபிறகு ஒரே கைத்தண்ணீர் எங்களிருவரையும் உத்தேசித்து நீ இறைப்பாயானால் உனது பந்து தனிமையில் தண்ணீர் குடிக்காமல் என்னுடன் சேர்ந்து அதே தண்ணீரைப் பிரிக்காமல் குடிப்பார்.

38. வசந்தனே! எங்களுக்கு பிண்டம் தர்ப்பணம் முதலியவைகள் கொடுக்கும்பொழுது அவைகளில் மாமலர்க்கொத்துகளையும் கலந்து நீ கொடுப்பாயாக, உனது நண்பர் எப்பொழுதும் மாமலர்களில்விருப்பமுள்ளவர் என்பது உனக்குத் தெரியுமன்றோ.

39. இவ்விதமாய்ப் பிராணனைவிடத் தீர்மானித்திருந்த ரதியை ஆகாயத்திலிருந்து உண்டானஆகாசவாணி நன்றாக நீர் வற்றிப்போன குளத்தில் பரிதவிக்கும் பெண்மீனை மழைபொழிதல் முதல் முதல் சந்தோஷித்துவைப்பதுபோல் ஆறுதல் செய்யலாயிற்று.

40. ரதியே, உனது கணவன் உனக்கு வெகுகாலங்கிட்டாமலிருக்கமாட்டான். சிவபெருமான் கண்ணின்தீயில் விளக்கு விட்டிற்பூச்சிபோல் அவன் ஏன் நாசமடைந்தான் என்ற காரணத்தைச் சொல்லுகின்றேன். நீ கேட்பாயாக.

41. அவன் பிரமதேவருக்குக் காதலை உண்டாக்கி தனது குமாரியாகிய ஸரஸ்வதியிடம் மோகம் கொள்ளும்படி செய்தான். அதன்பிறகு அப்பிரமதேவர் தனது மோகத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு அம்மன்மதனைச் சபித்தார். அச்சாபத்தின் பயனை அவனிப்பொழுது அனுபவித்தான்.

42. பார்வதியின் தவத்தால் அவள் வசத்துக்கு வரும் ஈசனார் அவ்வம்மணியை பாணிக்கிரஹணம் செய்துகொள்ளும்பொழுது அவர் ஆனந்தமடைந்து மன்மதனை மறுபடியும் அவனுடைய தேகத்துடன் சேர்த்துவைக்கப்போகின்றார்.

43. தருமன் என்ற பிரஜாபதி பிரமதேவரை மன்மதனுக்கு சாபமுடிவு எப்பொழுது என்று கேட்டபொழுது அதைப்பற்றி இவ்வாறு சரஸ்வதியிடம் பிரமதேவர் சொன்னார். முதல் முதல் இடிக்கும் அதன் பிறகு அமிருதத்துக்கும் (ஜலத்துக்கும்)

மேகங்களும் ஐம்புலன்களை அடக்கியவர்களும் காரணமன்றோ!*

44. ஆகையால் சுபத்தை எதிர் பார்க்கவேண்டியவளே இனிமேல் உன் கணவன் உன்னிடம் வந்து சேருவானாகையால் அதற்காக உன் தேகத்தை நீ காப்பாற்றிக் கொள்ளுவாயாக நதியின்வெள்ளத்தை முற்றிலும் சூர்யன் குடித்துவிடுகின்றான் என்றாலும் கோடை நீங்கினதும் மறுபடியும் அவ்வாற்றில் ஜலம் நிரம்புகின்றதன்றோ"

45. இவ்வாறு ஏதோ ஒரு உருவம் கண்ணுக்குத் தெரியாமலே ஆகாயத்தில் நின்று சொல்லி ரதியின் புத்தியை அவள் தன் பிராணனை விடச்செய்திருந்த நிச்சயத்திலிருந்து மாற்றிற்று அவ்வுருவம் சொன்ன சொல்லின் நம்பிக்கையின் மேல் அழகான வசனங்களினால் இனிமையாகப் பேசி வஸந்தன் அவளை ஆறுதல் செய்தான்.

46. அதன்பிறகு ரதியும் சோகத்தால் மேனிமெலிந்தவளாய் பகல்காலத்தில் தோன்றிய சந்திரபிம்பம் தனது கிரணங்கள் ஒளியற்று இரவை எதிர் பார்த்து நிற்பதுபோல் தனது கஷ்டத்தின்முடிவை எதிர்பார்த்தவளாய் பிழைத்திருந்தாள்.

---

* சாபத்தை முதலில் கொடுத்து கெடுத்து அதன் பிறகு சாபமுடிவைச் சொல்லி க்ஷேமமுண்டாக்கி வைக்கின்றவர்கள் ஐம்புலன்களையும் அடக்கியவர்கள் என்றபடி.

---

உடனே செய்:—நீ ஏதாவது செய்யவேண்டியிருக்கும் தொழிலை சரிவரச்செய்ய ஒருவழி அல்லது உபாயம் உடனே உனக்குத் தோன்றினால் அதை உடனே செய்து முடி. நாளைக்காகட்டும், அப்புறம் பார்ப்போம் என்று நிறுத்திவிடாதே. அப்பொழுது செய்யவேண்டியதை அப்புறமென்று வைக்கிறவன் அரைக்கால் மனிதன், அவ்வாறு வைப்பதற்கும் காரணம் அத்தொழிலிலிருக்கும் கஷ்டமாம். அக்கஷ்டத்தை இப்பொழுது நாம் பற்றி வேலையைச் சரிவரமுடிக்காவிட்டால் மற்றெப்பொழுது சித்திபெறுவோம். நாளை என்பது இல்லை என்பதற்கு அடையாளம்.

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

---

தானம் செய்யும் விதம்.—விசுவாமித்திரர் வம்சத்தில் பிறந்த யயாதிபோனாகிய அஷ்டகன் என்பவன் ஓர் அசுவமேதயாகம் செய்தான். அதைப் பார்க்க யயாதியின் மற்றையப் பேரப்பிள்ளைகளாகிய பிரதர்த்தனன் வஸுமனஸ் சிபி என்பவர்கள் மூவரும்வந்திருந்தார்கள். யாகத்தின் முடிவில் இவர்கள் நால்வரும் ஓர் ரதத்தில் ஏறிக்கொண்டு போகையில், எதிரே நாரதர் வரக்கண்டு அவரையும் தமது ரதத்தில் ஏற்றிக்கொண்டார்கள். இவர்கள் போய்க்கொண்டிருக்கையில் நான்கு பேரப்பிள்ளைகளுள் ஒருவன், 'நாங்கள் நால்வரும் புண்ய விசேஷத்தால் ஸ்வர்க்கம் அடையப்போகிறோம். யார் எங்களுள் புண்யம் குறைந்து முதலில் பூமியில் விழப்போகிறார்கள்' என்று நாரதரைக் கேட்டான். அதற்கு அவர் 'அஷ்டகன் முதலில் விழுவான், ஏனெனில் அவன் ஒருகாலத்தில் என்னை ஊருக்கு வெளியில் ரதத்தில் ஏற்றிக்கொண்டு போகையில் நான் அநேக வர்ண பேதங்களை உடைய பசுக்களைக் கண்டேன். அப்பொழுது அஷ்டகன் அவைகள் தான் தானம்கொடுத்த பசுக்கள் என்று பெருமை பாராட்டினான். ஆகையால் அவன் முதலில் ஸ்வர்க்கத்திலிருந்து விழுவான்' என்றார். அப்பொழுது மீதி இருக்கும் மூவரில் யார் முதலில் கீழே விழுவார்கள் என்று பிறந்த கேள்விக்கு நாரதர் 'பிரதர்த்தனன் இரண்டாவதாக விழுவான். ஏனெனில் இவன் வீட்டில் நான் சில நாள் வஸித்துக்கொண்டிருக்கையில் நாங்கள் இருவரும் ஒருநாள் ரதத்தில் ஏறிக்கொண்டு வெளியே புறப்பட்டோம். போகும்வழியில் ஒரு பிராம்மணன் வந்து அரசனை ஒருகுதிரைவேண்டும் என்று யாசித்தான். அரசன் அரண்மனைக்குப் போனதும் குதிரையைத் தருவதாகச் சொல்லிப் பார்த்தான். பிராம்மணன் கேளாது தனக்கு அப்பொழுதே ஒருகுதிரை அவசியம்வேண்டும்என்று கேட்க தேரில் கட்டியிருந்த குதிரையை அவிழ்த்துக்கொடுத்தான், இதேமாதிரியாக வேறுமூன்று பிராம்மணர்கள் வர அவர்களும் பிடிவாதமாய் இருந்தது கண்டு ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு குதிரையைக் கொடுத்து விட்டு அவன்தானே ரதத்தை இழுக்கத் தொடங்கினான். இழுக்கும்பொழுது "பிராம்மணர்கள் கேட்கத்தகுந்த வஸ்து இனி என்னிடம் ஒன்றும் இல்லை" என்று சொல்லி அரசன்தனது அசிரத்தையைக் காட்டினான். இதனால்தான் அவன் இரண்டாவதாக பூமியில் விழுவான்" என்றார். இதன்பின்பு மீதியிருக்கும் இருவரில் எவன்முதலில் விழுவான் என்று கேட்டதற்கு நாரதர் 'வஸுமி

னஸ் கீழேவிழுவான். ஏனெனில், இவன் ஒருகாலத்தில் யாகம்செய்து ஒரு அழகிய ரதத்தைஸம்பாதித்தான். அதை நான் புகழ்ந்து பேசினேன். அப்பொழுது அவன் 'இதுதங்களதே' என்றான். இவ்வாறு நான் வேறுமூன்று ஸமயங்களில் அந்த ரதத்தைப் புகழ்ந்து பேசினேன். அரசன். 'இது தங்களதே' என்றவாய் வார்த்தையாகச் சொன்னானே ஒழிய ரதத்தை எனக்குக் கொடுக்கவில்லை, இதனால்தான் இவன்மூன்றாவது 'விழுவான்' என்றார். இதன் பின்பு யயாதி பேரர்களுள் ஒருவன் நாரதரை நோக்கி 'நீர் சிபி ஆகிய இருவருள் யார் முதலில்விழுவது என? அதற்கு நாரதர்' நான் முதலில் கீழேவிழுவேன். சிபி ஸ்வர்க்கத்தில் நெடுங்காலம்வாழுவான். ஏனெனில் சிபி வீட்டிற்கு ஒருநாள் ஒருபிராம்மணன் போஜனம் வேண்டும் என்று வந்தான். சிபி தான் என்ன செய்யவேண்டும் என்று கேட்டதற்கு, பிராம்மணன், 'உன்பிள்ளையைக்கொன்று கறிசமைத்து எனக்குச் சோரிடவேண்டும்' என்றுகேட்டான் உடனே சிபி அவ்வாறே செய்து ஸமான்களை எடுத்துக்கொண்டு அதிதியை, தேடிப்புறப்பட்டான். போகும்வழியில் அந்த அதிதி அரண்மனையுட் புகுந்து தனது சொத்துக்கள் எல்லாவற்றையும் கொளுத்தி நாசம்செய்வதாகச் சிபி கேள்விப்பட்டான். இப்படிச் செய்துகொண்டிக்கும் பிராம்மணனிடம் சென்று கோபங் கொள்ளாது சிபி, 'சாப்பாடு தயாராய் இருக்கிறது' என்று மஹா விநயத்துடன் சொல்ல, அவர், 'நீயே அதைப் புஜி' என்றார். அரசன் மனங்கலங்காது அதைப் புஜிக்கத் தொடங்கினான். உடனே பிராம்மணர் அரசனது கையைப் பிடித்துக்கொண்டு அவனது பெருமையைக் கொண்டாடி அவனை வெகு மரியாதை செய்து மறைந்தார். பிரம்மாவே அரசனது குணத்தைப் பரிசோதிக்க இவ்வுருக்கொண்டு வந்தது. இம்மாதிரிச் சிறந்த தானத்தைச் செய்ததால் தான் சிபி நெடுங்காலம் ஸ்வர்க்கத்தில் வாழுவான்' என்றார். இக்கதையினால் தானம் செய்யுங்கால் அதைப்பற்றி கர்வம் அடையாதிருக்கவேண்டும்; எவ்வளவு சிறந்த தானத்தைச் செய்தபோதிலும் கொஞ்சம் அசிரத்தை இருக்குமாயின் அது கெட்டுப்போகும்; யாசிப்போர் நோக்கம் அறிந்து தானம் செய்யவேண்டும்; தானம் செய்யுங்கால் எவ்வளவு கஷ்டம் வந்தபோதிலும் மனங்கலங்காது பொறுமையோடு தைரியமாய் செய்தல் வேண்டும். என்பவை விளங்கும்.

## ஸ்திரீகளுக்கான பக்கங்கள்
## LADIES' PAGES

ஸ்வயநலத்தை தர்மயாகத்தில் த்யாகஞ்செய்வது தவிர வேறேதேனு அன்பெனப்படுமா? அது ஹ்ருதயத்தில் வசிக்கும்; மனத்தை உருக்கும். அது இருவகைப்பட்ட ஓர் சக்தி. ஒன்று கொல்லும் தன்மையது.மற்றொன்று ஆக்குந்தன்மையது.கீழ்மையை கொன்று மேன்மை உண்டாக்குவதுதான் அதன் ஸ்வபாவம். இவ்விருசக்தியை ஒன்றை விட்டொன்றிருக்கமுடியாது. மின்தாதுப்போல் ரௌத்திரமும சாந்தமும் கலந்து ஆநந்தசோதியை உண்டாக்கி பரவசமடையச்செய்யும். இவ்வன்பு சத்திய மென்னுஞ் சோதியை பரிவேஷித்து நிற்கும்.அதுகருணைமேகம் பொழியுமென்னும் குறிகாட்டுவதுதான். மனைவிக்கு மிது பொருந்தும். அவள் அன்பின் ஸ்வரூபம். அவள் உலகமெல்லாம் அவள் கணவன் ஒருவன்தான். தன்னலம் பாராது அவனை ஆநந்திக்கச் செய்வது தான் அவளது யாகம். இவ்யாகத்தைஸம்பூர்ணஞ் செய்வதுதான் அவளது பேரன்பை விளக்கும்.

***

"ஒருவர் முன் மணஞ்செய்த பெண்ணை மற்றொருவர் வரிக்க விடுவது க்ஷத்ரியதருமமாகுமா?" என்று கேறினான் ஹரிச்சந்திரன், "உன் கோபமெனக்கானந்தமூட்டியது. சிவபிரான்அருளால்பெற்றேன். அவர்இவள்தாலியைஎவரால் கண்ணால் காணமுடியுமோ அவரே இவளதுகணவன் என்று வாக்களித்திருக்கிறார்.தேவரீர் கோபங்கொள்ளாதென்பெண்ணை மணக்கவேண்டுமென்றான்மதிதயன். கோபமடங்கியது.மணம்ஆகியது.ஹரிச்சந்திரன் தன்னகரமாகிய அயோத்திசென்றான். சந்திரமதியும் ஹரிச்சந்திரனுடனே அயோத்திக்குத்தான் அரசியாகச்சென்றாள்.

***

தர்மம் என்கிறப்பொருளை தனதாகக்கொண்டது இல்லறம். அதை அச்சாணிபோல் தவராது செல்ல இயக்கம் கொடுப்பவர் மனைவியும் கணவனும்தான் அரசனுக்கு அரசமுறைமையும் இல்லறவிதியும் ஸரியாக நடத்தவேண்டும். இதில் அவன் ஒருவனாய் ஒன்றும் செய்யமுடியாது. அரசமுறைமைக்கு மந்திரி உதவி புரிவதுபோல் இல்லறத்திற்கு மனைவி உதவி செய்யவேண்டும்.

***

காட்டில் மிருகங்க ளடர்ந்து ஜனங்களை தொந்தரை செய்வதாய் மந்திரி ஹரிச்சந்திரனுக்குச் சொன்னான். அரசன் உடனே யாம் காடுசென்று வேட்டையாடுவோம் என்றான்.சந்திரமதி தன் குழந்தையோடு அரசனோடு காட்டிற்குச் சென்றாள். வேட்டை ஆகியது. அரசன் அயர்ந்து நித்திரை செய்தான். கனவுகண்டனன்: யாரோ ஒரு முனிவன் தன் மகுடத்தை புதைத்துத் தன்னைக் காட்டிற்குப் போகச் செய்ததாகச் சொன்னான். கனவு

பலிக்குமே என்று கவலைப்பட்டான். "நீர் கவலைப்படுவதில் என்ன பிரயோஜனம். வருவன தாமே வரும். மனோதைரியத்தை விடாமல் நாமிருத்தலே நமக்கு அழகு" என்றாள் சந்திரமதி.

***

ஸத்தியவான் என்றால் எல்லார்க்கும் பொறாமை. அவனுக்கு எத்தனை கஷ்டமிடலாமோ அவ்வளவையுமிட்டு அவனை பொய்யனாக்க வேண்டுமென்பது மனுஷ ஸ்வபாவத்தின் தாழ்ந்தகுணம். இக்குணத்தை எதிர்த்து தனது ஸத்தியம் நிலைக்க நிற்பது ஜனஸமூஹத்தை உயர்த்தவந்த உத்தமகுணமாகும்.

***

"என் மிருகங்களையெல்லாம் நாசம் செய்தாய், என் குழந்தைகளை ஏளனம் செய்தாய். ஹே! துராத்மா! உன்னை ஆநந்தமாக அடையவந்த பெண்களை அழும்படியாக செய்தனை யல்லவா? உன் பெருமையே பெருமை!" என்றார் விசுவாமித்திரர். நான் ஜனங்களுக்கு துன்பஞ்செய்த மிருகங்களைக் கொன்றேன். என்னிடை நாட்டியஞ்செய்த பெண்கள் வேண்டியதை கொடுக்க என்னால் முடியாமையால் யான் என்னசெய்வேன். என்னை மன்னிக்கவேண்டும்" என்றான் ஹரிச்சந்திரன். நீ "அரசனாக இருப்பதற்கு தகுதியல்ல" என்றார் விசுவாமித்திரர். "மஹானுபாவ! உம்மை யடைக்கலமடைந்தேன். உம்போல்வார் இப்படி கோபித்தல் தகுதியோ" என்றான் ஹரிச்சந்திரன்.

***

நமக்கு கஷ்ட மதிகமாகுங்காலங்களில் நமக்கு பீடையு மதிகமாவதுண்டு. இவைகளெல்லாம் நம்மைக்காக்கவந்த ஸாதனங்களாகக்கொண்டு கோபத்தைக்கடந்து மேன்மை அடைவதுதான் மனிதனது பெருமையை விளக்கும். அவன் அவ்வாறு நடப்பதற்கு வருத்தமில்லாமல் இருக்கும்படிச் செய்யவேண்டியது மனைவியின் கடமை. அது ஒன்றே அவள் தருமம் முழுதும் ஆகிறது.

***

"மற்றவர்க்குத் துன்பம்வராது காப்பது அரசரது தொழில்: ஆயினும் அவன் தன் மனைவி இருக்க அவளைவிட்டு மற்றொருவளிடத்து இச்சைக்கொள்வது அவன் அரசமுறைநமைக்கு ஏற்குமோ. யான் என் நாடுமுழுதும் அளிக்கிறேன் என்று அவர்களுக்குச் சொல்லியும் அவர் கேளாவிடில் நான் என்ன செய்வது" என்றான் ஹரிச்சந்திரன். "உன்வணக்கத்தால் நான் ஒருவாறு கோபம் தணிந்தேன். ஆயினும் நீ இவ்வரசுரிமை பூண்பதாகாது. நீசொல்லியவண்ணம் இந்நாடை எனக்களித்து நீ எங்கேனும் போக" என்றார் விசுவாமித்திரர். "நீவிரிட்டது சட்டமாகுக. நான் வாக்கு தவறேன். உமக்கிந்நாடு என்மனமாற அளித்தேன். கொள்ளும். நான் அவர்களிடத்து இச்சைப்படுவேனாயில் அக்கிமுன்னாக நான் செய்த வாக்கு பொய்க்குமல்லவா? பொய்விட்டிருப்பதே என் தருமம். நீர்கொள்ளும்" என்றான் ஹரிச்சந்திரன்.

நம்மைத் துன்பப்படுத்த பிறர் எண்ணங்கொள்வதெல்லாம் கடவுளால் தூண்டப்பட்டுத்தானென்று சொல்லவேண்டியதாயிருக்கிறது. நமது மனோதைரியத்தையும் நன்னெறியையும் அவர் வலிமைஅடையும்படிச் செய்கிறார்கள். இவர்கள் நமக்கு நேராக நன்மைபுரியாவிடினும் காலக்கிரமத்தில் கடையில் நன்மையையே உண்டாக்குவார். இவர் செய்வது முதலில் கஷ்டமாக நமக் கிருக்கலாம். வெய்யிலில் சென்றாலொழிய நிழலின் ஸுகமெப்படி அனுபவிக்கமுடியும். இத்துன்பம் புரிவோர்க்கு கடவுளின் (பக்தர்களை) பரீக்ஷிக்குந்தன்மையால் புதிதுபுதிதாக யுக்தி உண்டாவது அவருடைய பரிசிலனா சக்தியை காட்டுகிறது.

***

ஹரிச்சந்திரனும் சந்திரமதியும் அவர் குழந்தையும் மூவரும் காட்டிற்குள் புகுந்தனர். உருவும்நிழலும் அவைஇணைந்த நிலையும்போலச் செல்கின்றனர். விசுவாமித்திரர் அங்குவந்தார் "நல்ல நியாயமிது. நான் உன்தேசத்தை தானம் வாங்குமுன் உன்னிடம் வைத்த யாகத்திற்காக வாங்கிய பொருளைக் கொடுத்துசெல்வாயாக" என்றார். "ஆஹா! இதுவும்ஒரு பரீக்ஷையா! தேவரீர்க் கிவ்வளவு பராமுகமேனோ! என்னிடம் உள்ளதை எல்லாம் உம்மிடம் கொடுத்துவிட்டேன். என்னிடம் வேறுபொருள்யாது. நீவிர் வைத்த பொருளை யான் இல்லை என்று சொல்லவில்லை. எனக்கொருமாதம் தவணைகொடுத்தால் காசிசென்று உமக்கு பொருள் தருவேன்" என்றான் ஹரிச்சந்திரன். "உன்னைஎவ்வாறு நம்புவதென்றார். உமது ஆள்எவரையேனும் என்னுட னனுப்பினால் கொடுத்தனுப்புவேன்" என்றான்.

***

உலகத்தில் கெடுதி செய்பவர்களுக்குத் துணையாக பலர் சேர்வது வழக்கமல்லவா? நல்லவன் என்றால் நெரிந்தமுள்ளாக எண்ணுவர். கொடியவனென்றால் குற்றமற்றவரென்று எண்ணுவது மனிதரில் அதிகம். முரட்டுபலா உள் தித்திக்கும். கத்தியால் அதை வெட்டினாலொழிய அதன் இனிமை தெரிவதில்லை. கொடியவரது கீழ்மைகுணமே நல்லோரது பெருமையை விளக்கும்; எடுத்துக்காட்டும்: கொடியவரது க்ரூரமதிகமாக ஆக பெரியோரது சாந்தகுணத்தின் உயர்ச்சி அதிகமாகும். பெரியோர் தமது சாந்த குணத்தாலே எதையும் வெல்லுவார்.

***

ஹரிச்சந்திரனோடு வர நக்ஷத்ரிக னென்னுங் கொடிய பிராம்ஹணனை ஹரிச்சந்திரனோடு செல்ல அனுப்பினர் விசுவாமித்திரர். ஹரிச்சந்திரனை பொய்யனாக்கவேண்டுமென்பது இவர் கட்சி. அவ்வாறு செய்வதற்கு நக்ஷத்ரிகன் மஹா நிபுணனாக மதித்தனுப்பினர். தேள்போல் அவன் ஹரிச்சந்திரனையும் அவன்மனைவியையும் பாலகனை வாயை இன்னம் விடாக்குழந்தையைக்கூட ஸதா கொட்டிக்கொண்டு அவரை எப்பொழுதும் வைதுக்கொண்டே செல்லவேண்டுமென்று அவனை ஆஞ்ஞாபித்

தார். தேளிற் கதிகாரம் கொடுத்தால் நொடிக்கு நூறு தடவை கொட்டுமென்று கேட்பதில்லையா?

* *

உலகத்தில் பூதசரீரத்திற்கும் காரணசரீரத்திற்கும் மெப்பொழுதும் சண்டை நடந்து பூதசரீரம் ஒழிந்தால் சூக்ஷம சரீரம் நிலைக்கும். இதற்குத் தான் மாயையுடன் போர்செய்வது என்று சொல்லப்படுவது. இந்த உடம்பானது சரியான வழியில் போகவிடாது தடுக்கிறது. அதைத்தடுத்தல் தான் மாயையுடன்போர், நாம் அதை ஒருவிதத்தில் தடுத்தால் வேறு ஒருவிதமாக வந்தெதிர்க்கும். எல்லாவிதத்திலும் தடுத்தால்தான் மாயை ஒழியும். இதற்காக ஒவ்வொரு மனிதனும் பாடுபடவேண்டும். மனைவி இதற்கு தக்க உதவிபுரிதல்தான் அவளது தருமம்.

* *
*

காட்டில் தன் மாயையால் அகாலஙிருத்யங்களெல்லாம் செய்ய ஆரம்பித்துவிட்டார் விசுவாமித்திரர். மாயையை தெரிக்க விரித்துவிட்டார். காடெல்லாம்இடி இல்லாது தாரைதாரையாக மின்மழைபெய்வர். நக்ஷத்திரகன் இதுதான்சமயமென்று அவர்களை வயிற்றெரிச்சல்கொட்டிக்கொள்வது வழக்கம். அக்நிநக்ஷத்திரம்கூடினஸூரியவெப்பம்போல் எங்கும் பொங்கும்படியாக நெருப்புக்காற்று வீசவும் எங்கும் குடிக்க நீரென்பது இல்லாமலும், கானல் நீர் பலமுறை பிரதிபலிக்கும் படியாகவும் செய்வர். இக்காலங்களில் நக்ஷத்ரிகன் தன்னை எடுத்துச் செல்லவேண்டுமென்று வாயாற வைவன். சென்றும் அவன் மனமாறாது. பரல்கல்லும் முள்ளும் காலிற்பதிந்து ரத்தம் சிந்தினவிதமாக நடந்து வந்தார். அதை சந்திரமதி லக்ஷியம் செய்யவில்லை. தன் கணவனைக் காக்கவேண்டும், அவனைத்தன்பத்திலிருப்பினும் அதிலில்லா திருப்பதுபோல் தான் செய்யவேண்டும் என்பது அவளதுகவலை. தன்னைப்பற்றி அவளுக்கு கொஞ்சமேனுங் கவலையில்லை.

* *
*

மனைவிக்குத் தனது கணவனைக்காட்டிலும் உயர்ந்த பரம்பொருள் இருப்பதாக எண்ணமே கிடையாது. தன்கொழுநனைக்காக தன்உயிரையுமளிக்க வித்தமாயிருக்கிறாள். எப்பொழுதிந்தஸமயம் வரும் என்று காத்துக்கொண்டிருக்கிறாள். அப்பொழுதவளுக்கு இருக்கு மாநந்தம் இத்தகையது என்று சொல்லமுடியாது. தான் எடுத்த ஜன்மம் பலிக்கச்செய்யுங்காரியத்தில் ஆநந்தம் இவ்வளவு என்று அளவிடமுடியுமா?

* *
*

காட்டில் நடந்து நடந்து கால் புண்ணாகியும் ஸத்தியம் பதிவிரத்யம் இவை இரண்டுதான் கணவன் மனைவி இருவருக்கும் லக்ஷியமாயிருக்கிறது. இவர் எந்த கஷ்டங்களையும் கவனிக்கவில்லை. ஏன் கவனிக்கவேண்டும்?—துன்பம் இன்பமிரண்டுமில்லை என்று கொண்டவர்களுக்கு தவணைவைத்ததினம் இன்னம் கொஞ்சம் நாள்தான் உள்ளன. இதற்குள் ஹரிச்சந்திரனை காசிக்குச்செல்லாது தடுத்து பொய்யனுக்க வேண்டுமென்பது விசுவாமித்ரர் கருத்து. தன் மாயாசக்தியால் நெருப்பாறு ஒன்று உண்டாக்கினர். அதை இவர் கடக்கமாட்டார் என்பது விசுவாமித்திரர் கருத்து. கொழுந்துபடர்ந்து ஜ்வாலை வீசி எரிக்கின்றது. என்னசெய்வது? நக்ஷத்ரிகன் தவணை வந்துவிட்டது நீ காசிபோய் தருவேன் என்று பச்சைப்பசும்பொய் பேசினய் என்று வயிற்றெரிச்சலோடு சொன்னன் கஷ்டம். என்னசெய்வது.

* *
*

கஷ்ட ஸமயங்களில் மந்திரிபோல் வரும்பொருளும் நடக்கவேண்டிய விதமும் சொல்வது பத்தினியின்குணத்தைப் பெருகச்செய்யும். இதுதான் தனக்கு ஸமயம் வாய்த்ததாக எண்ணினள் சந்திரமதி. காட்டுத்தீயில் தான் விழுந்துவிட்டால் அது அவிந்துவிடும் என்று அவளுக்குப் பட்டுவிட்டது. தன் கணவன் வாய்மை விரதம் காக்கவேண்டு மென்பது தான் அவள் முதல் கோறிக்கை. அதற் கப்புறம் தான் தன் உடம்பு முதலானவைகளைப்பற்றிக்கவலை. நிஸ்சயித்தாள், யார்தடுத்தும் லக்ஷியம் செய்யாமல் அதனிடத்து முந்திவிட்டாள். "ஹே! அக்நீ. உன் ஸாக்ஷியாக யான் ஒருவனையே மணந்து அவர்க்குரியவாறு லவலேசமும் பிசகாதிருக்கும் பக்ஷத்தில் என்நாதனைக் காப்பாற்றுவாயாக" என்று சொல்லிக்கொண்டு அதனிடை ஓடினள். பதிவிரதையினிடம் அக்நி தன் வலிமையைக் காட்டுமா? நெருப்பு அவிந்துவிட்டது.

* *
*

காசி வந்து சேர்ந்தார். தவணை இன்னம் இரண்டு மூன்று தினம் தான் இருக்கின்றது. ஆயினும் கவலையில்லை. அவன் ஒருவன்மேல்தான் கவலை. மற்றதெல்லா மவன்பாரம். ஆனதினல் அவன் ஸந்நிதானம் சேர்ந்தார். கவலையற்றார் மதிமயங்கினர். உள்ளம் ஒருமித்தவன் பாதாரவிந்த ஸேவையில் ஆழ்ந்து கணவன் மனைவி குழந்தை ஆநந்திக்கிறார்கள். மகாதேவனருளை உத்தாரம் செய்யவந்தவர்களல்லவா? அவரிடமுள்ள அநந்தத்தைக்கொண்டார்வமடைய வந்தார். அவர் ஸந்நிதி மஹிமையுடன் ஆநந்தம் பொங்குகிறது.

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

1. கைதிகளை நடத்தும் விதம்.-அமெரிக்காதேசத்தில் கைதிகளை இரண்டுவிதமாக நடத்திவருகிறார்கள். அவைகள் பின்வருவன. காலிபோர்னியாசிறைச்சாலையில்கைதிகளைநல்லநிலையில்வைத்துசீர்திருத்துவதற்கு ரோமன் காதலிக் பாதிரிகள் முதல்ரக்ஷண்ய ஸேனை உத்தியோகஸ்தர்கள் வரை தம்மால் இயன்ற மட்டும் முயன்றனர். இம்முயற்சிகளால் அதிகப் பயன் உண்டாகவில்லை. இப்பொழுது உண்டாய் செழித்துவரும் தியாஸபிமூலமாக ஸனாதன தர்மத்தின் கொள்கைகளாகிய கர்மவிதியும் மறுபிறப்பும் உண்டு என்று கைதிகளுக்குப் போதித்ததும் அவர்கள் மனம் சாந்தமாக அவர்கள் எளிதில் சீர்திருத்தினராம். தாங்கள் சிறைச்சாலையில் படும் துயரங்கள் யாவும் தாம் முன்னர் செய்த தீவினைகளின் பலன் என்றஞானம் அவர்களுக்கு சித்தஸமாதானத்தை எளிதில் உண்டாக்கியதாம். இவ்வாறு அறிந்து சாந்தம் அடையக்கூடிய புத்திசாலிகள் அநேகர் காலவித்யாஸத்தால் இப்பொழுதுசிறைச்சாலைகளில் ஏராளமாக இருக்கின்றனராம். இந்தக்கொள்கைகளை நன்றாக உணர்ந்த கைதிக்கு நன்மை விதைத்தால் நன்மை விளையும் தீமை விதைத்தால் தீமைவிளையும் என்பது நன்றாக பதிந்திருத்தலால் அவன் இதன் பின்பு நன்னடக்கையிலேயே ஸதாமுயலத்தொடங்குகிறான். மற்றொருவழி இந்தியானா என்ற மாகாணச் சிறைச்சாலையில் காணப்படுகின்றது. அந்த மாகாணத்தார் கொடுந்தொழில் செய்தல் முதலியகெட்டகுணங்கள் பெரும்பாலும் பரம்பரையாக விடாது வருவன என்ற நம்பிக்கையைப் பின்பற்றி இரண்டு புதிய வைத்தியர்களை நியமித்திருக்கின்றனரும். அவர்கள் செய்யவேண்டியது யாதெனில் அவர்கள் கைதிகளது மனோநிலை தேகநிலை முதலியவைகளை ஊன்றி நோக்கிவரவேண்டும், அப்படிப்பார்த்ததில் இவ்விருவிஷயங்களில் குறைவு அதிகமாகக் காணப்படுபவர்களின் ஆண்மையைக் குறைத்துவிடவேண்டும். கைதிகளை நடத்துவதற்கு ஏற்பட்ட இவ்விருவிதங்களுக்கும் எவ்வளவுவித்யாஸம்? முன்னது எவ்வளவு சிறந்ததாயும் ஸௌகரமாயும் இருக்கின்றதோ அவ்வளவு தாழ்ந்ததாயும் துக்கஹேதுவாயும் பின்னது இருக்கின்றது.

புகையில்லாப் பட்டணங்கள்.—இக்காலத்தில் மேனாட்டுப் பட்டணங்கள் ஒவ்வொன்றிலும் கைத்தொழிற்சாலைகள் அதிகமாக, எப்பொழுதும் பட்டணங்கள் இச்சாலைப் புகைகளாலேயே மூடப்பட்டிருக்கும். இதனால் இருட்டும் வாயுவில் அசுத்தியும் ஏராளமாக உண்டாகும். இந்த கஷ்டங்களை நிவர்த்தி செய்வதற்காக பர்ட் என்ற பிரகிருதி சாஸ்திரி சிக்காகோ என்ற பட்டணத்தில் தகுந்த ஏற்பாடுகள் செய்திருக்கிறாராம் அது பின் வருவன. புகை மறைவதற்கு முக்கிய ஸாதனம் சுடவைக்கவேண்டிய வஸ்துவிற்கும் நிலக்கரிஎரியும் இடத்திற்கும் 9 அடிக்குக்குறையாத தூரம் இருக்கவேண்டும் என்று அவர் கண்டுபிடித்தார். இதுவும் அல்லாமல் நெருப்பை சுடவைக்கவேண்டிய பாத்திரத்தின் முன்பாகத்தில் வைத்துவிட்டால் அதிலிருந்து வரும் புகை முதலிய உஷ்ணபதார்த்தங்கள் வஸ்து முழுவதும் போய் பின்புறம் வருங்கால் மறைந்துபோகின்றனவாம். இந்தவழிப்படி நடக்குங்கால் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்றுஉண்டு. எரிக்கும்படியானநிலக்கரிகள் எல்லாம் ஒரே பரிமாணம் உடையனவாக இருத்தல் வேண்டும். அநேகவித பருமனுடைய நிலக்கரிகளை எரித்தால் ஒரே உயரம் இசையாமற் போக புகை உண்டாக்கிக்கொண்டு தான் இருக்கும். இந்த ஏற்பாட்டின்படி பட்டணங்களில் இனிமேல் எல்லோரும் நடந்துவருவார்களாகில் ஒரு தலைமுறைக்குள் அமெரிக்காவில் புகையில்லாப் பட்டணங்களே ஏராளமாக உண்டாகிவிடும்.

***

ஜபான்தேசத்தின் வியாபார நேர்மை:—மேனாட்டில் காணப்படுவதுபோன்ற வியாபார விஷயங்களில் ஜபானில் பெரும்பாலும் நேர்மை சென்றவருஷம் வரையில் இல்லாமலிருந்ததாம். இதற்குக் காரணம், நல்லஸ்திதியில் இருக்கும் நாணயமான மனிதர்கள் வியாபாரத்தில் புகாமல் இருந்தது தான். பின்னர் வரவரஇவர்கள் ஏராளமாகப்புகுந்து விட இப்பொழுது முற்கூறிய குற்றம் வரவர மறைந்துகொண்டேவருகின்றது. இவ்விஷயத்தில் ஜபானியர்கள்படும் பாடு மிகஆச்சரியகரமானது. இதுபோலவே நமதுதேசத்திலும் நாணயஸ்தர்கள் வியாபாரங்களில் புகுந்து வியாபார நேர்மையை அதிகப்படுத்தவேண்டியது அதிக ஆவசியகம்.

***

நரமாம்ஸபக்ஷணிகள்:—இந்தஜாதி காட்டாளர்கள் ஆப்பிரிக்காவில் இன்னும் காணப்படுகின்றனர். அவர்களுள் ஸ்திரீகளிடம் மாத்திரம் இந்த கெட்ட

பழக்கம் காணப்படுவதில்லையாம். புருஷர்களுக்குள்ளும் சண்டை செய்யும் கூட்டத்தாருக்கே இத்தக் கெட்டகுணம் காணப்படுகின்றது. ஆகையால் இக்காட்டாளர்களுள் நடந்து கொண்டு இருந்தயுத்தங்களே இக்கெட்ட பழக்கத்திற்கு உற்பத்திஸ்தானமாக இருக்கலாம். இக்காட்டாளர்களுள்ளும் கடவுள் இருக்கிறார். ஆத்மாநித்யம் என்ற ஆஸ்திக நம்பிக்கைகள் காணப்படுகின்றனவாம்.

***

பிரகாசமான இராப்பறவைகள்.—சிற்சில விடங்களில் இம்மாதிரியான ஆந்தைமுதலிய பறவைகள் இருக்கின்றனவாம். இரவில் இவைகள் பார்ப்பவர்களுக்கு பிறைச்சந்திரன் போலவும், வண்டிவிளக்குகள் போலவும், காணப்படும். சிலஆந்தைகளுக்கு இந்த குணம் இருக்கின்றதாம். இம்மாதிரிப்பறவைகள் ஜனஸ்திதியிலிருக்கும்பொழுது அவைகளின் மார்பிலிருந்தும் இறகுகளின் அடிப்பாகங்களிலிருந்தும் இவ்வெளிச்சம் உண்டாகின்றதாம். இப்பறவைகள் இவ்வெளிச்சத்தை தமது இரையாகிய பிராணிகளைக் காணுவதற்கும் அவைகளை அசையவொட்டாது பயப்படுத்துவதற்கும் உபயோகப் படுத்துகின்றனபோலக் காணப்படுகின்றது. சிலர் இப்பிரகாசப்பட்சிகளே கொள்ளிவாய் பிசாசுத்தோற்றத்திற்கு காரணமாக இருக்கலாம் என்றும் இக்காலத்தில்அவை குறைந்ததற்கு காரணம் வேட்டையாடுபவரது சுறுசுறுப்பே ஒழிய வேறல்லவென்றும் அபிப்பிராயப்படுகின்றனர்.

***

ஆகாயத்தில் கிளம்பும்பொழுது நமக்கு உண்டாகும் அநுபவங்கள்:—முதலில் பூமியில் உள்ள வஸ்துக்கள் யாவும் மங்கலாகத் தெரியும். மேல்போகப்போக அவைகள் நன்ருக நமது கண்ணுக்கு புலப்படத்தொடங்கும். 100 அடி உயரம் போனஉடன் நாம் அசைவதாகவே நமக்குத் தோற்றுது. நமது மேல் அடிக்கும் காற்றுல் மாத்திரம் தான் நாம் ஒருவேளை கிளம்பிப்போகிறோமோ என்றஎண்ணம் நமக்கு உண்டாகும். ஆகாயத்தில் போகுங்கால் திடீரென்று விமானத்தை நாம் திருப்பினுல், நாம் வண்டி திடீரென்று திரும்புங்கால் அசைந்து படும்பாட்டை போன்ற கஷ்டம் அங்குகிடையாதாம். அதிவேகமாகப் போகுங்கால் அந்தயந்திரம் தடைபட்டபோதிலும் அதனுல் உள்ளிருப்பவர்களுக்கு குலுக்கல் முதலிய கஷ்டங்களோ இருக்கிறதில்லையாம்.

ஓர் அற்புத சொப்படி வித்தைக்காரன்.—இவன் செம்பினுலே ஓர் மண்டை ஓடுஒன்றுசெய்து அதை ஓர் மேஜையில் வைத்துவிட்டு அருகாமையில் நின்றுகொண்டு அதன்பல்லை எத்தனைதரம் வேண்டுமோனுலும் அடித்துக்கொள்ளும்படி செய்வானும். இதன் பின்பு ஓர் அங்குலம்நீளம் முதலியன உள்ளஓர்சதுர கட்டையை ஆகாயத்திலிருந்து உண்டாக்கி கையில் வைத்திருப்பான். அதுகையிலிருக்கையிலேயே இரண்டுமூன்று,நான்குஒன்பதுஅங்குலங்கள்நீளம்முதலியனஉள்ள சதுரக்கட்டையாகும்.பின்பு அவன் அதை ஸபையோர் முன்பாக மேஜைமேல்] வைப்பான். அது கிரமமாக $3\frac{1}{2}$அடி நீளம் முதலியன உள்ள சதுரக்கட்டையாகும், உடனே அதைத் தூக்கி எறிந்துவிட்டு ஓர் அழகிய ஸ்திரி வருவாளாம். வந்ததும் அவள் ஓடத் தொடங்குவாளாம். அப்பொழுது அவன் தனது கையை சுடக்குவானும். உடனே அவள் ஸபையோர் முன்பாகத் திடீரென்று நின்று எரிந்து சாம்பலாவாளாம். அவள் இருந்த இடத்தில் பெரும் ரோஜாக்கொத்துக்கள் உண்டாக அதை அவன் ஸபையோருக்குக் கொடுப்பானும். இப்படிப்பட்ட சொப்படி வித்தைக்காரன் மிகச் சிறந்தவன் என்று ஆங்கில பத்திரிகைகள் கொண்டாடுகின்றன. நம் தேசமாம் பரதகண்டத்தில் வாயுஸ்தம்பம்,ஜலஸ்தம்பம்,அக்னிஸ்தம்பம்முதலிய அற்புத வித்தைகளைக் காட்டும் திறமையுடைய மந்திரவாதிகள் அநேகர் இருக்கின்றனர். இவர்கள் எவ்வளவு சிறந்தவர்களாக இருக்கவேண்டும். முற்கூறிய சொப்படிவித்தைக்காரனை இவர்களோடு ஒப்பிடுங்கால் அவன் எந்தமூலை ?

***

அலை அடக்கும் விதம்:—அலைகள் அதிகமாக இருந்த ஆற்றில் அஸ்திவாரம் தோண்டிகொண்டிருக்கையில் ஓர் அதிகாரி தம் மருகாமையிலிருந்தகாற்றுப்பெட்டியில் அடைப்பட்டிருந்த நெருக்கப்பட்ட காற்றுனது ஓர் சிறு ஓட்டை வழியாக மெதுவாக வெளியே வந்ததால் அதன் அருகாமையிலிருந்த தண்ணீரில் அலை குறைந்திருந்ததைக் கண்டார். உடனே அவர் ஓர் ஸமுத்திரக்கரை சென்று அங்கு ஜலத்து ஓரத்திலிருந்து சுவர்கள் அருகாமையில் சிறு ஓட்டைகள் நிறைந்தகுழாய்களைவைத்து அவைகளுள் நெருக்கமான காற்றைப் போகவிட்டார். அது ஸமுத்திர ஜலத்துள் கொப்பளித்துவர அலை அந்த இடத்தில் குறைந்ததை அவர் கண்டார். இப்பொழுது அவர் ஸமுத்திரத்தில் ஓடும் கப்பல்கள் ஒவ்வொன்றிற்கும் தண்ணீர்மட்டத்திற்கு கொஞ்சம் கீழே முற்கூறியவாறு ஓட்டைகள் நிறைந்த நெருக்கமான காற்றுகள் உடைய குழாய்கள் தயார் செய்துகொண்டிருக்கிறாராம். இவர் காரியம் ஸித்தியானுல் பெரிய புயல் அடிக்கும் காலங்களில்கூடக்கப்பல்கள் தன் அருகாமையிலுள்ள அலைகளை அடக்கிக்கொண்டு நிர்பயமாக ஸமுத்திரங்களில் உலாவ இடமுண்டாகும்.

# விவேக போதினி.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருண்

மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி 1 } 1909-ஆ ஜூன்மீ { பகுதி 12

## பின் நோக்கு

### RETROSPECT

இதுதான் முதற்தொகுதி கடைசி ஸஞ்சிகை. இத்துடன் பத்திரிகை ஆரம்பித்து ஒரு வருஷம் ஆகின்றது. இதுவரையில் பகவத்கிருபையால் நாம் செய்திருக்கும் காரியங்களை ஒருங்குசேர்த்து நோக்கத் தருணம் இதுதான். பத்திரிகை ஆரம்பகாலத்தில் இதில் எவ்வெவ் விஷயங்கள் அடங்கியிருக்கும் என்று வாக்குத் தத்தம் செய்யப்பட்டிருந்ததோ அவ்வவ்விஷயங்களை எம்மால் இயன்றமட்டும் பிரசுரம்செய்ய முயன்றிருக்கிறோம் என்பது நமது சந்தாதார்களுக்கு இதற்குள் தெரிந்தே யிருக்கும். ஆதியில் நமக்கு இருந்த சந்தாதார்கள் தொகை இவ்வருஷத்திற்குள் நமது பத்திரிகையின் சிறப்பால் ஒழுங்காக அதிகரித்துக்கொண்டேவந்திருக்கிறது. இவ்விதமான சிறப்பு நமதுபத்திரிகைக்கு வருவதற்கு முதலில் பகவத்கிருபையும் அதன் வெளிப்படைத் தோற்றமாகிய விஷய தானம் செய்வோரது அன்புமேயாம். இந்த ஸந்தர்ப்பத்தில் நமக்கு வலுவிலே வந்து நமது பத்திரிகைக்கு விஷயதானம் செய்து அதைச் சிறப்புற்றோங்கும்படி செய்த அநேக அன்பர்களுக்கு நமது நன்றியறிதலை நாம் அவசியம் வெளியிடவேண்டியதே.

இப்பத்திரிகை நடந்துவருகையில் அநேக கனவான்கள் இதைப்பற்றிய தமது அபிப்பிராயத்தை வெளியிட்டு உதவியதில் இதன் சிறப்பு பலர் அறியும்படி வெளிவந்தது. வெகு ஸந்தோஷத்துடன் தமது அபிப்பிராயங்களை வெளியிட்ட மஹான்களுள் ம-া-া-ஸ்ரீ மஹா மஹோபாத்யாய பண்டித வே. ஸ்வாமிநாத அய்யர் அவர்கள்; திவான் பகதூர் ம-া-া-ஸ்ரீ R. ரகுநாத ராயர் அவர்கள் C. S. I.; திவான் பகதூர் ம-া-া-ஸ்ரீ V. ராகவாசாருலு B. A ஆகிய இவர்களைப்போன்ற சிலரது அபிப்பிராயங்கள் நமக்கு தக்க சமயங்களில் மிகுந்த உதவி புரிந்தன. பட்டணத்தில் பிரசுரமாகும் தின ஸஞ்சிகையையுடைய ஹிந்து, மெயில் முதலிய பத்திரிகைகளும் சிற்சில மாதங்களில் இப்பத்திரிகையைக்குறித்து விஸ்தாரமாக தமது அபிப்பிராயத்தை வெளியிட்டு எமக்குப் பேருதவி புரிந்திருக்கின்றன.

இப்பத்திரிகையை நடத்துவதில் எங்கள் முக்கிய நோக்கங்களாவன: தமிழ்மாத்திரம் தெரிந்த ஸ்திரீகள் புருஷர்கள், சிறுவர்கள் சிறுமிகள் ஆகிய இவர்களுக்கு ஆங்கிலம் முதலிய

மேல்நாட்டு பாஷைகளில் அடங்கியிருக்கும் விசேஷஞானத்தை வெளிப்படுத்தல், அவர்களுக்கு நமது வேதசாஸ்திரங்களுள் அடங்கியிருக்கும்விஷயங்களை நேரான வியாஸங்கள் மூலமாகவாவது அல்லது விசித்திர புராணகதைகள் மூலமாகவாவது வெளிப்படுத்தல், நமது தேசத்திய மஹான்களது சரித்திரங்களை வெளிப்படுத்தல் ஆகிய இவைகளே. இவைகளுக்கு தகுந்தபடி மதவிஷய வியாஸங்கள், ஸ்திரீகளுக்கான பக்கம், சிறுவர்களுக்கான பக்கம், விசேஷ வர்த்தமானம், சுகாதாரம், விவசாயம், இயற்கை அற்புதங்கள், நமது நோன்புகள் என்ற விஷயங்கள் தொடங்கப்பட்டுநடந்துவருகின்றன. இந்த நோக்கங்களுக்கு ஏற்ப நடந்துகொள்ள முக்கிய ஆதாரமாகிய எளிய பாஷா நடையை நாங்கள் ஒருக்காலும் கைவிடுவதில்லை. இதை முக்கியமாக வைத்துக்கொண்டே நடந்தால் நமது பத்திரிகை பலருக்கு உபகாரமாக இருக்கும் என்பது எங்கள் துணிபு.

இப்பொழுது நமது பத்திரிகையில் 32-பக்கங்களில்தான் விஷயங்கள் காணப்படுகின்றன. நமக்குச் சந்தாதார்கள் தொகை அதிகமானால் தான் இப்பொழுது குறைவாகஇருக்கும்வருஷ சந்தாவாகிய மூன்று ரூபாயை வைத்துக்கொண்டே எங்களுக்குபத்திரிகையின் பக்கங்களை அதிகப்படுத்தமுடியும். நமக்கு இப்பொழுதிருக்கும் சந்தாதார்கள் தம்மால் இயன்றவரையில் நமது பத்திரிகையை முன்னுக்குக் கொண்டுவருவது என்னும் ஸங்கல்பம் செய்துகொண்டு அதற்கு ஏற்ப நடப்பார்களாகில் நமது வாக்குத்தத்தத்தை நம்மால் எளிதில் பூர்த்திசெய்ய முடியும்.

இப்பத்திரிகையை எல்லாவிதங்களிலும் விருத்திசெய்யத்தக்கமுயற்சிகள்செய்யப்படும். இப்பொழுதிருக்கும் விஷயதானம் செய்வோரது ஸஹாயத்தாலும், இன்னும் எமக்குக்கிடைக்கப்போகும் அன்பரது ஸஹாயத்தாலும், நமது காரியம் கைகூடும் என்று நாம் நம்புகிறோம். எல்லாவற்றினுள்ளும் இருந்து அவைகளை மேலான நிலமையையே நோக்கிச்செல்லும்படி தூண்டும் பரம்பொருள் நமது எண்ணத்தை காலக்கிரமத்தில் நிறைவேற்றுவார் என்று நம்பி இவ் விஷயத்தில் தொழிற்பட்டு ஸதா பகவத்கிருபையையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றோம்.

## வேதங்களின் பிரமாண்யம்
### VEDAS, AUTHORITATIVE

வேதங்களில் சிற்சில இடங்களில் விருத்தமாகத்தோன்றும் விஷயங்கள் காணப்படுகின்றன என்று நாம் முன்னமேயே ஒருவாறு குறிப்பித்திருக்கிறோம். இதனால் சிலருக்கு வேதங்களைச் சிறந்தப்பிரமாண நூல்களென்று ஒப்புக்கொள்ள மனம் துணியவில்லை. வேதங்களை சிறந்த பிரமாணநூல்களென நாம் ஸ்தாபிக்கவேண்டுமானால் அவ்வாறு விருத்தமாய்க் காணப்படுபவைகள் உண்மையில் அப்படிப்பட்டவைகளல்லவென்றும், ஆழ்ந்து யோசிக்கப் புகும் ஒருவனுக்கு அவைகளுள்ளும் நல்லொழுக்கம் மனோநிரோதம் முதலியவைகளைப்பற்றிய சிறந்த ரகஸியங்கள் அடங்கியுள்ளனவென்று தெரியுமென்றும் நாம் ரூபிக்கவேண்டும். இவ்விஷயங்களை யுக்திபூர்வகமாக மாதவாசாரியர்யென்றும் சாயனர் என்றும் பெயர்பெற்ற ஒரு சிறந்தமஹான் தாம்செய்த சிறந்த வேதபாஷ்யத்தின் ஆரம்பத்தில் எழுதியுள்ள பீடிகையில் வெகு விசித்திரமாக ஸ்தாபித்து இருக்கிறார். இச்சிறந்த மஹான் வடமொழியிலுள்ள வேதவேதாங்கங்களையும் பலவகையான லக்ஷண லக்ஷியங்களையும் ஓதியுணர்ந்துவிருத்தி செய்துவந்து, புக்காஎன்ற விஜயநகரத்தரசன் பிரதானமந்திரியாய் இருந்து இராஜ்ஜிய தந்திரத்தைத் தம்திறமையால் ஒழுங்காகநடத்திவந்தவர். இவர் வேதங்களுக்கு ஒருபாஷ்யம் எழுதாமல்போனால் வேறு நூல்களில் வழங்காத பதங்களையுடைய பாஷா வைசித்திரியங்கள் நிறைந்த வேதங்களின் அர்த்தம் மிகவும் கற்றுத்தேர்ந்த சில வித்வான்களைத்தவிர மற்றைய எல்லோருக்கும் எக்காலத்தும் தெரியாமலே போய்விடும். முற்கூறியபடி நம்மவர்களுக்கு வேதங்கள் சிறந்த பிரமாண நூல்கள் என்ற விஷயத்தில் விபரீத எண்ணங்கள் உண்டாகி மனம் அழுக்கேறுதிருப்பதற்காக இவ்விஷயத்

தில் சாயனர் எடுத்துக்காட்டியிருக்கும் ஆக்ஷேப ஸமாதானங்களை ஒருவாறு சுருக்கிச் சொல்லுவோம்.

சாயனர் வேதங்களில் நம்பாத ஒருவன் பின்வருமாறு வேதங்களின் பிரமாண்யத்தை ஆக்ஷேபிப்பதாக வைத்துக்கொள்ளுகிறார். 'வேதங்களே சிறந்த பிரமாணங்கள் எனநம்ப இடமில்லை, ஏனெனில் அவைகளில் உண்மையான நிரூபணத்தின் அங்கங்கள் காணப்படவில்லை. சிலர் உண்மையான நிரூபணமென்றும் அது உண்மை ஞானத்திற்குத் தகுந்த மார்க்கம் என்றும் சொல்லுகிறார்கள். வேறு சிலர் முன் நமக்குத்தெரியாத அரிய விஷயங்களை அறியும்சக்தி இதனால் உண்டாகுமென்று சொல்லுகிறார்கள். இவ்விரு விஷயங்களும் வேதங்களில் காணப்படவில்லை. வேதங்களில் பெரிய பாகங்களாகிய மந்திரங்களிலும், பிராம்மணங்களிலும் அர்த்தமே புலப்படாத அநேக வாக்கியங்கள் காணப்படுகின்றன. சில வாக்கியங்கள் நிச்சய ஞானத்திற்கு ஹேதுவின்றி ஸந்தேக வாக்கியங்களாகவே இருக்கின்றன. இதற்கு உதாரணம் 'கடவுள் மேலே இருக்கிறாரோ அல்லது கீழே இருக்கிறாரோ என்பது அறியமுடியாது' என்ற வாக்கியமே. ஒரே விஷயத்தைப்பற்றி வேதங்களில் விரோதமான வாக்கியங்கள் காணப்படுகின்றன. இதற்கு உதாரணம் ஓரிடத்தில் 'ருத்திரர் ஒருவர்' என்றும் வேறொரு இடத்தில் 'ருத்திரர் அநேகர்' என்றும், ஓரிடத்தில் 'கடவுள் முதலில் இருந்தார்' என்றும் வேறோரிடத்தில் 'முதலில் ஒன்றுமில்லாமல் சூனியமாயிருந்தது' என்றும் கூறும் வேதவாக்கியங்களே. சில அறிவில்லாப் பிராணிகளை அவ்வறிவுடையனபோல எண்ணி வேதங்கள் கூறுகின்றன. இதற்கு உதாரணம் பச்சிலைகளை அழைத்துத் தம்மை இரட்சிக்கவேண்டுமென்பதும் கற்களைநோக்கி தாம் சொல்லுவதை கவனித்துக் கேட்கவேண்டுமென்பதும் அடங்கிய வேதவாக்கியங்களே. ஒரே கர்மம் செய்வதைப்பற்றி வேதங்களில் விரோதமான இரண்டு வாக்கியங்கள் காணப்படுகின்றன. ஒரேவிதமான ஹோமத்தை ஸூர்யன் புறப்படுமுன் நடத்தவேண்டும் என்று ஒரு சாகையும், அதையே சூரிய உதயத்திற்குப்பின் நடத்தவேண்டுமென்று வேறொரு சாகையும் கூறுவதுமே, இதற்கு உதாரணம். இவைகளெல்லாம் உற்று நோக்குவோர்க்கு ஸந்தேகத்தையும், பரஸ்பர விரோதத்தையும், சிறுபிள்ளைத்தனமான எண்ணங்களையும் நன்றாய்க் காட்டுகின்றன. தொன்றுதொட்டு வேதங்களுக்கு எவ்வளவு கௌரவம் ஏற்பட்டிருந்தபோதிலும் புத்தியுள்ள ஒருமனிதனும் முன்சொன்ன வாக்கியங்கள் அடங்கிய வேதங்களை ஞானத்தைப் புகட்டும் கருவிகள் என மதிக்கமாட்டான்.

"இப்படியே முன் நமக்குத்தெரியாத புதிய ஞானத்தை வேதங்கள் புகட்டுகின்றனவென்பதும் தள்ளுண்டுபோகும். உதாரணமாக ஒரு யாகத்தில் எஜமானனாய் இருப்பவன் மந்திரித்த ஜலத்தைத் தனது தலையில் விட்டுக்கொள்ளும் பொழுது சொல்லும் மந்திரம்" "இந்த ஜலம் எனது தலையை நனைக்கட்டும்" என்ற அர்த்தத்தையுடையது. இவன் இந்த வேத மந்திரத்தைச்சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அத்தண்ணீரைத் தலையில் விட்டுக்கொண்டால் தலையைத் தவறாது நனைக்குமன்றோ? இந்த மந்திரம் சிறுபிள்ளைத்தனமும் அனாவசியமுமாக நமக்கு நன்றாய்த் தெரிந்ததையே மறுபடியும் கூறுகிறதேயொழிய வேறொன்றுமில்லை. 'ஓ, மாலையே! எனது சிரத்தில் மேவி எனது முகத்திற்கு அழகுசெய்' என்றொரு வேதமந்திரம் இருக்கிறது. இது கல்யாண அவஸரத்தில் பெண் மாப்பிள்ளைகளுக்கு நன்மை உண்டாவதற்காக அவர்களது தலையில் புஷ்பமாலைகளைச் சூட்டும்பொழுது சொல்லப்படுகிறது. இம்மந்திரத்திலும் ஸாதாரணமாக யாவரும் அறிந்த விஷயந்தவிர வேறு புதிதாகிய ஒருவிஷயமும் அடங்கியிருப்பதாகத் தோன்றவில்லை. இவ்விரு வாக்கியங்களும் நாம் முன்னே அறியாத புதிய

விஷயங்களை வேதங்கள் சில இடங்களிற் கூற வில்லை என்பதற்கு உதாரணம்."

முன் எடுத்துக்காட்டப்பட்ட ஆக்ஷேபங்களுக்குப் பாஷ்யகருத்தாவான சாயனாசாரியார் பின்வருமாறு சமாதானம் சொல்லுகிறார். "வேதங்கள் பல அரும்பதங்களும் நடைவேறுபாடும் மிக ஆழ்ந்தகருத்தும் உடையன ஆதலால் அவைகளில் அடங்கிய உண்மைப்பொருளை உணரமாட்டாமல் வேதபாஹ்பர்கள் வேதங்களில் அர்த்தமில்லா வாக்யங்கள் காணப்படுகின்றனவென்று சொல்லுகிறார்கள். யஸ்கர் முதலிய பதப்பிரயோக விவரத்தை நிரூபணம் செய்யும் நிருக்த கர்த்தாக்களது ஸஹாயத்தால் இம்மாதிரியான வாக்கியங்களிலும் ஒரு பொருள் அடங்கியிருக்கிறதென்றும் அதுவும் சிறந்த பொருளாயிருக்கிறது என்றும் எளிதில் உணரலாம். அறியாமையால் வேதவாக்கியங்களுக்குப் பொருள் உணர முடியாமற்போனால் அது வாக்கியத்தின் குற்றமா? குருடனுக்கு எதிரேயிருக்கும் கம்பம் தெரியாமலிருந்தால் யாராவது கம்பத்தினிடத்தில் குற்றம் கூறுவார்களா? குற்றம் குருடனது கண்ணிலல்லவோ இருக்கிறது?

அடுத்த ஆக்ஷேபம் "வேதங்களில் ஸந்தேகத்திற்கு இடம் கொடுக்கும்படியான வாக்கியங்கள் காணப்படுகின்றன. அதற்கு உதாரணம் 'கடவுள்கீழேதான் இருக்கிறாரோ மேலேதான் இருக்கிறாரோ ஸ்திரமாய் சொல்லமுடியாது' என்ற வாக்கியம்" என்பதே. இவ்வாக்கியத்தை ஸந்தேஹ வாக்கியமென்று எண்ண இடமில்லை. இவ்வாக்கியமானது ஆதிகாரணமாகியும், பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகியுமுள்ள கடவுளை அளவிடமுடியாது, அவர் ஒன்றிற்கும் உட்பட்டவர் அல்லர் என்றபெரிய எண்ணத்தைக்கேட்போர் மனத்தில் உண்டாக்குவதற்கு ஏற்பட்டது. கடவுள் மனதிற்கும்வாக்குக்கும் எட்டாதவராகையால் அவர் இன்ன இடத்தில்தான் இருக்கிறார் என்று குறிப்பிட்டு வற்புறுத்திச் சொல்ல முடியாதென்பது இவ்வாக்கியத்தின் உண்மைப்பொருள். கடவுள் இத்தன்மையை உடையவர் என்னும் விஷயம், ஆசாரியன், வேதம், பரம்பரை ஞானம் இவைகளின் ஸஹாயமின்றி ஒருவராலும் அறியமுடியாது. இதையே மற்றைய மந்திரங்களும் உறுதிப்படுத்துகின்றன. "இதற்கு ஆதிகாரணத்தை உள்ளபடி அறிந்தவர் யார்?" என்றமந்திரமும் ஒருஆதாரம்.

வேதங்களில் பரஸ்பர விருத்தமான வாக்யங்கள் காணப்படுகின்றன என்ற ஆக்ஷேபமும் அறியாமையாலேயே ஏற்படுகிறது. இதற்கு ஓர் இடத்தில் 'ருத்திரன் ஒன்றே' என்பதும் மற்றோரிடத்தில் 'ருத்திரர் அநேகர்' என்பதுமே உதாரணமாக எடுத்துக் காட்டப்பட்டது. ஆழ்ந்து நோக்கினால் இதிலும் விரோதாம்சம் இல்லை. திருமூர்த்திகளுள் ஒருவராகிய ருத்திரர் உண்மையில் ஒருவராயிருப்பினும் தமது சக்தியால் அநேகர் போற் பிறருக்குத் தோன்றலாம் என்பதே, இவ்வாக்கியங்களில் அடங்கிய உண்மைப்பொருள். ஒரே விஷயத்தைப்பற்றி இரண்டுவிதமாக வேதங்களில் சொல்லியிருப்பதற்கு "முதலில் கடவுள் இருந்தார்" என்ற வாக்கியமும் "முதலில் ஒன்றுமில்லாமல் சூனியமாய் இருந்தது" என்ற வாக்கியமும், இரண்டாவது உதாரணமாகக் காட்டப்பட்டது. இவைகள் பரஸ்பரம் விருத்த வாக்கியங்களல்ல. இம்மாதிரியான எண்ணம் நமக்கு வருவதற்குக் காரணம் வேதவாக்கியங்களில் காணப்படும் ஸத், அஸத்என்ற இருபதங்களது உண்மைப்பொருள் இவையென்று உணராமையேயாம். ஸத் என்பதற்கு திரிகாலத்தில் அபாத்தியமான (அதாவது மாறாத) அறிவு அல்லது கடவுள் என்பது பொருள். அஸத் என்பதற்கு அஞ்ஞான ரூபமாயும் அனாத்ம ரூபமாயும் உள்ளஅசித் என்பது பொருள். சித்தும் ஜடமும் தொன்றுதொட்டு இருப்பவனே ஆகையால் சித்தின் உருவைப்பற்றி வேதங்கள் சொல்லுங்கால் கடவுள் முதலில் இருந்தார் என்றும், அசித்தின் உருவத்தைப்பற்றிக் கூறுங்

கால் ஸ்தூலமான அசித் ஆதியில் இல்லையென்றும் கூறுகின்றன.

வேதவிரோதிகள் வேதங்களில் அறிவில்லா வஸ்துக்களை அறிவுள்ள வஸ்துக்களைபோல பாவனை செய்யப்பட்டிருக்கிறது ஆதலால் அவற்றை முக்கியப்பிரமாணங்களாக ஒப்புக்கொள்ளக்கூடாது என்று சொல்லுகிறார்கள். இதுவும் வேதங்களின் உண்மை நோக்கத்தையும் உட்கருத்தையும் அறியாத தோஷத்தால் உண்டானதே. பிரபஞ்சத்தில் காணப்படும் விசித்திர பாகங்களும், அவைகளில் காணப்படும் கனிவர்க்கம், செடிவர்க்கம், பிராணிவர்க்கம் ஆகிய இவைகளிலும் ஒவ்வொன்றையும் ரக்ஷித்துக்கொண்டு ஒவ்வொருதேவதை இருக்கிறது என்பது வேதங்களின் கொள்கை. கடவுளது அதிகாரத்திற்குட்பட்டு இத்தேவதைகள் ஒவ்வொரு வர்க்கத்திலடங்கியவைகளது தோற்றம், விருத்திக்ஷயம் இவைகளை மேற்பார்வை பார்த்து வருகின்றன. இந்த உண்மையை நமது மஹான்கள் வேதங்களிலிருந்து கண்டு தெளிந்து நாம் எளிதில் உணரும்படி வெளியிட்டிருக்கிறார்கள். ஒரு செடியிலிருந்து ஒரு புஷ்பத்தையாவது ஒருபழத்தையாவது பறிக்கவேண்டின் அதற்கு அதிபதியாகிய தேவதையினிடமிருந்து அதனைப் பறிப்பதற்கு அநுமதிபெற ஒருமந்திரத்தை வேதம் சொல்லுகிறது. இதைச் சொல்லிக்கொண்டே ஒரு செடியிலிருந்து புஷ்பம்முதலியவைகளை பறிக்கத் தொடங்கவேண்டும். பிரபஞ்சவைசித்திரியம், ஒழுங்கு இவைகளை நன்றுயறிந்தருஷிகள் இவ்வாறு அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். இந்தக்கொள்கைகளைப் பின்பற்றியே வேதங்களில் அறிவில்லா வஸ்துக்களை நோக்கிச்சொல்லும் மந்திரங்களுக்குப் பொருள் கொள்ளவேண்டும். மரம் கல் முதலியவைகளை நோக்கிக் கூறும் மந்திரங்கள் அவைகளையே நோக்கிக் கூறப்பட்டனவென்று எண்ணிவிடக்கூடாது. அவைகளில் தோன்றுதிருந்து தொழில் நடத்தும் அதிஷ்டான தேவதைகளை நோக்கித்தான் அம்மந்திரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவென்று தெரிந்து கொள்ளவேண்டும். இந்தக் கொள்கையை வேதவியாஸர் தாம் செய்த பிர்ம்மசூத்திரத்தில் நன்றாய் வெளியிட்டிருக்கிறார். ஆகையால் வேதங்கள் உண்மை ஞானத்தை உண்டாக்கும் தன்மை வாய்ந்தவைகளல்லவென்று ஒருவராலும் ஸ்தாபிக்க முடியாது.

இம்மாதிரியான யுக்திவாதங்களால் வேதங்கள் நாம் முன்னறியாத விஷயங்களை நமக்குப் புகட்டுகின்றனவென்பதை ஸ்தாபிக்கலாம். இந்திரியமூலமாய் வரும் ஞானங்களுக்கு மேற்பட்டதும் எந்த இந்திரியங்களாலும் அறியமுடியாததுமான ஆத்மஞானத்தை வெளியிடும் குணம் வாய்ந்து இருத்தலால்தான் பலஜாதியாரது மத நூல்களுக்கும் அதைப் போன்ற நமது வேதங்களுக்கும் இவ்வளவு மேன்மையுண்டாகி யிருக்கின்றது. வேதங்களில் நாம் இந்திரியமூலமாய் அறியக்கூடிய விஷயங்கள் மாத்திரம் அடங்கியிருக்குமேயானால் அவைகளால் நமக்கு ஒருபயனும் இல்லை. இவ்வாறு வேதங்கள் மேன்மை வாய்ந்து இருப்பின் அவைகளில் பூமாலையைத்துதிப்பதும் மந்திரித்த தண்ணீரை வேண்டிக்கொள்வதும் ஆகிய சிறுபிள்ளைத்தனமான விஷயங்கள் அடங்கியிருப்பானேன்? மாலையைத் தலையில் அணிந்துகொண்டால் நமக்கு அழகு வருமென்பதும் தண்ணீரைத் தலையில் விட்டுக்கொண்டால் தலை நனையும் என்பதும் யாவரும்அறிந்த விஷயமன்றோ? என்றால் உலகத்திலுள்ள ஒவ்வொருவஸ்துவிலும் இம்மாதிரிமந்திரங்களால் துதிக்கப்படும் அதிஷ்டான தேவதை உண்டென்பது எல்லாருக்கும் தெரிந்தவிஷயமல்ல. ஸநாதனதர்மத்தில் காணப்படும் வேறு எந்த சாஸ்திரங்களிலும் இம்மாதிரி அறிவில்லா வஸ்துவை நோக்கிக்கூறும் மந்திரம் காணப்பட்டால், நாம் எப்பொழுதும் அது அறிவில்லாவஸ்துவை நோக்கிச் சொன்னதேயில்லை, அதனுள் இருக்கும் கடவுளது அம்சமான அதிஷ்டான தேவதையையே நோக்கிகூறியது

என்று அறிந்து தெளியவேண்டும். முன்காலத்தில் இருந்த ருஷி சிரேஷ்டர்களுக்கு "பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்" த்தோன்ற 'ஸதா நாம் கடவுளது ஸந்நிதானத்திலேயே இருக்கிறோம்' என்று அவர்கள் எண்ணினார்கள். ஆதலால் அநேகந்தரம் வெளியில் காணப்படும் ஸ்தூலவஸ்துவிற்கும் அதனுள் ஆடும் பரஞ்சோதிக்கும் வித்தியாஸம் தெரியாதவர்கள்போல அவர்கள் பேசுவார்கள். ஆதலால் இந்த வேத ரகஸ்யத்தை அறிந்த புத்திமான்கள் யாவரும் சிறுபிள்ளைத்தனமான எண்ணங்களையும் விருத்த வசனங்களையும்கூறிய து கூறல் என்ற குற்றத்தையும் வேதங்கள் உடையனவென்று ஒருநாளும் குற்றம் கூற மாட்டார்கள்.

மேலும் வேதவிரோதிகள் ஒரேகர்மவிஷயத்தில் முரணான இரண்டு விதிகள் வேதங்களில் காணப்படுகின்றன வென்று அவைகளை குற்றம்கூறி, அதற்கு உதாரணமாக ஒரு ஹோமத்தை வேதங்கள் ஓரிடத்தில் ஸூர்யோதயத்திற்குமுன் செய்யவேண்டுமென்றும் மற்றோரிடத்தில் ஸூர்யோதயத்திற்குப் பின் செய்யவேண்டுமென்றும் சொல்லுவதை எடுத்துக்காட்டுகிறார்கள். ஒரே அதிகாரியைநோக்கி இவ்வாறு வேதம் விதிக்குமாயின் இவை முரணாகக் காணப்படுகின்றனவென்று சொல்லுவது நியாயமே. உண்மையில் அப்படிக்கூறவில்லை. வெவ்வேறு சாகைகளைப்பின்பற்றி வெவ்வேறு நிலைமையிலிருக்கும் அதிகாரிகளின் பேதத்தை உத்தேசித்து வேதங்கள் இம்மாதிரியான விதிகளை விதிக்கின்றன. அவசியம் யாவரும் செய்யவேண்டிய ஒரு கர்மத்தின் விஷயத்தில் அது விதிக்கும் காலம் முதலிய சிறியவிஷயங்கள் மாற்றத்தக்கவைகளாயிருந்தால், தேசபேதம், வயோபேதம், தேகஸ்திதி முதலிய பேதங்களால் சிலருக்கு அந்தக்கர்மம் செய்யமுடியாமலே போய்விடுமென்பதுபற்றி அதை யாவரும்விடாது செய்தற்பொருட்டு அவரவாது பேதாம்சங்களை உத்தேசித்து அக்கர்ம விஷயத்தில் வெவ்வேறான விதிகளை வேதங்கள் உடையனவா யிருக்கவேண்டியது அவசியம் தான். இங்கு ஒருவாறு எடுத்துக்காட்டிய மாதிரியே விஸ்தாரமான தர்க்கவாதத்தால் வேதங்களில் உண்மை நிரூபணத்தினது அங்கங்கள் யாவும் காணப்படுகின்றன என்று சாயணாசாரியர் ஸித்தாந்தப்படுத்தியிருக்கிறார்.

வேதங்களின் விஷயத்தில் விரோத அபிப்பிராயமுண்டாகும்படியான பக்ஷபாதம் துர் அபிமானம் முதலியவைகள் அற்றமனதை உடையவர்களில் யார்தான் வேதங்களில் அடங்கியிருக்கும் அரியவிஷயங்களைக்கண்டு ஆச்சரியப்படமாட்டார்கள்! இதனால்தான் உண்மைஉணர்ந்து உய்யவேண்டிய விஷயத்தில் வேதங்களைச் சிறந்தப் பிரமாண நூல்களென்று முற்காலத்து ருஷிசிரேஷ்டர்கள் கொண்டாடினார்கள். இதற்கு அடுத்தபடியில் மனிதனுடைய யுக்திவைக்கப்பட்டிருக்கிறது. இதன்பின்பு கடைசியாக மனிதனது இந்திரிய மூலமாய் வரும் ஞானம் பிரமாணமாக வைக்கப்பட்டிருக்கிறது. இந்திரிய மூலமாய் வரும் ஞானம் உண்மையா யிராதாகையால் நாம் இந்திரியங்களையே பிரமாணக் கருவிகளாக நம்பி நடத்தல்கூடாது. இந்திரியமூலமாய் நாம் அடையும் ஞானங்களில் சில நம்பக்கூடாதவைகளாயும் சில நம்பக்கூடியவைகளாயும் இருக்கின்றன. புத்திமான்களாயும் மஹான்களாயும் இருப்பவர்களால் அங்கீகரிக்கப்பட்ட இந்திரியஜன்ய ஞானங்களையெல்லாம்தடையின்றி நம்பலாம். அவ்வாறின்றிப் பெரியோர்களுள் அபிப்பிராயபேதம் காணப்படுகிற இந்திரியஜன்ய ஞானங்களை நாம் ஸந்தேகமின்றி நம்புதல் கூடாது. புத்திமானானவன் இம்மாதிரியான ஞானங்களின் விஷயத்தில் நன்றாக ஆராய்ந்து உண்மையல்லாதவற்றைத் தள்ளி உண்மையை அங்கீகரித்தல்வேண்டும். யுக்திக்கு இதைவிட மேலான நிலைமை கொடுக்கப்பட்டிருக்கிறது. உண்மையல்லாதவைகளைப் பிரித்த பின்னர், மீதி உள்ளவைகள் தம்முள் காணப்படும் ஒற்

றுமைகளை ஆராய்ந்து நோக்குவதிலிருந்து உண்டாகும்பொது உண்மைகளின்பேரில்யுக்தி என்பது உண்டாவதால், அஃது இந்திரிய ஜன்ய ஞானத்திற்கு மேலானபடியில் வைக்கப் பட்டிருக்கிறது. வேதங்கள் இந்தச்சிறந்த யுக்திக்கும் மேலான இடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. பஞ்சபூதங்களாலாகிய மாம்ஸக்கூட்டிலிருக்கும் வரையில் நமக்குள்ள அறிவிற்கு அப்பாற்பட்டு நிற்கும் பரம்பொருளைப்பற்றி வேதங்கள் கூறுவதால் அவைகளுக்கு இம்மேன்மையானநிலை கிடைத்தது. இவ்வளவு மேன்மையான உண்மைகளைப்பற்றிச் சொல்லுவதோடும்கூட உலகவாழ்க்கையாகிய மாயத்திற்குத்தகுந்த பரிஹாரமாகிய பரமாகவியத்தையும் வேதங்கள் வெளியிட்டிருக்கின்றன. மேலான ஸ்வானுபவம் இருந்தால் அல்லது வேதங்களில் அடங்கியிருக்கும் அனுபவ வாக்கியங்களது உண்மைகளை உள்ளவாறு அறிந்து தெளிதல் முடியாது. வேதங்களில் அடங்கியிருக்கும் உண்மைகளைச் சேர்த்தால் கடவுளது செயலாய்விடுதலால் அவை கடவுள் ஒருவருக்குத்தான் பூர்ணமாகத்தெரியும். இத்தன்மையான விஷயங்கள் நமது அனுபவத்தில் அப்போதைக்கப்போது வந்திராதவைகளாயிருந்தபோதிலும், மேலான நிலையிலிருந்து நமது வேதங்கள் மூலமாய் அவைகள் உண்மைதானென்று வற்புறுத்தும் மஹான்களது ஆப்தவாக்கியத்தை நாம் எவ்வாறு நம்பாதிருப்பது. இம்மேன்மைவாய்ந்த மஹான்களது ஆப்தவாக்கியங்களாலும், வேதங்களில் பிரபஞ்சம் உலகவாழ்க்கை ஆகிய இவைகளின் நிஜஸ்வரூபம் அடங்கி யிருக்கின்றதினாலும் வேதங்களுக்கு நியாயமாகத்தான் பிரமாணங்களுள் பிரதானமான நிலைகொடுக்கப்பட்டிருக்கிறது.

வேதங்களது மேன்மையைப் பார்க்கும் பொழுது அவை முதன்மையான பிரமாணமாவதற்கு வேறு ஆதாரம் வேண்டுவதில்லை என்று சாயனாசாரியர் சொல்லுகிறார். ஸகல ஒளிகளையும், தன்னிடத்தில்உடைய சூரியன் தனது ஸ்வயம் ப்ரகாசத்தாலேயே யாவரும் அறியும்படி விளங்குகிறான். அவனைக்காண விளக்கு முதலியவைகளின்ஸஹாயம்வேண்டியதில்லை. இதுபோலவே வேதங்களின் விஷயத்திலும், பூர்வபக்ஷவாதிகளைப்போல 'ஒன்றாவது ஸ்வதஸ்ஸித்தமாய் உலகிலிருக்க இடமில்லை, அப்படியிருப்பதாக எண்ணித் தர்க்கித்தல் ஒருவன் தன் கழுத்தில்தான் ஸவாரி செய்யுந்திறமை வாய்ந்தவன் என்று விதண்டாவாதம்பண்ணுவதற்கு ஸமானமாகும்,' என்று ஆக்ஷேபிப்பதற்கு தகுந்த ஆதாரம் இருப்பதாகக் காணப்படவில்லை. நொண்டியாயிருப்பவனொருவனைத்தான் வேறொருவன் தோளின் மேல் எடுத்துச் செல்லவேண்டும். அரோகதிடகாத்திரனாய் இருக்கும் ஒருவனுக்கு இம்மாதிரியான ஸஹாயம் யாதொன்றும் வேண்டாம். அரோகதிடகாத்திரரான மனிதர்களைப்போன்றவை வேதங்கள்; மனிதனது யுக்தியும் இந்திரிய ஜன்ய ஞானமும் அவைகளின் குறைகளினால், முடவனுக்கு ஸமானமாகும். ஆகையால் வேதங்களில் காணப்படும் உண்மைகளோடு யுக்தி முதலியவைகளால் அறியப்படுவன பொருந்தினால்தான் இவைகளை உண்மை என ஒத்துக்கொள்ளலாம். ஆகையால்தான் வேதங்களை யாவரும் முக்கியப் பிரமாணங்களெனத் தடையில்லாது அங்கிகரிக்கின்றனர். இவ்வாறு எக்காலத்திலும் மாறாது சிறந்த உண்மைகளை இவைகள் போதிப்பதால் கடவுளது பிரஞ்ஞையே வேதங்களாகப்பரிணமித்தன என்று சொல்லுவதற்கு என்னதடை,

# ராய் பஹதூர் அநந்தா சார்லு, ஸி. ஐ. இ.

## RAI BAHADUR P. ANANDA CHARLU, C. I. E.



"தொட்டனைத்தூறு மணற்கேணி; மாந்தர்க்குக்கற்றனைத்தூறு மறிவு" (திருக்குறள்)

மணல்வெளியாக ஆறு இருந்தபோதிலும் அதைத் தோண்டத் தோண்ட ஊற்று பெருகும். மனிதனும், உருவம் பார்க்க மனதிற்கின்பம் பயக்கமுடியாதாயிருக்கலாம். அம்மனத்தைக் கல்வி என்னுமாயுதங் கைக்கொண்டு கிண்டக் கிண்ட அதில் அளவிட முடியாமல் அறிவாகிய வெள்ளம் ஊறிவெளியோடும். பலாப்பழமானது பார்க்க கரடுமுரடாகத் தான் இருக்கிறது. அதைக்கத்திகொண்டு அறுத்தால் உள் இனிமையைத்தரும் பழத்தைக் காண்கிறோம். அது கண்ணுக்கும் இனிமை ஆகிறது. நாக்கானது அதை அடைகிறது. மனது அவ்வின்பத்தை அனுபவிக்கிறது. இதே விதம்தான் பார்ப்பதற்கு அழகில்லாமல் மனிதர் இருக்கலாம். அவரை அவர் மனத்தின் அழகுப்பொலியச் செய்யினும் செய்யலாம்.

இதற்கு சில நாள்களுக்குமுன் காலஞ்சென்ற ராய்பஹதூர் அனந்தா சார்லு அவர்கள் சான்ற அத்தாட்சியாய் இருக்கிறார்.

இவர் சாலிவாஹனசகம் 1765-ம் வருஷம் நற்குலத்தில் உதித்தவர். உயர்குடிப்பிறப்பும் சிறந்த கல்வியும் அவர் சிறுவயதிலேயே இருபுஜங்களாக வளர ஆரம்பித்துவிட்டன. சின்னஞ்சிறு வயதிலேயே தன் தாய் பாஷையாகிய தெலுங்கை ஸந்தேகமற உணர்ந்து, அதில் ஆவலடங்காது, ஸம்ஸ்கிருதபாஷையில் தேர்ச்சியடைய வேண்டும் என்ற பேராவல் இவர் மனதைக் குடிகொண்டுவிட்டது. ஆங்கிலப் பயிர்ச்சியும் சிறுவயதிலேயே முதிர்ந்தது. அப்பாஷையில் ஸத்கிரந்தம் ஒவ்வொன்றையும் பார்த்து அதின் ஏற்றத் தாழ்வை எல்லா மாராய்ந்து தனக்காக தனியாக ஒருநடை அப்பாஷையில் செய்து கொண்டுவிட்டார். இவருடைய வாக்சாதுர்யமும், இவர்படிப்பின் அருமையும் உழைப்பும், சாந்தஸ்வபாவமும் இவரை சிறுவயதிலேயே பெருமைபெறச் செய்தன. இவர் வடமொழியில், தான் படித்தது போதாதென்று வடக்கு சென்று அவ்விடம்படித்து நவத்வீப பண்டிதர்களால் பரீக்ஷிக்கப்பட்டு அவ்விடத்தில் 'வித்யா விநோதன்' 'விசாரதன்' என்னுமிவ் விருபட்டமும் அவர்களால்அளிக்கப்பட்டார். இதோடு அவர் நின்றுவிடவில்லை, தன் ஸ்வய பாஷையில் அநேக உயர்ந்தநாடகங்களும் நூல்களுமியற்றி பிரக்யாதி அடைந்தார். வித்வன் மனோரஞ்சனி என்னும் சபையொன்றுண்டாக்கி நாடகங்களை ஆடும்விதத்தை புதிப்பித்து காலக்கிரமத்திற் கேற்றவண்ணம் திரையைச்சீர்திருத்தி பள்ளிக்கூத்தாகிநின்ற நாடக நிரூபணத்தை உயர்ந்த வழிக்குக்கொண்டுவர முதலில்வருத்தங்கொண்டவர் இவர்தான்.

இவர் முதலில் பச்சையப்பன் கலாசாலையில் உபாத்தியாயராக இருந்து, கி. பி. 1869-ம் வருஷம் நியாயவாதபரீக்ஷை(B.L )யைத்தேறி அக்காலத்தில் புகழோங்கி விளங்கிய நியாயவாதியாகிய ஸ்ரீமான் வேங்கடபதி ராயரிடத்து நியாயவாதக்கல்விப்பயின்று வந்தார். வருஷம் கடந்ததும் நியாயவாதியாகப் பிரசுரிக்கப்பட்டு தன் குருவுடனேஒற்றிவாதஞ்செய்துவந்தார்,இவருடைய யுக்தியும்,புத்தியும், ஸமயோசிதயமும், வாக்சாதுரியும் இவரை சிலநாட்குள் பிராபல்யத்திற்குக் கொண்டுவந்துவிட்டன. "யாதானு நாடாமால் ஊராமால்" என்னும் குறளடிக்கு இவர் படிப்பசான்றாய்விட்டது.இவர் குறுக்கு விசாரணையில் கைதேர்ந்தவர். லக்ஷ்மியானவளிவரிடத்துமிகமோஹங்கொண்டுவிளங்கினாள்.

ஸ்ரீமானுகி பணஞ்சேர்த்தல் என்னும் குணமொன்று மாத்திரம் இவர் மனதைக் குடிகொள்ளவில்லை. பொதுநன்மை தேச க்ஷேமம் முதலிய அரியபெரிய விஷயங்களெல்லாம் இவர்ஹ்ருதயத்தில் மிகுந்த ஒளியொடுஜ்வலித்துக்கொண்டே இருந்தன. தேசத்தை சீர்திருத்தவேண்டுமென்ற அபிமானம் அவர் சாகும்வரையுமவர்மனதைவிட் டொழியவில்லை. சாவிலுமவருக்கதிலேயேதான் மனம்.சென்னை 'முனிசிபாலிடி'யில் 'கமிஷனர்' ஆக ஜனங்களால் பிரதிநிதிக்கப்பட்டது இவர் ஹ்ருதயத்தின் விசாலத்தைக்காட்ட முதல்வழியாகியது. அவ்விடத்தில் அம்சக வேலைகள் பொதுநன்மைக்காகவும் ஸத்திய நிலைமைக்காகவும் செய்தனர். முப்பது வருடங்களுக்கு முன்னிருந்த தேசிய சங்க(IndianAssociation)த்தில் ஒரு முக்கிய அங்கத்தினராகவிருந்து தேசத்திற்காக மனமாற உழைத்தார். கனம்பொருந்திய ரிப்பன் இந்தியநாட்டிற்கு ராஜபிரதிநிதியாக இருந்தபொழுது,தமது சங்கத்தில் அனந்தாசாரியார் ஓர் சிறந்த விண்ணப்பம் உள்நாட்டு பிரஜா பரிபாலன (Local Self-Government) விஷயமாய், தமது சங்கம் கூடியகாலத்து தீர்மானித்து, ராஜபிரதிநிதியாருக்கனுப்பினர். அவர் ப்ரேரேபித்த தீர்மானங்களையே கிட்டத்தட்ட இராஜாங்கத்தார் அங்கீகரித்தனர். இன்னம் அவர் ஆவல் அடங்கவில்லை.

தன்நாட்டாரையெல்லாம் ஒன்றுசேர்த்து அவருக்கு அன்பூட்டி, தேசக்ஷேமத்தை அபிவிருத்தி செய்யவேண்டுமென்ற மனோலயத்தைச்சேகரிக்க, இந்தியநாட்டார் தம்மைத்தாம் அறிய முயல முதலில் பிரயத்தினஞ்செய்த மஹானுபாவக்கூட்டத்திலு மிவரில்லாமல்இருக்கமுடியுமா? அதிலாரம்பம்முதல் உழைத்துவந்தார். சென்னையிலும் ஸ்ரீமான் ஜி. சுப்பிரமணிய அய்யர்,விஜயராகவாசாரியார்முதலானவர்களுடன் மஹாஜனசங்கம் ஒன்று ஏற்படுத்தி அதற்குகார்யதர்சியாகவிருந்துநடத்திவந்தனர். அதில் க்ஷாத்ரம் அஹங்காரமுதலிய குணங்கள் மேலோங்காதவண்ணம் தாமிருக்கும்வரைப் பார்த்துவந்தார். மஹானுபாவக்கூட்டமென்று நாம்சொல்லிய இந்தியஜாதீய மஹாநாடு என்றது, இந்திய ஐக்மத்யசங்கமாகிய "இண்டியன் நேஷனல் காங்கிரஸ்" என்பதைத்தான். அதிலாரம்பமுதல் உழைத்து சென்னைபாகத்திய அச்சங்கத்தின்பிரிவிற்குத்தான் இருக்கும்வரை புத்திமதிகூறும் ஸ்தானத்தி லிருந்துக்கொண்டிருந்தார். இந்தியராஜாங்கத்தாரால் "ராய்பஹதூர்" "இந்திய ஸம்ராடநேசன்" (C.I.E.) என்னும் பட்டங்கள் இவருக்கு கி.பி. 1887,1897-ம் வருஷங்களில் அளிக்கப்பட்டன. மதுரையிற் கூடிய சென்னை மாகாண ஜனசங்க (Madras Provincial Conference) த்திற்கு அக்கிராசனாதிபத்யம் வஹித்தார். அப்பால் இந்திய தேசத்தில் பிறந்த யாவனாலும் விரும்பக்கூடிய அரியநிலைமையும் இவருக்குக் கிடைத்தது. 1891ஸு த்தில் நாகபுரத்தில்கூடிய இந்தியஜாதி மஹாநாட்டிற்கு அக்கிராசனாதிபத்யம் அடைந்தார். இப்பெரும் நிலைமையை இவர் தாம் கஷ்டமென்பதில்லாமலே அடைந்தார். அக்காலத்து,

"நாம்செய்யுமியக்கஞ் சிறிதே ஆயினும் நியாயத்திற்கு உழைத்தும், கெடுதியைத்தடுத்தும் தகாதவற்றிற் இடங்கொடாமலும், அவற்றை மேலோட

றத்தும், ஜனஸமூகத்திற்காக தமது நலத்தையும் சுகத்தையும் கணிசியாது தர்மத்திற்காக எவற்றையும் லக்ஷியம் செய்யாது, மனதும் இதயமும் ஒன்றாக நடந்து, வருங்கஷ்டங்களையும் கணிசியாது, திடசித்தத்துடன் பொருள் பெருமை இவற்றை கணிசியம் செய்யாது மூவாமுதல்வனது செயலை தம் கையுட்கொண்டு, இக்காலத்தினர் நம்மை மதிக்காவிடினும் பெரியோனுடைய அவஸரத்தால், பின்வரும் நமது ஸந்ததியாரால் மனத்தைவிட்டு பிரியமுடியா அன்போடு கொண்டாடப்பட்டு, தேச க்ஷேமத்திற்காக தமது வாழ்நாளை யுழைத்து, மந்தமாயிருந்த நமது தேசத்தை தூண்டி மேன்மையோங்கச்செய்ய நாம் கொண்டது ஸரிதான் என்று நாம் சொல்லியதாக நம்மை நம் ஸந்ததியோர் துதித்து நாம் பட்ட கஷ்டத்தின் கூலியை அனுபவிப்பதே பேரின்பமெமக்கும் எம் தேசத்தார்க்கும்"

என்றமொழிகளின்னம் எமது மனதை உருக்கி உத்ஸாகப்படுத்தி நமதுவேலைக்குத் தூண்டுகிறது.

எந்தெந்த மூலமாக ஜனங்களுக்கு ஸுகமுண்டாக்கலாமென்பதே இவர் கவலை. கி. பி. 1898-ம் வருடம் இந்திய ராஜபிரதிநிதியாரின்சட்டசபை(ViceregalCouncil)யில் ஜனங்களால் ப்ரேரேபிக்கப்பட்ட அங்கத்தினராகவிருந்து ராஜத்வேஷ சட்டத்தைதனது பாஷாசக்திமுழுதுங்கொண்டு மறுத்து தனது அஞ்சாமைக் குணத்தையும், நியாயாபேக்ஷையையும் நன்றாகவெளியிட்டார். இந்த நிலைமைக்குநான்கு முறை ஜனங்களால் பிரதிநிதிக்கப்பட்டனர்.

கடைசிதினங்களில் சென்னப்பட்டணத்திலிருந்தபோது, வயதாயிருந்தபோதிலும், உடம்பின் சௌக்கியங்களை லக்ஷியஞ் செய்யாமல் தென் ஆப்பிரிக்காவில் தத்தளித்துக்கொண்டிருந்த இந்தியர்களைப்பற்றி ஆலோசித்து அதற்கு தகுந்தவண்ணம் ஏற்பாடுசெய்ய பிரயத்தினப்பட்டுக்கொண்டிருந்தார். இதற்குள் இவர் கி. பி. 1908ம் வருஷத்தில் தேகத்தைவிட்டுப் பிரிந்து மேலூர் அடைந்துவிட்டார்.

அவரிடத்தில் குற்றங்குறையில்லாமல் இருக்கவில்லை, அவை ஜனங்களை ஒருவிதத்திலும் கெடுக்கவில்லை. கெடுக்கக்கூடியனவுமல்ல. தாமரை மலருக்கும் தண்டில் முள்ளுண்டு. அவற்றை நாம் கவனிக்கக்கூடாது. அவர் உருவமும் மோஹிக்கக்கூடியதல்ல. அது சிறிதே ஆயினும் அவர் ஹ்ருதயம் மிகப்பெரிது. எல்லாரன்புக்கு மிடங்கொடுத்தது. அவர் மனம் யாவராலு மதிக்கப்பட்டது. அவர் உடல் இந்திய தேவிக்கே அர்ப்பிதஞ்செய்யப்பட்டது. அவராத்மா அவளையே அடைந்துவிட்டது. அவள் தன் வாசனை வீசுமிடமெங்கு மவர் புகழையே பரிமளிக்கச்செய்கிறாள். அவர் மனோநிலைமையே பரிமளிக்கச் செய்கிறாள். இவ்வாசனையெல்லா மனதிலூறி தன்மகனெவ்வொருவனுமனந்தாசாரியன் மேன்மைக்குணத்தி லோங்க வேண்டுமென்பது அவள் அபீஷ்டம்போலும். அது அவள் கிருபை அடைய, மூவாமுதல்வன் ஆசீர்வாதம் பெறும். இது நிஸ்சயம்.

---

உலகத்துன்பங்கள்.—உலகத்தில் நடப்பதெல்லாம் நம்மைக் கேட்டாநடக்கிறது? நம்முடைய திருப்திக்காக இவ்வுலகம் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதுபோல் காணவில்லை. உலகம் நமது ஆஞ்ஞைக்குள் அடங்குமாயின், வாலிபர்கள் இறப்பதேன், வயோதிகர்கள் வாழ்வதேன், விதவைகள் பெருப்பதேன்; வீடுகளெங்கும் வியாதிகள் புகுந்து 'பூவுதிரப் பிஞ்சுதிரக் காயுதிரக்கனியுதிர' என்றபடி ஈவு இரக்கமில்லாது எங்கும் நிறைந்தபொருளாய் எமன் உலாவுவதேன். பச்சைப்பாம்புகள் இலைகளோடிலைகளாய்க்கிடந்து வேற்றுமைப்படாது வாழும் ஓர் அடர்ந்த விருட்சம்போல பாப புண்ணியங்கள் பேதாபேதமின்றி பின்னிக்கிடக்குமிப்பாழுலகின் இன்பாதிகளை அற்பமெனக்கருதாது அவற்றில் ஆசைவைத்து ஓர் நாசகாலியின் பாட்டைக் கேட்டுப்பன்றியாய மாறியமானிடர்கள்போல் உணர்ச்சி உணவு உற்பத்தியாதிகளில் அவ்வுருவே அடைந்த அறிவீனர்களாகிய நாம் நமக்குளதோர் அரைக்கணத்துள் பண்ணும் பாபங்கள் எத்தனை? எண்ணும் எண்ணங்கள் எத்தனை? சொல்லும் துற்சொற்கள் தான் எத்தனை? இவ்விதம் செய்யத்தகாதனயாவும் செய்து கூட்டிய குற்றக்குவியலை அநுபவிக்கப்புகுந்ததோர் சிறைச்சாலையாகிய இவ்வுலகின்கண்ணும் சிற்சிலசமயங்களில் யதார்த்தமான அன்பாவது தன்னினத்தைவிட்டு வழிதப்பிவந்த மான் பேட்டைப்போல வந்துவிடுகிறது. அவ்வாறு வந்தவிடத்து அதுமனிதனாலாவது விதியினாலாவது வேட்டையாடப்படாது போவது இல்லை,

## தமிழில்முடிந்த நெடுங்கணக்கிற்காக ஓர் வேண்டுகோள்.

## A PLEA FOR A PERFECT ALPHABET IN TAMIL.

"பழையனகழிதலும் புதியன புகுதலும்
வழுவலகால வகையினனே"

என்றார் பவணந்திமுனிவர். உலகஸ்வபாவத்தில் எப்பொழுதும் மேன்மைஅடையவேண்டுமென்றுதான் எல்லாருக்கும் விருப்பம். காலம்கழியக்கழிய முன்காலங்களில் இருந்தவை மனக்கிளர்ச்சிக்கும் மனத்தின்உத்ஸாகத்திற்கும் போதாமல் போகிறது. போகவே புதிது புதிதாக காலத்திற்குவேண்டிய வண்ணம் வேண்டியவை செய்யவேண்டும். இது தப்பாகாது. இதற்கு நன்னூலின் சூத்திரமே சாட்சியாகின்றது.

நம்மவர்கள் முன்பிருந்தகாலத்தில் புகைவண்டிகளாவது இவைபோன்ற மற்றவைகளாவது கிடையாது. மேலும் நடக்கும் விஷயங்களும்இப்பொழுதிருந்தமாதிரிகிடையாது. எண்ணங்களு நாமிப்போது கொண்டிருப்பதுபோல் கிடையாது. அப்பொழுது தமிழ், தேசபாஷையாயும் ராஜபாஷையுமாக விருந்தது. ஆகவே தமிழையெல்லாரும்படித்துதீரவேண்டியதாயிற்று. இப்பொழுதுஆங்கிலத்திலேயே காலத்தைசெலுத்திவிட்டுத்தமிழ்ப்புத்தகங்களையெடுத்தால் அர்த்தமாகின்றதில்லை. ஆங்கிலத்தில்புத்திஸ-சேனைஎப்படிப்போகிறதோ அதேமாதிரி தமிழிலும்விஷயஸ-சேனைசெய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். தமிழ்ப்பாவபோக்கிற்கும், ஆங்கிலேயவழிக்கும் சேருமிடங்கிடையாது. ஆனதினால் அவைகளை சேர்க்கப்பார்ப்பதில் விபரீதங்கள் உண்டாகிவிடுகின்றன. இந்த விபரீதங்களை இவர்கள் வேண்டுமென்று செய்கிறதில்லை. ஸாதாரணமாக ஆங்கிலத்தையே படித்துக்கொண் டிருப்பவர்களுக்கு அந்தபாஷையின் பாவங்கள் மனதை பரவிக்கொள்கிறது. அந்த பாவங்களை அழித்துவிட்டு தமிழைப் படிக்கவேண்டுமென்றால் முடியாது. இருப்பதை இல்லாமல் இருப்பதுபோல் பாவிப்பது மிகவும் கடினம். ஆனதினால் அவர்கள் ஆங்கிலபாவங்களைவிட்டு தமிழ்பாவங்களையே கொள்வதென்றால் மிகவும் கடினம்.

அல்லாமலும் பேசுந்தமிழிற்கும், எழுதும் தமிழிற்கும்,படிக்கும்தமிழிற்கும்ஒன்றுக்கொன்றுஒற்றுமை காண்பவர்களுக்கு எளிதில் தெரிவதரிது. அநேக அரசாட்சிகள் இந்தியாவை கைக்கொண்டிருந்தன. அந்தந்த ராஜாங்கபாஷையிலிருந்த சில அல்லது பல சொற்கள் காலக்ரமத்தில் தமிழ்பேசும் தேசியபாஷையில்கலந்துவிட்டது.இதில்ஒன்றாவது படிக்கும் புத்தகங்களிற் கிடையாது. ஆரியர் இந்தியாவிற்கு வருவதற்கு முன்எந்தமாதிரியாக திராவிடபாஷையிருந்ததோ அதேமாதிரிதான் இலக்கியபாஷை இன்றைக்குகிட்டத்தட்ட விருப்பது. அந்தகாலத்தில்தேசியமானபதங்கள் இப்பொழுது வழக்கில்கிடையாது. ஆகவே சங்கத்துப் புத்தகங்கள் முதலியன இந்தகாலத்தவருக்கு படித்தால் விளங்குவதில்லை. அக்காலத்து வியாபாரச்சொற்கள் துருக்கர் காலத்தில்மாறிவிட்டது. இப்போதின்னம் வேறுபாடாய்விட்டது. இதேமாதிரி பேசும்பாஷை பலவிதங்களில் மாறுபாடாய் விட்டதே யொழிய படிக்கும்பாஷையோ அகஸ்தியர்காலத்தில் எப்படி இருந்ததோ அப்படியே கிட்டத்தட்ட இருக்கிறது.

காலக்ரமத்தில் பாவம் வேறுபாடாவது ஸ்வதஸ்ஸித்தம். பாவம் வேறுபாடாகவாக பாஷை வேறுபாடாகவேண்டியதாய் இருக்கிறது. மேலும் மற்றபாஷைகளின் ஸம்பந்தத்தினால் புதிய எண்ணங்களும், நோக்கங்களும் உண்டாகின்றன. இவை தமிழர்களுக்கு இல்லாத பாவங்களாய் இருந்தாலும் இருக்கலாம். பாவமின்னதென்று தெரிந்தால் அதை எவ்வாறேனும் சொல்லவேண்டு மென்பது மனுஷனது இயற்கை. ஆனதினால் அவனுக்கெப்போதுமிருக்கும் பாவங்களை அவன் பாஷையே காட்டிவிடும். இல்லாதபாவங்களை சொல்ல அவன் பாஷையில்பதங்களிராது. இருந்தாலும் ஒரு பதத்தாலோ அல்லது காதிற்கினிமையாக

வோதன் சொந்த பாஷையால் சொல்ல முடியாது. ஆனதினால் அதை நன்றாகச் சொல்ல, எந்த பாஷையிலிருந்து அந்தபாவங்களைக் கண்டானோ அந்த பாஷையிலிருந்தே அந்த பாவத்தை குறிக்கும் சொற்களைக் கடன் வாங்க வேண்டியதாகிறது.

எப்பொழுதிந்த மாதிரியாய் பலபாஷையிலிருந்து பாவதானம் வாங்க வேண்டியிருக்கின்றதோ அப்பொழுது அந்த பாஷையின் பூர்வீக நடைபோய்விடும். காலத்திற்கு தக்கவாறு பாஷாநடைவேறுபடும். படவே, புதியபாஷைக்கும் பழையபாஷைக்கு மிருக்கும் ஸம்பந்தம் தெரியாமல் போய்விடும். ஆனதினால் பாஷை காலத்தை யனுசரித்து, காலத்தின் கருத்தை தன்னுள் அடக்கம் செய்து, உலக அபிவிருத்திக்கு காரணமாக வேண்டுமென்றால் பழைய உடையை விட்டுவிட்டு காலத்திற்குத் தகுந்த கோலம் கொள்ளவேண்டும்.

இது எல்லாபாஷைக்கும் பொதுவாக சொல்லியது. இனி தமிழில் இருப்பது,12உயிரும்,18 மெய்யும் இவ்விரண்டின் கலப்பாகிய 216உயிர் மெய்யும், ஆய்தமும் இன்னுசில எழுத்துகள் தான். இன்றைக்கெல்லாம் கணக்கிட்டுப்பார்த்தால் 250-க்குமேல் போகாது. ஆனால் இந்த 18 மெய்யும் மெய்சப்தங்களெல்லாவற்றையும் அடக்கவில்லை. கண்டம், கஜம், கடை இந்த பதங்களில் உள்ளஎல்லா ககரத்திற்கும் ஒரே சப்தமாகாது. இம்மூன்று ககரத்திற்கும் பிறப்பிடமொன்றாகாது. பக்குவமான பாஷையில் ஒரெழுத்து ஒரு சப்தத்திற்கு தான் குறியாகி நிற்கும். பல சப்தங்களை ஒரே குறிகாட்டினால் அந்தபாஷையை பக்குவபாஷையென்று சொல்ல மாட்டார்கள். தமிழில் ஸம்ஸ்கிருதத்திலிருக்கும் "க" வர்க்கம் முழுவதிற்கும் "க" என்னும் ஒரேயெழுத்து குறியீடு ஆகிறது. அதேமாதிரி பிறவர்க்கங்களுக்கும். பாவம் அதிகமாயாக புதிதாக கொள்ளும் பதத்தை விளம்பாக எழுதுவதற்கு தமிழில் எழுத்து போதாது. ஆனதினால் நம்முடைய பாஷை விருத்தியடைந்து வாழவேண்டுமென்பவரெல்லாம் தமிழின் எழுத்தை அதிகஞ்செய்யப் பார்க்கவேண்டியது தான்.

பல பாஷைகளைப் படித்தால்தான் பாஷைகளுக்குள் உள்ள தாரதம்யங்கள் தெரியும். தெரிந்து நம்முடைய உத்ஸாகத்தையும் ஆவேசத்தையும் கிளப்பி நம்முடைய பாஷையை அன்னியபாஷைகளைக் காட்டிலும், பெருந்தன்மையும் மேல்நிலையு மடையவேண்டுமென்று ஜனங்கள் கஷ்டப்பட்டால் ஒழிய ஒருவித பெருமையு மவர்க்குண்டாகாது. "பழைய பாஷை சுத்தமானது. அதிலில்லாத தொன்றுமில்லை. ஆனதினால் அது தனியே நிற்கும்" என்று சொல்லுபவரெல்லாம் ஓர்வித குருட்டு அபிமானத்துடன் பேசுபவர்தான். அந்த அபிமானம் தாய்குழந்தைக்குச் சலுகையால் கெடுதி செய்வதுபோல்தான். பாஷை காலத்திற்கு தகுந்தபடி திருத்தமடையாது, இரண்டாயிரம் வருஷங்களுக்குமுன் இருந்ததுபோல் இருக்க வேண்டுமென்றால் குழந்தை பிறந்து வாலிபனானதும் அவனுக்கு உணவு ஆடை ஒன்றும் வேண்டாம் அவனுக்கு வலிவு தானேஇருக்கின்றது என்பதுபோ லிருக்கின்றது.

மூப்படைந்தகாலத்தில் அழிவு வரும் என்பது ஒரு எண்ணம். இது நிஸ்சயம் அல்ல. இது மனிதனுடைய சரீர அனுபவத்தில் சொல்லியதே யொழிய வேறல்ல. பாஷைக்கவ்வாறாகாது. காலத்தின் குணங்களையும் எண்ணங்களையும் தன்னிடத்து பிரதிபிம்பமாகக் காட்ட பாஷையால் முடியுமானால் அதுவே அந்தபாஷைக்கு அழியாத உயிராக நிற்கின்றது. எப்பொழுதிவ்வாறு பாஷையானது காலகுணங்களையும் காலவிவரங்களையுந் தன்னுயிராகக் கொள்ளுமோ அப்பொழுதே அது பலவித கௌரவார்த்தங்களையும் சாஸ்திர நிஸ்சயங்களையும் சரித்திர நிரூபணங்களையும் காட்ட வேண்டியதாகிறது. அவ்வாறு இருக்கவேண்டுமென்றால் எங்கெங்கு

சாஸ்திரப் பயிற்சியுண்டோ அங்கங்குள்ளதையெல்லாம் கொள்ள தயாராக இருக்கவேண்டும். இப்படி கொள்வதில் பலவித கஷ்டங்கள் உண்டாகும். அவைகளைத் தடுத்து பாஷையானது தக்கவாறு தன்னுள் பிரவேசிக்கச் செய்யவேண்டியது. இப்படிச் செய்யவேண்டுமென்றால் பிரவேசித்த பதங்களின் சரித்திரம் தெரியவேண்டுமாகையால் தாய்பாஷையில் அப்பதங்கள் எப்படி இருக்கின்றதோ அதேமாதிரிதான் கடன்வாங்கும்பாஷையிலும் இருக்கவேண்டியது.

பதச்சின்னம் செய்வது இரண்டுவிதங்களிலும் தகாததாகிறது. ஒன்றுபதம் எங்கிருந்து வந்ததென்கிறது தெரியாதுபோகிறது. அது எந்தவிதத்தால் இந்தபாஷைக்கு வந்ததென்பதும் தெரியாதுபோகிறது. இதனால் தெரியவேண்டிய தெத்தனையோ தெரியாமற்போகிறது. மற்றொன்று, பதச்சின்னமான காலங் கடந்து சிலநாளானதும் பதங்களெல்லா மிந்த பாஷையின் பதங்களே என்ற எண்ணம்முதல் உண்டாகி பின்பவற்றின் சரித்திரம் தெரியாது இந்த பாஷையின்சொந்த பதங்களேஎன்று சாதிப்பவரும் கிளம்பிவிடுவார்கள். இது பெருங்குற்றம். நிஸ்சயத்தைக்காணும்படிச் செய்வதுதான் பாஷையின் குணம். இந்தகுணமில்லாமல் போய்விடும்பட்சத்தில் அந்த பாஷைக்கு ஒருவிதக் குறைவுதான். பாஷையும் ஜனங்களின் பொது வெண்ணங்களைக் காட்டும் கருவியாதலால் பாஷைக்கொருவிதக் குறைவுவந்தால் ஜனங்களுக்கும் வந்தமாதிரிதான். இதை ஒழிக்கமுயல்வது ஜனங்களுக்கு முக்கியமான வேலை.

இந்த வேலையை ஜனங்கள்மேல் கொள்ளாது இருப்பதெல்லாம் அவர்களது அறிவின்மையைக் காட்டுகின்றது. இந்த அறிவின்மையில் பெருமையடைவது காலத்தின் கோலமாயின் ஜனங்களின் மகிமை இவ்வாறென்று சொல்ல முடியுமல்லவா? இந்த தௌர்பாக்கிய நிலையை விட்டுவிட்டு தங்கள் தாய்பாஷை வேண்டிய பெருமையெல்லாம் அடைந்து மேன்மேலும்விருத்தியாகி அதன் கிரணங்கள் எங்கும் ஊடுருவிப்போய் அங்கங்குள்ள கறைகளையுமிருட்டையுமகற்றி உலகம் எங்கும் விளங்கும்படி பிரகாசித்தால் ஒழிய பாஷைக்கு எவ்வாறு பெருமைவரும்? இடம் பொருள் காலம் இம்மூன்றிற்கும் தகுந்தபடி இருந்தாலொழிய பாஷை எப்படி விருத்தியாகும்? ஜனங்களெல்லாம் அன்னியபாஷா மதுவைவுண்டு மயங்கி இருக்கும் மாயை ஒழிந்து தன் பாஷையில் ஞானதையமாவது எப்படி? எல்லாரும் தூங்கிக்கொண்டிருந்தால் வீடு கொள்ளைபோகாமல் பாதுகாப்பதெவன்? ஜாக்ரதா ஸ்திதிக்கு வந்து உணர்ச்சியடைவதெப்படி? இவ்வினுக்களெல்லாம் எல்லார் மனத்தையும் கரையச் செய்யவில்லையா! அன்றித்தன் பாஷை நாசமாகத்தானே ஆளாக வேண்டுமோ? தன்தாயைத் தானேக் கொல்வாரு முண்டோ?

வா. சேஷகிரி.

---

துக்கத்தின் உபயோகம் மிகச் சிறந்தது:—அது மனிதன் மனதைக் கரையும்படி செய்கின்றது. புத்தியைக் கூர்மைப்படுத்துகின்றது. மார்கழிமாதம் விழும்பனியைப்போன்ற செழிக்கச்செய்யும் சக்தியை உடையது. அடிக்கடி துக்கமே மோக்ஷத்திறவுகோலாக ஏற்படுகின்றது. வேதாந்த கிரந்தங்களில் சிஷ்யனை குரு முன்னிலையில் அழும்படி செய்தபின்புதான் குரு மனம் இரங்கி போதிப்பதாகக் காட்டப்பட்டிருக்கிறது. துக்கத்தால் மனிதர்கள் மஹான்களாக மாறியிருக்கின்றனர். துக்கம் கரைபுரண்டு ஓடுங்காலத்தில் மானிடரது இந்திரியங்களுக்கு தெய்வீகமான தோற்றங்களையும் சப்தங்களையும் கண்டறியும் அற்புதசக்திவந்திருக்கின்றது. பெரிய புராணத்தில் திருஞானஸம்பந்தர் என்ற குழந்தை அழுதுகொண்டிருந்தால் பார்வதியால் ஞானப்பால் ஊட்டப்பட்டது. உலகவாழ்க்கையிலும் அழும் குழந்தைகள்தான் தாயாரதுலாலனைக்குசீக்கிரத்தில் ஆளாகி ஸுகிக்கின்றன. கௌதம புத்தர் மஹாபோதி விருக்ஷத்தடியிலிருந்து கண்டு பிடித்த நான்கு உண்மைகளுள் முதலாவதான உண்மை 'உலகத்தில் ஸதா துக்கமே காணப்படுகின்றது' என்று அறிந்துபரிதவிக்கவேண்டும் என்பதே. துக்கம் என்பது மனதை மிருதுவாக்கும் ஓர் தைலம். இதற்கேற்பவே ஓர் மஹான் 'துக்கிப்போரே அதிர்ஷ்டவான்கள் ஏனெனில் அவர்கள் சீக்கிரம் தேற்றப்படுவார்கள்' என்றார்.

# இயற்கை அற்புதங்கள்
## WONDERS IN NATURE



### பனிக்கட்டியும் அதன் ரூபாந்திரங்களும்
### ICE AND ITS VARIOUS FORMS

சென்னைபட்டணத்தில் பழகுபவர்கள் எல்லோரும் பனிக்கட்டியை நேரிடப் பார்த்திருக்கலாம். அது நல்ல பளிங்குபோல நிர்மலமான கட்டியாக இருக்கும். அதைக் கையில் எடுத்தால் தண்ணீராக உருகிப்போகும். அது அதிக சீக்கிரத்தில் உருகிவிடாமல் இருப்பதற்கு மரப்பொடியில் அதை மூடி வைத்திருப்பார்கள். இந்தப்பனிக்கட்டி ஸாதாரணத் தண்ணீர் உறைந்து கட்டியாகுங்கால் உண்டாவது. ஸாதாரணமாக நெய்யை அடுப்பிலிருந்து எடுத்து வெளியே வைத்தால் சுற்றுமுள்ள குளிர்ச்சியால் உறைந்துபோய்க்கட்டியாகின்றது. நல்ல குளிர்காலங்களில் குளிர்ச்சியால் தேங்காய் எண்ணெய் கட்டியாக உறைந்துபோகின்றது. இதுபோல தண்ணீரும் அதற்குவேண்டிய குளிர்ச்சிகொடுத்தால் பனிக்கட்டியாகும். நம் பரதகண்டம், முதலிய உஷ்ணதேசங்களில் நெய் தேங்காய் எண்ணெய் ஆகிய இவைகள் உறைவதுபோல் தண்ணீர் பனிக்கட்டியாகாது. இவ்விடங்களில் அதிகசீதளத்தை உண்டாக்கி பனிக்கட்டிபண்ணும் சாலைகளில் தண்ணீரை பனிக்கட்டியாக்குகிறார்கள். அவ்விடங்களில் சென்றால் இந்தக் குளிர்ச்சியை நாமே அறியலாம். வேறொருவிதத்திலும் நமது தேசங்களில் பனிக்கட்டி உண்டாகலாம். ஆலங்கட்டி மழைபெய்யுங்கால் சிறு பனிக்கட்டிகள் பூமியிலேயேவிழும். நாம் அதையெடுக்கும் முன்னரே அது கரைந்துபோய்விடும். இந்தமழை பெய்யுங்கால் ஆகாயத்தில் அதிக உயரத்தில் உள்ள குளிர்ச்சியால் மேகநீர் பனிக்கட்டியாகியிருக்க இடிமின்னலின் சக்தியால் தள்ளப்பட்டு சிதறி உருகும் முன்னர் உஷ்ணதேசங்களில் அந்தக்கட்டிகள் பூமியில் விழுகின்றன. ஆனால் வடக்கே உள்ள இங்கிலாண்டு முதலியகுளிர்ந்த தேசங்களில்மழைக்காலங்களிலும், வடக்குத்துருவத்தின் அருகாமையில் உள்ள தீவுகளில்எல்லாக்காலங்களிலும், பனிக்கட்டி பூமி மட்டத்தில் உண்டாகும்.

பனிக்கட்டியாவதற்கு தண்ணீரைச் சுற்றியுள்ள உஷ்ணம் 32-டிகிரிக்கு கீழே போகவேண்டும். ஓர் வஸ்துவின் உஷ்ணம் குறையக்குறைய அது சுருங்கிக்கொண்டேவரும் அப்பொழுது வரவர அதற்கு அடர்த்தி அதிகமாகும். அடர்த்தி அதிகமான ஓர் வஸ்துவை அடர்த்திகுறைந்த ஓர் திரவபதார்த்தத்துள் போட்டால் அது அதனுள்ளே முழுகிவிடும். அடர்த்திகுறைந்த ஓர்வஸ்துவை அடர்த்தி அதிகமான திரவபதார்த்தத்துள் போட்டால் அது மிதக்கும். இதைவைத்துக்கொண்டு பனிக்கட்டி என்னமாக இருக்கின்றது என்பதைப் பார்ப்போம். பனிக்கட்டியைத் தண்ணீரில்போட்டால் மிதக்கின்றது என்பது எல்லோரும் அறிந்தவிஷயம். இதனால் தண்ணீர் குளிர்ச்சியால் பனிக்கட்டியாகுங்கால் அடர்த்தியில் குறைகின்றது. ஆகவே இது ஸாதாரண ஒழுங்கிற்கு மாறாக இருக்கின்றது. இவ்வாறு ஈசுவர ஸ்ருஷ்டியில் அமைந்திருப்பது மிகுந்த ஸாதகமாக இருக்கின்றது இப்படி இருப்பதால்தான் வடக்குத்துருவத்திற்கு அருகாமையில்உள்ள ஸமுத்திரங்களில் குளிர்ச்சியால் தண்ணீர் பனிக்கட்டியாகி மேல்மிதந்து மூடிக்கொள்ளுகிறது. தண்ணீரின் வழியாக உஷ்ணம் எளிதில் ஊடுருவிச் செல்லாதாகையால் அடியில்உள்ள தண்ணீர் உறையாது இரு

ந்து ஜலஜந்துக்களுக்கு ஆதாரமாக இருக்கின்றது. இவ்வாறில்லாமல் தண்ணீர் பனிக்கட்டியாகுங்கால் அடர்த்தியில் அதிகப்படுமாயின், முற்கூறிய ஸமுத்திரத்தில் பனிக்கட்டிஉண்டாக அது அடியில் மூழ்கிவிடும். உடனே மேலேவரும் தண்ணீர் பனிக்கட்டியாக அதுவும்மூழ்கி கூடிய சீக்கிரத்தில் ஸமுத்திரம் முழுவதும் பாறையாக உறைந்துபோகும். இந்த அவஸ்தையில் ஜலஜந்துக்கள்யாவும் அகப்பட்டுக் கொண்டு நசுங்கி இறக்கவேண்டியதுதான். ஆகவே தண்ணீர் பனிக்கட்டியாகும்பொழுது அடர்த்தியில் குறைகின்றது. அதனால் பொதுவான ஸஞ்கேமேஒழிய வேறில்லை. பனிக்கட்டி பார்வைக்கு பளிங்குபோல இருக்கும். பாறைபோன்ற கடினபதார்த்தம். தாபஜ்வரம், கோடைநாள் முதலிய குளிர்ச்சி வேண்டிய ஸமயங்களில் பனிக்கட்டி ஸாதாரணமாக உபயோகப் படுத்தப்படுகிறது.

இயற்கையில் காணப்படும் இப்பனிக்கட்டிகளின் ரூபபேதங்களைப்பற்றி இனிவிவரிப்போம். முன்னர் கூறியபடியே பனிக்கட்டிகள் ஆகாயத்தில் கொஞ்சம் உயரத்திற்குமேல் இயற்கையாக உண்டாகின்றன. பூமியின் துருவபாகங்கள் அருகாமையில்போகப்போக இந்த உயரம் குறைந்துகொண்டே வந்து முடிவில் கடல் மட்டத்திற்கு வந்து விடுகின்றது. ஆகவே பூமியின் எல்லாபாகங்களிலும் உயர்ந்த பர்வதச்சிகரங்களிலும் அவைகளின் மேல்பாகங்களிலும் இப்பனிக்கட்டிகள் காணப்படும். ஹிமயமலை போன்றஅதிஉன்னதமானமலைச்சிகரங்களில்காணப்படும் மேகம் போன்ற தோற்றம் பனிக்கட்டியாகவே யிருக்கலாம். உண்மையானமேகம் நாழிகைக்கு நாழிகை உருவம் மாறுதலாலும், மேகம்போன்ற தோற்றம் உடைய பனிக்கட்டி இவ்வாறு மாறாததாலும் இவை இரண்டையும் வேறுபடுத்தி நாம் தெரிந்து கொள்ளலாம். மலையில் உயர்ந்த பாகங்களில் சிறு பள்ளத்தாக்குகள் இருக்குமாயின் அதனுள் விழும் மழைஜலம் எல்லாம் ஒன்றாகஉறைந்து பனிந்தளமாகஏற்படலாம். இவ்வாறு மலைச்சிகரம் முதலியவிடங்களில் உண்டாகும் பனியானது எத்தொழிலைச்செய்கிறது? மலைச்சிகரங்களில் பாறை இடுக்கில் பனிக்கட்டியானது தனது உருவத்தில்பெரிதாவதால் அந்தப் பாறையை சிற்றுளிபிளப்பது போல படீர் என்று பிளந்து தள்ளி பள்ளத்தாக்கிலிருக்கும் குளம் வந்து சேருகின்றது. ஆகவே இப்பனிக்கட்டிமலையைஉடைத்துக்குறைந்துகொண்டே வரும்படி செய்கிறது.

இப்பொழுதுபனிக்குளத்திலிருக்கும் பனிக்கட்டிகள் மேல் எவ்வாறு மாறுதல்அடைகின்றன என்ற விஷயத்தை எடுத்துக் கொள்ளுவோம். பனிக்குளத்தில் சில பாகங்களில் வெளியே போக வழியிருக்குமாயின் அதன் வழியாக இப்பனிக்கட்டிகள் சரிந்து முன்னுள்ள கல் மண் செடி முதலியவற்றை தள்ளிக்கொண்டும் அடியிலிருக்கும் வேர் முதலியவற்றை அழித்துக்கொண்டும் புறப்படும். இதற்குப் பனிஉடைப்பு என்று பெயர். ஹிமயமலை, ஐரோப்பாவிலுள்ள ஆல்பஸ்மலை ஆகிய இவைகளில் பனிஉடைப்புகள் ஏராளமாக ஏற்படும். இம்மலைகளில் போகும் பிரயாணிகளுக்கு எப்பொழுதும் அபாயம்தான். திடீரென்று ஓர் பெரும் ஓசையோடு அவர்கள் முன்னர் பனிஉடைப்பு உண்டாக ஒரு நொடிக்குள் அவர்கள் பனிக்கட்டி கல்முதலியவற்றால் அடிபட்டு புதைக்கப்பட்டு இறக்கவேண்டியதுதான். இம்மாதிரி பனிஉடைப்பு மூலமாக பனிக்குளம் மலைமேலிருந்து வெளியாகின்றது.

மற்றோர் விதமாகவும் பனிக்குளத்திலுள்ள பனிக்கட்டிகள் வெளிவருகின்றன. பனிக்குளத்திலிருந்து சரிவாக வெளியே வரும் வழிஇருக்குமாயின் அதன் மூலமாக பனிக்கட்டி மெதுவாகநழுவி மலை அடிவாரத்தை நோக்கிப் புறப்படும். இதற்குப்பனியாறுஎன்றுபெயர். இப்பனியாறு அநேக விஷயங்களில் ஸாதாரண ஆறுபோல இருக்கும் ஆற்றில்ஓடும் தண்ணீரைப்போலபனிக்கட்டிக்கு எளிதில் ஓடும் சக்தியில்லாததால் பனியாறு கொஞ்சம் ஆற்றிலிருந்து பேதப்பட்டும் இருக்கும். ஆறு புறப்படுவதுபோலவே இப்பனியாறுகளும் மலையின் உயர்ந்த பாகங்களிலிருந்து புறப்பட்டு கீழே வழிந்துவருகின்றன. ஆனால் ஆற்றின் வேகம் பனியாற்றிற்குக் கிடையாது. கொஞ்சகாலமாக பனியாறு நகருவதேயில்லை என்பது சிலருடைய அபிப்பிராயமாக இருந்தது. அது வெகு மெதுவாக நகர்ந்துகொண்டிருந்ததால் அவர்களுக்கு அது நகருவதாகத் தோற்றவில்லை. பின்பு மிகுந்த கஷ்டமான பரிசோதனைகளின்பேரில் உஷ்ணகாலங்களில் பனியாறுகள் நாள் ஒன்றிற்கு 20 முதல் 27-அங்குலம் வரை நகருகின்றன என்றும், மழைகாலங்களில் 13முதல் 13½-அங்குலங்கள்வரை நகருகின்றன என்றும் தெரியவந்தது. இவ்வாறு நகரும் பனியாறுகளின் மத்தியில் அநேகவிதப் பிளவுகள் காணப்படும். சிற்சிலவிடங்களில் தண்ணீர் அருவி

யாக விழுவதுபோல இப்பனியாறும் அருவியாக விழுகின்றது. இதற்குப் பனியருவி என்று பெயர். இது அருவியாக விழுங்கால் இதிலுள்ள பிளவுகள் அதிகரிக்கும், அநேகவிதமான ரூபங்களோடு பனிக்கட்டிகள் சிதறி வெளியாகி ஒன்றன்மேல் ஒன்றாக மிகுந்தகுழப்பத்துடனும் சப்தத்துடனும் கீழேசரிந்துவிழும். கீழே செங்குத்தாக இருப்பதால்தான் பனியாற்றில் இம்மாதிரிக்குழப்பங்கள் உண்டாகின்றன. ஓர் ஆற்றுநீர் அருவியாக விழுந்தபின்பிறகு எவ்வாறு ஒன்று சேர்ந்து ஸாதாரணமாகச் செல்கின்றதோ அவ்வாறே பனியாற்றிலும் கீழே விழுந்த கட்டிகள் ஒன்றோடொன்று மோதி நெருங்கிச்சேர்ந்து முன்போலப்பனியாறாகப்போகின்றன. ஆறுகளில் உபநதிகள் வந்துசேர்ந்து ஒன்றாவது போல இப்பனியாறுகளும் அநேகம் சேர்ந்து ஒன்றாகும். இப்பனியாறுகளில் வரிசைவரிசையாக கற்கள்செத்தைகுப்பைகள் ஒழுங்காக மத்தியிலும்,இரு ஓரங்களிலும் காணப்படும் இப்பனியாறுகள் மலையடிவாரத்தில் போகப்போக உருகிவிட மலையடிவாரத்தில் சிறு ஆறுகளாகமாறித்தண்ணீர் ரூபமாகக் கிளம்புகின்றன. இம்மாதிரி குளிர்ச்சியான ஐரோப்பாமுதலிய தேசங்களில் நடந்துவருகின்றன. உஷ்ண தேசத்திலுள்ள ஹிமயமலையிலோ பனியாறுகள் மலையடிவாரம் வந்து எட்டும் முன்னரே உயரபாகங்களிலேயே தண்ணீர் ஆகிப் பெருவெள்ளமாக கங்கையாதி நதிகள் மூலமாக மலையைவிட்டு வெளியேறுகின்றன. இவ்வாறு பனிஉருகுதல் உஷ்ணகாலங்களில் அதிகமாதலால் இப்பனிநீர் உஷ்ணகாலத்தில் ஏராளமாக உண்டாக ஹிமாலயத்தில் உண்டாகும் நதிகள் எல்லாம் கொடியகோடைகாலத்திலும் பனிநீரால் நிரப்பப்படுகின்றன. ஆகவே வருஷம் முழுவதும் ஹிமாலய நதிகளில் இடைவிடாது தண்ணீர் இருந்துகொண்டே இருக்கும்.

இப்பனியாறுகள் செய்யும் தொழில்யாது? முதலில் இப்பனியாறுகள் மலைமேல் உள்ளபனிக்கட்டிகளை மெதுவாக வெளிப்படுத்தி பனி உடைப்புக்களால் உண்டாகும் அபாயங்களை நீக்குகின்றன என்பது நன்றாக எல்லோருக்கும் தெரியலாம். மேலும் பனியாறுகளில் காணப்படும் கற்கள்முதலியவைகள் உண்டான விதத்தை ஞாபகப்படுத்திக்கொண்டால் இவைகள் செய்யும் முதற்தொழில்நன்றாகவிளங்கும். முன்னர் கூறியபடி பாறையிடுக்கில் உண்டாகும் பனிக்கட்டிகள் பாறைகளை சிதற அடித்து பனியாற்றில் விழுகின்றன. விழும்பாறைகள் பனியாற்றில் காணப்படும் பிளவுகளில் சிக்கிக்கொள்ள கற்கள்வரிசையாகியதோற்றம் உண்டாகின்றது. ஆகவே பனியாறு மலைமேல் உள்ளகுப்பை, கற்பாறைமுதலியவைகளை மேலிருந்து கீழேகொண்டுவந்து ஆறுகள் போல மலையைக் குறையும்படி செய்கின்றன. இத்தொழிலுக்கு இடம்மாற்றல் என்று பெயர். இவ்வஸ்துக்கள் யாவும் மலையடிவாரத்தில் உண்டாகும் நதியில் சேர்க்கப்பட்டு மலையை விட்டு வெளியேறுகின்றன.

சிற்சில ஸமயங்களில் பனியாறு மலைவஸ்துக்களை கீழே இழுத்து வருங்கால் இரண்டுவிதஅற்புதவேலைகள் நடக்கும். பனிக்கட்டியால் சிதற அடிக்கப்பட்ட கல் பலகைபோலப் பரந்திருந்து பனிப்பிளவுகளில் அகப்பட்டுக்கொள்ளாது பனிக்கட்டிகளின்மேல்விழுமாயின் இக்கல்லுக்குச்சுற்றுப்புறத்திலும் உள்ளபனி கீழேபோகப்போக உருகிவிட கல்லினுள் அடங்கிய பனி உருகாமல் நின்றுவிடுகின்றது, உடனேஓர்பனிக்கட்டியின்மேல் இக்கல் தாங்கப்பட்டு ஓர்மேஜை போல உயர்ந்து அற்புதமாகக் காணப்படும். இம்மாதிரியான பனிமேஜைகள் பனியாறுகளில் ஏராளமாகக்காணலாம். இப்பனியாறுகளில் பெரியபாறைகள் வெகுதூரம் கொண்டுபோகப்பட்டுபனியாறுகள் இருந்ததென்று இக்காலங்களில் ஸந்தேகிக்க கூடாத விடங்களில் வெகு அற்புதமாக வைக்கப்பட்டிருக்கும். இப்பாறைகள் சற்று பூமியைத் தொட்டுக்கொண்டு அமைந்திருக்கும் மாதிரிகளை நோக்கில் ஓர்சிறுவன் இவைகளைத்தொட்டால் இவைகள் உருண்டுவிடுமோ என்றபயம் நமக்கு உண்டாகும். இம்மாதிரியானபாறை ஒன்று பட்டணத்திற்கு 35-மைல் தெற்கேஉள்ளே மஹாபலிபுரத்தில் உள்ளேபோகும் வழியில் காணப்படுகின்றது. இது வெண்ணெய்போல் உருண்டிருத்தலால் இதற்கு வெண்ணெய்ப்பாறை என்று பெயர்.

முற்கூறிய இடம் மாற்றலோடுகூட பனியாறுகள் வேறு ஒரு தொழிலையும் செய்கின்றன. ஆறுகள் எவ்வாறு தாம் போகும்வழியைப் பள்ளம்பண்ணிக்கொண்டு போகின்றனவோ, அவைகள் கற்களை உருண்டையாகவும் மெதுவாகவும்உள்ள கூழாங்கற்

களாகசெய்கின்றனவோ அவ்வாறேபனியாறுகளும் மலைச்சாரல்களை மெதுவாக்கி விடுகின்றன. பனியாறுகளில் உண்டாகும் அடிவாரத்திலுள்ள ஆறுஎப்பொழுதும் கலங்கியேயிருக்கும். பனிக்கட்டி உருகினால் வரும் தண்ணீர் கலங்கலாக இராது இந்த கலங்கலுக்குக் காரணம் பாறைகளில் இருந்து இப்பனியாறுகளால் உண்டாக்கப்படு மணல்களே. பனியாறு உரையும்முன்னர் அநேகம்கற்களை உள்ளடக்கியிருக்கின்றன இவைகள்தாம் நகர்ந்து மலைச்சாரல்களை கிழித்துக்கொண்டேவந்து மணல்களை உண்டாக்க அவைகள் கீழே உண்டாகும் நதி ஜலத்தை கலங்கலாக்குகின்றன. இந்தத்தொழிலால் 'எறும்பூரக்கற்குழியும்' என்றபழமொழிக்கேற்பமலைச்சாரல் வரவரக் குழிந்துகொண்டும், மழமழப்பாகிக் கொண்டும், கோடுகள் இடப்பெற்றும் வருகின்றது. கோடுகள்காணப்படும்அநேகப்பாறைகள்பனியாறுகளோடு ஸம்பந்தப்பட்டவைகளாகவே இருக்கலாம். இந்தத் தொழிலுக்கு கரைத்தல் என்றுபெயர். இப்பொழுது குற்றாலம் தேனருவியில் இருபக்கங்களிலும் காணப்படும்மெதுவான உயர்ந்த கற்கள் இம்மாதிரியாகவே உண்டாகி இருக்கலாம்.

இனிமேல் ஸமுத்திரங்களில் காணப்படும் பனிக்கட்டிகளை எடுத்துக்கொள்ளுவோம். உஷ்ணதேசங்களில் பனிக்கட்டி உண்டாகும் பாகம் ஆகாயத்தில் உயரே இருப்பதாலும் வடக்கு துருவபாகத்தின் அருகாமையில் இவ்விடம் ஸமுத்திரமட்டத்திற்கு வருவதாலும், ஸமுத்திரத்தில் பனிக்கட்டிகளைப் பார்க்கவேண்டுமெனில் பூமியின் துருவபாகங்களின் அருகாமையில் போகவேண்டும். துருவபாகங்களின் அருகாமையில் கப்பலேறிச் செல்பவர்கள் பெரிய மலைகள்போன்ற பனிக்கட்டிகள் ஸமுத்திரத்தில் மிதந்து வருவதைக் கண்டிருக்கிறார்கள். இவைகளுக்கு பனிக்குன்று என்று பெயர். பனிக்கட்டி தண்ணீரில் மிதக்குங்கால் வெளியில் எவ்வளவு காணப்படுகின்றதோ அதைப்போல 9 பாகம் தண்ணீருள் மறைந்துகிடக்கும். ஆகவே ஓர் பனிக்குன்று 100 அடி உயரம் இருப்பதாகக் காணப்பட்டால் அதன் அடிப்பாகம் 900-அடி ஆழத்தில் இருக்கும். இவ்வாறிருப்பதால் மேல்பாகம் காற்றுக்களால் தள்ளப்பட்டபோதிலும் அதிகமாக அவைகளால் இது நகற்றப்படாது. ஆனால் இவைகள் ஸமுத்திர நீரோட்டத்தினால் இழுத்துக்கொண்டு போகப்படும். இவைகள் வடக்கு துருவபாகத்தில் ஏராளமாக உண்டானபோதிலும் ஸமுத்திர நீரோட்டத்தால் வெகுதூரம் தெற்கே மிக உஷ்ணபாகங்களில் இழுத்துக்கொண்டுவரப்படும். ஆகவே இவைகளை வட அத்லாந்திக் மஹாஸமுத்திரத்தின் மத்தியபாகத்தில் அடிக்கடி மாலுமிகள் காணலாம். இவைகள் உண்டாகும் இடங்களிலிருந்து தெற்கே வரவர உருகிக்குறைந்துகொண்டேவந்து முடிவில் ஸமுத்திரத்தில் கரைந்துபோம். இவைகளின் அருகில் வந்தால் இவைகளிலிருந்து தண்ணீரான பாகம் அருவிபோல சப்தம் செய்துகொண்டு விழுவதையும் இவைகளில் குப்பைகள் கற்கள் பிடிபட்டிருப்பதையும் நாம் காணலாம். பெரிய இருபனிக்குன்றுகளின் இடையில் கப்பல்கள்அகப்பட்டுக்கொண்டால் நொரிந்துபோக வேண்டியதுதான்.

இப்பனிக்குன்றுகள் உண்டாகும் விதம் இவ்வாறு என்பதை எடுத்து விவரிப்போம். இவைகளில் காணப்படும் குப்பை முதலியவைகளிலிருந்து இவைகள் ஸமுத்திரத்தில் உண்டாகவில்லை, நிலத்தில்தான் உண்டாய் இருக்கவேண்டும் என்பது விளங்கும். வடக்குதுருவபாகத்திலுள்ள தீவுகளில் உள்ள தண்ணீர் உரைந்து பனியாறுகி மெதுவாக நகர்ந்து வந்து ஸமுத்திரத்தில் கலக்கின்றது. அப்பாகங்களில் ஸமுத்திரமட்டத்திலேயே பனிக்கட்டிதரித்து உருகாது நிற்கும் ஆதலால் இப்பனியாறிலிருந்து வரும் கட்டிகள் ஸமுத்திரத்தில் பனிக்குன்றாக மிதக்கத்தொடங்குகின்றன. இம்மாதிரிதான் ஆதியில் பனிக்குன்றுகள் உண்டாகின்றன. இவ்விதத்தை இங்குகாட்டியுள்ள படத்தில் குறிப்பிக்கப்பட்டிருக்கிறது. இவைகள் உண்டாகும் இடங்களில் வெள்ளைக்கரடியும், ஸீல் என்ற ஜந்துவும், எஸ்கிமோ என்று மானிடஜாதியாரும் தான் உண்டு. முற்கூறிய இரண்டும் சித்திரத்திலிருப்பதைக் காண்க.

மலை உச்சியில் பனிக்குளங்கள் குளிர்ச்சியால் உண்டாவதுபோலவடக்குத் துருவ பாகத்தில் ஸமுத்திர மட்டத்திலும் பனிக்கட்டி உண்டாகின்றது. ஆனால் பனிக்கட்டி மிதக்குந்தன்மை உடையதாகையால் இந்த ஸமுத்திரங்களில் முற்கூறியபடி மேல்பாகம் தான் பனிக்கட்டியாக இருக்கும்; அடிபாகம் தண்ணீராக இருக்கும். இப்படி உண்டாகும் பனிக்கு பனி ஏடு என்றுபெயர். இவ்வேடு ஸமுத்திர நீரோட்டாத்

தாலும் காற்றாலும் நெருக்கப்பட்டால் உடைபட்டுச்சிதறி குவியலாகமாறி மிதக்கத்தொடங்கும். இதற்கு பனிக்குவியல் என்றுபெயர். சிற்சில ஸமயங்களில் இந்த ஸமுத்திரங்களில் செல்லும் கப்பல்கள் அருகாமையில் ஸாதாரணமாக இருக்கும் பனிஏடு திடீரென்று பனிக்குவியலாகிவிடும். அப்பொழுது அந்தக்கப்பலுக்கு அபாயம்தான். அதில் உள்ளோர் எல்லோரும் உயிர்பிழைக்க ஓடவேண்டியதுதான்.

வடக்குத்துருவத்தின் அருகாமையில் பச்சைப்பூமி என்ற ஓர் பூமியொன்றிருக்கிறது. அதன் அருகிலுள்ள ஸமுத்திரத்தில் ஓர்வித பனி ஏடு உண்டாகின்றதாம். கரைஓரமாய் உள்ள ஸமுத்திரநீர் குளிரால்உரைய கடற்கரை ஓரமாக கடினமான இடைவெளியில்லாத் திட்டு ஒன்று உண்டாகின்றது. பார்வைக்கு இது பூமியின் பாகம்போலத்தோற்றும். உஷ்ணகாலங்களில் உறைந்தபனி தண்ணீராக, இந்தத் திட்டு மறைந்துபோகும். இதற்குப் பனித்திட்டு என்றுபெயர். ஆழமில்லாத பாகங்களில் ஸமுத்திரத்தின் அடிப்பாகத்தில்கூட சிற்சில ஸமயங்களில்பனிக்கட்டி உண்டாவது வழக்கம். இதற்கு நிலப்பனி என்றுபெயர். இவைகள் உண்டானதும் மேலே மிதக்கும். இவைகளில் மணல் முதலிய நிலபாகம் பிடிபட்டிருக்கும். இதனால்தான் இவைகள் அடியில் உண்டானவைகள் என்று நாம் அறிந்துகொள்ளலாம். இம்மாதிரி பனிக்கட்டிகள் உண்டாகும் ஸமுத்திரத்தில் நங்கூரம்போடுவது கஷ்டம். நங்கூரம் அடிபாகத்தைப்பிடித்ததும் மேல்கிளம்பும் நிலப்பனியால் தூக்கப்பட்டு பிடிப்பு நழுவிப்போக உபயோகமற்றதாகிவிடும்

இனிமேல் ஆகாயத்திலிருந்து கீழேவிழும் பனிக்கட்டிகளை எடுத்துக்கொள்ளுவோம். உஷ்ணதேசங்களில் மழைபெய்வதுபோல் குளிர்ச்சியான தேசங்களில் பனிக்கட்டிகள் பெய்வதுவழக்கம். அதிகக் காற்றில்லாமல் பனிக்கட்டிகள் பெய்தால் லேசான ஏடுகளாக அவைகள் கீழேவிழும். அவைகளை எடுத்துப்பார்த்தால் அநேகவிதப் புஷ்பங்கள், சித்திரங்கள்முதலியன ரூபமாகக்காணப்படும். உஷ்ணதேசங்களிலும் இடிமழை உண்டாகும் காலங்களில் சிறுபனிக்கட்டிகள் மழைத்தண்ணீரோடு விழுவது வழக்கம். இதற்கு ஆலங்கட்டி மழை என்று பெயர். இதை நம்மில் சிலர் பார்த்திருக்கலாம்.

கேவலம் இப்பனிக்கட்டியின் ரூபாந்திரங்களையும் அவைகளின் தொழிலையும் பாருங்கள்! எவ்வளவு விசித்திரமாகஇருக்கின்றன! இவ்வியாஸத்தை முடிப்பதன்முன் இவ்விஷயங்களை அறிய வேண்டும் என்ற ஆவலோடு தம் உயிரைக்கூடலக்ஷியம் செய்யாதுபாடுபட்ட புத்திமான்களை நாம் ஸதாநன்றிஅறிவோடு ஞாபகத்தில் வைத்திருக்கவேண்டும் என்பது மாத்திரம்தான் இதைப்படிப் போருக்கு அவசியம் தெரிவிக்கவேண்டியது.

# சுகாதாரவிளக்கம்

## HYGIENE

---

### VIII அதிகாரம்

பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது

### ஸ்நாநம் முதலியவை

102. காலையில் எழுந்திருத்தல்.—ஒவ்வொருவனும் சூரியன் உதிக்க 1½-மணி நேரமிருக்கும்பொழுது தனது படுக்கையைவிட்டு எழுந்திருந்து சூரியோதயமாவதற்குள் தனது நித்தியக் கடனை அநேகமாய் முடித்துக் கொள்ளவேண்டும் என்று எல்லா மதத்தார்களும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் படுக்கைவிட்டு எழுந்திருந்ததும் கை கால்களைக்கழுவி, கடவுளைத் தோத்திரம்பண்ணி அதற்குப் பிறகு வீட்டுக்கு வெளியேசென்று மல மூத்திரங்களை விஸர்ஜனம் பண்ணவேண்டும் வெளியேசெல்வது நாட்டுப்புறத்தில் சலிசாகவிருக்கும். பட்டணங்களில் அவரவர்கள் வீடுகளிலேற்பட்டிருக்கும் கக்கூஸ்களிற்றான் விஸர்ஜிக்கவேண்டும்.

103. மலமூத்திரவிஸர்ஜனம்.—நதீதீரம் தோட்டம் தேவாலயம் இவைகளையெல்லாம் விலகி மலமூத்திர விஸர்ஜனம் செய்யவேண்டும். நமது நாட்டுப்புறத்தார்கள் நல்லஜலம் ஓடும் நதிகளிலிறங்கி பெரும்பாலும் சௌசம்பண்ணுவார்கள். இவ்வழக்கம் நிந்திக்கப்பட்டிருக்கின்றது. ஜலத்தை வெளியில் எடுத்தே சுத்தி பண்ணிக்கொள்ளவேண்டும் என்று விதிகள் ஏற்பட்டிருக்கின்றன.

104. பல்துலக்கும்விதி-சிலர்சாம்பலாலும் மணலாலும், மண்ணாலும் கண்டபடி பற்றேய்ப்பார்கள். சில புஸ்தகங்களில் பலவித குச்சிகளும் அவைகளுடைய குணங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. இக்காலத்திய சுகஸந்தர்சன விதிப்படி நாம் யோசித்துப் பார்க்கும்பொழுது இவ்வண்ணம் பல் துலக்குவதொன்றும் நமக்கு ஒவ்வாது. பல்லின் கட்டிடத்தைக் குச்சிகள் அசக்கிப் பற்களைப் பலஹீனப்படுத்தும். சில சமயங்களில் இரத்தம் பெருகி ஓடும். மண், மணல், செங்கற்பொடி இவைகள் பல்லின் உருவையே தேய்த்து அழித்துவிடுகின்றன. ஆகையால் மேற்கூறியவகை இக்காலத்தில் நமக்கு உதவாது.

105. பற்பொடி.—சாதாரணமாய் நமக்குக்கிடைக்கும் மரக்கரி (அடுப்புக்கரி) யை எடுத்து அம்மியில் வைத்து நன்ருகப் பொடித்து அதில் கொஞ்சம் உப்பைப்பொடித்துக் கலந்து அப்பொடியைக்கொண்டு நித்யமாக பற்றேய்க்கலாம். இன்னும்கொஞ்சம் நல்லவிதமாகப்பற்பொடி செய்துகொள்ளவிரும்புகின்றவர்கள் சீமைச்சுண்ணும்பு 5-பலம், படிக்காரம் 1-பலம், கிராம்பு, மிளகு, இலவங்கப்பட்டை இம்மூன்றும் வகைக்கு ஒருபலம்ஆக ஒன்பது பலம்சரக்குவாங்கி முதலிரண்டையும் வெயிலில்வைத்து நன்ருகப்பொடித்து மற்ற மூன்று வஸ்துக்களையும்தனித்தனியே பொடித்து எல்லாவற்றையுங் கலந்து ஒன்று சேர்த்து ஒரு புட்டியில் போட்டுவைத்துக்கொண்டு ஒருதடவைக்கு ஒரு சிமிட்டாப்பொடி எடுத்து உபயோகிக்கலாம். இப்படிச் செய்வதால் ஒரு ஆளுக்கு ஒருவருஷத்திற்கு 2-அணு செலவாகும். எல்லா ஸாக சந்தர்சன சாஸ்திரிகளாலும் வைத்தியர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட பற்பொடி இது.

106. ஸ்நானம்.—இவ்வண்ணம் பற்றேய்த்து விட்டு நாம் ஸ்நானம் செய்யவேண்டும். ஸ்நானம் என்பது நமது தேகத்தின் மேற்பாகமாகிய தோலைப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ளும் முறை. நமது தேகத்தின் மேலிருக்கும் தோலின் அமைப்பைப்பற்றி நாமிவ்விடம் கொஞ்சம் எடுத்துச்சொல்லவேண்டும். அப்பொழுதுதான் ஸ்நானத்தால் நமக்கு விளையும் நன்மை நன்ருக விளங்கும்.

107. பொய்த்தோல்.—நாம் நமது தேகத்தின் மேல்காணும் தோல் பொய்த்தோல்—Epidermis இத்தோலில் நரம்பு ஒட்டமில்லையாதலால் இதற்கு உணர்ச்சிகிடையாது. நாம் மண்வெட்டியைப்பிடித்து முதல்முதல் வெட்டும்பொழுது நமக்குத் தெரியாமலே நமது கை கொப்புளிக்கிறதை நாம்காண்கின்ரேம். இது பொய்த்தோலில் உண்டாகும் கொப்புளம்.

108. கிரமமான தோல் சருமம்—இப்பொய்த்தோலின் கீழே கிரமமான தோல் dermis—இருக்கிறது. இதை நாம் சருமம் என்று வியவகரிப்போம். இச்சருமம் வெகுவுறுதியும் பலமுமான அமைப்பு. இதின் நரம்புகள் அமைக்கப்பட்டிருக்கின்றன சருமத்தில் இரத்தவோட்டமுண்டு. இச்சருமத்திற்ருன் நமது தேகத்திலிருந்து வியர்வையை வெளியில் கக்கும் வியர்வைக்குழல்களும், அதே மாதிரி சிலவிதத்தைலங்களை வெளிக்கக்கும்தைலக்குழல்களும், மயிர், நகம் இவைகள் எல்லாம் அமைக்கப்பட்டிருக்கின்றன. வியர்வைக்குழல்கள் அநேக சிறுகுழல்களை ஒன்ருகச்சேர்த்துச் சுற்றப்பட்டுச்சிறுதுவாரங்கள் வழியாய்ப் பொய்த்தோலின்மேல் வாயைத் திறந்துகொண்டிருக்கும். இவ்வாய்களை ஸ்தூலக்கண்களால் நாம் காண்பதரிது. பூதக்கண்ணுடியால் நாம் பார்க்கும்பொழுது நமது தேகத்தின் மேல் ஒவ்வொரு சதுர அங்குலத்திலும் 400-முதல் 3000-வரையில் இச்சிறுதுவாரங்கள் காணப்படும் இத்துவாரங்கள் நமது உள்ளங்காலிலும் உள்ளங்கையிலும் அதிகம். இக்குழல்கள் எல்லாவற்றையும் சேர்த்து நாம் கணக்கிட்டுப்பார்த்தால் இக்குழல்கள் 2½-மைல் நீளம் இருக்கின்றதாகத் தெரியவருகிறது.

109. ஸ்வேதம் அல்லது வியர்வை.—நாம் தூங்கும்பொழுதும் விழித்துக்கொண்டிருக்கும்பொழுதும் வேலை செய்யும்பொழுதும் வேலைசெய்யாமலிருக்கும்பொழுதும் நம்மையறிந்தும் அறியாமலும் எப்பொழுதும் வியர்வை நமது தேகத்தின்மேல் உண்டாய்க்கொண்டே யிருக்கின்றது. கொஞ்சமாக உண்டாகும் வியர்வை நமது சருமத்தை எப்பொழுதும் மிருதுவாக வைத்துக்கொண்டிருக்கும். அக்கொஞ்சமான வியர்வை நம்மையறியாமலே உடம்பின் உஷ்ணத்தால் மாறிப்போய்விடும். எதாவது ஒரு வியாயாமத்தால் அல்லது உஷ்ணத்தால் வியர்வை அதிகமாகக் காணும்பொழுதுதான் நாம் அதை ஜலரூபமாகப் பார்க்கின்ரேம். ஆகையால் நமது சருமத்தின் மேலிருக்கும் வியர்வைக்குழல்களும் தைலக்குழல்களும் நமது தேகத்திலிருந்து ஒரு வித அசுத்தத்தை எப்பொழுதும் வெளிக்கக்கிக்கொண்டேயிருக்கின்றன. நமது தேகத்தைப்பரிசுத்தம்பண்ண பலவழிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகளுள் நமது தோலின்மேல் ஏற்பட்டிருக்கும் இச்சிறுகுழல்களின் வழி வெகுபிரதானமானவழி. இவ்வழி முற்றிலும் ஒருநிமிஷம் அடைக்கப்படுமேயானுல் உடனேமரணம் சம்பவிக்கும். இக்குழல்கள் தத்தம்காரியத்தைச் சரியாக நடத்தாமற்போவதாலும் பலவித ரோய்கள் விளையும். ஆகையால் ஒவ்வொருவனும் இவ்வித நோய்களுக்குத் தன்னை யுள்ளாக்காமலிருக்க விரும்புவானேயானுல் அவன் தன் தோலை நல்ல நிலைமையில் வைத்துக்கொள்ளவேண்டும். அது எப்படி என்ருல் ஸ்நானத்தாற்ருன்.

110. குளிர்ந்தஜல ஸ்நானம்—நமது தேகசௌக்கிய மிடங்கொடுக்குமாயின் அதிகாலையில் சூரியோ

தயத்திற்கு முன்பாக குளிர்ந்தஜலத்தில் ஸ்நானம் செய்வதே உத்தமமென்று ஸூக்ஷ்மசந்தர்சனவாதிகள் சொல்லுகிறார்கள். இரவில் நாம் தூங்கும்பொழுது வியர்வை நம்மையறியாமல் அதிகமாய்க் கழிந்துகொண்டேயிருக்கின்றது. அப்படியே கோட்டுவாய் நீர் கண்ணீர் இவைகளும் போய்க்கொண்டிருக்கின்றன. நாம் தூங்கும்பொழுது இவ்வித பல அசுத்தங்கள் இரவில் அகலுகின்றபடியால் காலையில் ஸ்நானம் உத்தமம் என்று எல்லாரும் எடுத்திருக்கின்றார்கள். நமது தேசத்து கிரந்தங்கள் எல்லாவற்றிலும் பிராதக்கால ஸ்நானத்தைப்பற்றி வெகு பிரஸித்தமாய்ச் சொல்லியிருக்கிறது. சௌனகர், வியாஸர், ஜாபாலி, யாக்ஞவல்க்யர், ஸத்தியவிரதர், தக்ஷர் முதலிய மாமுனிகளும் இதைப் புகழ்ந்திருக்கின்றார்கள். பிராதஸ்நானம் பண்ணுவதால் ஒருவனுக்கு அழகு, காந்தி, பலம், ஆயுள், ஆரோக்கியம் முதலியவைகள் அதிகரிக்கின்றன. தூக்கத்தில் கெட்ட கனவுகள் உண்டாகிறதில்லை. நாற்றம் முதலிய அசுத்தங்கள் நீங்குவதுடன் சொரி சிரங்கு முதலியவைகளும் வாரா. குளிர்ந்த ஜலத்தில் நாமிறங்கி முழுகும்பொழுது குளிர்மையின் காரணத்தால்நமது சருமத்தண்டையிருக்கும்இரத்தம் உள்நோக்கிவேகமாய் ஓடி ஒருவித பரிசுத்தத்தை அடைகின்றது.

அதிக பலமில்லாதவர்களும், காசம், கபம் முதலிய நோயால் வருந்துகின்றவர்களும் குளிர்ந்த சலத்தில் அதிகமாக ஸ்நானம் செய்யக்கூடாது.

111. வெந்நீர் ஸ்நானம்.—இதானது நமது தேகத்தைவிட்டு அசுத்தங்களை யகற்றுவதில் குளிர்ந்தஜல ஸ்நானத்தைவிட குணமுள்ளதென்றாலும், குளிர்ந்தஜல ஸ்நானத்தைப் போல் அவ்வளவு ஆரோக்யத்தையும் உற்சாஹத்தையும் உண்டாக்காது. வெந்நீர் ஸ்நானம் எவ்வாறு அசுத்தத்தை அதிகமாக அகற்றுகிறதென்றால் வெந்நீர் நமது தேகத்தின்மேல் விழுந்ததும் அதிக உஷ்ணத்தால் அதிக இரத்தம் நமது சருமத்தினிடம்வந்து சேர்ந்து வியர்வைக் குழல்களாலும் தைலக்குழல்களாலும் அதிக அசுத்தத்தை நமது தேகத்தைவிட்டு வெளியாக்குகின்றது. வென்னீர் ஸ்நானம் முடிந்தபிறகு நமதுதேகம் அதிகமாக வியர்ப்பதை நாம் பார்த்திருக்கின்றோமல்லவா? இவ்வித ஸந்தர்ப்பங்களில் குளிர்காற்று நம்மேல் அடித்தால் சீதளம்பற்றி பலவிதநோய்கள் உண்டாகும். அவ்வாறு சீதக்காற்று நமது தேகத்தில் சம்பந்திக்காதவண்ணம் நாம் பாதுகாத்துக் கொள்ளவேண்டும். குழந்தைகள், கிழவர்கள் இவர்களுக்கு அதிக சீதமும் அதிக உஷ்ணமுமில்லாத வெதுவெதுப்புநீர் ஸ்நானத்துக்கு வெகு ஆரோக்கியம்.

112. வியர்வைத் துவாரங்கள்.-தேகத்தின்மேலிருக்கும் வியர்வைத் துவாரங்கள் 3½-கோடி. நீளம் 2½-மைல், ஆகையால் நாம் எவ்வளவுக்கெவ்வளவு நன்றாக அழுக்கைத் தேய்த்துக் குளிக்கின்றோமோ அவ்வளவுக்கவ்வளவும் ஆரோக்கியமே.

113. ஸ்நானம் எப்பொழுதுசெய்யக்கூடாது.-போஜனம் பண்ணினவுடனே நாம் ஸ்நானம் செய்யக்கூடாது. அதிகமாக களைப்படைந்திருக்கும்பொழுதும், காய்ச்சல்முதலிய நோயால் வருந்தும்பொழுதும் நாம் ஸ்நானம் செய்யக் கூடாது. வீட்டைவிட்டு விலகியிருக்கும் பெண்டுகள் அவ்வாறிருக்கும் காலத்தில் ஸ்நானம் செய்யக்கூடாது. கர்ப்பிணிகள் வெகு ஜாக்கிரதையாக ஸ்நானம் செய்யவேண்டும்.

114. சமுத்திர ஸ்நானம்.—ஸமுத்திர ஸ்நானம் தேகத்துக்கு மிகவும் ஆரோக்யம். ஆனால் அதிக பலசாலிகள்தான் செய்யவேண்டும். ஸமுத்திரக்காற்று ஸமுத்திரஜலத்திலிருக்கும் ஓஸோன்(Ozone)என்ற ஒருவித உப்பு; இவைகள் தேகத்துக்கு சௌக்கியத்தை விளைவிக்கின்றன.

---

"குரு தன் சிஷனுக்கு:—சகல ஜீவனுக்குள்ளும் கடவுளிருக்கிறார் என்று உபதேசித்தார். சிஷன் இதின் கருத்தை நன்றாய அறியவில்லை. அவன் ஒரு வீதிவழியே செல்லுகையில் ஒரு யானை அவனுக்கு எதிரேவந்தது யானை மாவுத்தன் இவனைநோக்கி "தள்ளிக்கொள்" என்று ஒலமிட்டான். சிஷனோ, தனக்குள்ளும் கடவுள் இருக்கிறார், யானைக்குள்ளும் கடவுளிருக்கிறார் என்று எண்ணிக்கொண்டு நகராமலிருந்தான். தான் கடவுளைக்கண்டு எதற்காகப் பயப்படவேண்டு மென்றும் எண்ணினான். யானை இவன் கழுத்தைப்பிடித்துத் தூக்கி அடித்தது. இவனுக்கு வறுத்தகாயம் உண்டாயிற்று. குருவினிடம் சென்று நடந்ததை நிகழ்த்தினான். குரு சிஷனைப்பார்த்து நீ நினைத்தது சரிதான்; உன்னிடத்திலும் கடவுள்தானிருக்கிறார்; யானையினிடத்திலும் கடவுள்தானிருக்கிறார். ஆயினும் மாவுத்தனைக்கொண்டு உனக்கு அவர் எச்சரித்தாரே. நீயேன் அதைக் கவனிக்கவில்லை என்று சொன்னார்"

(ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.)

## DEPARTMENT OF AGRICULTURE, MADRAS.

தென் ஆற்காடு ஜில்லா நெல்லிகுப்பம் ஸ்டேஷனுக்கு அடுத்த பாலூரில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சர்க்கார் விவசாய பண்ணையில் நெல் விருத்தியைக் குறித்து செய்த பரிட்சைகளின் சில அனுபவங்களையும் நெல் விதையை பொறுக்கியெடுத்து பயிர்செய்ததால் அதை எவ்வளவு விருத்திக்குக் கொண்டுவரப்பட்டதென்பதையும் நான் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்.

பாலூர் சுற்றிலுமுள்ள சம்சாரிகள் தங்களுடைய இருபோக நஞ்சையில் முதல்போகத்துக்காக சுவர்ணவாரி என்னும் நெல்லையும் இரண்டாம்போகத்துக்காக கருடன் சம்பா (சிறுமணி) என்னும் நெல்லையும் பயிரிட்டு வருகிறார்கள். முதல்போகத்தில் சுவர்ணவாரியை நாத்துவிட்டு நடாமல் விதைப்பு நடந்துவருகின்றது. ஏகரா ஒன்றுக்கு 22-முதல் 30-பட்டணம்படி விதை வைகாசியில் விதைக்கிறார்கள். இந்த காலத்தில் வாய்க்கால்களில் அதிக ஜலம் கிடையாது. அநேக நிலங்கள் ஜலம் எட்டாமல் தரிசாய் கிடக்கும். ஜலம் அதிகம் வேண்டாததும் ஜாஸ்தியாய் கிளைக்கக் கூடியதாயுமுள்ள பங்கு என்னும் ஒருவகை நெல்லை ஷை பாலூர் பாரம்பண்ணையில் ஏகராவுக்கு 7½-படிவிதை வீதம் தெளிவாக நாத்துவிட்டு 30-நாளுக்குள் நாத்துகளைப் பிடுங்கி ஒவ்வொருநாத்தாக இரண்டு ஏகராவில் நடப்பட்டது. ஆனால் ¼-ஏகராவில் 4-அங்குலத்துக்கு ஒரு நாத்தும் ¼-ஏகராவில் 6-அங்குலத்துக்கு ஒரு நாத்தும் மற்றவைகளில் 8-அங்குலத்துக்கு ஒற்றை நாத்தும் மற்றொரு துண்டில் சாலையிலும் ¼-ஏகராவில் சொர்ணவாரியும் இப்படி பலவிதமாக நடப்பட்டது. (சாலை நடவைப்பற்றி கீழே கொஞ்சம் விவரமாக சொல்லுகிறேன்) ஒற்றை நாத்து நட்டபோதிலும் ஒவ்வொன்றும் 10-முதல் 20-30-வரையில் கிளைப்புவிட்டு செடிகள் நன்றாய் வளர்ந்து நல்ல கதிருகளுடன் பார்த்தவர்கள் ஆச்சரியிக்கும்படி விளைந்து அறுவடைசெய்து இரண்டு ஏகராவுக்கும் கணக்கு எடுத்துபார்த்ததில் சராசரி ஏகராவுக்கு 1067½-படி வீதம் கிடைத்தது. சாலையில் நட்டநடவு எல்லாவற்றிலும் ஜாஸ்தி கண்டுமுதலைத் தந்தது. செய்நேர்த்தி முதலியவைகள் எல்லாம் பக்கத்து சம்சாரிகள் செய்வதுபோலவேதான் செய்ததேயல்லாமல் வேறல்ல.

இது நிற்க இரண்டாம் போகமாகிய சம்பா பயிரையும் விருத்திக்குக் கொண்டுவரக்கருதி அவ்விடங்களில் ஏராளமாய் பயிரிட்டுவரும் கருடன்சம்பா வென்னும் நெல்லை வாங்கி நாத்தங்காலில் ஏகராவுக்கு 6-பட்டணம்படி வீதம் தெளிவாய் நாற்றுவிட்டு சென்ற 1907-ம் ஹூத்தில் ஒற்றை நாத்தாக நடப்பட்டது. நாத்துகள், 30-நாளிக்குள் நூறுவெடித்து கிளம்பி பூமியை மூடிக்கொண்டது. இந்தக்காலத்தில் நடும்பொழுது பார்க்காதவர்கள் ஒற்றை நாத்து நடவு என்றுசொல்லமுடியாது. பக்கத்து சம்சாரிகள் வழக்கப்படிநட்ட நடவுள் கொஞ்சம் வெளுத்திருக்க ஒத்தநாத்து நடப்பட்ட பயிர்கள் பசுமையாயிருந்தன. இரண்டுமாத காலத்தில் ஒத்தைநாத்து ஒவ்வொரு தூரிலும் 10 முதல் 20 கிளைகள் வெடித்து நன்றாய் வளர்ந்தன. சம்சாரிகள் பயிரில் சராசரி 3 அல்லது 4 தூருக்குமேல் இல்லை; சம்சாரிகளுக்கு கிடைத்த மாசூலைவிட பாரத்தில் மாசூல் கொஞ்சம் ஜாஸ்தியாகவே யிருந்தது. தங்கள் பயிர் செழிப்பாயும் கதிர்கள் நன்றாய் வராமலிருந்தபோதிலும் குடியானவர்கள் தங்கள் தங்களுக்கு மறுவருஷத்துக்கு வேண்டிய நெல்விதையை தங்கள் மாசூலிலிருந்து வழக்கப்பிரகாரம் எடுத்து வைத்துக்கொண்டார்கள். ஆனால் பாலூர் சர்க்கார் பாரத்திலோ ஒவ்வொரு வயல்களிலும் போய் ஜாஸ்தி கிளைத்த செடிகளில் செழிப்பான கதிர்கள் வேறாகவும் மணிநெருங்கின கதிர்களையும் பொறுக்கி எடுத்து விதைக்காக தனித்தனியே வைத்துக்கொள்ளப்பட்டது; இப்படி ஒத்தநாத்திலிருந்து நன்றாய்க் கிளைத்து நீண்ட கதிர்களிலிருந்து பொருக்கியெடுத்த விதை நெல்லை 1908-ம் ஹூத்தில் சம்பா நடவுகாலத்தில் நாத்தங்காலில் ஒரு செண்டு நிலத்தில் ஒரு பட்டணம்படி விதையாக ஒரு ஏகரா நட 6 பட்டணம்படி வீதம் நாத்து விடப்பட்டது. இப்படி விதையை நாத்தங்காலில் தெளிவாக விடுவதால் நாத்துகள் (கேழ்வரகு) கேப்பைபோல் பட்டை உறப்பாயும் செழிப்பாயும் வந்தது. இந்த நாத்தை சுமார் 36-வது நாளிலிருந்து 40 நாளுக்குள் 6 அங்குலத்துக்கு ஒரு, ஒத்தைநாத்தாக நடப்பட்டது. இப்படி பொறுக்கி எடுத்த விதையை தெளிவாக நாத்துவிட்டு 40-நாளுக்குள் ஒத்தை நாத்தாக நடப்பட இந்த நாத்தானது அதற்கு முந்திய வருஷம்போல் அல்லாமல் ஒவ்வொரு தூரிலும் சராசரி 20-முதல் 40-வரை கிளைகட்டி ஏகரா 1-க்கு சுமார் 1200-படி வரை கண்டுமுதல் கிடைத்தது. அக்கம்பக்கத்திலிருந்த சம்சாரிகளுக்கு ஏகராவுக்கு

சராசரி 600-படி கிடைத்திருக்கிறது. முதல் வருஷத்தில் பாரத்தில் ஒத்தைநாத்து நட்டு பயிர்செய்து பலன்தந்ததை அறிந்தும் பூமிக்கு ஜாஸ்தி உரம்போட்டதனால் சர்க்கார் பாரத்தில் ஜாஸ்தி விளைந்தது என்று சொல்லிக்கொண்டு பாரத்து உத்தியோகஸ்தர். சொல்லை நம்பாமல் சம்சாரிகள் மோசம்போனார்கள். அதற்காக சென்றவருஷம் உரம்போடும்போதெல்லாம் அந்தக் காலத்தில் எதிர்ப்படும் ஒரு சம்சாரியையோ அல்லது சம்சாரிகளையோ வைத்து வயல்களுக்கு எருவிடப்பட்டது. பாரத்தில் எருவிடுவதெல்லாம் அவ்விடத்தில் சம்சாரிகள் செய்வதுபோலவேதான். அவ்விடத்தில் நஞ்சைக்கு பலர் பலவித எருக்கள் உபயோகப்படுத்துகிறார்கள், அவர்கள் நஞ்சைக்கு இடும் எருவுகளில் எது சிலாக்கியம் என்றறியும்பொருட்டு ஒவ்வொரு எருவையும் கால் கால் ஏகராவில் பரிசோதனை செய்யப்பட்டது.

அந்த எருவுகளாவன :—

1. முத்துக்கொட்டை புண்ணாக்கு ஒரு ஏகராவுக்கு ஒரு பாரம் வீதம்.
2. மணிலாக்கொட்டை புண்ணாக்கு.
3. அவுரிச்சக்கை,
4. மாட்டுச்சாணி.
5. மணிலாக்கொட்டை கொடி.
6. எருக்கந்தழை.
7. பூவரசு முதலான இதர தழைகள்.

மேல் சொன்ன எருவுகளின் தாரதம்மியங்கள் கண்டுபிடிக்கும் எருவில்லாமல் கால் ஏகராவிலும் சாகுபடி செய்யப்பட்டது.

இதில் அவுரிச்சக்கையில் ஏகராவுக்கு 1144; எருக்கந்தழைபோட்டதில் 1072; எருவிடாத பயிரில் சராசரி 764.

இந்த எரு பரிசோதனைகள் இரண்டு வருஷகாலமாய் நடந்துவருகின்றன. அதாவது எருவிடாத நிலத்தில் இரண்டு வருஷமாய் எருவில்லை. அப்படி எருவில்லாமல்போனபோதிலும் எருவிட்டு சம்சாரிகள் செய்த பயிரிலிருந்துவந்த மாகுலைவிடவிதையை பொருக்கியெடுத்து நாத்தங்காலில் விசாலமாக நாத்துவிட்டு ஒத்தை நாத்தாக நடப்பட்ட பயிரிலிருந்து கிடைத்த மாகுல் ஜாஸ்தி. ஆனால் சிலபேர் சொல்லக்கூடும்ஒத்தைநாத்துநட்டுஇவ்வளவுகண்டுமுதலிருக்க இரண்டுநாத்துசேர்த்துபோட்டால் ஒருவேளைகண்டுமுதல் இரண்டு மடங்கு ஆகாமல்போனாலும் கொஞ்சமேனும் ஜாஸ்தி கிடைத்தாலும் அப்படி நடுவது நலமல்லவா என்றுகேட்கவும்கூடும். அப்படி இரண்டு நாத்து சேர்த்தும்3-நாத்து சேர்த்தும் சர்க்கார் பண்ணையிலேயே சம்சாரிகள் பயிரிடுவதுமாதிரி 6-அல்லது8-நாத்துசேர்த்தும்போடப்பட்டது. இப்பொழுது அறுவடையான வருஷத்திலும் பரிசோதித்தோம். தவிரவும் ஒத்தை நாத்துக்காக 6-அங்குலத்துக்கும் 9-அங்குலத்துக்கும் நட்டும் பரிசோதிக்கப்பட்டிருக்கிறது. மேலும், பாருங்கள், ஒரு நாத்தானது தனிமையாகக் காத்தோட்டமாய் இருக்குமேயானால்அது பெரியபுத்தாகி அதிக கிளைப்புடன் நல்ல கதிர்களுடன் வருவதை நாமெல்லோரும் பார்த்திருக்கிறோம். அதை அனுசரித்து காத்தோட்டம் கொடுக்க நெல்பயிரைசாலைசாலையாய் நடப்பட்டது. இதிலும் கால் ஏகராவில் நெருங்கியசாலையும் (அதாவது 8-அங்குலத்துக்கு சாலைகளும்) மற்றொரு கால் ஏகராவில் ஒருஅடிக்கு ஒருசாலையாகவும் நாத்துநடப்பட்டது. ஆனால் சாலையில் நெற்பயிர் இரண்டு அல்லது மூன்று அங்குலத்துக்கு ஒரு பயிர் நடப்பட்டது. இது எல்லாவற்றிலும் அரை அடி உயரமாய் வளர்ந்து நீண்ட கதிர்களுடன் வந்தது. இதில் களை எடுப்பது மிகவும் சுலபம். இதிலிருந்து ஏகராவுக்கு 1,200 படிக்குமேல் கிடைத்திருக்கிறது. ஆனால் இரண்டு மூன்று சேர்த்து நட்ட நடுகையிலிருந்து சராசரி 1 ஏகராவுக்கு 900-ம்படிக்குமேல் கிடைக்கவில்லை. இவ்வாறு நாத்துகளை அதிகப்படுத்தி நடுவதினால் ஏன் தூரு கட்டுகிறது, குறைகிறது என்று யோசிப்போம். ஒவ்வொரு செடியும் தனது வேரை தன்னைச் சுற்றிலும் பரவவிட்டு ஆகாரத்தை எடுத்துக்கொள்ளுகிறது. நிலத்திலுள்ள ஆகாரத்துக்கு தக்கபடியும் ஒரு செடிக்கும் மற்றொரு செடிக்கும் உள்ள இடை வெளிக்கு தகுந்தபடியும் செடி கிளைத்து தூரு கட்டுகிறது. ஒரே இடத்தில் இரண்டு நாத்துசேர்த்து நடும்பக்ஷத்தில் அந்தவிடத்திலுள்ள ஆகாரத்தை அந்த இரண்டு நாத்துகளும் பாகம் செய்துகொள்ளுகிறது. இதேமாதிரி நாத்து அதிகப்பட அதிகப்பட ஒவ்வொரு செடிக்கும் கிடைக்கும் ஆகாரம் குறைகிறது. ஆகாரம் தகுந்தபடி கிடைத்தால் செடி கிளைக்கிறதில்லை. தவிரவும் ஒவ்வொரு செடிக்கும் தகுந்த காற்றோட்டம் இருந்தால்தான் அதன்வேர் பரவும். அடர்த்தியாய் நட்டமுடியின் மத்தியில் காற்று செல்லுவதற்கு வழியில்லை. ஆகையால் ஜாஸ்தி நாத்து சேர்த்து நட்டவிடத்தில் கிளைப்பு குறைந்து செடியும் மெலிந்து இருக்கும். ஆகையால் அதிகநாத்துசேர்த்தும் அடர்த்தியாயும் நாத்து நடுவதில் பலன் இல்லையென தெரிந்துகொள்ள

இப்படி ஒத்தை நாத்துநடுவதில் மாசூல் லாபம் என்று தெரிந்தபிறகு இதனால் மற்றுமுள்ளகுண தோஷங்களையும் ஆராய்ந்து பார்ப்போம். ஒரு ஏகராவில் ஒத்தை நாத்துநட எவ்வளவு படி நெல்வேண்டியதென கவனிப்போம்; ஒரு ஏக்கராவில் ஒரு அடிக்கு ஒரு நாத்துநட 4840 × 6 = 43560 அதாவது 45000-நாத்து வேண்டியது; அரை அடிக்கு ஒன்றுநட 45000 × 4 = 180000-நாத்து வேண்டியது. ஒன்று தப்பாமல் முளைப்பதாயிருந்தால் 180000-நெல்வேணும்; ஒருபடி கருடன் சம்பா நெல்லை எண்ணி பார்த்ததில் 54400நெல் இருக்கிறது. 6 அங்குலத்துக்கு ஒரு நாத்து நடவேணுமானால் 3½-படி நெல்விதை போதுமானமானது. இதற்குமேல் அவரவர்கள் நெல் விதையைப் பொறுத்தும் சில தேசங்களை உத்தேசித்தும் 6 படி வரை ஒரு ஏகராவுக்குப் போடலாம். நெல் சிறியதானால் 3½-படியும் வேண்டியதில்லை. ஆகையால் ஒத்தை நாத்து நடுவதினால் அந்தந்த ஊர்வழக்கத்துக்குத் தக்கபடி விதை லாபம் இருக்கிறது; அதாவது ஏகராவுக்கு 36-40-படி விதையில் விதை எப்பொழுது குறைகிறதோ விதைக்க நல்ல விதைகளைப் பொறுக்கியெடுக்கவும் நன்றாய் காயவைத்துக்கொள்ளவும் இடமும் காலமும் கிடைக்கும். விதைகளை பொறுக்கி வைப்பதிலுள்ள குணகுணங்கள் எல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. ஆனபோதிலும் அதில் சம்சாரிகள் கொஞ்சமேனும் கவனம்செலுத்தாததினால் பல வகைகளிலும் நஷ்டம் அடைகிறார்கள்.

ஆகையால் நல்லசெடியை தெரிந்தெடுத்து அதில் நல்லதிறமான கதிர்களிலிருந்து விதையை எடுத்து வைத்துக்கொள்ளவேணும். ஒத்தை நாத்து நடுவதற்கு குடிகள்குறையும் ஆகையால் நாத்து பிடுங்குவதிலும் லாபமுண்டு. நாத்து பட்டை உறப்பாயிருப்பதால் கேப்பை நடவு மாதிரி ஒவ்வொரு நாத்தாய் நடுவதில் பிரயாசமில்லை. ஆகையால் ஒவ்வொரு நாத்தாய் நட்டு பயிர் செய்வதில் அனுகூலமேயொழிய பிரதிகூலம் கிடையாது. எவ்வளவு தூரத்துக்கு ஒரு நாத்து நடவேணுமென்ற சங்கதி பூமிசாரம் முதலான அநேக காரணங்களை பொறுத்திருப்பதால் தங்கள் தங்கள் பூமியில் நாத்தை கிட்டவும் எட்டவும் நட்டு தீர்மானித்துக்கொள்ளவேண்டியது. தற்காலம் நாட்டு நடவு மாதிரி நடுவதினாலேயே எனக்கு ஏகராவுக்கு 1200 படி கண்டுமுதல் கிடைக்கிறது. நான் ஏன் ஒத்தை நாத்து நடவேண்டுமென்று சிலபேர் கேழ்க்கலாம். விளைவு பூமிசாரத்தை ஒத்தது. பாலூரில் சம்சாரிகளுக்கு ஏகராவுக்கு 700 அல்லது 800 படி கிடைத்தால் ஒத்தைநாத்து நடுவதில் கண்டு முதல் அதிகப்பட்டிருக்கிறது. பூமி சாரத்தினால் நாத்து நடுவதினாலே 1200 படி கிடைக்குமானால் ஒத்தைநாத்து அந்த பூமியில் நட்டால் கண்டு முதல் அதிகப்படும் என்பதற்கு சந்தேகமுண்டோ?

தவிரவும் கருடன் சம்பா ஒத்தை நாத்தாக பயிரிட்டோம் என்று சொன்னேன் அது மாத்திரமல்ல.

மிளகு சம்பா, சின்ன சம்பா, முத்து சம்பா, மல்லிகை சம்பா, சீரகசம்பா, வெள்ளைசம்பா, வெள்ளைசிறுமணி, ஆனைக்கொம்பன், பூம்பாளை, கோணமணி சடசம்பா, சின்னகுசுமா, முதலான 15 நெல் தினிசுகள் அநேக ஊர்களிலிருந்து தருவித்து 9 அங்குலத்துக்கு ஒரு நாத்தாக நட்டு பயிர் செய்வதில் விதை பொறுக்கி யெடுக்காமலிருந்தபோதிலும் நல்ல நாத்துக்களை மாத்திரம் நட்டதால் நல்ல பலனையே கொடுத்திருக்கிறது. இந்த தினுசுகளிலும் சம்சாரிகளுக்கு விதைக்காக கொடுக்க நெல்எடுத்து வைக்கப்பட்டிருக்கிறது; பங்கு நெல் புதிதானபடியால் தபால் சார்ஜ் உள்பட ஒரு ரூபாய் நெல் சம்சாரிகளுக்கு கிரயமில்லாமல் கொடுக்கும்படிக்கு டிபார்ட்மெண்டார் உத்தரவு செய்திருக்கிறார்கள். ஒத்தை நாத்துபோட்டு அனுபவமில்லாத சம்சாரிகள் எல்லோரும் தங்களுடைய அபிவிருத்தியைக்கோறி அவர்களுடைய பூமியில் விஸ்தீரணத்துக்குத் தகுந்ததுபோல் பொறுக்கி எடுத்த விதையை கலக்க நாத்தங்காலில் விதைத்து கார் நெல்லானால் 18—20 நாளுக்குள்ளும் சம்பாவானால் 35—40-நாளுக்குள்ளும் கொஞ்சபூமியில் ஒத்தை நாத்தாக நட்டுமுதலில் பரிசோதனை செய்தால் அதன் அனுகூலம்தெரிந்து அபிவிருத்தியடைவார்களென நம்புகிறேன்.

S. SUBRAMANIA AIYAR,

கோயில்பட்டி, விவசாயபண்ணை, } *Manager.*

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

பண்டித நடேசசாஸ்திரியாரால் மொழிபெயர்ப்பு

### தவத்தின் பயன் என்ற ஐந்தாவது சருக்கம்

அவ்வாறு தனது கண்கள்முன்பாக ஈசன் மன்மதனைக்கொளுத்தவே பார்வதி தனது மனோரதங்கள் வீணானவளாய் தன் மனத்துக்குள் தனது அழகையும் வெறுத்துக்கொள்ளலானாள், ஏனெனில் அழகின்பயன் காதலன் தன்னை கருதச்செய்தலன்றோ!

2. தவத்தினால் ஒரேவஸ்துவை தியானித்து அதைக்கைப்பற்றி தனது சௌந்தரியத்தைப் பயன் பெற்றதாகச் செய்ய பார்வதி எண்ணினாள். தவத்தாலன்றி மற்றும் எவ்விதத்தால் அவ்விதமான நேசமும் அவ்விதமான கணவனும் ஆக இவ்விரண்டும் கிட்டும்?

3. கைலயாளியிடம் தனது மனத்தைச்செலுத்தி தவத்தில் முயற்சியுடையவளாய்ப் பார்வதியாகிய தன் பெண்ணிருப்பதை மேனைகேட்டு அவளைத் தன் மார்போடு அணைத்துக் கட்டிக்கொண்டு வெகுசிரம சாத்தியமான தவத்தினின்று அவளைத் தடுக்கின்றவளாய்ப் பின்வருமாறு சொல்லலுற்றாள்.

4. குழந்தாய்! உன்மனத்துக்கு இஷ்டமான தேவதைகள் * நமது வீட்டிலேயே யிருக்கின்றார்கள். (அத்தேவதைகளை ஆராதிக்கலாகாதா) தவம் எங்கே, உனது தேகம் எங்கே? வெகு மிருதுவாயிருக்கும் சிரீஷமலர் வண்டுகள் தன்மேல் வந்துட்கார்ந்தால் அவைகளைத் தாங்கிக்கொள்ளும். பறவைகள் உட்கார்ந்தால் அவைகளைத் தாங்கமுடியுமா?

5. இவ்வண்ணம் தான் என்ன சொன்னபோதிலும் தனது பெண் உறுதியான நிச்சயத்துடனிருப்பதை மேனைகண்டுகொண்டு அவளைத் தவத்தினின்று தடுக்கமுடியாதவளானாள். தனக்கு இஷ்டமானகாரியத்தில் உறுதிகொண்டிருக்கும் மனத்தையும் கீழ்நோக்கிப் பாய்ந்துகொண்டிருக்கும் நீரையும் யாரால் திருப்பமுடியும்?

6. தவம்புரிய நிச்சயித்துவிட்டஅப்பார்வதிஅவ்விதநிச்சயத்தை ஏற்கெனவே அறிந்திருந்த தனதுதந்தைக்கு தனதுஅன்பான தோழி ஒருத்தி மூலமாக தனது கருத்தைத் தெரிவித்து தவத்தின் பயன் தனக்குக் கிட்டும்வரையில் ஆச்சிரமத்தில் வசிக்கத் தனக்கு விடை கொடுக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டாள்.

7. கௌரீ தனது பெருமைக்குத் தக்கவாறு நிச்சயித்திருப்பதை அவளுடையமகிமை தங்கிய தந்தை கண்டு சந்தோஷித்து அவளுக்கு விடைகொடுத்தனுப்பவே அவ்வம்மணி பிற்காலத்தில் ஜனங்களுக்குள் கௌரீ கிரகம் என்று பெயர் வழங்கப் பெற்ற மயில்கள் விளையாடும் ஆச்சிரமத்துக்குச் சென்றாள்.

8. ஒருவராலும் தடுக்கமுடியாத உறுதிகொண்ட பார்வதி தனது மார்பின்மேல் பூசியிருக்கும் சந்தனத்தை, அதன்மேல் உருளுவதால் கலைக்கும் முத்துஹாரத்தை அகற்றி, இளஞ்சூரியனுக்கொப்பான நிறமுடைய மரவுரி தனதுமார்பை மூடக் கட்டிக்கொண்டாள்.

9. நன்றாகச் சிங்காரிக்கப்பட்ட அளகத்தால் அவ்வம்மணியின் முகம் எவ்வளவு அழகாய் விளங்கிற்றோ அதே அழகுடன் அவள் தனது அளகத்தை சடையாகப் பண்ணிக்கொண்டபோதிலும் விளங்கிற்று. தாமரை, வண்டுவரிசைகளிருத்தலால் மட்டுமன்றி பாசிக்கொத்தாலும் அழகாகவே பிரகாசிக்கின்றதல்லவா?

10. முன்பு தான் ஒட்டியாண மணிந்துகொண்ட இடையில் ஒவ்வொரு நிமிஷமும் தனக்கு மயிர்க்கூச்சை உண்டாக்கி வைப்பதும் தனது இடையைசிவப்பாகப் பண்ணிவைப்பதுமான தருப்பைக்கயிற்றை தான் நோற்கும் தவத்தின் காரணத்தால் மும்மடிப்பாய் மடித்துக் கட்டிக்கொண்டாள்.

11. தனது உதட்டை செங்குழம்புச் சாயங்களால் சிவப்பாகப் பண்ணுவதையும் தனது ஸ்தனங்களின்மேல் பட்டுக்கொண்டு விழுவதால் சிவப்புவர்ணம்பட்ட பந்தையடிப்பதையும் விட்டு நீங்கின அவள் கை தருப்பையைக் கொய்வதினால் காயம் பட்டு ருத்ராக்ஷமாலையை எப்பொழுதும் பற்றி ஜபத்திலிருப்பதாய் விளங்கிற்று.

12. விலையுயர்ந்த படுக்கையில் தூங்கும்பொழுதும் தனது தலையில் அணிந்திருக்கும் மலர் அப்படுக்கையில் உதிர்ந்தால் எவள் மேனி வருத்தப்படுமோ அப்பார்வதி தனது கையைத் தலையணையாக மடித்து வைத்துக்கொண்டு வெறுந்தரையில் படுக்கலானாள்,

* ஸ்ரீதேவிமுதலிய.

13. தவத்திலிருந்த அவ்வுத்தமி தனது இரண்டு ஆஸ்திகளை மறுபடி வேண்டும்பொழுது வாங்கிக் கொள்ளுவோம் என்று சேமத்திரவியமாக இரண்டு வஸ்துக்களினிடம் ஒப்புவித்தாள். அவையாவை, எவைகளிடமெனில், மெல்லிய கொடிகளிடம் தனது உல்லாஸமான நடையையும், மான்பேடுகளிடம் தனது சஞ்சலமான பார்வையையும்.

14. பார்வதி தானாகவே சோம்பலின்றி தனது குடமாகின்ற ஸ்தனங்களால் தண்ணீராகிற பாலை வார்த்து அவ்வாச்சிரமத்தில் கன்றுகள் வைத்து மரங்களை வளர்க்கலானாள். அவள் தான் முதல்முதல் அவ்வாறு வளர்த்த குழந்தைகளாகிய அம்மரங்களிடம் அவள் வைத்திருந்த அபிமானத்தை சுப்பிரமணியக்கடவுளால்கூட மாற்றமுடியவில்லை.

15. காட்டிலுண்டாகும் தானியங்களால் அவளால் வளர்க்கப்பட்ட மான்கள் அவளிடம் எவ்வளவு அன்பு வைத்திருந்தனவென்றால் எப்பொழுதாவது ஸந்தோஷத்தால் அவளுடைய தோழிகள் பார்வதியின் கண்களை அம்மான்களுடைய கண்களுடன் வைத்து அளவு எடுத்துப்பார்க்கமுயன்றால் அதற்கு அவைகள் இடங்கொடுத்தன.

16. நியமத்துடன் ஸ்நானம்பண்ணி அக்கினியில் ஹோமம்பண்ணி மரவுரி உடுத்து வேதங்களை ஓதிக்கொண்டிருக்கும் அப்பார்வதியைப்பார்க்க மாமுனிவர்கள் அவ்வாச்சிரமத்தை நாடிவரலானார்கள். (சிறியவர்களைப் பெரியவர்கள் பார்க்க வருவார்களாவென்றால்) அறத்தால் முதிர்ந்தவர்களுக்கு வயதுபார்க்கவேண்டுமென்பது இல்லை.

17. அப்பார்வதி தவம் பண்ணின ஆச்சிரமம் இயற்கையாகவே சண்டையிடும் விலங்குகள், அச்சண்டையை விட்டவைகளாயும், மரங்கள் ஏராளமான கனிவர்க்கங்களைப் பொழிவதினால் அதிதிகளுக்கு விருந்தளிக்கின்றவைகளாயும், புதிதாகக் கட்டப்பட்ட குடில்களின் இடையில் அக்கினிஹோத்திர அக்கினிகள் விளங்குகின்றவைகளாயும் இவ்வாறு எல்லாவிதத்தாலும் வெகு பரிசுத்தமானதாக சோபித்தது.

18. அவ்வுத்தமி எப்பொழுது தான் அக்காலம் வரையில் பண்ணின தவத்தால் தனது மனோரதம் நிறைவேறாது என்று எண்ணினாளோ அப்பொழுது தனது சரீரம் வெகு மெல்லியதாயிற்றே என்ற அச்சம் கொஞ்சமேனு மில்லாமல் தான் ஏற்கெனவே செய்துவந்த தவத்தைக்காட்டிலும் அதிகத்தவம் புரியலானாள்.

19. எவள் மேனி பந்து விளையாட்டாலும்கூட வருத்தமடையுமோ அவள், முனிகள் செய்யும் கடூரமான தவத்தில் மூழ்கினாள். அவள் மேனி தங்கத்தாமரையால் சிருஷ்டிக்கப்பட்டிருந்ததென்பது திண்ணம். இயற்கையால் தாமரை மிருது வென்றாலும் தங்கமானதால் கடினமாகவும் விளங்குமன்றோ?

20. எப்பொழுதும் புன்னகை நகைக்கும் அம்மெல்லிய இடையாள் வெயிற்காலத்தில் தன்னைச் சுற்றி நாற்புறங்களிலேயும் தீ வளர்த்து அவ்வக்கினிகள் கொழுந்துவிட்டெரியும்பொழுது அவைகளின் நடுவில் உட்கார்ந்து பார்ப்பவர்கள் கண்களைக் கூசச்செய்யும் சோதிபொருந்திய * சூரிய பிம்பத்தை இடைவிடாமல் வேறொன்றையும் பார்க்காமல் பார்த்துவந்தாள்.

21. சூரியனுடைய கிரணங்களினால் அவ்வாறு நன்றாக தகிக்கப்பட்ட அப்பார்வதியின் முகம் தாமரைமலர்போல் வாடாதகாந்தியையே உகிக்கலாயிற்று. ஆனால் அவளுடைய விசாலமான கடைக்கண்வழிகளில்மட்டும் கொஞ்சம் கறுப்புநிறத்தை அக்கிரணங்கள் உண்டுபண்ணின.

22. வேண்டிக்கொள்ளாமல் நமதுமேல் விழும் நீர் (அதாவது மழை,) அமிதஸ்வரூபமாய் விளங்கும் சந்திரனுடைய கிரணங்கள் இவைகளிரண்டுந்தான் அவளுக்கு உணவாகவிருந்தன. அவள் போஷணை மரங்களின் போஷணையைவிட வேறாகவிருக்கவில்லை.

23. ஆகாயத்துத்தீ (சூரியன்,) கட்டைகளால் மூட்டப்பட்டதீ (நெருப்பு), இவைகளாகிய பலவிதத்தீயில் (பஞ்சாக்கினியால்) நன்றாகக்கொதிக்கும்படி செய்யப்பட்ட அப்பார்வதி வெயிற்காலம் நீங்கி முதல்மழை பொழிந்ததும் பூமி ஆவியை மேல்விடுவதுபோல் தானும் தன் மேனியிலிருந்து ஆவி கிளம்பி விளங்கினாள். *

24. முதல் முதல் விழுந்த மழைத்துளிகள் ஒரு கணப்பொழுது அவள் கண்ணிமையில் நின்று அதனின்று அவள் உதட்டில் விழுந்து அப்புறம் அவள் குசங்களின்மேல் விழுந்து சிதறி அவைகளின் கீழ்விளங்கும் மும்மடிப்பில் மறைந்து வழிந்தோடி அவள் கண்ணிமையில் விழுந்த வெகு நேரத்துக்கப்பால் அவள் உந்தியை அடைந்தன.

25. இடைவிடாது காற்றுடன் கூடிப் பெருமழை பொழியும்பொழுதெல்லாம் ஓர்வித மூட்டமுமின்றி நிற்கும் கற்பாறையில் உட்கார்ந்து தவம் புரியும் பார்வதி செய்த பெருந்தவத்துக்கு சாட்சிகள் அவளைத் தங்களது மின்னலாகின்ற கண்ணால் இடைவிடாது பார்த்துக்கொண்டிருந்த இரவுகளே.

26. பனிக்காற்று வீசும் தை மாதத்திரவுகளில் பார்வதி ஜலத்தின் நடுவில் நின்றுகொண்டு ஒன்றைவிட்டு மற்றொன்று பிரிந்து வெகு கனிவுடன் ஒன்றை மற்றொன்று கூப்பிடும் சக்கிரவாகப்பட்சிகளைப் பார்த்து மனந் தவிக்கின்றனவளாய்த் தவம்புரியலானாள்.

* சூரியனே ஐந்தாவது அக்கினி. பஞ்சாக்கினிமத்தியிலிருந்து பார்வதி தவம்புரிந்தாள் என்றபடி.

* கொதிக்கும் ஆவியிரம்ப பெருமூச்சுடன் கண்ணீர் விட்டாள் என்றபடி.

# விவசாயமும் தமிழ்ப் புலவர்களும்

## AGRICULTURE AND THE TAMIL POETS.

நமது தேசத்தில் வெகுகாலமாய் முக்கிய தொழிலாக நிலைநின்றது விவசாயமாகும். விவசாயமே பொருளீட்டலுக்கு முதற்கருவியாய் நின்றிருப்பதால் தமிழ்ப்புலவர் பலரும் ஒவ்வோர் காலத்தில் சிறப்பு வாய்ந்த அந்தத் தொழிலைப்பற்றியும் உழவர் மேன்மையைப்பற்றியும் கூறுதாரில்லை. உழவர் தொழில் சிறக்காமல் குறைவுபடுமானால் பிறருக்கு அதிக துயரத்தை விளைக்குமென்பதற் கையமில்லை. அதுபற்றியே கம்பரும்,

"விற்பொலியும் பெருங்கீர்த்தி
வேளாளர் விளைவயலில்
நெற்பொலியுண் டாமாகில்
நிலமகளும் பொலிவுண்டாம்
பொற்பொலிவுண் டாமுலகம்
புகழ்ப்பொலிவுண் டாம்புலவோர்
சொற்பொலிவுண் டாங்கலியின்
றுயர்பொரிய மாட்டாதே"

என்று உழுதொழிலைச் சிறப்பித்துக் கூறியிருக்கின்றனர். திருவள்ளுவரும் உழவர் தந்தொழிலைச் சரிவரச் செய்யாது நிற்பின்பற்றற் றிருப்பவர்களுக்குக் கூட சௌகரியங்கள் கெட்டுப்போகும் என்று ஒரு குறளில் தெரிவித்திருக்கின்றனர். ஆகவே ஒவ்வொரு புலவரும் உழுதொழில் உழவர், எருது, மேழி, கலப்பையின் பல உறுப்புகள், நீர்வளம் முதலியவைகளைப் பற்றித் தருணம் நேர்ந்த விடத்தெல்லாம் சிறப்பித்துச் சொல்லியிருப்பதன்றி திருஷ்டாந்தங்கள் சொல்லவேண்டி வருங்காலங்களிலும் உழுதொழிலிலிருந்தே உபமானங்கள் எடுத்தாளுவதைத் தமது வழக்கத்துக்குக் கொண்டுவந் திருக்கின்றனர்.

உழுதொழிலுக்கு இன்றியமையாத எருது, புஷ்டியாயும் வேலை செய்யத்தக்க வயதினதாயும் இல்லாவிடில் பயனில்லையென்ற முக்கியமான உண்மையைப்புலவர்கள் பலவாறு கூறியிருக்கின்றனர். "மூரியெருத்தினுழவு" பயன் தருவதில்லையென்ன உபமானங்கள் எடுத்திருப்பவர் பலர். இன்னம் நூல்களை ஆராய்வோமானால் மகாமகோபாத்யாய சுவாமிநாத அய்யரவர்களால் பதிப்பிக்கப்பட்ட பழையசங்கநூல்களாகிய பத்துப்பாட்டு, புறநானூறுமுதலியநூல்களில் விவசாய விஷயமான பலஅரிய பெரியவிஷயங்களைக்காணலாம். உழும் எருதினைப்பலவாறுபுகழ்ந்துப் பாடாதாரில்லை. பொறுமைக்கும், நற்குணத்துக்கும், பரோபகார சிந்தைக்கும், பெருந்தன்மைக்கும் எருதை உபமானமாக எடுத்துக்கொள்வதுண்டு. புறநானூற்றில் ஒரு செய்யுளில் உழுதொழிலின் இன்பங்களைப் பலவாறு ஒருபுலவர் எடுத்துச் சொல்லுகின்றனர். அதில் தன்னுடைய நாள் வேலைமுழுவதையும் குறைவின்றி வெயிலில் வருந்தியும் சரிவரச் செய்துவிட்டுப்பிறகு வைக்கோலைச் சாவகாசமாகச் சாப்பிட்டுக் களிப்புடன் இருக்கும் எருதைப்பற்றிமிகப்பாராட்டத்தக்க சொன்னலமமைந்த செய்யுளடிகளில் தெரிவிக்கிறார். சுயநலத்தையே பாராமல் பிறர்பயனடைய விரும்பி அவருக்காகத் தான் உழைத்து வேலைசெய்து, அந்தஉழைப்பின் பிரயோஜனத்தைப்பல ஜனங்கள் அடையக்கூடுமென்ற நிச்சயபுத்தியேற்பட்ட பிறகேஎருதுதான் உண்ணப்போகின்றதென்று தெரிவித்து மனிதனும் சரீரப்பிரயாசைப்பட்டு பரோபகாரசிந்தையைப் பெரிதும் உடையவனா யிருக்கவேண்டுமென்று உழைப்பின் மேன்மையையும் அருளின் சிறப்பையும் ஒருங்கே தெரிவித்தனர்.

மேலும் உழவர் தமது தொழிலை வழுவின்றி செய்து தங்கள் பிரயாசை யெவ்வளவோ அவ்வளவே பிரதிப் பிரயோஜனத்தைக் கொடுக்கத்தக்க நிலத்தில் சோம்பலின்றி வேலைசெய்து தாம் அடைந்த பலனைப் பலரோடும் அனுபவித்து இன்பமடைவதையும், அதிக ஆசையால் மனஞ் சஞ்சலப்பட்டுப் பலவாறு புழுங்காமல் திருப்தியுடன் இருந்து உழும்போதும், விதைக்கும்போதும், நீர் பாய்ச்சும்போதும், நெற்கதிரைச் சேர்க்கும்போதும், இடைவிடாது கடவுளையே முன்னர் தியானித்துப் பிறகு வேலையைச்செய்யும் நன்மார்க்கத்தையும் அவர்கள் உயர்வையும்பற்றிச் சிறப்பித்துப் புகழாத புலவரிலர்.

பத்துப்பாட்டில் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங் கண்ணனார், உழவர் தொழிலையும், அவர்கள் இல்லறம் நடத்தும் முறைகளையும், அவருக்குள்ள களிப்பு துன்பம் முதலிய யாவையும் நன்கு யறிந்தவராய் அவர்கள் குடியிருக்கும் வீடுகளையும், முற்றங்களையும், சுரைக்கொடிபடர்ந்த கூறையினையும், அவர்கள் வேளை, அலரை முதலிய பதார்த்தங்

களை உண்பதையும், ஒன்றுவிடாமல் அவர்களது சிரமமறிந்து அவர்களுடைய பொறுமைக்கும், உண்மைக்கும், ஈசுவரபக்திக்கும் வியந்து பாடியிருக்கின்றனர். அப்புலவரே பொய்சொல்லாத மனச்சாட்சிக்குச் சரியாயும் கடவுளுக்குப் பொதுவாயும் நடந்துகொள்ளும்சத்தியமார்க்கத்தைப்பற்றித்தெரிவிக்கவந்தவிடத்து அத்தகைய சன்மார்க்க நிலைக்கு ஒரு உபமானம் வேண்டி

"கொடுமேழிநசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்"

என்று, கலப்பையிலிருக்கும் பகலாணியை உபமானமாக எடுத்துக்கொண்டனர்.

பிரமசிருஷ்டியில் மூலபுருஷரது துடையினின்றும் வெளிப்பட்டதாகக் கூறப்படும் உழவர்கள்தமது தொழிலைச்சரிவர நடத்தியே எல்லாபுருஷார்த்தங்களையும் பெறவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. குறளில் உழவு விஷயமாய்ச் சில பெருமைவாய்ந்த செய்யுட்கள் உள்ளன. மேழியை ஊன்றிப் பிடித்தவர்களுக்குச் செல்வத்துக்குக் குறைவில்லையென்று சொல்லி, பயிரிடுவதில் ஆழமாகவே உழவேண்டுமென்றவுண்மையைத்தெரிவித்திருக்கின்றனர். மேலும் "ஓதுவாரெல்லாம்உழவர்தலைக்கடை," "மேழிச்செல்வங் கோழைபடாது," என்ற வழக்கத்தில் வந்த பல பழையவாசகங்களால் மேற்போந்தவுண்மைகள்விளங்கும். நிலத்தைச் சாகுபடிசெய்யுந் தொழிலைவிட்டு வேறுதொழிலை நாடுவது அத்துணைச் சிலாக்கியமல்லவென்பதைப் புலவர் பலவாறு வற்புறுத்திக் கூறியிருக்கின்றனர். தேசக்ஷேமத்துக்கும், மனிதனுக்குசௌகரியமான ஜீவனத்துக்கும், சுய இச்சையாய்ப் பொருள் ஈட்டி இல்லறம் நடத்துவதற்கும், முயற்சியளவே பலனுங்கிடைக்கும் என்ற அரிய வுண்மையைத் தெரிந்துகொண்டு அந்தத்தவத்தைச் சன்மார்க்கத்தில் உபயோகித்து ஆத்மலாபமடைவதற்கும் உழுதொழில் மிக்க சாதகமாக விளங்குகின்றதென்றவுண்மையைப் பன்முறைத் தொல்லிசைப்புலவர் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

ஆகவே, உழவர் கஷ்டசுகங்களை யெல்லாம் நன்றுயறிந்து அவர்கள் க்ஷேமத்தைக்கோரி சமயம் நேர்ந்தபோதெல்லாம் அவர்களுக்கு உற்சாகம் விளைவிக்கத்தக்க நல்ல புத்திமையைச் சொல்லியும், அவர்களைப் பற்றியும் அவர்களுக்கு வேண்டிய பல சௌகரியங்களைப்பற்றியும், அவர்கள் குறை நீங்கும்பொருட்டு அரசரிடம் தெரிவித்தும், உழவர்களுக்குப் பரமஉபகாரம் செய்துவந்தவர்நமது நாட்டுத் தமிழ்ப்புலவர்களேயென்றவுண்மை,நூல்களை ஆராய்ச்சி செய்யுமிடத்து பசுமரத்தாணி யெனமனதிற்பதியும்உலகஇயற்கையும்,இயற்கையின்வனப்பும் அமைப்பும் உழவருக்குத்தெரியும்படி சொல்லப்பட்டிருக்கிறது. திண்மை நிலையும், கனமும், உள்ள நெற்களையே விதைவிதைக்கவைத்துக்கொள்ளவேண்டுமென்ற அரிய விஷயத்தைத் தமிழ்நூல்களில் பலவிடங்களில் செம்பொருளாகவும் கருத்துப்பொருளாகவும் காணலாம். பருத்தநென்மணியைத் தன்னிடம் நிறைந்தகல்வியும் பிறருக்குப் பயனைத் தரக்கூடிய அறிவும் நிறைந்த நல்லாசிரியனுக்கு உவமைப்படுத்தியுள்ளது.

ஆனால் அந்தந்த தொழில்செய்வோரும் தத்தம் தொழிலைச் சரிவர நடத்தினலன்றி உலகம் நடைபெருதாதலால், உழவர்தொழில் பிறர் உதவி சிறிதும் இல்லாமல் நடக்கத்தக்க தல்லவென்று, கம்பர் இயற்றியதாய்க் கூறப்படும் தனிப்பாடற் செய்யுளொன்றில் மேற்குறித்த கருத்தை

"காராளர் தொழிலெல்லாங்
கம்மாளர் கைத்தொழிலே"

யென்று, பல தொழிலுக்கு முள்ள சம்பந்தத்தை அழகாய்த் தெரிவித்திருக்கிறது.

தன் நிலத்தைச் சொந்தக்காரன் எப்போதும் போய்ப் பார்த்துவர வேண்டுமென்றும், அந்தந்தத் தருணங்களில் செய்யவேண்டிய வேலைகளையெல்லாம் ஜாக்கிரதையாய்ச் செய்யவேண்டுமென்றும், தன் எருதை சௌக்கியமாய் வைத்துக்கொள்ளவேண்டுமென்றும் எக்காரணம்பற்றியும் கலப்பை, எருது, என்ற இன்றியமையாத முதலைச் செலவழித்தல் பாபமாகுமென்றும், உழவருக்குப் புலவர் நீதிவாக்கியங்கள் எவ்வளவோ சொல்லியிருக்கின்றார்கள். குழந்தையைப் பாதுகாத்து அதன்வளர்ச்சியில் கருத்துடைய தந்தையொப்ப, நிலத்தின் வளர்ச்சியில் உழதுண்பான் சிரத்தை வைத்துக்கொள்ள வேண்டுமென்று கூறியிருக்கின்றனர். மேலும் பழையதமிழ்நூல்களில் தட்டையென்ற கிளிகடி கருவியை உழவர் எடுத்துக்கொண்டுபோய் அதன் ஓசையை யெழுப்புறலத்தில் சஞ்சரித்துத் தீங்குசெய்யும்பறவைகளை ஓட்டுவதாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. தட்டையின் ஓசையைப் புலவர்சிறப்பித்துக்கூறியிருப்பதையும் பிறவிஷயங்களையும் யோசித்தால் புலவருக்கு உழவர் தொழிலில் எந்த விஷயமும் அற்பமா

யில்லாமல், முக்கியமாயும் சிறந்ததாயும், பட்டிருந்த தென்று தெரிகிறது.

நிலவளத்திற்கு நீர்வளம் இன்றியமையாததென் பதுசொல்லாமலே விளங்கக்கூடிய விஷயம். வானம் பெய்யாவிடில் குடித்தனக்காரர்கள் கஷ்டப்படுவார்க ளென்றும், அதனால் தேசத்துக்குங் கஷ்டமென்றம் எல்லாருக்குந் தெரிந்திருந்தாலும், அரசன் சந்நிதி யில் தமக்குவேண்டிய நிதிக்குவியலை மட்டில் தெரி வித்து இச்சகம்பேசி காரியசாதகம் செய்துகொள் ளதமிழ்ப்புலவர்கள் ஒருபோதும் சென்றாரில்லை. நிர்ப்பயமாயும், தைரியமாயும் உழவர் குறைகளையும், அவர்கள் மனத்தின் செயலையும் தெரிவித்து அவர் களுக்குச் சாதகங்களைத் தேடுவதே தமக்குப் பெரிய இன்பமாய்ப் புலவர் கொண்டிருந்தனர். புறநானூற் றில் சிலசெய்யுட்கள் இத்தருணத்தில் கவனிக்கத்தக் கன. பாண்டியன் நெடுஞ்செழியனிடம் சென்ற குடபுல்லியனார் என்றபுலவர் அவனைப்புகழ்ந்து பாடி பரிசில்பெற்று மீளும் ஒரு விஷயத்தையே மனதிற் கொள்ளாமல், அரசனோடு நேரில் பேசும்தருணம் கிடைத்தற்கு சந்தோஷ மடைந்தவராய் முதலில் உழவருக்காக வேண்டிய காரியங்களை யெடுத்துச் சொன்னாரென்றால் அவரது மனத்தூய்மையையும் பரோபகார சிந்தையையும் நாம் எவ்வாறு எடுத்துச் சொல்லுவது? அவர் சொல்லியது அடியில்வருமாறு.

"வலிய வேந்தே, நீ போகக்கடவ மறுமையுலகத் தின்கண் நுகருஞ் செல்வத்தை விரும்பினும் உலகத் தைக் காப்பாரது தோள்வலியைக் கெடுத்து நீ ஒருவ னுமே தலைவனாதலை விரும்பினும் மிக்க நல்லபுகழை இவ்வுலகத்தே நிறுத்துதலை விரும்பினும் அவ்வேட் டைக்குத் தக்க செய்கையைக் கேட்பாயாக; இப் பொழுது பெரியோய், நீரை இன்றியமையாத உடம் பிற்கெல்லாம்உணவுகொடுத்தவர்கள் உயிரைக்கொடு த்தார்; உணவை முதலாகவுடைத்து அவ்வுணவாலுள் ளதாகிய உடம்பு; ஆதலால் உணவென்று சொல்லப் படுவது நிலத்தோடு கூடிய நீர், அந்நீரையும்நிலத்தை யும் ஒருவழிக் காட்டினவர்கள் இவ்வுலகத்து உடம் பையும் உயிரையும் படைத்தவராவார்; நெல் முதலா யவற்றை வித்தி மழையைப் பார்த்திருக்கும் புல்லிய நிலம்இடமகன்ற நிலத்தை யுடைத்தாயினும் அது பொருந்தியாளும் அரசனது முயற்சிக்குப் பய ன்படாது. ஆதலால், கொல்லும் போரையுடைய செழிய! இதனைக் கடைப்பிடித்து விரைந்து நிலங்குழிந்தவிடத்தே நீர்நிலை மிகும்பரிசு தளைத் தோர், தாஞ் செல்லுமுலகத்துச் செல்வமுதலாகிய மூன்றினையும் இவ்வுலகத்துத் தம்பேரோடு தளைத் தோராவர்; அந்நீரைத் தளையாதவர் இவ்வுலகத்துத் தம்பெயரைத் தளையாதோர்."

இவ்வாறு நீர்வளம் பெருக்கவே அரசன் செய்ய வேண்டிய முக்கிய கடமையாகுமென்றும், அப்படி "குளந்தொட்டு வளம் பெருக்கின்" புருஷார்த்தங் கிடைக்குமென்று தைரியமாய்ச் சொன்னவர்கள் தமிழ்ப்புலவரே.

கருவூரில் போர்வென்று திரும்பிய சோழன் குள முற்றத்துத் துஞ்சியகிள்ளிவளவனைப்பாடிய வெ ள்ளைக்குடிநாகனார் என்ற தமிழ்ப்புலவர் அவனது வெற்றிக்கு அவன் நாட்டின் வளமே காரணமென் றும், அந்த வளத்தைப்பெருக்கலே அவனது கடமை யாகுமென்றும் உழவரிடத்தில் அதிக அன்பும் அரு ளும் பொருந்திஅரசன் நிற்கவேண்டுமென்றுந் தெரி வித்திருக்கிறார். அப்படி தெரிவிக்குஞ் சமயத்தில்உல கத்திலுள்ளவர் சுபாவம் மழை பெய்யாவிட்டாலும், அறம் நிலைதமொறினாலும், இயற்கையென்றிராது அரசனேஅவற்றைச் சீர்படுத்தவேண்டுமென்று நினை ப்பார்கள் என்ற உண்மையை அழகாய்த் தெரிவித்தி ருக்கின்றனர். புறநானூற்றில் உள்ள இச்செய்யு ளடி கள் நிரம்ப இனிமையாயிருத்தலின் இங்கு செய்யுளை யே யெடுத்துக்காட்டியிருக்கிறது. அது வருமாறு:—

"வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை. தரூஉங் கொற்றமு முழுபடை
யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினு
மியற்கை யல்லன் செயற்கையிற் றேன்றினுங்
காவலர்ப் பழித்துமிக் கண்ணகன் ஞால
மதுநற் கறிந்தனை யாயி னீயு
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பாரமோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
னடிபுறந் தருகுவ ரடங்கா தோரே".

இனி உழவன் கணக்குப் பார்த்தால் உழவுகோ லும் மிகுதியிராது என்ற வாசகத்தைக்கொண்டு சிலர் உழுதொழில் தக்கபலன் கொடுப்பதில்லை யெ ன்று விளங்குகிறதென் றெண்ணுகிறார்கள். இந்த கருத்து ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல. மேற்போந்த வாசகத்தில் உள்ளஉண்மை வேறு,

"பருவமுயற்சி யளவுபயத்தல்" தனது தருமமாகவுள்ள நிலத்தில் விசேஷலாபத்தைப் பெறவேண்டு மென்று இச்சிப்பதுதவறு என்றும், முயற்சி, முன்யோசனை, செட்டுத்தனம், பாதுகாப்பு, முதலியதற்குத்தக்கபடியே பலன் கிடைக்குமென்றும், ஏகதேசத்தில் உழுது பயிரிட்டு உடனே தனக்குவியல் சேர்த்துவிட யோசிப்பது சாத்தியமாகா தென்பதையுந் தெரிவித்தபடி. மேலும் செய்நேர்த்தி விஷயத்தில் ஜாக்கிரதையாய்க்கணக்குவைத்தல் நல்லபழக்கமாகுமென்றுந் தெரிவித்ததென்று கொள்ள வேண்டும்.

உழவுதொழில், பலதொழில்களிலும் சிறந்தது. இல்லறம் சரியாய் நடந்துவரவும், ஆத்மலாபம் சித்திக்கவும், சச்சரவு, கோபம், அவஸரம், பேராசை முதலியதுர்க்குணங்கள் நீங்கி, சாந்தம், பொறுமை நிதானம், திருப்தி முதலிய நல்லபழக்கவழக்கங்கள் வருவதற்கும் நோயற்றவாழ்வு கிடைப்பதற்கும் சாதகமாகவுள்ளது. மேற்குறித்த கருத்துக்கள்யாவையும் தமிழ்ப்புலவர்களால் ஆங்காங்கு சொல்லப்பட்டிருப்பதை அறிந்து அதன்படி நடந்துகொள்வது சான்ற குணமாகும்.

C. P. VENKATARAMA AIYAR, B., A.

---

பட்டுப்பூச்சிகள்.—பூச்சிகளுக்குள் சிரம்பசிரேஷ்டமானவைபட்டுப் பூச்சிகள். பூச்சிகளிலிருந்துண்டாகும் உற்பத்திகளுக்குள் சிரம்பமுக்கியமானது பட்டு. முதல் முதல் சீனதேசத்தில்தான் பட்டு. கைத்தொழிலாலுண்டாக்கப்பட்டது. ஐரோப்பாவிலுண்டாக்கப்படுகிற எல்லாப் பட்டுகளும், சீன, இந்தியா தேசங்களிலிருந்து மிகுதியாய் உண்டாகிற எல்லாப்பட்டுகளும் சாதாரணப்பட்டுப் பூச்சிகளிலிருந்து தான்உண்டாகின்றன. ஆனால் இந்தியாவில் எராளமானபட்டுகள் இன்னும் அநேகவிதப் பூச்சிகளின் கூடுகளிலிருந்து கிடைக்கின்றன. சாதாரணப்பட்டுப்பூச்சிகள் முசுக்கட்டைச் செடி அல்லது பட்டுப்பூச்சிச் செடி Mulberry tree) களின் இலைகளை ஆகாரமாகக்கொண்டு ஜீவித்து விருத்தியடைகின்றன. அநேகவிதப்பட்டுகளை உண்டாக்கும் இதரப்பூச்சிகள் ஆமணக்கு இலை சவுக்குஇலை, தேக்குஇலை, வாதாம்இலை, இலந்தை இலை முதலிய இலைகளைத்தின்று ஜீவித்து விருத்தியடைகின்றன. முசுக்கட்டைச் செடியிலை(Mulberry Leaves) களினால் விருத்தியாகிற பட்டுப்பூச்சிகளின் பட்டுஎல்லாவிதப்பட்டுகளையும் பார்க்கிலும் சிரம் விலையுயர்ந்தது.

## ஸ்திரீகளுக்கான பக்கங்கள்
## LADIES' PAGES

---

"உன் தரிசனங்கிடைக்க என்னபாக்கியஞ் செய்தோம்" என்றான் ஹரிச்சந்திரன். தூண்டாவிளக்கி லெரிந்துகொண்டிருந்த ஜோதி துலங்கி விளங்கிற்று. பொழுதும்விடிந்தது. நக்ஷத்ரிகன் வாயாரவைகிறான். "கற்றறிமோழை! உனக்கேனடா புத்தியில்லையா என்ன? தவணைத்தினங்களாக இன்னம் ஒருநாள்தானிருக்கிறது. உனக்கு எங்கு இருந்து பணம்வரும், மாடுபோல் தலையசைக்கிறாயே—மந்திபோல் நடக்கிறாயே"—என்றுசொல்லிவிட்டு சும்மா இருக்கவில்லை. ஹரிச்சந்திரன் காலிலும் மார்பிலும் அண்ணாந்தாள்பூட்டி முதுகில் பாறையேற்றி வேடிக்கைபார்க்கிறான் நக்ஷத்ரிகன்.

* * *

"நமக்கெவர் கொடுமைசெய்யினும் நாம் அவைகளைக் கணிசியாது நமக்குத் துன்பஞ் செய்வார்க்கே இன்பம்செய்யவேண்டும். அவரிடத்தே அன்பு பாராட்டவேண்டும். அன்பே அவன்மனத்தை யுருக்கி நம்வசப்படுத்தும். நமக்கொன்றும் கவலையில்லை" என்பது பெரியோர்குணம். ஆண் மகனுக்கும், பெண் மகளுக்கு மிதுவேபொருந்தும்.

* * *

மனைவி அன்பின் ஸ்வரூபமென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். அவ்வன்புத் தன்னைப்பற்றி ஒன்றுங்கவனியாது. தன் கணவனுக்கு எதுசெய்யவேண்டும், எவ்விதம் செய்யவேண்டும், அப்படி செய்யின் தான் விரும்பிய கோரிக்கைமுடியுமா என்கிற எண்ணங்களெல்லாம் அவ்வன்பின் நிலைமையின் குறிப்புகள். மந்திரிபோல வரும்பொருளை யோசித்து தன் கணவனுக்குவரும் கஷ்டங்களைப்போக்க வழித்தேடி அதை அடைவது மனைவி கணவனிடத்துக்கொண்ட அன்பின்வெளிப்படை. இதைச்செய்வதில் அவள் தன்னையும் கவனிப்பதில்லை; பிறரையும் கவனிப்பதில்லை. தன்கணவனை ஆநந்தப்படுத்தவேண்டுமென்ற கவலை ஒன்றுதான் அவள் மனதைக் கவர்ந்திருக்கும்.

* * *

"ஆர்ய! என் கவலைப்படுகிறீர். நமக்கு பண வருவாயுமில்லை. தவணையுமில்லை வீணாகிக் காலங்கழிப்பதில்பிரயோஜனமில்லை. நானும்,குழந்தையும் உம்மாட்கள் தானே,எங்களைவிற்றுவதுஉமது வாய்மையை

நிறுத்து''மென்றாள் சந்திரமதி. "என்னசெய்வது அவ்வாறே செய்வேன். எதுபோயினும் போகட்டும்.என் தர்மம் ஒன்றே எனக்குக்கவலை"என்று விற்க நிச்சயித்துட்டான். காசிநகரத்து இராஜவீதியில் விலைகூறினான். "யான் இவற்கு நற்குலயானையின் மீதொருவன் ஏறி இரத்தினமெறிய எவ்வளவு உயரம் செல்லுமோ அவ்வளவு உயரம் பொன்குவையல் தருவதாய் வாக்களித்திருக்கிறேன். அவ்வளவு பொன்கொடுத்து இவர்களைக்கொண்டு என்வாய்மையை நிறுத்தும்படி வேண்டுகின்றேன்''என்றான்.ஒருவரும் பதில்கூறவில்லை. கடைசியில் ஓர் பார்ப்பனன் இவர்களை விலைக்கு வாங்கினான். பணத்தை நக்ஷத்ரிகன் வாங்கிக்கொண்டான்.

* *
*

"கஷ்டமடைந்தகூலி எனக்குக்கிடைத்தது. உன் முனிவர்க்கு பணம் நீ கொடு" என்றான்நக்ஷத்ரிகன். இதுவு முமக்கழகோ!என்குழந்தையையும்மனைவியையும் விற்றுகொடுத்தபொருளை உமதென்று எடுத்துக் கொண்டுநான்பணம் கொடுக்கவில்லைஎன்பதுதர்மமாகுமா?உமக்கென்னக்கல்நெஞ்சோ ? என்செய்வேன். நாள்தோறும் வளர்த்த வாய்மைத்தீ அவியாதென்னைக்காக்குமாறு,ஹே!மஹாதேவ!நீ அருள்புரிவாயாக " என்று கண்ணில் நீர்ததும்ப குழறினான் ஹரிச்சந்திரன்.அவனுடல் வேர்த்ததுமனம் நிலைத்தது. தைரியம் கிளைத்தது. மற்றொன்றுந்தோன்றாது "என்னை யாவர்க்கேனும் அடிமையாக விற்று தங்களுக்குவேண்டிய பொருளை அடைக"என்றான் ஹரிச்சந்திரன்.

* *
*

"ஆயுள்வாழ்க்கை நிலைத்ததன்று. இக்காயமும்அவ்வாறே. இருக்ும்வரை நன்மைபயந்து நாம்வாழ்வோம். மற்றதெல்லா நம்மையுண்டாக்கிய பெருமான்கவலை. நமக்கொன்றும் தெரியாது. எக்கஷ்டம் வரினும் அவர் கடாக்ஷமே அநுக்ரஹம் செய்கிறது. அக்கஷ்டத்தைப்போக்கசக்தி அவர் கருணையே அளிக்கிறது. அவர் மஹிமையே நமக்காதாரம். அவர்பாலன்பே நமக்குதுணை,'' என்று எவன் எண்ணி அவ்வெண்ணத்தில் ஜீவிக்கிறானோ அவனுக்கு வரும் ஒவ்வொருகஷ்டமும் அவனை யுயர்த்தவந்த ஸாதனமாகிறது. தெரியாதவர்கள் " ஐயோ ! அவன் கஷ்டப்படுகிறான் ''என்பார்கள். அவர்களுக்கதற்குமேல் புத்திசெல்லாது. தெரிந்தவர்க்கது ஆநந்தமூட்டுகிறது. அவர் அதனால் ஸுகமுண்டாகுமென்ற திடமாகிய நம்பிக்கை யுடையவராகி இருக்கிறார்கள். ஆதலால் தான் அவருக்கு இன்பம் துன்பம் என்று சொல்லப் படுவதிரண்டும் கிடையாது.

ஹரிச்சந்திரன் ஓர்பறையனுக்காளாகசம்மதித்து விட்டான். புலையனுக்கு மடிமையாய் விட்டான். வாய்மை ஒன்றுதான் அவன்வேண்டுவது அதை தவறாது புலையனுக்கு மாளாகப்புகுந்தான். புலையன், ஜாதியில் கீழ்ப்பட்டவன் என்றவனுக்குப்படவில்லை அவனிடத்திலும்தன் ஆத்மாவானது ஜோதியோடு விளங்குவதைக்கண்டான். தன்னைக் காப்பாற்றவந்த பெரும வள்ளலென்றெண்ணினான். தன் தலைவன் என்று அவன்பா லன்புபெருகி, கரைபுரண்டு, தானு மவ்வன்பையுண்டு தேக்கி மயானகட்டத்தில் பிணம் காப்போனாய் நின்றனன். தர்மமே ! அதுதான் உனக்கு இடம். அவ்விடம்தான் அன்பைப் பயக்குமிடம் போலும்! பேதபுத்தியை ஒழிக்கும் இடமும்அதுவே!

* *
*

கொடுமை என்பது ஓர்வித மனோநிலைமையாகியிருப்பது செயலாக பிறக்கக்கூடாதென்று விரும்புகிறார்கள். சந்திரமதி அதை எவ்வாறு எண்ணினாளோ தெரியவில்லை. ஆனால் ஒன்று மாத்திரம் தோன்றுகிறது.சந்திரமதிக்குகொடுமைஎன்று ஒன்று இருந்ததாகவாவது இருக்குமென்பதாகவாவது இருக்கிறதாகவாவது படவில்லை என்று மாத்திரம் தோன்றுகிறது. குழந்தையும் தானும் இருவருமாக காலகண்டன் என்னும் பிராம்ஹணனுக் கடிமைகளாகி அவன் மனைவிக்கு காலைமாலை வேலைகளைச்செய்து விட்டு பின் ஏதோகிடைத்ததையுண்டு ஒன்றுகிடைத்தாலும் அது அநேகமாகஎண்ணி வாழ்ந்துவந்தாள். தன் கணவன்மேல் கொண்டஆசையானது இவ்விதமான ஆநந்தத்தை உண்டாக்கிவிட்டது.

* *
*

மாயை என்பதின்னதென்பது சொல்லயாராலுமுடியவில்லை. இப்படி இருக்கலாம் என்றால் சொல்ல முடியும் என்கிறார்கள். இம்மாயையின் வைபவத்தை ஒவ்வொரு வீட்டிலும் பறக்கக்காணலாம். நமக்கு வரும் பலவிதமான கஷ்டங்களும் ஒருநன்மையான வழியால் வருவதாகத்தான் தெரியவருகிறது.இதுவே மாயையின் ஸ்வபாவம். நல்லதுபோல் கெட்டது செய்வதுதான் இதன் இயற்கை. ஏதோ ஸந்தோஷமாகச் செய்யப்போய் விபரீதமாக முடியும். இது தீர்க்க ஆலோசனை யுள்ளவர்களால் தான் அறியமுடியும். அறியாது அதனிடை விழுந்து விட்டாலும் ஸரியான வழியில் நடப்பவர்களுக்கு விபரீதமொன்றுமாகாது. முதலில் அவமான முண்டாயினு முண்டாகலாம். அதுவே அவர்களுக்கு பின்னால் வரும் பெருமையை உயர்த்த காரணமாய் விடுகிறது.

தன்வேலையையெல்லாம் துரிதமாக முடித்தாள். தன்கொடிய யஜமானர்களது கல்போன்ற நெஞ்சுங் கரைய வேலைசெய்தாள். தன் குழந்தையைக் காட்டிலனுப்பிதருப்பைக் கொண்டுவர சென்றவன் வரவில்லை என்று கவலைப்பட்டாள். கதறி கதறி அழுதாள். கூடசென்ற சிறுவரைக்கேட்டாள். நாகங்கடித்திறந்தவன் எவ்வாறு வீடுவருவான். இறந்த விஷயத்தையார்தான் நேரில் சொல்வார்கள். மதிமயங்கிதியங்கி காடுசென்றாள். குழந்தையைக் கண்டாள். அவள் மனம் பதைத்தது. கண்ணில் நீர் ததும்பவில்லை. உடம்பில் மாத்திரம் உயிர் இருந்ததாக தெரியவில்லை. மயங்கி கீழ்வீழ்ந்து விட்டாள். கொஞ்சநேரமானதும் தன்மனம் தனக்கு வர ஆ! வென்றலறினாள். குழந்தையை மடியில்வைத்த வண்ணமாக மயானவழியிலோடஆரம்பித்தாள்.

* *
*

சில ஸமயங்களில் நமக்குந்தெரியாமல் சில காரியங்கள் நடக்கின்றன. அது உண்டாவதற்கு காரணங்கள் மானிட புத்திக்கெட்டிக் கிடையாது. அதில் அகப்பட்டுக்கொண்டு பிரமை யடைவதுதான் மனிதனுக்குத்தெரிகிறது. இவ்விதமாகிய, இன்னதென்று சொல்லமுடியாத, ஸம்பவங்கள் தான் கடவுளிடத்து அன்பை யூட்டுகிறது. சம்சயவாதிகளுக் கிவைதான் மேல் நமக்கும் பெரியவன் ஒருவனிருக்கிறான் என்பதைக் காட்டுகிறது. அவை அவன் செயல்.

* *
*

"எனடி சிறுக்கி, அரசன் குழந்தையைக் கொன்றிங்கு ஓடுகிறாய்" என்று கொக்கரித்தார் கொத்துவால் ஸேவகர்கள். "இதுவுமென் தலைவிதியோ. என் தலைவனைக்கண்டு குழந்தையை தகனஞ்செய்ய, காசும், அரிசியும் கொண்டுபோக எங்கிவரும் என்னை, ஆ! தெய்வமே! உன்வழியை யாராலறிய முடியும்" என்று ஒன்றுந் தோன்றாது மதிமயங்கி நின்றனள். "இந்நகைகள் என்மடியிலெப்படி வந்தன; எனக்குத் தெரியவில்லை—என்ன! இதுதெரிய—" என்றுசொல்லிக்கொண்டே இருக்கும் சந்திரமதி கட்டப்பட்டு நியாயசபைக்குக் கொண்டுவரப்பட்டாள்.

* *
*

குழந்தையுமிறந்து, தன்கணவனும் பறையனுக்கடிமையாகி, எண்ணமுடியாத கஷ்டத்தில் கொண்டுவரப்பட்ட ஒரு ஸ்திரீ தன்னுயிரைப்பற்றிக் கவலைப்படுவளா? தன்குழந்தைமேலாசையால் உயிரைக் காப்பாற்றுதல் வேண்டியிருப்பவளுக்கு அது இறந்தபின் தன்னுயிர்மேல் கவலையிருக்குமா? காணமுடியாத கஷ்டத்தில் எல்லாம் விழுந்து தட்டித்தடுமாறி உயிரைப் பெரும்பாரமாகக் கொண்டவளுக்கு உயிரின் மேல் ஆசையிருக்குமா? எவ்வாறிந்த உடலையொழிக்கலாம் என்பதுதான் பட்டுவிடும். அதிலும் தான் செய்யாத ஓர் அபவாதத்தை தன் தலைமேல் வைத்தால் அவளை இவ்வெறுப் பென்னசெய்யச் செய்யும்? இவ்வுடலை ஒழிக்கும்வழிக்குக் கொணர்ந்துவிடும். அதுதான் அதன் ஸ்வபாவம்.

* *
*

சந்திரமதியை கொத்துவால் ஸேவகரால், காசிராஜன்மகனைக் கொன்றதாகவும், அரசனுடைமைகளை திருடியதாகவும் பிடிக்கப்பட்டு சாவடியிலடைக்கப்பட்டிருக்கிறாள். காலைபொழுதுவிடிந்தது. அவள்முகத்தில்மாத்திரம் அன்பென்னும் ஜ்வாலை வீசிக்கொண்டிருந்தது. குற்றமென்ற ஒருவஸ்து அவளிடத்திலிருக்குமென்று நமக்கு அவளைப்பார்த்தால் தெரியவில்லை. உலகத்தில் சிலர்கள் குற்றமொன்றுஞ் செய்யாமலே இருக்க குற்றவாளிகளாகப் பிடிக்கப்படுவது வழக்கம்தான். ஸந்தேகத்தின் ஸ்வபாவம் இது. தேவ ஸேவையில் நம்பிக்கை யுள்ளவர்களுக்கும், அவ்வகையார்கடவுளின் மஹத்வத்தால் எல்லாம் நடக்கின்றனவென்றும், அவர் செய்வதெல்லாம் நமது நன்மைக்காகத்தான் என்றும் அவர் ஒருவரிடத்தே நம்பிக்கையுடையவர்க்கு எவ்விதத்தீங்கும் ஒன்றுஞ் செய்யாதென்ற நம்பிக்கை மனதிற் குடிகொண்டுவிடும். ஸ்திரீகளுக்குத் தாம் தம் கணவருக்கு செய்யவேண்டியதெல்லாம் செய்துவிட்டோம் என்கிற அன்பின் ஆநந்தம் இந்நம்பிக்கைக்கு மேலான கவலையின்மையை உண்டாக்கிவிடும். இதுதான் அவர் ஹ்ருதய ஸ்வபாவம். அக்கவலையின்மை தம்முயிரின்மேலாசையின்மையை நன்றாக உண்டாக்கி விடுகிறது. சாவுக் கவரஞ்சுவதில்லை. ஆனல் அவர் தம் கணவர் மேல் கொண்ட அன்பானது அவரை தமது சாவிலும் கணவருக் குபயோகமாக இருக்கவேண்டுமென்கிற ஆவல் தூண்டிவிடுகிறது.

* *
*

நியாயசபையில் சந்திரமதி களவுசெய்து குழந்தையைக் கொன்றதாக நிஸ்சயம் செய்தனர். அவள் தலையை துண்டிக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு மயானத்திற்கு தோட்டியாற் கொல்லப்படக் கொண்டுவரப்பட்டாள். தன் கணவன் தன்னைத் துண்டிக்க நேர்வதைக்கண்டு கஷ்டமடைந்தாள் சந்திரமதி. தன் மனோதைரியம் அவளைவிட்டு நீங்க

வில்லை. இதற்குள் அங்கு விசுவாமித்ரர் வந்து "ஹரிச்சந்திரா! என் துன்பப்படுகிறாய். எனக்குநீ நாடுதானஞ்செய்யவில்லை என்று சொல்; இக்கஷ்டங்களெல்லாம் தொலையும்" என்று சொல்லினர். "நீர் செய்தது போதாதா! இன்னமும் என்னைவிட மனம் வரவில்லையா? நீர் தயவுசெய்து போங்கள்." என்றான் ஹரிச்சந்திரன் "ஹே! நாதா! கவலை படாதேயுங்கள்! நான் என் பிராணனை உம் பாதாரவிந்தத்தில் விடுவதைக்காட்டிலும் வேறெனக்கானந்தம் கிடையாது. உம்முடைய வாய்மையையும் தர்மத்தையும் கொஞ்சமேனும் விடக்கூடாது. நாங்கள் எல்லாம் ஸ்திரமல்ல. அது ஒன்றுதான் உயிர்க் காதாரமானது. என்னைக் கொன்றேனும் உமது வாய்மையை நிறுத்தும்" என்றாள் சந்திரமதி. ஹரிச்சந்திரன் கத்தியை யோங்கினன். அது சந்திரமதி கழுத்தில் மாலையாய் விழுந்தது. "நான் ஒரு குற்றமும் செய்யாது, ஒருவர்க்குந்தன் பங்கொடாது என் கணவனொருவர்க்கே அன்புடையவளா யிருக்கும்பக்ஷத்தில் இக்கத்தி என் கழுத்தைவெட்டி என் தலைவன் புகழைப்பெருகச்செய்யட்டு" மென்று கூறி குனிந்து தன்னை வெட்டுமாறு கணவனை கெஞ்சினள். கத்தியை ஓங்கினன். கத்தி மேலே நின்றுவிட்டது. "ஹா! உன் வேலையை நிறுத்து" என்ற ஓர் பேர் இரைச்சல் எல்லாரையும் மயக்கியது. உடனே கடவுள் தாமே தமது விசித்திரசக்தியால் "நீயே வாய்மைக்குத்தலைவன். உன்மனைவியே கற்புக்குத்தலைவி, இதெல்லாம் என் திருவிளையாட்டு" என்றுதெரிவித்து எல்லாரு மதிசயிக்க அயோத்தியா நகரத்திற்குப்போய் மகுடமணிந்து குழந்தையுடன் வாழச்செய்தது எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். ஹரிச்சந்திரன் விசுவாமித்ரரால்தமக்குக்கிடைத்தபாக்கியத்திற்கு என்றும் கடமைப்பட்டவனாயிருந்தான். இக்கதை ஸ்காந்த புராணத்திலுள்ளது.

---

குலப்பாவை

சிறுகாலையிற்றான் சிக்கெனஎழுந்து
நெறியோடு கணவனை நேர்மை வழிபட்டு
கட்டிய கணவர்க்கு கடமைகள் செய்தும்
அட்டிலிற் புகுந்து அன்னம் படைத்தும்
கஷ்டம் வெற்றையுங் கணிசியாதவற்காய்
சிஷ்ட குணமொடு சிறக்கவிழுந்தும்,
மந்திரி போலவரும் பொருளுரைத்தும்,
தந்திரிபோல தகாதவைதடுத்துந், தன்
இன்பமும் துன்பமு மெண்ணாதவர்தம்
இன்பமே இன்பமாய இனிமையோடுகொண்டு
கற்பெனுங் கவசமும், கணவன் வழிபாடுடன்
பொற்பொடு விளங்கும் பூவையர்போல
பூவும் உளவோ குலமெனும் மரத்தே.

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN' PAGES

---

ஒய்வு வேளை.—நாம் பள்ளிக்கூடத்தில் படிக்கும்பொழுது நமக்கு விடுமுறைகாலம் சில உண்டு ஒவ்வொருநாளும் 30-நாழிகை நாம் உழைக்கின்றோமா ? சிலவேளை உழைத்து மற்ற வேளைகளில் இளைப்பாறுகின்றோம். இவ்வித வேலைகள் ஒவ்வொருதொழிலிலும் உண்டு. இதற்குத்தான் ஒய்வுவேளை என்பார்கள். இவ்வோய்வு வேளைகளை நாம் கூடியமட்டும் நல்வழியிலேயே உபயோகிக்கவேண்டும். அது மட்டுமல்ல; இவ்வோய்வுவேளைகளில் நாம் எதில் அதிகக் கவனமாக விருக்கின்றோமோ அது நமது குணத்தை அவசியம் வெளியிடுகின்றது. ஏனெனில் நமக்கு ஒருவித நிர்ப்பந்தமுமில்லாம லிருக்கும்பொழுது நமக்கு எதில் மனப்போக்கு அதிகமோ எதில் ஆசை அதிகமோ அதையே நாம் செய்வோமல்லவா ? சாதாரணமாய் வாய்க்கும் கைக்குமாக ஜீவித்துக்கொண்டு தேகத்தைக் காலைமுதல் மாலைவரையில் உழைத்துப் போதுமானமட்டும் தூங்கக்கூட அவகாசம் கிட்டாத கூலிகளுக்குக் கிடைக்கும் ஒய்வுகாலங்களைப்பற்றி நாமிங்குப் பேசவில்லை. அதானது அவர்கள் இளைப்பாற்றிக்கொள்ளுவதற்கே போதுமோ போதாதோஎன்பதாகவிருக்கும். அதைவிட கொஞ்சம் அதிகமான அவகாசம் பெற்றவர்களுக்குக் கிடைக்கும் ஒய்வுகாலத்தை நாமிங்கு இவ்வளவுதூரம் சொன்னோம்.

அவ்வோய்வுகாலம் வெகு சிலாக்கியமான காலம். நாம் நமது இஷ்டப்படி செய்ய எண்ணங்கொள்ளும் காரியத்தைச் செய்துமுடிக்குங்காலம். நமது மனத்துக்கும் புத்திக்கும் வலுமையை ஊட்டி நம்மை உற்சாகப்படுத்துங்காலம். ஒரேவித வேலையைச் செய்வதைவிட்டு ஒருநாள் கொஞ்ச நாழிகையாவது வேறுவேலையை நாம் செய்வோமேயானால் அதுநமது மனத்துக்கும் புத்திக்கும் அதிகபலத்தைக் கொடுக்கின்றதென்பதுசித்தாந்தம். நமது ஒய்வுகாலம் அவ்வாறு நம்முடைய புத்தியைச் சீர்திருத்திவைத்து அதற்குப் பலங்கொடுக்கின்றது. ஆகையால் வெகு சிலாக்கியமாக எல்லாரும் ஒப்புக்கொள்ளும் இவ்வோய்வுகாலத்தில் நாம் ஸத்காலக்ஷேபம் செய்யவேண்டும். நமக்கு அதிக திருப்தியைக் கொடுக்கும் படிப்புஅல்லது சர்ச்சை அல்லதுவேலை இதில்போக்குவதுடன் அக்காலத்தில் நாம் செய்யும் காரியம் லோகோபகாரமாக எவ்வளவுமட்டும் பயன்படும் என்பதையும் ஊகித்துச் செய்யவேண்டும். நாம் செய்யப்புகும் காரியத்தில் ஒருவித கெடுதலுமிருக்கவே கூடாது. கூடியமட்டும் பொதுநன்மை விளைவிக்கப்பட்டதாக விருக்கவேண்டும்.

## பேராசை பெரு நஷ்டம்

இருபுற முள்ளடர் சிறுவழி யிடையோர்
நரிதன் வழியை நாடிச் சென்றிட,
ஆவே சத்தொடு யானையொன் றெதிரில்
தாவி வருவதைக் கண்டு தடுமாறி
5. பின்னிட் டிடத்தான் பின்னுக் கிட்டது.
கன்னெஞ் சுடையஓர் கடுவிழி வேடன்
கொன்றிடு மிலக்கொடு குனித்து தன்விலில்
அம்பொடு நிற்பதைக் கண்ட தந்நரி,
இருதலைக் கொள்ளி எறும்பது போல
10. வெருவி அது எவ்வழி செல்வதென் றறியா து
துன்பத்திற் பட்டுதன் தூயுயி ரதன்மேல்
அன்பினல் முள்ளிலுள் பாய்ந்தங் கொளிந்தது.
வேடன்கணை பாய்ந்து விழுந்ததவ் யானை
மூடனது அறியாது உயிருடைத் தென்று
15. செலுத்தினன் மற்றோர் தீய கடுங்கணை—
இதற்குள்,]
நலிவுறக்காலில் நாகந் தீண்ட—அதை
கொன்றிட்டு, அம்பைக் கோலில் துவக்க
நின்ற கையோடே இறந்தனன்—நிரைந்த
ஆர்வமொ டந்நரி சேர்ந்த தவ்விடத்தே.
20. "யானை நமக்கு மாத மாறுக்காம்.—
ஞான மிலாதவன் ஆனமுத லெடுப்பவன்
யான்தொடே"னென்று கானவன் அருகு
தோன்றி அந்நரி "தொடுவரோ வட்டியை"
என்று, அதுகண்டது பாம்பிறந் திருப்பதை ;
25. நன்றெென உடனே நயமொடுட் கொண்டதே
போதா தென்றுடன் மோதுவில் நாணை
கடிக்க விறந்தது கடியவந் நரியே.
கேண் மினோவிதனுல் கிடைத்த நன்னெறியை
ஆசை பேராசை ஆயிடில் முதற்கே
30. மோசமா மெனவே மொழிந்தனர் பெரியரே.

* *
*

ஸ்ருஷ்டியின்ஸ்வரூபம்.—ஓரிரவில் மூன்றுஅபின் புகை பிடிப்பவர்கள் ஒருஆற்றங்கரையில் நின்றுகொண்டிருந்தார்கள். அக்கரையில் இருந்த ஒரு விளக்கு எரிவதுபோன்ற தோற்றத்தை உண்டாக்கிப்பது.இம் மூன்றுபேரும் புகை குடிக்கவேண்டுமென்ற ஆவலுடனிருந்தார்கள். அவர்களில் ஒருவன் தண்ணீர் ஓரத்தில் நின்று கரியை பிரதிபிம்பத்திற்கு நேராய் பிடித்துக்கொண்டு தன் சரித்துண்டு விளக்கில் பட்டிருப்பதாக எண்ணிக்கொண்டான் ; ஏனென்றால் புகைக்குடிப்பவர்களுக்கு தூரத்திலிருக்கும் வஸ்துக்கள் தம் கண்கள்முன்னே குதிப்பதாகத் தோற்றுவது வழக்கம். இம்மாதிரியாய்ச் சற்றுநேரம் நின்றபின் சரித்துண்டு பற்றிக்கொள்ளாதது கண்டு இந்த விளக்குக்கு உஷ்ணம்போய்விட்டது என்றுஎண்ணி தன் தோழர்களிருக்குமிடம் சென்றான். அவர்களில் மற்றொருவன் முன்சென்றவன் மடத்தனத்திற்காக அவனைக் கடிந்துகொண்டு நல்ல கண்ணிருப்பவன் ஒவ்வொருவனும் விளக்கு தண்ணீரில் முழுந்தாளாழத்தி லிருக்கிறதென்று தெளிவாய்த் தெரிந்துகொள்வான் என்று சொல்லிக்கொண்டு தான்சொன்ன இடத்திற்குப்போய், கரி சீக்கிரம் பற்றிவிடும் என்ற பூர்ணநம்பிக்கையோடு கரித்துண்டை பிரதிபிம்பத்திற் கெதிராய்ப் பிடித்தான். ஆனால் சற்று நேரத்தில், அவனும், தண்ணீரோடு சேர்ந்ததினால் நெருப்பிற்கு உஷ்ணம் போய்விட்டதென்று எண்ணி, திரும்பிவிடும்படி நேரிட்டது. உடனே மூன்றாவான் முன்சென்ற இருவர்களையும் கடிந்துகொண்டு நெருப்பு ஆற்றின்மத்தியில் இருப்பதாகசொல்லி கரித்துண்டைக் கையிலெடுத்துக்கொண்டு தண்ணீர் தன் கக்ஷகத்தினளவு வருமளவும் சென்றான். அவன் குளிரினால் விரைத்துப்போமளவும் நின்றபோதிலும் கரியைப் பற்றவைக்காமல் திரும்பவேண்டியதாயிற்று. இம்மாதிரியே தான் பிரபஞ்ச, சிருஷ்டியையும் நாம் அறியும் விஷயமும்.

* *
*

துங்கநுபமான ஸ்ஈகம்.—ஒரு வர்த்தகன் ஒரு பெரிய பணமூட்டையுடன் சந்தையிலிருந்து குதிரைச்சவாரிசெய்து வீட்டுக்குத் திரும்பிவருகையில் வழியில் மழை தாரைதாரையாய்ப் பெய வாரம்பித்தது. அதனால் அவனுடம்பு முழுதும் நனைந்தது. மிகவும் வருத்தத்துடன் இந்தமாதிரி தனக்கு கஷ்டம் வந்ததைப்பற்றி கடவுளை நொந்துக்கொண்டான். அடர்ந்த தொரு காட்டின்வழியாய் அவன் செல்லுகையில் திடீரென்று ஒருதிருடன் ஓடிவந்து துப்பாக்கியினால் தன்னைச்சுடப் பிரயத்தனப்பட்டதைப் பார்த்து நடுநடுங்கினான். ஆனால் வெடிமருந்து மழையினால் நனையவே சுடமுடியவில்லை. வர்த்தகன் இதைக் கண்டவுடன் தன் குதிரையை அதட்டி சீக்கிரத்தில் கண்ணுக்கெட்டாத தூரஞ்சென்று அபாயத்தினின்றும் தப்பினான். பிறகு அவன் சொன்னதாவது "ஆகா நான் என்ன முட்டாள்தனம் செய்தேன்! இந்த மழையில்லாமலிருந்தால் நானப்போதே மரணமடைந்திருக்கவேண்டுமல்லவா. என் பிராணனையும் பொருளையும் காப்பாற்றின இம்மழையை நான் கோபித்துக்கொண்டது என்ன அறியாமை! எனக்கு புத்திவந்தது. கடவுளால் வருவதெல்லாம் நம்முடைய நன்மைக்கே யென்று எனக் கிப்போது தெரிகிறது.

# விசேஷ வர்த்தமானங்கள்
## GENERAL NEWS

இந்தியாவில் நெருப்புக்குச்சி:—டாக்டர் ரஷ் பிகாரிகோஷ் ஒரு நெருப்புக்குச்சி உற்பத்தி செய்யும் சாலைக்கு நிர்வாஹகர் என்று நண்பர்கள் எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். இன்னுமொரு சாலை சிறிதுநாள் முன்புதான் ஸராம்பூர்சப்டிவிஷனைச் சேர்ந்த கோனனகலில் யேற்படுத்தப்பட்டிருக்கிறது. வியாபாரத்தின் கணக்குகளை பரிசோதித்துப்பார்த்தால் ஒருவருஷத்தில் இந்தியாவில் ரூ. 64-லக்ஷத்துக்கு நெருப்புப்பெட்டிகள் இறக்குமதி செய்யப்படுகிற தென்று தெரியவருகிறது. மேற்சொல்லிய சாலையை திறந்த நாசிந்பூர் ராஜாவாகிய ரஞ்ஜித்ஸிங் அவர்கள் "இறக்குமதி செய்யப்படும் நெருப்புக்குச்சியுடன் இந்தியாவிலேயே உற்பத்தி செய்யப்படும் குச்சி போட்டிக்கு வரவேண்டு" மென்று அபிப்பிராயப்பட்டார். நம்முடைய குச்சிகள் பரதேசக்குச்சிகளைக் காட்டிலும் நேர்த்தியாகவும் விலை ஸரஸமாகவு மிருக்கவேண்டும். இந்தியாவில் ஏற்படுத்தப்பட்ட இவ்விதசாலைகள் நஷ்டப்பட்டு முழுகிப்போகிறதற்கு காரணம் இவைகளில் போக்கு கோணலாயிருக்கிறதனாலும் சிலஸமயங்களில் இவைகளின் நிர்வாஹகர்கள் சிறுவர்களாயும் பழக்க மற்றவர்களாயும், அதிகலாபம் சிறிதுகாலத்துக்குள் எடுக்கவேண்டுமென்று எண்ணமுடையவர்களாயுமிருக்கிறதினால்தான். புதிதாய் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சாலையில் மேற்சொல்லிய குற்றங்கள் காணப்படவில்லை. இச்சாலையில் பிற்காலம் வெகு நேர்த்தியா யிருக்குமென்றும் தெரிவித்தார். ஐரோப்பிய ரஸாயன சாஸ்திரியான டப்ளியூ. ஆர். கிரைபர் என்பவர் தன்னால் இயன்ற உதவிபுரிவதாய் ஒப்புக்கொண்டிருக்கிறார்.

* * *

நிலக்கடலையிலிருந்து யெடுக்கப்படும் வெண்ணெய் ஒரு முக்கியமான கைத்தொழில்:—இவ்விந்தியாவில் நெய்யின் விலை கொஞ்சக் கொஞ்சமாய் ஏறிக்கொண்டே வருகிறதைப் பார்த்தால் எவ்வளவு நெய் உபயோகத்துக்கு வேண்டுமோ அவ்வளவு கிடைக்கிறதில்லையென்று தெரியவருகிறது. இதன் பலன் என்னவென்றால் வெகுகெடுதலான நெய் உண்டாக்கப்படுகிற தென்பதுதான். வாங்குகிறவர்கள் இந்தநெய் கெட்டதென்று தெரிந்திருந்தபோதிலும் இதைவிட நல்லதாய் வேறு கிடைக்காததால் வாயைத் திறக்கக்கூடாமல் வாங்கிக்கொண்டுபோகிறார்கள். இவ்விந்தியாவின் அநேக பாகங்களில் விதைக்கப்படுகிற நிலக்கடலையிலிருந்து புதிதாய் ஒரு வெண்ணெய் எடுக்கப்படுகிறது இவ்வெண்ணெயில்நல்ல எண்ணெயிருக்கிறபடியால் அக்கடலையை ஏராளமாய் ஐரோப்பா கண்டத்துக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். இவ்வெண்ணெய் எடுக்கப்பட்டபின் தங்கியிருக்கும் புண்ணாக்கு வெகு புஷ்டி கொடுக்கும் தன்மையுள்ளது. ஐக்கிய மாகாணங்களில் இக்கடலையை நன்றாய் சுத்திசெய்து அதிலிருந்து நல்ல வெண்ணெய்எடுக்கப்படுகிறது. இதை சாதாரணமாய் காப்பிக்கொட்டை தேயிலை முதலிய ஸாமான்களுடன்கடைகளில்விற்கப்படுகிறது. கடலையிலிருந்துவெண்ணெயுண்டாக்கும்விதம் முதல்முதல் 15-வருஷங்களுக்குமுன் பிலடல்பியாவில் ஒருசிறு கைத்தொழிலாய் ஏற்படுத்தப்பட்டது. கொஞ்சகாலத்திற்கு பிறகுதான் நல்ல ஸ்திதிக்கு கொண்டு வரப்பட்டது. மூன்றுயந்திரங்கள் நிலக்கடலை சுத்தி செய்து, வறுத்து, அறைக்கிறதற்கு உண்டாக்கப்பட்டன. தினமொன்றுக்கு 2000-ராத்தல் நிறையுள்ள வெண்ணெய்இவ்வியந்திரங்களினால்கடலையிலிருந்து எடுக்கப்பட்டது. இதன் செலவு ரூ. 1600. 5 குதிரை பலமுள்ள யந்திரம் இம்மூன்றுயந்திரங்களையும் சுற்றும் சக்தியுள்ளது மேற்கண்ட வகையில் உற்சாகமுள்ள ஒருவன் ஒரு வறுக்கும் சட்டியையும் கல்லுரல் குழவிகளை வைத்துக்கொண்டு பரிசோதித்துப் பார்க்கலாம். கடலையை அனலில் காயவைத்து ஒரு துணியில் போட்டுக்கொண்டு தேய்த்தால் அதன் தோல்கள் பருப்பைவிட்டு நீக்கப்படும். காற்றினால் இத்தோல்களை தனியாய் எடுத்துவிட்டு பருப்பை கல் உரலிலிட்டு நன்றாய் அரைத்தால் அதிலிருந்துலேகியம்போன்ற வெண்ணெய் எடுக்கப்படும். இதை ஸாதாரண மாட்டுவெண்ணெயைப்போல் எவ்விதத்திலும் உபயோகப்படுத்தலாம். ஐக்கியமாகாணங்களில் வெகுவாய் இவ்வெண்ணெயை உபயோகப்படுத்துகிறதினால் இது நல்லதாய்த் தானிருக்கவேண்டுமென்று ஊகித்துக் கொள்ளலாம். மேலும் நிலக்கடலை இந்தியாவில் ஏராளமாய் பயிரிடப்படுகிறபடியால் இக்கைத்தொழிலை வெகுலாபத்தோடு இந்தியாவில் எடுத்துக்கொள்ளப்படலாம்.

இந்தியாவில் கடிதம் உற்பத்திசெய்யும்யந்திரங்கள்:—1906-ம் வருஷம்வேலை செய்துகொண்டிருந்தகடிதாசி யந்திரங்களின் ஸங்கியை 8-இவைகளில் 3-வங்காளத்திலும், 3-பம்பாயிலும்,1-ஐக்கிய தேசங்களிலும் (United Provinces) குவாலியரிலு மிருந்தன குவாலியரிலுள்ள யந்திரம் 1906-ம் வருஷம் அக்டோபர்மாஸத்தில்தான் வேலை யாரம்பித்தது;மற்ற ஏழுயந்திரங்களின் முதல் ரூ. 48-லக்ஷம். இவைகளில் 2-பொதுஜனங்களால் ஏற்படுத்தப்பட்டது. இதுகளின் முதல் 1905-ம் வருஷம் ரூ. 57.86 லக்ஷத்திலிருந்து1908-ம் வருஷத்தில் ரூ-63.11 லக்ஷத்திற்கு ஏறிற்று. இவைகளில் பெரியதும் முக்கியமானதுமான இரண்டு டிடாவிலும் லக்னௌவிலுமிருக்கின்றவை. பம்பாயிலிருக்கும் யந்திரம் ரூபாலக்ஷதிற்கு சிறிது அதிகமுள்ள கடிதம் செய்கிறது. ஐரோப்பாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஸரஸமானகடிதத்தின் போட்டியானது ஸ்வதேசத்தில் உண்டாகும் உற்சாகத்திற்கு ஒருதடையாயிருக்கிறது. இந்தியாவில் கவர்ண்மெண்டு குத்தகைக்குகடிதம் கொடுக்கிற யந்திரங்கள்தான் விருத்திக்கு வந்திருக்கின்றன. 1904-ம்வருஷம் இந்தியாவில் உண்டாக்கப்பட்ட கடிதத்தினுடையவும், ஐரோப்பாவிலிருந்து இறக்குமதிசெய்யப்பட்ட கடிதத்தினுடையதும் தொகைரூபா 61-லக்ஷம். ஆனால்1906-ம் வருஷத்தில் இத்தொகை மாறி 63-லக்ஷமும் 67½-லக்ஷமுமாயிருந்தது.ஆகையால்இறக்குமதி செய்யப்பட்டகடிதத்தின் தொகை100-க்கு26-பங்கு உயரும்பொழுது கலிதேசத்தில் உற்பத்திசெய்யப்பட்டதின் தொகை சற்றேறக்குறைய அதேநிலைமையிலிருந்தது.

* * *

எலுமிச்சை சாகுபடி:—தஞ்சாவூருக்கு அடுத்த அய்யம்பேட்டை என்னும் கிராமத்தில் எலுமிச்சை ஏராளமாய் சாகுபடி ஆகிறது.

பூமி.—எலுமிச்சை சாகுபடிக்கு நல்லவடிகாலுள்ள வண்டல் பூமி சிரேஷ்டம்.

நாத்தாங்கால்:— பூமியை இரண்டுஅடி ஆழம் கொத்தி புழுதிசெய்கிறார்கள். நன்றாய் மக்கின மாட்டு எருவை ஏராளமாகப்போட்டுமண்ணுடன்கலக்கவேண்டும். மாசி (பிப்ரவரி—மார்ச்சு) மாதத்தில் மரத்தடியில் விழுந்திருக்கும் நல்ல பழங்களை அறுத்து காயப்படாமல் எடுத்தவிதைகளை கையில் ஒட்டாமலிருக்குமபடி கொஞ்சம் சாம்பலில் புறட்டி பின் விதைகள் காய்வதற்குமுன் தயார்செய்த பூமியில் 4-அங்குலத்துக்கு ஒருவிதையாக ஊன்றுகிறார்கள். பிறகு அந்த நாத்தாங்கால்மேல், வாழைச் சருகுகளை போட்டு நாத்தாங்கால் காயாமல் ஜலம்விட்டு வருகிறார்கள். களைகளை கையால் எடுத்துவிடவேண்டும். கார்த்திகைமாதத்தில் கன்றுகள் சுமார் ஒரு அடிமுதல் இரண்டு அடிவரை வளர்ந்திருக்கும். இப்போது இரண்டு அடிக்கு ஒரு கன்றாக விட்டு விட்டு நடுவிலுள்ள கன்றுகளை ஜாக்கிரதையாய் பிடுங்கி இவைகளுக்காக வெட்டி எருவிட்டு தயார் செய்யப்பட்ட பூமியில் இரண்டு அடிக்கு ஒன்றாக நடுவார்கள் வெயில்காலமுழுவதும் செடிகள் காயாமல் ஜலம் இறைத்துவரவேண்டியது. இப்படி வளர்த்த மூன்று வருஷத்திய கன்றுகளை ஆழமாய் கொத்தி எருவிட்டு தயார்செய்த பூமியில் 15-அடிக்கு ஒருவரிசையாகவும் ஒவ்வொரு வரிசையிலும் 15-அடிக்கு ஒரு செடியாகவும், கார்த்திகை மாதத்தில் நடுகிறார்கள். இச்செடிகளுக்கு மத்தியில் கன்றுகள் மரமாகும்வரை வாழை பயிர்செய்வதுண்டு. செடிகள் வைத்த மூன்றாவது வருஷமுதல் பலன்கொடுக்க ஆரம்பிக்கிறது.

வருஷாவருஷம்,தோட்டத்தை கொத்தி நன்றாய் மக்கின சாணம் எருபோடவேண்டியது. அம்மாபேட்டையில் அநேகமாய் மார்கழிமாதத்தில் கொத்தி எரு இடுகிறார்கள். ஆவணி மாதத்தில் கொத்தி எருவிட்டால் மழையினால் எருவின் பலன் நன்றாய் புலப்படும. பிறகு மார்கழிமாதத்தில் ஒரு கொத்து மாத்திரம் போட்டால் புல்பூண்டு மடிவதுடன், பூமி தளர்ந்து ஈரம் கார்க்கும். சாணி எருவே உத்தமம். எலும்புதூள் பலனை விருத்திசெய்யும்.

கவாத்து:—செடிகளில் உலர்ந்த கிளைகளை அப்போதைக்கப்போது ஜாக்கிரதையாய் கத்திரித்து விடவேண்டும். ஒவ்வொரு செடிகளிலும் பூமியிலிருந்து வரும் ஒன்று அல்லது இரண்டு பெரிய கிளைகளை மாத்திரம் விட்டுவிட்டு பாக்கி உபகிளைகளை நீக்கிவிடவேண்டும். கொத்திவிடவும், பழம்பொறுக்கவும், காத்தோட்டத்துக்காகவும், செடிகளில் கீழ்கிளைகளை அதிகமாய் வைக்காமல் நீக்கி மேல்போகச்செய்வது உத்தமம். வெயில்காலமுழுவதும் ஜலம் இறைத்து செடிகளை பாதுகாத்துவரவேண்டும்.

இப்படி ஜாக்கிரதையாய் தோட்டத்தை ஆதரித்து வந்தால் சராசரி ஒவ்வொருசெடிக்கும் 1000 முதல் 3000 பழம்வரை கிடைக்கும்.

# விவேக போதினி

## ஓர் சிறந்த மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை 1908-ம் ௵ முதல் பிரசுரமாகிவருகிறது, யாவராலும் சிலாகிக்கப்பெற்றது

இப்பத்திரிகைக்கு விஷயதானம் செய்வோர்களைக்கொண்டே, இதன் பெருமையை நன்கு அறியலாம். மிகவும் சுலபமான நடையில் எழுதப்படுகிறது. சிறுவர்கள் சிறுமிகள்கூட உத்ஸாகத்துடன் வாசிக்கக்கூடியது. ஒவ்வொரு மாதமும் ஒழுங்காகப் பிரசுரமாகிறது. சித்திரப்படங்கள் ஒவ்வோர் சஞ்சிகையிலும் உபயோகிக்கப்படுகின்றன. எத்திறத்தாரும் வாங்கி வாசித்து நற்பயனடையும் பொருட்டே சந்தாத்துகையும் மிகவும் ஸுலபமாய் வைக்கப்பட்டிருக்கிறது.[இம்மாதிரி யாவருக்கும் உபயோகத்தையும் உத்ஸாஹத்தையும் கொடுக்கக் கூடிய பத்திரிகை இன்னமும் எவராலும் பதிப்பிக்கப்படவில்லையென்று தைரியமாய்ச் சொல்லுவோம்.]

### இப்பத்திரிகையில் பிரசுரமாகும் விஷயங்கள்

1. நீதிகளைக் கற்பிக்கக்கூடிய பொது விஷயங்கள்.
2. பொது நன்மைக்காகப் பாடுப்பட்ட மஹான்களின் ஜீவிய சரிதைகள்.
3. இயற்கை அற்புதங்கள்.
4. உலக ஒழுக்கங்கள்.
5. கல்வியபிவிருத்திக்குரிய பாஷா விஷயங்கள்.
6. வியவஸாயம், கைத்தொழில் வியாபாரம்.
7. தக்க நிபுணர்களைக்கொண்டு எழுதப்பட்டு வரும் உயர்தரமான நாவல்கள், நாடகங்கள்.
8. சிறுவர்க்காகவென்று எழுதப்படும் நீதியைப் புகட்டும் சிறந்த கதைகள்.
9. ஸ்திரீகளுக்கேற்ற நற்போதங்கள்.
10. சாஸ்திரீகமான விசேஷ வர்த்தமானங்கள்.

### தபாற்கூலி உள்பட சந்தா விபரம்

| இந்தியா, பர்மா, ஸிலோன், | | | | பினங்கு, சிங்கப்பூர், நேட்டால், ஆ இடங்களுக்கு | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஒரு வருஷத்துக்கு | ரூ. 3 | 0 | 0 | ஒரு வருஷத்துக்கு | ரூ. 4 | 8 | 0 |
| ஆறு மாதத்திற்கு | ,, 1 | 12 | 0 | ஆறு மாதத்திற்கு | ,, 2 | 4 | 0 |
| தனிப்பிரதி | ,, 0 | 5 | 0 | தனிப்பிரதி | ,, 0 | 6 | 0 |

☞ சந்தாத்துகை முன்பணமாகத்தான் அனுப்பவேண்டும்: அல்லது, முதல் சஞ்சிகையை ஒரு வருஷத்து அல்லது ஆறு மாத சந்தாவுக்கு வி. பி. மூலமாய் அனுப்பி பெற்றுக்கொள்ளப்படும்.

இப்பத்திரிகையின் சந்தாதாரர்களுக்கு மட்டுமே எங்களிட சொந்தப்புத்தகங்களும், இன்னும் அநேக தமிழ்ப் புத்தகங்களும் குறைந்தவிலைக்கு அனுப்பப்படும். ஆகையால், இப்பத்திரிகையின் சந்தாதாரர்களுக்கு எப்பொழுதும் நஷ்டமில்லை. பத்திரிகையின் அபிவிருத்தி விஷயமாய் எழுதப்படும் நிருபங்களை எங்களால் இயன்றமட்டில் கவனித்து, முடிந்தவரையில் சீர்திருத்தமுயலுவோம். மற்றும்வேண்டிய விபரங்கள் எழுதித்தெரிந்துகொள்ளலாம்.

மானேஜர், "விவேக போதினி" ஆபீஸ்,
மைலாப்பூர், மதராஸ்.

# நமது பத்திரிகைக்கு விஷயதானம் செய்யும்

## கனவான்களில் சிலர் :—

மா-ா-ா-ஸ்ரீ மஹா மஹோபாத்யாயர் பண்டித-ஸ்ரீ வே. சாமிநாதய்யரவர்கள்.
,, மஹா மஹோபாத்யாயர் பண்டித-ஸ்ரீ சந்திரசேகர சாஸ்திரிகளவர்கள்.
,, கனம் ஆர். ரகுநாதராவ் அவர்கள், திவான் பஹதூர், ஸி.எஸ்.,
,, பண்டித-ச. ம. நடேச சாஸ்திரியாரவர்கள்.
,, டி. செல்வகேசவராய முதலியார் அவர்கள், எம்.ஏ.
,, த. கனகஸுந்தரம் பிள்ளை அவர்கள், பி.ஏ.
,, டி. ஏ. கோபிநாத ராவ் அவர்கள், எம்.ஏ.
,, வ. சு. செங்கல்வராயப் பிள்ளை அவர்கள், எம்.ஏ.
,, பி. வி. ஸ்வாமி ராவ் அவர்கள், எம்.ஏ.
,, எஸ். குப்புஸாமி சாஸ்திரிகள் அவர்கள், எம்.ஏ.
,, டி. எஸ். சுப்பிரமணிய அய்யரவர்கள், எம்.ஏ., எல்.டி.
,, ஏ. பஞ்சாபகேசய்யர் அவர்கள், எம்.ஏ., எல்.டி.
,, வி. அப்பாஸாமி அய்யர் அவர்கள், எம்.ஏ.
,, மஹேச குமார சர்மா அவர்கள்
,, ஏ. எஸ். கஸ்தூரிரங்கய்யர் அவர்கள். பி.ஏ., எல்.டி.
,, வ. சேஷகிரி சாஸ்திரியார் அவர்கள்,
,, வி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், பி.ஏ.
,, ஜே.ஆர். ரங்கராஜு அவர்கள்,
,, ஏ. மாதவய்யா அவர்கள், பி.ஏ.
,, எஸ். சிதம்பர அய்யர் அவர்கள்,
,, கே. நாராயண அய்யர் அவர்கள், பி.ஏ., எம்.பி., ஸி.எம்.
,, பண்டித-ஸ்ரீ கோபாலகிருஷ்ண அய்யர் அவர்கள்,
,, ஐ. வே. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், பி.ஏ.
,, ஸி. ராமஸ்வாமி அய்யங்கார் அவர்கள், பி.ஏ.
,, வி. ஜி. சுப்பய்யர் அவர்கள், பி.ஏ., எல்.டி.
,, ஜீ. சுந்தரேச அய்யரவர்கள். பி.ஏ., எல்.டி.
,, ஜீ. தாதாசாரியாரவர்கள், பி.ஏ.
,, ப. சம்பந்த முதலியாரவர்கள், பி.ஏ., பி.எல்.
,, ஆர். நரஸிம்மய்யங்கார் அவர்கள், பி.ஏ., எம்.எல்.
,, ப. கிருஷ்ணஸாமி சாஸ்திரி அவர்கள், பி.ஏ., பி.எல்.
,, டி. எஸ். நாராயண சாஸ்திரியாரவர்கள், பி.ஏ., பி.எல்.
,, எஸ். ஈ. சங்கர அய்யர் அவர்கள், பி.ஏ., பி.எல்.
,, என். ஆர். கே. தாதாசாரியார் அவர்கள், பி.ஏ., பி.எல்.
,, ஸி. சுந்தரம் அய்யர் அவர்கள், பி.ஏ.
,, ஸி. எஸ். சுந்தரம் அய்யர் அவர்கள், பி.ஏ., எல்.டி.
,, த. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் பி.ஏ.
,, ஸி. பி. வெங்கிடராமய்யவர்கள் பி.ஏ.

ம-ா-ா-ஸ்ரீ என். வானமாமலைப்பிள்ளை அவர்கள்,
" எஸ். ராமஸாமிபிள்ளை அவர்கள், பி.ஏ.
" பி. என். சீனிவாஸாசாரியார் அவர்கள், பி.ஏ.
" ஆர். பி. குளந்தஸாமிப்பிள்ளை அவர்கள் பி.ஏ., எல்.டி.
" எஸ். நீலகண்ட அய்யர் அவர்கள்,
" டி. எஸ். வெங்கிடரமண அய்யர் அவர்கள்,
" எம். வி. மீனாக்ஷிசுந்தர முதலியார் அவர்கள், பி.ஏ.
" ல. அனந்தஅய்யர் அவர்கள்,
" பு. து. ரத்தினம்பிள்ளை அவர்கள்,
" எஸ். டி. மூர்த்தி முதலியார் அவர்கள்

குறிப்பு:—இன்னும் அனேகம் நிபுணர்களும், ஸ்திரீகளும் நமது பத்திரிகைக்கு வியாஸங்கள் எழுதுகிறார்கள். அவர்கள் கேட்டுக்கொண்டபடி, அவர்கள் பெயர்கள் இவ்விடம் அச்சிடப்படவில்லை.

# நமது பத்திரிகைப்பற்றிச் சிலமுக்கிய அபிப்பிராயங்கள்

# Press & Public Opinions

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ மஹாமஹோபாத்யாய வெ. சாமிநாதய்யரவர்கள்:—* * மதஸம்பந்தமான விஷயங்களும், நீதிகளை கற்பிக்கும் சிறுகதைகளும் புதிய நாடகங்களும் சில மொழிபெயர்ப்புகளும், தற்காலத்திற் கேற்ற நாகரீக விஷயங்களும் இப்பத்திரிகையில் மிக எளிய நடையில் எழுதப் பெற்றிருக்கின்றன ; சிறுவர்களும் பெண்பாலரும் இதனால் பல விஷயங்களையும் வருத்தமின்றித் தெரிந்துகொள்ளலாம்.

தமிழ் பாஷாபிமானிகளாகிய பிரபுக்கள் இதனை ஆதரித்து இதைப்பிரசுரஞ் செய்துவரும் ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனியாருக்கு ஊக்கம் அளிப்பார்களென்று நம்புகிறேன்.

**M. R. Ry Dewan Bahadur R. Ragoonatha Row Avergal, C. S. I., writes :—**

* * * It is written in good easy Tamil and deals with subjects of importance and usefulness to the general public. Its annual subscription is Rs. 3 so that even the poor can have valuable and useful reading in good Tamil for a small sum. One of the Tamil Pundits to whom some issues were submitted for opinion has been pleased to write to me thus :—

"விவேகபோதினியில் அநேகமாக முழுதும் பார்த்தேன்

1. உபயோகமான அநேகவிஷயங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

2. வியவசாய விஷயம் (its history) வியவசாயிகளுக்கு நல்லறிவை உண்டுபண்ணக்கூடியது.

3. சிலபெரியோர்களுடையசரித்திரங்கள் வெகு நன்றாயிருக்கின்றன. எல்லாம் நம் இந்து தேசத்து பெரியவர்கள் சரித்திரங்களாக இருப்பது கவனிக்கத்தக்கது.

4. பெண்களுக்காக எழுதப்பட்டிருக்கின்ற விஷயங்கள் மிகவும் உபயோகமானவை. நம் தேசத்துப் பெண்களெல்லோரும் அவசியம் இவைகளைப் படிக்க வேண்டும்.

5. யாப்பிலக்கணம் (Tamil prosody) ஆராய்ச்சியுடன் எழுதப்பட்டிருக்கிறது.

6. (a) இயற்கையற்புதம்(Wonders in Nature)
(b) சுகாதார விளக்கம் (Hygiene.)

இவைபோன்ற இன்னும் சிலவிஷயங்கள் இங்கிலீஷ்ப்பழக்கம் இல்லாதவர்களுக்கு நல்ல ஞானத்தை உண்டுபண்ணத்தக்கவை."

இந்தியா.—ஆவலாக வருமென்று காத்திருந்த "விவேக போதினி" யென்னும் பத்திரிகையை இன்று வரப்பெற்றோம். தமிழிற்கு முதல் கடவுளாகிய சுப்பிரமணியக்கடவுளை கண்ணைக் கவரும்படி கிளேஸ் காகிதத்தின்மேல் பதித்து போதினிக்கு

